# தந்த்ரா வழியில் தாம்பத்ய வாழ்க்கை

தன்னை நம்பிக்
கரம் பிடித்த மனைவியை,
போகப் பொருளாகப் பயன்படுத்தாமல்,
உணர்வுகளும், உணர்ச்சிகளும் கொண்ட
உயிரினமாக மதித்து நடத்தி,
தாம்பத்ய இன்பங்கள் அனைத்தையும்
தவறாமல் வழங்கி,
மனைவியின் மனநலம் காத்து,
இல்லற வாழ்வை இன்புற வாழ்ந்திட
விரும்பும்,

## ஆண்களுக்கான ஓர் அற்புதப் புதையல்

**போதி பிரவேஷ்**

தந்த்ரா வழியில் தாம்பத்ய வாழ்க்கை போதி பிரவேஷ்

# தந்த்ரா வழியில்
# தாம்பத்ய வாழ்க்கை

தன்னை நம்பிக்
கரம் பிடித்த மனைவியை,
போகப் பொருளாகப் பயன்படுத்தாமல்,
உணர்வுகளும், உணர்ச்சிகளும் கொண்ட
உயிரினமாக மதித்து நடத்தி,
தாம்பத்ய இன்பங்கள் அனைத்தையும்
தவறாமல் வழங்கி,
மனைவியின் மனநலம் காத்து,
இல்லற வாழ்வை இன்புற வாழ்ந்திட
விரும்பும்,

## ஆண்களுக்கான
## ஓர் அற்புதப் புதையல்

**போதி பிரவேஷ்**

தந்த்ரா வழியில் தாம்பத்ய வாழ்க்கை
போதி பிரவேஷ்

பொருளடக்கம்

பாகம் **1**

குடும்பமும்**,** குடும்ப விவகாரச் சண்டைகளும்



பாகம்**- 2**

காம உணர்வைக் கொல்லும் சுயவர்கள்

2. பிரம்மஸ்தான பூஜை

3. புனிதப் புள்ளியில் பூஜை

4. அமிர்த பூஜை

5. புனிதப் புள்ளியில் அடுத்தொரு பூஜை

8. தந்தரா பூஜை

7. அதிர்வின்ப பூஜை

8, நறுமணத் தோட்டத்துப் பூஜை

9. பேரரசர்களின் அசாத்திய பூஜை

பாகம் **1**

குடும்பமும்

குடும்ப விவகாரச்

சண்டைகளும்

சண்டைக்கான காரணங்களும்**,**

அவற்றால் ஏற்படும் பாதகங்களும்**.**

**1.** குடும்பம் தோன்றிய வரலாறு

காட்டு மிராண்டிகளிடையே, காமம் காரணமாக, ஏற்பட்டிருந்த கலகக் கலாச்சாரத்திற்கு முடிவுரை எழுதவே, குடும்பம் கண்டு பிடிக்கப் பட்டது.

நாடோடி வாழ்க்கை**.**

மனிதர்களும் நான்கு கால் உயிரினங்களாகத் தான் துவக்கத்தில் வாழ்ந்து கொண்டிருந்தார்கள், இலைதழைகள், காய்கள், பழங்கள், வேர்கள், பறவைகள் மற்றும் இறந்து கிடக்கும் விலங்குகள் போன்றவற்றை உண்டு பசியாறிக் கொண்டிருந்தார்கள், பசியாறியதும், எவ்வித நோக்கமுமின்றி நடந்து கொண்டேயிருந்தார்கள்.

காற்று, உணவு, தண்ணீர், உறக்கம், பாலின்பம் மட்டுமே அவர்களுடைய தேவை. அதைத் தவிர, நடந்து கொண்டேயிருப்பது தான் ஒரே வேலை. அவ்வாறு

நடந்தே தான் பூமி முழுவதும் மனிதர்கள் பரவினர்.

அப்போது மனிதர்களின் எண்ணிக்கை குறைவாகவும், விலங்குகளின் கூட்டம் அதிகமாகவும் இருந்தது. கடலில் செல்லும் கப்பலைப் போல், விலங்குகள் மத்தியில் மனிதர்கள் சஞ்சரித்துக் கொண்டிருந்தார்கள்.

அவர்களிடையேநடைபெற்ற பாலுறவு கூட, மிருகங்களை ஒத்ததாகவே இருந்தது. பெண்ணின் பின்னாலிருந்த படி தான் ஆண் புணர்ந்து கொண்டிருந்தான்.

நாடோடி வாழ்க்கையின் போது, மனிதர்கள் தான் விலங்குகளால் வேட்டையாடப் பட்டனர். விலங்குகளிடமிருந்து தங்களைக் காத்துக் கொள்ள ஓடத் துவங்கிய போது தான், கால்களை மட்டும் பயன்படுத்தி ஒட கற்றுக் கொண்டனர். கால்களால் மட்டும் ஓடும் போது, தெளிவாகப் பார்த்துக் கொண்டு

ஓடுவதற்கும், ஓடிக் கொண்டிருக்கும் நிலையிலேயே, மரக் கிளைகளைப் பிடித்து ஏறித் தப்பித்துக் கொள்ளவும் அது உதவிகரமாக இருந்தது.

அவ்வாறு ஆபத்தான நேரத்தில் கால்களை மட்டும் பயன்படுத்தி ஒடக் கற்றுக் கொண்டவர்கள், மரங்களிலிருந்த காய் கனிகளைப் பிடுங்குவதற்கும் கூட, நிமிர்ந்த நிலை மிகவும் உதவிகரமாக இருந்ததால், இறுதியில் நிமிர்ந்த நிலையில் வாழும் இரண்டு கால் உயிரினமாக மாறிப் போனார்கள்

இரண்டு கால் உயிரினமாக மாறிய பிறகும் கூட மனிதர்கள் தான் விலங்குகளால் வேட்டையாடப் பட்டனர். அந்த வேட்டைக்குப் பெரும்பாலும் பெண்கள் தான் இரையாகிக் கொண்டிருந்தனர்.

ஏனெனில், பருவமடைந்த நாள் முதலாகவே பெண் என்பவள் ஒரு குழந்தையைச் சுமந்த படியே தான் இருப்பாள். குழந்தை வயிற்றுக்கு உள்ளேயிருக்கும். அல்லது வெளியில் இருக்கும். அது தான் வித்தியாசம், அதனால், ஆணைப் போல் எளிதாக ஓடித் தப்பிக்கப் பெண்ணால் முடியாது.

மேலும், குறைவான பலப் பிரயோகத்தில் வீழ்த்த முடிந்த இரையைத்

தாக்குவது தான் விலங்குகளின் வழக்கம். அதனால், வேகமாக ஓடித் தப்பிக்க

முடியாத பெண் தான் விலங்குகளுக்குரிய இலக்காக இருந்தாள்.

ஆண் தான் விலங்குகளிடமிருந்து பெண்ணைக் காப்பாற்றிக் கொண்டிருந்தான், எனினும், பெண்ணைப் பொறுத்த வரை, நாடோடி வாழ்க்கை மிகவும் ஆபத்து நிறைந்ததாகவே இருந்தது. ஒன்று அவள் கொல்லப்படுவாள்,

அல்லது அவளுடைய குழந்தை அவள் கண்ணெதிரில் விலங்குகளால் குதறித் தின்னப்படும். அப்படிப் பட்ட ஆபத்தான பயணத்தின் போது தான், மனித இனம் குகையைக் கண்டு பிடித்தது.

குகை என்பது முப் புறமும் பாறையால் சூழப்பட்டு இருந்தது. முன் புறம் மட்டும் முட்புதர்களைப் போட்டு அடைத்து விடும் போது,

விலங்குகளால் நெருங்க முடியாத பாதுகாப்பான அரணாக இருந்தது. அதனால், விலங்குகளிடமிருந்து தப்பிக்க பெண்ணுக்கு குகை உதவியது.

பெண் குகையில் தங்கினாள், தனக்கும் தன் குழந்தைக்கும் கிடைத்த பாதுகாப்பை உணர்ந்தாள். அதனால், அதிலிருந்து வெளியேற மறுத்தாள். இவ்வாறாக, ஒரே இடத்தில் நிரந்தரமாகத் தங்கும் வழக்கம் உருவாயிற்று. மனித இனத்தை ஓரிடத்தில் நிலையாய்த் தங்கி வாழும் இனமாக, பெண் தான் மாற்றியமைத்தாள்.

கும்பல் கலாச்சாரம் ஒரு கலகக் கலாச்சாரம்.

குகை வாழ்க்கையின் போது, அருகில் இருந்த இலைதழைகளையும், காய்களையும் பறித்தபடி, குகைக்குச் சுற்றியே பெண் வாழத் தொடங்கினாள். ஆண் முழு நேர வேட்டைக்காரனாக மாறத் துவங்கினான். கற்களைக் கொண்டே ஆயுதங்கள் செய்யவும், திட்டமிட்டு விலங்குகளை வேட்டையாடவும் கற்றுக் கொண்டான்,

அவ்வாறு கல்லாயுதங்களைக் கூர்மைப் படுத்துவதற்காகப் பாறைகளின் மீது கற்களைத் தேய்த்த போது தான், மரங்களுக்கு இடையிலான உராய்வால் இயற்கையாக உருவாகிக் கொண்டிருந்த நெருப்பை, செயற்கையான முறையில் தேவைக்கேற்ப உருவாக்கிக் கொள்ள மனிதன் கற்றுக் கொண்டான்,

குகையில் வாழத் துவங்கிய பின், பெண்ணைப் பாதுகாக்க வேண்டிய நிர்பந்தம் ஆணுக்கு இல்லாததால், தற்காப்பு மட்டுமே போதுமென்றாயிற்று. ஆண் முழு நேர வேட்டைக்காரனாகத் தன்னை மாற்றிக் கொண்டான்.

ஆண் வேட்டைக்குச் செல்வான். பெண் குகையைக் காப்பாள். ஆனால்

ஆண்களின் எண்ணிக்கை குறையத் தொடங்கி விட்டது. ஏனெனில், வேட்டைத் தொழிலில் வேட்டைக்காரனே கூட வேட்டையாடப் படும் சூழலும் இருந்தது. அதனால், ஆண்கள் விலங்குகளுக்குப் பலியாகத் தொடங்கினர்,

பிரசவம் தான் பெண்ணுக்கிருந்த ஒரே கண்டம். ஆனால், வேட்டைத் தொழில் காரணமாக ஆணுக்கோ தினமும் கண்டம், அதனால், ஆண்களின் எண்ணிக்கை குறையத் தொடங்கியது.

ஆண் தான் பாதுகாவலன், உணவின் ஆதாரம். அதன் காரணமாக ஆண்கள் அதிகமாகத் தேவைப் பட்டனர். ஆண் குழந்தைகள் மிகவும் விரும்பப்பட்டனர். அந்த விருப்பம் மனித இனத்தின் மரபணுவிலேயே இரண்டறக் கலந்து விடுமளவு வெறித்தனமானதாக இடம் பிடித்தது.

மேலும் இன்றைய நிலைக்கு முற்றிலும் மாறுபட்ட ஒரு வழக்கம் கற்காலத்தில் இருந்திருக்கிறது. மனிதர்களின் குழுவில் பலவானாக

இருப்பவன் மட்டுமே எல்லாப் பெண்களுடனும் பாலுறவு கொள்ளும் உரிமையுடையவன் என்று எழுதப் படாத ஒரு சட்டம் அப்போது இருந்திருக்கிறது. பாட்டி, அம்மா, அத்தை, சகோதரி, மகள், பேத்தி போன்ற உறவு முறைகள் எதுவும் அப்போது உருவாகி இருக்கவில்லை. அதனால், அத்தனை பெண்களுடனும் பலவான் மட்டுமே பாலுறவில் ஈடுபடலாம். வேறு எந்த ஆணும் எந்தவொரு பெண்ணுடனும் பாலுறவில் ஈடுபடக்கூடாது.

பலவானைத் தவிர மற்ற ஆண்கள் திருட்டுத்தனமாக மட்டுமே பெண்ணுடன் இணைய முடியும். இந்நிலைமை அந்த பலவானின் மகனுக்கும் பொருந்தும், ஏனெனில், தந்தை மகன் என்கிற உறவே அப்போது உருவாகியிருக்கவில்லை. ஒரே உறவு தாய் மட்டுமே. ஆகவே, கும்பலில் உள்ள ஏதாவது ஒரு பெண்ணுடன் இணைய முயலும் போது, தன் மகனைக் கூடக் காட்டு மிராண்டித்தனமாக அடித்து, அந்தக் காட்டை விட்டே பலவான் விரட்டி விடுவான்,

அவ்வாறு ஒரு ஆண் விரட்டியடிக்கப் படும் போது, அவனை எல்லோருமே மறந்து விட்டாலும், அவனுடைய தாயால் மறக்க முடியாது. மோப்ப சக்தியின் மூலம் தன் மகனுடைய இருப்பிடத்தைக் கண்டு பிடிப்பாள். பலவானுக்குத் தெரியாமல் அவ்வப்போது தன் மகனிடம் சென்று, அவனுக்குரிய இன்பத்தை

வழங்கி, தன் குழந்தையைப் பராமரித்துக் கொண்டிருப்பாள். மகன் திடகாத்திரமான ஆணாகும் வரை இதே நிலை தொடரும்.

அதன் பின் அந்த மகனை வைத்தே அந்த பலவானைக் கொலை செய்வாள். அல்லது தன்னுடைய அதிகாரத்தைத் துறக்க அந்த தந்தை சம்மதிக்கும் பட்சத்தில், மகனுக்கும் தந்தைக்கும் இடையே சமரசம் செய்து வைப்பாள், ஒன்றாகக் கூடி வாழ்வார்கள்,

ஆண் பிள்ளைகளைக் காப்பாற்றக் கூடிய மேற்கண்ட பணியை தாய் பல்லாயிரம் ஆண்டுகள் செய்து வந்திருக்கிறாள்.

ஆண்களிடையே இத்தகைய சமரசத்தை ஏற்படுத்தி வைத்ததன் மூலம், பெண்ணுடன் இணைவதில் ஆண்கள் அனைவருக்கும் சம உரிமையை வழங்கக் கூடிய வாழ்க்கை முறையாக குகை வாழ்க்கையை தாய் மாற்றியமைத்தாள்.

அதன் மூலம், குகையில் வசிக்கும் அனைத்து ஆண்களுக்கும் பொதுவான சொத்தாக பெண் உருவாகி விட்டாள்.

மக்கள் கும்பல்களாக வாழத் தொடங்கினர். அந்தக் கும்பல் வாழ்க்கையி தாய் என்கிற உறவு மட்டுமே இருந்தது. தந்தை இன்னாரென அறியப்படாத நிலையில் தான் குழந்தைகள் பிறந்து கொண்டிருந்தார்கள். தாய்க்குத் தான் உறவுகள் இருந்தன. அவளுடைய குழந்தைகள் அனைவரும் திடகாத்திரமாக வளர்ந்து நின்றபோது, தாய்

தான் தன் குழந்தைகளால் சூழப்பட்டிருந்தாள். ஆகையால், தாய் தான் அவர்களுடைய தலைவியாக இருந்தாள். தாய் என்கிற பாத்திரம் கும்பலில் சக்தி வாய்ந்ததாக உருவாயிற்று.

ஆனால், தாயைத் தலைவியாகக் கொண்டு உருவான கும்பலின் வாழ்க்கை எப்போதும் கலகம் நிறைந்ததாகவே இருந்து கொண்டிருந்தது. ஆண்கள் அனைவருக்கும் சம உரிமை கிடைத்த பிறகு, பெண்ணோடு பாலுறவில் ஈடுபடுவது, ஆண்களிடையே கலகங்களை உருவாக்கக் கூடிய விவகாரமாக

உருவாகி விட்டது. ஒரு தாய் வயிற்றின் பிள்ளைகளாகவே இருந்தாலும், பெண் விவகாரத்தில் ஆண்கள் மூர்க்கத்தனமாக அடித்துக் கொண்டார்கள், சகோதரர்களையே கொலை செய்தார்கள், விலங்குகளால் கொல்லப் படுவதை விட, பெண்ணுக்காக நடைபெற்ற சண்டைகளில் அதிகமான ஆண்கள் கொல்லப்பட்டார்கள்.

தந்தை என்னும் உறவு உருவான வரலாறு**.**

மனித இனமே பலதார உறவில் வாழும் படி படைக்கப்பட்ட விலங்கினம் தான். அந்தப் படைப்பிலக்கணப்படி வாழும் போது, வேட்டையாடிய நேரம் போக மீதி நேரமெல்லாம் பெண்ணுடனான சரச சல்லாபங்களிலேயே ஆண்கள் ஈடுபட்டிருந்தார்கள், அதனால், பெண்களுக்காக ஆண்களிடையே நடைபெற்ற சண்டைகளால், குகைச் சமூகம் கொலைகாரச் சமூகமாகவே வாழ வேண்டியிருந்தது.

இந்த வாழ்க்கை தாய்க்கு அளித்த மன வேதனை அளப்பரியது. ஏனெனில், அவளுடைய கண்ணெதிரிலேயே பெண்ணுக்கான சண்டைகளில் அவளுடைய ஆண் குழந்தைகள் செத்துக் கொண்டிருந்தார்கள்.

பாலின்பமே தன்னினக் கொலைகளுக்கான களமாக மாறிய போது. வரை முறையற்ற பாலுறவிற்கு தீர்வைக் கண்டுபிடித்தே ஆகவேண்டிய நெருக்கடி தாய்க்கு ஏற்பட்டது. தன்னுடைய குழந்தைகளின் மரணங்கள் ஏற்படுத்திய மன வலி காரணமாக, சகோதரக் கொலைகளுக்கு தாய் ஒரு முடிவு கட்டினாள்.

கும்பலில் உள்ள ஒவ்வொரு ஆணுக்கும் குறிப்பிட்ட சில பெண்கள் எனப் பிரித்துக் கொடுத்து, அவர்களுடன் மட்டுமே அந்த ஆண் பாலுறவில் ஈடுபட வேண்டும். அதை மீறி எந்த ஆணும் நடந்து கொள்ளக்கூடாது. மீறும் ஆண் கும்பலிலிருந்து விரட்டப் படுவான் என்னும் வகையில் எழுதப்படாத ஒரு சட்டத்தை இயற்றி, கும்பலின் பாலுறவு செயல்பாடுகளை தாய் ஒழுங்கமைத்தாள்.

இந்த ஏற்பாட்டின் மூலம், ஒரே பெண்ணுக்காகப் பல ஆண்களிடையே நடைபெற்று வந்த பகிரங்கமான கலகங்களுக்கு தாய் முடிவுரை எழுதினாள். தாயின் ஏற்பாடு ஆண்களால் வெளிப்படையாக மீற

முடியாததாக இருந்தது. ஆனால், பெண்களுக்கென எவ்விதக் கட்டுப்பாடுகளையும் தாய் விதிக்கவில்லை. ஏனெனில் பெண்ணால் மட்டுமே கும்பலுக்குத் தேவைப்படுகின்ற ஆண்களை மென்மேலும் பெற்றுக் கொடுக்க முடியும் என்பதால் பெண்ணின் பாலியல் சுதந்திரத்தில் தாய் தலையிடவில்லை.

குகை வாழ்க்கையில் தாய் மட்டுமே தன் குழந்தைகளால் அறியப் பட்டிருந்தாள். அதனால் கும்பலில் உள்ள ஒவ்வொரு நபருடனும், ஏதோ ஒரு வகையில் இரத்த சம்பந்தமுடையவளாக இருந்தாள். அதனால், அதிகாரம் அவளுடைய கையில் இருந்தது.

யாருக்கு அதிகமான மக்கள் கூட்டம் இருக்கிறதோ, வன்முறையில் ஈடுபட்டு வெல்லும் பலம் கொண்ட கூட்டத்தை யார் பெற்றிருக்கிறார்களோ, அவர்கள் தான் அறிவுத் தளத்தில் வளர்ச்சியடையாத மக்களின் தலைவர்களாக உருவாக முடியும்.

இயல்பாகவே தாய்க்குத்தான் ஏராளமான குழந்தைகள் இருந்தன. அவளுக்காக வன்முறையில் ஈடுபடக் குழந்தைகள் தயாராக இருந்தார்கள், ஆணுக்காக யாருமே இல்லை, அதனால் தாயே கும்பலின் தலைவியாக இருந்தாள்.அவளுடைய வார்த்தையே சட்டமாயிற்று.

இவ்வாறாக, இன்னார்க்கு இன்னார் எனப் பகுத்து வாழத் தொடங்கிய போது தான், தந்தை என்கிற ஒரு பாத்திரமே முதன் முதலாக மனித சமூகத்திற்கு அறிமுகமாயிற்று. அதுவரை மற்ற பாலூட்டிகளைப் போலவே, தாய் தான் குழந்தையின் ஒரே உறவாக இருந்தாள்.

பெண்ணுக்குப் போடப்பட்ட முதல் கற்புக் கவசம்**.**

தந்தை என்கிற உறவு உருவானதைத் தொடர்ந்து, குழந்தைகளின் பாதுகாப்பில் தந்தையும் பங்கேற்க வேண்டும், உணவுக்கும் அவனே வழி செய்ய வேண்டும் என்கிற பொறுப்பு ஆண்களின் கட்டாயப் பொறுப்பாயிற்று. அவ்வாறு பொறுபேற்கத் தொடங்கிய போது தான், தன்னுடைய குழந்தை, அடுத்தவன் குழந்தை என குழந்தைகளைப் பாகுபடுத்திப் பார்க்கக் கூடிய அறிவை ஆண் பெற்றான். அதன் காரணமாக ஒவ்வொரு ஆணும் தன் குழந்தையை மட்டுமே பராமரிக்க விரும்பினான். அதனால், அவனுக்கென ஒதுக்கப்பட்ட பெண்கள் அவனுடைய குழந்தையை மட்டும் தான் பெற்றெடுக்க வேண்டும் என்கிற நிர்பந்தத்தை பெண்களின் மீது சுமத்தத் தொடங்கினான்.

அவனுடைய தோழி இந்த நிபந்தனைக்கு ஒப்புக் கொள்ளாத போது, தன்னால் வேட்டையாடிக் கொண்டு வரப்படும் விலங்கை, அவளுக்குக் கொடுக்கமறுத்தான், தனக்கு மட்டுமே பிறந்ததாக அவனால் நம்பப் பட்ட குழந்தைகளோடு மட்டும் வேட்டைப் பொருளை அவன் பகிர்ந்துண்ணத் தொடங்கினான்.

பெண்ணின் மனதை இது கொடூரமாக வருத்தியது. தன்னுடைய குழந்தைகளில் சிலர் வயிறார உண்கிற அதே வேளையில், சில குழந்தைகள் பசியால் வாடும் நிலைமையை அவள் பார்க்க வேண்டியதாயிற்று. ஏற்க வேண்டியதாயிற்று.

அவளால் அதிகாரத்தையும் பயன்படுத்த முடியவில்லை, ஏனெனில், அவளுடைய தோழன் தன்னுடைய குழந்தைகளைப் பராமரிப்பதில் தவறேதும் செய்யவில்லை. அடுத்தவனுக்குப் பிறந்ததாய்க் கருதப்படும் குழந்தையைத் தான்பராமரிக்க மறுக்கிறான். ஆகவே, அவன் மீது குற்றம் காண முடியாது.

ஒரு தாயாக இதைச் சகித்துக் கொள்ள பெண்ணால் முடியவில்லை. அதே சமயத்தில் சுயமாக உணவு தேடவும் முடியவில்லை. ஏனெனில் அவள் ஈருயிருடனே எப்போதுமே இருந்தாள். அன்றைய ஒரே பொழுதுபோக்கு பாலுறவு அதனால், பெண் எப்போதுமே கர்ப்பமாகவே தான் இருப்பாள்.

இச்சூழல் காரணமாக, தன் குழந்தைகள் அனைவரும் சமமான நிலையில் பராமரிக்கப் படும் நிலையை உறுதிப் படுத்திக் கொள்வதற்காக, ஆணின் நிர்பந்தப்படி அவளுக்கென்று ஒதுக்கப்பட்ட ஆண் மூலமாக மட்டுமே குழந்தையைப் பெற்றெடுத்த பெண் ஒப்புக் கொண்டாள். இவ்வாறாக, பெண்ணின்மீது கற்பு சுமத்தப்பட்டது. பல்லாயிரம் ஆண்டு காலப் பாலியல் சுதந்திரம்பெண்ணிடமிருந்து பறிக்கப் பட்டது.

தனியுடைமை தோன்றியது.

அதன் பின் தன் குழந்தைகள் மீது அன்பு, பாசம் போன்ற உணர்ச்சிகள் ஆணுக்கும் ஏற்படத் தொடங்கின, தன் தோழியரை மட்டுமின்றி குழந்தைகளையும் பராமரிக்கும் பொறுப்பை ஆண் முழுமையாக ஏற்றுக் கொண்டான். அதனால், தேவைகள் அதிகரித்தன, அதையொட்டிய தேடலும் துவங்கியது. அதன் விளைவாய் அவன் விவசாயத்தைக் கண்டு பிடித்தான்.

தாவர உணவுகளை விளைவிக்க ஆணுக்கு நிலம் தேவைப்பட்டது. நிலத்தைத் தேர்வு செய்தான், பண்படுத்தினான். பயிரிடத் தொடங்கினான். அவ்வாறு அவன் பண்படுத்தி பயன்படுத்திய நிலத்தைப் பிறரோடு பகிர்ந்து கொள்ள மறுத்தான், அவனுக்குப் பின் அந்த நிலம் அவனுடைய குழந்தைகளுக்குத் தான் சொந்தமாக வேண்டும் என்பதில் உறுதியாக இருந்தான். அந்த எண்ணம் எளிதாக வெற்றியும் பெற்றது.

ஏனெனில், அவனோடு இணைந்து அந்த நிலத்தில் உழைக்கும் வாய்ப்பை அவனுடைய குழந்தைகள் தான் பெற்றிருந்தார்கள். ஆகையால், அவனுக்குப் பின் அந்த நிலம் இயல்பாகவே அவர்களைச் சென்றடையும் நிலை உருவாயிற்று.அந்த நிலம் அவர்களுக்கு மட்டுமே

உரியது என பிறராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. இவ்வாறாக மனித சமூகத்திற்கு தனியுடைமை அறிமுகமாயிற்று.

பெண்ணை மையமாய் வைத்து ஆண்களிடையே நடைபெற்ற கலகங்களை முடிவுக்குக் கொண்டு வர இன்னார்க்கு இன்னார் என பகுத்து வாழும் முறை அறிமுகமாயிற்று. பெண்ணுக்கென்று ஒதுக்கப்பட்ட ஆணின் குழந்தைகளை மட்டுமே, அந்தப் பெண் பெற்றெடுக்க வேண்டும் என்கிற கருத்தால் பெண்ணுக்கான கற்பு அறிமுகமாயிற்று. பெண்ணின் கற்பு காரணமாக, தனக்குமட்டுமே பிறந்த குழந்தைகளிடம் தன்னுடைய நிலத்தையும், பொருட்களையும்மற்றும் கால் நடைகளையும் ஆண்கள் அளித்துச் சென்றதன் வாயிலாக,தனியுடைமை உருவாயிற்று.

இவ்வாறு தனியுடைமை தோன்றிய பிறகு உடைமைகளைப் பறித்துக் கொள்ளும் நோக்கில் மனிதர்களிடையே சண்டைகள் துவங்கின. அந்த உடமை சார்ந்த உரிமைச் சண்டைகளையும், பெண்ணை அபகரிக்க ஒரே கும்பலைச் சேர்ந்த ஆண்களிடையே நடைபெறும் சண்டைகளையும் தீர்த்து வைக்க ஒரு நபர் தேவைப்பட்டான். நியாயவான் சொல் எப்போதுமே எடுபடாது. யாரும் கேட்க மாட்டார்கள், ஏனெனில், கும்பல் என்பதே காட்டு மிராண்டித்தனமானது. ஆனால், அடிப்படையில் பேடித்தனமானது. அச்சமே கும்பல்களை உருவாக்கும் பட்டறை. இன்றைக்கும் இக்கருத்து பொருந்தும்.

கும்பலாகக் கூடும் இன்றைய மனிதர்களும், தங்கள் தகுதிக்கேற்ப தங்களிடம் மறைந்து கிடக்கும் காட்டுமிராண்டிக் குணத்தை நுண்ணிய அளவிளாவது காட்டியே தீர்வார்கள். ஆனால், எந்தக் கும்பலும் கண்டிப்பான தலைவனிடம் சரணடைந்து விடும்.

அரசியல் அதிகாரம் உருவாயிற்று.

மனிதனின் மரபணுவிலேயே இடம் பிடித்துள்ள ஒரு அடிப்படைக் குணம் தனி நபர் துதி. உலகில் தோன்றியுள்ள மதங்கள் கூட இதற்கு விதி விலக்கல்ல, இந்து மதத்தைத் தவிர, மற்ற மதங்கள் அனைத்தும் தனி நபர்களின் கருத்துக்களால் உருவாக்கப்பட்டவை.

காந்தி என்கிற தனிநபரை முன்னிலைப் படுத்தாமல் இருந்திருந்தால் இந்தியா இவ்வளவு எளிதாக சுதந்திரம் அடைந்திருக்க முடியாது. அதே போல மாசேதுங் இல்லாமல் சீனாவும், ஜின்னா இல்லாமல் பாகிஸ்தானும் தோன்றியிருக்கமுடியாது. அதே போல அலெக்ஸாண்டர், நெப்போலியன், அசோகர் என தனிநபர்கள் தான் சரித்திரம் முழுவதும் நிறைந்திருக்கிறார்கள். மக்களாட்சி மலர்ந்த பிறகும் கூட, தனி நபரை முன்னிலைப் படுத்தாத அரசியல் கட்சிகள் தேர்தல்களில் பெரு வெற்றி பெறுவதில்லை. உதாரணமாக,.நரேந்திர மோடி என்கிற தனிநபரை முன்னிலைப் படுத்தாத வரை, பாரதீய ஜனதாகட்சி தனிப் பெரும்பான்மையோடு வெற்றி பெற்றதேயில்லை.

மேலும்,தனித்தன்மை மிக்கவராகத் தன்னை வித்தியாசப்படுத்திக் காட்டும் திறனற்ற தனிநபரும் வெற்றி பெறுவதில்லை. ஏனெனில், தனித் தன்மையோடு தன்னை முன்னிலைப் படுத்திக் கொள்ள முடிந்த தனி நபரைத் தான், மக்கள் தங்கள் ஆட்சியாளனாகத் தேர்வு செய்கிறார்கள். மனித வரலாற்றின் எந்தக் கட்டத்திலும் இந்த நிலைமை மட்டும் மாறவேயில்லை. மனித குலம் உள்ள வரை, தனிநபர் துதி மாறவும் மாறாது. மறையவும் மறையாது. ஆகவே துணிச்சலாகச் செயலாற்றும் ஒரு தீரன், இரக்கமற்ற பலவான் ஒருவன் அன்றைய காட்டு மிராண்டிகளுக்குத் தேவைப்பட்டான். சர்வாதிகாரம் தேவைப்பட்டது. மனித இனத்தை வழி நடத்த, எப்போதெல்லாம் ஒரு சர்வாதிகாரி தேவைப்படுகிறானோ அப்போதெல்லாம் தவறாமல் ஒரு நபர் தோன்றுவான் என்பது ஒரு சமூக விதி.

அவ்விதியின் படி, வலியவன் ஒருவன் உருவானான். அவனது சொல் ஏற்கப்பட்டது. அந்த வலியவனை ஏற்றுக் கொண்ட போது, வாழ்வது எளிதாயிற்று. வாழ்க்கை ஓரளவு பாதுகாப்புடையதாயிற்று. தன் உடைமைகளையும், பெண்ணையும் பாதுகாத்துக் கொள்வதற்கு அது உதவிகரமாய் இருந்தது. ஆகவே வலியவனை வழிபடுவதும், அவனுடன் இணைந்து கொள்வதும் வழக்கமாயிற்று.

குட்டி போட்டு பாலூட்டி வளர்க்கும் விலங்குகள் பலவானைத் தலைவனாக ஏற்றுக் கொள்வது ஒரு பொது விதி. மனிதனும் அதே விலங்கினத்தைச் சேர்ந்தவனே. ஆகவே, வலியவன் தலைவனானான். ஒரு கும்பலை அடிமையாக்கிய வலியவன் அதே உளவியல் நுணுக்கத்தைப் பயன்படுத்தி அடுத்தடுத்த கும்பல்களை அடிமையாக்கினான். காற்று, தண்ணீர், உறக்கம், உணவு மற்றும் பாலின்பம் மட்டுமே அவனுடைய தேவைகள். இவற்றில் முதல் மூன்றும் இயற்கையாகக் கிடைக்கக் கூடியவை. அடுத்த இரண்டும் அவனுடைய அடிமைக் கும்பல்களால் பொதுவில் வழங்கப்பட்டன. அவனுக்கு மட்டுமின்றி அவனுடைய கையாட்களுக்கும் அவை பொதுவாயின, இதைக்கண்டு, வலியவனின் கையாட்களாகச் சேர்ந்து கொள்ள பலர் தயாராயினர். இவ்வாறாக வன்முறையாகச் செயல்படுவதில் வல்லமை மிக்க கூட்டமொன்று வலியவனின் தலைமையில் உருவாயிற்று. அந்தக் கூட்டத்தை கண்டதுமே எந்தக் கும்பலும் சரணடைந்தது. சரணடையாத கும்பல் துவம்சம் செய்யப்பட்டது. பெண்கள் சூறையாடப் பட்டனர். குழந்தைகள் கொல்லப்பட்டனர். அந்த வலியவனுடைய பலம், மிருக பலத்தைக் கடந்து அசுர பலமாக மாறிப் போயிற்று. அதன்பின் அவன் வைத்ததே சட்டம் என்றாயிற்று. அவனது சொல்லே வேதவாக்காயிற்று. இவ்வாறாக ஏராளமான கும்பல்களைக் கொண்ட கூட்டத்திற்குத் தலைவனாகத் தன்னை உருவாக்கிக் கொண்டான்.. அவனுக்கு ஊழியம் புரிய ஒவ்வொரு கும்பலிலிருந்தும் சிலர் பணிக்கப்பட்டனர். அவர்களிலிருந்து ஒரு நபரைத் தேர்வு செய்து அந்தந்தக் கும்பலுக்கு

தன்னுடைய பிரதிநிதியாக நியமித்து, அந்த பிரதிநிதிகளின் தலைவனாக அந்த வலியவன் உருவாகி விட்டான். அடிமைக் கும்பல்கள் அனைத்தும் அவனுடைய அதிகாரத்தின் படி நடக்க வேண்டியதாயிற்று. அந்த அடிமைகளைக் கொண்ட பகுதி அவனுடைய நாடாக உருவாயிற்று. அந்த வலியவனே அரசனானான், நாடும் அரசனும் உருவான பிறகு, ஆணாதிக்கம் என்பது இயல்பாகவே உருவாகி விட்டது.

இந்த முரட்டுக்கூட்டத்தின் முன்னால், தாயைத் தலைவியாய் ஏற்று வாழ்ந்து கொண்டிருந்த ஆண்கள் தோற்றுப் போனார்கள். அவர்கள் தங்கள் தோழியரையும், குழந்தைகளையும் பாதுகாக்க வேண்டிய நிலையில் இருந்ததால், முரட்டுக் கூட்டத்தின் முன் சரணடைந்தே ஆக வேண்டிய நிப்பந்தத்தில் இருந்தார்கள். அதனால், ஆண்களைக் கொண்ட முரட்டுக் கூட்டம் உருவாகி பெயரிடப் படாத

நாடுகள் உருவான போது, தாயாதிக்கம் முடிந்து போயிற்று.

பல தார உறவு என்பது மனிதனின் மரபணு அறிவு. அதனால், தாயின் காலத்தில் இணைமாற்றம் இயல்பான செயலாகவே நிகழ்ந்து கொண்டிருந்தது. தாயின் சட்டத்தை மீறியதாகக் கண்டுபிடிக்கப் படும் ஆண் தண்டிப்பது போன்ற பாவனைகள் மூலமாக, தாயால் பெரும்பாலும் மன்னிக்கப் பட்டான். அதனால் பெண்ணை மையமாய்க் கொண்ட கலகங்கள் பகிரங்கமாக நடைபெறா விட்டாலும் மறைமுகமாக நடந்து கொண்டே தான் இருந்தன.

ஆனால், மூர்க்கத்தனமான சண்டையாகவோ, கொலைச் செயலாகவோ அவை மாறும் முன்பாக உடனுக்குடன் தாயால் சமரசப் படுத்தப் பட்டன,

ஆனால், தாயாதிக்கம் முடிந்த பிறகு, களவொழுக்கப் பிரச்சினைகளை உடனுக்குடன் தீர்த்து வைக்க ஆளில்லாத நிலை ஏற்பட்டது. ஏனெனில், தாயைப்போல சுமுகமான முறையில் வலியவனின் பிரதிநிதியால் தீர்த்து வைக்க முடியவில்லை, அதன் காரணமாக, காமாந்தகக் கலகங்களில் ஈடுபடும் கலக இனமாக மனித சமூகம் மீண்டும் மாறத் தொடங்கியது.

பெண்ணின் பாலியல் சுதந்திரம் முடக்கப் பட்டது.

ஆனால், இந்த நிலைமை நீண்ட காலம் நீடிக்கவில்லை, நாடும், அரசனும், படைகளும் தோன்றிய பிறகு, கலகக் கலாச்சாரம் மிகக் கடுமையான முறையில் ஒழுங்கு படுத்தப் பட்டது. பலதார உறவு ஒடுக்கப் பட்டது. அமைதியை நிலைநாட்டுவதில் தாயைப் போல சமரச பாணியைப் பின்பற்றவோ, அல்லது சாந்தமான முறையைக் கையாளவோ, அரசன் தயாராக இல்லை.

அரசன் ஆணாக இருந்தான், அவனுடைய படை முரட்டுத் தனமான

ஆண்களைக் கொண்டதாக இருந்தது. அதனால் மனித சமுகம் முழுக்க முழுக்க ஆணாதிக்கமுடையதாக இருந்தது. அதனால், முதல் வேலையாகப் பெண்ணின் பாலியல் சுதந்திரம் முடக்கப் பட்டது.

பெண் சுதந்திரம் தான் பலதார உறவுக்கே முதற் காரணம் என்று கருதப்பட்டது. அதனால், பெண், ஆணின் அடிமையாகவே அறிவிக்கப்பட்டாள். குறிப்பிட்ட ஆணின் அடிமை என்பதைப் பிறர் அறிந்து கொள்ளும் வகையில் பெண்ணின் உடலைக் காயப்படுத்தி, தழும்புகள் உருவாக்கும் முறை கூட .அமுலில் இருந்திருக்கிறது. அது தான் பிற்காலத்தில் பச்சை குத்துதல், மோதிரம், தாலி போன்ற அடையாளங்களாக மாற்றமடைந்தது.

இவ்வாறு அடிமையாக அறிவிக்கப்படும் பெண்ணைப் பொறுத்த வரை, தோழனின் குழந்தையைப் பெற்றுக் கொடுப்பது, வளர்ப்பது, தோழனுக்குப் பணிவிடை புரிவது, தோழனுக்குரிய இன்பங்களைத் தருவது அவளது கடமை.அவளுக்குரிய இன்பத்தைப் பற்றி அவள் சிந்திக்கவே கூடாது. களவொழுக்கம் மிகக் கடுமையான தண்டனைக்குரியது. பெண் தான் குற்றவாளி. ஆண் நிரபராதி.

ஏனெனில், ஆன் விதைகளை வழங்கக் கூடியவனாகவும், பெண் விளை நிலமாகவும் இருந்ததால், அடுத்தவன் பயிரை பெண்ணின் தோழன் வளர்க்கும் சூழல் உருவாகிறது. மேலும், விதையைக் கொடுத்த ஆணுக்கும் விதையை வாங்கி வந்த பெண்ணின் தோழனுக்கும் பகை உருவாகி விடுகிறது. அது ஏதோ வகையில் சமூகத்தில் கலவரமாக வெடித்துக் கொண்டேயிருக்கிறது.

ஆகவே, கருவுறும் வாய்ப்பைப் பெற்றுள்ள பெண்ணின் களவொழுக்கம் தான் சமூகக் கலவரங்களுக்கு முதற் காரணம் என்று ஆண்கள் கருதினார்கள். இந்தக் கருத்து உருவான காலத்திலிருந்து தான் மனைவியை ஒரு போகப் பொருளாகப் பாவிக்கும் போக்கு துவக்கமாயிற்று.

பெண் பலிகடா ஆக்கப்பட்டாள்.

தன்னுடைய தோழி வேறொரு ஆணுடன் களவொழுக்கத்தில் ஈடுபட்டதை ஒரு தோழன் கண்டு பிடித்து விட்டால், அந்தப் பெண் மிகவும் கொடூரமாகத் தண்டிக்கப்பட்டாள். இப்போது ஒரு கலாச்சாரம் இருக்கிறதல்லவா? தன் கணவன் வன்பாலுறவில் ஈடுபட்டதாக ஒரு மனைவி கூறினால் போதும். விவாகரத்து வழங்கப்படும். அதே போல், ஒரு ஆண் கூறிய அனைத்தும் அந்தக் காலத்தில் ஏற்கப்படும், விசாரணை கூட இவ்வாறு தான் நடைபெறும்.

அவள் சாத்தானோடு உடலுறவு கொண்டதாக ஒப்புக் கொள்ளும்படி கடுமையாகத் தாக்கப் படுவாள். அடி தாளாமல் ஒப்புகொண்ட பின், அந்த சாத்தானின் ஆண் குறி பற்றி விசாரிக்கப்படும். அதன் அளவைப் பற்றியும்.

வடிவத்தைப் பற்றியும் அவள் விளக்கியாக வேண்டும். அதை விளக்கமாகக் கூறும் வரை அவள் கடுமையாகச் சித்திரவதை செய்யப்படுவாள்.

அந்த சித்திரவதையைத் தாங்கமுடியாமல், அவள் ஏதேதோ கற்பனை வடிவங்களையெல்லாம் கூறுவாள், பெரிய பெரிய அளவுகளைக் கூறும் படி அவள் துன்புறுத்தப் படுவாள். இறுதியாக ஆண்களாகவே ஒரு வடிவத்தைச்

சொல்வார்கள். அதை அவள் ஒப்புக்கொள்ள வேண்டும், இல்லாவிட்டால், சித்திரவதை தொடரும்.

அதனால் ஆண்களால் சுமத்தப்படும் குற்றச் சாட்டுக்களையும், அவர்களால் சொல்லப்படும் ஆண்குறி குறித்த கற்பனை வடிவங்களையும், அளவுகளையும் அவள் ஒப்புக் கொள்வாள்.

அதன் படி, சாத்தானின் ஆணுறுப்பு உடலிலிருந்து வெளிவரும் போது ஒரே உறுப்பாகத் தான் வரும். ஆணின் பாலுறுப்புக்கும், சாத்தானின் பாலுறுப்புக்கும் எவ்வித வித்தியாசமும் இருக்காது. ஆனால், அது விரைப்படையும் போது, ஒண்டி வில் குச்சியைப் போல், ஆங்கில எழுத்து “வி” மாதிரி இரண்டு உறுப்பாக மாறும்.

அவ்வாறு மாறிய உறுப்பு ஒரே நேரத்தில் பெண்ணுறுப்பு வழியாகவும், ஆசன வாய் வழியாகவும் ஏக காலத்தில் பாலுறவு கொள்ளும். அது பேரானந்த அனுபவமாக இருக்கும் என்று அவள் சொல்லும் படியாக சித்திரவதை செய்யப்படுவாள். சித்திரவதை தாங்க முடியாமல் ஒப்புக் கொண்ட பின், அதைப் போன்ற இன்பத்தை அவள் பிறருக்கும் அறிமுகப் படுத்தி விடுவாள். ஆகவே அவள் கொல்லப்பட வேண்டும் என்கிற கருத்தின் அடிப்படையில் கொல்லப்படுவாள்.

பெண்கள் அனைவருக்கும் பாடமாக இருக்கும் வகையில் கல்லால் அடித்துக் கொல்வது, உயிர் பிரியும் வரை மரத்தில் கட்டி தொங்க விட்டு விடுவது, உயிரோடு தீயிட்டுக் கொல்வது போன்ற முறைகளில் தண்டனை நிறைவேற்றப் படும்,

பலதார உறவை இயற்கையாய்க் கொண்ட மனித இனத்தை ஒரு தார் உறவிற்குள் வாழப் பழக்கப் படுத்துவதற்காக, பெண் பலிகடா ஆக்கப்பட்டாள். ஆனால் ஆண் மட்டும் முற்றிலுமாக மன்னிக்கப் பட்டான். இந்த நிலை ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக மனித சமூகத்தின் நடைமுறையாக இருந்திருக்கிறது.

திருமண நிறுவனம் உருவாக்கப் பட்டது.

ஆணைக் குற்றமற்றவனாகக் கருதியதால், எவ்வித அச்சமும் இல்லாமல் ஆண்கள் பெண்ணை அணுகுவதும், அதற்காகப் பெண்கள் கொலையுண்டு போவதும் சமூகத்தில் அதிகரிக்கத் தொடங்கியது. இந்த நிலையை முடிவிற்குக் கொண்டு வர அவ்வப்போது தோன்றிய

ஞானியர் பலர் முயற்சித்தனர். பல்வேறு வடிவங்களை ஆராய்ந்தனர்.

ஆணும் பெண்ணும் ஒன்றாகக் கூடி வாழும் வாழ்க்கை முறை தான், எந்தவொரு ஏற்பாட்டைக் காட்டிலும் இயற்கையோடு இயைந்து செல்லக் கூடியதாக இருந்ததால், அந்த ஏற்பாட்டிலேயே வேறொரு முக்கியமான விதியைப் புகுத்தி, ஒழுங்கு முறையுடைதாக மாற்றியமைத்தனர்,

அந்த விதியின் படி, ஆணின் மனைவி அவனுடைய தனிச் சொத்தாக அறிவிக்கப் பட்டாள். அந்த சொத்தைக் கொள்ளையிட எந்த ஆண் முயற்சித்தாலும் அதுவும் தண்டனைக்குரிய செயல் என்கிற கருத்து உருவாக்கப் பட்டது. தனது சொத்தைத் தவிர, பிற பெண்களை நெருங்கக் கூடாது என ஆணின் பாலியல் நடவடிக்கைகளிலும் கற்பொழுக்கத்தைப் புகுத்தி, சமூகத்தில் அமைதியை நிலை நாட்டும் விதிகளை உருவாக்கி, அதை ஒரு சடங்கின் மூலம் துவக்கி வைத்தனர். அது தான் திருமணம் என்கின்ற சடங்கின் மூலமாக உருவாக்கப் படுகிற குடும்ப வாழ்க்கை,

குடும்ப நிறுவன அமைப்பு முறை என்பது தனி நபர்களுக்கான வாழும் வழிமுறையாக மட்டுமின்றி சமூகத்தின் கட்டமைப்பைச் சிதைந்து விடாமல் பாதுகாத்துக் கொள்கின்ற, சமூகத்தில் அமைதியைப் பேணுகின்ற பொது நலச் சிந்தனையையும் அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப் பட்டது.

அதன் படி, ஒரு ஆணின் மனைவி அவனுடைய முதல் சொத்தாக அறிவிக்கப்பட்டாள். அந்த சொத்தை அபகரிக்க எந்த ஆண் முயன்றாலும் அது ஒரு குற்றச் செயல் என்று அறிவிக்கப்பட்டது. அதன் மூலமாக அடுத்தவன் மனைவியை நெருங்குவது தண்டனைக்குரியது என்கிற கருத்தும் உருவாயிற்று.

இவ்வாறாக, பல்லாயிரக்கணக்கான ஆண்டு கால அனுபவங்களுக்குப் பின், இருப்பதில் சிறந்ததொரு ஏற்பாடாக இருந்த திருமண நிறுவன அமைப்பு முறை

மனித சமூகத்திற்கு அறிமுகப் படுத்தப் பட்டது.

## **2.** இன்றைய குடும்பம் உருவாகிறது**.**

இன்றைய திருமணம் பெண்ணின் கையில் வழங்கப் படுகின்ற கண்ணாடிக் குடுவை,

குறைந்த பட்சக் குறைகளுடைய ஒரு ஏற்பாடு**.**

மனித இனத்திற்கு மட்டுமே இயற்கையால் வழங்கப்பட்ட சிறப்புக் கொடை பாலின்பம், குட்டி போட்டு பாலூட்டி வளர்க்கும் விலங்குகள் அனைத்தும் இன் விருத்திக்காக மட்டுமே இனச் சேர்க்கையில் ஈடுபடுகின்றன, மனித இனம் மட்டுமே இன்பத்திற்காகவும் பாலுறவில்

ஈடுபடுகிறது.

அதனால், எந்தவொரு விலங்கினத்தையும் விடப் பல மடங்கு கூடுதலாகப் பாலுறவில் ஈடுபடுகிறது. அவ்வாறு ஈடுபட்ட போதெல்லாம் அறிவை வளர்க்கும் வேதிகள் மனித மூளையில் சுரக்கின்றன. அதனால் மனித இனத்தின் அறிவு வளர்ந்து கொண்டேயிருக்கிறது. அறிவு வளர்ச்சி காரணமாக தன்னையொத்த விலங்கினங்களை விட புத்தி சாலித்தனமான விலங்கினமாக மனித இனம் உருவாகி, இறுதியில் உயிரினங்களின் நிரந்தரமான ஆட்சியாளனாக உயர்ந்து நிற்கிறது.

மிருகங்கங்களோடு மிருகமாக வாழ்ந்து கொண்டிருந்த மனித இனத்தை மிருகங்களின் தலைவனாக உயர்த்தியது மூளை. அந்த மூளையை அவ்வாறு இயங்க வைத்தது இயற்கையால் வழங்கப்பட்ட பாலின்பம்.

மனித இனத்திலும் பலமானவன் ஆண். நுரையீரல் முதல் மூளை வரை என உடலின் பாகங்கள் மட்டுமின்றி உடலமைப்பையே பெரிதாகப் பெற்றிருக்கிறான்,மேலும், இயற்கை உபாதைகள் எதுவுமற்ற உடலைப் பெற்றிருக்கிறான்,அதனால் சக்தி மிக்கவனாக இருக்கிறான், அந்த சக்தியைக் கொண்டு தாஜ்மகாலையும் கட்டலாம், அமெரிக்காவின் இரட்டைக் கோபுரங்களையும் தரைமட்டமாக்கலாம், அப்படிப் பட்ட அசகாய சக்தி ஆணிடம் இருக்கிறது.,

அவ்வாறுள்ள ஆணின் சக்தியை உருவாக்கும் சக்தியாக உருமாற்றும் பட்டறை பெண். ஆணின் சக்தியை வழி நடத்தும் மகாசக்தி பெண். அதற்குக் காரணம் அவள் தருகின்ற பாலின்ப சுகம்.

அதே நேரத்தில் பெண் தருகின்ற பாலின்ப சுகத்திற்காக அவளையே ஆண் சுற்றிக் கொண்டிருந்தான், வரைமுறையும் கட்டுப்பாடுகளும் இல்லாத பாலுறவு நடவடிக்கைகளால், ஆண்களுக்குள்ளே கலகங்கள் நடந்து கொண்டேயிருந்தன.

அதனால், மற்ற உயிரினங்களிடமிருந்து வரக்கூடிய ஆபத்துக்களை விட, சொந்த இனத்தைச் சேர்ந்த ஆண்களாலேயே கூடுதலான ஆபத்தை ஒவ்வொரு ஆணும் எதிர் கொள்ள வேண்டியிருந்தது. இவ்வாறு மனித இனத்தின் உயர்விற்குக் காரணமாயிருந்த பாலின்பமே தன்னினக் கொலைகளுக்கான களமாக மாறியபோது, வரைமுறையற்ற பாலுறவிற்கு ஒரு தீர்வைக் கண்டுபிடித்தே ஆகவேண்டிய நெருக்கடி. மனித இனத்திற்கு ஏற்பட்டது.

ஏராளமான வழிமுறைகள் ஆராயப்பட்டன. பல்லாயிரக் கணக்கான ஆண்டுகள் பரிசோதித்துப் பார்க்கப்பட்டன. குறைந்த பட்சக் குறைகளைக் கொண்டதாகவும், இயற்கையோடு இயைந்து செல்லக் கூடியதாகவும் காணப்பட்ட ஒரு ஏற்பாடு இறுதியாக ஏற்கப்பட்டது. அது தான் திருமணம் மூலமாக உருவாக்கப் படுகிற குடும்ப வாழ்க்கை. குடும்ப நிறுவன அமைப்பு.

குடும்ப அமைப்பு தனி நபர்களுக்காக மட்டும் உருவாக்கப் பட்டதல்ல. சமூகத்தில் அமைதியைப் பேணவும், ஒரு கட்டமைப்புடன் மனித இனம் வாழவும் வழிகோலுகின்ற பொது நல சிந்தனையையும் அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப் பட்டது. உணர்வுகளிலேயே மிகவும் ஆபத்தான உணர்வான காமம்காரணமாக, மனித சமூகத்தில் நிகழக்கூடிய கலகங்கள் தடுக்கப் பட வேண்டும் என்பதே திருமணம் என்கிற ஏற்பாட்டின் முதன்மையான நோக்கம்.

திருமணம் என்பது ஒரு சத்திய வாக்கு மூலம். ஆணையும், பெண்ணையும் அன்புடனும், பொறுப்புடனும் நடந்து கொள்ளச் செய்வதற்கான ஒரு ஏற்பாடு. எல்லைகளுக்குள் கட்டுப் பாட்டுடன் வாழச் செய்வதற்கான ஏற்பாடு. பதில் சொல்லக் கடமைப் பட்டவராக்கி விடுவதற்கான ஏற்பாடு. சமூக ஒழுங்கைக் கட்டிக் காப்பதற்கான, மிருக வாழ்க்கையைக் காட்டிலும் மேம்பாடான வாழ்க்கையை வாழச் செய்வதற்கான ஏற்பாடு.

உடற்பசி காரணமாக ஏற்படும் சமூகக் குற்றங்களைத் தடுப்பதற்கான ஏற்பாடு. மனிதனின் அடிப்படைத் தேவைகளில் ஒன்றான பாலுணர்வு வேட்கையை ஒழுங்கு படுத்திக் கொள்வதற்கான ஏற்பாடு.

விரும்பிய போதெல்லாம் பாலுறவில் ஈடுபடுவதற்கான, சுகாதாரமான பாலுறவை உறுதி செய்வதற்கான, அச்சமின்றி, சுதந்திரமாகப் பாலுறவில் ஈடுபடுவதற்கான, சட்டபூர்வ அங்கீ காரத்தோடு குழந்தைகளைப் பெற்றெடுப்பதற்கான ஏற்பாடு.

சிறப்பான முறையில் குழந்தை வளர்ப்பைப் பேணுவதற்கான ஏற்பாடு. சிறந்த குடிமக்களாய்க் குழந்தைகளை உருவாக்குவதற்கான ஏற்பாடு. பாதுகாப்பாக உறங்கியெழுவதற்கான ஏற்பாடு. மரணம் வரையிலும் பாதுகாப்பாக வாழ்வதற்கான ஏற்பாடு.

சொத்துக்களை உருவாக்க வேண்டும் என்கிற எண்ணத்தை மனதில் உருவாக்கி, இலக்கோடு மனிதனை நடந்து கொள்ளச் செய்வதற்கான ஏற்பாடு. சொத்துக்களை உருவாக்குவது மட்டுமன்றி, உருவான சொத்துக்களை முறையாய்ப் பாதுகாக்காத்துக் கொள்ளவும் இருப்பதிலேயே சிறந்த ஏற்பாடு.

நோய் நொடிகளால் பாதிக்கப்படும் போது பரஸ்பரம் நம்பிக்கையோடு உதவிக் கொள்வதற்கான ஏற்பாடு. முதுமைக்காலப் பராமரிப்பு சிறந்த ஏற்பாடு. பெற்றோரின் பாதுகாப்பிற்கும், முறையாக சவ அடக்கம் செய்வதற்குமான ஏற்பாடு.

இது போல் ஜனனம் முதல் மரணம் வரை மனித வாழ்க்கையை சிறப்புறப் பேணுவதற்கான ஏற்பாடுகளிலேயே குடும்ப நிறுவன அமைப்பு முறைக்கு நிகரான ஏற்பாடு எதுவுமேயில்லை.

குட்டி போட்டு பாலூட்டி வளர்க்கும் விலங்கினங்களிலேயே கற்பு

நெறியைப் பேணச் செய்துள்ள, குழந்தை வளர்ப்பில் தந்தையைப் பங்கேற்கச் செய்துள்ள ஒரே விலங்கினம் மனித இனம். இதற்குக் காரணம் குடும்ப நிறுவன ஏற்பாடு.

இலட்சக்கணக்கான ஆண்டுகள், சாத்தியப்பட்ட அத்தனை வழிகளிலும்

நேரிடையாகவே வாழ்ந்து பார்த்து, அனைத்திலும் சிறந்ததாய் இருப்பதாக ஏற்றுக் கொள்ளப் பட்ட ஏற்பாடு குடும்ப நிறுவன ஏற்பாடு.

மேற்கண்ட கருத்துக்களின் படி, திருமண நிறுவனம் உருவாக்கப் பட்டது. மனித இனத்தின் பாலுறவு நடவடிக்கைகள் முறைப் படுத்தப் பட்டன. அதன் மூலம், பெண்ணுக்காக ஒரே கும்பலைச் சேர்ந்த ஆண்களுக்குள் நடைபெற்றுக் கொண்டிருந்த பகிரங்க கலகங்கள் முடிவுக்கு வந்தன.

தாய், தந்தை, மகன், மகள் தாத்தா, பாட்டி, பேரன் பேத்தி, சகோதர சகோதரியர், மாமா, அத்தை போன்ற உறவு முறைகள் உருவாயின. மனித இனத்தைச் சேர்ந்த அனைவருக்கும் அமைதியான பாதுகாப்பான வாழ்க்கை உறுதி செய்யப் பட்டது.

ஆணுக்கு ஒரு நீதி**,** பெண்ணுக்கு ஒரு நீதி**.**

மக்களின் பாலியல் சுதந்திரம் முடக்கப் பட்டிருந்தது. கற்பொழுக்கம் கடுமையாக அனுசரிக்கப் பட்டது. ஆணுக்கும் பொருந்தக் கூடிய விதியாகத் தான் இது சொல்லப் பட்டிருந்தது. எனினும், ஆணைப் பொறுத்த வரை கற்பு நிலையை அமுல் படுத்த முடியாத நிலைமை தான் மனித சமூகத்தில் நிலவி வந்திருக்கிறது.

நாடுகளும் அரசர்களும் தோன்றிய பிறகு, மனித வரலாறு முழுக்க போர்ப் பாரணி பாடுவதாகவே இருந்திருக்கிறது. போர் நடத்துவது தான் ஒரே வேலை. போர் முடிந்து வருகிற அமைதிக்காலம் கூட, அடுத்த போருக்கான ஆயத்த வேலைகளைச் செய்வதாகவே தான் இருந்திருக்கிறது.

போர்களில், ஆண்கள் மட்டுமே பலியானார்கள், அதனால், ஏற்கெனவே பெண்களை விடக் குறைவான எண்ணிக்கையிலிருந்த ஆண்களின் விகிதம் மேலும் குறைந்து கொண்டேயிருந்தது. அதனால் குறிப்பிட்ட ஆணின் மனை விகளாக இருப்பவர்கள் திடீரென ஆண் துணையைத் தேடியாக வேண்டிய நிர்பந்த நிலை இருந்து கொண்டேயிருந்திருக்கிறது. இன்னார்க்கு இன்னின்னார் என்கிற விதி குறிப்பிட்ட ஆண் உயிருடன் இருக்கும் காலம் வரை மட்டுமே பின்பற்றக் கூடிய ஏற்பாடாகவே இருந்திருக்கிறது.

ஒவ்வொரு போருக்கும் பின்னால், கணவனை இழந்த பெண்ணின் கற்பு நிலை சில காலம் தளர்த்தப் படும். இன்னார்க்கு இன்னார் என உறுதி செய்யும் வரை சமூகத்தில் சற்றே குழப்பம் நிலவும். ஆனால் குறிப்பிட்ட ஒரு ஆணைத் தன் பாதுகாவலனாக, கணவனை இழந்த

பெண் ஏற்றுக் கொண்டதும் மீண்டும் கற்பு நிலையை அனுசரிக்க வேண்டிய விதி அமுல் படுத்தப்படும்.

ஒரு பெண் தன்னந் தனியாக வாழ வேண்டிய சூழல் ஏற்படும் போது, அவள் நிமித்தமாக ஆண்களிடையே கலகங்கள் தொடங்கி விடும் என்கிற காரணத்தால், எந்தப் பெண்ணும் விதவையாக ஒதுக்கப் படவில்லை. விதவை என்பது சமீபத்திய கண்டு பிடிப்பு.

உதாரணத்திற்காக இது சொல்லப் படுகிறது. கலிங்கப் போரில் கொலையுண்ட வீரர்களின் எண்ணிக்கை மூன்று இலட்சம். அடுத்து, மூன்று இலட்சம் ஆண்கள் நிரந்தரமாக ஊனமடைந்தார்கள். இரண்டாம் உலகப் போருக்குப் பின், இரண்டு பெண்களுக்கு ஒரு ஆண் என்கிற விகிதத்தில் தான் மேற்குலகில் ஆண்களின் எண்ணிக்கை இருந்தது.

ஆகவே, ஆண் மீது பலதார உறவு திணிக்கப் பட்டிருந்தது. வேறு வழியே இல்லை.' இதைப் போன்றே தான் வரலாறு நெடுகிலும், பலதார மணம் புரிந்தாக வேண்டிய கட்டாய நிலைமையிலேயே ஆண் இருந்திருக்கிறான்.

ஒரு குடும்பத்தின் முதல் பெண்ணைத் திருமணம் செய்து கொண்டவனே அடுத்திருந்த அவளது சகோதரிகள் அனைவரையும் திருமணம் செய்து கொள்ளும் நடைமுறை நீண்ட காலம் அமுலில் இருந்திருக்கிறது.

.அதே போல, பெண்களின் விகிதம் குறைவாக இருந்த பகுதிகளில் ஒரே பெண் தன் கணவனுடைய குடும்பத்தைச் சேர்ந்த ஆண்கள் அனைவரையும் திருமணம் செய்து கொள்ளும் நிலையும் அமுலில் இருந்திருக்கிறது. ஆனால், இது சில பகுதிகளில் மட்டுமே கடைப் பிடிக்கப் பட்டிருக்கிறது.

அதே சமயத்தில், தவிர்க்க முடியாத இந்தப் பல தாரச் சூழல் காரணமாக மனிதர்கள் தறி கெட்ட நிலையில் அலைவதையும் சமூகம் ஏற்கவில்லை. சூழ்நிலை காரணமாக ஆணுக்குப் பலதார மணம் அனுமதிக்கப் பட்டிருந்தாலும் எத்தனை பெண்களுடன் வாழ ஆண் விரும்புகிறானோ, அத்தனை பேரையும் அவன் திருமணம் செய்து கொண்டாக வேண்டும் என்கிற நிபந்தனை விதிக்கப் பட்டிருந்தது.

அவ்வாறு திருமணம் செய்து கொண்டவுடனே அவனுடைய மனைவியாகி விடுகின்ற பெண்கள் அவனுடைய தனிப்பட்ட சொத்தாகக் கருதப் பட்டார்கள், அதாவது ஒரு ஆணின் உடைமை தான் மனைவி. எத்தனை பெண்களை ஒரு ஆண் மணம் புரிகிறானோ அத்தனை பேரையும் பாதுகாக்கும் பொறுப்பு அவனுடையது.

சில நாடுகளில் அதிகமாக இருந்த பெண்கள் பொது மகளிராக நேர்ந்து விடப் பட்டதும் உண்டு. அவர்கள் ஆண்களின் பொதுச் சொத்தாகக் கருதப் பட்டார்கள், அவர்களுக்கு மட்டும் கற்பு நிலை தளர்த்தப்

பட்டிருந்தது. எனினும், எல்லோராலும் அவர்களை நெருங்க முடியாது. சமூகத்தில் ஆளும் வர்க்கமாக இருக்கும் ஆண்கள் மட்டுமே அணுக முடியும்.

இவ்வாறாக, முடியாட்சிக் காலம் முடியும் வரை, கற்பு நிலை இரு பாலருக்கும் பொதுவாக இருந்தது இல்லை, அரசன் முதல் ஆண்டி வரை இந்த வழி முறை தான் பின்பற்றப் பட்டது. நாகரீகம் வளர்ந்த பிறகு கூட, கற்பொழுக்கத்தைப் பொறுத்த வரை, ஆணுக்கு ஒரு நீதி, பெண்ணுக்கு ஒரு நீதி என்கிற நிலை சமூகத்தில் இருந்து கொண்டே தான் இருந்தது.

திருமணமும் கள்ள உறவும்.

இத்தனை தகவல்களைத் தருகின்ற வரலாற்று ஆய்வாளர்கள் வேறொரு தகவலையும் கசிய விடுகிறார்கள். அதாவது, திருமணமும் கள்ள உறவும் ஒரே நாணயத்தின் இரு பக்கங்களாகவே இருந்திருக்கிறது. எப்போதுமே திருமணம் கடந்த பாலுறவு சமூகத்தில் நடைபெற்றுக் கொண்டே தான் இருந்திருக்கிறது.

கடுமையான அடக்கு முறைகளாலும், கொடுஞ் சித்திரவதைகளாலும் கூட கள்ள உறவைத் தடுத்து விட முடியவில்லை. பகிரங்க நிலைமை தான் இல்லையே தவிர, இலைமறை காயாக கள்ள உறவு நடைபெற்றுக் கொண்டே

இருந்திருக்கிறது. எனினும் அதன் நிமித்தமாக கலகங்கள் நடைபெறாத வகையிலேயே மனித இனம் வாழ்ந்து வந்திருக்கிறது.

இந்த நிலையைக் கட்டுக்குள் வைத்திருப்பதற்காகவே, முதிர்ச்சியடைந்த நாகரிகத்தைக் கொண்ட சமூகமாக மனித இனம் உயர்ந்து விட்டதாகக் கருதப்பட்ட காலங்களில் கூட, பெண்ணின் பாலுணர்வு ஒடுக்கியே வைக்கப் பட்டிருந்தது. பாலியல் ரீதியாகப் பெண்களை அடிமைப் படுத்தி வைத்திருக்க வேண்டும் என்பதற்காகவே, பெண்ணுக்குரிய கல்வி, சொத்துரிமை, சுதந்திரமாக நடமாடும்உரிமை, ஆண்களின் முன்னிலையில் வருகிற உரிமை போன்ற அடிப்படைஉரிமைகளற்ற நிலையிலேயே பெண்கள் வைக்கப் பட்டிருந்தார்கள். பாலுணர்வில்லாமல் வாழ்வது தான் சிறந்த வாழ்க்கை என்று கற்பனை மற்றும் நீதி போதனைக் கதைகள் வாயிலாக பெண்களிடம் வலியுறுத்தப்பட்டது.

கற்புள்ள பெண் சொன்னால் போதும், பனிக் காலத்தில் கூட மழை பெய்யும். கற்புள்ள பெண் வெறித்துப் பார்த்தாலே போதும், கருங்கற்களால் கட்டப்பட்ட மாளிகைகளைக் கொண்ட மாநகரமே தீப்பற்றி எரிந்து சாம்பலாகும் என்பதைப்போன்ற கட்டுக் கதைகளின் வாயிலாக, பெண்ணின் பாலுணர்வு சாந்தப் படுத்தப் பட்டிருந்தது.

இதையெல்லாம் பெண் ஏற்றுக் கொண்டு வாழ்ந்ததற்கு காரணங்கள்

இருந்தன. பெண்ணின் பாதுகாப்பான வாழ்க்கைக்கு ஆண் இன்றியமையாத தேவையாக இருந்தான். துவக்கத்தில் விலங்குகளிடமிருந்து பாதுகாக்க, கும்பல்களான பின் அந்நியக் கும்பலைச் சேர்ந்த ஆண்களின் குதறல்களிலிருந்து பாதுகாக்க, நாடுகள் தோன்றிய பின் அண்டை நாட்டுப் போர் வீரர்களின் சித்திரவதைகளிலிருந்து பாதுகாக்க ஆண் தேவைப்பட்டான்.

பெண்ணின் குழந்தைகயை வளர்த்து ஆளாக்க ஆணின் உதவி அவளுக்குத் தேவைப்பட்டது. அது தவிர, எல்லாக் காலங்களிலும் உணவின் ஆதாரமாக ஆணே இருந்தான். மேலும் ஆண்களின் எண்ணிக்கை திடீர் திடீரெனக் குறையக் கூடிய நிலையே எப்போதும் இருந்து வந்திருக்கிறது. அதனால், ஆணாதிக்கக் கலாச்சாரத்தையும், ஆணின் பலதார உறவையும், பெண்ணின் மீது சுமத்தப் பட்டகற்புச் சுமையையும் ஒரு இயற்கையான வழிமுறையாக ஏற்றுக் கொண்டே பல்லாயிரம் ஆண்டுகளாகப் பெண்கள் வாழ்ந்து கொண்டிருந்தார்கள்.

ஆணாதிக்க காலம் காலாவதியாகி விட்டது**.**

ஆனால், காலம் மாறி விட்டது. ஆணாதிக்க காலம் காலாவதியாகி விட்டது. மிருகங்களிடமிருந்து பெண்ணைக் காக்க வேண்டிய அவசியம் இப்போது இல்லை, விருப்பமற்ற பெண்ணைக் களவாட எவனாலும் இப்போது முடியாது. அந்நியக் கும்பலைச் சேர்ந்த ஆண்களாலும் பெண்ணை எளிதில் தீண்டி விட முடியாது. அண்டை நாட்டுக்காரனால் நெருங்கக் கூட முடியாது. பெண்ணைப் பாதுகாக்கும் பொறுப்பில் சட்டங்களும், அரசாங்கமும் இருக்கிறது. பொருளாதார பாதுகாப்பும் ஓரளவிற்குக் கிடைத்து விட்டது. கல்வி, சுய சம்பாத்தியம், சொத்தில் பங்கு எனப் பெண்ணும் இப்போது பணக்காரியாகி விட்டாள்.

மேலும் கடமை தவறிய நிலையில் கணவன் தன் மனைவியைக் கைவிட்டாலும் சரி, அல்லது கடமையிலிருந்து வழுவிய நிலையில் ஒரு மனைவியே தன் கணவனை உதறியெறிந்தாலும் சரி, கணவனின் சொத்தில் பங்கு பெறும் உரிமையை இன்றைய பெண் பெற்று விட்டாள், குழந்தைக்கு தாய் தான் முதல் காப்பாளர் என்கிற இயற்கையான உரிமையும் பெண்ணுக்கு இருக்கிறது.

இரவுப்பணி, காவல் பணி, இராணுவப்பணி, காதல் திருமணம், இரண்டாம் திருமணம், திருமணமேயின்றி கூடி வாழ்தல், இன்பக் களிப்பிற்கு மட்டுமே ஆணைப் பயன்படுத்திக் கொள்தல், கருத்தரிப்பிற்கு மட்டுமே ஒரு ஆணைப் பயன்படுத்திக் கொள்தல், தனித்தே வாழ்தல் என அனைத்து வகையான வாழ்க்கை வடிவங்களும் ஏற்கப்பட்டு விட்டன, ஏறக்குறைய வரலாறு நெடுகிலும் ஆண் பெற்றிருந்த அனைத்து உரிமைகளையும் இப்போது பெண்ணும் பெற்று விட்டாள் என்பதை விட, சில உரிமைகளைக் கூடுதலாகவே ககூடப் பெற்றிருக்கிறாள்,

ஒரு காதல், குடும்பமாய் மலர்வதும், காவியமாவதும், பெண்ணின் கையில் தான் இருக்கிறது. ஒரு பெண்ணைக் காதலித்து விட்டு வேறொரு பெண்ணை மணக்க இந்திய ஆண் முயற்சிக்க முடியாது. ஆனால், வருடக் கணக்கில் ஒரு ஆணைக் காதலித்து, அவனுடைய பலவீனங்களை முழுமையாக அறிந்து கொண்ட பின், அவனைக் கைவிட்டு விட்டு, வேறொரு ஆணைத் திருமணம் செய்து கொள்ள எந்தவொரு பெண்ணாலும் முடியும்.

ஒரு வாகனத்தை வாங்கும் முன்பாக சோதனை ஓட்டம் மூலம் அதை இயக்கிப் பார்த்து வாங்க முடிவெடுப்பதைப் போல், திருமணம் செய்து கொள்வதற்கு முன் ஒரு ஆணைக் காதலித்துப் பார்த்து முடிவெடுக்கும் உரிமை பெண்ணுக்கு மட்டும் பிரத்யேகமாக வழங்கப் பட்டிருக்கிறது.

பெண்கள் அனைவரும் அந்த உரிமையைப் பயன் படுத்தா விட்டாலும், சில பெண்கள் தேவைக்கேற்ப ஒரு ஆணைக் காதலிப்பதாகவும், தேவை முடிந்ததும் காதலனைக் கைவிட்டு விட்டு வேறொரு ஆணைத் திருமணம் செய்து கொள்வ தாகவும் ஒரு கருத்து உருவாகிக் கொண்டிருப்பதை மறுத்து விட முடியாது.

இவள் என் காதலி, இவளுடைய கல்விச் செலவு முழுவதையும் நான் தான் ஏற்றுக் கொண்டிருந்தேன், கல்லூரிப் படிப்பு முடிந்து விட்டது. ஆனால், இப்போது என்னை விட்டு விட்டு வேறொரு ஆணைத் திருமணம் செய்து கொள்ள முடிவெடுத்திருக்கிறாள், எனக்கு நீதி தேவை என்கிற ஆணின் குரலைக் கேட்காதவர்கள் மிகவும் குறைவு.

ஆனால், திருமணத்திற்கு முன் சோதனை ஓட்டம் நடத்திப் பார்த்து முடிவெடுக்கும் உரிமை ஆணுக்கு இல்லை. சமகால நிகழ்வுகள் இதைத் தெளிவாகப் புலப்படுத்துகின்றன.

தன்னைக் காதலித்து விட்டு, திருமணம் செய்யாமல் ஏமாற்ற முயற்சிக்கும் ஆணின் திருமணத்தைத் தடுத்து நிறுத்த பெண்ணுக்கு உரிமை உண்டு. மணமேடையேறி திருமணத்தைத் தடுத்து நிறுத்த பெண்ணால் முடியும். சட்டமும் சரி, சமூகமும் சரி, பெண்ணுக்கே உதவும்,

ஆனால், தன்னைக் காதலித்து விட்டு, ஏமாற்ற முயற்சிக்கும் ஒரு பெண்ணின் திருமணத்தைத் தடுத்து நிறுத்த ஆணுக்கு உரிமை இல்லை, காதலியின் திருமணத்தைத் தடுக்க முயற்சித்தால் காதலனின் முதுகு தான் புண்ணாகும். காதல் மயக்கத்தில், காதலியின் கல்வி செல்வனைத்தையும் அவன் ஏற்றிருந்தாலும் சரி, அவையெல்லாம் ஒரு பொருட்டாகக் கருதப் பட மாட்டாது.

அதே போல ஒரு குடும்ப வாழ்க்கை தொடர்ந்து அமுலில் இருப்பது கூட இப்போது பெண்ணின் கையில் தான் இருக்கிறது. ஒரு கணவன் தன் மனைவியைக் கை விட முயன்றால், அவன் மீது மட்டுமல்ல, அவனுடைய தாய், சகோதரிகள் என அவனால் பாதுகாக்கப் பட

வேண்டிய இரத்த உறவுள்ள பெண்கள் அனைவரின் மீதும் பாய்ந்து, கடித்துக் குதறிப் பிய்த்தெறிந்து அவமானப் படுத்திட சட்டங்கள் உள்ளன.

அதே சமயத்தில் ஒரு மனைவி தன் கணவனைத் துறக்க முடிவெடுத்து விட்டால் அதைத் தடுக்கும் உரிமை அவளுடைய குழந்தைகள் உட்பட யாருக்குமே இல்லை, திருமணம் முடிந்த ஒரே நாளில் கூட, பெண்ணால்) தன் கணவனைக் கை விட முடியும். எந்தச் சட்டத்தாலும் இதைத் தடுக்க முடியாது.

தாம்பத்ய உரிமைகளை மீட்டுத் தரக்கோரி கணவன் வழக்குத் தொடுக்கலாம். தர முடியாது என்று மனைவி கூறி விட்டால், அவளைக் கணவனோடு சேர்த்து வைக்க எந்தச் சட்டத்தாலும் இயலாது. சமூகத்தாலும் முடியாது. அந்த அளவிற்கு ஆணுக்குரிய உரிமைகளை விடக் கூடுதலான உரிமைகளை இன்றைய பெண் பெற்றிருக்கிறாள்.

கால மாற்றத்தில் ஏற்பட்டுள்ள கருத்து மாற்றம்

மேற்கண்ட நிலைமை குறித்த தெளிவான புரிதலுக்காக இரண்டு சம கால் நிகழ்ச்சிகள் இங்கே பகிர்ந்து கொள்ளப் படுகிறது.

முப்பத்தாறு வயதான இல்லத்தரசி, தன் வீட்டு மாடியில் குடியிருந்த இருபத்தைந்து வயதான திருமணமாகாத வாலிபனோடு வெளியேறி விட்டார். இல்லத்தரசிக்கு பத்து மற்றும் பதிமூன்று வயதுகளில் இரண்டு, குழந்தைகள் இருக்கிறார்கள்.

இல்லத்தரசியின் பெற்றோர், சகோதர, சகோதரிகள், தாத்தா, பாட்டி, மாமா, கணவன், மாமனார், நாத்தனார், மைத்துனர் என அனைவரும் காதலை எதிர்க்கிறார்கள். அந்த இல்லத்தரசியின் குழந்தைகள் கூட தங்கள் தாயின் காதலை எதிர்க்கிறார்கள்.

ஆனால், அந்த இல்லத்தரசியின் காதல் புனிதமானது. மேலும், அது தனி நபர்  உரிமை சார்ந்தது. ஆகவே பாதுகாக்கப் பட வேண்டியது என்று கூறி, அந்த இல்லத்தரசிக்கும் அவளுடைய காதலனுக்கும் அடைக்கலம் கொடுத்து. காப்பாற்றுகிறது ஒரு நிறுவனம்.

அடுத்த சம்பவம் இது. முப்பத்தைந்து வயதான ஒரு இல்லத்தரசி. பதினொன்று மற்றும் பன்னிரெண்டு வயதுகளில் இரண்டு குழந்தைகள் இருக்கிறார்கள். அந்தத் தாய்க்கு திருமணமாகாத ஒரு வாலிபனோடு காதல் ஏற்பட்டு விட்டது.

கணவனுக்குத் தெரியாமல் அவளுடைய வீட்டிலேயே வருடக் கணக்கில் உறவு கொள்கிறார்கள். ஒரு கட்டத்தில், அந்தக் கள்ளக் காதலன் வேறொரு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டு தன் வாழ்வைத் துவக்க விரும்புகிறான். ஆனால், அவனுடைய திருமணத்தை தடுத்து நிறுத்தி, தன்னுடன் தான் காதலன் வாழ வேண்டும் என்று இந்த இல்லத்தரசி அடம் பிடிக்கிறாள்.

மேலும், இரண்டு பதின் பருவக் குழந்தைகளைக் கொண்டுள்ள அடுத்தவரின் மனைவியான அந்தப் பெண்ணிடம் அவ்வப்போது போய் வந்து கொண்டிருந்த அந்தக் கள்ளக் காதலன், இழப்பீடும், ஜீவனாம்சமும் அவளுக்குத் தர வேண்டுமாம்.

இன்றைய புதுமைப் பெண்.

காலம் மாறி விட்டது. ஆணாதிக்க காலம் காலாவதியாகி விட்டது. இரண்டாம் உலகப் போர் வரை பெண்ணைப் பாதுகாக்க ஆணின் தேவை அவசியம் என்பது ஏற்கப்பட்டிருந்தது. ஆனால், ஹிரோஷிமாவிலும், நாகசாகியிலும் அணுகுண்டு விழுந்த பின் யாராலும் யாரையும் காப்பாற்ற முடியாது என்பது தெளிவாகி விட்டது. ஆணின் தற்காப்பே சாத்தியமில்லை என்பது இப்போது ஏற்றுக் கொண்டாக வேண்டிய உண்மையாகி விட்டது.

மேலும், முன்னூறு ஆண்டுகளாக நடைபெற்று வந்த பெண்ணுரிமைப் போராட்டங்களின் விளைவுகளை இன்றைய பெண் அறுவடை செய்து கொண்டிருக்கிறாள். மறுக்கப்பட்டிருந்த பெண்ணின் பிறப்புரிமைகள் அனைத்தையும் இன்றைய பெண் திரும்பப் பெற்று விட்டாள்.

இன்றைய புதுமைப் பெண் கற்காலப் பெண்ணைப் போன்றவள் அல்ல, ஆணுக்குள்ள அத்தனை விதமான விஞ்ஞான வாய்ப்புக்களை அவளும் பெற்றிருக்கிறாள்.

பெரு நகரங்கள் முதல் குக்கிராமங்கள் வரை வாழும் அனைத்துப் பெண்களிடமும் கை பேசி இருக்கிறது. மேல் நிலைப் பள்ளிப் படிப்பைத் தொட்டவுடனே கணிணிகளும் கைக்குக் கிடைத்து விடுகிறது.

விஞ்ஞான தொழில் நுட்பம் கிடைத்தவுடனே வலைத் தளம் கைக்குள் வந்து விடுகிறது. அதிலுள்ள தீமைகளைத் தான் பெரும்பாலானவர்கள் முதலில் பார்க்கிறார்கள். அதில் ஆபாசப் படங்களும் அடக்கம். இதில் பாலின வேறுபாடுகள் இல்லை. ஆகவே பாலுறவைப் பற்றி இன்றைய பெண்ணுக்கு நன்றாகவே தெரியும்.

திருமணம் என்பதே ஆணின் கையில் உள்ள சாட்டையாகவும், பெண்ணுக்கு இடப்படும் கற்புக் கவசமாகவும் தான் பல்லாயிரம் ஆண்டுகளாக இருந்து கொண்டிருந்தது.

மனைவி என்பவள் கணவனுக்குரிய போகப் பொருளாகவே கருதப்பட்டாள், அதனால், ஆதிக்க மனோபாவம் என்பது ஆணின் மரபணுவிலேயே இடம் பிடித்திருக்கிறது.

ஆனால், இப்போதுள்ள நிலைமை வேறு. இன்றைய திருமணம் ஆணின் கைகளில் பூட்டப் பட்ட விலங்காகவும், பெண்ணின் கையில் உள்ள கண்ணாடிக் குடுவையாகவும் மாறிப் போயிருக்கிறது. மேற்கண்ட நேரெதிரான நிலைப்பாடுகளைத் திருமண நிறுவனம்

இப்போது எடுத்திருப்பதை யாரும் மறுத்து விட முடியாது.

எனினும், ஆணிடமுள்ள ஆதிக்க மனோபாவம் மாறவேயில்லை மனைவியை போகப் பொருளாகப் பயன்படுத்தும் போக்கும் மாறவேயில்லை. ஏனெனில், இலட்சக் கணக்கான ஆண்டுகளாகத் தொடர்ந்து மரபணுவில் பதிக்கப்பட்ட ஒரு அறிவு ஓரிரு தலைமுறைகளில் ஏற்படும் நெருக்கடிகளால், மரபணுவிலிருந்து வெளியேறி விடுவதில்லை.

இந்தச் சூழலில் தான், எந்த விதமான திருமணப் பாதுகாப்புச் சட்டங்களும் இல்லாத, ஆதிக்க மனோபாவத்தை இயற்கையாகவே பெற்றிருக்கின்ற இருபத்தியோரு வயதை கடந்த ஆணுக்கும், அதிக பட்ச சட்டப் பாதுகாப்பும், உரிமைகளும் கொண்ட, பதினெட்டு வயதிற்கு மேலான பெண்ணுக்கும் இடையே திருமணம் நடைபெறுகிறது. அதன் மூலமாகப் புதிய குடும்பம் ஒன்று சமூகத்தில் உதயமாகிறது**.**

### **3.** இல்லற வாழ்வில் போகப் பொருளாய்ப் பெண் படும் அவதி

மனித உடலில் இயற்கையாக உருவாகக் கூடிய காம வேட்கையை, சட்ட பூர்வமான

வழிகளில் தீர்த்துக் கொள்வதற்கான களம் தான் குடும்பம்.

பெண்ணுக்குள்ள மரபணு நெருக்கடி**.**

உயிரினங்களில் பெண் தான் படைப்புச் சக்தி. தனது இனத்தைப் பெருக்கி, பூமிப்பந்தில் தழைத்திருக்கச் செய்வதற்காகவே பெண் இனம் படைக்கப் பட்டிருக்கிறது.

பெண் தாய்மையுற்றாக வேண்டும். பெண்ணின் மரபணு தருகிற நெருக்கடி இது. பருவமடைந்த பெண்ணின் உடலில், பால் சுரப்பதற்குத் தேவையான அளவு கொழுப்பு சேமிக்கப் பட்டவுடனே, இந்த நெருக்கடி தொடங்கி விடுகிறது. வயது ஒரு பொருட்டல்ல.

பெண்ணுக்கு ஏற்படும் இயற்கையான நெருக்கடியை முறையான வழிகளில் எதிர்கொள்ளவே திருமண நடைமுறை அறிமுகமாயிற்று. அதன் படி உரிய வயது வந்த ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே திருமணம் நிகழ்கிறது. திருமண வாழ்வே கூட, பாலுறவு விளையாட்டுகளோடு தான் துவக்கமாகிறது.

அப்போது பெண்ணின் உடலுக்குரிய பாலின்பங்கள் அனைத்துமே கிடைக்கலாம். அல்லது உராய்வின்பம் தவிர உச்ச கட்ட பாலின்பங்கள் எதுவுமே கிடைக்காமலும் போகலாம். எனினும், தயக்கமின்றி பெண் இணைகிறாள், வலிய வந்து உறவு கொள்கிறாள். ஒரு குழந்தை பிறக்கும் வரை, நன்றுணர்வின்றி ஆணுடன் இணை சேர்ந்து

கொண்டேயிருக்கிறாள் பெண்,

குழந்தை பிறக்கிறது. மேலும், நிச்சயமாக உயிர் பிழைத்துக் கொள்ளும் என்கிற உறுதியும் கிடைக்கிறது. அந்த உறுதி கிடைத்ததும் மனித குலத்தைச் தழைக்கச் செய்ய வேண்டும் என்கிற பெண் மரபணுவின் நோக்கம் நிறைவேறி விடுகிறது. அதனால், குழந்தைப் பேறுக்குப் பின் பாலுறவில் ஈடுபடும் படி பெண்ணை உந்தித் தள்ளுகின்ற நெருக்கடி இருப்பதில்லை.

ஆகவே, தன்னுணர்வற்ற நிலையில் பாலுறவில் ஈடுபடும் சூழலிலிருந்து, தாயான பிறகு பெண் விடுபட்டு விடுகிறாள். அதனால், இது வரை பாலுறவில் ஈடுபட்டதன் மூலம் தனக்குக் கிடைத்த இன்பங்களின் அடிப்படையில் மேற்கொண்டு பாலுறவு கொள்வது குறித்து பெண் முடிவெடுக்கும் சூழல் உருவாகிறது.

பெண்களின் பாலுறவு அனுபவம் என்ன? ஆய்வறிக்கைகளின் படி, தொண்ணூறு சதவித பெண்கள் பாலின்பங்களை அனுபவிக்காதவர்கள். இல்லற வாழ்வில் போகப் பொருள்களாகவே அவர்கள் பயன் படுத்தப் படுகிறார்கள்.

உறவில் ஈடுபடும் ஒவ்வொரு முறையும் ஆணுக்குரிய பாலின்பத்தை, கணவன் தவறாமல் பெற்று விடுகிறான். ஆனால், பெண்ணுக்குரிய ஒரு இன்பம் கூட மனைவியின் உடலில் நிகழ்வதில்லை. எப்போதோ ஒரு முறை அதிசயம் போல நிகழ்ந்திருக்கலாம், அதுவும் உடல் முழுவதும் பரவக்கூடியதாக இல்லாமல், பால் மண்டல அளவில் மட்டும் ஏற்பட்டதாக இருக்கலாம்.

அது கூட கணவனால் திட்டமிட்டு வழங்கப்பட்டதல்ல, எதேட்சையாக நிகழ்ந்த இன்பம் அது. மற்றபடி, உச்சபட்ச பேரின்பப் பரவசமெல்லாம் தொண்ணூறு சதவிகித பெண்களின் வாழ்வில் ஏற்பட்டதில்லை.

இல்லற வாழ்வில் பெண் படும் அவதி,

பாலுறவு என்பது குழு விளையாட்டு. ஆணும், பெண்ணும் ஒன்றிணைந்து தத்தம் உடலுக்குரிய இன்பங்களைப் பெறுவதற்காக நடத்துகின்ற விளையாட்டு. வெற்றி தோல்வி என்பதே இல்லாத ஒரே விளையாட்டு பாலுறவு. கொடுத்துப் பெறுவது என்பதே ஒரே விதி,

ஆனால், இந்த விதி குடும்ப வாழ்வில் ஆண்களால் பின்பற்றப்படுவதில்லை. ஒவ்வொரு முறையும் கணவன் தான் பெற்றுக் கொண்டேயிருக்கிறான், மனைவி கொடுப்பதோடு சரி, பெறுகிற பேச்சிற்கே இடமில்லை. உராய்வின்பம் மட்டுமே மனைவியின் தலைவிதி. கணவனுக்கு துரித ஸ்கலிதம் ஏற்படும் நாட்களில் அந்த உராய்வின்பம் கூட மனைவிக்குக் கிடைப்பதில்லை.

என்ன நடந்தது என்பதை மனைவி உணர்வதற்கு முன்பே, அனைத்தையும் முடித்துக் கொண்டு கழிவறை நோக்கிக் கணவன்

ஓட்டம் பிடிப்பது இல்லற வாழ்வில், நடக்கவே நடக்காத அதிசயம் அல்ல,

அதனால், எவ்வித இன்பத்தையும் வழங்காத இந்த விளையாட்டின் மீது மனைவி ஆர்வத்தை இழக்கிறாள், ஆர்வமில்லாத செயலில் ஈடுபட வேண்டிய சூழல் எழுகிற போது அது வேலை பளுவாகத் தெரிகிறது. ஆகவே, கூடுதல் வேலைப்பளுவை எதற்காகச் சுமக்க வேண்டும் என்று முடிவெடுத்து, மனைவி பாலுறவில் ஈடுபட மறுக்கிறாள்.

இது தவிர, திருமண வாழ்வில் நுழைந்து விட்ட பெண்ணுக்கு, அவளை அடிப்பது, குடித்து விட்டுத் துன்புறுத்துவது, பொருளீட்டாதது போன்றவற்றை விட மோசமான கொடுமையொன்று, வெளியுலகத்திலுள்ள யாருக்கும் தெரியாமல், அவளுடைய கணவனால் இழைக்கப்படுகிறது,

தம்பதியர் உறவு கொள்கின்றனர். கணவனின் உணர்வுகள் எடுத்தவுடனே நூறு கிலோ மீட்டர் வேகத்தில் கிளம்பி விடுகிறது. மனைவியின் உணர்வுகளோ மனதில் துவங்கி, உடலில் பரவி, நகரத் தொடங்கி, கணவனின் வேகத்தை நெருங்கும் வேளையில் ஒரு விபத்து நிகழ்ந்து விடுகிறது.

இதோ இன்பத்தை நெருங்கி விட்டோம். ஓரிரு நிமிட இயக்கம் மட்டுமே தேவை என்கிற நிலையில், திடீரென கணவனின் வாகனம் எரிபொருள் தீர்ந்து.நின்று  விடுகிறது. கணவன் நீர்த்துப் போய் செயலற்றவனாகி விடுகிறான்.

இனம் புரியாத ஒரு இன்பம் உடலில் நிகழவிருந்தது. வெகு அருகில் நெருங்கியுமிருந்தது. ஆனால், கணவன் செயலிழந்து விட்டான். அவன் மட்டும் தாக்குப் பிடித்துச் செயலாற்றியிருந்தால், மனைவியின் உடலிலும் ஒரு இன்பக் கிளர்ச்சி ஏற்பட்டிருக்கும். ஆனால், அவனோ சுயநலமாக, அல்லது நீடித்துச் செயலாற்றும் ஆற்றலற்றவனாக முடித்துக் கொண்டான்.

மீண்டும் அவன் தயாராக அரை மணி நேரமாகலாம். ஆனால், அதற்குள் மனைவியின் உடலில் ஏற்பட்டிருந்த பாலுணர்வின் கிளர்ச்சி நிலை துவங்கிய இடத்திற்கே வந்து சேர்ந்து விடும். ஏனெனில், உட்சத்தோடு தொடர்புடைய உணர்வுகள் எதுவும் நிலைத்து நிற்பவையல்ல,

இது தான் கொடுமை. நடுக்கடலில் பல நாட்கள் தத்தளித்துக் கொண்டிருந்த ஒரு நபர் தனக்குக் கிடைத்த உணவுப் பொட்டலத்தையும், குடிநீரையும் கடல் நீரில் தவற விட்டதற்கு இணையான வலி தரும் அனுபவம் இது.

உச்ச கட்ட இன்பம் ஏற்படவிருந்த தருவாயில், அதை இழக்க வேண்டிய நிலை ஏற்படும் போது, பெண்ணின் உடலில் ஒரு இருப்புக்

கொள்ளாத நிலை ஏற்படுகிறது. ஆழ் மனதிலே இனம் புரியாத ஒரு சோகம் குடியேறுகிறது.

அவளது உடலே சுமக்க முடியாத பாரமாகத் தெரிகிறது. முக்கியமான ஏதோவொன்றைத் தொலைத்து விட்டாற் போல், தன்னுடைய பெயரைத் தானே மறந்து விட்டாற் போல் ஒரு தவிப்பு பெண்ணின் ஆழ்மனதில் ஏற்படுகிறது.

பெண் படுகின்ற இந்த அவதியைப் பற்றி வார்த்தைகள் மூலமாக ஆணுக்குப் புரிய வைப்பது கடினம். ஆனால், கீழ்க்கண்ட அனுபவம் வாயிலாகப் பெண்ணின் அவதியை எளிதாகப் புரிந்து கொள்ளலாம்.

பாலுறவில் ஈடுபடும் ஆண் உச்ச கட்ட இன்பத்தையும் அனுபவிக்காமல், உயிர்நீரையும் வெளியேற்றாமல் அவற்றை நெருங்கும் உணர்வு ஏற்படும் போது உறவிலிருந்து வெளியேறி விட வேண்டும். இந்நிலை ஆறு மாதங்களுக்குத் தொடர்ந்து நிகழட்டும், இடையில் சுய இன்பத்திலும் ஈடுபடக் கூடாது. அவ்வாறு ஆறு மாத காலத்தைக் கடத்திய பிறகு ஒரு ஆணின் மனநிலை எப்படி இருக்குமோ அப்படித் தான், நெருங்கி வந்த இன்பத்தை நழுவ விட்ட பெண்ணின் மனநிலையும் இருக்கும். வாழ் நாள் முழுவதும் இதே துன்பத்தைத் தான் பெண் அனுபவித்துக் கொண்டிருக்கிறாள்.

பாலின்ப ஆற்றாமை நோய்.

திருமணம் காரணமாக, கணவனின் மூலம் மட்டுமே பாலின்ப உச்ச கட்டக் கிளர்ச்சிகளைப் பெற்றாக வேண்டிய கட்டாயத்தில் தான் பெண் இருக்கிறாள், மேற்கத்திய நாடுகளில் வாழும் பெண்களைப் போல், பகிரங்கமான பல தார உறவில் இந்தியப் பெண் இன்னும் இறங்கி விடவில்லை. அதனால், ஒவ்வொரு முறையும் கணவனிடம் எதிர்பார்த்து ஈடுபடுகிறாள், எதிர்பார்த்தது நிகழாத போது ஏமாற்றமடைகிறாள்.

தொடர் ஏமாற்றம் விரக்தியை உருவாக்குகிறது. என்ன இருந்து என்ன பயன்? இந்த இன்பம் இல்லையே என்கிற விரக்தி பாலுறவின் மீதான வெறுப்பாக மாறுகிறது. நாளடைவில், அந்த வெறுப்பே கணவனின் மீதான கோபமாக உருவெடுக்கிறது. இறுதியில் அக் கோப நிலையே அவளுடைய அடிப்படைப் பண்பாகி, அவள் பிடாரியாகிறாள்.

தேவதையைப் போல் திருமண வாழ்விற்குள் அடியெடுத்து வைத்த பெண் அவளுடைய அடிப்படைத் தேவை நிறைவேறாத காரணத்தால், தன்னைப் போகப் பொருளாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கும் கணவனை தன்னுணர்வற்ற நிலையிலே மாறி விடுகிறாள். வதைப்பவளாக,

பெண்ணின் பிடாரித் தனத்தை குணக்கேடு என்றும் குறிப்பிடலாம். இந்த குணக்கேடானது ஆழ்மனம் சார்ந்தது. ஏறக்குறைய பத்து முதல்

இருபது சதவிகித ஹிஸ்டீரியா நோய் இது. இதற்குக் காரணம் தணிக்கப்படாத காமம். இந்த குணக்கேடால் பாதிக்கப் படுவதைத்தான் 'பாலி என்ப ஆற்றாமை' நோய்

என்று சொல்கிறோம். இந்நோய் தான் இல்லற வாழ்க்கையை நரக வாழ்க்கையாக மாற்றிக் கொண்டிருப்பதோடு, குடும்ப அமைப்பையும் தகர்த்துக் கொண்டிருக்கிறது.

ஆனால், கணவனுக்கு இந்த உண்மைகள் எதுவுமே தெரிவதில்லை. மனைவியின் காமத்தைத் தூண்டி விட்டு விட்டு அதைத் தணிக்காமலே அவன் உறங்கப் போய் விட்டதையோ, அது தான் மனைவியின் மனநலனைப் பாதித்து, அவனைப் பாடாய்ப் படுத்தி, குடும்ப வாழ்க்கையை நரகமாக்குகிறது என்பதை தையோ அவன் உணர்வதே இல்லை.

அதற்கு மாறாக, இப் பெண் நல்லவள் அல்ல. ராட்சசியை நம் தலையில் கட்டி விட்டார்கள். இவளுக்கு பேய்பிடித்து விட்டது. பக்தி முற்றி சாமியாடுகிறாள், இவள் இலட்சியமற்றவள். குடும்பம் நடத்தத் தெரியாதவள். இவளுடைய வளர்ப்பு சரியில்லை, வேறு யாரோ இவளை இயக்குகிறார்கள். என்றும் இன்ன பிறவாகவும் கருதுகிறான்.

ஆணின் பாலியல் அறியாமை.

பெண்ணின் உச்ச கட்ட இன்பம் பற்றியோ, அந்த இன்பம் நிகழ்வதற்கும் பெண்ணின் மன நிலைக்கும் இடையில் உள்ள ஆழமான தொடர்பு பற்றியோ ஆண்களுக்குத் தெரியாது. ஆனால், ஆண்களைக் குறை கூற முடியாது. ஏனெனில், அவர்கள் உடலில் நிகழ்கின்ற உச்ச கட்ட இன்பம் வேறு, விந்து வெளியேற்றம் வேறு என்கிற தகவலே கூடப் பலருக்குத் தெரியாது.

விந்தை வெளியேற்றுவது தான் பாலுறவு. பெண்ணுறுப்பு என்பது விந்தைக் கொட்டுவதற்கான ஒரு குப்பைக் கூடை. ஆணின் விந்து அங்கே கொட்டப் பட்டவுடனே, பெண்ணுக்கும் இன்பம் நிகழ்ந்து விட்டதாகப் பொருள்.

பெண்ணுக்குப் பல்வகை உச்ச கட்ட இன்பங்கள் உண்டு. அவற்றை நிகழச் செய்து, அவளுடைய மனநலம் காப்பது அவசியம். அப்போது தான் குடும்ப வாழ்வில் அமைதி தவழும், ஆனந்தம் பெருகும். அவனுக்கும் பாலின்பம் வழங்கப்படும் என்கிற தகவல் பல ஆண்களுக்குத் தெரியாது.

பாலியல் கல்வியில்லை, காமசூத்ரா, கொக்கோக சாஸ்திரம் போன்ற நூல்களைப் பற்றிக் கேள்விப் பட்டதோடு சரி. ரதி ரகசியங்கள், அனங்க ரங்கா, நறுமணத் தோட்டம், ரதிரத்ன பிரதீபிகா போன்ற நூல்களைப் பற்றிக் கேள்விப் பட்டது கூட இல்லை. குறளின் காமத்துப் பாலையோ, சங்க இலக்கிய கருத்துக்களையோ படித்ததேயில்லை. படித்தாலும், பெண்ணின் விரக தாபம், பசலை நோய் பற்றிய கருத்துக்கள் எதுவும் புரிவதில்லை, மேலும், பாலியல் அறிஞரிடம் ஆலோசனை பெற்றுக் கொள்கிற விழிப்புணர்வும் இல்லை.

ஆகவே பெண்ணுக்குரிய தாம்பத்ய இன்பங்களை வழங்குவது குறித்த “அரிச்சுவடி” கூடத் தெரியாத நிலையில் தான் பல ஆண்கள் திருமணம் செய்து கொள்கிறார்கள், கூடவே, சுய இன்பத்தின் மூலம் ஏற்படுத்திக் கொண்ட பலவினத்தைக் களைந்து கொள்ளாமலே, உரிய பயிற்சிகள் வாயிலாய்ப் பால் மண்டலத்தை பலப்படுத்திக் கொள்ளாமலே, ஆபாசப் படங்கள் வழங்கும் அசட்டுத்தனமான வழிகாட்டுதலை மட்டும் ஆதரவாகக் கொண்டு தாம்பத்ய வாழ்வைத் துவக்குகிறார்கள்.

பெண்ணைக் கருவுறச் செய்வது தான் ஆண்மைக்கான அடையாளம் என்று அவர்கள் கருதுகிறார்கள். உச்ச கட்ட இன்பத்தை ஒரு முறை கூட

அனுபவிக்காமலே பத்துக் குழந்தைகளை வேண்டுமானாலும் பெண்ணால் பெற்றெடுக்க முடியும் என்கிற தகவலும் தெரியாது.

அதனால், மனைவியைக் கருவுறச் செய்துள்ள ஒவ்வொரு ஆணும், மனைவிக்குரிய இன்பங்களை வழங்குகிற கல்வியில் “டாக்டர் “பட்டத்தைப் பெற்ற மாதிரியே தங்களைப் பற்றிக் கருதிக் கொண்டிருக்கிறார்கள், பசுவைச் சினையாக்க கால்நடை டாக்டர் செய்கிற வேலையைத் தான் அவர்கள் செய்திருக்கிறார்கள் என்கிற தகவல் எண்பது சதவீத கணவர்களுக்குத் தெரியவே தெரியாது.

மேலும், தாம்பத்ய வாழ்வில் ஒரே ஒரு முறை கூட தனக்குரிய உச்ச கட்ட இன்பம் நிகழவேயில்லை என்பதை மனைவி சொல்வதில்லை. ஏனெனில், மனைவியின் உடற் தேவையைத் தன்னால் பூர்த்தி செய்ய முடியவில்லை என்கிற தகவல் தெரிந்து விட்டால், கணவன் சந்தேகப் படத் தொடங்கி விடுவான், கண்காணிக்கத் தொடங்கி விடுவான். அதனால், மனைவியின் நிம்மதி பறி போய் விடும். ஆகவே, தனக்குரிய இன்பம் நிகழவேயில்லை என்கிற உண்மையை, எந்த மனைவியும் தன் கணவனிடம் காட்டிக் கொள்ள மாட்டாள்.

சில நேரங்களில் ஆணுக்கு சீக்கிரமாக முடியட்டும் என்பதற்காகவோ, அல்லது ரிச்சல் காரணமாகவோ, ஒரே நிமிடத்தில் “ஆ..உய” எனப் பொய்யாக நடிக்கும் பெண்களும் உண்டு. ஆனால், அது “நடிப்பு” என்பது, எண்பது சதவீத ஆண்களுக்குத் தெரியாது. அதனால், பெரும்பாலானவர்கள் தங்களைப் “பாலியல் ஞானிகள்” என்றே கருதிக் கொண்டிருக்கிறார்கள். அதன் காரணமாகக் கற்றுக் கொள்ளும் எண்ணம் கடுகளவும் இல்லை.

அதனால், பெண்ணின் உச்ச கட்ட இன்பம் என்பது என்ன? அப்போது என்ன தான் நடக்கிறது என்பது, பல ஆண்களுக்குத் தெரியவே தெரியாது. அது தெரியாத காரணத்தால் தான், மனைவியை போகப் பொருளாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்கள்.

ஆணின் பாலுணர்வைத் தூண்டும் காரணிகள்.

பாலியல் அறிவு அறவே இல்லையென்றாலும், ஆணுக்கு பாலுறவு தேவைப் படுகிறது. பாலுறவு உடல் நலத்திற்கு நல்லது. நோய்த்தடுப்பு அரணாக பாலுறவு செயலாற்றுகிறது. மனதை நலமாய் வைத்திருக்க உதவக் கூடியது. அன்பை உருவாக்குவதில் முக்கிய பங்கை வகிக்கக் கூடியது. தம்பதியரிடையே உறவை வலுப்படுத்தக் கூடியது. மனைவியின் உடல் நலத்திற்கு மிகவும் நல்லது. மனைவியின் மன நலத்திற்கு மிகவும் முக்கியமாகத் தேவைப்படுவது.

மனைவியின் மனநலத்தைப் பொறுத்தே கணவனின் மகிழ்ச்சியும், அவன் பெறக்கூடிய வெற்றியின் அளவும், சமூக மதிப்பும், அவனுடைய ஆயுட் காலமும், குழந்தைகளின் எதிர்காலமும், குடும்பத்தின் தரமும், தீர்மானிக்கப் படுகின்றன, ஆகவே அடிக்கடி,

பாலுறவில் ஈடுபடுவது இன்றியமையாதது என்பன போன்ற விஞ்ஞான பூர்வ காரணங்களை முன்னிட்டு, ஆணின் உடலிலும், மனதிலும்

பாலுறவு வேட்கை உருவாவதில்லை.

ஆணின் பாலுறவு வேட்கைக்கான காரணங்களே வேறு. முதற்காரணம் உயிரியல், வினாடிக்கு ஆயிரக்கணக்கான உயிரணுக்கள் வீதம் ஒரே நாளில் பத்து கோடிக்கும் அதிகமான உயிரணுக்கள் ஆணின் உடலில் உருவாகி, விதைப்பையில் சேர்ந்து விடுகின்றன. இது இயற்கை. ஆகவே, இதைத் தடுக்க எந்த ஆண் மகனாலும் முடியாது.

மேலும் அந்த உயிரணுக்களை வெளியேற்றும் படி அவனுக்கு உத்திரவிடுகின்ற வேதிப்பொருள் வேறு சுரந்து கொண்டேயிருக்கிறது. அந்த உத்திரவிற்குக் கீழ்ப்படியா விட்டால், ஒரு வித பால் அழுத்தம் உடலில் ஏற்பட்டு விடுகிறது. அதனால், மனநிலை ஆவேசமுடையதாக மாறி விடுகிறது. ஆகவே தன்னுடைய உயிரணுக்களை வெளியேற்றியாக வேண்டிய கட்டாயம் ஆணுக்கு ஏற்படுகிறது. இதுவும் இயற்கையாகவே உருவாகின்ற நெருக்கடி தான். இதையும் ஒரு ஆண் பிறவியால் தடுக்க முடியாது.

இவற்றோடு, ஒரு பெண்ணை அரை நிர்வாணக் கோலத்தில், கவர்ச்சிகரமாகப் பார்க்க நேரிடும் அடுத்த வினாடியே, ஆணின் மூளையில், பாலுணர்வைத் தூண்டி விடக்கூடிய வேதி சரக்சத் தொடங்கி விடும். இதுவும் ஒரு இயற்கையான நிகழ்வே. இதையும் யாராலும் தடுக்க முடியாது.

ஆணின் உடலில் சுரக்கும் அந்த வேதிக்கு, சட்டங்களைப் பற்றியெல்லாம் தெரியாது. மேலும், ஒரு யுவதியின் கவர்ச்சிகரமான தோற்றத்தைக் கண்டும் கூட, ஆணின் உடலில் பாலுணர்வை உருவாக்கக் கூடிய வேதி சுரக்கா விட்டால்

அவனுடைய உடலை ஏதோ ஒரு நோய் தாக்கியிருக்கிறது என்று பொருள்.

அது தவிர, சின்னத்திரை, திரைப்படங்கள், வார, மாத இதழ்கள், காதல் நவீனங்கள், தினசரிப் பத்திரிகைகளில் வரக்கூடிய கள்ளக் காதல் விவகாரங்கள், பெண்ணின் கவர்ச்சி கரமான ஆடைகள் மற்றும் அண்டை அயலில் நடைபெறும் திரை மறைவுக் காரியங்கள் எனப் பல்வேறு தாக்கங்களால், மேற்கண்ட வேதி உடலில் சுரப்பதன் காரணமாக, ஆண் பாலுறவு வேட்கை கொள்கிறான்.

மேலும், பாலுறவு என்பது மன அழுத்தத்திற்கான ஒரு மா மருந்து. அன்றாடப் பணி சார்ந்த மன வருத்தங்களுக்கான ஒரு வடிகால் அதனால், பாலின்பத்திற்காக ஏங்கும் மனநிலையிலேயே ஆண் எப்போதும் இருக்கிறான்.

அது மட்டுமின்றி, வரலாறு நெடுகிலும், பாலின்பப் பஞ்சம் ஆணின் வாழ்வில் ஏற்பட்டதேயில்லை, விரும்பிய போதெல்லாம் அவன் அனுபவித்துக் கொண்டே இருந்ததால், அவனுடைய மரபணுவிலேயே பாலின்ப ஆர்வம் அழுத்தமாகப் பதிந்து விட்டது. அதனால், அவனுடைய பாலின்ப ஆர்வத்தை அவனுடைய உடலில் வாழும் மரபணு தூண்டி விட்டுக் கொண்டேயிருக்கிறது.

இந்தப் பிறவியிலும் திருமணமாகி ஒரு குழந்தை பிறக்கும் வரை இன்பம் மறுக்கப் பட்டதில்லை. குழந்தை பிறந்த பிறகு தான் மறுக்கும் படலம் துவக்கமாகிறது. திருமணமான ஒரு ஆணுக்கு ஏற்படக்கூடிய முதல் அதிர்ச்சி இது. திருமணமாகும் வரை சுய இன்பம் கை கொடுக்கிறது. ஆனால், திருமணமாகி பெண்ணைப் புணர்ந்து முயங்கி எழுந்த பின் ஆணுக்கு சுய இன்பம் சுவைப்பதில்லை. அது தவிர, எது மறுக்கப் படுகிறதோ அதன் மீதான ஆசை அதிகரிக்கும் என்பது உளவியல் விதி. அந்த விதிப்படி, ஆணுக்குப் பாலுறவு கண்டிப்பாகத் தேவைப் படுகிறது. பாலுறவின்றி வாழ்வது ஆணுக்குக் கடினம்.

அப்போது நேரம் இரவு பதினொன்று. குழந்தையின் அணைப்பில் மனைவி அயர்ந்து உறங்கிக் கொண்டிருக்கிறாள். மெதுவாக எழுப்புகிறான், மனைவியோ தூக்கம் கலைந்த எரிச்சலில் திட்டுகிறாள். அவன் கெஞ்சுகிறான். அவளோ தன் மேல் விழுந்த அவனது கையை வேகமாகத் தட்டி விடுகிறாள்.

கணவனுக்கு கோபம் வருகிறது. மிரட்டுகிறான். எனினும் அவள் மசியவில்லை. இறுதியில் அங்கே ஒரு குடும்ப விவகாரச் சண்டை மூள்கிறது. அந்த சண்டையின் சத்தத்தால் தூக்கம் கலைந்து எழுந்த குழந்தை எதுவுமே புரியாமல் அழத் தொடங்குகிறது. அதனால் கணவனுக்கு வெற்றி கிட்டவில்லை. கணவனால் உறங்க முடியவில்லை. காமத்தால் உடல் தகிக்கிறது. தவிக்கிறான். தண்ணீர் குடிக்கிறான். எனினும் மன அழுத்தம் கூடுகிறது. அவனறியாமலே சிந்தனையோட்டம் நடைபெறத் தொடங்குகிறது. நன்றி கெட்டவள். இவளுக்காக நான் எத்துணை செய்திருக்கிறேன், ஆயினும் தர மறுக்கிறாளே. ஏன் இப்படிப் பிடிவாதமாக மறுக்கிறாள்? வேறு எவனும் இருப்பானோ.? ச்சே. இந்த நரக வாழ்க்கையை எப்படித்தான் வாழ்வது? பேசாமல் செத்துப் போய்விடலாமா? எந்த வழியில் தற்கொலை செய்து கொண்டால் வலியில்லாமல் சாக முடியும்? என்றும் இன்ன பிறவாகவும், எண்ணிப் புலம்பிய படியே உறங்கிப் போகிறான். இத்தகைய மனநிலையோடு கண வன் உறங்கச் செல்வது மிகவும் ஆபத்தானது. ஏனெனில், மனைவியின் மீது காழ்ப்புணர்ச்சியை ஏற்படுத்துவதோடு, அந்தக் கணவனை ஒரு தோல்வியாளனாக உருவாக்கி, அதன் மூலம், குடும்பத்தின் வளமையைக் கூட அழித்தொழிக்கக் கூடிய உளவியல் அபாயம் தணிக்கப்படாத காமத்தோடு உறங்கக் கூடிய உறக்கத்தின் பின்னால் மறைந்திருக்கிறது.

ஆண் மிருகமாகிறான்.

சில குடும்பங்களில் நிலைமை வேறு விதமாகவும் இருக்கிறது. கணவன் கேட்கிறான். மனைவி மறுக்கிறாள். பிறகு கெஞ்சுகிறான், மனைவியோ மிஞ்சுகிறாள். அதன் பின் அதட்டிக் கேட்கிறான். அதற்கும் மசியாத போது, கடுமையாக வற்புறுத்தி பலவந்தமாக ஈடுபட்டு விடுகிறான். பசியுள்ள மிருகம் வெறியுடன் செயல்பட்டு விடுகிறது. அதனால், குடும்பத்திற்குள்ளே நிகழக்கூடிய பாலியல் வன்முறையொன்று அங்கேஅரங்கேறுகிறது. இரவு பதினோரு மணி வாக்கில் அது தொடங்கியது. ஓரிரு நிமிடங்களில் அனைத்தும் முடிந்து போயிற்று. ஏனெனில், பெண்ணுக்கு விருப்பமில்லாத நிலையில் பாலுறவில் ஈடுபட்டால், ஆணின் உடலில் துரித ஸ்கலிதம் ஏற்படுவது தவிர்க்க முடியாதது. வற்புறுத்தல் என்பதே வன்முறை தான். மனதின் மீது நடத்தப் படுகின்ற  வன்முறை அது. வன்முறைக்கு ஆளானவரால் நிரூபிக்க முடியாத வன்முறையும் கூட. பாலுறவில் ஈடுபட்டாக வேண்டிய நெருக்கடியை வற்புறுத்தலின் மூலமாக உருவாக்குவது, மிகவும் கோழைத்தனமான ஒரு போர்த் தந்திரம். யாருக்குமே தெரியாமல் மனைவியின் மீது ஏவப்படும் இத்தகைய உளவியல் சார்ந்த வன்முறை, மனைவியின் மன நிலையை மிகவும்

கோரமாகக் காயப்படுத்தும் வல்லமையுடையது. பெண்ணின் உடலை உடனடியாகவும், மனதை மரணம் வரையிலும் பாதிக்கக் கூடியது.

வற்புறுத்தலின் மூலமாகப் பாலுறவில் ஈடுபடும் போது, குழாய் வடிவிலான பெண்ணுறுப்பு ஆணுறுப்பை வரவேற்கும் நிலையில் இருப்பதில்லை.அது தன்னளவில் வளைந்தும், நெளிந்தும் சுருங்கிப் போனதாகவும், இறுக்க மடைந்து விடக்கூடியதாகவும், எவ்வித உயவுப் பொருளையும் சுரக்காத்தாகவும் தன்னை வைத்துக் கொள்கிறது.

பெண்ணுறுப்பில் வாழும் கோடிக்கணக்கான உயிரணுக்கள் ஆணுறுப்பை எதிர் கொண்டு தழுவிக் கொள்வதற்குப் பதிலாக எதிர்த்துப் போரிடுகின்றன.

அதனால் பெண்ணுறுப்பில் வறட்சித்தன்மையும், இறுக்கமும் நிலவுகிறது. மேற்கண்ட இறுக்கமான நிலை மற்றும் வறண்ட சூழல் காரணமாக, ஆணுறுப்பின் மீது ஏற்படக்கூடிய உராய்வு அதிகமாக உணரப் படுகிறது. அதனால், ஓரிரு நிமிடங்களிலேயே ஆணுக்குரிய பாலின்பம் நிகழ்ந்து விடுவதோடு, உயிர் நீரும் வெளியேறி விடுகிறது.

மேலும், கட்டாயப் படுத்தி, பாலுறவில் ஈடுபடும் போது போது, ஆணுக்குரிய இன்பம் விரைந்து நிகழ்ந்து தொலையட்டும் என்பதற்காக பெண்ணும் ஒரு ரகசிய வேலையில் ஈடுபடுகிறாள். அதாவது, ஒரே நிமிடத்தில் தனக்குரிய இன்பம் நெருங்கி விட்டதைப் போல “ஆ, ஊ “எனப் பாசாங்கு செய்கிறாள். இதைப் பார்க்கும் ஆணுக்கு வேகமாக இன்பம் நிகழ்ந்து, உயிர் நீர் வெளியேறி விடுகிறது.

ஆணின் இன்பத்தைத் சீக்கிரத்தில் நிகழ்த்தும் கலையை ஒரு சில மாதங்களிலேயே பெண் கற்று விடுகிறாள். அதன் பின் ஒரு போகப் பொருளாக பயன் படுத்தப் படும் போதெல்லாம், ஆணை எவ்வளவு சீக்கிரமாக உச்சிக்குக் கொண்டு வர முடியுமோ அவ்வளவு சீக்கிரமாக கொண்டு வந்து விடுகிறாள்,

இதைப் பார்க்கிற கணவனோ தன்னை ஒரு மகா செயல்வீரன் என்று எண்ணிக் கொள்கிறான், பல குடும்பங்களில் இது நிகழ்வதாக சொல்லப்படுகிறது. ஆய்வுகளின் படி, பெரும்பாலான ஆண்கள் மூன்று நிமிடங்களுக்குள் பெண்ணுக்குரிய இன்பத்தைக் கொடுத்து விடுவதாகக் கூறுகிறார்கள், இது சாத்தியமற்றது.

மூன்று நிமிடமல்ல. பத்து நிமிடங்களில் கூட பெண்ணுக்குரிய உச்ச கட்டப் பாலின்பம் நிகழவே நிகழாது. மேலும், மிருகத்தனமான, வேகமான பாலுறவால், ஆணுக்குரிய இன்பம் வேண்டுமானால் நிகழ்ந்து விடுமே தவிர, பெண்ணுக்குரிய இன்பம் ஒரு போதும் நிகழாது.

ஆனால், இந்தத் தகவல் பெரும்பாலான ஆண்களுக்கு அறவே தெரியாது. அதனால், தன் மனைவிக்குரிய பாலின்பங்களை தவறாமல் வழங்கி விட்டதாய்க் கருதி, அவன் உறங்கி விடுகிறான்.

மேலும், ஆணைப் பொறுத்த வரை பாலுறவென்பது ஒரு தூக்க மாத்திரை, அதாவது ஆணின் உடலில் பாலின்பம் நிகழும் போது மூளையிலே சில வேதிகள் சுரக்கின்றன, அந்த வேதிகளில் ஒன்று ஆழ்ந்த உறக்கத்தை வழங்கக் கூடியது. ஆகவே பாலின்பம் முடிந்ததும் ஏதோ பெரிய சாம்ராஜ்ஜியத்தையே வென்று விட்டதைப் போன்ற ஆனந்தக் களிப்பில் குறட்டை விட்டு கணவன் உறங்கத் தொடங்கி விடுகிறான்,

விரக தாபமும் பெண்ணின் உறக்கமின்மையும்.

மனைவியின் நிலை தான் இப்போது சிக்கலாகி விட்டது. அவளுடைய நிம்மதியான உறக்கம் பறி போய் விட்டது. இல்லை, பறிக்கப்பட்டு விட்டது. உடல் பலம் கொண்ட ஒரு உயிரினமொன்று. தான் உறங்குவதற்காக உடல் பலம் குறைந்த ஒரு உயிரின் உறக்கத்தைப் பறித்துக் கொண்டது. இது ஒரு கொள்ளை, ஆனால், பெண்ணால் நிரூபிக்க முடியாத ஒரு கொள்ளைச் சம்பவம்,

பெண்ணின் உடலில் பதுங்கிக் கிடந்த காம உணர்வுகளைத் தூண்டிவிட்டதோடு, அவளது உறக்கத்தையும் கெடுத்த கணவன் உறங்கத்

தொடங்கி விட்டான், இந்தக் கொடுமைக்கு ஆளான மனைவி இப்போது உறக்கமின்றித் தவித்த படியே கணவனச் சபிக்கத் தொடங்குகிறாள்.

சுயநலப் புலி, உறக்கத்தைப் பறித்துக் கொண்ட துரோகி. இவனைக் கட்டி நான் என்ன சுகம் கண்டேன்? எதுவுமே தெரியாத இந்த மூடனோடு காலமெல்லாம் எப்படித்தான் வாழ்வது? குழந்தை வேறு பிறந்து விட்டதே! இவனை விட்டுத் தொலைக்கவும் முடியாதே! இவனுக்குக் கட்டி வைத்து என் வாழ்க்கையை நாசம் செய்து விட்டார்களே என் பெற்றோர்!

இவனெல்லாம் எதற்காகத் திருமணம் செய்து கொள்கிறான்? குடும்ப சுகம் அளிக்கத் தெரியாத இவனெல்லாம் எவ்வளவு தான் சம்பாதித்து என்ன பயன்? யாருக்கு வேண்டும் பணம்? என்னிடம் இல்லாத பணமா? குறட்டை விட்டு உறங்குவதைப் பார். இவனை அப்படியே கழுத்தைப் பிடித்து திருகி விட்டால் தான் என்ன? என்றும் இன்ன பிறவாகவும் கணவனைச் சபித்தபடியே பின்னிரவில் தன்னையறியாமல் வந்த உறக்கத்திலே உறங்கிப் போகிறாள்.

தனக்குரிய இன்பத்தை வழங்காத பாலுறவிற்குப் பின், கணவனின் மீது மனைவியின் மனதில் கோபம் உருவாவது தவிர்க்க முடியாதது. அதே அவளுக்கு விருப்பமற்ற நிலையில், ஒரு போகப் பொருளாகவும் பயன்படுத்தப் பட்டு, உறங்க முடியாமல் அவள் தவிக்க நேரும் போது கணவனின் மீது கடுமையான வெறுப்பு நிறைந்த சிந்தனை உருவாவதும் தவிர்க்க முடியாதது.

மேற்கண்ட விரக தாபத்தோடு கூடிய கோபத்துடன், மனைவி உறங்கச் செல்வது கணவனின் மீது நிரந்தரமான காழ்ப்புணர்ச்சியை உருவாக்கக் கூடியது. வாழும் காலம் முழுவதும் கணவனின் நிம்மதியைத் தொடர்ச்சியாக அழித்துக் கொண்டேயிருக்கக் கூடியது. கணவனை மட்டுமன்றி, குழந்தைகள், உறவுகள், சுற்றுப்புறம் என சாத்தியப்பட்ட தொடர்புகள் அனைத்தையும் மோசமாகப் பாதிக்கக் கூடியது. குடும்ப நலத்திற்கு மிகவும் ஆபத்தானது.

ஒற்றைக் கருத்தாகச் சொல்வதென்றால், ஒரு அப்பாவிப் பெண்ணைக் கூட அடங்காப் பிடாரியாக மாற்றக் கூடிய ஆபத்து, சீண்டி விடப் பட்ட பின், தணிக்கப்படாத காமத்தோடு உறங்கச் செல்லும் மனைவியின் உறக்கத்தின் பின்னால் மறைந்திருக்கிறது.

அதாவது, நாக பாம்பை அடித்தால் பாதி உயிருடன் அதை விட்டு விடக் கூடாது. தவறி விட்டு விட்டால், அடிபட்ட நாகம் அடையாளம் வைத்திருந்து, அடித்தவனைப் பழியெடுத்து விடும் என்று பாம்பைப் பற்றி ஒரு கருத்தைச் சொல்வார்கள், பாம்பைப் பொறுத்தவரை, இது முற்றிலும் தவறான கருத்து.

ஆனால், மனைவியின் உறக்கத்தைக் கெடுத்து, அடங்கிக் கிடந்த அவளுடைய விரக தாபத்தையும் தூண்டி விட்டு விட்டு, அதைத் தணித்து அவளை உறங்க வைக்காமலே, போகப் பொருளாகப் பயன்படுத்திய பின், அவளுக்கு அருகில் படுத்து ஆனந்தமாகக்

குறட்டை விட்டு உறங்கத் தொடங்கும் கணவனை, தணிக்கப் படாத மனைவியின் காமம் தன்னுணர்வற்ற நிலையிலே, பல்வேறு வழிகளில் பழியெடுக்கத் தொடங்கி விடும்.

இரத்தத்தை உடலெங்கும் அனுப்புவதற்காக இதயம் தன்னிச்சையாகத் துடித்துக் கொண்டிருப்பதைப் போல, கல்லீரலும், சிறுநீரகமும் தன்னிச்சையாக இரத்தத்தைச் சுத்திகரித்துக் கொண்டிருப்பதைப் போலப் பெண்ணுக்கே தெரியாமல் நடக்கக் கூடிய,- தன்னுணர்வோடு கட்டுப்படுத்தப் பட முடியாத நிகழ்வுகளில் ஒன்றாக, அந்தப் பழியெடுக்கும் செயல் வாழ்நாள் முழுவதும் பல்வேறு வடிவங்களில் நடந்து கொண்டிருக்கும்.

மனைவியை போகப் பொருளாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கும் ஒவ்வொரு ஆணுக்கும் அதற்குரிய தண்டனை நிச்சயமாக மனைவியால் வழங்கப் படும். அது உடனடியாக வழங்கப் படுமா அல்லது முதுமைக் காலத்தில் வழங்கப்படுமா என்பது மட்டுமே ஒரே கேள்வி. இது ஒரு பேருண்மை.

இந்தப் பேருண்மையை விஞ்ஞான பூர்வமாக நிரூபிக்க முடியும்.

## **4.** போகப் பொருளாய்ப் பயன்படுத்தும் கணவர்களின் குமுறல்கள்

என் மனைவியிடமிருந்து யாரேனும் என்னைக் காப்பாற்றுங்கள், அதன் பின், நான் உலகையே காப்பாற்றுகிறேன்,

பெரும்பாலான தம்பதியரின் பாலுறவு மூன்று நிமிடத்திற்குள் முடிந்து விடுகிறது. இது தான் மனைவியை போகப்பொருளாகப் பயன்படுத்தும் பேதைமை, இவ்வாறு போகிப்பதற்கான பொருளாக இருக்க மனைவி உறுதியாக மறுக்கும் போது தான், அங்கே சண்டை துவங்கி விடுகிறது. அது தான் குடும்ப விவகாரச் சண்டை, இரவு நேரத்தில் தம்பதியரிடையே நடைபெறுகின்ற குடும்ப விவகாரச் சண்டை காரணமாக, பலருடைய இல்லற வாழ்க்கை வெளியில் தெரியாத போர்க்களமாக மாறிக் கொண்டிருக்கிறது. ஒன்றாய் வாழும் தம்பதியர் பலர் வாழ்வதைப் போல் நடித்துக் கொண்டிருக்கிறார்கள்.

பனிப்போர், நான்கு சுவர்களுக்குள்ளே நடந்து கொண்டிருக்கக் கூடிய இரகசிய பூசல்கள், வெட்கம் துறந்து வெளிப்படையாகவே நடைபெறுகின்ற சண்டைகள், மனைவியின் சித்திரவதைக்கு ஆளாகும் கணவன், கணவனின் கொடுமைக்கு ஆளாகும் மனைவி ஊரறிய நடைபெறுகின்ற திருமணம் கடந்த உறவு போன்றவை இன்றைய இல்லற வாழ்வின் அடையாளங்களாக உருவாகிக் கொண்டிருக்கின்றன.

குற்றம் சொல்லவே குரல் ஒலிக்கிறது. வருத்தங்களைத் தெரிவிக்கவே வாய் திறக்கிறது. ஒருவரை யொருவர் சபித்துக் கொள்ளவே மனம்

சிந்திக்கிறது. ஆழ்மனதிலே விரோதம் குடியேறுகிறது. கவலையுறுதலே வாழ்க்கையென்றாகி விடுகிறது. வாழும் நரகமாய் இல்லற வாழ்க்கை மாறிக் கொண்டிருக்கிறது.

மூன்று வயதுக் குழந்தையோடு பேசும் வாய்ப்புக்களின் போதெல்லாம், எதைப் பற்றிப் பேசுவதைக் காட்டிலும், தன் பெற்றோருக்கிடையே நடைபெற்றுக் கொண்டிருக்கும் சண்டையைப் பற்றியே குழந்தை அதிகமாகப் பேசுகிறது. குடும்ப வாழ்க்கையை வாழ்வது குறித்த அற்பத்தனமான வழிமுறையொன்று பிஞ்சு நெஞ்சங்களிலேயே பதியமிடப் படுகிறது.

பல தம்பதியர் தங்களுக்குக் கிடைத்த வாழ்க்கையை வாழவில்லை, வாழ்வதைப் போல் நடித்துக் கொண்டிருக்கிறார்கள். பொருளாதாரத் தற்சார்பின்மை காரணமாகச் சிலர் சேர்ந்து வாழ்கிறார்கள். குழந்தைகளின் எதிர்காலம் கருதிச் சிலர் சேர்ந்து வாழ்கிறார்கள். சமூக நிர்பந்தம் காரணமாகச் சிலர் சேர்ந்து வாழ்கிறார்கள்.

எங்கே செல்வது என்று தெரியாத காரணத்தால், சிலர் சேர்ந்து வாழ்கிறார்கள். பெற்றோரின் வற்புறுத்தல் காரணமாகச் சிலர் சேர்ந்து வாழ்கிறார்கள். கூட்டாக எழுதி வைக்கப்பட்டுள்ள சொத்துக்களின் காரணமாகச் சிலர் சேர்ந்து தன்னையொத்தவர்களைப் போல் வாழ்ந்தாக வேண்டுமே என்பதற்காகச் சிலர் வாழ்கிறார்கள், சேர்ந்து வாழ்கிறார்கள். தனி நபராக வாழ்வதற்கு அஞ்சி சேர்ந்து வாழ்கிறார்கள்.

ஆனால், அன்பு காரணமாக மட்டுமே சேர்ந்து வாழும் தம்பதியரின் எண்ணிக்கை மிகவும் குறைந்து கொண்டே வருகிறது. குழந்தையின் எதிர்காலம், பொருளாதாரத் தற்சார்பிமை, கூட்டு முதலீடு, அண்டை அயலாரின் பார்வை, போக்கிடம் இன்மை, தனிமையை எதிர்கொள்ள அச்சம், சட்டத்தைக் கண்டு பயம் போன்றவையே இன்றைய குடும்ப வாழ்க்கையைக் கட்டிக் காக்கும் அரண்களாக உள்ளன. அதற்கான ஒரே காரணம் அன்பை உருவாக்கக் கூடிய வேதிப்பொருள் தம்பதியரின் மூளையில் போதுமான அளவிற்குச் சுரப்பதில்லை. நோய்களின் மூலம் தணிக்கப்படாத காமம்.

தொடர் வேதனையில் உழன்று கொண்டிருக்கும் மனம் தான், உடலுக்குள்ளே நோய்களை உருவாக்கக் கூடிய மூலப் பொருள். நடு வயதில் வரக்கூடிய மாரடைப்பும், புற்று நோயும் வாழ்ந்த வாழ்க்கையால் வரவழைக்கப் பட்டவை. ஆனால் இது பெரும்பாலான தம்பதிகளுக்குத் தெரியாது. அதனால், மனவேதனையின் பிறப்பிடமாகத் திருமண வாழ்க்கையை மாற்றிக்

கொண்டிருக்கிறார்கள். திருமண வாழ்க்கையே வாழும் காலத்தைக் குறைக்கக் கூடிய, அகால மரணங்களின் வரவேற்பறையாகி விட்டது. ஆண்கள் அற்பாயுளில் செத்துப் போகிறார்கள். குடும்பங்கள் சிதறிக்

கொண்டிருக்கின்றன. எத்தனையோ

தற்கொலைகள் ஏதேதோ காரணங்களின் கீழ் நடந்ததாகக் கணக்குக் காட்டப்

படுகிறது. இல்லற வாழ்க்கை மட்டும் இன்பமாக இருக்குமானால், எளிதில் தற்கொலை நிகழாது என்கிற உளவியல் உண்மை மறக்கப் படுகிறது. இந்நிலையே நீக்கமற எங்கும் நிறைந்திருப்பதால், இது தவிர்க்க முடியாதது என்றாகி விட்டது. மேற்கண்டவையெல்லாம் இல்லாமல் ஒரு குடும்ப வாழ்க்கையா? அது எங்கே விற்கப்படுகிறது? ஒரே ஒரு நாளாவது வாடகைக்காவது அது கிடைக்குமா? என்று அதிசயம் போல் கேட்கப்படுகிறது.

குடும்ப வாழ்க்கையில் நிலவும் அவலங்களுக்காகக் கூறப் படுகின்ற காரணங்கள் அனைத்துமே சாக்குப் போக்குகள். உண்மையான காரணம் பாலின்ப ஆற்றாமை. நடைபாதையில் வசிப்பவனின் மனைவியும் சரி, அரசாங்க அதிகாரியின் மனைவியும் சரி, நட்சத்திர விடுதி போன்ற மாளிகையில் வசிப்பவனின் மனைவியும் சரி, மகா கோடீசுவரனின் மனைவியும் சரி தங்கள் கணவனுக்கு நூற்றுக்கு நூறு மதிப்பெண்கள் வழங்கத் தயங்குகிறார்கள். அவர்களைப் பிடித்துள்ள பாலின்ப ஆற்றாமை என்கிற ஆழ்மன நோயும், அந்நோயின் காரணமாக தங்கள் திருமணம் குறித்து ஆழ்மனதில் ஏற்பட்டுள்ள அதிருப்தியும், அந்த அதிருப்தி காரணமாக கணவனின் மீது, அவர்கள் ஆழ்மனதில் குடி யேறியுள்ள கோபமும் தான், அவர்கள் வழங்கத் தவறிய மதிப்பெண்களின் வழியே கசிந்து வெளியாகிறது.

சமாதானத் தூதுவர்களும், தலைவர்களும். மனித உடலின் அடிப்படைப் பசியான காமம் தணிக்கப் படாத போது, ஆழ்மனதில் ஒரு ஏக்கம் பிறக்கிறது. ஏக்கம் பூர்த்தியடையாத போது, ஏமாற்றம் உருவாகிறது. தொடர் ஏமாற்றம் மனநிலையை விரக்தியடையச் செய்கிறது. நாட்பட்ட விரக்தி, வெறுப்பாக மாறுகிறது. இறுதியில் அந்த வெறுப்பே

கணவனின் மீதான ஆழ்மனக் கோபமாக மாறி விடுகிறது. அந்தக் கோபநிலை காரணமாக, கணவனின் ஒவ்வொரு செயலும் தவறாகவே தெரியத் தொடங்குகிறது. கற்பனையாகவே குற்றங்கள் தெரிகின்றன.

நிழலை நிஜம் என்றே மனம் சாதிக்கிறது. அதன் விளைவாக, நிரந்தரமான விவாத மேடையாக விடு உருவாகி விடுகிறது. நியாயப் படுத்துவதே வாழ்வின் நிலவரமாகி விடுகிறது. வாதப்பிரதி வாதங்களே தம்பதியரின் உரையாடலாக மாறிப் போகிறது. வெறுப்பு அதிகரிக்கிறது. உறங்குவதற்கு மட்டுமே கணவன் வீட்டிற்கு வருகிறான்,

வம்பிழுத்தல் என்பது தணிக்கப்படாத காமத்தின் வெளிப்பாடு. தாம்பத்ய இன்பங்களைப் பெற முடியாத உடலில் வாழும் மனம் தான்

வக்கிர சிந்தனைக்கே மூலம், குழந்தையின் முதுகில் பளாரென்று விழும் அறை வேறொன்றுமல்ல. பாலின்ப ஆற்றாமையின் சிற்றம். தணிக்கப்படாத காமம் தான் செல்லுபடியாகக் கூடிய இடம் கிடைக்காத போது குழந்தையின் மீது, தன்னுணர்வற்ற நிலையிலே ஒரு கோபாவேசமாகப் பீறிட்டு வெளியேறுகிறது.

வன்முறைக்குக் காரணம் காமம். சமூகக் குற்றவாளியின் வார்ப்புக் கூடம் தணிக்கப்படாத காமமே. எதிலுமே அதிருப்தியை மட்டுமே காட்டுமானால் அது தணிக்கப்படாத காமத்தின் கோபம்.

தணிக்கப்படாத காமத்தின் வெளிப்பாடுகளே ஒரு நபருடைய அடிப்படைக் குணங்களாகி விட்டன. தஞ்சாகவும், மன நோயாகவும் இருப்பது தணிக்கப்படாத காமம், காட்டு மிராண்டியாய் மனிதனைச் செயல்படச் செய்வது தாளிக்கப்படாத காமம், மனிதப் பிறவியை மிருகமாக மாற்றிக் கொண்டிருப்பது தணிக்கப்படாத காமம். ஆனால், இந்த உண்மையை பெரும்பாலான மக்கள் உணர்ந்திருப்பதாகத் தெரியவில்லை.

தம்பதியர் இருவரும் சேர்ந்திருந்தாலே பிரச்சினை, எதிலும் பிரச்சினை, எப்போதும் பிரச்சினை, தீராத பிரச்சினைகளோடு வாழ்வது தான் வாழ்க்கை. பிரச்சினைகளுக்கு இடையே மின்னல் போலத் தோன்றி மறைவது தான் மகிழ்ச்சி என்கிற நிலைமை தற்போது உருவாகிக் கொண்டிருக்கிறது.

குடும்ப வாழ்க்கை என்றால் இப்படித் தான் இருக்கும். சண்டைகளும் சச்சரவுகளும் இல்லற வாழ்வில் தவிர்க்கவே முடியாதவை. மேலும் அவை தான் அன்பின் ஆழத்தை அளப்பதற்கான அடையாளங்கள் என்றொரு கருத்து கூறப்பட்டு, ஒருவரையொருவர் சபித்த படியே, ஒரே கூரையின் கீழ் வாழ்வதென்பது ஒரு பொது விதியாகவே பெரும்பாலான மனிதர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது.

வாழ்க்கை என்பது ஒரு பரிசு. கொண்டாடி மகிழ்வதற்காக வழங்கப்பட்டுள்ள ஒரு கொடை, குதூகலமே வாழ்வின் குறிக்கோள். இதை உணர்ந்து வாழ்க்கையை இன்பமாய்க் கொண்டாடி வாழ எத்தனையோ வழிகளை பண்டைய இந்திய

ஞானிகள் நமக்கு வழங்கி விட்டுச் சென்றுள்ளார்கள்.

கட்டிடத்திற்குரிய மூலப்பொருட்கள் கையருகில் இருக்கின்றன. ஆனால், அதை ஒன்றிணைத்து உருவமாக்கத் தெரியவில்லை. வீட்டிற்குள்ளேயே விடையிருக்கிறது. ஆனால், கணவனோ வீட்டைத்தவிர, வெளியில் எங்கெங்கோ ஓடி, விடையைத் தேடிக் கொண்டிருக்கிறான்,

மூலிகைத் தோட்டமே வீட்டில் இருக்கிறது. ஆனால், மருந்திற்காக அலைந்து கொண்டிருக்கிறார்கள். பிரச்சினக்குள்ளேயே தீர்விருக்கிறது.

ஆனால், வேரை விட்டு விட்டு கிளைகளை வெட்டிக் கொண்டிருக்கிறார்கள். தீர்வைத் தேடியலைந்து, அதைப் பெற முடியாமல், ஒரே வீட்டிற்குள் தீவு வாழ்க்கையை பல தம்பதியர் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

குற்றச்சாட்டுகளும், வாக்கு வாதங்களும், நியாயப் படுத்தல்களும் என இல்லற வாழ்க்கை ஒரு தர்க்க சாலையாக உருவெடுக்கிறது. ஆயுதங்களைப் பயன்படுத்திச் சண்டையிடுவது உடல் மீது நடத்தப்படும் போர், தர்க்கம் மனதின் மீது நடத்தப் படுகின்ற போர். இந்த இரு வகைப் போரில், தர்க்கப் போர் தரும் வலியே மிகவும் அதிகம்.

தர்க்கப் போரினால் ஏற்பட்ட காயங்களை வெளியில் காட்டி அடுத்தவர்களின் ஆதரவையும் பெற முடியாது. அல்லது காயப்படுத்திய எதிரியிடமே காட்டி. அவருடைய கருணையையும் கோர முடியாது. ஆகவே, கொடூரமான போர் வகையைச் சேர்ந்த தர்க்கம் காரணமாக, மனதை ரணகளப் படுத்துகின்ற போர்க்களமாக இல்லம் உருவெடுக்கிறது.

தம்பதியரின் கால்களுக்கிடையில் தான் சமாதானத் தூதுவர்கள் உறங்கிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய காதுகளுக்கிடையில் தான் சமாதானத்தின் தலைவர்களும் உறங்கிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால், அவர்களைப் பயன்படுத்தத் தெரியாமல், நண்பர்களையே விரோதிகளாகப் பாவித்துக் கொண்டிருக்கிறார்கள்.

நண்பர்களை விரோதிகளாகப் பாவிப்பதால், விரோதிகள் அனைவரும் தம்பதியரின் ஆத்ம நண்பர்களாகி விட்டார்கள். சலிப்பு, எரிச்சல், கோபம், ஆத்திரம், கவலை, துயரம், பகைமை, மனச்சோர்வு, பயம், பொறாமை, அவநம்பிக்கை, குற்றச் செயல், வன்முறை போன்ற வாழ்க்கையின் பரம் விரோதிகளோடு தான் தம்பதியர் கூடி குலாவ வேண்டியிருக்கிறது.

அன்பு, மகிழ்ச்சி, நம்பிக்கை, உற்சாகம், ஊக்கம், தெளிவு, சக்தி ஆனந்தம், தன்னம்பிக்கை, சுயமதிப்பு, நேர்மறைச் சிந்தனை, போன்ற மனிதனின் பிரத்யேக குணங்களைத் தொலைத்து விட்டார்கள், இதோ மேற்கண்ட சூழலில் வாழ்ந்து கொண்டிருக்கும் தம்பதியர் சிலருடைய வாழ்க்கையை நாம் மேலோட்டமாக அறிந்து கொள்ளலாம்.

கணவர்களின் புலம்பல்கள்.

எனக்கு வயது ஐம்பது, என் மனைவிக்கு நாற்பத்தைந்து. திருமணமாகி இருபது வருடங்கள் ஆயிற்று. ஒரே குழந்தை, ஆண் குழந்தை, பொறியியல் படிக்கிறான், நான் அரசாங்க அதிகாரியாகப் பணிபுரிந்து கொண்டிருக்கிறேன். முப்பதாயிரம் ரூபாய்க்கு மேல் சம்பளம் வருகிறது. அது தவிர மேல் வருமானமும் உண்டு. மூன்று படுக்கையறைகளைக் கொண்ட இரண்டடுக்கு மாளிகையைக் கட்டி,

அதில் தான் குடியிருக்கிறேன். இது தவிர, ஆறு குடித்தனங்கள் வாழும் ஒரு குடியிருப்பும் எனக்கு சொந்தமாக உள்ளது. அதன் மூலம் வாடகை வருகிறது. சொந்த ஊரில், விடும், கொஞ்சம் விவசாய நிலமும் இருக்கிறது. ஒரு மனிதன் நிம்மதியாக வாழ்வதற்குத் தேவையான அனைத்தும் எனக்கு வழங்கப் பட்டிருக்கிறது. ஆயினும் நான் நிம்மதியாக வாழ முடியவில்லை, அதற்கான காரணம் இது தான். மேற்கண்ட சொத்துக்களைத் தவிர, இனியொரு காலியிடமும் எனக்கு சொந்தமாக இருக்கிறது. அந்தக் காலி

மனையிலும் வீடு கட்டி வாடகைக்கு விடும்படி என் மனைவி என்னைப் பாடாய்ப் படுத்துகிறாள். அதில் ஒரு வீட்டைக் கட்டுமளவிற்கு என்னிடம் பணமில்லை, மேலும் என் அனுபவப்படி, வாடகைக்கு வீடு கட்டி விடுவது என்பது மிகவும் வேலை பளுவைத் தருவதோடு, முதலீட்டுக்குரிய இலாபம் தரும் தொழிலாகவும் தெரியவில்லை. ஆகவே நான் அதைச் செய்ய மறுக்கிறேன், என் மனைவியோ பயங்கரமாக நிர்பந்திக்கிறாள்,

விட்டிற்குள் நுழைந்தாலே சண்டையாக இருக்கிறது. சகிக்க முடியவில்லை. அவ்வப்போது தற்கொலை சிந்தனை கூட வருகிறது. ஆயினும், என் மகனுக்காக நான் வாழ்ந்து கொண்டிருக்கிறேன்.

வேறொரு கணவர் கூறுகிறார். எனக்கு ஐம்பத்தைந்து வயதாகிறது. என் மனைவிக்கு நாற்பத்தெட்டு. திருமணமாகி இருபத்து மூன்று வருடங்கள் ஆயிற்று. இரண்டு குழந்தைகள் பெண் குழந்தைக்குத் திருமணமாகி விட்டது. ஆண் குழந்தை அமெரிக்காவில் வேலை பார்க்கிறான். நான் தனியார் நிறுவன மேலாளராகப் பணிபுரிந்து கொண்டிருக்கிறேன்.

இலட்ச ரூபாய்க்கு மேல் சம்பளம் வருகிறது. எல்லா வசதிகளும் இருக்கிறது. ஆயினும் நான் நிம்மதியாக வாழ முடியவில்லை. ஒரே சண்டை. எதற்கெடுத்தாலும் சண்டை, எவ்வளவு தான் ஒதுங்கிப் போனாலும், வாய்க்குள் விரலை விட்டு வார்த்தைகளைப் பிடுங்கி அதை வைத்து சண்டையிடுகிறாள்.

இனியொரு கணவர் கூறுகிறார்

எனக்கு அறுபத்து நான்கு வயதாகிறது. என் மனைவிக்கு அறுபது. திருமணமாகி முப்பத்து மூன்று வருடங்கள் ஆயிற்று. நாங்கள் இருவருமே ஆசிரியர்களாகப் பணிபுரிந்து ஓய்வு பெற்றவர்கள், இரண்டு குழந்தைகள், இருவரும் ஆண்கள், இருவருக்கும் திருமணமாகி விட்டது. வெளியூரில் தனித்தனியாக வசித்துக் கொண்டிருக்கிறார்கள். நாங்கள் இருவர் மட்டும் தான் வீட்டில் வசித்துக் கொண்டிருக்கிறோம்.

ஆனால், எப்போதும் சண்டையாகவே இருக்கிறது. தாங்கவே முடியவில்லை. எவ்வளவு தான் பிள்ளைப் பூச்சியாக நடந்து

கொண்டாலும், எப்படியாவது பேசவைத்து வம்பிழுத்து விடுகிறாள். திருமணத்திற்கு முன் நடந்ததை வைத்தெல்லாம் சண்டையைத் துவக்குகிறாள். நான் நிம்மதியாக வாழ முடியவில்லை,

மற்றொரு கணவர் கூறுகிறார். எனக்கு அறுபது வயது. என் மனைவிக்கும் அறுபது. திருமணமாகி முப்பது வருடங்கள் ஆயிற்று. நான் ஒய்வு பெற்றவன். மனைவி இல்லத்தரசி, எங்களுக்கு ஒரே குழந்தை, அரசு அதிகாரியாகப் பணியாற்றிக் கொண்டிருக்கிறான். திருமணமாகி இரண்டாண்டுகள் ஆகி விட்டது. அந்தத் திருமணத்தின் போது பேசியது தான். அதன் பின் நானும் என்

மனைவியும் பேசிக் கொண்டால், சண்டை போடுவதற்காக மட்டுமே பேசிக் கொள்கிறோம்.

இனியொரு கணவர் கூறுகிறார். நான் வீட்டிற்குள் நுழையும் போது, மனைவி டி.வி. பார்த்துக் கொண்டிருப்பாள், அவளுக்கும் டி.வி.க்கும் இடையில் நுழைந்து தான் நான் போயாக வேண்டும். அப்படிப் போகும் போது, தன்னையும், டிவியையும் தவிர மூன்றாவதாக ஒரு உயிரினம் வீட்டிற்குள் நுழைந்திருக்கிறது. என்கிற பிரக்ஞை கூட இல்லாதவளாக என் மனவி அமர்ந்திருக்கிறாள். மற்றொரு கணவர் கூறுகிறார்.

எனக்கு சேலைகளே எடுத்துத் தருவதில்லை என்று சொல்கிறாள்.போய் எடுத்துக் கொடுத்தால், விலை குறைவு. வடிவமைப்பு சரியில்லை. இரண்டாம் தரமானவை, என்று ஏதோ ஒரு குற்றம் கூறுகிறாள். நீயே போய் எடுத்துக் கொள் என்று கூறினால், நான் போய் எடுத்துக்கொள்ளவதென்றால், கணவன் என்று நீ எதற்காக இருக்கிறாய் என்கிறாள்.

எந்த வண்ணம் பிடிக்கும்? என்ன விலையில் தேவை? எப்படிப்பட்ட வேலைப்பாடுகளோடு வேண்டும்? காஞ்சிபுரம் வேண்டுமா? பனாரஸ் அல்லது காஷ்மீர்? எது வேண்டும்? சோளியோடு, சோளியில்லாமல், எப்படி வேண்டும்? என்று கேட்டால், “உன் விருப்பம்” என்கிறாள்.

எடுத்துக் கொடுத்த பின் எதுவுமே சரியில்லை. உனக்கு என்மீது அன்பில்லை, அதனால் தான் எனக்கு இப்படி எடுத்துக் கொடுக்கிறாய். எனக்கு மட்டும் வாழ்வில் “எதுவுமே” அமையவில்லை என்கிறாள். சித்திரவதையாக இருக்கிறது என் வாழ்க்கை, நான் எங்காவது ஓடிப்போய்விடலாமா என எண்ணிக் கொண்டிருக்கிறேன்,

ஒரு காதல் கணவர் கூறுகிறார், என் திருமணம் காதல் திருமணம், ஓடிபோய்த் திருமணம் செய்து கொண்ட காதல் எங்கள் காதல், திருமணமாகி இருபதாண்டுகள் ஆகிறது. மனைவி இல்லத்தரசி, இரண்டு குழந்தைகள் உள்ளனர். கடந்த இருபதாண்டுகளில் மனைவியின் பெயரில் வீடு கட்டியிருக்கிறேன், நகைகள் பட்டுச் சேலைகள் என பத்து இலட்ச ரூபாய்க்கும் மேல்

செலவளித்திருக்கிறேன்.

என் தரப்பு உறவுகள் விழாக் காலங்களிலும், மனைவியின் தரப்பு உறவுகள் அடிக்கடியும் வீட்டிற்கு வந்து போகும் சூழல் இருக்கிறது. சிறப்பாகக் கல்வி பயிலும் வாய்ப்பை குழந்தைகளுக்கு உருவாக்கிக் கொடுத்திருக்கிறேன், எனினும், நான் தான் என் மனைவியை மயக்கிக் காதலித்து திருமணம் வரை கொண்டு வந்து அவளை ஏமாற்றி விட்டதாக இப்போது கூறுகிறாள்.

காதலித்தவளைக் கை விடுவது தான் ஏமாற்றும் செயல் எனக் கருதப்படும் சூழலில் திருமணம் செய்து இருபதாண்டுகளாகக் கூடி வாழ்ந்து கொண்டிருப்பதை ஒரு ஏமாற்றுச் செயல் என்று என் மனைவி கூறுவதைக் கேட்பது மிகவும் துயரளிப்பதாக உள்ளது. உயிர் வாழும் விருப்பத்தை, கொஞ்சம் கொஞ். நான் இழந்து கொண்டிருக்கிறேன்.

பணக்காரக் கணவர் கூறுகிறார். செலவுக்கு பத்தாயிரம் கேட்டால் இருபதாயிரம், இருபதாயிரம் கேட்டால் ஐம்பதாயிரம் கொடுக்கிறேன். என்னிடம் பணம் ஏராளமாக இருக்கிறது. இலட்ச ரூபாய் செலவழித்தால் கூட எனக்கு வலிக்காது. ஆனாலும் குடும்பத்தில் நிம்மதியில்லை.

இருவருக்கும் இடையே நடைபெற வாய்ப்புள்ள எப்படிப்பட்ட உரையாடலையும் சண்டைக்குரிய களமாக மாற்றவே என் மனைவி முயற்சிக்கிறாள், பணமீட்டுவதில் உள்ள ஆர்வத்தைக் கூட நான் கொஞ்சம் கொஞ்சமாக இழந்து கொண்டிருக்கிறேன், சாமியாராகப் போய் விடலாமா என்று தோன்றுகிறது.

இனியொரு பணக்காரக் கணவர் கூறுகிறார். நான் ஒரு தொழிலதிபர். என் மனைவி ஏழ்மையான குடும்பத்தில் பிறந்தவள். மூவாயிரம் ரூபாய் சம்பளத்திற்கு என் நிறுவனத்தில் வேலை செய்தவள். காதல் திருமணத்தின் போது, அவள் உடுத்தியிருந்த ஆடைகள் மட்டுமே அவள் கொண்டு வந்த ஒரே சீதனம். அதன் பின் நான் தான் அவளுக்குரிய அனைத்தையும் வாங்கிக் கொடுத்து பராமரித்திருக்கிறேன், அவளது பஸ் பயணத்தை கார்ப் பயணமாக

மாற்றியிருக்கிறேன், பல கோடி ரூபாய் மதிப்புள்ள சொத்துக்களை அவள் பெயரில் உருவாக்கி வைத்திருக்கிறேன். உலகத் தரம் வாய்ந்த பள்ளியில் குழந்தை படித்துக் கொண்டிருக்கிறான்.

கூலி வேலைக்குப் போய்க் கொண்டிருந்த அவளுடைய பெற்றோர், உடன் பிறந்தவர்களுக்குக் கூட தொழில் வாய்ப்புக்களை உருவாக்கிக் கொடுத்து, பொருளாதார ரீதியாக உயர்த்தி விட்டிருக்கிறேன். எனினும் தன்னுடைய திருமண விசயத்தில் தவறாக முடிவெடுத்து விட்டதாக, என் மனைவி என்னிடமே கூறுகிறாள்.

மற்றொரு கணவர் கூறுகிறார். என் மனைவி இல்லத்தரசி. காபியோ

தேநீரோ கேட்டால், கொண்டு வந்து கொடுக்கிறாள். ஆனால், அவ்வாறு கொடுக்கும் போது கொஞ்சமாவது சிதறித் தெறிக்கும் படியாகத் தான் வைக்கிறாள். சில சமயங்களில் கூடத்திலிருக்கும் போது தேநீர் கேட்டு விட்டு, கொண்டு வருவதற்குள் படுக்கையறைக்குச் சென்று என் கணிணியில் மூழ்கி விடுவேன். தேநீர் கேட்டதைக் கூட மறந்தும் விடுவேன்.

ஆனால், ஏதோ ஒரு நேரத்தில் நினைவு வந்து கேட்டால், அதெல்லாம் கேட்ட போதே கொடுக்கப் பட்டாகி விட்டது என்பாள். எப்போது கொடுத்தாய் எனக் கேட்டால், நீ கேட்ட போது எங்கே அமர்ந்திருந்தாயோ அங்கே போய்ப் பார் என்கிறாள், தேநீர் கேட்கப்பட்ட போது நான் எங்கிருந்தேனோ அங்கே தேநீர்க் கோப்பை இருக்கிறது.

சில தினங்களில் தான் கொடுத்ததை நிரூபிக்க வேண்டுமென்பதற்காக, அந்தத் தேநீர்க் கிண்ணம் நாள் முழுவதும் கூட அங்கேயே இருக்கிறது. நான் வீட்டிற்குள் வந்தவுடனே அந்த தேனீர்க் கிண்ணத்தை காட்டிய பின் தான் அப்புறப் படுத்துகிறாள். ஏன் இவ்வளவு குரோதம்?

சமகால சாக்ரடீஸ் கூறுகிறார், என் மனைவி முதலில் உறவுகளோடு சண்டையிட்டாள். அவர்கள் ஒதுங்கிக் கொண்டனர். அதன்பின் அண்டை அயலாரோடு சண்டையிட்டாள், அவர்கள் இவளை ஒதுக்கி விட்டனர். அதன் பின், என்னைத் தேர்ந்தெடுத்தாள், நான் விடிந்ததும் வெளியேறி இரவு பத்து மணிக்கு வீட்டுக்குச் செல்வதை வழக்கப் படுத்திக் கொண்டேன்.

அதனால், இப்போது குழந்தைகளோடு சண்டையிட்டுக் கொண்டிருக்கிறாள். இதனால் அவர்களுடைய கல்வியின் பேரிலான கவனம் சிதறுகிறது. அவர்களும் சண்டைக் கோழிகளாக வாழப் பயிற்சி பெற்றுக் கொண்டிருக்கிறார்கள். குழந்தைகள் எங்கேனும் ஓடிபோய் விடுவார்களோ அல்லது தற்கொலை செய்து கொள்வார்களோ என நான் அஞ்சுகிறேன்.

இத்தனைக்கும் அடிதடி, குடி, பணப் பிரச்சினை, மாமியார் தொல்லை, நாத்தனார் தொந்தரவு என எதுவுமே இல்லை. டி.வி. பார்ப்பதற்கு கூட இடையூறு இல்லை, என் மனைவிக்கென்று தனியாக ஒரு தொலை காட்சிப் பெட்டி ஓய்வில்லாமல் ஓடிக் கொண்டேயிருக்கிறது. மேலும், அவள் வேலைக்குச் செல்பவளும் அல்ல, மனநல மருத்துவரிடம் போய் ஆலோசனை பெற்றுக் கொள்ளவும் அவள் மறுக்கிறாள்.

இனியொரு கணவர் கூறுகிறார். ஆறுதலான பார்வை, பிரமிப்பான பார்வை, தழுவலான பார்வை, ஒரு காமம் நிறைந்த பார்வை என ஒரு அன்பு நிறைந்த பார்வையை, கடந்த பத்தாண்டுகளில் ஒரு நாள் கூட என் மனைவி என் மீது வீசியதேயில்லை, என்னைப் பார்த்தாலே எரித்து விடுகிற மாதிரித் தான் பார்க்கிறாள்.

]

மற்றொரு கணவர் கூறுகிறார். நான் ஒரு தீர்வைச் சொல்கிறேன். அது நிராகரிக்கப்படுகிறது. அதே தீர்வை வேறொரு நபர் கூறும் போது அது ஏற்கப்படுகிறது. ஏன் இந்தப் பாகுபாடு?

இனியொரு கணவர் கூறுகிறார். பள்ளிப் படிப்பை மட்டுமே பெற்றிருந்த

நான் திருமணத்திற்குப் பின் முதுகலைப் பட்டம் வாங்கியவன். என் மனைவி

பள்ளிப் படிப்பைக் கூடத் தாண்டாதவள். அதனால் என்னைக் கண்டால் என்

மனைவிக்கு இப்போது பிடிப்பதில்லை. என் மீதுள்ள வெறுப்பின் காரணமாக,

கற்றோர் சமூகத்தைக் கண்டாலே அவளுக்குப் பிடிப்பதில்லை.

குழந்தையின் ஆசிரியையோடு அல்லது டியூசன் மாஸ்டரோடு, அல்லது

பள்ளி நிர்வாகத்தோடு, அல்லது குழந்தைகளோடு அல்லது என்னோடு என

ஏதேனும் ஒரு பிரச்சினை செய்த படியே இருக்கிறாள். பிறரோடு அவள்

உருவாக்கும் பிரச்சினையின் மையம் பெரும்பாலும் காமம் சார்ந்ததாகவே

இருக்கிறது. அதனால், மன நல ஆலோசனைக்குப் போய் வரலாம் என்று

கூறினால், உனக்குத் தான் காமப் பைத்தியம். எனக்கென்ன வந்தது என்கிறாள்.

கணவர்களின் பொதுவான கருத்துக்கள்,

1) பாலுறவின் போது என் மனைவி பிணம் போல் கிடக்கிறாள். திருமணம்

என்கிற பெயரில், ஒரு மரக்கட்டையை நான் சேர்த்துக் கொண்டிருக்கிறேன்.

2) என் மனைவியோடு பாலுறவில் ஈடுபடுவது பற்றி எண்ணிக் கூடப் பார்க்க

முடியவில்லை. அவள் ஒரு புத்தகப்புழு அல்ல, ஆயினும் நான் பாலுறவில்

ஈடுபட விரும்பும் போது ஒரு புத்தகத்தை எடுத்துப் படிக்கத் தொடங்கி

விடுகிறாள். நான் பாலுறவில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறேன். அவள் படித்துக் கொண்டிருக்கிறாள்.

என் உயிர்நீர் வெளியேறியதும், முடிந்து விட்டதா சரி சரி போய்ப் படு என்று

எதுவுமே நடக்காத மாதிரி கூறுகிறாள். இதை என்னால் சகித்துக் கொள்ள

முடியவில்லை, என் மனம் சுக்கு நூறாக உடைந்து கிடக்கிறது.

3) நான் பாலுறவில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும் போது, என் மனைவி தொலைக்

காட்சியைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள். நான் மிகவும் அவமதிக்கப் படுவதாக உணர்கிறேன்.

4) நான் பாலுறவில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும் போது, என் மனைவி அன்றாட

விவகாரங்கள் பற்றி விவாதிக்கத் தொடங்கி விடுகிறாள். என் மனம் பாலுறவிலிருந்து விலகி விடுகிறது. பாலுறுப்பு தன் விரைப்புத் தன்மையை

இழந்து விடுகிறது.

5) கால்களை அகற்றுவதைத் தவிர என் மனைவி வேறு எந்தச் செயலிலும்

ஈடுபட்டதேயில்லை. கணவனின் பாலுறுப்பைத் தன் கைகளால் தொடுவது

அவளுடைய பிறப்புக்கே அவமானம் எனக் கருதுகிறாள்.

6) எனக்கு திருமணமாகி ஐந்து வருடங்கள் ஆகிறது. இரவு எத்தனை மணிக்கு

நான் மனைவியை நெருங்கினாலும், உடனே வீறிட்டு அலறியபடி தன்னை

ஏதோ கடித்து விட்டதாகக் கூறி என் குழந்தை அழுத படி. விழித்துக் கொள்கிறான்.

ஒவ்வொரு முறையும் சொல்லி வைத்த மாதிரி இது நடக்கிறது. குழந்தை

சுட்டிக் காட்டும் இடம் யாராலோ கிள்ளப் பட்டதன் காரணமாக சிவந்து போய்க் கிடக்கிறது. குழந்தையை அவ்வளவு குரூரமாகக் கிள்ளி, என்

மனைவி ஏன் எழுப்பி விடுகிறாள்?

7) என் மனைவி தொலைக்காட்சியைப் பார்த்துக் கொண்டிருக்கும் போது,

சாப்பாடு போடு எனக் கேட்டு விட்டால் உடனே ருத்ர தாண்டவம்

ஆடுகிறாள்,

8) என் வயது ஐம்பது. நான் கடந்த பத்தாண்டுகளாக பாலுறவே

கொள்வதில்லை. ஏனெனில், நாற்பது வயதைக் கடந்த பின், என்னால்

கற்பழிக்க முடிவதில்லை.

9).தனியாக நாங்களிருவர் மட்டும் இருக்கும் போது, மனிதக் கழிவைப்

பார்ப்பதைப் போல் என் மனைவி என்னைப் பார்க்கிறாள்,

10) என்னுடைய விரல் பட்டு விட்டால் கூட என் மனைவி குளிக்கச் செல்கிறாள்.

இத்தனைக்கும் அவள் வேறு யாருமல்ல. என் அத்தை மகள்.

11) என் மனைவிக்கும் எனக்கும் இடையே சண்டையில்லாமல் ஒரு நாள் கூட

கழிந்ததில்லை. ஒரு சில நாட்கள் நாள் முழுவதும் கூட சண்டையாகவே

இருக்கிறது. எனக்குத் திருமணமாகிப் பத்தாண்டுகள் ஆகிறது.

12) என்னுடைய வீட்டிற்குள் நுழைய என் தரப்பு உறவினர்கள் யாரையும் என்

மனைவி அனுமதிப்பதேயில்லை. என் உறவினர் என்கிற போர்வையில் முன்

பின் தெரியாத நீங்களே வந்தாலும் உங்களுக்கும் இதே கதி தான்.

13) என் மனைவி தீவிர பக்திமானாக இருக்கிறாள். நாட்காட்டிகளில்

குறிப்பிட்டுள்ள வீரத தினங்களில் பாலுறவில் ஈடுபட அனுமதிப்பதில்லை.

அதன்படி விரத தினம் இல்லாத நாளே என் வாழ்வில் இல்லை.

ஏனெனில், என் மனைவி முக்கியமான ஐந்து மதங்களின்

நாட்காட்டிகளையும் அனுசரித்துக் கொண்டிருக்கிறாள். எங்கள்

திருமணமோ ஜாதிகளைக் கடந்த கலப்புத் திருமணம்.

14) குடியில்லை, பணப் பிரச்சின இல்லை. தனிக் குடித்தனம், எனினும்,

வாழ்க்கை போர்க் களமாகவே இருக்கிறது.

15) என் சுய இன்ப அட்டவணையின் படி, திருமணத்திற்கு முன்னால் சுயமாக அனுபவித்ததை விட திருமணத்திற்குப் பின்னால் அனுபவித்ததே அதிகம். என் வயது நாற்பது.

16) அகாலமான முறையில் எனக்கு மரணம் நேர்ந்தால், அதற்கு என் மனைவி தான் காரணம் என ஒரு கடிதத்தை என் கைப்பட எழுதி என் நண்பனிடம் கொடுத்து வைத்திருக்கிறேன். அந்த அளவிற்கு அவளுடன் வாழ்வது அச்சமூட்டுவதாக இருக்கிறது.

17) குறிப்பிட்ட நடிகரின் புகைப்படங்களால் என் வீடு மட்டுமன்றி என் மனைவியின் கைப்பையும் நிரம்பி வழிகிறது. என் குழந்தைகள் கூட இதை வெறுக்கிறார்கள்.

18) என் மனைவி எனக்கிழைக்கும் கொடுமையைப் பற்றிச் சொல்லவே என் நா கூசுகிறது. ஆனால், தொடைகளின் இடுக்குகளிலேயே நான் இன்பத்தை அனுபவித்துக் கொண்டிருப்பதை என்னால் சகித்துக் கொள்ளவே முடியவில்லை. மேலும், இந்த உண்மை எனக்குத் தெரியாது

என்று அவள் நினைத்துக் கொண்டிருக்கிறாள்.

19) யாரேனும் பதினோராயிரத்து ஐநூறு ரூபாயை, நூறு ருபாய்த் தாள்களாக

என்னிடம் கொடுத்து விட்டால், அதை எண்ணி முடிக்க எனக்கு ஒரு மணி நேரம் ஆகிறது. ஏனெனில், எண்ணிக் கொண்டிருக்கும் போது

இடையில் நுழைந்து ஏதாவது வம்பிழுப்பாள். அந்த வம்புப் பேச்சிற்குள்

போய் வந்து மீண்டும் எண்ணத் துவங்கினால், அதை எண்ணி முடிப்பதற்குள் மீண்டும் வந்து வம்பிழுப்பாள். சுவனம் சிதறாமல் எண்ணவே

முடியாது. இவ்வாறு தொடர்ச்சியாக என் கவனத்தை என் மனைவி திசை

திருப்பிக் கொண்டேயிருக்கிறாள். நச்சரிப்பாயிருக்கிறது என் வாழ்க்கை.

20) காதல் திருமணம் மூலம் என்னுடன் இணைந்த என் மனைவி, குழந்தை

பிறந்த பிறகு, பார்வையாலேயே என்னை மிக மோசமாக அவமதிக்கிறாள்.

வேலை முடிந்து வீட்டிற்குச் செல்லவே அவமானமாக இருக்கிறது.

ஆனால், குழந்தைக்காகச் சென்று கொண்டிருக்கிறேன்.

21) மது வாடை இல்லாமல் போனால், பேசியே வதைக்கிறாளே என்று குடிக்கத்

தொடங்கினேன், மூன்று மாதங்கள் அமைதி காத்த அவள் வழக்கம்

போல் பேசத் தொடங்கி விட்டாள். ஆனால், நான் தான் மதுவுக்கு

அடிமையாகி விட்டேன்.

22) இல்லத்தரசியான என் மனைவி பகலில் குறைந்தபட்சம் நான்கு

மணி நேரமாவது உறங்கி விட்டு இரவில் இரண்டு மணி வரை & வி.

பார்த்துக் கொண்டிருக்கிறாள். எனக்கும் குழந்தைகளுக்கும் உள்ள

இடையூறைப் பற்றிச் சொன்னாலும் அவளுக்குப் புரிவதில்லை.

23) உறவினர், நண்பர், தெரிந்தவர் என யார் மறைந்தாலும், அந்த ஈமச்சடங்கில்

கலந்து கொள்ள என் மனைவியை நான் அனுப்புவதேயில்லை. ஏனெனில்,

மரணமடைந்தது யாராக இருப்பினும், ஈமச் சடங்கில் கலந்துவிட்டு வந்ததும்

முதல் வேலையாக, எவ்வளவு நல்ல மனிதர் இறந்து விட்டார். அவருக்குப்

பதில் நீங்கள் கூட இறந்திருக்கலாம் என்று கூறுகிறாள்.

24) என் மனைவி வெளியூரில் வேலை பார்க்கிறாள். நான் கைபேசியில்

அழைத்தால் எடுக்கவே மாட்டாள். குழந்தையின் எண்ணிலிருந்து

அழைத்தால் வினாடிகளில் எடுத்து விடுவாள். ஆனால், பேசுவது நான்

என்பது தெரிந்ததும், உன் மரண சேதி எப்போது வருமெனக்

காத்திருக்கும் சூழலில் நீயே பேசிக் கொண்டிருக்கிறாயே என்கிறாள்,

குழந்தை கூட என் மீது பரிதாபப்படுகிறான்,

25) நான் ஒரு தொழில் அதிபர். என் மனைவி வங்கியொன்றில் தணிக்கை

அதிகாரியாகப் பணியாற்றுகிறாள். பணிநிமித்தமாக அடிக்கடி அவள்

வெளியூர் செல்கிறாள். அவ்வாறு சென்றிருக்கும் போது, எந்த

எண்ணிலிருந்து யார் அழைத்தாலும் கேபேசியை எடுத்துப்பகம் மனைவி

என்னுடைய எண்ணிலிருந்து வரும் அழைப்புக்களை மட்டும்.

ஏற்பதேயில்லை. கேட்டால் பணிச் சுமை என்று கூறுகிறாள்.

26) நீ இல்லாத போது அம்மா அமைதியாக டி.வி.பார்த்துக் கொண்டிருக்கிறாள்.

ஆனால், நீ இருக்கும் போது, டி.வி.யில் நடக்கும் நிகழ்ச்சிகளைக் கூட

கவனிக்க முடியாத அளவிற்கு உன்னோடு சண்டையிட்டுக்

கொண்டிருக்கிறாள். என்னால் டி.வி.பார்க்க முடியவில்லை. அதனால் நீ

வீட்டிற்கு வராதே, என்று தன் ஆறு வயதுக் குழந்தை கூறுவதாக ஒரு

கணவர் கூறுகிறார்.

27) எனக்கு குடிப்பழக்கம் இல்லை. என் மனைவியை நான் திட்டியது கூட

இல்லை. பெரிய அளவில் சண்டைகளும் வந்ததில்லை. ஆனால், என்னோடு

பேசுவதை விட்டு விடு. உன் குரலைக் கேட்கவே எனக்குப் பிடிக்கவில்லை

என்று என் மனைவி சொல்கிறாள். நாங்கள் பிரிய முடியாத அளவிற்கு

குழந்தை வேறு இருக்கிறது.

1) வயிற்று வலி, 2) அமாவாசை, 3) குழந்தை விழித்துக் கொண்டுள்ளது,

4) தலைவலி, 5) வெள்ளிக் கிழமை, 6) உடல் வலி, 7) மூடு இல்லை,

8) உறக்கம் வருகிறது,9) என் தாய் வந்திருக்கிறார், 10) கொசுத்தொல்லை,

11) நாளை அதிகமான வேலை இருக்கிறது.12) குழந்தை வளர்ந்து

விட்டது, 13) இன்று என் பாட்டியின் நினைவு நாள்.14) உங்கள் உடம்பு

கெட்டுப் போய் விடும்.15) இன்று வேலை அதிகம்.16) ஒய்வு தேவை.

17) வயதாகி விட்டது. போதும்.18) போரடிக்கிறது.19) உறவினர்கள்

வந்துள்ளனர். 20) கரு உருவாகி விடும். 21) சிகரெட் நெடி 22) உன்

23) நாளை மாத விடாய் துவங்கப் போகிறது. 24)25)26)27)28)29)30)

மாதவிடாய் என ஐந்து நாட்கள். 31) இதற்கு மட்டும் நான்

வேண்டுமாக்கும்.

32) இன்று பண்டிகை தினம். ஒரு மாதத்தில் இத்தனை காரணங்களைக்

கூறி பாலுறவை என் மனைவி நிராகரிக்கிறாள். இவையனைத்தும் பகிர்ந்து. மனைவியின்

கொள்ள முடிந்த சில மாதிரிகளே.

மனைவியின்கற்பு பற்றிய புலம்பல்கள்.

மனைவியின் கற்பு பற்றிப் புலம்பியழுகின்ற கணவர்களின் குமுறல்கள்

காது கொடுத்துக் கொடுத்துக் கேட்க முடியாதவையாக இருக்கின்றன.

முழுமையான தகவல்கள் அடுத்த நூலில் வரவுள்ளன.

நாற்பது வயதான ஒரு கணவர் கூறுகிறார். என் மனைவி நாள் தவறாமல்

வேறொரு ஆணுடன் இரு சக்கர வாகனத்தில் வந்து இறங்குகிறாள். யாரும் எதுவும்

தவறாக நினைத்துக் கொள்ள மாட்டார்களா எனக் கேட்டால், மற்றவர்களைப்

பற்றி எனக்கென்ன கவலை என்று திருப்பி கேட்கிறாள். அவன் பிரேக்

போடும்போது உன் மார்புகள் அவனுக்குப் படாதா எனக் கேட்டால், பட்டால்

என்ன தவறு என்று என்னைத் திருப்பிக் கேட்கிறாள்.

ஒரு ஆணின் ஸ்பரிசம் மார்புகளின் மீது படும் போது பெண்ணின்

பாலுணர்வு கிளர்ந்தெழும் எனச் சொல்லப்படுகிறதே எனக் கேட்டால், உணர்வுகள்

உயிரோடு இருந்தால் தானே கிளர்ந்தெழும். உன்னைத் திருமணம் செய்து

கொண்ட நாளன்றே என்னுடைய உணர்வுகளெல்லாம் செத்துப் போய்

விட்டது என்று கூறுகிறாள். ஊரே சிரிக்கிறது. நான் என்ன செய்வது?

முப்பத்தைந்து வயதான கணவர் கூறுகிறார். என் மனைவியின் அலுவலகம்

மாலை ஆறு மணியுடன் முடிகிறது. அங்கிருந்து முக்கால் மணி நேரத்தில் வந்து

விடலாம். ஆயினும் என் மனைவி எட்டு மணிக்குத் தான் வீட்டிற்கு வருகிறாள்.

இது ஒரு வழக்கமாகவே ஆகி விட்டது.

வாய் திறந்து கேட்டாலே, என்ன? சந்தேகமா? என்று சண்டைக்கே

வருகிறாள். மூச்சு விட முடிய வில்லை. வெளியில் தெரிந்து விடக்கூடாதே என

நான் அடக்கி வாசிக்கும் போது என் மனைவியே இறைந்து பேசி, ஊரைக்

கூட்டுகிறாள், நான் தினமும் நூறு முறையாவது தற்கொலையைப் பற்றி

எண்ணிப் பார்க்கிறேன்,

வேறொரு கண வர் கூறுகிறார். என்னால் என் காதலனை மறக்க

முடியாது. அவனுடன் வாழ்வதைக் கைவிட முடியாது. விருப்பப் பட்டால்,

நீயும் என்னுடன் வாழலாம். இல்லா விட்டால் சந்தோசமாகப் பிரிந்து விடலாம்

என்று என் மனைவி கூறுகிறாள். பள்ளிக்குச் செல்லும் வயதில் இரண்டு

குழந்தைகள் எங்களுக்கு உள்ளன. நான் தற்கொலை செய்து கொள்ள

விரும்புகிறேன்,

இனி யொரு கணவர் கூறுகிறார். நான் காதலனுடனும் வாழ்க்கை

நடத்துவேன். நீயும் என்னை விட்டுப்பிரிந்து போகக் கூடாது. இதற்கு இடையூறு

செய்தால், என் மரணத்திற்கு கணவனின் கொடுமை தான் காரணம் என்று

கடிதம் எழுதி வைத்து விட்டுக் குழந்தையைக் கொன்று விட்டு, நானும்

தற்கொலை செய்து கொள்வேன் என்று மனைவி மிரட்டுகிறாள். இப்படிப்பட்ட

பெண்ணோடு சேர்ந்து வாழாதே, உன்னைக் கொலை செய்து விடுவாள்.

உடனே தப்பித்து ஓடி விடு என்று மற்றவர்கள் கூறுகிறார்கள். என்ன

செய்வதென்றே தெரியாமல் விழித்துக் கொண்டிருக்கிறேன்.

வேறொரு கணவர் கூறுகிறார். என் மனைவி முதலில் என் தம்பியுடன்

பழகினாள், அதனால் தான் தனிக்குடித்தனம் போனேன், போன இடத்தில்

அடுத்திருந்த வீட்டில் வசித்துக் கொண்டிருந்த ஒரு பையனோடு தொடங்கி

விட்டாள். அதனால், தனி வீடாகப் பிடித்து குடியேறினேன். அங்கே போன ஒரே

மாதத்தில் வீட்டின் உரிமையாளரோடு பழக்கத்தை உருவாக்கி விட்டாள். அவர்

பகல் நேரத்தில் வந்து போய்க் கொண்டிருக்கிறார். என்னால் சகிக்க முடியவில்லை.

கள்ளக் காதலை உருவாக்கிக் கொள்வதில் கைதேர்ந்த பெண்ணை

மனைவியாகப் பெற்றுள்ள ஆண்கள் ஒட்டு மொத்தமாக சமூகத்தையே

சாடுகிறார்கள். இருபத்து ஒன்றாம் நூற்றாண்டை, கள்ளக் காதலுக்கான

பொற்காலம் என்று வர்ணிக்கிறார்கள். கைபேசிகளும், கணிணிகளுமே அந்தப்

பெருமைக்கான காரணமென்று புலம்புகிறார்கள்.

பெண்ணின் காமத்தைத் தணிக்கத் தெரியாத தங்கள் அறியாமையை

விட்டு விட்டு, இன்றைய புதுமைப் பெண்ணுக்குள்ள பல்வேறு

வாய்ப்புக்களைப் பற்றிச் சாடிக் கொண்டிருகிறார்கள்.

கள்ளக் காதலில் ஈடுபடும் பெண்களோ, நான் அன்பிற்காக ஏங்கிக்

கொண்டிருந்தேன். அப்போது என் காதலர் மிகவும் வாஞ்சையாகப் பேசினார்.

அதனால் காதல் உருவாகி விட்டது. அதன் பின் என்னால் காதலனை மறக்க

முடியவில்லை என்றே கூறுகிறார்கள். ஆனால், இது தன்னுடைய செயலை

நியாயப் படுத்திக் கொள்வதற்காகச் சொல்லப் படுகின்ற பொய்.

அதே போல கள்ளக் காதலுக்குப் பணம் தான் காரணம் என்கிற கருத்தும்

நிலவிக் கொண்டிருக்கிறது. ஆனால் ஒரு பெண் கணவன் அல்லாத ஆணுடன்

கொள்ளும் காதலுக்குப் பணம் முதன்மையான காரணமல்ல, தணிக்கப் படாத

காமமே காரணம்,

முதலில் தணிக்கப் படாத காமம் காரணமாகக் கள்ளக் காதல் ஏற்படுகிறது.

அதன் மூலம் கணவன் அல்லாத ஆணின் உள்ளங் கவர்ந்த பெண்ணாக

கள்ளக் காதலி உருவாகி விடுகிறாள். தன் உள்ளங் கவர்ந்த பெண்ணுக்கு

அனைத்தையும் அள்ளி வழங்குவது ஆணின் மரபணு போடுகிற வித்தை.

அதனால் பணப் பரிவர்த்தனை துவக்கமாகிறது. ஆகவே, கள்ளக் காதலை

உருவாக்கியதற்காகச் சொல்லப்படுபவை அனைத்தும் சாக்குப் போக்குகள்.

இங்கே ஒரு கதை நினைவிற்கு வருகிறது, ஒரு கப்பல் ஆறாயிரம்

பயணிகளோடு அமெரிக்காவிலிருந்து இந்தியா நோக்கிப் புறப்பட்டது.

பயணிகளிடையே பதினெட்டு வயதுடைய அழகிய பெண் ஒருத்தியும்

தனியாகப் பயணிப்பதைக் கப்பலின் தலைவர் காண நேர்ந்தது.

முதல் நாள் அவளைப் பார்த்து புன்முறுவலித்தார். அவளும் புன்னகை

புரிந்தாள். அடுத்த நாள் அவளோடு பேச்சுக் கொடுத்தார். அதற்கடுத்த நாள்

அருகிலிருந்த சிற்றுண்டிச் சாலைக்கு அழைத்துச் சென்று, தின்பண்டங்கள்

வாங்கிக் கொடுத்தார். அதற்கு மறுநாள் தன்னுடைய அறைக்கே அழைத்துச்

சென்று, விருந்து கொடுத்து அனுப்பினார். அதற்கடுத்த நாளும் அவளைத்

தன்னுடைய அறைக்கு அழைத்துச் சென்றார். ஆனால், திருப்பி அனுப்பவில்லை.

கப்பலின் தலைவரோடு அவருடைய அறையில் தங்கிய அந்தப் பெண்

கப்பல் இந்தியாவை நெருங்கிய போது தான் தன் இருப்பிடத்திற்கு வந்தாள்,

அப்போது அவளுடைய சக பயணிகள் அவளை ஏளனமாகப் பார்த்தார்கள்.

இவ்வளவு சிறிய பெண், அந்த முதியவனோடு போய்த் தங்கி விட்டு

வந்திருக்கிறாயே! உனக்கு வெட்கமாக இல்லயா? என்று சிலர் வாய்விட்டே

கூடக் கேட்டு விட்டனர்.

அப்போது அந்தப் பெண் சொன்னாள். எனக்கு வேறு வழி தெரியவில்லை.

சக பயணிகளான உங்கள் உயிரைக் காப்பாற்றுவதற்காகவே நான் அவருடன்

தங்கினேன் என்றாள். எல்லோருக்கும் அதிர்ச்சி, என்ன உளறுகிறாய்? உன்

நடத்தைக்கும் எங்கள் உயிருக்கும் என்ன சம்பந்தம்? என்று அவர்கள் கேட்டனர்.

அதற்கு அந்தப் பெண் சொன்னாள். ஆம். என்னுடன் வந்து

தங்காவிட்டால், அட்லாண்டிக் சமுத்திரத்திலேயே கப்பலை மூழ்கடித்து

பயணிகள் அனைவரையும் கொலை செய்து விடுவேன் என்று என்னை

மிரட்டினார். ஆகவே, உங்கள் உயிரைக் காப்பாற்றுவதற்காக நான் என்னையே

தியாகம் செய்ய வேண்டி வந்தது என்றாள்.

தங்கள் செயலை நியாயப் படுத்துவதற்காக, இது போன்ற காரணங்களைத்

தான் ஒவ்வொருவரும் கூறுவார்கள். கணவன் குடிக்கிறான்; சந்தேகப்பட்டான்;

அல்லது பணமீட்டுவதில்லை; அல்லது அடிக்கிறான்; அல்லது ஆண்மை

யற்றவன்; அல்லது கள்ளக் காதலில் ஈடுபட்டிருக்கிறான்; அல்லது மாதக்

கணக்கில் தொடுவதே இல்லை என்பன போன்ற காரணங்கள் அனைத்தும்

சாக்குப் போக்குகள், கள்ளக் காதலுக்கான முழு முதற் காரணம் தணிக்கப்

படாத காமம்.

மேலும் கள்ளக் காதலில் ஈடுபடும் பெண்கள் தங்கள் கணவனின் மீது

கொண்டுள்ள அன்பைக் காட்டிலும் கள்ளக் காதலனின் மீது ஏராளமான

அன்புடன் இருப்பார்கள். ஏனெனில், எந்தக் கள்ளக் காதலனும் மனைவியை

வதைப்பதைப் போல், கள்ளக் காதலியை மனோரீதியாக வதைப்பதில்லை,

கூடியிருப்பதே கொஞ்ச நேரம். ஆகவே, கொஞ்சலுக்கும், குலாவலுக்குமே

போதுமான நேரமில்லாத போது, சண்டையிட்டுக் கொள்ள அங்கே வாய்ப்பே

இல்லை, மேலும், கேட்காமலே ஆணுக்குரியவை அனைத்தும் கிடைத்து

விடுவதால், கள்ளக் காதலியின் பெற்றோரைத் திட்டுவதற்கான வாய்ப்பும்

ஏற்படுவதில்லை.

மேலும், அவளுடைய குழந்தையை அடித்ததற்காகக் கள்ளக் காதலியைத்

திட்டுவதற்கோ, சமையலின் சுவை பற்றிக் குறை கூறுவதற்கோ கூட அங்கே

எவ்வித வாய்ப்புக்களும் இல்லை. அது தவிர அவனுடைய தாய் மூலமாக

மாமியாரின் தொல்லைகளும் இல்லை. ஆகவே, கள்ளக் காதலியின் மனதைக்

காயப்படுத்தும் எந்தச் செயலும் கள்ளக் காதலனால் நிகழ்வதில்லை.

மேலும், கள்ளக் காதலில் பெண்ணாக விரும்பியே பாலுறவில் ஈடுபடுகிறாள்,

அதனால், அவளே அனைத்தையும் துவக்குபவளாக இருக்கிறாள், தன்னுடைய

காம உணர்வைக் கண்டு கள்ளக் காதலன் தவறாக நினைத்துக் கொள்வானோ,

சந்தேகப் பட்டு விடுவானோ, என்கிற அச்சம் அங்கே துளியளவும்

ஏற்படுவதில்லை,

ஒருக்கால், இதையெல்லாம் எங்கே கற்றுக் கொண்டாய் எனக் காதலன்

கேட்டு விட்டாலும் கூட, கணவன் தான் கற்றுக் கொடுத்ததாகக் கூறித் தப்பித்துக்

கொள்ள ஒரு வாய்ப்பிருக்கிறது. அதனால் காதல் விளையாட்டுக்களில் அவள்

தன்னுடைய விருப்பம் போல் விளையாடுகிறாள்.

அத்தகைய பங்கேற்பால், அவளுடைய உடலில் நிகழ வேண்டிய

உச்சகட்ட

நிகழ்ந்து விடுகின்றன. அதனால், அவளுடைய காமம் தணிக்கப்

படுகிறது. ஆகவே, காமத்தைத் தணித்துக் கொள்ளக் காரணமாயிருந்த க

காதலனின் மீது ஏராளமான அன்பு ஏற்பட்டு விடுகிறது.

அதனால் தான், கள்ளக் காதலின் சுவை அறிந்த பின் ஒரு பெண்ணால்

அந்தப் பழக்கத்தை எளிதில் விட முடிவதில்லை. சூழ்நிலை
காரணமாகக் கள்ளக்

காதலனை நிரந்தரமாகப் பிரிய வேண்டிய சூழல் ஏற்பட்டால்,
உடனுக்குடன்

புதியவன் ஒருவனை கள்ளக் காதலனாக உருவாக்கி விடுவாள். இதன்
காரணமா;

தான் ஒரே நேரத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட கள்ளக் காதலர்கள் உருவாகி,

கொலை வரை கூட செல்கிறது.

மேலும், கல்வி, பணம், சமூக மதிப்பு, ஆணின் தோற்றம் போன்ற

தகுதிகளின் அடிப்படையில் கள்ளக் காதல் உருவாவதில்லை.
ஏனெனில் பாலின்ப

ஆற்றாமை என்கிற நோயால் பாதிக்கப் படும் மூளை தன்னுடைய
பகுத்தறியும்

திறனை இழந்து விடுகிறது.

கள்ளக் காதலில் ஈடுபடுவது உட்ச பட்ச போதையைத் தரக் கூடியது.
பழகி

விட்டால் எளிதில் விட முடியாது. மது, புகை போன்ற போதையை
விடக்

கொடிய போதையான கொகேய்ன் போதையைப் போன்ற
போதையைக்

கொடுப்பது கள்ளக் காதல்.

தன்னைச் சுற்றியே பைத்தியமாக அலையச் செய்யும் வல்லமை மிக்கது

கொகேய்ன் போதை. அதில் சிக்கிக் கொண்ட கல்லூரி மாணவர்களால்
எளிதில்

மீள முடிவதில்லை. அதைப் போன்ற போதையைக் கள்ளக் காதலும்
தருவதால்,

கள்ளக் காதலை உருவாக்கக் கற்றுக் கொண்டவர்களால் எளிதில் அந்தப்

பழக்கத்திலிருந்து மீள முடிவதில்லை.

குடும்ப நிம்மதி, குழந்தைகளின் எதிர்காலம், மதிப்பு மரியாதை, தன்

முதுமைக் காலம் என எதைப் பற்றியும் கவலைப் படாதது கள்ளக் காதல்,

அதனால், உலகிலுள்ள போதைகளிலேயே அனைத்தையும் அழித்தொழிப்பதில்

முதலிடம் வகிக்கின்ற போதை தான் கள்ளக் காதல். இந்த போதைக்கு

ஆளாகி விட்டால், குடும்ப வாழ்க்கையே அழிந்தாலும் சரி, குழந்தைகளின்

எதிர்காலம் பாழானாலும் சரி, இளமை இருக்கும் வரை மீள முடியாது. ஆகவே,

அந்தப் பாழும் கிணற்றில் விழும் முன், ஆயிரம் முறை யோசிப்பது நல்லது.

கள்ளக் காதல் போன்ற அனுபவத்தை எதிர் கொள்ளாத கணவர்கள் கூடக்

கை நிறையச் சம்பாதிக்கின்ற நிலையிலும், நிம்மதியாக வாழ்ந்து

கொண்டிருக்கவில்லை. தங்கள் திருமண இணையைத் தேர்வு செய்த போது

பெருந்தவறு செய்து விட்டதாக இருபதாண்டுகள் வாழ்ந்த பின் பல கணவர்கள்

தெரிவிக்கிறார்கள்.

இங்கே ஒரு தகவலை மறைக்காமல் சொல்ல வேண்டியது மிகவும்

அவசியம், ஆண்களுக்கு அழத் தெரியாது என்றொரு கருத்து சமூகத்தில்

நிலவுகிறது. அது பொய். ஏனெனில், ஒரு ஆணுக்கு இணையாக எந்தவொரு

பெண்ணாலும் அழ முடியாது. அந்த அளவிற்கு இன்றைய குடும்பத்

தலைவர்களில் பலர் அழுது கொண்டிருக்கிறார்கள்.

கணவர்களின் தவறான அணுகு முறைகள்.

மனைவியின் பிடாரித்தனம் குறித்துப் புலம்பியழுகிற ஆண்களிடம் பேசும்

போது, பொதுவான கருத்தொன்று தெரிய வருகிறது. அவர்கள் அனைவருமே

மனைவியை போகப் பொருளாகவே பயன்படுத்தி வந்திருக்கிறார்கள். பாலுறவை தாக்க மாத்திரையாகவே அவர்கள் உபயோகித்திருக் கிறார்கள். பாலுறவிற்குப் பின் மனைவி உறங்கி விட்டாளா எனப் பார்த்ததில்லை, மனைவியை உறங்க வைப்பது தங்களுடைய கடமை என்பதை உணர்ந்திருக்கவில்லை. தனக்குரிய உறக்கத்தை வழங்குகின்ற கருவியாகவே மனைவியைப் பாவித்திருக்கிறார்கள்.

முன் விளையாட்டுக்கள் பற்றி, முக்கிய விளையாட்டுக்கள் பற்றி, தீவிர விளையாட்டுக்கள் பற்றி, பின் விளையாட்டுக்கள் பற்றி, பெண்ணின் உடலமைப்புப் பற்றி, பெண்ணின் பாலுணர்வு மையங்களைப் பற்றி அவர்கள்

அறிந்திருக்கவில்லை, பாலுறவிற்காக பத்து நிமிடங்களுக்கு மேல் அவர்கள்

ஒதுக்கியதேயில்லை. பத்தே நிமிடங்களிலெல்லாம் பெண்ணுக்குரிய இன்பம்

நிகழாது என்பதை அவர்கள் அறிந்திருக்கவில்லை.

சராசரி ஆணிடம் மலிந்து கிடக்கிற அதே அறியாமை இவர்கள்

அனைவரிடமும் மலிந்திருக்கிறது. புணர் புழை வேறு, சிறுநீர் துவாரம் வேறு.

பெண்ணின் பாலுறுப்பு வேறு. என்கிற தகவலைக் கூட அறிந்து கொள்ளாமலே

இருபதாண்டுகள் குடும்ப வாழ்க்கையை வாழ்ந்துள்ளனர். ஆணின் விந்து

வெளியேற்றமும், உச்சகட்ட இன்பமும் ஒன்று என்றே கருதுகிறார்கள்,

மனைவிக்குரிய பாலின்ப சுகங்களை பற்றி அவர்கள் சிந்தித்ததே இல்லை.

ஆணை விடப் பத்து மடங்கு கூடுதலாகப் பெண்ணைத் துடிக்கச் செய்கின்ற,

இன்பக் கதறலில் ஈடுபடச் செய்கின்ற பாலின்ப சுகங்கள் மனைவிக்கு உண்டு

என்கிற தகவலை அவர்கள் அறிந்திருக்கவில்லை. மனைவியைத் தாய்மையுறச்

செய்ததே அவர்களுடைய ஆண்மைக்கான அடையாளமாகக் கருதுகிறார்கள்.

குழந்தை பிறந்த ஒரு சில ஆண்டுகளுக்குப் பின், பெரும்பாலும்

மனைவியை வற்புறுத்திப் பணிய வைத்திருக்கிறார்கள். முற்றிலும் தவறான

அணுகுமுறை என்பது தெரியாமல், மனைவியின் உறக்கத்தைக் கலைத்து

பாலுறவில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

பாலுறவில் ஈடுபட மறுத்தபோது, குடும்ப விவகாரச் சண்டையில்

ஈடுபட்டிருக்கிறார்கள். தொடர்ந்து பேசாமல் இருந்திருக்கிறார்கள், உணவருந்த

மறுத்திருக்கிறார்கள். செலவிற்குப் பணம் தர மறுத்திருக்கிறார்கள்.

வெளியில் அழைத்துச் செல்ல மறுத்திருக்கிறார்கள், விழாக்களுக்கு உடன்

செல்ல மறுத்திருக்கிறார்கள், வாங்கிக் கொடுத்ததைச் சொல்லிக் காட்டி

ஏசியிருக்கிறார்கள், வளர்த்த விதம் சரியில்லை என்று மனைவியின் பெற்றோரைக்

குறை கூறியிருக்கிறார்கள். இவ்வாறாகப் பல்வேறு வழிகளில் மறைமுகமாக

மனைவியோடு ஒத்துழைக்க மறுத்திருக்கிறார்கள்,

குடும்பத்தைத் துறந்து செல்ல முடியாத, குழந்தையை வளர்த்து ஆளாக்க

வேண்டுமே என்கிற மனைவியின் நிர்க்கதியான நிலையை தங்களுக்குச்

சாதகமாகப் பயன் படுத்தியிருக்கிறார்கள். குடிப்பது, அடிப்பது இல்லை

யென்றாலும், மனோ ரீதியாக தங்கள் ஆதிக்கத்தை நிலை நாட்டி, பாலின்பத்தை

அனுபவித்திருக்கிறார்கள், பாலுறவு சுகத்தைப் பெறுவதற்காக எல்லா வகையான

போர்த் தந்திரங்களையும் பயன்படுத்தியிருக்கிறார்கள். வன் பாலுறவிலும்

அவ்வப்போது ஈடுபட்டிருக்கிறார்கள்.

ஒரே வரியல் சொன்னால், பாலுணர்வுள்ள உயரினமாகத் தங்கள்

மனைவியை இவர்கள் நடத்தவே இல்லை.

குழந்தைகள் தானாகப் பல் துலக்கி, பள்ளி க்குச் செல்லும் வரை,

மேற்கண்ட சூழல் நிலவியிருக்கிறது. குழந்தைகளின் பராமரிப்பிற்குக்

கணவனின் பங்கு தேவையில்லை என்கிற சூழல் உருவானதும், நிலைமை

மாறி விட்டது. தன்னை போகப் பொருளாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கும்

கணவனோடு மல்லுக்கு நிற்க மனைவியும் தயாராகி விட்டாள்.

அவ்வாறு மல்லுக் கட்டிய போது தான் கணவன் அடங்கியிருக்கிறான்.

ஆனால், அவன் அடங்கினாலும் இப்போது மனைவி விடுவதாக இல்லை, தான்

வாங்கிய அனைத்தையும் திருப்பித் தரத் தொடங்குகிறாள்.

திருமணமான முதல் இருபதாண்டுகளில் கணவன் தன் மனைவிக்கு

எதையெல்லாம் வழங்குகிறானோ, அவையனைத்தும் இம்மி பிசகாமல், அடுத்த

இருபதாண்டுகளில் கூட்டு வட்டியோடு அவனுக்கு திருப்பி வழங்கப்படும்

என்பது பழைய மொழி,

ஆனால் கணவனால் வழங்கப் பட்டவை அனைத்தும் குழந்தை பிறந்த சில

வருடங்களிலேயே, பன்மடங்காகத் திருப்பிச் செலுத்தும் படலம் துவங்கி விடும்

என்பது தான் இன்றைய உண்மையாக இருக்கிறது. பெண்களுக்கான சிறப்புச்

சட்டங்கள் அதற்கான காரணங்களில் ஒன்று.

மேலும், தன்னைக் கொடுமைப் படுத்தியவர்களுக்கு அதே கொடுமையைத்

திருப்பிக் கொடுக்கத் துவங்கும் போது, இரக்கம், கருணை ,பரிதாபம்,

மனிதாபிமானம், நன்றி போன்ற உணர்ச்சிகள் எல்லாம் மனித மனதிலிருந்து

விடை பெற்று விடுகிறது. ஏனெனில், மனிதர்களின் ஆழ்மனம்

உணர்ச்சிகளிடையே வித்தியாசத்தைப் பார்க்கக் கூடிய திறனற்றது. ஆகவே,

கணவனைப் பழியெடுக்கும் விவகாரத்தில் பெண்ணின் ஆழ்மனம் இரக்கம்

காட்டுவதில்லை.

பாலின்ப ஆற்றாமை என்னும் நோய் ஒரு பெண்ணைப் பிடாரியாக

மட்டுமல்ல, கொலைகாரியாகக் கூட மாற்றும் வல்லமை மிக்கது. கணவனைக்

கொலை செய்த மனைவியைப் பற்றியும், குழந்தையைத் தண்ணீர்த் தொட்டிக்குள்

மூழ்கடித்துக் கொலை செய்த தாயைப் பற்றியும், எத்தனையோ செய்திகளைப்

படிக்கிறோமல்லவா? அவையெல்லாம் அந்தந்த பெண்களைப் பிடித்திருந்த

பாலின்ப ஆற்றாமை என்கிற மன நோயின் ருத்ர தாண்டவங்கள்.

அதேபோல, தன் மனைவியைத் தானே கொலை செய்த, அல்லது

ஆள்வைத்துக் கொலை செய்த கணவனைப் பற்றியும், தன்னுடைய

குழந்தைகளைத் தானே கொலை செய்த தந்தையைப் பற்றியும், தன்னுடைய

ஆணுறுப்பைத் தானே அறுத்தெரிந்த ஆணைப் பற்றியும் கூட செய்திகள்

வருகிறதல்லவா? அவையெல்லாம் ஆடவனைப் பிடித்த பாலின்ப ஆற்றாமை

நோயின் ருத்ர தாண்டவங்கள்.

மேலும், ஓடும் இரயில் முன் பாய்ந்து அற்பாயுளில் கணவன் செத்துப்

போவதும், ஒரு குடும்பத்தலைவி தீயில் குளித்து தன்னுடைய உடலின்

வெம்மையை நிரந்தரமாகத் தணித்துக் கொள்வதும் கூட, அதே பாலின்ப

ஆற்றாமை என்கிற நோயின் உட்சபட்ச ருத்ர தாண்டவங்களே,

பெண்ணும் பாலுணர்வுள்ள ஒரு உயிரினமே.

ஒரு துணிச்சலான பெண் கூறுகிறார். கணவனை என்னிடம் நெருங்க

விடவே அஞ்சுகிறேன். ஏனெனில், சிறிது நேரம் சர்ச் சல்லாப்விளையாட்டுக்களில்

ஈடுபடலாம் என்றெண்ணி நெருங்க விட்டால் கூட, அதை உடனடி உடலுறவாக

மாற்றவே கணவன் முயற்சிக்கிறான்.

நேரிடையாகப் பாலுறவில் ஈடுபடுவதன் மூலம் எனக்குரிய இன்பங்கள்

எதுவுமே நிகழாது என்பது எனக்குத் தெரியும். இயந்திரத்தனமான பாலுறவால்

என் மனநிலை மாசடைவதையும் நான் உணர்ந்திருக்கிறேன். மேற்கண்ட

தகவலைச் சொன்னாலும் என் கணவனுக்குப் புரிவதில்லை. அதனால் அவனுக்குப்

பைத்தியம் பிடித்து விடாத அளவிற்கு மட்டுமே என்னை அண்ட விடுகிறேன்.

பாலுறவு என்பது உடல் மூலமாக அன்பைப் பரிமாறிக் கொள்ளும் செயல்.

ஆனால், அன்பேயில்லாத இயந்திரத்தனமான பாலுறவு தான், பாலுறவே

இல்லாத வாழ்க்கையை நோக்கிப் பெண்ணைத் தள்ளுகிறது.

எந்த அளவிற்கு போகப் பொருளாக மனைவி பயன் படுத்தப் படுகிறாளோ,

அதற்கேற்ப அவள் பாலுறவின் மீது வெறுப்படைகிறாள். மோசமான பாலுறவை

காட்டிலும், பாலுறவே இல்லாமல் வாழ்வதையே ஒரு பெண்ணின் உடலும்

மனமும் விரும்புகிறது.

மேலும், கணவனின் உடற் பசிக்கான தீனியாக மட்டுமே தன்னைப்

பயன்படுத்திக் கொண்டிருக்கிற கணவனின் மீது மனைவியின் ஆழ்மனம் பெருங்

கோபத்தில் இருக்கிறது. அதனால் தான் பாலுறவு விளையாட்டில் ஈடுபட மனைவி

மறுக்கிறாள்,

இந்த மறுப்பைச் சந்திக்கின்ற ஆண்கள், தங்கள் மனைவிக்குப் பாலுணர்வு

மிகவும் குறைவாக இருப்பதாக கூறுகிறார்கள். எனினும் அதே ஆண்கள் பொதுக்

கருத்தாகச் சொல்லும் போது, இன்றைய கால கட்டத்தில், பெண்களின் பாலின்ப

ஆர்வம் கூடியிருப்பதாகவே தெரிவிக்கிறார்கள். இத்தகைய முரண்பட்ட கருத்தின்

வாயிலாக, அவரவர் மனைவியைத் தவிர பிற பெண்களெல்லாம் பாலுணர்வு

மிக்கவர்கள் என்று சொல்கிறார்கள்.

பாலுறவில் ஈடுபடுவதே என் மனைவிக்குச் சுத்தமாகப் பிடிக்காது என்று

சொல்லப்படுவது எப்படிப் பட்ட கருத்தென்றால், என் மனைவிக்கு நல்ல உணவு

பிடிக்காது. பட்டுச்சேலைகள் கட்ட பிடிக்கவே பிடிக்காது, நகைகளை

அணிவதென்றால் பிடிக்காது, வைர நகைகள் அறவே பிடிக்காது, சுற்றுலா

செல்வதெல்லாம் சுத்தமாகப் பிடிக்காது, அரட்டையடித்தல் பிடிக்கவே பிடிக்காது,

என்று சொல்வதைப் போன்றது.

உலகிலுள்ள உயிரினங்கள் அனைத்தும் பாலுறவால் உருவானவை. அந்த

உயிரினங்களின் உணவும் கூட பாலுறவால் உருவானதே. தாவர உணவுகள்

மகரந்தச் சேர்க்கையால் விளைந்தவை. மாமிசமும், பாலும் பாலுறவின்

நேரிடையான விளை பொருட்கள், ஆகவே அந்த உணவுப் பொருட்களை

உண்ணும் போது, உண்பவர்கள் உடலில் பாலுணர்வு உருவாகியே தீரும்.

மேலும், நகச்சாயம் பூசி விரல்களை அலங்கரிப்பது முதல், தலையில் பூ

வைப்பது ஈறாக, கவர்ச்சியான ஆடையைத் தேர்ந்தெடுப்பது வரையிலான

மிகையலங்காரம் அனைத்துக்கும் காரணம் பாலின்ப ஆர்வம். ஒரு பெண்

மனைவியாக மாறிய உடனே அந்தப் பாலின்ப ஆர்வம் அற்றுப் போகாது.

அதோடு, சின்னத் திரை, திரைப்பட காட்சிகள், வசனங்கள், பாடல்கள்,

வார, மாத இதழ்கள், காதல் நவினங்கள், தினசரிகளில் வரக் கூடிய கள்ளக்

காதல் விவகாரங்கள், அண்டை அயலில் நடைபெறும் திரை மறைவுக்
காரியங்கள், நண்பனின் மோகனப் புன்னகை, பயன் படுத்திக் கொள்ள.
விரும்பும் ஆணின் பசப்பல்கள் எனப் பல்வேறு தாக்கங்களால், பெண்களின்
பாலுணர்வு தூண்டப் படுகிறது.

பெண்ணின் மடந்தைப் பருவம் தாள் கன்னிக் காதல் உருவாகும் பருவம்.

கவனம் தவறினால், கல்வியை நாசப் படுத்திக் கொள்ளும் ஆபத்து மடந்தைக்கு
உண்டு. அதே போல பெண்ணின் பேரிளம் பருவம் இரண்டாம் காதல்
உருவாகும் பருவம், இதை இரண்டாம் இளமை என்று கூறுவர். பதினெட்டு
வயது ஆணுக்குரிய ஆர்வமும், துணிச்சலும் பேரிளம் பெண்களுக்கு
இருக்கும் என உலகப் புகழ் பெற்ற ஒரு ஆய்வாளர் தன் நூலில் தெரிவித்
திருக்கிறார்.

மேலும், பாலுணர்வை உருவாக்கக் கூடிய வேதி பெண்ணின் உடலிலும்
சுரக்கிறது. அதோடு, கருமுட்டையின் பருவ காலமான மாதவிடாய்க்
காலத்தின் பத்தாம் நாள் முதல் பதினாறாம் நாள் வரை பெண்ணின் காமம்
தன்னுணர்வின்றி பெருமளவில் அதிகரிக்கும். ஆணின் காமத்தைக் கூடத்
தோற்கடிக்கும் அளவிற்குத் தறிகெட்டுக் கிளம்பி விடும் என்று ஒரு ஆய்வாளர்
கூறியிருக்கிறார்.

அதாவது அந்த நேரத்தில் அடையாளமே தெரியாத ஆனுடன் கூட பெண்
இணை சேர்ந்து விடுவதாகவும், அதன் பின் எவ்வாறு இது நிகழ்ந்தது என அந்தப்
பெண்ணே குழம்பித் தவிப்பதாகவும் அவர் கூறுகிறார்.

காமம் தணிக்கப்படாத போது ஒரு சராசரி மனிதனின் சிந்தனை மிருக
சிந்தனையாக மாறத் தொடங்கும். இந்தத் தகவல் பெண்ணுக்கும் பொருந்தும்.

மேலும், இயற்கையான உணர்வுகளிலேயே மிகவும் சக்தி வாய்ந்ததான காமம்

தணிக்கப்படாத போது, மனிதப் பிறவியின் எண்ணங்கள் நச்சுத்

தன்மையுடையதாக மாறும். அதனால், மனநிலை சீற்றமுடையதாக மாறும்.

சிந்தனை எதிர் மறையாகும். இந்த உண்மையும் பெண்ணுக்குப் பொருந்தும்,

மேலும், பெண் என்பவள் மரக்கட்டை அல்ல, உணர்வுகளும்,

உணர்ச்சிகளும் கொண்ட ஒரு மனித உயிரினமே, இந்தக் கருத்தில் எவ்வித

ஐயமும் வேண்டாம். ஆகவே என் மனைவிக்குப் பாலுணர்வு குறைவு என்று

சொல்வது மகா அபத்தம். இப்படிச் சொல்பவர்களின் மனைவி தான்

பெரும்பாலும் கள்ளக் காதல் என்கிற படுகுழியில் விழுந்து விடுகிறாள்.

“உவக்காண்எம் காதலர் செல்வார் இவக்காண்என் மேனி பசப்டஉர் வது.”

என் காதலன் பிரிந்து செல்கிறான். உடனே என் உடல் நிறம் மாறி வெளிறிப்

போகிறது. என் ஏக்கத்தைப் பறைசாற்றும் இந்தப் பசலை நிறத்திற்கு

இவ்வளவு அவசரமா? என்று ஒரு பெண் திருக்குறள் வாயிலாகப் புலம்புகிறாள்.

ஆகவே, ஒவ்வொரு பெண்ணுக்கும் பாலுணர்வு உண்டு, பெரும்பாலான

பெண்களின் காமம் தாம்பத்ய வாழ்வில் தணிக்கப் படுவதில்லை. அவ்வாறு,

போகப் பொருளாக மட்டுமே பயன்படுத்தப் பட்ட பின், தணிக்கப்படாத

காமத்தோடு உறங்கச் சென்ற காரணத்தால் தான், தன்னுணர்வற்ற

நிலையிலே கணவனின் பரம விரோதியாக மனைவி மாறிப் போகிறாள். அதன்

காரணமாகவே கணவன் பழியெடுக்கப் படுகிறான்.

அவனை நேரிடையாகத் தாக்க முடியாத காலத்தில் மறைமுகமான

வழிகளிலும், நாட்படும் போது சாத்தியமுள்ள அனைத்து வழிகளிலும்

மனைவியின் சீற்றம் வெளிப் படத் தொடங்குகிறது, தணிக்கப் படாத காமத்தால்

உருவாகும் சீற்றத்தை வெளிப்படுத்த மனைவிக்கு வாய்ப்பை அமையாத போது,

வலுக்கட்டாயமாகக் கணவனோடு பேச்சுக் கொடுத்து, சீற்றத்திற்குரிய

சூழல்களை உருவாக்குகிறாள்.

கணவனோடு உருவாக்க முடியவில்லையா? மாமியாரோடு

உருவாக்குவாள். மாமியார் அருகிலேயே இல்லையா? இருக்கவே இருக்கிறது.

குழந்தை, எவ்விதப் பாதுகாப்பும் இல்லாத, தப்பி ஓடவும் முடியாத ஒரே

உயிரினமான குழந்தையை வதைப்பதன் மூலம் தனது சீற்றத்தை

வெளிப்படுத்துவதற்குரிய சூழலை உருவாக்குவாள்.

கணவனோடும், கணவனைச் சேர்ந்தவர்களோடும், குழந்தையோடும்,

இவர்களைத் தவிர இன்னும் செல்லுபடியாகக் கூடிய இடங்களிலும், தனது

சீற்றத்தை வெளிப்படுத்துவதற்குரிய சூழல்களை உருவாக்கும் முயற்சி,

தணிக்கப் படாத காமத்தோடு உறங்கச் சென்ற மனைவியால், சுய உணர்வின்றி

மேற்கொள்ளப் படுகிறது. மேற்கண்ட தகவலை விஞ்ஞான பூர்வமாக

நிரூபிக்க முடியும்.

## **5.** தணிக்கப் படாத காமத்தின் விளைவாய்
## உருவாகும் காழ்ப்புணர்ச்சி
## மனமே கடவுள்

மனிதப் பிறவிகள் அனைவருமே ஆழ்மனதின் பொம்மைகள்

மனிதனுக்கு இரண்டு மனங்கள் உண்டு. ஒன்று ஆழ்மனம். இனி யொன்று

மேல்மனம். முதல் மனிதன் தோன்றிய போது அவனிடம் இருந்த மனம் தான்

ஆழ்மனம், அது தான் ஒவ்வொரு தலை முறையில் வாழ்ந்த முன்னோர்களின்

அனுபவத்தையும் தன்னுடன் சேர்த்துக் கொண்டு, வழி வழியாகக்

கடத்தப் பட்டு
இன்றைய மனிதன் வரை வந்திருக்கிறது.

ஆகவே, மனித குலம் தோன்றி எவ்வளவு காலமாயிற்றோ அவ்வளவு
வயதுடையது ஆழ்மனம், அதனால், மனித வரலாறு முழுவதையும்
அனுபவங்களாகத் தன்னுள் வைத்திருப்பது ஆழ்மனம், ஆகவே, பிறப்பும்
இறப்பும் அற்றது ஆழ்மனம்.

அந்த ஆழ்மனம் தான், வினாடி நேரம் கூட ஓய்வே எடுக்காமல் மனித
உடலை இயக்கிக் கொண்டிருக்கும் ஒரு மகா சக்தி. அதாவது, உயிர் உருவாகும்
போது அதனுடன் சேர்ந்தே வந்த ஆழ்மனம் தான் மனிதப் பிறவியின் ஒவ்வொரு
செயலையும் நிகழ்த்திக் கொண்டிருக்கிறது.

மேற்கண்ட தகவலை கீழ்க்கண்ட உதாரணம் மூலம் புரிந்து கொள்ளலாம்.

பிரசவம் நிகழ்கிறது. குழந்தை பிறக்கிறது. கருவறையிலிருந்து வெளியேறியதும்,
அந்தக் குழந்தை செய்கிற முதல் வேலை எது? அழத் தொடங்கும் என்று
சொல்வார்கள். ஆனால், அழத் தொடங்கும் முன், குழந்தை சுவாசிக்கத்
தொடங்குகிறது.

அதாவது, கருவறைக்குள் நிறைந்துள்ள திரவத்தில் நீந்தியபடி வளரும்
குழந்தையால் நாசி வழியாக சுவாசிக்க முடியாது. ஆனால், கருவறையை
விட்டு வெளி யேறியதும் சுவாசிக்கத் தொடங்கா விட்டால், குழந்தை
இறந்து விடும். ஆகவே பிறந்த உடனே முதல் வேலையாக குழந்தை
சுவாசிக்கத் தொடங்குகிறது.

இவ்வாறு, தாயின் வயிற்றிலிருந்து வெளியேறியவுடனே சுவாசிக்கத்
தொடங்க வேண்டும். இல்லாவிட்டால் இறந்து விடுவோம் என குழந்தைக்கு
எப்படித் தெரியும்? யார் சொல்லிக் கொடுத்தது? தாயா? தகப்பனா?
மருத்துவரா? நிச்சயமாக நமக்குத் தெரிந்த யாரும் சொல்லிக் கொடுக்கவில்லை.

அப்படியெனில், யாருமே சொல்லிக் கொடுக்காமலே குழந்தை சுவாசிக்கத்

தொடங்கி விட்டதா? இல்லை. நிச்சயமாக இல்லை. எங்கிருந்தோ வந்த

உத்தரவுப் படி தான் குழந்தை சுவாசிக்கத் தொடங்குகிறது. அந்த உத்தரவை

இட்டது ஆழ்மனம்,

சுவாசிக்கத் தொடங்கிய உடனே குழந்தை அழத் தொடங்குகிறது

பத்து மாத காலம் சுற்றிலும் நீரால் சூழப்பட்டு, மிகவும் பாதுகாப்பாக, வெது

வெதுப்பாக, கும்மிருளில் குழந்தை வாழ்ந்து கொண்டிருந்தது. ஆனால்

வெளியில் வந்தவுடனே சுற்றிலும் அணைத்துப் பிடித்திருந்த பாதுகாப்பு,

அகன்று விட்டது. கும்மிருள் விலகி விட்டது. சூடு குறைந்து விட்டது. இதயத்

துடிப்பு என்கிற தாயின் இசையைக் கேட்க முடியவில்லை. வேறு வகையான

சத்தங்கள் கேட்கின்றன,

அதனால், குழந்தை ஒரு பாதுகாப்பின்மையை உணர்கிறது.

அசௌகர்யத்தை அனுபவிக்கிறது. தனது நிலைமையை ஏற்றுக் கொள்ளாமல்

எதிர்ச் செயல் புரியும் விதமாக, அழத் தொடங்குகிறது. இவ்வாறு, தன் எதிர்ப்பைப்

பிறருக்கு உணர்த்தும் வகையில் அழத் தொடங்கும் படி, குழந்தையின் ஆழ்மனம்

தான் தூண்டி விடுகிறது.

இதையடுத்து, குழந்தையை ஒரு மலரைத் தீண்டுவது போல் காடுத்து,

மார்பை கையால் தாங்கிப் பிடித்தபடி, அதன் முனைப் பகுதியான காம்பை

மட்டும் குழந்தையின் வாயில் தாய் வைக்கிறாள். சில நேரங்களில்

சுவையறிவதற்காகப்பாலைச் சற்றே பிய்ச்சி விடுவது வரை நடக்கிறது. இது வரை.

மட்டுமே ஒரு தாயால் செய்ய முடியும்.

இதற்கும் மேல் காம்புகளை வாயால் கவ்வி உறிஞ்சும் படி குழந்தைக்கு

யாருமே உத்தரவிட முடியாது. எனினும் அது உறிஞ்சத் தொடங்கி விடுகிறது. இதை

நடத்துவது குழந்தையின் ஆழ்மனம். குழந்தை உயிர் வாழ வேண்டும்

உணவு தேவை. உணவைப் பெற வேண்டுமானால் அது உறிஞ்சியாக வேண்டும்,

ஆகவே உறிஞ்சச் செய்ய வேண்டும் எனக் குழந்தையை இயக்கியது குழந்தையின்

ஆழ்மனம்.

இதையடுத்து, ஒவ்வொரு முறை பசி ஏற்படும் போதும், அழுகையின்

மூலம் குழந்தை தெரிவிக்கிறது. பசிக்கும் போது, அழுது தெரிவிக்கக்

குழந்தைக்குச் சொல்லிக் கொடுத்தது யார்? பசி ஏற்படுகிறது. அந்த வலி

காரணமாக குழந்தை அழுகிறது என்று கூறலாம். எனினும், வயிறு வலித்தால்

அழுது தெரிவிக்க வேண்டும் என குழந்தைக்குச் சொல்லிக் கொடுத்தது

யார்? வேறு எந்த உயிரினமும் பசியுணர்வை இவ்வளவு வெளிப்படையாகத்

தெரிவிப்பதில்லையே எனக் கேட்டால், அதற்கான பதில் தான் மரபணு.

அல்லது ஆழ்மனம்.

இவ்வாறு பிறவியிலேயே மனித உடல் பெற்றிருக்கக் கூடிய ஒரு மகாசக்தி

தான் ஆழ்மனம், இதன் இயக்கத்தின் படி தான் மனிதர்கள் இயங்குகிறார்கள்,

ஆழ்மனதிற்கு விரோதமாக எந்தவொரு மனிதப் பிறவியாலும் இயங்க முடியாது.

உதாரணமாக, சுவாசம், இதயத் துடிப்பு, இரத்த ஓட்டம், பசியுணர்வு,

உணவுச் செரிமானம், சத்துக்களைப் பிரித்தெடுத்த பின் கழிவுகளை

வெளியேற்றுதல், அந்நியர் எவரேனும் உடலுக்குள் நுழைந்து விட்டால்,

அவர்களைப்பாரிட்டு அழிக்கும் இராணுவம், அதிரடிப்படை, தற்கொலைப் படை

போன்ற பாதுகாப்புத் துறையை நிர்வகித்தல், ஓய்விற்கான உறக்க உணர்வை

உருவாக்குதல், உறங்கும் போது ஏதேனும் ஆபத்து ஏற்பட்டால் உடனே

விழித்தெழுந்து ஓடித் தப்பிக்கச் செய்தல், பாலுணர்வு எதிர்பாராத அபாயங்களின்

போது உடலைக் காப்பாற்றும் பொறுப்பை எடுத்துக் கொள்ளுதல், முடிவுகள்

எடுக்கும் போது தன் பல்லாயிரம் ஆண்டு கால அனுபவத்தை மனிதனுக்கு

வழங்குதல் என ஆயிரக்கணக்கான பணிகளை ஆழ்மனம் தான் ஓய்வொழிவின்றி

செய்து கொண்டிருக்கிறது.

ஆழ்மனதால் இயக்கப் படுகிற ஆயிரக் கணக்கான உடல் இயக்கங்களை

எந்த மனிதனாலும் நிறுத்த முடியாது. மாற்றியமைக்க முடியாது. திட்டமிட்டு

வழி நடத்த முடியாது. அதிக பட்சமாகச் சற்றே கெடுக்கலாம். அதுவும்

தற்காலிகமாக மட்டுமே முடியும்.

உதாரணமாக ஆழ்மனம் பசியுணர்வை உருவாக்குகிறது. குறிப்பிட்ட நேரம்

வரை பசியுணர்வை உதாசினப் படுத்த முடியும். அதே போல, உடலிலுள்ள.

கழிவுகளை அகற்ற ஆழ்மனம் விரும்புகிறது. குறிப்பிட்ட நேரம் வரை அந்த

உணர்வைக் கட்டுப் படுத்த முடியும். இது போல் ஆழ் மனதின் ஒவ்வொரு

இயக்கத்தையும் குறிப்பிட்ட காலம் வரை மனிதனால் கட்டுப்படுத்த முடியும்.

எல்லை மீறிக் கட்டுப்படுத்த முயன்றால், அது காட்டாற்று வெள்ளமாய்ச்

சீறிப்பாய்ந்து தன் இயக்கத்தைத் தொடங்கி விடும். மனிதனின் உடலில்

நிகழ்ந்து கொண்டிருக்கும் பல செயல்கள் மனிதப் பிறவியின் கட்டுப்பாட்டிற்கு

அப்பாற்பட்டவை,

இந்த விநாடியே கூட இதைப் பற்றித் தெரிந்து கொள்ளலாம். சுவாசம்

ஆழ்மனதால் இயக்கப்படும் இயக்கம், நிறுத்திப் பாருங்கள். ஒரு கட்டத்திற்கு

மேல் நிறுத்த முடியாது. ஆழ்மனம் அனுமதிக்காது. ஆழ் மனதிற்கு எதிராக

எந்த மனிதப் பிறவியாலும் இயங்க முடியாது, மனிதனின் நடவடிக்கைகளில்

தொன்மணூறு சதவீதத்திற்கும் மேலானவை ஆழ்மனதால் தான் நடத்தப்

படுகின்றன. இதை ஒரு சமகால நிகழ்ச்சியின் வாயிலாகப் புரிந்து கொள்ளலாம்.

ஆழ்மனதின் சாகசங்கள்

தமிழ் நாட்டின் முதலமைச்சர் வேறு மாநிலத்தில்) கைது செய்யப்பட்டார்.

இந்தச் செய்தி மாநிலமெங்கும் பரவுகிறது. அவரைத் தெய்வமாகவே மதிக்கத்

கூடிய கட்சித் தொண்டர்கள் இருக்கிறார்கள். அவர்கள் கதறுகிறார்கள், அந்தக்

கதறலோடே ஒரு காரை எடுத்துக் கொடிக்காடு கோவையிலிருந்து பெங்களூரு

நோக்கிப் புறப்படுகிறார்கள்,

ஏதேதோ பேசுகிறார்கள், கடவுளுக்குக் கண்ணில்லை என்று திட்டுகிறார்கள்.

நீதித்துறை பட்ட அதிகார மையங்களில் உள்ள அனைவரையும் எக்கிறார்கள்,

அங்கே பாய் எப்படியெல்லாம் போராட வேண்டும் என்று திட்டமிடுகிறார்கள்.

வெறி பிடித்த மாதிரி பேசிக் கொண்டிருக்கிறார்கள்,

கார் நூற்றி முப்பது கிலோ மீட்டர் வேகத்தில் போய்க் கொண்டிருந்தது.

இந்திய சாலைகளைப் பொறுத்த வரை இது அதிக வேகம். அப்பது வாகனத்தை

இயக்கிக் கொண்டிருந்தவர் தன் நண்பர்களிடம் கேட்டார், எனக்கு மிகவும்

பதற்றமாக இருக்கிறது. சேலத்தில் ஒரு கப் குடித்து விட்டுச் செல்வோமா?

இதைக் கேட்ட காரியிருந்த அனைவரும் ஒரு விநாடி நடுங்கி, அரக்கப்

பாக்கர் காரை நிறுத்தச் சொன்னார்கள், நிறுத்திய பின், அவரைப்

பினாயில் அமர வைத்த பின் சொன்னார்கள். நாம் சேலத்தைக் கடத்து

இரண்டு மணி நேரமாகி விட்டது. இன்னும் பத்தே நிமிடங்களில் நாம்

பெங்களூருக்குள் நுழையப் போகிறோம்.

அதன்பிறகு தான் அந்த மனிதர் சுற்றுமுற்றும் பார்த்தார். அவர்கள்

சொன்னது போல் கார் பெங்களூருக்குள் நுழைந்து கொண்டிருந்தது.

எத்தனையோ வார்களையும் குறுக்குச் சாலைகளையும், சுங்கச்

சாவடிகளையும், பாலங்களையும், ஏராளமான வாகனங்களையும், இன்றும் மலைப்

பகுதியையும் கூட கார் கடந்து வந்திருந்தது. ஆனால் இவற்றைக் கடந்த நினைவே

இல்லாத ஒரு மயக்க நிலையில் ஓட்டுநர் இருந்திருக்கிறார்.

காரின் வேகமோ மணிக்கு நூற்றிமுப்பது கிலோமீட்டர். ஆனால் எவ்வித

விபத்துமின்றி நான்கே மணி நேரத்தில் கார் முன்னூறு கிலோ மீட்டர்

தூரத்தைக் கடந்திருந்தது. அப்படியானால், கோவையிலிருந்து ஒசூரைக்

கடக்கும் வரை காரை இயக்கிக் கொண்டிருந்தது யார்? அது தான்

அவரது.

ஆழ்மனம்.

அதாவது மனிதன் உணர்ச்சிவயப்பட்ட நிலையில் இருக்கும் போது

மேல்மனம் ஓடிப்போய் ஒளிந்து கொள்ளும். மேல்மாம் தப்பித்து ஓடிவிடும்

போது ஆழ்மனம் தாளாகப் பொறுப்பெடுத்துக் கொள்ளும்.

ஆழ்மனம் தவறு செய்யாது. அன்றைய தினம் அவர்களுக்கிருந்த

பதற்றத்தில் மேல்மனம் மட்டும் வாகனத்தை இயக்கியிருக்குமானால்

நிச்சயமாக பெரிய விபத்து நடந்திருக்கும். ஆனால் ஆழ்மனதின் கட்டுப்பாட்டில்,

அந்த ஓட்டுநர் இருந்ததால், விபத்தெதுவும் நிகழவில்லை.

ஒவ்வொரு ஓட்டுநருக்கும் மேற்கண்ட அனுபவம் ஏற்பட்டிருக்கக் கூடும்.

இது தான் ஆழ்மனதால் ஒரு நபர் இயக்கப்படுதல், மனிதர்களின் தொண்ணூறு

சதவீத செயல்கள் இத்தகைய ஆழ்மனதின் இயக்கத்தில் தான் நிகழ்ந்து

கொண்டிருக்கின்றன. இதை தான் தள்னுணர்வற்ற நிலையில் செயல் படுதல்

என்று கூறுகிறார்கள்,

ஆழ்மனம் அச்சமற்றது. வெட்கமற்றது. ஒரு செயலில் ஆழ்மளம் இறங்கி

விட்டால் அங்கே அச்சம், வெட்கம் போன்ற மனித உணர்ச்சிகள் செத்துப்

போய் விடும், அதே போல், பழியெடுக்க முடிவெடுத்து விட்டால், ஆழ்மனம் ஒரு

போதும் கருணை காட்டுவதில்லை.)

குடிசைப் பகுதியில் நடந்த சம்பவம் இது. குடிசையின் பின்புறமுள்ள

மறைவிடத்திலே தாய் குளித்துக் கொண்டிருக்கிறாள். அவளுடைய குழந்தை

குடிசைக்கு அருகில் விளையாடிக் கொண்டிருக்கிறது. அப்போது அங்கே வந்த

நாய்களின் மீது அந்தக் குழந்தை கற்களை வீசியிருக்கிறது. அதனால்

வெகுண்டெழுந்த நாய்கள் பாதுகாப்பின்றி விளையாடிக் கொண்டிருந்த

குழந்தையைக் கடிக்கத் தொடங்கி விட்டன. வெளியூர் நாயைக் கும்பலாம்

சேர்ந்து அடிப்பதைப் போலக் கடித்துக் குதறத் துவங்கி விட்டன.

தன்னுடைய குழந்தையின் அலறலைக் கேட்டு, எட்டிப் பார்த்த தாய்,

கற்காலக் பெண்ணைப் பலப்புயல் வேகத்தில் ஓடி வருகிறாள். கூச்சலிட்டது,

அந்த நாய்களின் மத்தியில் நுழைகிறாள். தன் கைக்குக் கிடைத்த நாயின்

காலைப் பிடித்துத் தூக்கிச் சுழற்றி, பத்தடி தூரம் தள்ளி வீசியெறிகிறாள்,

அவாயும் நாய்கள் கடிக்கின்றன,

பெண்கள் பேய்த்தனமான அலறலைக் கேட்டு அண்டை அயலார் ஆடி

வருகின்றனர். நிலைமையைக் கண்ட அடுத்த வினாடி யே அவர்களும் வீறு

கொாடெழுந்து, கைக்குக் கிடைத்த ஆயுதங்களைக் கொடு நாய்களை

அடித்து விரட்டுகின்றனர். அப்போது நாய்கள் குதறிய தன் குழந்தையை

எடுத்து அணைத்தபடி அந்தத் தாய் நிற்கிறாள். அவளுடைய உடலிலும் பலர்

இடங்களில் காயங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அங்கே கூடியிருந்த ஆளகளும்

அதைப் பார்க்கிறார்கள்.

ஆனால் ஒரு பெண் தான் ஓடிப்போய் ஒரு சேலையை எடுத்து வந்து

அந்தத் தாயின் மீது போர்த்தினாள். அது வரை அந்தத் தாய் முழு நிர்வாணமாக

நின்று கொண்டிருந்ததை அவளும் சரி, அவளைச் சுற்றியிருந்த ஆண்களும் சரி,

உணரவேயில்லை.

ஆழ்மனம் ஒரு செயலில் இறங்கி விட்டால், அதில் அடையக் கூடிய

வெற்றியைத் தவிர வேறெதையும் பார்க்காது. சூழல்களை கண்டோ,

ஆபத்துக்களை எண்ணியோ அச்சமடையாது. வெட்கமும் கொள்ளாது.

தாயையும் குழந்தையையும் மருத்துவ மனையில் அனுமதித்து விட்டு வந்த

ஆண்கள் ஒன்று கூடினர். ஆளுக்கொரு ஆயுதத்தை எடுத்துக் கொண்டனர்.

குழந்தையைக் குதறிய ஒவ்வொரு நாயையும், தங்கள் பகுதியைச் சேர்ந்தவையாக

இருந்த போதிலும், தங்களை நோக்கி வாலாட்டிய படி வந்த நிலையிலும்,

கடுகளவும் இரக்கமின்றி அடித்தே கொன்றனர். ஏனெனில், ஆழ்மனம்

பழியெடுக்க முடிவெடுத்து விட்டால், இரக்கம், கருணை போன்ற உணர்ச்சிகள்

அங்கே செத்துப் போய் விடும்,

ஆழ்மனம் தான் இயக்குனர்

ஆழ் மனம் தான் இயக்குனர். ஆழ் மனதின் இயக்கத்தின் படி தான் மனிதப்

பிறவிகள் இயங்குகின்றன. மனிதர்களின் ஒவ்வொரு செயலையும் நிகழ்த்திக்

கொண்டிருப்பது அவர்களுடைய ஆழ்மனமே. ஒரு உதாரணம் மூலமாக

இதையும் புரிந்து கொள்ளலாம்.

ஒரு நபர் தன் வீட்டில் நடைபெறும் விழாவிற்கு அழைப்பு விடுத்துள்ளார்.

அதில் பங்கேற்கலாமா வேண்டாமா? எவ்வகையில் பங்கேற்க வேண்டும்? விழா

நடைபெறும் இடத்திற்கு எதில் பயணித்துச் செல்ல வேண்டும்? பேருந்திலா?

அல்லது இரயிலிலா?

பேருந்தில் எந்த இருக்கையில் அமர வேண்டும்? யாருடைய அருகாமையில்

அமர வேண்டும்? யாருடன் பேச வேண்டும்? பேருந்து நடத்துனரிடம் எவ்வாறு

நடந்து கொள்ள வேண்டும்? இறங்கும் போது எவ்வாறு இறங்க

வேண்டும்? அருகில் அமர்ந்திருந்த அன்னியரிடம் விடைபெற வேண்டுமா?

தேவையில்லையா?

பேருந்து நிலையத்திலிருந்து விழா நிகழிடத்திற்கு எவ்வாறு செல்வது?

கால்நடையாகவா? நகரப் பேருந்திலா? ஆட்டோவிலா? நிகழிடத்தை

அடைந்தபின் யாரிடம் எப்படிப் பேச வேண்டும்?

ஒவ்வொரு வரையும் எவ்வாறு எதிர்கொள்ள வேண்டும்? என்ன பொருளைப்

பரிசளிக்க வேண்டும்? விருந்தில் யாருடன் அமர்ந்து உணவருந்த வேண்டும்?

எதையெல்லாம் சாப்பிடுவது? எப்போது திரும்புவது? எப்படித் திரும்புவது?

போன்ற அனைத்திலும் மனிதனை இயக்குவது ஆழ்மனம்,

ஆழ்மனதின் வாயிற்காவலன் தான் மேல்மனம்

அப்படியானால் இந்த மேல்மளம் என்பது என்ன? இந்தப் பிறவியில்

மனிதன் பெற்றுள்ள அனுபவ அறிவு தான் மேல்மனம். நம் பெயர் என்ன?

பெற்றோரின் பெயர் என்ன? பிறந்த ஊரின் பெயர் என்ன? போன்ற தகவல்களை

ஆழ்மனதில் பதிய வைத்தல்.

வீழா எங்கே நடைபெறுகிறது? எத்தனை மணிக்கு விழா துவங்குகிறது?

அது பகலா? இரவா? போன்ற தகவல்களைப் பராமரித்தல் மற்றும் ஆழ்

மனதிற்குள் நுழைத்து விடுதல் மட்டுமே அதனுடைய பணி. இன்னும் தெளிவாகச்

சொல்வதென்றால், நீண்ட காலமாக அறிமுகமுள்ள ஒரு நபர் பேருந்து

நிலையத்தில் நின்றிருக்கிறார். அதோ தெரிந்தவர் நின்றிருக்கிறார் என்று சொல்வது

மட்டுமே மேல்மனம்.

அந்த நபரிடம் செல்ல வேண்டுமா? பேச வேண்டுமா? அவரைக் கட்டித்

தழுவ வேண்டுமா? அல்லது அவருடைய முகத்தில் காறி உமிழ வேண்டுமா?

அல்லது அவருடைய கண்ணிலேயே படாமல் தப்பித்து ஓடிவிட வேண்டுமா?

என முடிவெடுப்பது ஆழ்மனம்.

எதை வைத்து ஆழ்மனம் இவ்வாறு முடிவெடுக்கிறது என்று பார்த்தால்,

அவ்வப்போது அந்த நபரைப் பற்றி ஆழ்மனதிற்குள் சில கருத்துக்களை இந்த

மேல்மனம் நுழைய விட்டிருக்கிறது. அவ்வாறு நுழைந்த கருத்துக்கள் ஆழ்
மனதில் பதிவாகியிருக்கின்றன. அவ்வாறு பதி வாகியுள்ள தகவல்களின்
அடிப்படையில் ஆழ்மனம் முடிவெடுக்கிறது.

ஆகவே ஆழ்மனதிற்குள் கருத்துக்களை நுழைய விடுவதும். நுழைய விடாமல்)
தடுப்பதும் மட்டுமே மேல்மனதின் ஒரே வேலை. அதாவது, ஆழ்மனதின் வாயிற்
காவலள் தான் மேல்மனம்.

உதாரணமாக, நாளைக் காலை ஐந்து மணிக்கு ஒரு திருமண விழாவில்
கலந்து கொள்ள வேண்டும். ஆகவே நான்கு மணிக்கே விழித்தெழ வேண்டும்
என்று ஒரு நபர் நினைக்கும் போது, மேல் மனம் இந்தத் தகவலை ஆழ்
மனதிற்குள் அனுப்பி அது பதிவாகி விடுகிறது. அதனால் பதிவு செய்யப்பட்டுள்ள
தகவலின் படி ஆழ்மனம் காலை நான்கு மணிக்கெல்லாம் உறக்கத்தைக்
கலைத்து விழிப்படையச் செய்து விடுகிறது.

அதே நடர் நாளை காலை ஐந்து மணிக்கெல்லாம் ஒரு இலட்சம் கோடி
ரூபாய் பணத்தை தன் விட்டு அலமாரிக்குள் பார்க்க வேண்டும் என்று மேல்
மனதில் நினைக்கிறான். இந்த எண்ணத்தை ஆழ்மனதிற்குள் மேல்மனம்
அனுப்பாது.

ஏனெனில் தன்னால் நம்ப முடியாத எந்தத் தகவலையும், தன்னுடைய
அனுபவத்திற்கேற்ப அலசி ஆராயாமல் ஆழ்மனதிற்குள் நுழைய மேல்மனம்

அனுமதிப்பதில்லை, மனிதனோடு எதிர்வாதம் செய்து அவனுடைய

எண்ணங்களை நிராகரித்து விடும்.

உனக்கு அவ்வளவு பணம் எதற்கு? அதை எப்படி ஒரே நாளில் சம்பாதிக்க

முடியும்? நீ எங்கே? இலட்சம் கோடி ரூபாய் எங்கே போ போ. போய் நடக்கிற

வேலையைப் பார். எங்கே போய் சம்பாதிப்பது? என்றெல்லாம் எதிர்க் கேள்விகள்

கேட்டு வாதாடி, அந்த எண்ணத்தை மேல்மனம் கொலை செய்து விடும்.

ஆழ்மனதிற்குள் நுழைய விடாது.

எதை ஆழ்மனதிற்குள் நுழைய விட வேண்டும்? எதை விடக் கூடாது?

என்பதை மேமனம் நான் தீர்மானிக்கும். இந்த விவகாரத்தில் ஆழ்மனம்

தலையிடாது.

மேல் மனம் என்பது இந்தப் பிறவியில் பெற்றுள்ள அறுபவ அறிவு. மேல்

மனம் சொல்வதைத் தான் ஆழ் மனம் நம்பும். தானாக ஒரு முடிவெடுக்காது.

எதையும் தானாக தனக்குள் இழுத்துப் போட்டுக் கொள்ளாது. அதனால், இலட்சம்

கோடி ரூபாய் பற்றிய தகவல் ஆழ்மனதைச் சென்றடையாமல் போய்விடும்,

ஆழ்மனதால் முடியாத காரியம் ஈரேழு உலகிலும் எதுவுமே கிடையாது.

ஆழ்மனதிற்குத் தெரியாதது எதுவுமே இல்லை. பிரபஞ்சத்திற்குத்

தெரிந்ததெல்லாம் ஆழ்மனதிற்கும் தெரியும். பிரபஞ்சமும் ஆழ் மனமும்

வெவ்வேறானவை அல்ல, இரண்டும் ஒன்றே. ஆகவே பிரபஞ்சத்தால்

முடிந்ததெல்லாம் ஆழ் மனதாலும் முடியும். ஆழ்மனம் முடிவெடுத்து

விட்டால்,

அதைத் தடுத்து நிறுத்த எந்தச் சக்தியாலும் முடியாது.

உதாரணமாக நான் தான் இந்தியாவின் பிரதமர் என்கிற கருத்தை ஒரு நபர்

தன் ஆழ்மனதில் பதித்து விட்டால் போதும். அவர் பிரதமராவதை யாராலும் தடுக்க

முடியாது. அவரது ஆழ்மனம் அவரைப் பிரதமராக்கியே தீரும். அந்த சக்தி

ஆழ்மனதிற்கு உண்டு. அதை நிரூபிக்க நூற்றுக் கணக்கான நூல்கள் உள்ளன.

ஆனால் ஆழ்மனதின் வாயிற்காவலனான மேல்மனம், பிரதமராக விரும்பும்

கருத்தை ஆழ்மனதிற்குள் நுழைய அனுமதிக்க வேண்டும். மேல்மனம்

அனுமதிக்காத வரை பிரதமர் அலுவலக காவலனாகக் கூட ஆழ்மனதால்

மனிதனை உருவாக்க முடியாது.

ஆழ்மனம் தான் இயக்குனர். ஆழ்மனதின் உத்தரவுப்படி தான் ஒவ்வொரு

மனிதனும் இயங்குகிறான், சுயமாகச் செயல்படும் சக்தி மனிதப் பிறவிக்குக்

கிடையாது, அந்த சக்தியைப் பெற்றுள்ள மனிதரைத் தான் நாம் ஞானி

என்றழைக்கிறோம்.

மேல்மனம் என்பது இந்தப் பிறவியில் பெற்றுள்ள அனுபவ அறிவு: இது தான்

ஆழ்மனதிற்குள் நுழைய அனுமதிக்கிறானோ அவை தான் ஆழ் மனதில்

ஆழ்மனதின் வாயில் காவலன். இந்த காவலன் எந்தக் கருத்துக்களை

பதிவாகின்றன,

அதன் பின், அப்பதிவுகளின் படி ஆழ்மனம் மனிதனை இயக்குகிறது.

மனிதன் உயிருள்ள இயந்திரமாக இயங்குகிறான். செயல்கள் நடைபெறுகின்றன.

இதில் பாலின வேறுபாடு இல்லை.

மேல்மனம் சோர்ந்து, ஏமாந்து போகும் வேளை.

ஆனால், இந்த வாயில் காவலனான மேல்மனம் சோர்ந்து போகும் வேளை,

அயர்ந்து போகும் வேளை, ஏமாந்து போகும் வேளைகளில் மனிதனால் சிந்திக்கப்

படும் கருத்துக்கள் ஆழ்மனதிற்குள் நேரிடையாக நுழைந்து அங்கே பதிவாகி

விடும்

கருத்துக்கள் எப்படிப்பட்டவை என்பதைப் பற்றியோ, மேல்மனம் என்கிற

வயிற்காவலன் ஏமாந்திருந்த நேரத்தில் தனக்குள் திருட்டுத்தனமாக நுழைந்து.

விட்ட கருத்துக்கள் என்பதைப் பற்றியோ, ஆழ்மனம் சீர்தூக்கிப் பார்க்காது.

தனக்குள் எந்த வகையில் பதிவு செய்யப்பட்டிருந்தாலும் சரி, அந்தப்பதிவுகளின்

படி மனிதனை இயக்கத் தொடங்கி விடும்.

இப்போது தம்பதியரின் பிரச்சினைக்கு வருவோம். குடும்ப விவகாரச் சண்டை

நடைபெறும் வேளை ஆழ்மனதில் மிக எளிதாகக் கருத்துக்கள் பதிந்து விடுகிற

வேளை,

குடும்ப விவகாரச் சண்டையின் போதும் சரி, சண்டை முடிந்து தம்பதியர்

உறங்கச் செல்லும் போதும் சரி, அவர்களுடைய ஆழ்மனதில் கருத்துக்கள்

பதிவாகிற காரியத்தை தடுத்து நிறுத்தும் சக்தி இந்த உலகிலேயே எதுவும் இல்லை.

இரவு பதினோரு மணிக்கு கணவன் கேட்கிறான். மனைவி உறுதியாக

மறுத்து விட்டாள். அதனால் கணவனால் உறங்க முடியவில்லை. காம்

வேட்கையால் உடல் தகிக்கிறது. தவிக்கிறான். தண்ணீர் குடிக்கிறான். மன

அழுத்தம் கூடுகிறது. தன்னுணர்வின்றிச் சிந்தனையோட்டம் நடைபெறத்

தொடங்குகிறது.

தன்னுணர்வின்றிச் சிந்திக்கப் படுகின்ற ஒவ்வொரு சிந்தனையும்

ஆழ்மனதிற்குள் நுழையக் கூடியது. இதைத் தடுத்து நிறுத்தும் சக்தி

யாருக்குமே இல்லை.

முதலாவதாக, காமம் என்பது ஆழ்மனம் சார்ந்தது. மேல்மனதிற்கும்

காமத்திற்கும் தொடர்பில்லை. இன்னும் தெளிவாகச் சொல்வதென்றால், மேல்

மனதின் தற்காலிக மரணம் தான் காமத்தின் மூலம் பெறப்படுகின்ற உச்சகட்ட

இன்பம். மேல் மனம் சாகும்போது தான் மனித உடலில் பாலின்பம் நிகழும்.

குடும்ப விவகாரச் சண்டைக்கு மூல காரணமான காமம் ஆழ் மனதின்

சொந்தப் பிரச்சினை. ஆகவே ஆழ்மனமே தன் கதவுகளைத் திறந்து கொண்டு

நேரிடையாகக் களத்திற்கு வந்து விடுகிறது.

எப்போதெல்லாம் ஆழ்மனமே களத்திற்கு வந்து விடுகிறதோ

அப்போதெல்லாம் மேல்மனம் அந்த விவகாரத்தில் தலையிடாது. தலைவரே

விழித்துக் கொண்டு விட்டார். ஆகவே நம் காவல் எதற்கு என்று மேல்மனம்

ஒதுங்கிக் கொள்ளும்.

இரண்டாவதாக, ஒரு கருத்தைப் பதிய வைத்து விட்டால்.அதை நிஜமாக்கிக்

காட்டக்கூடிய ஒரு மகாசக்தி தான் ஆழ்மனம். அப்படிப் பட்ட ஆழ்மனதில்,

அவரவர் கருத்தை பதிய வைப்பது தான் கடினம். ஆனால், அடுத்தவர்கள் கருத்து.

எளிதாகப் பதிந்து விடும். ஏனெனில், அடுத்தவர்கள் நம் உணர்ச்சியைக் கிளறி

விடுகிறார்கள்.

குடும்ப விவகாரச் சண்டையின் போது, தம்பதியரின் உணர்ச்சிகள் உட்ச

பட்ச அளவிற்குக் கிளறி விடப் படுகின்றன. உணர்ச்சிகரமான சூழலை மேல்

மனதால் எதிர்கொள்ள முடியாது. அதனால் ஆழ்மனமே பொறுப்பேற்க வேண்டிய

நெருக்கடி ஏற்படும்.

ஆழ்மனமே நேரிடையாகப் பொறுப்பேற்றுக் கொண்டு களத்திற்கு

வரும்போது அதனுடைய கதவுகள் திறந்து கொள்ளும். அதனால் உணர்ச்சி

வயப்பட்ட சூழலில் உருவாக்கப்படும் கருத்துக்கள் ஆழ்மனதிற்குள் நுழைந்து விடும்.

மூன்றாவதாக, பாலின்பப் பஞ்சத்தால் மன அழுத்தத்தோடு

நடைபெறக்கூடிய சிந்தனை உணர்ச்சி வயப்பட்டதாக நடைபெறுகிறது.

உணர்ச்சிகரமான சிந்தனையை மேல் மனதால் எதிர் கொள்ள முடியாது.

அதனால் ஆழ்மனம் பாதுகாவலற்ற நிலையில் இருக்கிறது. எந்தக்

கருத்தையும் தன்னுள் ஏற்கும் நிலையில் ஆழ்மனதின் கதவுகள் காவலின்றி

திறந்து கிடக்கின்றன.

நான்காவதாக, உறங்கப் போவதற்கு சில நிமிடங்களுக்கு முன், தூங்கியும்

தூங்காமற் சுகம் காணும் வேளை வருகிறதே, அந்த நேரம் தான் மேல்மனம் என்கிற

வாயில் காவலன் சோர்ந்து போகின்ற, அயர்ந்து போகின்ற, ஏமாந்து போகின்ற

வேளை. இதை ஆங்கிலத்தில் ஆல்ஃபா நிலை என்று கூறுவார்கள்.

ஆல்ஃபா வேளையில் மேல்மனம் ஏறக்குறைய தூங்கி விடுகிறது. ஆழ்மனம்

தான் தன் கதவுகளைத் திறந்து போட்டபடி, விழித்துக் கொண்டிருக்கிறது.

விழித்துக் கொண்டிருந்தாலும், எல்லையற்ற சக்தியுடையதாக அது இருந்தாலும்,

நல்லது கெட்டது தெரியாத ஒரு அப்பாவியாக ஆழ்மனம் இருக்கிறது.

அதனால் அப்போது சிந்திக்கப்படும் எண்ணங்களை கேள்விகள்

எதுவுமின்றி ஆழ்மனம் ஏற்றுக் கொள்கிறது. அப்போது சிந்திக்கப்படும்

கருத்துக்கள் ஆழ்மனதிற்குள் நுழைந்து விடுகிறது.

ஆழ்மனம் முழு அப்பாவியாக இருக்கும் வேளை.

மீண்டும் ஒருமுறை பார்க்கலாம். காமம் ஆழ் மனதின் சொந்தப் பிரச்சினை.

அதனால் காமம் தொடர்பான பிரச்சினைகளின் போது, ஆழ்மனம் நேரிடையாகக்

களத்திற்கு வந்து விடும். ஆழ்மனமே நேரிடையாகக் களத்திற்கு வரும் போது,

அதனுடைய கதவுகள் தானாகத் திறந்து கொள்ளும். (1)

குடும்ப விவகாரச் சண்டை அடுத்தவரோடு நடைபெறும் சண்டை. ஆகவே

உணர்ச்சி வயப்பட்டதாகத் தான் இருக்கும். உணர்ச்சிகரமான சூழலில் மேல்மனதி

தலையீடு இருக்காது. அதனால் ஆழ்மனம் தன் கதவுகளைத் திறந்து வைத்துக்

கொண்டிருக்கும். (2)

காமம் தணிக்கப் படாத நிலையில் நடைபெறும் சிந்தனை மன

அழுத்தத்தைத் தரக்கூடிய சிந்தனை. ஆகவே அது உணர்ச்சி வயப்பட்டதாகத்

தான் இருக்கும். உணர்ச்சி வயப்பட்ட சிந்தனை நடைபெறும் போது மேல்மனத்

தலையீடு இருக்காது. அதனால் ஆழ்மனம் தன் கதவுகளைத் திறந்து வைத்துக்

கொண்டிருக்கும். (3)

கடைசியாக, உறக்கம் வந்தும் வராமலும் இருக்கின்ற ஆல்ஃஃபா நிலையில்,

மேல்மனம் விழிப்பற்ற நிலையில் இருப்பதால், ஆழ்மனம் காவலற்ற நிலையில்

கதவுகளைத் திறந்து வைத்துக் கொண்டு தான் தான் இருக்கும்.

மேற்கண்ட காரணங்களால், தம்பதியரின் எண்ணங்கள் மிக எளிதாக ஆழ்

மனதிற்குள் நுழையக் கூடிய அத்தனை விதமான வாய்ப்புக்களும் குடும்ப

விவகாரச் சண்டைகளின் போது உருவாகின்றன. அதனால், குடும்ப

விவகாரச்

சண்டையின் போது சிந்திக்கப்படும் ஒவ்வொரு எண்ணமும் எவ்விதத்

தடையுமின்றி ஆழ்மனதிற்குள் நுழைந்து விடக்கூடியவை.

இந்த நேரத்தில் தான் மனைவியைப் பற்றி கணவன் சிந்திக்கத்

தொடங்குகிறான், நன்றி கெட்ட வள்! இவளுக்காக நான் எத்துணை

செய்திருக்கிறேன்! ஆயினும் தர மறுக்கிறாளே! ஏன் இப்படிப் பிடிவாதமாக

மறுக்கிறாள்? வேறு எவனும் இருப்பானோ.? ச்சே, திருமணம் செய்தும்

பிரம்மச்சாரியாகத் தான் வாழ வேண்டுமா? இந்த நரக வாழ்க்கையை எப்படித்தான்

வாழ்வது? பேசாமல் செத்துப் போய் விடலாமா? எந்த வழியில் தற்கொலை செய்து

கொண்டால் வலியில்லாமல் சாக முடியும்? என்றும் இன்னபிறவாகவும், எண்ணிப்

புலம்பிய படியே உறங்கிப் போகிறான்.

அதனால் மனைவிக்கு எதிரான கருத்துக்கள் கணவனுடைய ஆழ்மனதில்

பதிவாகி விடுகிறது. அதன் பின் பதிவு செய்யப்பட்டுள்ள கருத்துக்களின் படி

ஆழ்மனம் அவனை இயக்குகிறது. கணவன் ஒரு இயந்திர மனிதனாய்,

இயங்குகிறான். அந்த இயக்கத்தால் நடைபெறும் செயல்கள் அவனுடைய

மனைவியைப் பாதிப்பவையாக இருக்கின்றன,

இவ்வாறு தான் மனைவியின் மீதான வருத்தமோ, குரோதமோ,

ஆத்திரமோ, கோபமோ கணவனின் ஆழ் மனதில் இடம் பிடிக்கிறது. அதன்

பின் வாய்ப்புக் கிடைக்கின்ற ஒவ்வொரு தருணத்திலும் தன்னுணர்வற்ற

நிலையிலே வெளிப்பட்டு மனைவியைத் துன்புறுத்துகிறது.

மனைவியின் மீது நிரந்தர வெறுப்பு ஏற்படுவதில்லை**.**

இங்கே கவனத்தில் கொள்ள வேண்டிய தகவல் ஒன்று இருக்கிறது.

கணவனின் ஆழ்மனதில் மனைவிக்கு எதிராகப் பதிவாகும் கருத்துக்கள்

நிரந்தரமாகப் பதிந்து விடுவதில்லை,

ஏனெனில், சண்டைகளுக்கு இடையிடையே தம்பதியரிடையே பாலுறவும்

நிகழ்கிறது. அப்போது ஆணுக்குரிய பாலின்பம் நிகழ்ந்து விடுகிறது. அதனால்,

மனைவியின் மீது கணவனின் மனதில் அன்பு உருவாகிறது.

பாலுறவின் போது, ஆழ்மனக் கதவுகள் திறந்திருக்கும். அதனால் அப்போது

சிந்திக்கப் படுகின்ற மனைவியைப் பற்றிய அன்பான எண்ணங்கள் கணவனின்

ஆழ்மனதில் பதிவாகின்றன.

மனைவியின் மீது ஏற்பட்டிருந்த வெறுப்பு நிறைந்த கருத்துக்களின் மீது

அன்பு நிறைந்த கருத்துக்களும் பதிவாகி, முந்தைய கருத்துக்களை மாற்றி

விடுகின்றன, அதனால், அவ்வப்போது பாலுறவு நடைபெற வாய்ப்புள்ள

பட்சத்தில், மனைவியின் மீது கணவனின் ஆழ் மனதில் நிரந்தரமான

வெறுப்புணர்ச்சி ஏற்படுவதில்லை.

கணவனைச் சித்திரவதை செய்கிறது**.**

இப்போது மனைவியின் நிலையைப் பார்க்கலாம் குடும்ப விவகாரச்

சண்டை காமம் காரணமாக நடைபெறக்கூடிய சண்டை. ஆகவே மனைவியின்

ஆழ்மனம் களத்திற்கு வந்து விடுகிறது. (1)

இரண்டு நபர்களுக்கிடையில் நடைபெறக்கூடிய யுத்தம் தான் குடும்ப

விவகாரச் சண்டை. ஆகவே உணர்ச்சி வயப்பட்ட நிலையில் தான் அது

நிகழ்ந்து கொண்டிருக்கும். உணர்ச்சிவயப்பட்ட நிலையில் மனைவி இருக்கும்

போது, ஆழ்மனம் களத்திற்கு வந்து விடும். (2)

போகப் பொருளாகப் பயன்படுத்தப் படுவதன் விளைவாக, உச்ச கட்டப்

பாலின்பம் நிகழாத போதோ, அல்லது நழுவிப் போய் விடும் போதோ,

பெண்ணின் மனதில் அழுத்தத்தோடு கூடிய சிந்தனை நடைபெறுகிறது.

மன அழுத்தத்தோடு நடைபெறும் சிந்தனை உணர்ச்சி வயப்பட்ட

சிந்தனையாகும். உணர்ச்சி வயப்பட்ட சிந்தனை நடைபெறும் போது மனைவியின்

ஆழ்மனம் களத்திற்கு வந்து விடும். (3)

நான்காவதாக, உறங்கச் செல்லும் போது, மனம் ஆல்ஃபா நிலையைக் கடந்து

செல்வது தவிர்க்கவே முடியாதது. அவ்வாறு தூங்கியும் தூங்காமற் சுகம் காணும்

வேளையில் மனைவி இருக்கும் போது சிந்திக்கப்படும் எண்ணங்கள்,

ஆழ்மனதிற்குள் எளிதில் நுழைந்து விடும்.

ஏனெனில் அந்த வேளைதான் மேல்மனம் என்கிற வாயிற்காப்போன் சோர்ந்து

போகிற, ஏமாந்து போகிற வேளையாகும். (4)

மேற்கண்ட நான்கு வகையான வாய்ப்புக்களில் ஒரே ஒரு வாய்ப்புக்

கிடைத்தாலே மனிதனின் எண்ணங்கள் ஆழ்மனதிற்குள் நுழைந்து விடும்.

இந்நிலையில் குடும்ப விவகாரச் சண்டை நடைபெறும் போது ஒரே நேரத்தில்

நான்கு வாய்ப்புக்கள் கிடைக்கின்றன,

அதனால், அப்போது சிந்திக்கப் படுகின்ற எண்ணங்கள் அனைத்தும்

நல்லதோ கெட்டதோ எப்படியிருப்பினும், ஆழ்மனதிற்குள் எளிதில் நுழைந்து

சிம்மாசணமிட்டு அமர்ந்து கொள்கின்றன.

எந்தக் கருத்து ஆழ்மனதிற்குள் நுழைகிறதோ அந்தக் கருத்தின் படி தான்

ஆழ்மனம் மனிதப் பிறவியை இயக்கும். ஒரு இயந்திரம் இயங்குவதைப்

போலத் தன்னுணர்வற்ற நிலையில் தான் மனிதப் பிறவியால் செயல் பட

முடியும்.

ஆழ்மனதிற்குள் பதிந்து விட்ட கருத்துக்களுக்கு எதிராக மனிதப்பிறவியால்

செயல்பட முடியாது. அவ்வாறு செயல் படும் போது, விளைவுகளைப் பற்றி

எவ்வித அச்சமும் மனிதப் பிறவிக்கு இருக்காது.

இது யாராலும் மாற்ற முடியாத உளவியல் விதி. இந்தச் சூழலில் தான்

மனைவியின் சிந்தனை நிகழத் தொடங்குகிறது. தன்னுணர்வற்ற நிலையிலே அது

இவ்வாறு தொடர்கிறது.

சுயநலமி. முட்டாள், கையாலாகாதவன். யாரிடமாவது பேசும் போது பார்க்க

வேண்டுமே! பெரிய வாய்ச் சொல் வீரன்! இவனைக் கட்டி என்ன சுகம் கண்டோம்?

இவனைத் திருமணம் செய்து கொள்ளச் சம்மதித்தது தான் வாழ்வில் நான் செய்த

மிகப் பெரிய மடத்தனம்.

எத்தனை நாட்களுக்கு இப்படிப் பாதி வழியிலேயே முடித்துக்

கொண்டிருப்பது? எதுவுமே தெரியாத இந்த மூடனோடு காலமெல்லாம்

எப்படித்தான் வாழ்வது? குழந்தை வேறு பிறந்து விட்டதே! இவனை விட்டுத்

தொலைக்கவும் முடியாதே!

இவனெல்லாம் எதற்காகத் திருமணம் செய்து கொள்கிறான்? குடும்ப சுகம்

இவனுக்குக் கட்டி வைத்து என் வாழ்க்கையை நாசம் செய்து விட்டார்களே!

யாருக்கு வேண்டும் பணம்?

அளிக்கத் தெரியாத இவனெல்லாம் எவ்வளவு தான் சம்பாதித்து என்ன பயன்?

பாலுறவு இல்லாமலே கூட வாழ்க்கையை உருட்டி விடலாம். ஆனால்

அதற்கும் வழியில்லையே! சும்மாகிடக்கும் சங்கை 20 தி க் கெடுத்து

விடுகிறானே! என்ன தான் செய்வது?

குழந்தைக்காக இவனுடன் வாழ வேண்டியிருக்கிறதே! எப்படித்தான்

தூங்குகிறான் பாரேன். உறக்கத்தைப் பறித்துக் கொண்ட துரோகி. அடுத்த ஒரு

மாதத்திற்கு அருகில் கூட நெருங்க விடக்கூடாது.

அய்யோ அதுவும் முடியாதே! கத்துவானே! கோபித்துக் கொள்வானே!

வேண்டாம் என்றாலும் விடமாட்டேன் என்று அடம் பிடிப்பானே! என்றும் இன்ன

பிறவாகவும் கணவனைச் சபித்தபடியே பின்னிரவில் தன்னையறியாமல் வந்த

உறக்கத்திலே உறங்கிப் போகின்ற நிலையை மனைவி அவ்வப்போது.

எதிர்கொள்கிறாள்.

பெண்ணின் இரண்டாம் இளமைக்காலம்**.**

“ஊடி யவரை உணராமை வாடிய வள்ளி முதலரிந் தற்று” என்பது ஒரு குறள்.

அதாவது, பெண்ணுடன் சண்டையிட்ட பின், அன்றைய தினமே புணர்ந்து மகிழ்விக்கத் தவறுவது, வாடிய பயிரின் அடி மட்டத்திலே வெட்டுவதைப் போன்றது.

என்று வள்ளுவர் கூறுகிறார்.

அது எப்படியெனில், விடிய விடிய அந்தச் சண்டையைப் பற்றியே மனம்

எண்ணிக் கொண்டிருக்கும். அதனால், கோபம் உருவாகும். அந்தக் கோபம்

ஆழ்மனதிலே வெறுப்பாய்ப் பதியும். அந்த வெறுப்பு காரணமாக, அன்பு சாகும்.

அதனால், தம்பதியரிடையே பிணக்குகள் அதிகரிக்கும், வாழ்க்கை நரகமாகும்

என்பதே அந்தக் குறளின் பொருள்.

மேலும் இரண்டாம் இளமைக் காலப் பருவத்திற்குரிய பாலின்பம் கிடைக்காத

போது, பாலின்பப் பஞ்சத்தால் தூக்கமின்றி முன்னிரவைக் கழித்தாக வேண்டிய

நிலையைப் பெண் எதிர் கொள்கிறாள். அவ்வாறு உறங்க முடியாமல் தவிக்கும்

நேரத்திலெல்லாம் மனம் தன்னுணர்வற்ற நிலையில் கணவனைச் சபித்துக்

கொண்டிருக்கிறது.

அதனால் கணவனுக்கு எதிரான கருத்துக்கள் அவளுடைய ஆழ்மனதில்

ஆழமாகப் பதிவாகி விடுகின்றன. அதன் பின் அப்பதிவுகளின் படி

ஆழ்மனம்

அவளை இயக்குகிறது. தன்னுணர்வற்ற நிலையிலே ஒரு இயந்திர மனுசியாக

பெண் இயங்குகிறாள். அவை கணவனுக்கு எதிரானவையாக இருக்கின்றன.

இவ்வாறு தான் கணவனின் மீதான வருத்தமோ, குரோதமோ, ஆத்திரமோ,

கோபமோ மனைவியின் ஆழ்மனதிற்குள் குடியேறி, வாய்ப்புக் கிடைக்கும்

போதெல்லாம் மனைவி க்கே தெரியாமல் வெளிப்பட்டு கணவனைச்

சித்திரவதை செய்யத் தொடங்குகிறது.

போகப் பொருளாக மட்டுமே பயன்படுத்தப் படுவதன் காரணத்தாலும்,

கணவனின் மறைமுகமான நிர்பந்தம் காரணமாக அவ்வப்போது பாலுறவில்

ஈடுபடுவதாலும், சில நேரங்களில் அடங்கிக் கிடக்கும் காமம் துண்டி விடப்

பட்டு, தணிக்கப் படாத நிலையிலேயே உறங்க வேண்டியிருப்பதாலும்,

கணவனின் மீது ஏற்பட்ட குரோதமும், வெறுப்பும் நிரந்தரமாகவே மனைவியின்

ஆழ்மனதில் இடம் பிடித்து விடுகிறது.

அவ்வாறு ஆழ்மனதிற்குள் ஏற்பட்டு விட்ட குரோதமும், வெறுப்பு

ம்மனைவியின் ஒவ்வொரு நடவடிக்கையிலும் அவளையறியாமல் பிறிட்டு வெளியாகி

குடும்ப நிம்மதியை அழித்துக் கொண்டிருக்கிறது.

குழந்தை ஓரளவுக்குப் பெரிதாகும் வரை, மறைமுகமாகக் கணவனைச்

சபித்தபடியே வாழும் மனைவியின் ஆழ்மனம் குழந்தை வளர்ந்த பின் தன்னுள்

பதிந்துள்ள கணவனைப் பற்றிய உண்மையான கருத்துக்களின் படி,வெளிப்படையாகச் செயல் படத் தொடங்குகிறது.

ஒவ்வொரு வாய்ப்பையும் தவற விடாமல் பயன்படுத்தி கணவனைப்

பழியெடுக்கத் தொடங்குகிறது. வாய்ப்பே கிடைக்காத போது வாய்ப்புக்களை

ஏற்படுத்திக் கொள்ளவும் மனைவியின் ஆழ்மனம் தயங்குவதில்லை,

மேலும், தணிக்கப்படாத காமத்தோடு தகித்துக் கொண்டிருக்கும் தம்பதியர்

இருவரும் ஒன்றாகக் கூடினாலே, அவர்களுடைய மேல்மனம் ஒடியொளிந்து.

கொள்ளும். அதனால், மூன்றாம் நபர் சாட்சியாக இல்லாத நேரங்களிலெல்லாம்

மனைவி தன்னுடைய ஆழ்மனக் கருத்துக்களின் படி யே இயங்கி கொண்டிருக்கிறாள். ஆணின் குடும்ப வாழ்க்கை சகிக்க முடியாத நரகத்திற்குள்

க்காலடி எடுத்து வைக்கிறது.

முப்பது முதல் நாற்பத்தைந்து வயதிற்கு இடைப்பட்ட கால கட்டத்தைக்

கடப்பதற்குள், மனைவியின் ஆழ்மனம் முழுவதையும் கணவனின் மீதான

கோபமும், வெறுப்பும், குரோதமும் ஆக்ரமித்து விடுகிறது.

அதனால், கணவனைப் பற்றி துவக்கத்தில் இருந்த அச்சம் மட்டுமல்ல,

திருமணமான புதிதில் அவன் மீதிருந்த அன்பு, மரியாதை, பரிவு போன்ற

நல்லுணர்ச்சிகள் அனைத்தையும் தன்னுணர்வற்ற நிலையிலேயே இழந்து

விடுகிறாள்,

அதன் காரணமாக, கணவனின் ஒவ்வொரு செயலிலும் குறை காணத்

தொடங்குகிறாள். அடுத்தவர்களுக்கு எதிரிலும் அவனை எள்ளி நகையாடுகிறாள்.

கிள்ளுக்கீரையாக நடத்துகிறாள். வம்பிழுக்கிறாள். வாதம் செய்கிறாள்.

இரக்கத்தை மறக்கிறாள், கணவனைப் பார்த்த அடுத்த வினாடியே உணர்ச்சி

வயப்பட்டவளாக மாறி விடுகிறாள். இவ்வாறாக, போகப் பொருளாக நடத்தப்

படும் பெண் தன்னுடைய நாற்பத்தைந்து வயதை நெருங்குவதற்குள்,

குடும்பத்தின் சர்வாதிகாரியாக உருவாகி விடுகிறாள்.

இந்த நிலையைத் தொடர்ந்து எதிர்கொள்ளும் கணவன், வீட்டிற்குவரவே அச்சப்பட்டு, விடுதியைப் போல வீட்டைப் பயன்படுத்தத் துவங்குகிறான்.

கணவர்கள் தற்கொலையைப் பற்றிச் சிந்திக்கிறார்கள். ஆனால்,

அதற்குரிய துணிச்சல் இல்லாததால், மதுவிற்கு அடிமையாகிறார்கள்.

கணவனின் பாலியல் அறியாமையும், மனைவியின் பாலின்ப ஆற்றாமையும்.

தாம்பத்ய வாழ்வில் காமம் தணிக்கப் படாத போது பாலின்ப ஆற்றாமை.

பெண்ணின் உடலில் உருவாகிறது. இந்த ஆற்றாமை நுண்ணிய அளவிலான

மன நோயாக மாறுகிறது

அந்த மன நோயின் விளைவாக அப்பாவிப் பெண் கூட பிடாரியாக மாறத்.

தொடங்குகிறாள். அதன் பின் தன்னுணர்வற்ற நிலையில் கணவனைச் சகட்டுமேனிக்கு வதைக்கத் தொடங்குகிறாள்

மிகவும் அபூர்வமான தருணங்களில் கணவன் தப்பி விடுகிறான்,

மனைவிக்குரிய பாலின்பத்தை தரத் தவறியிருந்தாலும், மற்ற அனைத்து

தளங்களிலும் சிறப்பான சூழலை உருவாக்கி, மனைவியை புறம் சார்ந்த

சுகபோகத்தில் திளைக்கச் செய்துள்ள கணவனைப் பாலின்ப ஆற்றாமை நோயின்

கதிர்கள் பெரிய அளவில் தாக்குவதில்லை.

ஆனால், பணம் என்கிற ஒரே பண்டத்தால் மட்டுமே பெண்ணின்

தேவைகள் பூர்த்தியாகி விடுவதில்லை, பெண்ணின் மனதை மகிழ்விக்கும்

காரணிகளில் பணமும் ஒன்று. மற்றபடி, பணம் மட்டுமே பாலின்பப் பஞ்சத்தால்

ஏற்படும் மன வக்கிரங்களைப் போக்கி விட முடியாது.

பாலின்பத்துக்கு மாற்றுப் பொருளாகப் பணத்தைப் பயன்படுத்த முடியாது.

பணம் அத்தகைய சக்தி வாய்ந்த மந்திரக் கோல் அல்ல.

குழந்தை வளர்ப்பில் சிறப்பான பங்கேற்பு, குழந்தைக்கான வெற்றிகரமான

எதிர்காலத்தை உருவாக்கிக் கொடுப்பதில் ஆற்றும் பங்கு, தனிப்பட்ட

விதத்தில் மனைவியின் மீது காட்டுகின்ற பரிவு, மரியாதை, நடத்தையில்

இயல்பாகவே உள்ள பண்பு, களங்கமற்ற அன்பு, ஆதிக்க மனோபாவமின்மை,

பிறருக்கெதிரில் மனைவியை நடத்தும் பாங்கு போன்ற பல காரணிகளைக்

கொண்ட தொகுப்பே பாலின்ப ஆற்றாமையால் கணவனின் மீது ஏற்படக்

கூடிய மனைவியின் கோபத்தை வேறு திசை நோக்கித் திருப்பி விடக்கூடிய

ஆற்றலுடையவையாக இருக்கின்றன.

இது போன்ற சூழலில், கணவனின் மீது பாய வேண்டிய பாலின்ப

ஆற்றாமையின் தாக்கம், நாத்தனார், அண்டை அயலார், குழந்தைகளின்

ஆசிரியர், செய்தித்தாள் போடும் பையன் எனச் செல்லுபடியாகக் கூடிய வேறு

இடங்களில் வெளிப்பட்டு, பாலின்ப ஆற்றாமையால் உடலில் ஏற்பட்டுள்ள

அழுத்தத்தை வெளியேற்றுகிறது.

ஆனால், மேலே சொல்லப்பட்டதைப் போன்ற குணத்தைப் பெற்றுள்ளஆணைக் காண்பது அரிதாகவே இருக்கிறது. பணமிருந்தால் குணமில்லை.குணமிருந்தால் பணமில்லை என்கிற நிலை தான் பெரும்பாலும் காணப்படுகிறது.

அதனால், மனைவியின் ஆழ்மனதில் கணவனின் மீது ஏற்பட்ட

வெறுப்புணர்ச்சி பெரும்பாலும் திசை மாறுவதில்லை,

நூறு ஆண்களில் பத்துப் பேர் கூட நூற்றுக்கு நூறு மதிப்பெண்களை

மனைவியிடம் பெற முடிவதில்லை.

பெண்ணிடம் குடியேறும் பிடாரித்தனம் ஒரு மனநோய், பாலின்ப

ஆற்றாமையால் ஆழ் மனதைப் பிடிக்கின்ற நோய் இது. ஆனால், பிறர்

கண்களுக்கு நோய் போலவே காட்சியளிக்காத நோயும் கூட.

கணவனுடைய மரமாணத்தின் போது கூட கண்ணீர் விடாத பென்ன, பாலின்ப

ஆற்றாமை என்கிற நோயால் கடுமையாகப் பாதிக்கப்பட்டுள்ள ஒரு மன நோயாளி.

முற்றிப்போன பாலின்ப ஆற்றாமை நோய்க்கு மருந்தாக, பெண்ணின்

உடலில் உச்சகட்ட பாலின்பங்களை நிகழ்த்திச் சுகப்படுத்தும் சிகிட்சை

மேற்கத்திய நாடுகளில் இருந்திருக்கின்றன.

பெண்ணின் உடலில் பாலின்பத்தை நிகழ்த்தக்கூடிய சாதனங்கள்

புழக்கத்திற்கு வந்த பிறகு அந்த சிகிட்சை முறைக்கு அவசியம் இல்லாமல்

போயிருக்கிறது.

ஆனால் இந்தியாவில் செயற்கைச் சாதனங்கள் இன்னும் புழக்கத்திற்கு

வரவில்லை. அதனால், இல்லற வாழ்வில் போகப் பொருளாகப் பயன்படுத்தப்

படுகின்ற பெண்களெல்லாம் பாலின்ப ஆற்றாமை நோயாளிகளாக இருக்கிறார்கள்.

இந்த எண்ணிக்கை பெரும்பான்மையாக இருப்பதால், வீட்டுக்கு விடுவாயிற்படி என்கிற புதுமொழி முன்வைக்கப்பட்டு இது ஒரு தவிர்க்க முடியாத

நிலைமை என்கிற கருத்து உருவாக்கப் பட்டுள்ளது.

மாதவிடாய் நேர் மனநிலை மாற்றங்கள் காரணமாகவே பெண் பிடாரித்

தனமாகச் செயல்படுகிறாள் என்கிற கருத்து உருவாகி, அது ஒரு விஞ்ஞான

உண்மையாகவே அங்கீகரிக்கப் பட்டு விட்டது. ஆனால், மாதவிடாய் நேர

பெண்ணின் மன நிலையில் அரக்கத்தனமான மாற்றங்கள் ஏற்படுவது

இயற்கையான நிகழ்வல்ல. பாலின்ப ஆற்றாமையின் அறி குறி தான் அது

என்கிற தகவல் அறிஞர்களைக் கடந்து பொது வெளிக்குக் கொண்டு வரப்

படவே இல்லை.

உச்ச கட்ட பாலின்பங்கள் எந்தப் பெண்ணின் உடலில் அவ்வப்போது

நிகழ்ந்து கொண்டிருக்கிறதோ அந்தப் பெண்ணின் வாழ்வில் மாதவிடாய்

நேரத்து மனநிலை மாற்றங்கள் பெரிய அளவில் ஏற்படுவதில்லை.

பாலின்பங்களை வழங்கத் தெரிந்த ஆணைக் கரம் பிடித்த பெண்

பிடாரியாகவும் மாறுவதில்லை. அண்டை வீட்டுக்காரனோடோ அலுவலக

அதிகாரியோடோ கள்ளக் காதலிலும் ஈடுபடுவதில்லை.

அந்தச் செயல்கள் அனைத்தும் விளைவுகள். அதை விளைவிப்பவன் கணவன் என்கிற ஆண். ஆகவே, பெண்ணைக் குறை கூறல் பேதமையிலும் பேதமை. போகப் பொருளாகப் பயன்படுத்தும் கணவனே உண்மையான குற்றவாளி.

ஆகவே, குடும்ப வாழ்விற்குள் காலடியெடுத்து வைத்த ஒரு அப்பாவிப் பெண்ணைக் கூடப் பாலின்ப ஆற்றாமை தான் பிடாரியாக மாற்றுகிறது. ஒரு பெண்ணை இந்த நோய் தாக்குவதற்கு அவளுடைய கணவனிடம் நிறைந்து கிடக்கின்ற பாலியல் அறியாமையே காரணம்.

பாலியல் அறியாமை காரணமாக, மனைவி யை ஒரு போகப் பொருளாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறான். அதனால் அவனுடைய மனைவியின் காமம் தணிக்கப் படுவதில்லை. அவ்வாறு தணிக்கப் படாத காமம் பாலின்ப ஆற்றாமை என்கிற மனநோயாக அவனுடைய மனைவியைப் பிடிக்கிறது.

இந்த மனநோய் தான் இல்லற வாழ்வில் தம்பதியரிடையே நிகழ்ந்து கொண்டிருக்கும் பனிப்போர், வெளிப்படையான சண்டைகள், மோசமான

கொண்டிருக்கும் பனிப்பே

குழந்தை வளர்ப்பு, அண்டை அயலாரோடு தேவையற்ற சண்டைகள், கணவனின் உறவுகளோடு பிரச்சினை என அனைத்து அடாவடித்தனமான செயல்களுக்கும் மூலகாரணமாக இருந்து கொண்டிருக்கிறது.

.

இந்தத் தகவலை இன்னும் கூடத் தெளிவாக விஞ்ஞான பூர்வமாக நிரூபிக்க முடியும்

## **6.** தணிக்கப் படாத காமத்தின் சீற்றங்கள்

விரோதிகள் இருவர் ஒன்றாக உறங்கிக் கொண்டிருக்கும், ஒரே இடம்

குடும்பம்,

பாலின்பப் பஞ்சம் மிகவும் ஆபத்தானது.

காற்றும், நீரும், உணவும், உறக்கமும், பாலின்பமும் உயிரின் அடிப்படைத்

தேவைகள், ஆழ் மனதால் நிர்வகிக்கப் படுகின்ற உணர்வுகள் இவை. உயிர்

நலமாய் வாழத் தேவைப்படுகின்ற ஐம்பூதங்கள் இவை.

காற்றுக்குப் பஞ்சமில்லை. இயற்கையாகவே கிடைத்து விடுகிறது. சிறிய

முயற்சியிலேயே தண்ணீர் கிடைத்து விடுகிறது. உழைத்தால் உணவு கிடைத்து

விடும். உடல் அயர்ந்தால் உறக்கம் வந்து விடும். ஆனால், பாலின்பத்தைப்

பெறுவதற்கு மட்டும் எதிர்ப் பாலின இணை தேவை.

தூய காற்று, தண்ணீர், உணவு மற்றும் உறக்கம் ஆகியவற்றின் பற்றாக்

குறையால் ஏற்படும் பாதிப்புகள் கண்ணுக்குத் தெரியக் கூடியவை. உடனுக்குடன்

மனித உடலைப் பாதிக்கக் கூடியவை. மனிதனின் செயல் பாட்டையே

கூட முடக்கி விடக் கூடியவை. பிறருடைய பார்வையில் படாத படி, மனிதப்

பிறவியால் மறைக்க முடியாதவை,

ஆனால், பாலின்பப் பஞ்சத்தால் ஏற்படும் பாதிப்புகளோ கண்ணுக்குத்

தெரியாதவை. மற்ற நான்கின் பயன் பாட்டைக் கூடப் பாதிக்கக் கூடியவை.

மனிதனை மிருகமாகவே கூட மாற்றக் கூடிய வல்லமை படைத்தவை.

ஆகவே, உணவு, நீர், காற்று, உறக்கம் ஆகிய நான்கின் பற்றாக்குறையால்

ஏற்படும் பாதிப்புக்களைக் காட்டிலும், பாலின்பப் பஞ்சத்தால் ஏற்படும்

உளவியல் பாதிப்புகள் மிகவும் ஆபத்தானவை.

மனிதப் பிறவியின் உடலை விட, மனதைத் தான் பெருமளவில் பாதிக்கக்

கூடியவை. அதனால், அந்த மனிதப் பிறவியின் சுற்றுப்புறத்திற்கும் கூட

பெருமளவில் ஆபத்தை விளைவிக்கக் கூடியவை.

தனக்குத் தொடர்பே இல்லாத, யாரோ பெற்ற குழந்தைகளை, பள்ளிக்குச்

செல்லும் இளஞ்சிறார்களைக் கடத்திச் சென்று, பாலியல் தாக்குதலுக்குப் பின்,

கால்வாயில் தள்ளிக் கொல்லுமளவிற்கு, கொடூரமான சிந்தனையை உருவாக்கக்

கூடியது பாலின்ப் பஞ்சம்.

திருமணத்திற்கு முன்பே பாலுறவில் ஈடுபடுவதைத் தடுக்க முயற்சிக்கும்

போது, விபச்சாரத்தில் ஈடுபடுத்த முயல்வதாகத் தன் தாயின் மீதும், பாலியல்

வன்கொடுமையில் ஈடுபட முயல்வதாகத் தன் தந்தையின் மீதும் கூசாமற் பொய்சொல்ல வைத்து, பெண்ணை ஓடிப் போகச் செய்யும் வல்லமை படைத்தது.பாலின்பப் பஞ்சம்.

காம உணர்விற்கு வேறொரு சிறப்பும் உண்டு. பசி, தாகம், உறக்கம்

ஆகியவற்றை தணிக்க உதவியவர்களை விட, காம உணர்வைத் தணிக்க உதவிய

நபருக்குத் தான் மனம் முதலிடம் கொடுக்கும்.

பெற்றோர், உடன் பிறந்தோர், மற்றும் நண்பர்கள் எல்லாம் காமத்தைத்

தணிக்க உதவிய நபருக்கு இணையானவர்கள் அல்ல.

பாலின்பப்பஞ்சத்தால் பாதிக்கப்பட்டுள்ள மனிதப் பிறவியை எளிதில் கண்டு

பிடிக்க முடியாது. ஆரோக்கியமான மனிதப் பிறவியைப் போன்றே பிறருடைய

கண்களுக்குக் காட்சிப் படுத்தக் கூடிய அளவிற்கு, மறைந்துறையும்

இயல்புடையது பாலின்பப் பஞ்சம். இந்தப் பூனையும் பாலைக் குடிக்குமா என்கிற

பழமொழி பாலின்பப் பஞ்சத்தால் பாதிக்கப் பட்டுள்ள மனிதர்களுக்கு மிகச்

சரியாகப் பொருந்தும்.

சுய இன்பத்தால் ஆன்மா முழு இன்பத்தைப் பெறுவதில்லை. ஆகவே,

அது பாலின்பத்திற்கான நிரந்தரத் தீர்வாவதில்லை. அதனால், இரு

பாலினத்திற்கும் எப்போதுமே எதிர்ப் பாலின இணை தேவை. இந்த நெருக்கடிக்கான நிரந்தரத் தீர்வாகவே குடும்பம் கண்டு பிடிக்கப்பட்டது.

உணர்வுகளும், உணர்ச்சிகளும்

பசி, தாகம், உறக்கம், காமம் போன்றவை உணர்வுகள், உணர்வுகள் என்பவை உண்மையானவை. உயிரோடு இணைந்திருப்பவை. மேற்கண்ட உணர்வுகளில் ஒன்றை இழந்தாலும், உயிரினங்கள் அழிந்து விடும். பூமியில் தொடர்ந்து தழைத்திருக்க முடியாது.

உடலில் உருவாகக் கூடியவை உணர்வுகள். அகத்தில் உருவாகக் கூடியவை உணர்ச்சிகள். உடற் தேவைகள் உண்மையானவை. அகத் தேவைகள் மாயை.

அதாவது உணர்வுகளின் எழுச்சி மற்றும் தணிப்பிற்கேற்ப உருவாகக் கூடியவை தான் உணர்ச்சிகள்.

அதாவது, உணர்வுகள் தணிக்கப்படாத போது கோபம், பொறாமை, பயம், சோகம், வருத்தம், விரக்தி, துக்கம், கவலை,போன்ற உணர்ச்சிகள் உருவாகும்.

உணர்வுகள் தணிக்கப்படும் போது, மேற்கண்ட உணர்ச்சிகள் காணாமற் போய், மகிழ்ச்சி, குதூகலம், ஆனந்தம், உற்சாகம், போன்ற உணர்ச்சிகள் பிறக்கும்.

ஆகவே உணர்ச்சிகள் அனைத்துமே மாயை. உணர்வுகளைப் பேணுவதன் அடிப்படையில் உருவாகக் கூடியவை. அதாவது, உணர்வுகளின் குழந்தைகளே உணர்ச்சிகள்.

காமம் என்கிற உணர்வு தணிக்கப்படாத போது, கோபம், எரிச்சல், வருத்தம், ஏமாற்றம், விரக்தி, வெறுப்பு போன்ற உணர்ச்சிகள் பிறக்கின்றன. அதே காமம்

என்கிற உணர்வு தணிக்கப்படும் போது, அன்பு, இரக்கம், மகிழ்ச்சி, ஆனந்தம்,

உற்சாகம், போன்ற உணர்ச்சிகள் பிறக்கின்றன.

அதேபோல பசி என்கிற உணர்வு தணிக்கப்படாத போது, மோசமான

உணர்ச்சிகளும், அதே பசி உணர்வு தணிக்கப்படும் போது நல்ல உணர்ச்சிகளும்

பிறக்கின்றன.

அதே போலத் தான் உறக்கம் என்கிற உணர்வு தணிக்கப் படாத போது,

மோசமான உணர்ச்சிகளும், அதே உறக்கம் என்கிற உணர்வு தணிக்கப்படும் போது

நல்ல உணர்ச்சிகளும் பிறக்கின்றன.

தணிக்கப் படாத காமம் தான் மோசமான உணர்ச்சிகளை உருவாக்கும்

வார்ப்புக் கூடம். மோசமான உணர்ச்சிகளே நோய்களை உண்டாக்கும் வேதிகளை

உடலில் சுரக்கச் செய்பவை. ஆகவே, தணிக்கப்படாத காமம் உயிர்க்கொல்லி

நோய்களைக் கூட உருவாக்கக் கூடியது.

இந்த தகவல்களை யாரேனும் மறுக்கலாம். எதிர்வாதம் செய்யலாம். ஆனால்

அவற்றின் மூலம் தன் மனம் பக்குவப் படுத்தப் பட்டுள்ள விதத்தைக் காட்சிப்

படுத்தலாமே தவிர, உண்மையைக் கொல்ல முடியாது.

பேருண்மைகள் ஒரு போதும் சாவதில்லை. மேலும் காமம் மிகவும் சக்தி

வாய்ந்த உணர்வு என்பதை நிரூபிக்க எந்த ஆதாரங்களும் தேவை யில்லை,

அவரவர் வாழ்விலிருந்தே தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம். அதன்

உண்மையான தன்மையைப் புரிந்து கொள்ளலாம்.

உணர்வுகளின் அடிமை தான் அறிவு!

மனித உடலில் இயற்கையாக உருவாகக் கூடிய உணர்வுகள் முன்று.

பசியுணர்வு. உறக்க உணர்வு, பாலுணர்வு. இந்த மூன்று உணர்வுகளையும்,

உருவாகாமல் தடுக்க யாராலும் முடியாது. ஏனெனில், மரபணு மூலம்

உயிரினம்

பெற்றுள்ள உணர்வுகள் இவை.

மரபணு மூலம் பெற்றுள்ள ஒரு அறிவையோ, புலனையோ, உணர்வையோ

எந்த உயிரினத்தாலும் கொல்ல முடியாது. பயிற்றுவிப்பதன் மூலம், கொஞ்சம்

மட்டுப்படுத்தலாம். வேகத்தைக் கட்டுப்படுத்தலாம். முறைப்படுத்தலாமே தவிர,

உருவாகவே முடியாத அளவிற்கு அழிக்க முடியாது.

ஆகவே மேற்கண்ட பசி, உறக்கம் மற்றும் காமம் ஆகிய மூன்றும் உடலின்

உணர்வுகள், உயிரின் உணர்வுகள். இந்த மூன்று உணர்வுகளில் ஏதேனும் ஒரு

உணர்வை இழந்து விட்டாலும், அந்த உயிரினம் இந்த பூமியில் தொடர்ந்து

தழைத்திருக்க முடியாது. அழிந்து போய் விடும்.

மேலும், இந்த மூன்று உணர்வுகளும் ஒன்றுடன் ஒன்று பிணைந்திருப்பவை.

ஒன்றையொன்று பாதிக்கக் கூடியவை. அதாவது ஆகாரம் இல்லாத போது,

உறக்கம் வராது. அதேபோல் பாலுணர்வும் கிளர்ந்தெழாது.

உதாரணமாக ஒரு நபரை இரண்டு மூன்று தினங்களுக்கு உணவே

தராமல் ஒரு அறைக்குள் அடைத்து வைத்திருந்து, மூன்றாம் நாள் முடிவில்

பேரழகியின் கையில் உண்வைக் கொடுத்து, அவனது அறைக்குள் அனுப்பினால்,

அவன் முதலில் உணவைத் தான் தீண்டுவான்.

அந்தப் பேரழகியை ஏறெடுத்துக் கூடப் பார்க்க மாட்டான். அங்கே

உணவிற்கே முதலிடம். அதாவது, பசியுணர்வின் முன் அனைத்து உணர்வுகளும்காணாமல் போய்விடும்,

அதே போல, உறக்கம் இல்லாத போது பசியெடுக்காது. உடலின் வெப்பம்

அதிகரித்து விடும்.அதனால் சாப்பிட முடியாது. பாலுணர்வும்

தலையெடுக்காது.

முன்பு செய்ததைப் போலவே, ஒரு நபரை இரண்டு மூன்று தினங்களுக்கு

உறங்கவே விடாமல் காவலிருந்து, மூன்றாம் நாள் முடிவில், ஒரு பேரழகியை

அவனது அறைக்குள் தள்ளிவிட்டு, அந்த அறையை வெளிப்புறத்தில் பூட்டிக்

கொண்டாலும், அவனால் அந்தப் பேரழகியை ஏறெடுத்துக் கூடப் பார்க்க

முடியாது.

ஏறெடுத்தே பார்த்து விட்டாலும், நிச்சயமாக அவளைத் தீண்ட முடியாது,

அவள் தன் ஆடைகளைக் களைவதற்குள், அவன் உறங்கிப் போய் விடுவான்.

அவ்வாறு உறங்கியவனை எவ்வளவு தான் முயற்சித்தாலும் அந்தப் பேரழகியால்

எழுப்ப முடியாது. அங்கே உறக்கத்திற்கே முதலிடம்.

அதேபோல பாலுணர்வு தணிக்கப் படாமல் இருக்கும் போது, உணவு

வாய்க்குப் பிடிக்காது. விருந்து கூட மருந்தாய் இருக்கும், பால் புளிக்கும். தேன்

கசக்கும். பழம் கூட சுடும்.

அதே போல உறக்கமும் வராது. பஞ்சு மெத்தை கூட முள்ளாய்க் குத்தும்.

பச்சை நீரில் மூழ்கி எழுந்தாலும் காமத்தீயால் காந்தலேறி, உடல் தணலாய்த்

தகிக்கும், உறக்கம் வராது.

உறங்க வேண்டுமே என்பதற்காக புரியாத இலக்கண நூல் ஒன்றை எடுத்து

வைத்துக் கொண்டு படித்தாலும், அந்த இலக்கணம் வேண்டுமானாலும் புரியுமே

தவிர, உறக்கம் மட்டும் வரவே வராது. நடுநிசியிலோ அல்லது பின்னிரவிலோ

உறக்கம் வரலாம்,

இது போல் இந்த மூன்று உணர்வுகளும் ஒன்றுடன் ஒன்று

பிணைந்திருப்பவை, ஒன்றையொன்று பாதிக்கக் கூடியவை.

இந்த மூன்று உணர்வுகள் தான் ஒவ்வொரு நபரையும் வழி நடத்தக்

கூடியவை. வாழ்க்கையை வடிவமைக்கக் கூடியவை. எதிர் காலத்தை நிர்ணயிக்கக்

கூடியவை. தலை விதியைத் தீர்மானிக்கக் கூடியவை,

என்ன இது?அறிவல்லவா ஒரு நபரை வழி நடத்தக் கூடியது. வாழ்க்கையை

வடிவமைக்கக் கூடியது. எதிர் காலத்தை நிர்ணயிக்கக் கூடியது. தலை விதியைத்

தீர்மானிக்கக் கூடியது. என்கிற கேள்வி சிலருக்கு எழலாம். அது சரி தான்.

அறிவு தான் மேற்கண்ட அனைத்தையும் செய்கிறது. அதில் மாற்றுக்

கருத்தில்லை, ஆனால், அந்த அறிவையே மேற்கண்ட மூன்று உணர்வுகள் தான்

வழிநடத்திக் கொண்டிருக்கின்றன, இயக்கிக் கொண்டிருக்கின்றன.

அறிவு என்பது பசி, உறக்கம் காமம் ஆகிய மூன்று உணர்வுகளின் அடியாள்.

இந்த மூன்று உணர்வுகளின் கொத்தடிமை தான் மனிதனின் அறிவு.

தணிக்கப்படாத காமம் மூளையை மழுங்கடிக்கும்.

உணர்வுகளின் கொத்தடிமை தான் மனிதனின் அறிவு என்பதற்கான.

ஆதாரத்தைத் தேடி நாம் அலையத் தேவையில்லை, நம் சொந்த

வாழ்க்கையிலிருந்தே தெரிந்து கொள்ளலாம்

அதாவது ஏதேனுமொரு காரணத்தால், உரிய வேளயில் நாம் உணவருந்த

முடியாமல் போன போது, நம் அறிவு சற்றே மந்தமாகவோ, அல்லது சற்று

கோபமாகவோ செயல்பட்டிருக்கிறதா? இல்லையா?

அதே அறிவு நாம் வயிறார உணவருந்தி முடித்த பின், நம் வயிற்றுப் பசி

அடங்கிய பின் அமைதியாக,சாந்தமாக தன் இயல்பான நிலையில் செயல்படத்

தொடங்குகிறதல்லவா?

அதே போல், ஏதோ ஒரு காரணத்தால், சில தினங்கள் சரியாக உறங்க

முடியாமல் போன போது, நம் அறிவு சற்றே மந்தமானதாக, சோம்பலுடையதாக,

முடி வெடுக்கத் தெரியாமல் தடுமாறுவதாக, சில சமயங்களில் தவறாகவே

முடிவெடுத்து விடக் கூடியதாக செயல் படுகிறதா? இல்லையா?

அதே அறிவு தான், ஆழ்ந்த உறக்கத்திற்குப் பிறகு, அமைதியானதாக,

சாந்தமானதாக, கூடுதலான புத்துணர்வோடு செயல்படத் தொடங்குகிறதல்லவா?

அதே போல், பாலுணர்வு முழுமையாகத் தணிக்கப் பட்டிருக்கும் போது,

நம் அறிவானது அன்புடையதாக, சாந்தமானதாக, மகிழ்ச்சி நிரம்பியதாக,

ஊக்கமும் உற்சாகமும் கொண்டதாக, சற்று கூடுதலான ஈகையும் இரக்கமும் கூட

கொண்டதாக செயல் படுகிறதா? இல்லையா?

அதே பாலுணர்வு தணிக்கப்படாத போது, அல்லது நம் காமத்திற்குரிய தீனி

கிடைக்காத போது, குறிப்பாக காமத்திற்குரிய தீனி குடும்ப வாழ்க்கையில்

மறுக்கப் படுகிற போது, அதே அறிவு சற்று ஆத்திரமுடையதாக, கூடுதலான

கோபமுடையதாக, வம்புச் சண்டையிடுவதாக, ஒத்துழைக்க மறுப்பதாக, மற்றும்

முரட்டுத்தனம் கொண்டதாக செயல் படுகிறதா? இல்லையா?

இவ்வாறாக, அறிவை உணர்வுகள் தான் வழி நடத்திக் கொண்டிருக்கின்றன.

இந்தத் தெளிவான புரிதலே தீர்விற்கான சரியான பாதை.

உணர்ச்சிகள் அனைத்தும் உணர்வுகளின் குழந்தைகள் என்கிற எளிய

உண்மையைப் புரிந்து கொண்டாலே, குடும்ப வாழ்க்கையில் நிலவும் பல

பிரச்சினைகளுக்குத் தீர்வு கிடைத்து விடும்.

பாலின்ப ஆற்றமை நோயின் முகமூடிகள்.

இல்லற வாழ்வில் தணிக்கப்படாத காமம், பாலின்ப ஆற்றாமை என்கிற மன

நோயாக உருவெடுக்கிறது. அந்த மன நோய் கீழ்க்கண்ட வடிவங்களிலே குடும்ப

வாழ்விலும், வெளியுலத் தொடர்புகளிலும் வெளிப்படுகிறது.

வார்த்தைகளில் வெளிப்படும் ஆத்திரம், கோபம், குரோதம், பழியுணர்ச்சி,

பகை, பொறாமை, கழிவிரக்கம், மனச்சோர்வு, சோம்பேறித்தனம்,பணியில்

சிரத்தையின்மை, கவனக் குறைவு, ஊக்கமின்மை, உற்சாகமற்ற மனநிலை,

தெளிவற்ற சிந்தனை, மூளையின் மந்த நிலை, கணக்கிடுவதில் பிழை, தவறான

மதிப்பீடு, தவறான தொழில் முதலீடு, பேராசை, எதிர்மறைச் சிந்தனை, சிடு

சிடுப்பு, பரஸ்பர குற்றச் சாட்டுக்கள்.

வாக்கு வாதங்கள், தர்க்கம், காண்கின்ற அனைத்திலும் குறைகளை மட்டுமே

காணும் போக்கு, பிறரை அவமதித்தல், வம்புச் சண்டையிடுவதில் ஆர்வம்,

தொலைக்காட்சிக்கு அடிமையாய் இருத்தல், வாகனத்தை இயக்குவதில்

காட்டப்படும் மூர்க்கத்தனம், பொருட்களை உடைத்தல், தூக்கமின்மை,

மோசமான குழந்தை வளர்ப்பு, குழந்தையின் மீது காட்டப்படும் கோபம், ஏவப்படும்

வன்முறை,

குடும்ப வாழ்வில் நிகழும் வன் பாலுறவு, பிறன் மனை நோக்கல், கள்ளக்

காதல், அபலைப் பெண்களின் மீது நடத்தப்படும் பாலியல் வன்முறை, பாலியல்

ரீதியான பண்பாடற்ற பார்வை, இரு பொருள் கொண்ட உரையாடல்,

அலுவலகத்தில் இழைக்கப்படும் பாலியல் தொல்லைகள், பாலியல் ரீதியான

விமரிசனங்கள், பாலியல் அடிப்படையிலான குற்றச்சாட்டுக்கள், விவாகரத்து,

கொலை என அனைத்தும் தணிக்கப்படாத காமம் அணிகின்ற முகமூடிகள்.

அல்லது பாலின்ப ஆற்றாமை என்கின்ற மன நோயின் பாதிப்புகள்.

மனைவியின் நடவடிக்கைகளில் காணப்படுகின்ற கணவனை நச்சரித்தல்,

கணவனிடமும் குழந்தையிடமும் காட்டப்படும் சிடுசிடுப்பு, முன் கோபம்,

கணவனையும், கணவனின் உறவுகளையும் எடுத் தெரிந்து பேசுதல், கணவனின்

உறவுகளை அவமதித்தல், கணவனின் சிறிய தவறுகளையும் ஊதிப் பெருக்குதல்,

கணவனோடு வம்புச் சண்டையிடுதல், கணவனிடம் விட்டுக் கொடுத்துப்

போகாமை,

எந்நேரமும் கணவனிடம் குறை கூறிக் கொண்டேயிருத்தல், கணவனின்

செயல்கள் எதிலுமே திருப்தியின்மை, எடுத்தற்கெல்லாம் கணவனிடம்

எதிர்ப்பதமே சொல்தல், கணவனோடு வாக்கு வாதம் செய்தல், கணவனின்

கேள்விகளுக்குக் குதர்க்கமாக பதிலளித்தல்,

வாகனம் ஓட்டும் போது அருகிலிருந்து வம்பிழுத்து ஆத்திர மூட்டுதல்,

கைபேசியில் வரும் கணவனின் அழைப்பை நிராகரித்தல், பிறருக்கெதிரில்

பவ்யமாகவும் தனிமையில் பண்பற்றும் நடந்து கொள்தல், கண்டதை உண்டு

உடலைப் பருமனாக்குதல், நோக்கமின்றிப் பேசுதல், கணவனைப்

பொருட்படுத்தாமை, எதற்கெடுத்தாலும் அழுதல், குடும்பத்தில் சர்வாதிகாரியாக

நடந்து கொள்தல், குழந்தையிடம் காட்டப்படும் அரக்கத்தனம், தொலைக்

காட்சிக்கோ, பக்திக்கோ அடிமையாகி விடுதல், மற்றும் பாலின்பத்தில் ஈடுபட

மறுத்தல் போன்ற செயல்கள் அனைத்தும் பாலின்ப ஆற்றாமையின் வெளிப்பாடுகளே.

மனைவியின் காமம் தணிக்கப் படாததால், அவளது ஆழ்மனதில் அவளுக்கே தெரியாமல் உருவாகியுள்ள மோசமான உணர்ச்சிகளின் வெளிப்பாடுகளே,

பாலின்ப ஆற்றாமையின் வெளிப்பாடுகள்,

தன் முன்னால் நீட்டப்படும் பிச்சைப் பாத்திரத்தில் ஒரு நபர் எதைப் போடுகிறார் என்பதற்குப் பின்னால் கூட அவருடைய காமம் மறைந்திருக்கிறது.

தணிக்கப்பட்ட காமம், கருணையோடு அணுகச் சொல்லும். இயன்றதைப் போட வைக்கும். ஆனால், தணிக்கப் படாத காமமோ சீறி மட்டுமே வீழச் செய்யும்.

வீட்டில் பிரச்சினை போலிருக்கிறது எனப் பிச்சைக்காரர்கள் முணுமுணுத்தபடி செல்வதிலிருந்தே இது ஊரறிந்த இரகசியம் என்பதை உணர்ந்து கொள்ளலாம்.

அதே போலத் தன்னுடைய அதிகாரத்தை ஒரு நபர் எவ்வாறு பயன்படுத்துகிறார் என்பதன் பின்னால் அவருடைய காமத்தின் நிலைப்பாடு மறைந்திருக்கிறது.

அவருடைய காமம் தணிக்கப்பட்ட நிலையில் இருந்தால், தன் கீழ் பணியாற்றுபவர்களின் மனிதத் தவறுகளை அவர் நயமாகச் சுட்டிக் காட்டுவார்.

அதே காமம் தணிக்கப்படாத நிலையில் இருக்குமானால், சூழலுக்கேற்ப மிருகத்தனமாய் அவர் நடந்து கொள்வார்.

தொலைக் காட்சிகளில் ஒளிபரப்பாகும் விவாத நிகழ்ச்சிகளை கவனித்துப் பாருங்கள். யாருடைய காமம் தணிக்கப் பட்டிருக்கிறது. யாருடைய காமம் ஆவேசத்தில் இருக்கிறது என்பதை அவர்களுடைய உடல் மொழி மூலமாகவும்,

பயன்படுத்தும் வார்த்தைகள் மற்றும் கருத்துக்கள் மூலமாகவும் எளிதாகக்

கண்டு பிடித்து விடலாம்.

ஏனெனில் அனைத்து உணர்வுகளுமே மனிதப் பிறவியின் ஒவ்வொரு

செயலிலும் தங்களுடைய நிலையை, உணர்ச்சிகள் வடிவிலே கசிவுகளாகக்

காட்சிப்படுத்திக் கொண்டேயிருக்கும்.

உதாரணமாக, அந்தக் கால அரசர்கள் நீதி வழுவாமல் ஆட்சி செய்ய

வேண்டும். அரசரின் காமம் தணிக்கப்படாத நிலையில் இருந்தால் தவறான

நீதியை, அல்லது தேவையை விடக் கூடுதலான தண்டனையை அவர் வழங்கி

விடக் கூடும். ஆகவே அரசரின் காமம் முழுமையாகத் தணிக்கப்பட்டிருக்க

வேண்டும் என்கிற பொது நல சிந்தனையின் காரணமாகவே அரசர்களின் அந்தப்

புறங்கள் பல பேரழகியரால் அலங்கரிக்கப் பட்டிருந்தன என்று ஒரு ஞானி

கூறுகிறார்.

ஒவ்வொரு மனித செயலிலும் காமம் கலந்திருக்கிறது**.**

இது போல் மனிதர்களின் ஒவ்வொரு செயலையும், அவர்களுக்கே

தெரியாமல், தன்னுடைய நிலைப்பாட்டிற்கேற்ப, மோசமாகவோ, நல்ல

விதமாகவோ பாதிக்கக் கூடிய ஒரு இயற்கையான உணர்வு தான் காமம் என்று

உளவியலின் தந்தை கூறுகிறார்.

குழந்தைகள் அனைவரும் பிறவி மேதைகள், குழந்தைகளின் கற்றுக்

கொள்ளும் வேகம் அபாரமானது. ஆனால், ஒரு சில குழந்தைகள் கல்வியில்

மந்தமாக இருக்கின்றன. இந்த மந்த நிலைக்குப் பின்னால், அந்தக் குழந்தையின்

பெற்றோருடைய தணிக்கப் படாத காமம் மறைந்திருக்கிறது.

தம்பதியரின் தணிக்கப் படாத காமம், காலையிலே சண்டையாக

நடைபெறலாம். அது மௌனச் சண்டையாகக் கூட இருக்கலாம். அல்லது

பள்ளிக்குச் செல்லத் துவங்கும் காலை நேரத்தில் காமத்தின் சீற்றத்தால்

அரக்சுத் தனமாக அந்தக் குழந்தை நடத்தப்படலாம். அதனால், குழந்தையின்

மனம் உணர்ச்சி வயப்படுகிறது.

உணர்ச்சிவயப்படும் போது, குழந்தையின் மூளையிலே ஒரு வேதி சுரந்து

விடுகிறது. அந்த வேதியுடனே குழந்தை பள்ளிக்குச் செல்கிறது. மற்ற

குழந்தைகளைப் போன்றே, பாடங்களில் கவனம் செலுத்துகிறது. பாடங்களும்

மூளையிலே பதிகின்றன.

ஆனால், அவை பதியும் போது காலையில் சுரந்த வேதிப் பொருளில்

பதிகின்றன, மனநிலை இயல்பான நிலைக்குத் திரும்பும் போது அந்த வேதிப்

பொருள் மறைந்து விடுகிறது. அவ்வாறு மறையும் போது அதில் பதிவான

தகவல்கள் கழுவப்பட்டு விடுகின்றன.

இவ்வாறாக காலை நேர வகுப்புகளில் நடத்தப்படும் பாடங்களும்,

தன்னுடைய குடும்ப சூழல் குழந்தையின் நினைவில் வருகிற நேரத்தில் நடத்தப்

படும் பாடங்களும் மூளையில் பதிவானாலும் அப் பதிவுகள் ஒரே நாளில்

சுத்தமாகக் கழுவப் பட்டு விடுகின்றன. இவ்வாறாகத் தம்பதியரின் தணிக்கப்

படாத காமம் குழந்தையின் கற்கும் திறனைக் கூட பாதிக்கின்றது.

ஆண் களிடமுள்ள குடிப்பழக்கத்திற்குக் காரணம் பாலின்பப் பஞ்சம்.

அதாவது, போதையற்ற நிலையில் மனைவியை மிரட்டிப் பணிய வைக்க

அச்சப் படுகின்ற கணவன் குடித்து விட்டு வந்து பணிய வைக்க முயல்கிறான்.

பணிந்தால் பாலுறவு. இல்லையேல் நல்ல தூக்கமாவது வருமே எனக் குடிக்கத்

துவங்கி, இறுதியிலே மதுவின் அடிமையாகவே மாறிப்போகிறான்.

திருமணமான பத்தே வருடங்களில் ஒரு பெண் ஆயிரக் கணக்கான சேலைகளை வாங்கி விடுகிறாளே! அது வேறொன்றுமல்ல. அவளுடைய காமத்தைத் தணிக்க முடியாத கணவனால் தரப்படும் இழப்பீடு. பச்சையாகச் சொன்னால் கூலி. திருமணத்தை அங்கீகரிக்கப்பட்ட விபச்சாரமாக அந்த சேலைகள் மாற்றுகின்றன.

எந்தப் பெண்ணின் காமம் தணிக்கப் படவில்லையோ, அந்தப் பெண் தேவையற்ற பொருட்களை வாங்கிக் குவிப்பதன் மூலமாக தணிக்கப் படாத காமத்தைச் சரிக்கட்ட முயல்கிறாள்.

இது தன்னுணர்வற்ற நிலையிலே நிகழ்கிறது. காமம் தணிந்த பெண் தேவையற்றதை வாங்குவதில்லை. ஏனெனில், அவளுடைய மூளை வேலை செய்யும்.

அதே போல, தொலைக்காட்சிப் பெட்டியின் அடிமையாக பெண் மாறிப் போவதற்கான காரணங்களில் ஒன்று பாலின்பப் பஞ்சம். அதாவது, பாலின்ப ஆற்றாமை காரணமாக, படுத்த உடனே பெண்ணுக்கு உறக்கம் வருவதில்லை. அதனால், உறக்கம் வரும் வரை தொலைக்காட்சி நிகழ்ச்சிகளைப் பார்க்கத் தொடங்குகிறாள்.

தொலைக்காட்சிப் பெட்டி என்பது முட்டாள்களை உருவாக்குவதில் மட்டுமல்ல, மக்களைத் தனக்கு அடிமையாக்குவதிலும் முதலிடத்தில் இருப்பது.

ஒரு மாதத்திற்குப் பார்த்துக் கொண்டிருந்தால் போதும். மனிதனைத் தன் அடிமையாக நுண்ணிய அளவிலேனும் அது மாற்றி விடும்.

ஆகவே, முதலில் உறக்கம் வரும்வரை பார்க்கத் தொடங்கிய பெண், சில மாதங்களிலேயே உறக்கத்தை ஒத்தி வைத்து விட்டு பார்க்கக் கூடிய

தொலைக்காட்சி அடிமையாக மாறிப் போகிறாள்,

ஆகவே, ஒரு கணவன் மதுவின் அடிமையாக மாறிப்போவதற்கும்,

மகிழ்ச்சியாக வாழ வேண்டிய வீட்டில் தொலைக்காட்சி நிகழ்ச்சிகளைப் பார்த்து

ஒரு மனைவி அழுது கொண்டிருப்பதற்கும் இடையில் எவ்வித வித்தியாசமும்

இல்லை.

இரண்டுமே பாலின்பப் பஞ்சத்தால் உருவான போதைப் பழக்கங்களே.

இவ்விரண்டு போதைகளில் குடும்பத்திற்கு அதிகக் கேடுகளைக் கொண்டு வந்து

சேர்ப்பது தொலைக்காட்சிப் போதை.

போதைப் பழக்கங்களைத் தவிர, ஒரு ஆண் வாங்கும் இலஞ்சத்திற்குப்

பின்னால் கூட, அவனுடைய மனைவியின் தணிக்கப்படாத காமம்

மறைந்திருக்கிறது என்று சொன்னால் எல்லோருக்கும் சிரிப்புத்தான் வரும்.

ஆனால், அது தான் உளவியல் ரீதியான உண்மை.

ஒரு ஆண் எந்த அளவிற்கு இலஞ்ச இலாவண்யத்தில் ஊறிக்

கொண்டிருக்கிறானோ அந்த அளவிற்கு அவனுடைய மனைவியின் காமம்

தணிக்கப் படவில்லை என்று பொருள்.

அதாவது, ஒரு ஆணின் வாழ்க்கையிலிருந்து பெண்ணை முழுமையாக

விலக்கி விட்டால், அந்த ஆண் ஒரு பொறுப்பற்ற தறுதலையாகவோ,

முட்டாள்தனமான முரடனாகவோ, சமூகத்திற்கு எதிரான குற்றங்களைப் புரியக்

கூடியவனாகவோ, யாருக்கும் உதவாத

உதவாக்கரையாகவோ தான் மாறிப்

போவான்.

ஆணை இயக்க ஒரு பெண் தேவை. பெண் வழங்குகின்ற பாலின்பம்

தான் ஆணுக்கான இயக்க விசை. இது இயற்கை விதி, கோடியில் ஒரு ஆண்

விதிவிலக்கு, தன்னை இன்புறுத்தி இயக்கிக் கொண்டிருக்கும் பெண்ணை

மகிழ்ச்சியாக வைத்திருக்கவே ஆணும் விரும்புகிறான். தன்னுடைய உள்ளங்

கவர்ந்த காதலியை பிரமிக்கச் செய்யவே, மலைப்படையச் செய்யவே ஒவ்வொரு

ஆணும் விரும்புகிறான்,

தன்னைப் பெரிய வீரனென்றும், தீரனென்றும், திறமைசாலி யென்றும்

காட்டிக் கொள்வதோடு அதை நிரூபிக்கவும் விரும்புகிறான். இது தான்

ஆணைச் செயல்படச் செய்கின்ற உந்து விசை. இதைத் தவிர ஒரு ஆணை

உந்தித் தள்ளும் சக்தி இந்த உலகில் வேறெதுவும் இல்லவே இல்லை.

பாலின்பத்தை வழங்கி மனைவியை மலைக்கச் செய்ய முடியாத போது தான்

புறம் சார்ந்த வேட்டைப் பொருட்களைக் கொடுத்தாவது தன்னுடைய உள்ளங்

கவர்ந்தவளை பிரமிக்கச் செய்ய ஆண் முயற்சி செய்கிறான்.

அந்த நெருக்கடிக்கு ஆளாகும் போது தான் ஆண் இலஞ்சப் பணத்திற்காக

அடுத்தவனிடம் கை நீட்டுகிறான். இது தன்னுணர்வற்ற நிலையில் நிகழ்கிறது.

எனினும் இலஞ்சம் வாங்குபவன் தோற்றுப் போவதற்கான வாய்ப்புகளே

மிகவும் அதிகம். ஏனெனில், பாலின்பத்திற்கு மாற்றுப் பொருளாக விளங்கும்

திறன் பணத்திற்கோ, பொருட்களுக்கோ இல்லை.

சண்டையின் தாக்கம் சற்றுக் குறையலாமே தவிர, ஆழ்மன அளவிலான

சண்டை அங்கே அரங்கேறிக் கொண்டு தான் இருக்கும்.

ஒரு உதாரணம் வாயிலாக நாம் இதை அறிந்து கொள்ளலாம்.அதாவது ஒரு

பெண்ணுக்கு அவளுடைய கணவன் ஒரு பெரிய பளிங்கு மாளிகையைப்

பரிசளிக்கிறான், வேறொரு கணவன் அவனுடைய மனைவிக்கு ஒரு காரைப்

பரிசளிக்கிறான். இனியொரு கணவனோ அவனுடைய மனைவிக்கு

ஒரு தங்க

ஆபரணத்தைப் பரிசளிக்கிறான். ஒரு ஏழைக் கணவன் அவனுடைய மனைவிக்குப்

பாலின்பங்களை மட்டுமே வழங்குகிறான்.

முதல் மூன்று மனைவியரும் தங்கள் கணவனுக்கு தலா ஒரு மதிப்பெண்

அளித்த போது கடைசிப் பெண் மட்டும் தன் கணவனுக்கு ஐந்து மதிப்பெண்களை

அளித்திருந்தாள்.

ஏனெனில், பெண்ணின் ஆழ்மனமும், மூளை நரம்புகளின் வலைப்

பின்னலும் பாலியல் ரீதியாகத் தன்னைத் திருப்திப் படுத்தக் கூடிய ஆணின்

மார்பில் சரணடைந்து வாழும் படியாகத்தான்

வடிவமைக்கப் பட்டுள்ளன.

மேற்கண்ட தகவல்களில் ஐயம் கொள்வோர் சங்க இலக்கியங்களைப் படித்துப்

பாருங்கள், சங்கத் தமிழ் புரியாதோர், சிக்மண்ட் ஃப்ராய்ட், ஆல்பிரட் கின்ஸி,

மாஸ்டர்ஸ் அண்ட் ஜான்சன், கார்ல் ஜங்க், பெர்ரி போன்ற புகழ் பெற்ற

ஆராய்ச்சியாளர்களின் நூல்கள் சிலவற்றைப் படித்துப் பாருங்கள்.

ஆங்கிலமும் தெரியாதவர்கள் ஷாலினி போன்ற உளவியல் அறிஞர்களிடமோ,

அல்லது காமராஜ் போன்ற பாலியல் அறிஞர்களிடமோ கேட்டுப் பாருங்கள்.

இங்கே சொல்லப் பட்டுள்ள தகவல்களையும் கடந்து, ஏராளமான

வடிவங்களில் காமத்தின் தாக்கம் மனிதர்களின் செயல்களில் வெளிப்படுகிறது.

என்பதை அறிந்து கொள்ளலாம்.

கொஞ்சம் மெனக்கெட்டு முயற்சித்தால், மனிதப் பிறவியின் ஒவ்வொரு

செயலிலும் காமத்தின் தாக்கம் தவறாமல் இருப்பதைக் கூடத் தெரிந்து கொள்ள

நேரலாம்.

பாலின்ப ஆற்றாமை ஒரு பிசாசுப் பட்டறை.

பாலின்பப் பஞ்சமே கொலைகளின் மூலம், பாலின்பப் பஞ்சமே சமூகக்

குற்றவாளிகளை உருவாக்கும் வார்ப்புக் கூடம். பாலின்பப் பஞ்சமே பெண்ணின்

மீதான பாலியல் தாக்குதலுக்கான பிறப்பிடம்.

பாலின்பப் பஞ்சமே குடும்பத்தில் நிகழும் அனைத்து விதமான சண்டை

சச்சரவுகளுக்கும் முழு முதற் காரணம். பாலின்பப் பஞ்சமே வாழ்க்கையில் நிலவும்

வறுமைக்குக் காரணம், பாலின்ப பஞ்சமே மனித சிந்தனையை வக்கிரப்

படுத்தக்கூடிய ஒரு பிசாசுப் பட்டறை.

மனிதனின் சக்திக்கு எதிராய்ச் செயல் படுவது வேறு யாருமல்ல.

தணிக்கப்படாத காமம் தான் சக்தியைச் சிதறடிக்கும் எமன். தணிக்கப்படாத

காமம் மனிதனின் ஒவ்வொரு செயலையும் பாதிக்கிறது.

ஆழ் மனதை ஆக்கிரமித்துள்ள தணிக்கப் படாத காமம், தன்னுணர்வற்ற

நிலையிலே வாழ்வின் ஒவ்வொரு தளத்திலும் வெளிப்படுகிறது. ஆனால்,

இதையறியாத மனிதனோ ஏதேதோ காரணங்களை அவனாகவே கற்பித்துக்

கொள்கிறான்.

மனித உடல் பல மண்டலங்களைக் கொண்டது, பல்வேறு காரணங்களால்

ஏற்படும் மனிதனுடைய நிராசைகள், ஏமாற்றங்கள், தோல்விகளால் உருவாகும்

வருத்தங்கள், துரோகத்திற்கு ஆளாகும் போது ஏற்படும் மன வலிகள் எல்லாம்

உடலின் ஏதாவது ஒரு மண்டலத்தில் தான் சேமிக்கப் படுகிறது. எந்த

மண்டலத்தில் சேமிக்கப் படுகிறதோ அந்த மண்டலத்தில் அமைந்துள்ள ஏதேனும்

ஒரு உறுப்பு நோய்வாய்ப் படுகிறது.

ஆனால், எந்த மண்டலத்தில் சேமிக்கப் படுகிறது என்பது யாருக்கும்

முன்கூட்டியே தெரியாது. அதாவது, அந்த சேமிப்பானது குணப்படுத்த முடியாத

நோயாகி வதைக்கும் வரை தெரியாது.

அவ்வாறுள்ள ஒவ்வொரு மண்டலத்தையும் அதற்கென்றுள்ள சுரப்பிகள்

தான் பாதுகாக்கின்றன. சேமிக்கப் படுகின்ற கேடுகள் அனைத்தையும், சுத்தம்

செய்யும் வேலைகளைச் செய்பவை சுரப்பிகள், இந்த சுரப்பிகளை முறையாக

இயங்கச் செய்வது தான் பாலின்பம்.

பெண்களின் மன வருத்தங்கள் அனைத்தும் பெரும்பாலும் பால்

மண்டலத்தில் தான் சேமிக்கப் படுகிறது. ஏனெனில் அங்கே தான் உரிய

உடற்பயிற்சி நடைபெறுவதில்லை, உரிய பயிற்சி நடைபெறாததால், போதுமான

இரத்த ஓட்டம் நிகழ்வதில்லை. அதனால் உரிய பிராண வாயு கிடைக்காமல்

உயிரணுக்கள் பலவீனமாக இருக்கின்றன

மூலாதார மற்றும் ஸ்வாதிஸ்தான சக்கரங்களின் செயல்கள் தான் அவற்றால்

பாதிக்கப்படுகின்றன. இவை தான் கோபம், கவலை, வருத்தம், குரோதம் போன்ற

உணர்ச்சிகளை உருவாக்கும் பொறுப்பில் இருக்கக் கூடியவை.

அதனால் தான் பாலின்பம் நிகழாத பெண் பெரும்பாலும் உணர்ச்சி

வயப்பட்ட நிலையிலேயே இருக்கிறாள். குரூரமாகவே நடந்து கொள்கிறாள்.

மார்புகள், சினைப்பை, கருப்பை, சிறுநீர்ப்பை, மற்றும் யோனிக்குழாய்

போன்றவை தான் பால்மண்டலத்தில் அமைந்துள்ள உறுப்புக்கள், பாலின்பம்

நிகழாத பெண்களுக்கு வருகின்ற பெரும்பாலான நோய்கள் இந்தப் பகுதிகளையே

தாக்குகின்றன.

பாலின்பத்தை போதுமான அளவிற்கு அனுபவிக்கும் பெண்களின் எந்த

உறுப்பையும் பால் மண்டலத்திலிருந்து பெரும்பாலும் அறுத்தெரியத்

தேவையிருக்காது. பாலின்பம் உறுப்புக்களைப் பாதுகாத்து விடும்.

இவையெல்லாம் ஆயுர்வேதத்தால் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே

நிரூபிக்கப் பட்டுள்ள பேருண்மைகள். இன்றைய அலோபதி அறிவியலும்

ஆதாரங்களோடு நிரூபித்துக் கொண்டிருக்கிறது.

ஆழ்மனம் நடத்தும் நர்த்தனம்**.**

உடலில் செய்யப்படும் மிகையலங்காரம் எதிர்ப்பால் இனத்திற்கு விடப்படும்

காதல் அழைப்பு. நகச்சாயம் பூசுவது முதல் கவர்ச்சியான ஆடையைத்

தேர்ந்தெடுப்பது வரை அனைத்துக்கும் காரணம் பாலின்ப ஆர்வம். ஆனால் இதை

ஒப்புக் கொள்வது கடினம்.

ஏனெனில், மனிதர்களுக்கே தெரியாமல் அவர்களுடைய ஆழ்மனம் நடத்தும்

நர்த்தனம் அது. பழந்தமிழ் முதல் இன்றைய நவீன நூல்கள் வரை பல நூல்கள்

இந்தத் தகவலைப் பற்றித் தெளிவாகப் பேசுகின்றன.

வழக்கத்தை விடக் கூடுதலான வேகத்தில் இமைத்துக் கொண்டிருக்கும்

கண்களை அகலமாக விரித்தபடியே, உள்ளங்கையின் உட்புறம் தெரியக் காதருகில்

உள்ள கூந்தலை விலக்கிக் கழுத்தைக் காட்டியபடியே, ஆணின் உடலை நோக்கிப்

பாதங்கள் இருக்க, அவனது கண்களைக் கண்களால் தழுவிய படியே, மெல்லிய

புன்முறுவலை ஆண் மீது ஒரு பெண் வீசினால், அது தன்னுணர்வற்ற நிலையில்

அவளையறியாமலே அந்த ஆணுக்கு விடுக்கின்ற காதல் தூது என்று பொருள்,

பெண்ணின் உடலில் வாழும் ஆழ்மனம் சம்பந்தப்பட்ட பெண்ணுக்கே

தெரியாமல் நடத்தும் மற்றொரு நர்த்தனம் இது. உடல் மொழி மூலம் உள்ளக்

கிடக்கையைத் தெரிவித்தல் தன்னையறியாமல் நிகழக் கூடிய ஆழ்மன

நடனங்களில் ஒன்று.

உடல் மொழி பற்றி வெளிவந்துள்ள அனைத்து நூல்களும் பெண்

எவ்வாறெல்லாம் தன்னுணர்வற்ற நிலையில் ஒரு ஆடவனிடம் தன் காதலைத்

தெரிவிக்கிறாள் என்பதைப் பற்றித் தெளிவாகக் கூறுகின்றன.

அதே போல, தணிக்கப்படாத காமத்தின் விளைவால் உடலில்

உருவாகியுள்ள பாலின்ப ஆற்றாமையின் வெளிப்பாடுகளே பிடாரித்தனமான

செயல்கள்.

திருமண இணையின் மீது சொல்லப்படும் குற்றச்சாட்டுகளில்

பெரும்பாலானவை பாலின்ப ஆற்றாமையின் வெளிப்பாடுகள். இதையும்

மனிதர்களால் ஒப்புக் கொள்ள முடியாது. ஏனெனில், மனிதர்களுடைய ஆழ்மனம்

நடத்தும் மற்றொரு நடனம் இது.

இதைப் போன்ற எண்ணற்ற ஆழ் மன நடனங்களின் தொகுப்புத் தான்

மனித வாழ்க்கை, அதாவது பாலுணர்வு என்பது ஆழ்மனம் சார்ந்தது. பசி, தாகம்,

உறக்கம், மற்றும் சுவாசம் போன்ற செயல்கள் எப்படி, ஆழ்மனதால் இயக்கப்

படுகிறதோ, அதே போல், மனிதர்களின் பாலுணர்வு தொடர்பான பெரும்பாலான

நடத்தைகளும் ஆழ்மனம் சார்ந்தவை.

உணவும், நீரும், உறக்கமும், காற்றும் இல்லாவிட்டால் மனிதன் உயிர்வாழ

முடியாது. அதே போல பாலின்பம் இல்லாவிட்டால், மனிதப் பிறவியெடுத்த நபர்

மனிதப் பிறவியாக வாழ முடியாது, மிருகமாகத்தான் வாழ வேண்டியிருக்கும்.

மிருகங்கள் வெறித்தனமானவை. கோடியில் ஒருவர் விதிவிலக்காக இருக்கலாம்.

உதாரணமாக, என் கணவன் என் மீது செலுத்தும் அன்பைக் காட்டிலும் தன்

தாயின் மீது தான் அதிகமான அன்பைச் செலுத்துகிறான். என்

கணவனின்

குடும்பத்தில் ஒருத்தியாக நான் அங்கீகரிக்கப்படவில்லை. என்னுடைய இருத்தல்

மதிக்கப் படவில்லை. நான் வாய் திறந்து கேட்டாலும் எனக்கு வேண்டியவற்றை

வாங்கித் தருவதில்லை.

நான் எதை எதிர்பார்த்துத் திருமண வாழ்க்கைக்குள் நுழைந்தேனோ அது

எனக்குக் கிடைக்கவில்லை. என் தேவைகளைப் பற்றி கணவன் கண்டு

கொள்வதேயில்லை. நான் ஒரு வேலைக்காரியைப் போல் பயன்படுத்தப்

படுகிறேன். என்கிற பெண்ணின் கருத்துக்கள் அனைத்தும் பொய்யானவை.

அதாவது மாயை. இருள்.

மேற்கண்ட அதிருப்திகள் அனைத்துமே விளைவுகள். நான் ஒரு போகப்

பொருளாகப் பயன்படுத்தப் படுகிறேன் என்கிற ஒரே தகவல் தான், வெவ்வேறு

வடிவங்களில் வெளிப்படுகிறது.

தணிக்கப்படாத காமமே விதை. காம உணர்வு தணிக்கப்படும் போது, மேலே

சொல்லப்பட்ட அதிருப்திகள் அனைத்தும் தலைகீழாக மாறக் கூடியவை.

யார் போரைத் துவங்குகிறாரோ அவர் ஒரு நோயாளி.

ஒளி வரும் போது சுவடு தெரியாமல் அகன்று விடும் இயல்புடையது இருள்.

ஒளியின் முன் இருளின் பதிவுகள் கூட இருக்காது. அதே போலத் தான்

அகத் தேவைகள் அனைத்தும் மாயை. இருள். உடற்தேவை என்பது உண்மையான

தேவை. அது பூர்த்தி செய்யப்படும் போது அகத் தேவைகள் அனைத்தும் கானல்

நீரைப் போல் காணாமற் போய் விடும்.

பால் சார்ந்த உச்சகட்ட இன்பங்கள் என்பவை ஒளியைப் போன்றவை,

உடலில் உச்சகட்ட இன்பம் நிகழும் போது, ஒளியை கண்ட இருள் அகல்வது.

கூடத் தெரியாமல் அகன்று விடுவதைப் போல் மோசமான உணர்ச்சிகளும் அகன்றுவிடும்.

ஈடுபடும் ஒவ்வொரு முறையும் தவறாமல், உச்ச கட்டப் பாலின்பம் என்கிற

ஒளி விளக்கு இல்லற வாழ்வில் ஏற்றப்பட்டால், மனதில் தோன்றக் கூடிய கெட்ட

உணர்ச்சிகள் அகன்று நல்ல உணர்ச்சிகள் தோன்றி, இல்லற வாழ்க்கையில்

மகிழ்ச்சியை அதிகரித்துக் கொண்டேயிருக்கும்.

ஆகவே, இல்லற வாழ்வில் யார் போரைத் துவங்குகிறாரோ அவர் ஒரு

நோயாளி. அவர் ஒரு போகப் பொருளாகப் பயன் படுத்தப் படுகிறார். அதனால்,

பாலின்ப ஆற்றாமை என்கிற நோய் அவரைத் தாக்கியிருக்கிறது. ஆகவே

அவரோடு சரிக்குச் சரியாகப் போரிடக் கூடாது.

உடல் சார்ந்த ஒரு நோயாளியிடம் நடந்து கொள்வதைப் போன்றே பாலின்ப

ஆற்றாமை என்கிற மன நோய்க்கு ஆளான இணையிடம் அனுதாபத்தோடு நடந்து

கொள்ள வேண்டும். அவரது உடலில் சுரந்து கொண்டிருக்கும் நச்சுத் திரவத்தின்

சுரப்பைத் தடுத்து நிறுத்தி நல்ல திரவங்கள் சுரக்க அவருக்கு உதவ வேண்டும்.

சமூக நல்லொழுக்க விதிகளின் படி, திருமண இணையால் மட்டுமே

அவருக்கு உதவ முடியும்,

தினசரிகளில் வெளிவருகின்ற செய்திகளான, கணவனிடமிருந்து பிரிந்து

வாழ்தல், தானும் வாழாமல் விவாகரத்தும் வழங்காமல் திட்டமிட்டுக் கணவனின்

வாழ்க்கையைப் பாழடித்தல், கணவனுக்குப் பிறந்த குழந்தையை அவனுடைய

கண்ணிலேயே காட்டாமல் பிரித்து வளர்த்தல்,

கணவனுக்கு எதிரிலேயே கள்ளக் காதலனுடன் வாழ்க்கை நடத்துதல்,

வரதட்சணை குறித்துக் கனவு கூடக் கண்டிராத கணவனின் மீது வரதட்சணை

வழக்குத் தொடுத்தல், கணவனாகவே தற்கொலை செய்து கொண்டு செத்துப்

போகும் அளவிற்கு நெருக்கடி கொடுத்தல்,

திட்டமிட்டு கணவனைக் கொலை செய்தல், கணவனைத் தண்டிப்பதாகக்

கருதிக் கொண்டு குழந்தையைத் தண்ணீர்த் தொட்டிக்குள் தள்ளிக் கொலை

செய்தல் போன்றவையெல்லாம் நள்ளிரவில் நடைபெற்ற குடும்ப விவகாரச்

சண்டையின் விளைவுகளே.

மனைவியை அடித்தல், மது குடித்தல், பொறுப்பில்லாமல் நடந்து

கொள்தல், குடும்பச் செலவிற்குப் பணம் தர மறுத்தல், வீட்டை ஒரு விடுதி

போலப் பாவித்தல்,

சந்தேகப் படுதல், பிற ஆண்களுடன் சேர்த்து வைத்து கதை கட்டி விடுதல்,

மனைவியின் பெற்றோரைத் திட்டுதல், வீட்டை விட்டு மனைவியை

விரட்டியடித்தல், அல்லது தானே வீட்டை விட்டு வெளியேறி விடுதல்,

பிறன் மனை நோக்கல், மனைவியைத் தற்கொலைக்குத் தூண்டுதல் மற்றும்

நேரிடையாகவே மனைவியைக் கொலை செய்தல் போன்ற கணவனின்

செயல்களுக்கு, குடும்ப விவகாரச் சண்டையின் போது நடைபெறக்கூடிய

பரஸ்பரத் தூற்றல்களே விதையாக இருக்கின்றன,

பெரும்பாலான இளவயதுத் தற்கொலைகளுக்குப் பின்னால்

மறைந்திருக்கக் கூடிய முதன்மையான காரணம் பாலின்ப ஆற்றாமை.

பாலின்ப ஆற்றாமையால் பாதிக்கப் பட்டிருக்கும் வேளையில், குடும்ப

விவகாரச் சண்டையும் போடத் துவங்கினால், போதையேறிய ஒரு

குரங்கை

தேளொன்று கொட்டியதோடு, பிசாசும் பிடித்துக் கொண்ட மாதிரி தான்

தம்பதியரால் செயல் பட முடியும் என்று ஒரு நூல் கூறுகிறது.

குடும்ப விவகாரச் சண்டை என்பது என்ன**?**

அப்போது மணி இரவு பதினொன்று. மனைவி குழந்தையை அணைத்தபடி

உறங்கிக் கொண்டிருக் கிறாள். கணவன் அரவமில்லாமல் அவளை எழுப்புகிறான்.

தூக்கம் கலைந்த எரிச்சலில் அவள் சிறி விழுகிறாள்.

கணவன் பாலுறவில் ஈடுபட விரும்புகிறான். மனைவி விரும்பவில்லை.

கணவன் கெஞ்சுகிறான். மனைவியோ மிஞ்சுகிறாள். அதன் பின் கணவன்

வற்புறுத்துகிறான், மனைவி உறுதியாக மறுக்கிறாள். கணவன் மிரட்டுகிறான்.

மனைவி விரட்டுகிறாள்.

தான் செய்தவற்றையெல்லாம் சொல்லிக் காட்டி கணவன் அடம் பிடிக்கிறான்.

மனைவி எதற்கும் மசியவில்லை.

அதன்பின் மனைவியின் குடும்பத்தினரைப் பற்றியெல்லாம் கூட கணவன்

ஏசத் துவங்குகிறான், பதிலுக்கு கணவனின் குடும்பத்தினரைப் பற்றி மனைவி

ஏசத் தொடங்குகிறாள்.

ஒருவருக்கொருவர் பரஸ்பரம் இழிவு படுத்திப் பேசிக் கொள்கிறார்கள்,

இருவருடைய குரலும் உயரத் தொடங்குகிறது.

இருவரும் உணர்ச்சிவயப் படத் தொடங்கிய போது, சீர்தூக்கிப் பார்த்துப்

பேசக் கூடிய மேல்மனம் ஓடி ஒளிந்து கொள்கிறது. அதன்பின் தங்கள் திருமணம்

குறித்து ஆழ்மனதில் ரகசியமாக அடைந்து கிடந்த நிராசைகள் அனைத்தும்

கடல் மடை திறந்தாற் போலச் சீற்றத்துடன் பீறிட்டு வெளிவந்து

கொட்டத்

தொடங்குகின்றன.

ஒருவரை மற்றவர் ஏமாற்றி விட்டதாகக் குற்றம் சாட்டிக் கொள்கிறார்கள். பரம்

விரோதிகளை விட மோசமாக அவமதித்துக் கொள்கிறார்கள். உட்சபட்சமாகத்

தூற்றிக் கொள்கிறார்கள்.

ஆணின் ஆழ்மனதில் படிந்து கிடக்கும் ஆதிக்க மனோபாவம் காரணமாக,

கணவனின் கை நீளப் பார்க்கிறது. தன்னைத் தாக்க வரும் ஆபத்திலிருந்து

தற்காத்துக் கொள்ளும் கற்காலப் பெண்ணின் கூக்குரலாக, மனைவியின் குரல்

அண்டை வீட்டிற்குக் கேட்கும் அளவிற்கு அழுகை கலந்து உயரத்

தொடங்குகிறது.

அந்தச் சத்தத்தால், தூக்கம் கலைந்து எழுந்த குழந்தை தன்

உயிருக்குயிரான இரண்டு ஜீவன்களிடையே நடைபெற்றுக் கொண்டிருக்கும்

போரைக் கண்டு விழிபிதுங்கி அழத் தொடங்குகிறது. கணவன் அடங்கத்

தொடங்குகிறான்.

திருமண இணையின் மனதில் தங்களுக்குள்ள உண்மையான மதிப்பையும்,

அங்கீகாரத்தையும் இருவரும் தெள்ளத் தெளிவாக அறிந்து கொள்கிறார்கள்.

மனம் துடிக்கிறது. முகங்கள் பேயறைந்த மாதிரிக் காட்சியளிக்கிறது. உடல்

வேர்க்கிறது. வாய் வரள்கிறது. சுவாசத்தின் வேகம் அதிகரிக்கிறது. பல மைல் தூரம்

நிற்காமல் ஓடியதைப் போல் உடல் களைப்படைகிறது.

இருவருடைய மனநிலையும் கொதிநிலையில் இருக்கிறது. அப்படியே

ஆளுக்கொரு மூலையில் சுருண்டு படுத்துக் கொள்கிறார்கள். உறக்கம் வராமல்

புரள்கிறார்கள்.

மனதில் ஓடிக் கொண்டிருக்கும் எண்ணற்ற எண்ணங்களின் நெரிசலால்

மனம் சிந்திக்கவே முடியாமல் தடுமாறும் நேரத்தில் உறக்கம் வந்தது தெரியாமல்

உறங்கிப் போகிறார்கள்.

அடுத்த நாள் காலையில் அடித்துப் போட்டது போன்ற உடல் வலியோடும்,

யாரையோ பறிகொடுத்து விட்டதைப் போன்ற மனவலியோடும் மிகவும்

களைப்படைந்தவர்களாக விழித்தெழுகிறார்கள்.

இது தான் குடும்ப விவகாரச் சண்டை என்று எண்ண வேண்டாம்.

கணவனும் மனைவியும் ஒருவரையொருவர் மனதிற்குள் ரகசியமாக சபித்துக்

கொண்டே உறங்கச் சென்றாலும் அதுவும் குடும்ப விவகாரச் சண்டையே.

மேலே சொல்லப்பட்ட அனைத்தையும் மனதிற்குள்ளேயே நிகழ்த்திப்

பார்த்து விட்டு, வேறொரு காரணத்தை வைத்து அந்த ஆவேசத்தை

வெளியிட்டால், அதுவும் கூட குடும்ப விவகாரச் சண்டையே,

ஆகவே, கணவன் மனைவிக்கிடையே நடைபெறுகின்ற சண்டைகள்

அனைத்தும் தணிக்கப் படாத காமத்தை மையமாகக் கொண்ட ஒரே

நெடுந்தொடரே.

மோதல்கள் அனைத்தும், போகப் பொருளாக மனைவியைப் பயன்படுத்திக்

கொண்டிருப்பதன் அடையாளங்களே. விளைவுகளே.

எந்தக் குடும்பத்தில் மனைவி ஒரு போகப் பொருளாகப் பயன்படுத்தப்

படுகிறாளோ அந்தக் குடும்பத்தில் சண்டை நடந்தே தீரும்.

பல் வேறு காரணங்களை மையமாகக் கொண்டு வருவதைப் போன்று அவை

காட்சிப் படுத்தப் படலாம்.

சண்டைக்கான தலைப்புக்கள் அனைத்தும் ஆழ்மனம் நடத்துகின்ற

ஏமாற்று வித்தைகள்,

காமத்தை மையமாகக் கொண்டு நடைபெற்ற குடும்ப விவகாரச்

சண்டையின் போது, ஆழ்மனதில் நுழைந்து விட்ட எண்ணங்களை

அடிப்படையாகக் கொண்டு, கிடைத்த காரணத்தைத் தவற விடாமல் பயன்படுத்தி,

தனது சீற்றத்தை வெளிப்படுத்துகின்ற ஆழ்மனதின் நரித்தனங்களே பல்வேறு

தலைப்புகளில் சண்டைகளாக வெடிக்கின்றன.

மேலும், எப்படிப்பட்ட அதி மேதாசியையும் தொழில் போட்டிகளில்

தோல்வியடையச் செய்யக் கூடிய, குடும்பத்தின் பொருளாதாரத்தைச்

சரரிக்கக் கூடிய, குழந்தைகளின் எதிர்காலத்தைப் பாழடி. சுசுகி கூடிய,

கணவனைக் குடிகாரனாக மாற்றக் கூடிய, மனைவியைக் கள்ளக் காதலில்

தள்ளக் கூடிய பேராபத்து குடும்ப விவகாரச் சண்டையின் பின்னால்

மறைந்திருக்கிறது.

இந்த அத்தியாயத்தில் சொல்லப்பட்டுள்ள அனைத்தையும்

விஞ்ஞான பூர்வமாக நிரூபிக்க முடியும்.

**7.** தணிக்கப் படாத காமத்தால் உருவாகும்

காழ்ப்புணர்ச்சி எவ்வாறு குடும்பத்தை

தோல்வியடையச் செய்கிறது**?**

எண்ணம் போல் வாழ்வு.

அலாவுதீனும் ஆழ்மன பூதமும்**.**

மனிதனுக்கு இரண்டு மனங்கள் உண்டு. ஒன்று ஆழ்மனம். இனியொன்று

மேல்மனம், ஆழ்மனம் என்பது மனிதனுக்குள் வசிக்கும் கடவுள், பிரபஞ்ச

அறிவின் நீட்சி.

அதாவது பிரபஞ்ச அறிவை ஒரு மனித உடல் எனக் கொண்டால் ஆழ்மனம்

என்பது அந்த உடலில் உள்ள ஒரு உயிரணு.

ஆழ்மனதின் சக்தியை மனிதனுக்குப் புரிய வைப்பதற்காகவே அலாவுதீனும்

அற்புத விளக்கும் என்கிற கதை சொல்லப்பட்டிருக்கிறது. அந்தக் கதை இவ்வாறு

தொடங்குகிறது.

அலாவுதீன் என்கிற சிறுவன் மண்ணுக்குள் புதைந்து கிடந்த ஒரு

விளக்கைக் கண்டெடுத்தான், அந்த விளக்கின் மீது அழுக்குப் படிந்திருந்தது.

அந்த அழுக்கைப் போக்குவதற்காக, அலாவுதீன் விளக்கைத் துடைத்தான்.

உடனே அவன் முன்னால் ஒரு பெரும் பூதம் வந்து நின்றது. அதைக் கண்ட

அலாவுதீன் மிகவும் பயந்து விட்டான்,

ஆனால் அந்த பூதம் அவனை வணங்கிய படியே கூறியது. அலாவுதீன்

என்கிற என் எஜமானரே! ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக நான் மயங்கிக

கிடந்தேன். தங்கள் கையிலுள்ள விளக்கைத் தேய்த்தால் தான் மயக்கத்திலிருந்து

நான் விழித்தெழ முடியும் என்கிற சாபம் எனக்கு இடப்பட்டிருந்தது. இது வரை

யாருமே இந்த விளக்கைத் தேய்க்கவில்லை, தாங்கள் தான் தேய்த்தீர்கள், நான்

உயிர்த்தெழுந்து விட்டேன். ஆகவே, இனிமேல் நான் தங்களுடைய அடிமை,

தங்கள் உத்தரவு எந்தன் பாக்கியம் எனக் கூறி வணங்கி நின்றது.

அலாவுதீன் உத்தரவிட்டான், அதை உடனே பூதம் நிறைவேற்றியது.

எதற்காக நிறைவேற்ற வேண்டும் என்கிற கேள்வியே அங்கு இல்லை, அதன் பின்

தனக்கு வேண்டிய போதெல்லாம் அலாவுதீன் விளக்கைத் தேய்ப்பான். உடனே

பூதம் வரும். பணிந்து நின்று உத்தரவைக் கேட்கும். உத்தரவிட்டதும் உடனே

நிறைவேற்றி வைக்கும்.

ஏன்? எதற்கு? எப்படி? என்கிற கேள்வியெல்லாம் கேட்காது. அதனால்,

அலாவுதீன் பெரும் பணக்காரன் ஆனான். இளவரசியை மணந்தான்,

சிறப்பாய்

வாழ்ந்தான் என்று முடிகிற கதை மனிதனின் ஆழ் மனதைப் பற்றி

விளக்குவதற்கான ஒரு கற்பனைக் கதை.

அந்த உதாரணக் கதையின் படி, ஒவ்வொரு மனிதனும் அலாவுதீனே,

மனிதனின் ஆழ்மனம் தான் அந்த பூதம். சிந்தனையை நிகழ்த்திக்

கொண்டிருக்கும் மேல் மனம் தான் விளக்கு. அந்த மேல் மனதில் நடைபெற்றுக்

கொண்டிருக்கும் சிந்தனை தான் விளக்கைத் தேய்க்கின்ற செயல் மனிதனின்

சிந்தனை தான் ஆழ் மனதிற்கான உத்தரவு.

மனிதனின் சிந்தனையில் ஒடுகின்ற எண்ணத்தை உடனுக்குடன்

ஆழ்மனம் என்கிற பூதம் நிறைவேற்றி விடும். அது நல்ல சிந்தனையா அல்லது

மூடத்தனமான சிந்தனையா என்றெல்லாம் ஆழ்மனம் பார்க்காது.

மனிதனின் எண்ணத்தை உடனுக்குடன் நிறைவேற்றி விடுகிறோமே,

அதனால் அவனுக்கு நன்மை நிகழுமா? அல்லது தீமை விளைந்து விடுமா?

என்றெல்லாம் ஆழ்மனம் யோசிக்காது.

ஏனெனில் இது நல்லது, இது கெட்டது, எனப் பாகுபடுத்திப் பார்க்க ஆழ்

மனதிற்குத் தெரியாது. அது ஒரு மகாசக்தி. ஆனால், அதே அளவிற்கு அது ஒரு

மகா அப்பாவி. சூதுவாதெல்லாம் ஆழ்மனதிற்கு அறவே தெரியாது.

அலாவுதீனின் வாழ்க்கையில் ஒரு முறை இவ்வாறு நடந்தது. எதிரிகளிடம்

கொண்டு போய் என்னைச் சிக்க வை என்று தன் பூதத்திடம் அலாவுதீன்

உத்தரவிட்டான். அங்கே வேண்டாம் எஜமான் என்று மெல்லிய குரலில் பூதம்

கூறியது. இது தான் மனிதனின் உள்ளுணர்வு.

ஆனால் அலாவுதீனோ அந்த மெல்லிய குரலைக் கண்டு கொள்ளவில்லை.

அதன் பின் பூதம் எதுவுமே பேசவில்லை. உடனடியாக அலாவுதீனைக்

கொண்டு போய் எதிரிகளிடம் வகையாகச் சிக்க வைத்தது.

ஆழ்மனம் கேள்வி கேட்பதில்லை. சிந்தனை எதுவாயிருப்பினும் அதை

நிறைவேற்றுகிறது. எதற்காக இதை நிறைவேற்ற வேண்டும்? இதனால் நீ

அடையக்கூடிய நன்மை என்ன? இதை நிறைவேற்றினால் உனக்குத் தீங்கு

நேர்ந்து விடுமே என்றெல்லாம் ஆழ்மனம் எந்த மனிதனையும் கேள்வி

கேட்பதில்லை,

இதைச் செய்தால் பலன் சிறப்பாக இருக்காது போல் தோன்றுகிறதே என்று

சில சமயங்களில் மிகவும் மெல்லிய குரலில் சொல்லும். அந்த எச்சரிக்கையை

உள்ளுணர்வு என்றோ அல்லது தெய்வத்தின் குரல் என்றோ சொல்லலாம்.

அந்த மெல்லிய குரலுக்கு மனிதன் செவி சாய்க்கா விட்டால், தோல்வி

நிச்சயம். ஏனெனில் அதன்பின் அவனுடைய ஆழ்மனம் தன்னுடைய

தலைவனின் சிந்தனையை நிறைவேற்றி விடும்.

எண்ணம் போல் வாழ்வு என்பது பிரபஞ்ச விதி. இந்த விதியை மனதில்

வைத்தே விதிப்படி தான் அனைத்தும் நடக்கும் என்று நம் முன்னோர்

கூறியிருக்கிறார்கள். இந்த விதியை மாற்ற மனிதப் பிறவியால் முடியாது.

நான் கார் வாங்க விரும்பினேன். ஆனால், கடன் தான் வாங்கினேன். நான்

கோடீஸ்வரன் ஆக விரும்பினேன். ஆனால், கடன்காரனாக வாழ்கிறேன். நான்

வெற்றி பெற விரும்பினேன். ஆனால், தொடர் தோல்விகளையே சந்திக்கிறேன்.

என் எண்ணம் போல் என் வாழ்க்கை அமையவில்லையே! வீதி என் வாழ்வில்

தோற்றுப் போய் விட்டதே! ஆகவே விதிகளை நம்புவது முட்டாள்தனமாகத்

தெரிகிறதே, என்று கோடிக்கணக்கான மக்கள் கூறுகிறார்கள்.

இது உணர்வற்ற நிலையில் சொல்லப்படும் பொய். வீதி

தோற்கவேயில்லை.

அவரவர் எண்ணப்படி தான் அவரவர் வாழ்க்கை அமைந்திருக்கிறது. ஆனால்

அதை உணரும் திறன் தான் அவர்களுக்கு இல்லை.

ஆழ்மனதிற்கு உத்தரவிடுவது எப்படி**?**

எண்ணம் போல் வாழ்வு என்பது யாருடைய வாழ்விலும் எப்போதும்

தோல்வியடையாத ஒரு பிரபஞ்ச விதி. விதியை மாற்ற யாராலும் முடியாது என்பது

முன்னோர்கள் வாக்கு மட்டுமல்ல.விஞ்ஞான பூர்வ உண்மையும் கூட.

இந்த விதி எவ்வாறு அமுல் படுத்தப் படுகிறது? ஆழ்மனம் என்பது

கடவுளாகவே கூட இருக்கலாம். “மனமே கடவுள்” என்கிற பழமொழி கூட

இருக்கலாம். எனினும், மனிதனின் எண்ணங்களை ஆழ்மனம் எவ்வாறு

நிறைவேற்றுகிறது?

ஆழ்மனம் என்பது பிரபஞ்ச அறிவின் நீட்சி. அது பிரபஞ்சத்தோடு

இடைவிடாத தொடர்பிலிருக்கிறது. ஆகவே அது பிரபஞ்ச சக்தியிடம் தன்

தலைவனுடைய எண்ணத்தைப் பற்றி இருபத்து நான்கு மணி நேரமும்

இடைவிடாமல் சொல்லிக் கொண்டேயிருக்கிறது. அதனால் அந்த எண்ணத்தை

நிறைவேற்றியாக வேண்டிய நெருக்கடி பிரபஞ்ச சக்திக்கு ஏற்படுகிறது. பிரபஞ்ச

சக்தி நிறைவேற்றி வைக்கிறது.

உதாரணமாக ஒரு இலட்சம் கோடி ரூபாய் என்பது பெரிய தொகை,

ஆனால், பிரபஞ்சத்தைப் பொறுத்த வரை தூசுக்குச் சமம், ஒரே நொடியில்

பிரபஞ்சத்தால் அதைக் கொடுக்க முடியும். ஆனால், பிரபஞ்ச சக்தியிடம்

இந்த ஆசையைத் தெரிவிக்கக் கூடிய பூதமான ஆழ்மனதிற்கு உத்தரவிட

மனிதனுக்குத் தெரிய வேண்டும். அவ்வளவு தான்.

ஆழ்மனதிற்கு உத்தரவிடுவது எப்படி? மனித மனம் ஒரு நாளில்

அறுபதாயிரம் எண்ணங்களைச் சிந்திக்கிறது. அவ்வாறு சிந்திக்கப்படும்
அனைத்து எண்ணங்களும் ஆழ்மனதிற்குள் நுழைந்து விட முடியாது.
ஏனெனில் சாதாரண எண்ணங்கள் ஆழ்மனதிற்குள் நுழைய முடியாது. மேல்
மனம் என்கிற ஆழ்மனதின் காவலாளி உள்ளே நுழைய விடாமல் தடுத்து
விடுவான்.

ஆனால், இந்தக் காவலாளியை மீறி மனிதனால் செயல்படமுடியும்.
திட்டமிட்டு நம் ஆழ்மனதிற்குள் நம் எண்ணங்களை நுழைக்க முடியும்.
வாழ்க்கையில் என்ன நடக்க வேண்டுமென விரும்புகிறோமோ அதை
தொடர்ந்து நினைத்துக் கொண்டிருப்பதன் மூலமாக ஆழ்மனதிற்குள் நம்
எண்ணங்களை நுழைத்து விடலாம்.

ஒரு உதாரணத்தின் மூலமாக இதைப் புரிந்து கொள்ளலாம். இரும்புத்
தொழிற்சாலைகளில் இரும்பு அறுக்கப்படுவதற்கு ஒளிக்கற்றை (லேசர் பிம்)பயன்
படுத்தப் படுகிறது. இதை “கேஸ் கட்டிங்க்” என்று அழைக்கிறார்கள்.
ஒளி அலைகளை முறையாக ஒன்று குவிக்கும் போது, ஒளிக்கற்றை
உருவாகிறது. அவ்வாறு உருவான ஒளிக்கற்றை எத்துணை பருமனான
இரும்பையும் சத்தமில்லாமல் அறுத்து விடுகிறது.

இதே போலத் தான் மனிதனின் எண்ண அலைகளும் பலம் பெறுகின்றன.

ஒரே கருத்தையே தொடர்ந்து சிந்தித்துக் கொண்டிருந்தால், எப்படிப் பட்ட
எண்ணமாக இருந்தாலும் அது ஆழ்மனதிற்குள் நுழைந்து விடும். இதைத் தான்
தவம் என்று நம் முன்னோர்கள் கூறினார்கள்.

அதேபோல ஒரு குறிப்பிட்ட எண்ணத்தைப் படக் காட்சியாக,
தன்னுணர்வற்ற நிலையில் மனதில் தொடர்ந்து பார்த்துக் கொண்டிருப்பதன்
வாயிலாகவும் ஆழ்மனதிற்குள் நம் எண்ணங்களை நுழைத்து விடலாம். அதைத்

தான் கற்பனை என்று சொல்கிறோம்.

அவ்வாறு ஆழ்மனதிற்குள் கருத்தைச் செலுத்துவதற்காகத் தான்

விழித்தபடியே கனவு காணுங்கள் என்று பல அறிஞர் பெருமக்கள் கூறுகிறார்கள்.

அடுத்து, ஒரு காட்சியை நேரிடையாகவோ, அல்லது படக் காட்சியாகவோ

பார்க்கும் போதும், ஒரு நூலை மிகவும் லயிப்போடு தன்னுணர்வற்ற நிலையில்

வாசிக்கும் போதும் கூட, அவற்றில் சொல்லப்படுகி ன்ற கருத்துக்கள்

ஆழ்மனதிற்குள் நுழைந்து விடும்,

அவ்வாறு நுழைந்த பின் அந்தக் கருத்துக்களுக்கேற்பத் தான் குறிப்பிட்ட

மனிதரால் செயல் பட முடியும், ஆழ்மனக் கருத்திற்கு எதிராகச் செயல் பட

மனிதப் பிறவியால் முடியாது.

இந்த நூலின் முக்கியமான பல கருத்துக்களில் ஒன்றான குடும்ப விவகாரச்

சண்டை எவ்வாறெல்லாம் ஆபத்தான விளைவுகளை உருவாக்குகிறது என்கிற

விஞ்ஞான பூர்வ விளக்கங்கள் தம்பதியரின் ஆழ்மனதில் பதிந்து விட்டால் போதும்.

அதன் பின், குடும்ப விவகாரச் சண்டை துவங்கும் முன்பே தடுக்கப் பட்டு விடும்.

அதனால், எண்ணற்ற நன்மைகள் தம்பதியரின் வாழ்வில் நிகழும். குடும்ப

அமைப்பு முறையும் காப்பாற்றப் படும்.

ஆகவே மனிதப் பிறவிகளைப் பொறுத்த வரை, திட்டமிட்டு ஆழ்மனதிற்குள்

நுழைக்கப் படுகின்ற எண்ணங்களைக் காட்டிலும், தன்னுணர்வற்ற நிலையில்

ஆழ்மனதிற்குள் நுழையும் எண்ணங்களே அதிகம்.

மேலும் குடும்ப விவகாரச் சண்டையின் போது, தன்னுணர்வற்ற நிலையில்,

ஆழ்மனதிற்குள் எண்ணங்கள் நுழைவதைப் போல வாழ்வின் எந்தத்

தருணத்திலும் எண்ணங்கள் வடிகட்டப் படாத நிலையில் ஆழ்மனதிற்குள்

நுழைய முடியாது.

அவ்வாறு நுழைகின்ற எண்ணங்களையே தனக்கான உத்தரவாக ஆழ்மனம்

எடுத்துக் கொண்டு அதை நிறைவேற்றி விடுகிறது.

காமம் என்பது ஆழ்மனம் சார்ந்தது.

உதாரணமாக, குடும்ப விவகாரச் சண்டை நடைபெறக் கூடிய நேரத்தில்

சிந்திக்கப் படுகின்ற சிந்தனைகள் அனைத்தும் நேரிடையாக

ஆழ்மனதிற்குள்

நுழைந்து சிம்மாசணமிட்டு அமர்ந்து கொள்ளும் இயல்புடையவை.

அதற்கான முதற் காரணம் என்னவென்றால், குடும்ப விவகாரச் சண்டையின்

கருப் பொருளாகக் காமம் இருக்கிறது. காமம் ஆழ்மனம் சார்ந்தது. அதனால்,

காமம் குறித்த எந்தவொரு தகவலையும் ஆழமனமே நேரிடையாகக் கையாள்கிறது

மேல்மனம் இந்த விவகாரத்தில் தலையிடுவதில்லை. ஆகவே காமம் தொடர்பான

அனைத்து எண்ணங்களும் எவ்விதத் தடையுமின்றி ஆழ்மனதிற்குள் நுழையக்

கூடிய உரிமை படைத்தவை.

அதனால் தான் குழந்தையாக இருந்தது முதல் திருமணம் வரை

எதிர்ப்பாலினத்தைச் சேர்ந்தவருடன் நடத்திய சிறுபிள்ளைத்தனமான காதல்

விளையாட்டுக்களில் ஒன்று கூட மரணம் வரையிலும் மறப்பதேயில்லை.

இரண்டாவது காரணம், குடும்ப விவகாரச் சண்டை நடைபெறக் கூடிய

நேரத்தில் சிந்திக்கப் படுகின்ற சிந்தனை மன அழுத்தத்தை ஏற்படுத்துகிறது.

மன அழுத்தத்தோடு சிந்திக்கப் படுகின்ற சிந்தனைக்குப் பெயர் தான் தான்

உணர்ச்சிகரமான சிந்தனை

உணர்ச்சிகரமான சிந்தனை மனதில் நடைபெறும் போது ஆழ்மனதின்

காவலனான மேல்மனம் தன்னிலை மறந்த குழப்ப நிலையில் இருக்கும்.

அதனால், ஆழ்மனதிற்குள் எதை விடுவது எதைத் தடுப்பது என்கிற விசயத்தில்

தெளிவாக முடிவெடுக்க மேல் மனதால் முடியாது. இந்த சந்தடி சாக்கைப்

பயன்படுத்தி, எண்ணங்கள் ஆழ்மனதிற்குள் எளிதில் நுழைந்து விடும்.

மூன்றாவது காரணம், தூங்கியும் தூங்காமலும் இருக்கின்ற வேளை தான்

மேல்மனம் என்னும் காவலாளி அசந்து போகின்ற, சோர்ந்து போகின்ற, ஏமாந்து

போகின்ற வேளை, அதனால், எந்தவொரு கருத்தும் எளிதில் நுழையும் வகையில்,

முற்றிலும் காவலற்ற நிலையில் ஆழ்மனம் இருக்கிற வேளை அது.

நான்காவது காரணம் உணர்ச்சிகரமான செயல்களும் எண்ணங்களும்

ஒருசேர நடக்கும் போது ஆழ்மனதின் காவலாளியான மேல்மனம் தலைதெறிக்க

ஓடிப் போய் ஒளிந்து கொள்ளும். ஆகவே உணர்ச்சிகரமான சண்டையின் போது

சிந்திக்கப்படுகின்ற எண்ணங்கள் ஆழ்மனதிற்குள் எளிதாக நுழைந்து விடும்.

உதாரணமாக, ஒரு நபருக்கு எத்தனையோ மனிதர்கள் உதவியிருக்கிறார்கள்.

எத்தனையோ விதங்களில் உதவியிருக்கிறார்கள். ஆனால் அவர்களைப் பற்றிய

நினைவு மட்டும் இருக்கவே இருக்காது.

ஆனால், யாரோ ஒரு நபர் பத்து வருடங்களுக்கு முன் அவமதித்திருப்பான்.

அவனைப் பற்றிய நினைவு மட்டும் நேற்றுத் தான் நிகழ்ந்ததைப் போல்,

பசுமையாக நினைவில் இருக்கும், ஏனெனில், அந்த அவமதிப்பு சம்பவம் இந்த

நபருடைய உணர்ச்சிகளைக் கிளறி, அவற்றோடு ஒன்றிணைந்து விட்டது.

உணர்ச்சிகளோடு கலந்து விட்ட எந்த வொரு எண்ணமும் ஆழ்மனதில் இடம்

பிடித்து விடும்,

அதே போல், குடும்ப விவகாரச் சண்டை என்பதும் உணர்ச்சிகரமாக நடக்கக்

கூடியது. ஒருவரையொருவர் அவமதித்துக் கொள்ளும் படியான வார்த்தைகளைப்

பயன் படுத்தி நடைபெறக் கூடியது.

மிகவும் ஆபத்தான வேளை.

மேற்கண்ட நான்கு காரணங்களில் ஒரு காரணம் இருந்தாலே,

ஆழ்மனதிற்குள் மனிதனின் எண்ணங்கள் நுழைந்து விட முடியும் என்கிற

நிலையில், நான்கு காரணங்களும் ஒன்றாய்க் கூடி அமையும் போது, மிக மிக

எளிதாக மனிதனின் எண்ணங்கள் ஆழ்மனதிற்குள் நுழைந்து சிம்மாசனமிட்டு

அமர்ந்து கொள்கின்றன.

அவ்வாறு ஆழ்மனதில் சிம்மாசணமிட்டு அமரும் எண்ணங்களே

தொடர்ச்சியாக நடைபெறும் சிந்தனையாக இருக்கும். இந்தத் தொடர்

சிந்தனையே காரியங்களாக மாறும் வல்லமையுடையவை,

மானிடப் பிறவியைப் பொறுத்தவரை, எந்தவொரு செயலைச் செய்வதைக்

காட்டிலும், ஆழ்மனதிற்குள் ஒரு எண்ணத்தை நுழைப்பது தான் மிகவும்

சிரமமான செயல்.

ஆனால், குடும்ப விவகாரச் சண்டையின் போது எண்ணங்கள் நுழைவதைப்

போல, வாழ்வின் எந்தத் தருணத்திலும் ஆழ்மனதிற்குள் எண்ணங்கள் எளிதாக

நுழைந்து சிம்மாசணமிட்டு அமர முடியாது. குடும்ப விவகாரச் சண்டை

நடைபெறும் வேளை அந்த அளவிற்கு மிகவும் ஆபத்தான வேளை. இப்படிப்பட்ட

ஆபத்தான வேளையில் தான் தம்பதியர் இருவருடைய சிந்தனையும் துவங்குகிறது.

கணவன் சிந்திக்கிறான், “நன்றியற்றவள். ராட்சசி, எவ்வளவு நன்மைகளைச்

செய்திருக்கிறேன். ஆனால் எண்ணிப் பார்க்க மறுக்கிறாளே! தர மறுக்கிறாளே!

எதற்காக நான் சம்பாதிக்க வேண்டும்? இந்த சண்டாளிக்குக் கொட்டியழுவதற்கா?

பெண் பார்க்கச் சென்ற நாளன்று பரிதாபமாக முகத்தை வைத்துக் கொண்டு

என்னைக் கவிழ்த்து விட்டாளே! இரக்கப்பட்டு இவளைத்

தேர்ந்தெடுத்தது

இப்படித் தவறாகப் போய் விட்டதே! திருமணம் செய்த பிறகும் கூட

பிரம்மச்சாரியாகத் தான் நான் வாழ வேண்டுமா?

இந்த வாழ்க்கையை வாழத்தான் வேண்டுமா? எதற்காக நான் உயிர் வாழ்

வேண்டும்? ஏன் தற்கொலை செய்து கொள்ளக் கூடாது? எந்த வழியாகத்

தற்கொலை செய்து கொண்டால் வலியில்லாமல், சீக்கிரமாகச் சாக முடியும்?

ஒரு கணவனுக்குப் பாலின்பம் மறுக்கப்படும் செயல் பல்லாயிரம்

ஆண்டுகளாக நடைபெற்றதேயில்லை, கடந்த ஐம்பது ஆண்டுகளாகத்தான்

மறுத்தல் என்பது வழக்கத்திற்கு வந்திருக்கிறது. அதற்கு முன்னால்

கணவனுக்குரிய பாலின்பத்தைத் தர ஒரு மனைவியால் மறுக்க முடியாது.

அதனால் ஆணின் மரபணுக்களுக்கே இது புதுமையான அதிர்ச்சியாக

இருக்கிறது. ஆயிரக்கணக்கான தலைமுறைகளாக மட்டுமல்ல, இந்தத்.

தலைமுறையிலும் கூட குழந்தை பிறக்கும் வரை மறுக்கப்பட்டதில்லை. ஆனால்,

இப்போது மறுக்கப் படுகிறது

பாலின்பம் மறுக்கப் படும் போது, மொத்த உலகமும் அவனுக்கு எதிராக,

இருப்பது போல் உணர்கிறான். தன்னை ஒரு தோல்வியாளனாய் அவன் உருவகப்

படுத்திக் கொள்கிறான்.

மனைவி என்பவள் முழு உலகத்திற்குமான பிரதிநிதியாக கணவனுக்குத்

தெரிகிறாள், அதனால் அவன் எதற்கும் இலாயக்கற்றவன், தகுதிகளற்றவன்,

திறமையற்றவன் என்கிற கருத்தை அவனறியாமலே உருவாக்கிக் கொள்கிறான்,

வாழ்க்கையின் மீதே ஒருவித வெறுப்பேற்படுகிறது, மேற்கண்ட எண்ணங்கள்

அனைத்தும் உணர்ச்சிகரமானவை.

உறங்கப் போகின்ற வேளையில் இத்தகைய கருத்தை உருவாக்கிக் கொள்ளும்

போது, அது அவனுடைய ஆழ்மனதில் எளிதாக இடம் பிடித்து விடுகிறது.

அவனையறியாமலே சுயமதிப்பு தாழ்வுறத் தொடங்குகிறது. மன நிலை,

எதிர்மறைச் சிந்தனை என்கிற வலைக்குள் அகப்படுகிறது.

எளிதாய்ச் சாவது எப்படி என்கிற சிந்தனையோடு உறங்கச் சென்றவனின்

ஆழ்மனம் விடிய விடிய அவனுக்காக உழைக்கத் தொடங்குகிறது. சாகடிக்கா

விடினும் பரவாயில்லை. அவனுடைய சிந்தனையின் படி, எதற்கும்

இலாயக்கற்றவனாக, தகுதிகளற்றவனாக, திறமையற்றவனாக அவனை

உருவாக்க வேண்டுமே என முடிவெடுக்கிறது.

இரவு முழுவதும் அந்த எண்ணங்களையே எண்ணிக் கொண்டிருக்கிறது.

அதன் முதற்பணியாக மூளையிலும் உடலில் உள்ள சுரப்பிகளிலும் மோசமான

வேதிகள் சிலவற்றைச் சுரக்கச் செய்கிறது.

அவனுடைய உடலின் சக்தி மையங்களான சக்கரங்களின் சமநிலையை

சீர்குலைக்கிறது. அதனால், விடியும் போது கணவன் கொதி நிலையிலே

விழித்தெழுகிறான். ஆல்ஃபா மனநிலையில் மனைவியைச் சபித்தபடி உறங்கச்

சென்றவனின் மனதில் என்ன நிகழுமோ அது தவறாமல் நிகழ்கிறது. மனைவியின்

மீது வெறுப்பு படிகிறது.

உடலின் வேதிகளில் ஏற்பட்டுள்ள சமச்சீரின்மையால், மனதில் கோபம்.

உடலில் ஒரு விதக் கொதிநிலை, அந்தக் கொதி நிலையிலேயே பணிக்குச்

செல்கிறான். இரவு மறுக்கப்பட்ட காமம் ஏதோவொரு வகையில் பணியிடத்திலே

வெளிப்படுகிறது.

குடும்பம் போர்க்களமாகிறது.

இது தவிர்க்க முடியாதது. படுக்கையறை விளைவுகள் பணியிடத்திலே

நிச்சயமாக வெளிப்பட்டே தீரும். அதற்குக் காரணம் இரவிலே சுரந்த தவறான

வேதிகள்.

தேவையற்ற எரிச்சல், முன்கோபம், எதிர்த்துப் பேசுதல், கீழ்ப்படியாமை,

வம்புச்சண்டை, கணக்கிலே தவறு செய்தல், வேகமாக வாகனம் ஓட்டுதல்,

மது அருந்துதல், தவறான முடிவுகளை எடுத்தல், மற்றும் பிறன் மனை நோக்கல்

என்றும் இன்ன பிறவாகவும் ஏதோ ஒரு வகையிலோ அல்லது ஒவ்வொரு

செயலிலிலுமோ வெளிப்பட்டு அவனுடைய சுற்றுப் புறத்தைப் பாதிக்கிறது.

தணிக்கப் படாத காமம் ஒரு நபருடைய சிந்திக்கும் திறனை, சீர்தூக்கி

ஆராயும் திறனை, புரிந்து கொள்ளும் திறனை, ஆய்விடும் திறனை,விரைவாக

முடிவெடுக்கும் திறனை, நிர்வகிக்கும் திறனை, பிறரோடு சுமுகமாகத் பழகும்

திறனை, பிறரைக் கையாளும் திறனை,கற்கும் திறனை, கற்பிக்கும் திறனை,

வாதிடும் திறனை,ஞாபகத்திறனை, சுறுசுறுப்பாகவும், ஆர்வத்தோடும் செயல்படும்

திறனை, வாகனம் ஓட்டும் திறனை, விழிப்போடு முதலீடு செய்யும் திறனை,

பணமீட்டும் திறனை, ஈட்டிய பணத்தைக் கையாளும் திறனை என அனைத்துத்

திறன்களையும் மழுங்கடித்து, அந்த நபருடைய அடிப்படைப் பண்பையே மாற்றி

விடுகிறது. அவனுடைய ஐக்யூ முழுமையாகப் பாழடைகிறது. அதனால் அந்த

நபர் பிறருடைய பார்வையில் கடைந்தெடுத்த ஒரு மூடனாகக் காட்சியளிக்கிறான்,

இரு பாலருக்கும் இது பொருந்தும்.

அதனால் அவனுக்கிருந்த புற மதிப்பு குறைகிறது. புறமதிப்பிழத்தலால் சுய

மதிப்பு குறைகிறது. சுய மதிப்பு குறையும் போது தன்னம்பிக்கை தளர்கிறது.

தன்னம்பிக்கை தளரும் போது எதிர்மறைச் சிந்தனை நுழைகிறது.

எதிர்மறைச் சிந்தனை என்பது மூதேவியின் காதலன். ஒரு நபர்

மற்றவர்களுடன் கொள்ளும் தொடர்பும், பிறரைக் கையாளும் திறனும் தான்

அவனுடைய வாழ்க்கையின் முன்னேற்றத்தைத் தீர்மானிக்கும் காரணியாக

இருக்கிறது.

எதிர்மறைச் சிந்தனை மனதிற்குள் நுழையும் போது பிறருடனான

தொடர்புகளும், பிறரைக் கையாள்வதில் உள்ள திறனும் சீரழிந்து விடுகின்றன.

மேலும், மனதில் எதிர்மறைச் சிந்தனையோடு பணிகளில் ஈடுபடுவதால்

விளைவுகளும் எதிர்மறையாகவே விளைகின்றன.

தோல்வி வந்து அவனை ஆரத் தழுவுகிறது. தோல்வி வரும்போது

குடும்பத்தின் பொருளாதார நிலை சீர்குலைகிறது. பொருளாதாரம் சீர்குலையும்

போது, இல்லற வாழ்வில் இயல்பாய் இருக்க வேண்டிய பாலுணர்வு கோமா

நிலைக்குச் செல்கிறது.

பாலுணர்வு சாகும்போது, சரச சல்லாபங்களுக்குக் கூட இடமில்லாமற்

போகிறது. எந்தத் தம்பதியரிடையே சரச சல்லாபங்களுக்குக் கூட இல்லாமற்

போகிறதோ அவர்களிடையே சண்டை சச்சரவுகளுக்குப் பஞ்சமிருக்காது.

குற்றச்சாட்டுகளும், நியாயப்படுத்தல்களும், வாக்குவாதங்களும் மட்டுமே

தம்பதியருக்கிடையிலான உரையாடலாக மாறிப்போகிறது.

அதனால் குடும்பம் போர்க்களமாகிறது. அந்தச் சூழலில் வளரும் குழந்தை

நரகம் என்பது எப்படியிருக்கும் என்பதைத் தன் இளம் பிராயத்திலேயே

அனுபவபூர்வமாக அறிந்து கொள்கிறது.

ஆகவே கணவனின் உடலுக்குரிய பாலின்பத்தை வழங்க மனைவி

தொடர்ச்சியாக மறுக்கும் போது, எப்படிப்பட்ட மேதாவியின் மூளையும் மழுங்கிப்

போகிறது. அதனால், அவனுடைய தொழில் வாழ்விலே அவன் தோற்றுப்

போகிறான்.

அல்லது தன்னுடைய தகுதிக்கும் திறமைக்கும் உரிய வெற்றியைப் பெற

முடியாமல் அவனுடைய கல்விக்கேற்ற சிகாரங்களைத் தொட முடியாமல், அறப்

வெற்றிக்குரியவனாக தாழ்ந்து போகிறான்.

பிறன் மனை நோக்கி மதிப்பிழக்கிறான். குடிப்பழக்கத்திற்கு ஆளாகிறான்.

கவனம் சிதறிய நிலையில் விபத்துக்களில் சிக்குகிறான். பெரு நோய்களால் தாக்கப்

படுகிறான். அற்ப ஆயுளில் செத்தும் போகிறான்.

மனைவியின் நிலைமையைப் பார்க்கலாம்.

இரவு பதினோரு மணி வாக்கில், கணவனின் வற்புறுத்தலோடு கூடிய ஒரு

குட்டிச் சண்டைக்குப் பின் பாலுறவு தொடங்கியது. சண்டை நடந்த நேரம் கூட

உறவு நிகழவில்லை. மனைவிக்குரிய உராய்வின்பத்தைக் கூட முழுமையாக

வழங்காமல் கணவன் கழிவறை நோக்கி ஓடுகிறான்.

பெண்ணின் உடலில் பதுங்கிக் கிடந்த காம உணர்வுகளைத் தூண்டி விட்டு

விட்டு, அருகிலேயே படுத்து குறட்டை விட்டு உறங்கவும் தொடங்கி விட்டான்.

மனைவியின் நிம்மதியான உறக்கம் பறிபோய் விட்டது.

மனைவிக்கு இழைக்கப்படும் கொடுமைகளிலேயே அடிப்பது, குடிப்பது,

பணம் சம்பாதித்துக் கொடுக்காதது போன்றவற்றை விட மனைவியின்

மனதை

மிக மோசமாகப் பாதிக்கக் கூடிய கொடுமை போகப் பொருளாக அவளைப்

பயன்படுத்தும் மடமை. இந்தக் கொடுமைக்கு ஆளான மனைவி இப்போது

உறக்கமின்றித் தவித்த படியே கணவனைச் சபிக்கத் தொடங்கு கிறாள்,

விழிப்புணர்வற்ற மனிதர்களின் எந்தவொரு எண்ணமும் சுயமாக உருவாகக்

கூடியதல்ல, எண்காரங்கள் அனைத்தும் எதிர் விளைவுகள், நல்ல அனுபவங்களை

எதிர்கொள்ளும் போது நல்ல எண்ணங்களும், மோசமான அனுபவங்களை

எதிர்கொள்ளும் போது மோசமான எண்ணங்களும் ஏற்படுகின்றன. ஆகே

எண்ணங்களை உருவாக்கும் தொழிற்சாலைகளாக அனுபவங்கள் இருக்கின்றன.

மனைவியின் பாலுறவு ஒரு மோசமான அனுபவமாக இருக்கிறது. அந்த

மோசமான அனுபவம் பாலின்ப ஆற்றாமை என்கிற மனநோயை உருவாக்குகிறது.

நோயுற்ற மனதில் நல்ல எண்ணங்கள் உருவாக வாய்ப்பில்லை

ஆகவே, பாலின்ப ஆற்றாமை நோயால் பாதிக்கப் பட்டுள்ள மனைவியின்.

மனதில் கணவனைப் பற்றி நல்லெண்ணம் உருவாகாது. இது இயற்கை.

மேலும் போகப் பொருளாகவே மனைவியை எப்போதும் பயன்படுத்திக்

கொண்டிருக்கும் கணவனைப் பற்றி ஒரே ஒரு நல்லெண்ணம் கூட மனைவியின்

மனதில் உருவாகாது. இதுவும் இயற்கையே.

இவை போதாதென்று குடும்ப விவகாரச் சண்டையிலும் கணவன் ஈடுபடும்

போது, கணவனின் மீது கடுமையான காழ்ப்புணர்ச்சியே ஏற்பட்டு விடும்.

இவையெல்லாம் எதிர் விளைவுகள். ஆகவே யாராலும் மாற்ற முடியாதவை. அந்த

எதிர்விளைவு கீழ்க்கண்டவாறு நிகழ்கிறது.

சுயநலப் புலி, உறக்கத்தைப் பறித்துக் கொண்ட துரோகி. இவனால் நான்

என்ன சுகம் கண்டேன்? எதுவுமே தெரியாத இந்த மூடனோடு காலமெல்லாம்

எப்படித்தான் வாழ்வது? குழந்தை வேறு பிறந்து விட்டதே! இவனை விட்டுத்

தொலைக்கவும் முடியாதே!

வேண்டாம் என்றாலும் விட மறுக்கிறானே கையாலாகாதவன். இவனுக்குக்

கட்டி வைத்து என் வாழ்க்கையை நாசம் செய்து விட்டார்களே! இவனெல்லாம்

எதற்காகத் திருமணம் செய்து கொள்கிறான்? குடும்ப சுகம் அளிக்கத் தெரியாத

இவனெல்லாம் எவ்வளவு தான் சம்பாதித்து என்ன பயன்?

எல்லாவற்றையும் கரைத்துக் குடித்த மேதாவி மாதிரி யாரிடமாவது பேசும்

போது பார்க்க வேண்டுமே! ஒன்றும் தெரியாத மடையன்.

அந்த ஊரிலிருந்து வந்து பெண் கேட்டார்கள், இந்த ஊரிலிருந்து வந்து

பெண் கேட்டார்கள், உள்ளூரிலேயே கூட பெண் கேட்டார்கள், இவனை விட

எத்தனையோ கெட்டிக்காரர்களெல்லாம் வந்து பெண் கேட்டார்கள்.

ஆனால், பெண் பார்க்க வந்த நாளில், என்னைக் கவிழ்ப்பதற்காகவே

திட்டமிட்டு ஒரு புன்னகையை வீசி என்னைக் கவிழ்த்து விட்டானே! மயக்கி

விட்டாளே! குடும்பம் நடத்தத் தெரியாத இவனிடம் இப்படி ஏமாந்து போய் சிக்கி

கொண்டேனே! நான் ஏமாந்து விட்டேன், என் தகுதிக்கேற்ற நபர் இவன் அல்ல.

அடங்கிக் கிடந்த என் காமத்தைத் தூண்டி விடத்தானா அத்தனை

சண்டையிட்டான்? எவ்வளவு போராடினாலும் இவன் விடுவதில்லையே!

இவனிடமிருந்து எப்போது தான் எனக்கொரு விடிவு காலம் கிடைக்குமோ?

இவனுக்கு மட்டும் ஏன் இந்த ஆண்மைக் குறைபாடு?

ஏதேதோ சாதிப்பதாகப் பற்றிக் கொள்பவன் இவனுடைய குறையை மட்டும்

ஏன் சரி செய்து கொள்ளாமல் என்னைத் துன்புறுத்துகிறான்? என் மீது இவனுக்கு

சுத்தமாக அன்டியில்லையோ? இவனுடைய தொழிலைத் தவிர வேறு எதுவுமே

தெரியாத முட்டாளாக இவன் இருப்பதற்குக் காரணம் என்ன?

பணம், பணமென்று ஏன் பணத்தைக் கட்டிக் கொண்டு அலைகிறான்?

யாருக்கு வேண்டும் பணம்? என்னிடம் இல்லாத பணமா? பணத்தைத்

தலைக்கா கட்டிக் கொண்டு போகப் போகிறோம்? குறட்டை விட்டு

உறங்குவதைப் பார். இவனை அப்படியே கழுத்தைப் பிடித்து திருகி விட்டால்

தான் என்ன?

எனக்குத் துக்கம் வர மறுக்கிறதே! நான் எப்படித்தான் தூங்குவது? விடிய

விடியத் தூங்காமல் விழித்துக் கொண்டிருந்து விட்டு, நாளைய அலுவலகப்

பணிகளை எப்படித் தான் திறம்பட மேற்கொள்வது? அந்த அதிகாரி வேறு

கண்ணை மூடிக் கொண்டு திட்டுவானே! கடவுளே என்னைக் கொஞ்சம் தூங்க

வைக்க மாட்டாயா? என்றும் இன்ன பிறவாகவும் கணவனைச் சபித்தபடியே

பின்னிரவில் தன்னையறியாமல் வந்த உறக்கத்திலே உறங்கிப் போகிறாள்.

மனைவியின் சிந்தனை வார்த்தைக்கு வார்த்தை இப்படியே தான் இருக்கும்

என்று கூற முடியாது. அவரவர் வளர்ந்த சூழலுக்கேற்ப வார்த்தைகள் மாறலாம்.

எனினும் சிந்தனையின் மூலக்கருத்தில் மாற்றமிருக்காது.

மனைவியின் ஆழ்மனதிற்குள் இந்த எண்ணங்கள் அனைத்தும் சிறிது கூட

வடிகட்டப் படாமல் நுழைந்து விடுகிறது. ஆழ்மனம் மேற்கண்ட

எண்ணங்களையே தனக்குரிய உத்தரவாக எடுத்துக் கொண்டு செயலாற்றத்

தொடங்குகிறது. இரவு முழுவதும் அந்த எண்ணங்களையே எண்ணிக்

கொண்டிருக்கிறது.

உணர்ச்சிகள் தொற்றக் கூடியவை.

அதன் முதற்பணியாக அவளுடைய மூளையிலும் உடலில் உள்ள வேறு பல

சுரப்பிகளிலும் மோசமான வேதிகள் சிலவற்றைச் சுரக்கச் செய்கிறது. உடலின்

சக்தி மையங்களான சக்கரங்களின் சமச்சீர் நிலையைச் சீர்குலைக்கிறது.

அதனால், உறங்கச் சென்ற போது, கணவனைச் சபித்தபடியே உறங்கச்

சென்றவள் விழிக்கும் போது ஒரு சண்டைக்கோழியாகவே விழித்தெழுகிறாள்,

பாத்திரங்கள் உருளுகின்றன, காரணமே இல்லாமல் குழந்தைக்கு அடியோ

வசையோ விழுகிறது. உணவின் சுவை குறைகிறது. எதைக் கேட்டாலும்

குதர்க்கமான பதிலே வருகிறது. மீண்டும் கேட்டால் சீறி விழுகிறாள். உடலின்

தகிப்பால் முகத்தில் எண்ணெய் வடிய ஒரு காளிதேவியாகவே காட்சியளிக்கிறாள்.

உணர்ச்சிகள் தொற்றக் கூடியவை. உதாரணமாக ஒரு வருடக்

குழந்தையோடு ஒரு சில நிமிடங்கள் சேர்ந்திருந்தாலே, அந்தக் குழந்தையின்

மகிழ்ச்சியான மனநிலை பெரியவர்களுக்கும் ஒட்டிக்கொள்ளும் இப்போது

மனைவி கோபமான மனநிலையில் இருக்கிறாள். அதனால், அவளுடைய

கோபம் கணவனையும் தொற்றிக் கொள்கிறது.

வாய்ச் சண்டை மூள்கிறது. குழந்தை அழுகிறது. உணவருந்தாமலே

கணவன் பணிக்குச் செல்கிறான், அவனுள் கனன்று கொண்டிருக்கும்

கொதிநிலை

அவனையறியாமலே பணியிடத்திலே ஏதோவொரு வகையில் வெளிப்பட்டு

அவனுடைய சுற்றுப் புறத்தை பாதிக்கிறது.

அதனால் புறமதிப்பிழக்கிறான். புறமதிப்பிழத்தலால் சுய மதிப்பு குறைகிறது..

தன்னம்பிக்கை தளர்கிறது. எதிர்மறைச் சிந்தனை நுழைகிறது. அதன்பின் என்ன

நடக்குமோ அது தவறாமல் நடக்கிறது. தோல்வி வந்து அவனை ஆரத்

தழுவுகிறது

அந்த ஆண் தன்னுடைய தகுதிக்கும் திறமைக்கும் உரிய வெற்றியைப் பெற

முடியாமல் அவனுடைய கல்விக்கேற்ற சிகரங்களைத் தொட முடியாமல், அற்ப

வெற்றிக்குரியவனாக தாழ்ந்து போகிறான்.

கணவனுக்குரிய பாலின்பத்தை வழங்க மனைவி மறுத்த போது என்ன

நிகழ்ந்ததோ அதுவே தான் மனைவியிடம் பலவந்தமாகப் பாலின்பத்தை

அனுபவித்த போதும் நிகழ்கிறது.

பாலின்பம் மறுக்கப் பட்ட போது கணவனின் மனநிலை மட்டுமே

கொதிநிலையுற்றது. ஆனால், வற்புறுத்திப் புணர்ந்த போது, மனைவியின்

மனநிலையை அது பாதிக்கிறது. அவளுடைய உறக்கத்தைக் கெடுக்கிறது.

மனநிலையைக் கொதிநிலையாக்குகிறது. உணர்ச்சிகரமாகச் சிந்திக்கச் செய்கிறது.

கணவனின் மீது உருவாகியுள்ள வெறுப்பு மற்றும் கோபம் என்கிற

உணர்ச்சிகளை அதிகப் படுத்துவது எப்படி என்று இரவு முழுவதும்

மனைவியின் ஆழ்மனம் திட்டம் வகுக்கிறது. அந்தத் திட்டப்படி கணவனின்

ஆழ்மனதோடு அடுத்த நாள் பகற்பொழுதில் தொடர்பு கொள்கிறது.

மனிதப் பிறவியின் ஆழ்மனதால் இந்த உலகில் உள்ள எந்தவொரு மனிதப்

பிறவியின் ஆழ்மனதோடும் வினாடி நேரத்தில் தொடர்பு கொள்ள முடியும்.

அவ்வாறு தொடர்பு கொண்டு, கணவனை மது அருந்தி விட்டு வீட்டுக்கு

வரச் செய்கிறது. அல்லது நண்பர்களோடு ஊர்சுற்றி விட்டு இரவு பதினோரு

மணிக்கு வீடு திரும்பச் செய்கிறது. அல்லது பணத்தை இழக்கச் செய்கிறது.

அல்லது மோசமான முதலீடுகளில் இறங்கச் செய்கிறது. அல்லது வறுமையை

ஈர்க்கச் செய்கிறது.

மனைவியின் ஆழ்மன ஆலோசனையின் படி கணவனின் ஆழ்மனம்

அவனை எல்லா வகையான கேடு கெட்ட செயல்களிலும் ஈடுபடச் செய்கிறது.

அவனும் ஈடுபடுகிறான். அதனால், மனைவியின் ஆழ்மனதில் குடும்ப விவகாரச்

சண்டையின் போது உருவாகியிருந்த கணவனின் மீதான கோபம் மிதமிஞ்சிய

அளவில் அதிகரிக்கிறது.

அவ்வாறு தொடர்பு கொண்டு, கணவனை மது அருந்தி விட்டு வீட்டுக்கு

வரச் செய்கிறது. அல்லது நண்பர்களோடு ஊர்சுற்றி விட்டு இரவு பதினோரு

மணிக்கு வீடு திரும்பச் செய்கிறது. அல்லது பணத்தை இழக்கச் செய்கிறது.

அல்லது மோசமான முதலீடுகளில் இறங்கச் செய்கிறது. அல்லது வறுமையை

ஈர்க்கச் செய்கிறது.

மனைவியின் ஆழ்மன ஆலோசனையின் படி கணவனின் ஆழ்மனம்

அவனை எல்லா வகையான கேடு கெட்ட செயல்களிலும் ஈடுபடச் செய்கிறது.

அவனும் ஈடுபடுகிறான். அதனால், மனைவியின் ஆழ்மனதில் குடும்ப விவகாரச்

சண்டையின் போது உருவாகியிருந்த கணவனின் மீதான கோபம் மிதமிஞ்சிய

அளவில் அதிகரிக்கிறது.

அவ்வாறு ஏற்படுகின்ற மிதமிஞ்சிய ஆழ்மனக் கோபம் இறுதியில் ஆழ்மன

வெறுப்பாக மாறுகிறது. இவ்வாறு மனைவியின் ஆழ்மனதில் கணவனின் மீது

ஏற்பட்டு விடுகிற கடும் வெறுப்பு, பாலின்பம் என்பதே நிகழாத காரணத்தால்,

அவளுடைய ஒவ்வொரு செயலிலும் அவளையறியாமலே பீறிட்டு வெளியாகிக்

கொண்டேயிருக்கிறது.

ஆழ்மனதில் பதிந்து விட்ட கருத்துக்களின் படி தான் ஒரு மனிதப் பிறவியால்

இயங்க முடியும். ஆழ்மனதில் பதிந்து விட்ட கருத்துக்களுக்கு எதிராக ஒரு மனிதப்

பிறவியால் இயங்க முடியாது. இது அடிப்படையான உளவியல் விதி.

அந்த விதியின் படி, உச்ச கட்டப் பாலின்பமே நிகழாத போது, மனைவி

என்பவள் கணவனின் மீது ஆழமான வெறுப்புடையவளாகவே வாழ்ந்து

கொண்டிருக்கிறாள், அந்த வெறுப்பு தான் அவளுடைய ஒவ்வொரு செயலிலும்

அவளையறியாமலே வெளிப்பட்டுக் கொண்டேயிருக்கிறது.

அதன் முடிவாக கணவனின் ஒவ்வொரு செயலையும் குறை கூறும்

மனைவியாக உருமாறி விடுகிறாள்.

உடலின் சொந்த அறிவு**.**

உடலில் சுரக்கும் வேதிகளின் படியும் சரி, உளவியலின் படியும் சரி,

ஒருவருடைய படுக்கையறை விளைவுகள் நிச்சயமாக தன்னுணர்வற்ற நிலையிலே

வெளிப்பட்டே தீரும். ஏனெனில், பாலின்ப ஆற்றாமையால் உடலில் ஏற்படும்

அழுத்தம் ஏதோ ஒரு சீற்றச் செயலின் மூலமாக வெளியேறியாக வேண்டும்,

இல்லாவிட்டால் பாலின்ப ஆற்றாமையால் ஏற்பட்டுள்ள பத்து சதவீதப் பைத்திய நிலை முழுப் பைத்தியமாகவே கூட மாறி விடக் கூடும்.

மனித உடலுக்கென்று சொந்தமாக அறிவு இருக்கிறது. அது மனிதப் பிறவியின் ஆளுகைக்கு அப்பாற்பட்ட பேரறிவு. அந்தப் பேரறிவையெல்லாம் எந்தவொரு மனிதப் பிறவியாலும் தீண்டக் கூட முடியாது.

மேலும் அந்தப் பேரறிவிற்கு உடலைக் காப்பது குறித்த அனைத்து நுணுக்கங்களும் தெரியும், மிதமிஞ்சிய விரக தாபம், மனிதப் பிறவியை பைத்தியமாகவே கூட மாற்றக் கூடியது என்பதும் அப்பேரறிவிற்குத் தெளிவாகத் தெரியும்.

ஆகவே தணிக்கப் படாத காமத்தால், ‘முழுப் பைத்தியம் பிடித்து விடாமல் காத்துக் கொள்வதற்காக, அந்தப் பால் அழுத்தத்தை உடல் வெளியேற்ற முயற்சிக்கிறது.

அதாவது, மாசும், தூசும் நாசி வழியாக உடலுக்குள் நுழையும் போது, நுரையீரலுக்குள் காற்றழுத்தத்தை உருவாக்கி, சுவாசக் குழாய் வழியே அதைப் புயலாய்ச் சீறச் செய்து, அந்தத் தூசையும், மாசையும் ஒரே மூச்சில் உடல் வெளியேற்ற முயற்சிக்கிறது. அதைத் தான் நாம் தும்மல் என்று சொல்கிறோம்.

தும்மல் மனித முயற்சியால் நிகழும் செயல் அல்ல. உடலுக்குள் வாழும் பேரறிவான ஆழ்மனதின் உத்தரவுப்படி, எடுக்கப் படுகின்ற ஒரு தற்காப்பு நடவடிக்கை தான் தும்மல், இவற்றைப் போன்ற எண்ணற்ற தற்காப்பு நடவடிக்கைகளை ஆழ்மனம் எடுத்துக் கொண்டேயிருக்கிறது.

தூசுகளைத் தடுப்பதற்காகப் போடப்படும் தும்மலைப் போன்ற உடலின் தற்காப்பு நடவடிக்கைகள் தான், பாலின்ப ஆற்றாமை நோயால் தன்னுணர்வற்ற நிலையிலே, ஒரு மனிதப் பிறவிடமிருந்து வெளியாகக் கூடிய மனித சீற்றங்கள்,

ஆகவே பாலின்ப ஆற்றாமை நோயால் மனிதப் பிறவியின் உடல் பாதிக்கப் படும்

போதெல்லாம் அந்த நபரிடமிருந்து சிற்றச் செயல்கள் வெளியாகியே தீரும். திட்டம்

போட்டெல்லாம் மனிதப் பிறவியால் அதைத் தடுக்க முடியாது.

பணிக்குச் செல்லும் வாய்ப்பற்றோரின் படுக்கையறை விளைவுகள் குடும்ப

வாழ்க்கையில் வெளிப்பட்டே தீரும். மேலும் பணியிடத்தில் வெளிப்படும் போது

வரையறையோடு வெளியாகக் கூடிய உணர்ச்சிகள், குடும்பத்திற்குள் வெளிப்படும்

போது உச்ச பட்ச சீற்றத்துடன் வெளிப்படும்.

தொலைக் காட்சிப் போதையின் விளைவுகள்**.**

பணிக்குச் செல்லும் பெண்களைக் காட்டிலும் இல்லத்தரசியாக வாழும்

பெண்களும், பணி ஓய்வு பெற்று விட்ட பெண்களும், கூடுதலான கோபத்துடன்

கணவனிடம் நடந்து கொள்கிறார்கள். கணவனைப் பார்க்கும் ஒவ்வொரு

வினாடியும் அவன் மீது சீறிச் சீறி விழுகிறார்கள்,

வார்த்தைகளால் சீற முடியாத போது கண் பார்வையிலேயே அவனை எரித்து

விட முயல்கிறார்கள். அதனால் அத்தகைய பெண்ணின் கணவனால் ஒரு நிமிடம்

கூட வீட்டிற்குள் நிம்மதியாக இருக்க முடியாத சூழல் உருவாகிறது. இதற்கான

மறைமுகக் காரணங்களில் ஒன்று தொலைக்காட்சி போதை.

வீட்டிற்குள்ளேயே முடங்கிக் கிடப்பவர்கள் பெரும்பாலான நேரத்தை

தொலைக்காட்சி பார்ப்பதில் செலவிடுகிறார்கள். பாலின்ப ஆற்றாமையால்

பாதிக்கப்பட்டுள்ள பெண்களுக்கு அடுத்தவர்களுடைய அந்தரங்கத்தைப் பற்றித்

தெரிந்து கொள்வதிலும், அலசுவதிலும் மிகவும் ஆர்வம் இருக்கும்.

ஏனெனில், மறைமுகமாகப் பாலுறவை நினைவூட்டுகின்ற

பேச்சுக்களும்,

அடுத்தவர் படுகின்ற துன்பங்களைக் குரூரமாகப் பார்ப்பதும் பாலின்ப

ஆற்றாமையின் கடுமையை குறைக்கின்றன.

அதனால், பாலின்ப ஆற்றாமையால் பாதிக்கப் பட்டுள்ள பெண்கள்

பெரும்பாலும் நெடுந்தொடர்களை விரும்பிப் பார்க்கிறார்கள்.

ஆனால், பெரும்பாலான நெடுந்தொடர்கள் எதிர்விளைவையே

உருவாக்குகின்றன. தணிக்கப் படாத காமத்தால், காயப்பட்டுக் கிடக்கும்

பெண்ணின் நெஞ்சைக் குத்திக் கிளறி விடுகின்றன. உளவியல் ரீதியாக எரியு

நெருப்பில் எண்ணெய் வார்க்கும் வேலையை அவை செய்கின்றன.

மனித மனதை சோகத்தில் ஆழ்த்துவதும், வஞ்சக வலியால் துடிக்கச்

செய்வதும், துன்புற்று அழச் செய்வதும், உளவியல் பூர்வமாக ஒருவருடைய

மனதை உணர்ச்சி வயப்படச் செய்து விடுகின்றன.

அதனால் அந்த உணர்ச்சிகளுக்குரிய வேதிகள் மூளையில் சுரந்து

விடுகின்றன. நெடுந்தொடரின் அன்றைய காட்சி முடிந்து விட்டாலும், அந்தக்

காட்சியால் மூளையில் சுரந்திருந்த மோசமான உணர்ச்சிகளை உருவாக்கிய

வேதிகள் நீர்த்துப் போவதில்லை,

ஏனெனில், அந்த வேதி களால் ஏற்பட்டுள்ள உணர்ச்சி வெளியேறாத வரை

அந்த வேதிகள் நீர்க்காது, அவை மண்டைக்குள்ளிருந்தபடி அவற்றின்

தன்மைக்கேற்ற குணங்களான கோபம், ஆத்திரம், பகையுணர்ச்சி, பழியுணர்ச்சி

போன்றவற்றை ஆழ்மனதில் உருவாக்கி விடுகின்றன.

ஏற்கெனவே கொதி நிலையில் உள்ள மனம், நெடுந்தொடர்கள் ஏற்படுத்திய

வருத்த உணர்ச்சிகளால் சுரந்து விட்ட வேதிகளால் கொந்தளிக்கத்

தொடங்கி விடுகிறது. அவ்வாறு உருவான உணர்ச்சிக் கொந்தளிப்பை ஏதேனும்

ஒரு வகையில் வேளியேற்றியாக வேண்டும்.

எல்லா இடத்திலும் உணர்ச்சிக் கொந்தளிப்பை வெளியேற்ற முடியாது.

செல்லுமிடத்தில் தான் சினத்தை வெளியிட முடியும். குழந்தைகளோ வளர்ந்து

விட்டார்கள். ஆகவே, இருப்பதிலேயே எவ்விதத் தற்காப்பும் இல்லாத ஒரே இடம்

கணவன்.

அதனால் அவன் மீது பாய்ந்து, நெடுந்தொடர்களால் ஏற்பட்டிருந்த

உணர்ச்சிக் கொந்தளிப்பைப் பெண்கள் வெளியேற்றுகிறார்கள். வீட்டிற்கு வருகிற

கணவன் அந்தக் கொந்தளிப்பிற்குப் பலியாகிறான்.

எந்தவொரு உணர்ச்சியும் தொற்றக்கூடியது. ஆகவே, மனைவியின் கோப்

உணர்ச்சி கணவனின் மனநிலையைத் தொடர்ச்சியாகக் கொதி நிலையிலேயே

வைத்திருக்கிறது. அக்கொதிநிலை காரணமாக அவன் தவறான முதலீட்டு

முடிவுகளை எடுக்கிறான். குடும்பத்தின் பொருளாதாரம் பாழாகிறது. அல்லது

குடிக்கத் தொடங்கி நோயாளியாகிறான். அதன் மூலம், பெருநோய்க்கு ஆளாகி

தன் ஆயுளைக் குறைத்துக் கொள்கிறான்.

ஒருக்கால், கணவன் அதி புத்திசாலியாக இருந்து விட்டாலும், நெடுந்

தொடர்களால் மனதில் உருவாகியுள்ள உணர்ச்சியலைகள் அவற்றின்

தன்மைக்கேற்ற மோசமான விளைவுகளை அவர்கள் குடும்பத்தை நோக்கி

கண்டிப்பாக ஈர்த்துக் கொண்டு வந்தே தீரும். இந்த உண்மை விஞ்ஞான பூர்வ

நிரூபணத்திற்கு உட்பட்டது. இந்த நூலிலேயே அது விளக்கப் பட்டுள்ளது.

வறுமை எனப்படுவது யாதெனில்…

நிம்மதி தான் ஒரு நபருடைய மிகப் பெரும் சொத்து. நிம்மதி என்கிற

சொத்தை யாரெல்லாம் இழக்கிறார்களோ அவர்களெல்லாம் தவறாமல் தோல்வி,

வறுமை போன்ற கேடுகளைத் தங்கள் வாழ்க்கைக்குள் ஈர்ப்பார்கள்.

ஏனெனில், நிம்மதியை இழக்கும் போது மகிழ்ச்சி முழுமையாகச் செத்துப்

போகிறது. மகிழ்ச்சி சாகும் போது மூளையில் மோசமான வேதிகள் சுரக்கத்

தொடங்குகின்றன. அந்த வேதிகளின் விளைவாக சிந்தனை எதிர்மறையாக

மாறுகிறது.

அதன் காரணமாக, சாக்கம் குறைகிறது. உற்சாகம் மறைகிறது. ஊக்கமும்

உற்சாகமும் இல்லாமல் ஒரு பணியில் ஈடுபடும் போது அது பெரும்பாலும்

தோல்வியடைகிறது. தோல்வி வறுமையைக் கொண்டு வருகிறது.

ஊணுக்கே வழியற்ற நிலைமை தான் வறுமை என்றாகாது. இருக்கும்

நிலையிலிருந்து தாழ்வது வறுமை, வருடக் கணக்கில் வளராமல் இருப்பது வறுமை,

கற்ற கல்விக்கும், பெற்றுள்ள திறமைக்கும், அனுபவத்திற்கும் ஏற்ற உயர்வைப்

பெறாமல் போவது வறுமை,

மரியாதையை இழப்பது வறுமை, மகிழ்ச்சியடைய முடியாத நிலையில்

வாழ்வது வறுமை, வாய்விட்டுச் சிரிக்க முடியாதது வறுமை. இது போன்ற

எண்ணற்ற வெளிகளிலும், தளங்களிலும் உழன்று கொண்டிருப்போர் மட்டுமே

உணரும் வகையில் தன்னை வெளிப்படுத்தக் கூடியது வறுமை.

மகிழ்ச்சியான மனநிலை தான் வெற்றியை ஈர்க்கக் கூடிய காந்தம். மனநிலை

மகிழ்ச்சியாக இருந்தால் தான் மூளையில் நல்ல வேதி கள் சுரக்கும். அதன்

காரணமாக அதியற்புதமான யோசனைகள் பிறக்கும். அந்த யோசனைகளின் படி,

செயல்படுவதற்குரிய ஊக்கமும் உற்சாகமும் பிறக்கும். ஆண் செயல் படுவான்.

ஈடுபட்ட காரியத்தில் வெற்றி கிடைக்கும்.

அந்த வெற்றியால் தன்னம்பிக்கை அதிகரிக்கும். பெரிய திட்டங்களில்

இறங்குவான். அதனால், பெரும் வெற்றிகள் வந்து சேரும்.

ஆனால், இல்லற வாழ்வில் நடைபெறும் குடும்ப விவகாரச் சண்டை

காரணமாக மகிழ்ச்சியான மனநிலையை தம்பதியர் இழந்து விடுகிறார்கள்,

மகிழ்ச்சியும், நிம்மதியும் ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்கள், மகிழ்ச்சி

காணாமல் போகும் போது, நிம்மதியும் காணாமற் போய் விடுகிறது.

நிம்மதியை இழக்கும் போது மூளையின் செயல்படும் ஆற்றல் குறைகிறது.

அதனால், தவறான முடிவுகளை எடுக்கப் படுகிறது. ஒரு வினாடி நேர முடிவு

ஒரு குடும்பத்தைப் பத்தாண்டுகள் பின்னோக்கித் தள்ளப் போதுமானது.

இந்நிலையில் பல தவறான முடிவுகள் எடுக்கப் படும் போது, அந்தக்

குடும்பத்தைச் சேர்ந்த தம்பதிகள் தங்கள் வாழ்க்கையின் பல தளங்களில்

தோற்றுப் போகிறார்கள்,

அல்லது தங்கள் தகுதிக்கு ஏற்ற வெற்றிகளைப் பெற முடியாமல் சராசரிகளாக

வாழ்ந்து மடிகிறார்கள். இவ்வாறு, தகுதிக்கேற்ற உயர்வைப் பெற முடியாமல்

தவிப்பதும், திறமைக்கேற்ற சிகரங்களைத் தொட முடியாமல் மனம் மறுகி

வருந்துவதும் கூட ஒரு வகை வறுமையே.

மனித உடல் ஒரு இரசாயனத் தொழிற்சாலை.

மனித உடல் என்பது ஒரு பெரிய இரசாயனத் தொழிற்சாலை. மனித உடலில்

உருவாகக் கூடிய வேதி களை, அதே அளவிற்குத் துல்லியமான தரத்திலும்,

அளவிலும் தயாரிக்க வேண்டுமானால், பல்லாயிரம் கோடி ரூபாய்களில் ஒரு

தொழிற்சாலையை அமைக்க வேண்டியிருக்கும். அது தவிர, அவற்றின் மூலப்

பொருட்களுக்காக ஆயிரக்கணக்கான ஏக்கர் பூமி தேவைப்படும். அப்படிப் பட்ட

ஒரு விலை மதிப்பற்ற வேதிகளின் கூடம் தான் மனித உடல்.

மனிதனின் ஆழ்மனம் தான் மேற்கண்ட தொழிற்சாலையின் நிர்வாகி

அறிந்தும் அறியாமலும், தெரிந்தும், தெரியாமலும் தன்னுடைய ஆழ்மனதில்

நுழைக்கப்படும் எண்ணங்களுக்கேற்ப ஆழ்மனம் மேற்கண்ட வேதிகளைச் சுரக்கச்

செய்கிறது.

அவ்வாறு வேதிகளைச் சுரப்பதால் தான் மனித உணர்ச்சிகள் உருவாகின்றன,

ஆகவே, ஒவ்வொரு உணர்ச்சியும், எண்ணத்தின் தன்மைக் கேற்ப, ஒவ்வொரு

வேதிப்பொருள் சுரப்பதன் விளைவாகவே உருவாகிறது.

குடும்ப விவகாரச் சண்டை காமம் காரணமாக நடைபெறுகிறது. ஆகவே,

உணர்ச்சிகரமானது, மோசமான எண்ணங்களை ஏற்படுத்தக் கூடியது. அதனால்

தம்பதியரின் ஆழ்மனம் பாழ்படுகிறது.

ஆழ்மனம் பாழ்படுவதால் அது தன்னிலை மறந்து, மோசமான வேதிகளைச்

சுரக்கச் செய்கிறது. அதனால், குடும்ப விவகாரச் சண்டையில் ஈடுபடும் தம்பதியர்

எளிதில் உணர்ச்சி வயப்படும் நபர்களாகச் செயல் படுகிறார்கள்.

உணர்ச்சி வயப்பட்ட சிந்தனையால், அவரவர் மனதோடு கொள்ளும் உறவு

முதல் அடுத்தவர்களோடு மேற்கொள்ளும் உறவு வரை அனைத்துமே

கெடுகின்றன. மோசமான செயல்கள் பிறக்கின்றன.

அதனால், சுற்றுப்புறத்தை மோசமாக எதிர் கொள்கிறார்கள், மோசமான

விளைவுகளைப் பெறுகிறார்கள். மேற்கண்டவை அனைத்தும் தனியொரு

ஆழ்மனதால் தனிப்பட்ட முறையில் ஏற்படுத்தப் படுபவை.

இது தவிர, குடும்ப விவகாரச் சண்டையின் போது ஆழ்மனதிற்குள்

நுழையும் எண்ணங்களின் தன்மைக்கேற்ப, பிரபஞ்ச சக்தியின் உதவியோடும்

ஆழ்மனம் கெடுதல்களைக் கொண்டு வந்து சேர்க்கிறது.

எதிர்கொண்டு சமாளிக்க முடியாத பொருளாதார வீழ்ச்சி, வஞ்சகமாக

வீழ்த்தப் படுதல், பெருந் துரோகங்களுக்குப் பலியாதல், கொடூரமாக ஏமாற்றப்

படுதல், பல்லாண்டு கால செயல்களின் விளைவாய்ச் சேர்த்து வைத்திருந்த

நற்பெயரைப் பாழாக்குதல் போன்ற இன்னல்களையும், குணப்படுத்த முடியாத

நோய், கோர விபத்து, அகால மரணம் போன்ற தாங்கொணாத் துயரங்களையும்,

பிரபஞ்ச சக்தியின் துணையைப் பெற்று ஆழ்மனம் கொண்டு வந்து சேர்க்கிறது.

இத்தகைய கொடூரங்களைக் குடும்ப வாழ்விற்குள் நிக

ஆழ்மனதிற்கு பிரபஞ்ச சக்தியும் ஓடியோடி உதவி செய்கிறது.

## **8.** எண்ணங்களைக் காரியங்களாக மாற்ற பிரபஞ்ச சக்தி எவ்வாறெல்லாம் உழைக்கிறது**?**

எண்ணங்களை மாற்றாத வரை, தலை விதியை மாற்ற முடியாது.

இம்மியளவும் தவறாத ஒரு மகாசக்தி தான் பிரபஞ்ச சக்தி**.**

பிரபஞ்சம் எல்லையற்றது. பிரபஞ்சம் முழுவதும் மனிதர்களின் எண்ண

அலைகளால் நிரம்பி வழிகிறது. முதன் முதலாக உருவான மனிதனின்

சிந்தனையிலிருந்து, உலகில் தோன்றி மறைந்த அத்தனை ஞானிகள் மற்றும்

பேரறிஞர்களின் சிந்தனை ஈறாக, இந்த விநாடியில் நம்மால் சிந்திக்கப்படும்

எண்ணம் வரை அனைத்து எண்ணங்களும் அலைகளாகப் பிரபஞ்சத்தில்

கலந்திருக்கின்றன, அதனால் விநாடிக்கு பல்லாயிரம் கிலோ மீட்டர் வீதம்

பிரபஞ்சம் பெரிதாகிக் கொண்டே இருக்கிறது.

பிரபஞ்சம் சர்வ வல்லமை மிக்க மகாசக்தி. மனிதனின் ஆழ்மனம் எதைக்

கேட்டாலும் கொடுத்து விடக் கூடியது. எதற்காக உனக்கு தேவைப்படுகிறது

என்றெல்லாம் கேள்வி கேட்க பிரபஞ்சத்திற்குத் தெரியாது. கேட்டதைக்

கொடுத்தால் கெடுதல் விளையுமா அல்லது நன்மை விளையுமா என்பதை

ஆராய்ந்து பார்க்கவும் பிரபஞ்சத்திற்குத் தெரியாது.

ஆழ்மனம் என்கிற பூதத்தை விட இலட்சம் மடங்கு பிரபஞ்சம்

அப்பாவித்தனமானது. ஆழ்மனதிற்கு கடுகளவாவது சூழ்ச்சி தெரியும். ஆனால்,

பிரபஞ்சப் பேரறிவிற்கு சூழ்ச்சி என்றால் என்னவென்றே தெரியாது.

பிரபஞ்சத்தைப் பொறுத்தவரை நன்மை, தீமை என்று எதுவுமே இல்லை.

நல்லவன் தீயவன் என்று யாருமேயில்லை. நண்பன் பகைவன் என்கிற

பிரிவினையில்லை. ஆகவே, யார் எதைக் கேட்கிறார்களோ, அதைக் கொடுப்பது

மட்டுமே பிரபஞ்சத்திற்குத் தெரிந்த ஒரே வேலை.

ஒரு திருடன் திருடுவதற்குரிய திறமையைக் கேட்கிறானா? எதிரிகளால்

எளிதில் நுழைய முடியாத அமெரிக்காவிற்குள் நுழைந்து உலக வர்த்தக

மையத்தின் இரட்டை கோபுரங்களைத் தகர்த்தெரிய ஒரு தீவிர வாதி

விரும்புகிறானா?

உலகளாவிய ஒரு சாம்ராஜ்யத்தை கத்தியின்றி, இரத்தமின்றித் தோற்கடிக்க

ஒரு அரை நிர்வாணப் பக்கிரி விரும்புகிறாரா? வீடு வீடாகச் செய்தித் தாள் போடும்

பையன் இலட்சக்கணக்கான கோடிகளில் பணமீட்ட விரும்புகிறானா? ஒரு

கூலித் தொழிலாளி புதிய சைக்கிள் ஒன்றை வாங்க விரும்புகிறானா?

பிரபஞ்சத்தைப் பொறுத்த வரை மேற்கண்ட அனைத்தும் ஒரே மாதிரியான

கோரிக்கைகளே, எவ்விதக் கேள்வியும் கேட்காமல் அவற்றை நிறைவேற்றி

வைக்கும்.

ஒருவருடைய கோரிக்கையை நிறைவேற்றாமலிருக்க பிரபஞ்சத்தால்

முடியாது. ஒரு நபர் கேட்டதைப் பிரபஞ்சத்தால் தர முடியாமல் போகிற அந்த

விநாடி யே பிரபஞ்சம் அழிந்து போய்விடும். அந்த அளவிற்கு மனிதனின்

கோரிக்கையை நிறைவேற்றுவதில் இம்மியளவும் தவறாத ஒரு மகாசக்தி தான்

பிரபஞ்ச சக்தி.நம்ப முடியாத தகவலாக இது தெரியலாம். ஆனால் இது ஒரு பேருண்மை,

தற்போது விஞ்ஞான பூர்வமாக ஏற்றுக் கொள்ளப் பட்ட உண்மையும் கூட,

ஒரு மனிதன் எதைக் கேட்கிறானோ அதைத் தவறாமல் பெறுகிறான்,

மேலும் ஒருவரால் வலிந்து கேட்கப் படாத எதையும் யாருக்கும் பிரபஞ்சம்

பலவந்தமாக வழங்குவதில்லை,

அது ஒரு மகா சக்தி தான், ஆனால், யாருக்கு என்ன வேண்டும் என்பதை

அறிந்து கொள்ள முடியாத அப்பாவித்தனமான மகாசக்தி அது. அதனால்

கேட்பதைக் கொடுப்பதற்கு மட்டுமே பிரபஞ்சத்திற்குத் தெரியும்.

மேலும், மனிதன் கேட்பதையெல்லாம் கொடுப்பதன் காரணமாக அந்த

மனிதனுக்கு நன்மை விளையுமா அல்லது பெருந்தீமை விளையுமா என்பதும்

பிரபஞ்ச சக்திக்குத் தெரியாது.

உதாரணமாக ஒரு அணுகுண்டு இருக்கிறது. அந்த அணுகுண்டால், ஒரு

கோடி மக்கள் வாழும் நகரத்தை ஒரே மணி நேரத்திற்குள் படமாக்க முடியும்.

அவ்வளவு சக்தி படைத்தது அணுகுண்டு.

ஆனால், அந்த நகரத்தில் நல்லவர்கள் இருக்கிறார்களா? எதற்காக

அத்தனை பேரைக் கொல்ல வேண்டும் என்றெல்லாம் கேட்க அணுகுண்டுக்குத்

தெரியாது.

அதே அளவிலான அணுசக்தியைப் பயன்படுத்தி மின்சாரமும் தயாரிக்கலாம்.

அப்போதும் அந்த அணுசக்தி எவ்விதக் கேள்வியும் கேட்காது. எதற்காக மின்சாரம்

என்றெல்லாம் கேட்காமல் மின்சாரத்தை உருவாக்க உதவத் தொடங்கி விடும்,

இதைப் போன்ற ஒரு சக்தி தான் பிரபஞ்ச சக்தி.

ஒருவரால் கேட்கப்படும் எதையும் கொடுக்க பிரபஞ்சத்தால் முடியும். இந்த

விசயத்தில் பிரபஞ்சத்தைத் தடுக்கின்ற சக்தி எதுவுமே இல்லை. மேலும், அதைக்

கொடுக்க பிரபஞ்சத்திற்கு ஒரு விநாடி நேரம் கூடத் தேவையில்லை.

ஒரு நபருடைய விருப்பத்தை நிறைவேற்ற பூமி சுழல்வது ஒரு தடையாக

இருக்குமானால், பூமியின் சுழற்சியைக் கூட சற்று நேரம் நிறுத்தி வைக்க பிரபஞ்ச

சக்தியால் முடியும்.

மேலும், ஒவ்வொருவர் வாழ்விலும் அவரவர் கேட்டதைத் தான் பிரபஞ்சம்

தவறாமல் வழங்கியருக்கிறது மாட மாளிகைகளும், கூட கோபுரங்களும்,

இலட்சக்கணக்கான கோடிகளில் பணமும், மரியாதையும் அதேபோல,

நோய்களும், விபத்துக்களும், விவாகரத்தும், இளவயது மரணமும்,

அவமானங்களும் என ஒவ்வொருவர் வாழ்விலும் ஒவ்வொரு விதமாக நடந்துள்ளஅனைத்துமே அவரவரால் பிரபஞ்சத்திடம் வலிந்து கோரி வாங்கிக் கொள்ளப்பட்ட

வரங்களே.

பிரபஞ்சத்தின் இந்த விஞ்ஞான இரகசியத்தைத் தான் “தீதும் நன்றும் பிறர்

தர வாரா” என நச்சினார்க்கினியார் ஐந்தே வார்த்தைகளில் கூறியிருக்கிறார்.

எந்த மொழி பிரபஞ்ச சக்திக்குத் தெரிந்த மொழி**?**

நம்முடைய வாழ்விலும் கூட நாம் கேட்டவற்றை மட்டுமே பிரபஞ்சம்

இதுவரை கொடுத்திருக்கிறது. இதுவரை நாம் பெற்றுள்ள வெற்றிகளும்,

சந்தித்துள்ள தோல்விகளும் நம்மை நோக்கி நம்மால் வலிந்து ஈர்க்கப்பட்டவை,

அதாவது, நம்முடைய விருப்பங்களை தன்னுணர்வற்ற நிலையிலே நாம் பிரபஞ்ச

சக்தியிடம் தெரிவித்துக் கொண்டேயிருக்கிறோம். அவ்வாறு தெரிவிக்கும் போது,

நம்முடைய கோரிக்கைகளை பிரபஞ்ச சக்திக்குத் தெரிந்த மொழியிலும், தெரியாத

மொழியிலுமாக தெரிவித்துக் கொண்டிருக்கிறோம். மேலும், சிலவற்றைத்

தொடர்ச்சியாகவும் சிலவற்றை விட்டு விட்டும் தெரிவித்துக் கொண்டே

யிருக்கிறோம்.

எந்தக் கோரிக்கைகள் பிரபஞ்ச சக்திக்குத் தெரிந்த மொழியில் வைக்கப்

பட்டதோ, தொடர்ச்சியாகத் தெரிவிக்கப்பட்டதோ அவை பிரபஞ்ச சக்தியால்

உடனுக்குடன் நிறைவேற்றப்படுகின்றன,

பிரபஞ்ச சக்திக்குப் புரியாத மொழியில் வைக்கப்பட்ட கோரிக்கைகளைப்

பிரபஞ்சம் கண்டு கொள்ளவில்லை. அதே போல, நமக்கு நேரம் கிடைத்த போது

மட்டும் தெரிவிக்கப்பட்ட கோரிக்கைகளையும் பிரபஞ்சம் கண்டு கொள்ளவில்லை.

அப்படியானால், பிரபஞ்ச சக்திக்கென்று ஒரு மொழி இருக்கிறதா? அந்த

மொழி மனிதனுக்குத் தெரியுமா? எந்த மொழி பிரபஞ்ச மொழி?

மனிதப் பிறவியின் உணர்ச்சிகளே, உணர்ச்சிகரமான எண்ணங்களே

பிரபஞ்ச சக்திக்குத் தெரிந்த ஒரே மொழி, மனிதப் பிறவியின் மனதில்

உணர்ச்சிகரமான சிந்தனை தொடர்ச்சியாக நடைபெறும் போது, அவை பிரபஞ்ச

சக்தியிடம் வைக்கப்படும் பிரார்த்தனைகளாக மாறி விடுகின்றன.

ஒரு நாளில் ஏறக்குறைய அறுபதாயிரம் எண்ணங்கள் வரை மனிதன்

சிந்தித்து விடுகிறான். ஆனால் அந்த எண்ணங்கள் எதுவுமே பிரபஞ்ச

சக்திக்குப்

புரியாது. ஏனெனில், உணர்ச்சிகரமாகவும், தொடர்ச்சியாகவும் நிகழக்கூடிய

சிந்தனையே பிரபஞ்சத்திற்குத் தெரிந்த ஒரே மொழி.

இப்போது ஆழ்மனம் என்கிற நம்முடைய பூதத்திடம் வருவோம்.

ஆழ்மனதில் நுழையக்கூடிய எண்ணங்கள் அனைத்துமே உணர்ச்சிகரமானவை.

உணர்ச்சியோடு கலக்கப்படாத எந்த எண்ணமும் ஆழ்மனதிற்குள் நுழைய

முடியாது. அதற்கான காரணங்களைப் பற்றி நாம் கடந்த அத்தியாயத்திலேயே

பார்த்து விட்டோம்,

மேல்மனதில் நடைபெறக்கூடிய சிந்தனை தொடர்ச்சியாக

நடைபெறுவதில்லை. ஏனெனில், மனிதன் உறங்கத் தொடங்குவதற்கு ஒரு சில

நிமிடங்களுக்கு முன்பே மனிதனின் மேல் மனம் உறக்கத்தில் ஆழ்ந்து விடும்,

ஆகவே, ஆழ்மனதிற்குள் நுழையக்கூடிய எண்ணங்கள் மட்டுமே மனிதர்களால்

தொடர்ச்சியாகச் சிந்திக்கப் படுகின்ற சிந்தனையாகும். ஆகவே, ஆழ்மனதில்

பதிந்துள்ள நமது எண்ணங்களே பிரபஞ்ச சக்தியின் முன் நம்மால் வைக்கப்

படுகின்ற பிரார்த்தனை

எண்ண அலைகளிலே இனப் பாகுபாடுகள்**.**

ஆழ்மனதிற்குள் எவ்வாறெல்லாம் எண்ணங்கள் நுழைகின்றன என்பது

நமக்குத் தெரியும், ஆனால், ஆழ்மனதிற்குள் நுழையக் கூடிய எண்ணங்கள்

எவ்வாறு பிரபஞ்சத்தின் முன் வைக்கப்படுகின்ற உண்மையான பிரார்த்தனையாக

மாறுகின்றன என்கிற தகவலை நாம் விஞ்ஞான பூர்வமாகவும் புரிந்து கொள்ள

முடியும்.

சிந்தனை நடைபெறும் இடம் மூளை, மனிதன் எந்நேரமும் சிந்தித்துக்

கொண்டேயிருக்கிறான். அந்த சிந்தனைகள் அனைத்தும் அலைகள் வடிவிலே

மூளையிலிருந்து வெளியேறிக் கொண்டேயிருக்கிறது. இந்த அலைகளை நம் கண்ணால் பார்க்க முடியாது.

பிரபஞ்சம் என்பது மனிதனின் எண்ண அலைகளால் நிரம்பி வழிந்து,

ஒவ்வொரு வினாடியும் பெரிதாகிக் கொண்டேயிருக்கிறது. நம்முடைய

எண்ணங்களும் அலைகள் வடிவிலே பிரபஞ்சவெளிக்குள் நுழைந்து அங்கேயுள்ள

அலைகளோடு சேர்ந்து கொண்டேயிருக்கின்றன.

இவ்வாறு பிரபஞ்ச வெளி முழுவதும் தென்னை ரத்தின் சல்லி வேர்களைப்

போல், எண்ண அலைகள் பின்னிக்கொண்டிருக்கின்றன. அவற்றோடு தான்

இந்த வினாடியில் நம்மால் சிந்திக்கப்படும் எண்ணமும் அலைகள் வடிவிலே

போய்ச் சேர்ந்து கொண்டிருக்கிறது.

இவ்வாறு சேரும் போது சகட்டு மேனிக்குக் கிடைத்த அலைகளோடு நம்

எண்ண அலைகள் போய் சேர முடியாது. இனம் இனத்தோடு தான் சேரும்.

சேர முடியும். நம்முடைய எண்ண அலைகள் அதனுடைய இனத்தைச் சேர்ந்த

அலைகளோடு தான் சேர முடியும்.

எண்ண அலைகளில் ஏராளமான இனங்கள் இருக்கின்றன. இதில்

நம்முடைய இனம் எது என்று கண்டுபிடித்து அதனுடன் தான் நமது எண்ண

அலைகள் போய்ச் சேருகின்றன,

பிரபஞ்ச அலைகளில் இனப் பாகுபாடுகள் ஆழ் மனதின் உணர்ச்சிகளை

அடிப்படையாகக் கொண்டு உருவாகியிருக்கின்றன. இனம் என்பது மனித

மனதின் உணர்ச்சி. மனதில் உருவாகக் கூடிய ஒவ்வொரு உணர்ச்சியும்

ஒவ்வொரு

இனம்.

மகிழ்ச்சி, கோபம், நம்பிக்கை, கவலை, மனத்திருப்தி, ஏமாற்றம், வெற்றி,

தோல்வி, கழிவிரக்கம், குதூகலம், வெறுப்பு, எரிச்சல், மன்னிக்கும் தன்மை,

பயம், என மனிதனின் மனதில் ஏராளமான உணர்ச்சிகள் உருவாகின்றன,

அவ்வாறு உருவாகின்ற ஒவ்வொரு உணர்ச்சிக்கும் ஒவ்வொரு இராஜ்ஜியம்

என எண்ணற்ற இராஜ்ஜியங்கள் பிரபஞ்சத்தில் இருக்கின்றன. அவ்வாறுள்ள

ஒவ்வொரு இராஜ்ஜியமும் ஒவ்வொரு இனம்.

எந்த இனத்தைச் சேர்ந்ததாக மனிதனின் எண்ண அலைகள்

வெளியேறுகிறதோ அந்த இனத்தை ஆளும் இராஜ்ஜியத்துடன் அவனுடைய

எண்ண அலைகள் போய்ச் சேர்ந்து கொள்கின்றன. அதன் மூலம் அந்த இனத்தை

ஆளும் இராஜ்ஜியத்தின் எண்ண அலைகளுக்கும் மனித மூளைக்கும்

தொடர்பேற்று விடுகிறது.

ஆழ் மனமும் கை பேசியும்.

கைபேசியை உதாரணமாகக் கொண்டு, ஆழ்மனதிற்கும் பிரபஞ்சத்திற்கும்

இடையே உள்ள தொடர்பைப் பற்றித் தெளிவாகப் புரிந்து கொள்ளலாம்.

ஒவ்வொருவரிடமும் கைபேசி இருக்கிறது. நம்முடைய கைபேசியிலிருந்து

மின்காந்த அலைகள் வெளியேறிக் கொண்டேயிருக்கிறது. அவற்றால் நம்

இதயத்தின் செயல்பாடுகள் கூட பாதிக்கப்படும் என்று கூறுகிறார்கள். ஆனால்,

இதயத்தையே பாதிக்கக் கூடிய வலிமை பெற்றுள்ள கைபேசியின் அலைகளை

நம் கண்ணால் பார்க்க முடியாது.

அதே போல் நம் தலையிலிருந்து எண்ண அலைகள் வெளியேறிக்

கொண்டேயிருக்கின்றன. இவ்வாறு தொடர்ச்சியாக வெளியேறிக் கொண்டிருக்கும்

நம்முடைய எண்ண அலைகளையும் நம் கண்களால் பார்க்க முடியாது.

ஒவ்வொரு கைபேசிக்கும் தொலைத்தொடர்பு கோபுரத்திலிருந்து ஒரு

வழியாக மின் காந்த அலைகள் வந்து கொண்டிருக்கிறது. கை பசியிலிருந்து

வேறொரு வழியாக, கோபுரத்திற்கு அலைகள் சென்று கொண்டிருக்கிறது. ஒருவர்

பேசும் போதும், பேசாத போதும், உண்ணும் போதும், உறங்கும் போதும் வினாடி

நேரம் கூட இடைவெளி விடாமல், மேற்கண்ட இருவழிப் போக்குவரத்து நிகழ்ந்து

கொண்டேயிருக்கிறது.

இதே போலத் தான் மனிதனின் மூளையிலிருந்து எண்ண அலைகள் வினாடி

நேரம் கூட இடைவெளியின்றி வெளியேறிக் கொண்டேயிருக்கின்றன.

மேலும் நீண்ட தூரப் பயணத்தின் போது, ஒரு கைபேசி தொடர்ந்து இடம்

பெயர்ந்து கொண்டேயிருந்தாலும் கூட, தொடர்புக் கோபுரங்கள் மாறுமே தவிர,

தொடர்பு மட்டும் துண்டிக்கப் படுவதில்லை.

அதேபோல் ஒரு மனிதன் இமயமலைக்கே இடம் பெயர்ந்தாலும் எண்ண.

அலைகளுக்கும் பிரபஞ்ச சக்திக்கும் இடையே உள்ள தொடர்பு மட்டும் ஒரு

போதும் துண்டிக்கப் படுவதில்லை

அடுத்து, ஒரு நிறுவனத்தின் கைபேசியை எந்தப் பகுதிக்கு எடுத்துச்

சென்றாலும், அந்தக் கைபேசியின் இணைப்பு எந்த நிறுவனத்திடமிருந்து

பெறப்பட்டுள்ளதோ, அந்த நிறுவனத்திற்குச் சொந்தமான தொலைத்தொடர்பு

கோபுரத்தோடு தான் கைபேசியிலிருந்து செல்லும் மின்காந்த அலைகள் தொடர்பு

கொள்ள முடியும்.

அதே போலத்தான், மூளையிலிருந்து வெளியேறிக் கொண்டிருக்கக்

கூடிய எண்ண அலைகளும், அவற்றை ஒத்த இனத்தைச் சார்ந்த பிரபஞ்ச

அலைகளோடு தான் இணைய முடியும்.

ஆனால் கைபேசிக்கும், ஆழ்மனதிற்கும் இடையே சில வித்தியாசங்கள்

உண்டு, தேவையில்லாத நேரங்களில் கைபேசியை நாம் அணைத்து வைக்கலாம்.

இந்த வசதி மனித மூளையில் இல்லை. மூளையை அணைத்து வைக்க முடியாது.

ஆகவே மனிதனின் எண்ணங்கள் வினாடி நேரம் கூட இடைவெளியின்றி

பிரபஞ்சத்திற்கு சென்று கொண்டே தான் இருக்கும்.

சென்று கொண்டிருக்கும் எண்ணங்களின் தரத்திற்கேற்ற பிரபஞ்ச அலைகள்

வந்து கொண்டே தான் இருக்கும். இந்த எண்ண அலைகளின் போக்குவரத்தை

குறட்டை விட்டு உறங்கிக் கொண்டிருக்கும் போது கூடத் தடுத்து நிறுத்த

முடியாது. ஏனெனில், ஓய்வேயில்லாமல் இயங்கிக் கொண்டிருக்கும் ஆழ் மனதின்

வேலை இது.

அடுத்ததாக, நம் கைபேசி இந்த உலகில் உள்ள ஒவ்வொரு கைபேசியுடனும்

தொடர்பில் இருக்கிறது. தேவைப்பட்டால், உரிய எண் தெரிந்தால், இந்தியப்

பிரதமரின் கைபேசியோடு கூட நம்மால் தொடர்பு கொள்ள முடியும்..

கைபேசியை எடுத்து அவர் பதிலளிக்கலாம். அல்லது நிராகரிக்கலாம். அது

அவருடைய உரிமை. ஆனால், தொடர்பு கொள்ளும் நமது சாத்தியப் பாட்டை

அவரால் தடுக்க முடியாது. நமது கைபேசியின் அலைகள் நம்முடைய

சொற்படித்

தான் கேட்கும்

இதேபோலத் தான், நம்முடைய ஆழ்மனதால் எண்ண அலைகளின்

மூலமாக உலகிலுள்ள ஒவ்வொரு மனிதப் பிறவியின் ஆழ்மனதோடும் வினாடி

நேரத்தில் தொடர்பு கொள்ள முடியும். இந்தியப் பிரதமரும் விதிவிலக்கல்ல.

ஆனால், கைபேசியின் அழைப்பை நிராகரிப்பதைப் போல ஆழ்மனதின்

அழைப்பை பிரதமரால் நிராகரிக்க முடியாது. ஏனெனில், இந்தத் தொடர்பு

உணர்வற்ற நிலையில் தான் நிகழ்ந்து கொண்டிருக்கும்.

நாள் முழுவதும் வினாடி நேரம் கூட, இடைவிடாமல் கைபேசி இயங்கிக்

கொண்டேயிருக்கிறது. ஆனால் கைபேசியின் முழு இயக்கத்தையும் மனிதன்

பயன்படுத்துவதில்லை. யாரையேனும் தொடர்பு கொள்ளும் போதும், தனக்கு

வருகிற அழைப்பை ஏற்கும் போதும் மட்டுமே கைபேசியின் இயக்கம்

மனிதனுக்குப் பயன்படுகிறது.

அதேபோல, ஒவ்வொரு மனிதனின் மனமும் இடைவிடாமல் சிந்தித்துக்

கொண்டேயிருக்கிறது. அந்த சிந்தனைகள் அனைத்தும் மனிதனுக்குப்

பயன்படுவதில்லை, ஆழ்மனதிற்குள் நுழைந்து விடும் சிந்தனைகள் மட்டுமே

மனிதனின் பொக்கிசங்கள்.

ஏனெனில், அந்த சிந்தனையில் ஓடிக் கொண்டிருக்கும் எண்ணங்களைப்

போலத்தான், அந்த மனிதனுடைய வாழ்க்கை அமையும். இதைத் தான் எண்ணம்

போல் வாழ்வு என்று சொல்கிறார்கள்.

எண்ணங்கள் எவ்வாறு காரியங்களாக மாறுகிறது என்பதைப் பற்றிய

விளக்கம் கீழே தரப்படுகிறது. மனிதப் பிறவியின் உணர்ச்சிகரமான எண்ணங்கள்

மட்டுமே ஆழ்மனதிற்குள் நுழையக் கூடியவை, ஆழ்மனதிற்குள் நுழைந்து விட்ட

எண்ணங்கள் மட்டுமே தொடர்ச்சியாக நடைபெறக்கூடிய சிந்தனை.

தொடர்ச்சியான சிந்தனை மட்டுமே மனிதனின் மூளையிலிருந்து அலைகளாக

வெளியேறிக் கொண்டிருக்கிறது.

அவ்வாறு வெளியேறும் அலைகள் அவற்றின் இனத்தைச் சேர்ந்த பிரபஞ்ச

அலைகளோடு போய் இணைகின்றன. அவ்வாறு இணைந்ததும், பிரபஞ்சத்தின்

கோடான கோடி மைல்கள் வரை பரவியுள்ள அதே இனத்தைச் சேர்ந்த அலைகள்

அனைத்தும் மனிதனின் ஆழ்மனதிற்கான தொடர்பு சாதனமாக மாறி விடுகின்றன,

ஆழ்மனதில் குடிகொண்டுள்ள எண்ணம் நிறைவேறுவது அமெரிக்க அதிபர்

எடுக்கின்ற முடிவைச் சார்ந்து தான் இருக்கிறதென்றால், உடனே அவருடைய

ஆழ்மனதோடு, பிரபஞ்ச அலைகளின் மூலமாகத் தொடர்பு கொண்டு நம்முடைய

ஆழ்மனம் பேசத் தொடங்கி, நம் எண்ணத்தை ஈடேறச் செய்கிறது.

அமெரிக்க அதிபரோடு பேசுவதா அல்லது எவனாவது ஒரு வஞ்சகனோடு

பேசுவதா என்பது நமது மூளையிலிருந்து வெளியேறிக் கொண்டிருக்கும் எண்ண

அலைகளில் கலந்துள்ள உணர்ச்சியைப் பொறுத்தது.

எண்ணங்களில் கலந்துள்ள உணர்ச்சி மனதிற்கு மகிழ்ச்சியளிப்பதாக

இருந்தால், நல்லவர்களோடு நம் ஆழ்மனம் பேசும். எண்ணங்களில் கலந்துள்ள

உணர்ச்சி மனதிற்கு வருத்தமளிப்பதாக இருந்தால், நம் ஆழ்மனம்

வஞ்சகர்களோடு பேசும்.

அவ்வாறு பேசி, நம் எண்ணங்களில் கலந்திருந்த உணர்ச்சியைப் பலநூறு.

மடங்கு அதிகரித்திட உதவும் படி கேட்டுக் கொள்ளும்,

ஆழ்மனதின் கோரிக்கையை பிரஞ்ச சக்தி நிறைவேற்றி வைக்கும். இவ்வாறு

தான் ஒரு மனிதனின் தலைக்குள்ளிருந்து இடைவிடாமல் வெளியேறி

கொண்டிருக்கும் எண்ண அலைகளில் கலந்துள்ள உணர்ச்சிக்கேற்ப, அந்த

மனிதனின் வாழ்க்கை அமைகிறது.

அதுதவிர, மனிதனின் மூளையிலிருந்து வெளியேறும் எண்ண அலைகள்

தனது இனத்தைச் சேர்ந்த பிரபஞ்ச அலைகளோடு இணைந்ததும், பிரபஞ்சம்

முழுவதும் உள்ள அதே இனத்தைச் சேர்ந்த அலைகள் அனைத்தும் அந்த

மனிதனின் எண்ணங்களை நிறைவேற்றுவதற்காக நேரிடையாகவும் உழைக்கத்

தொடங்குகின்றன.

அதன் விளைவாக மூளையிலிருந்து வெளியேறிய எண்ண அலைகள் எந்த

உணர்ச்சியோடு வெளியேறிக் கொண்டிருந்ததோ அந்த உணர்ச்சியைப் பலநூறு

மடங்கு அதிகரிப்பதற்குரிய சம்பவங்கள் வாழ்வில் நடக்கத் தொடங்குகிறது.

இந்த விஞ்ஞான பூர்வ உண்மையைத்தான், தலைவிதி என்று பல்லாயிரம்

ஆண்டுகளுக்கு முன்பே நம் முன்னோர்கள் சொல்லிச் சென்றுள்ளனர்.

தம்பதியருடைய உறுதியான பிரார்த்தனை**.**

இப்போது நூலின் மூலக் கருத்தான குடும்ப விவகாரச் சண்டைக்கு

வருவோம், தம்பதியரிடையே காமம் தொடர்பாகக் குடும்ப விவகாரச் சண்டை

நடைபெறுகிறது, இது பெரும்பாலும் தோல்வியில் தான் முடிகிறது. ஏனெனில்,

யாரொருவர் வென்றாலும், அடுத்தவருடைய ஆழ்மனதில் தோல்விகரமான

எண்ணங்களைத் தான் நுழைக்கக் கூடியதாக அது இருக்கிறது.

வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுப்பதில் ஏமாந்து போய் விட்டோம்

என்கிற மோசமான சிந்தனையை தோற்றவருடைய மனதில் உருவாக்கி, நாம்

ஒரு ஏமாந்த சோணகிரி என்கிற சிந்தனையை ஆழ்மனதிற்குள் நுழைக்கக்

கூடிய சண்டையாக இது இருக்கிறது.

சிறந்த வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுக்க நம்மிடம் இருந்த

உரிமையை நிரந்தரமாக இழந்து விட்டோம் என்கிற பேரிழப்பு சிந்தனையை

ஆழ்மனதிற்குள் நுழைக்கக் கூடிய சண்டையாக இது இருக்கிறது. மேற்கண்ட

சிந்தனை சில நிமிடங்கள் மட்டுமே நிகழ்ந்திருந்தாலும், அவை ஆழ்மனதில்

இடம் பிடித்து விடுவதால் தம்பதியருடைய தொடர்ச்சியான எண்ணங்களாக

மாறிவிடுகின்றன.

அவ்வாறு தோல்வியும், ஏமாற்றமும், பேரிழப்பும் ஆழ்மனதின்

சிந்தனையாக ஏற்பட்ட பிறகு, ஆழ்மனம் அவற்றைப் பற்றியே எண்ணிக்

கொண்டிருக்கிறது. ஆழ்மனதிற்குள் நுழைந்து விட்ட சிந்தனைகள்

அனத்தும் தொடர்ச்சியாக நடைபெறக் கூடியவை. அதனால்,

ஒய்வொளிச்சலின்றி தொடர்ச்சியாக சிந்திக்கப் படுகின்ற, தன்னுணர்வற்ற

சிந்தனையாக அது உருவாகி விடுகிறது.

அந்த சிந்தனை ஆழ்மனதிற்கு வலியைத் தருகிற சிந்தனையாக, மன

அழுத்தத்தை உருவாக்கக் கூடிய சிந்தனையாக இருக்கிறது. மனதிற்கு

வலியையும், அழுத்தத்தையும் தரக்கூடிய சிந்தனையைத் தான் கவலை என்கிற

ஒற்றைச் சொல்லால் நாம் குறிப்பிடுகிறோம்.

கவலை என்பது ஒரு உணர்ச்சி. ஆகவே அது ஒரு உணர்ச்சிகரமான

சிந்தனையாகவும் மாறி விடுகிறது. உணர்ச்சிகரமான சிந்தனைகள்

அனைத்தும்

பிரபஞ்ச சக்தியின் முன் வைக்கப் படுகின்ற கோரிக்கைகளாக மாறிவிடுகின்றன.

அதன் காரணமாக, தோல்வியும், ஏமாற்றமும், பேரிழப்பும் தான் குடும்ப

விவகாரச் சண்டையில் ஈடுபட்ட தம்பதியருடைய உறுதியான பிரார்த்தனை

எனப் பிரபஞ்சம் ஏற்றுக் கொள்கிறது.

அந்தத் தம்பதியர் மிகவும் ஆழமாகக் கவலைப்பட விரும்புகிறார்கள். மிகப்

பெரிய அளவில் ஏமாற்றத்திற்கு ஆளாக, பல பேரிழப்புக்களைச் சந்திக்க

விரும்புகிறார்கள். அதனால் தான் அவர்களுடைய ஆழ்மனம் அவற்றையே

எண்ணிக் கொண்டிருக்கிறது. ஆகவே, அவற்றை நிறைவேற்ற வேண்டியது

உடனடிக் கடமை என்று கருதி, அவர்களுடைய எண்ணங்களை

நிறைவேற்றுவதற்கான காரியங்களைப் பிரபஞ்ச சக்தி செய்யத் தொடங்குகிறது.

அவர்களுடைய கவலையை அதிகரித்தாக வேண்டும். உடனடியாக

அதிகரித்தாக வேண்டும். அதன் நிமித்தமாக அவர்கள் வாழ்வில் ஏதாவது

கெடுதல் நடந்தாக வேண்டும். கெடுதலை நடத்திட சில மனிதர்கள் தேவை.

ஆகவே, அதற்கேற்ற நபர்களை உடனே பிரபஞ்சம் தேடுகிறது.

கவலை ஒரு மோசமான பிரார்த்தனை,

பிரபஞ்சம் அடையாளம் தெரியாத நபர்களைப் பெரும்பாலும் தேர்வு

செய்வதில்லை. ஏனெனில், அடையாளம் தெரியாத நபர்களிடம் மனிதர்கள் சற்று

எச்சரிக்கையாக இருப்பார்கள் என்பது பிரபஞ்ச சக்திக்குத் தெரியும்.

புதியவர்களால், ஒரு துரோகத்தையோ, மிகப் பெரிய ஏமாற்று

வேலையையோ செய்து, இந்த கவலைப் பட விரும்புகிற தம்பதியருடைய

கவலையை உடனடியாக அதிகரிக்கச் செய்து, தொடர்ச்சியாகவும், இப்போதைய

நிலையைக் காட்டிலும் கூடுதலாகவும் கவலையடையச் செய்ய முடியாது.

ஆத்மார்த்த நண்பனும், இரத்த சம்பந்தமுள்ள நெருங்கிய உறவின்னும்

தான் ஒரு நபருக்கு மிகவும் வேண்டியவர்கள். அவர்களிடம் தான் மனிதர்கள்

எச்சரிக்கையின்றி நடந்து கொள்வார்கள், அதனால், அப்படிப் பட்டவர்களால்

மட்டுமே, தாங்க முடியாத வலியைத் தருகின்ற மிகப் பெரிய துரோகங்களை

எளிதாகச் செய்ய முடியும்.

மேலும் அவர்களால் மட்டுமே எக்கச் சக்கமாகக் கவலையுறச் செய்ய முடியும்.

ஏனெனில், மிகவும் நெருங்கிய மனிதர்களின் துரோகத்திற்கு ஆளாதல் என்பது

ஒருவருடைய குழந்தையின் மரணம் தரக்கூடிய வேதனைக்கு இணையான மன

வலியைத் தரக் கூடியது. உட்ச பட்ச கவலையை உருவாக்கக் கூடியது.

துரோகத்தால் ஏற்பட்ட இழப்பு தருகிற மன வலி, அந்த திடீர் இழப்பின்

பாதிப்புக்களை எதிர்கொள்ள முடியாத குழப்பம் தருகிற வலி, அதன் பின்

தன் செயலை நியாயப் படுத்திக் கொள்வதற்காக, அந்த நெருங்கிய மனிதன்

நம்முடன் திட்டமிட்டு ஏற்படுத்திக் கொள்ளும் பகையால் ஏற்படும் வலி, அந்தப்

பகை காரணமாக அந்த வஞ்சகனின் பொய்யான குற்றச்சாட்டுக்களை

எதிர்கொள்ளும்போது ஏற்படும் வலி, தன்னுடைய முகத்தைக் காத்துக்

கொள்வதற்காகச் செய்யப்படும் அவனுடைய பொய்ப் பிரச்சாரத்தால்

ஏற்படுகின்ற மதிப்பிழப்பு தருகிற வலி, இவற்றை விட, மனிதர்களைப் பற்றி

நான் எடுத்திருந்த முடிவு இந்த அளவிற்குத் தவறானதா என்கிற சுய

பச்சாதாபம் தருகிற வலி என சொல்லொணாத் துயரத்தைத் தருகிற

வலியை

ஒரு நெருங்கிய உறவினரின் அல்லது நம்பிக்கைக்குரிய நண்பனின் வஞ்சகச்

செயலால் மட்டுமே உருவாக்க முடியும்.

இரத்தத் தொடர்புள்ள உறவினரும், நெருங்கிய நண்பனும்

செய்யக்கூடிய துரோகத்தையும், வஞ்சககத்தையும் புதிய நபர்கள்

மட்டுமல்ல, பரம விரோதிகளால் கூட, செய்து விட முடியாது.

ஆகவே, குடும்ப விவகாரச்சண்டை காரணமாகக் கவலைப் பட்டுக்

கொண்டிருக்கின்ற தம்பதியருடைய கவலையை அதிகரித்திட, நெருங்கிய

நண்பர்களோ, அல்லது முதல் வட்டத்தில் உள்ள உறவினர்களோ அல்லது

தொழில் கூட்டாளிகளோ தான் மிகச் சரியானவர்கள் என்று பிரபஞ்சம்

முடிவெடுக்கிறது.

அதன்பின், வாய்ப்புக் கிடைத்தால் துரோகம் செய்யத் தயங்காத

நண்பன் யார்? எந்தவொரு பஞ்சமா பாதகச் செயலையும் அஞ்சாமல்

செய்யக் கூடிய இரத்த உறவினர்யார்? நம்பிய கூட்டாளியைத் தயங்காமல

நடுத் தெருவில் நிறுத்தும் சூழ்ச்சிகரமான மனிதர்கள் யார்? என இந்த

தம்பதியருடைய நெருங்கிய வட்டத்திலிருந்தே ஆட்களைத் தேடிப்பிடிக்கிறது.

அவர்கள் ஒவ்வொருவராக வருகிறார்கள், நெருக்கத்தை அதிகரிக்கிறார்கள்.

அந்த நெருக்கத்தின் வாயிலாக இந்த தம்பதி யருடைய வளமைக்கான

மாற்றுக்கள் எவை, அவை எங்கேயுள்ளன என்கிற தகவல்களையெல்லாம்

தெரிந்து கொள்கிறார்கள்.

அதன்பின் தங்களுடைய பண்பாற்றலுக்கேற்ப பல வித்தைகளைப்

போடுகிறார்கள். அல்லது பத்தாண்டு காலச் செயல்களின்

மூலம் சேர்த்து வைத்துள்ள நற்பெயரைக் களங்கப் படுத்துகிறார்கள்,

அதனால், இந்த தம்பதியருக்கு தொடர்ச்சியாக இழப்புக்கள்

ஏற்படுகின்றன, புகழ் அழிகிறது. அதனால் மிதமிஞ்சிய கவலை ஏற்படுகிறது.

ஏமாற்றங்களை எதிர்கொள்ள முடியாமல் தற்கொலை செய்து கொண்டு

செத்துப் போய்விடலாமா என எண்ணத் துவங்குகிறார்கள்,

இவ்வாறாக, குடும்ப விவகாரச் சண்டையின் போது ஆழ்மனதிற்குள்

கவலையான சிந்தனையைத் துவங்கிய தம்பதியருடைய வாழ்க்கை கடைசியில்

ஒரு கவலைக் கிடங்காக மட்டுமல்ல, ஒரு கவலைக் கடலாகவே மாறிப் போய்

விடுகிறது.

ஒரு ஞானி இவ்வாறு கூறுகிறார். எதையும் எண்ணிக் கவலைப்படாதீர்கள்.

எனெனில், கவலை தான் உங்கள் பிரார்த்தனை என்று கருதி, மென்மேலும்

கூடுதலாகக் கவலைப்படும் சூழலை உங்கள் வாழ்வில் கடவுள் நிகழ்த்திக்

கொண்டேயிருப்பார்.

நம் அழைப்பின் பேரிலேயே வஞ்சகர்கள் வருகிறார்கள்.

நம்முடைய எண்ணத்தை நிறைவேற்றுவதற்காக, உலகிலுள்ள எந்த

வொரு நபருடைய ஆழ்மனதையும் மாற்ற பிரபஞ்ச சக்தியால் முடியும்,

அவ்வாறு மாற்றுவதற்கு வினாடி நேரம் கூட ஆகாது.

நம்முடைய எண்ணம் நிறைவேறுவது அமெரிக்க அதிபரின் முடிவில் தான்

இருக்கிறது என்கிற நிலைமை இருக்குமானால், அவருடைய ஆழ்மனதைத்

தொடர்பு கொண்டு, அவரை நமக்குச் சாதகமாக முடிவெடுக்கச் செய்ய பிரபஞ்ச

சக்தி உடனடியாகச் செயல் படத் தொடங்கி விடும். தள்ளிப் போடும்

பழக்கம் பிரபஞ்ச சக்தியிடம் இல்லை.

அதே போல, கடைந்தெடுத்த வஞ்சகனின் ஆழ்மனதை மாற்றுவதன்

மூலம் தான் நம் எண்ணம் ஈடேற முடியுமானால், கைதேர்ந்த வஞ்சகனைக்

கண்டுபிடித்து, அவனுடைய ஆழ்மனதிடம் பேசி, அவனை நம் வாழ்க்கைக்குள்.

மிகவும் நெருக்கமாகக் கொண்டு வரவும் பிரபஞ்சத்தால் முடியும்.

நம் வாழ்க்கைக்குள் யாரை ஊடுருவச் செய்ய வேண்டும் என்பது

நம்முடைய எண்ணங்களைப் பொறுத்தது.

உதாரணமாக ஒரு நபர் தன் திருமணம் குறித்து ஆழ்மன அளவில்

அதிருப்தியுடனே இருக்கும்போது, திருமண விசயத்தில் ஏமாந்து போய்

விட்டதாகத் தான் அவருடைய எண்ண அலைகள் வெளியேறிக் கொண்டிருக்கும்.

அதனால், அது தான் அவருடைய பிரார்த்தனை என்று கருதி, மென்மேலும்

ஏமாந்து போகிற சூழல்களைத் தான் பிரபஞ்சம் உருவாக்கிக் கொண்டிருக்கும்.

அதனால் அவர் தன்னுடைய வாழ்க்கையை நோக்கி ஏராளமான ஏமாற்றங்களை

ஈர்த்துக் கொண்டிருப்பார்.

வஞ்சகத்திற்கும், துரோகத்திற்கும் ஆளாவதில் அவருடைய

வாழ்க்கையில் பஞ்சமே இருக்காது.

அதன்பின், அவர் வஞ்சிக்கப்பட்ட விதம் குறித்தும், ஏமாற்றப்பட்ட விதம்

குறித்தும், அதனால் அடைந்துள்ள தோல்விகள் பற்றியும் தொடர்ந்து சிந்தனை

செய்து கொண்டிருப்பார். அவரால் அந்த சிந்தனையிலிருந்து மீளவே முடியாது.

அதனால், அவருடைய ஆழ்மனம் மேற்கண்ட எண்ண அலைகளைத் தான்

பிரபஞ்சத்திற்குத் தொடர்ச்சியாக அனுப்பிக் கொண்டிருக்கும்,

அதனால், இந்த நிலைமை தான் இவருக்குப் பிடித்திருக்கிறது. ஆகவே இது

தான் இவருடைய கோரிக்கை என்று எடுத்துக் கொண்டு மென்மேலும்

அதே போன்ற செயல்கள் இவரது வாழ்வில் தொடர்ந்து நடைபெற்றுக்

கொண்டிருக்கத் தேவைப்படுகின்ற வஞ்சகர்களின் ஆழ்மனதோடு

பேசி,

அவருடைய வாழ்க்கைக்குள் பிரபஞ்சம் அனுப்பி கொண்டேயிருக்கும்.

வஞ்சகர்கள் வருவார்கள், தங்கள் செயல்களைப் புரிவார்கள். அதனால்

வாழ்க்கை என்பது தொடர்ச்சியான துயரப் பயணமாக மாறி விடும், அதன்

விளைவாய், இந்த நபர் பெருந் தோல்வியடைவார்.

அடுத்த உதாரணத்தின் படி, வேறொரு நபர் குடும்ப விவகாரச் சண்டை

காரணமாக எப்போதும் தற்கொலை செய்து கொள்வது பற்றியே சிந்தனை

செய்து கொண்டிருக்கிறார். ஆனால், அதைச் செய்து கொள்ளும் துணிச்சல்

அவரிடம் இல்லை. அந்த நிலையில் அவர் செத்துப் போக பிரபஞ்சம்

உதவி செய்யும்.

அவர் சென்று கொண்டிருக்கும் சாலையில் வந்து கொண்டிருக்கும் ஒரு

கனரக வாகனத்தின் ஓட்டுனரின் ஆழ்மனதோடு பேசி, தனது வாகனத்தைத்

தாறுமாறாக இயக்கி இந்த தற்கொலைப் பிரியரின் மீது மோத வைத்து

அவர் செத்துப் போக பிரபஞ்ச சக்தி உதவி செய்யும்.

மகிழ்ச்சியான மனநிலையே வெற்றியை ஈர்க்கும் காந்தம்**.**

எந்தவொரு மனித சாதனைக்கும் மூலாதாரம் மனிதனின் மனநிலை.

மகிழ்ச்சியான மன நிலையுடையவன் தொட்டவை அனைத்திலும்

வெற்றி பெறுகிறான். துக்ககரமான மனநிலையுடையவன் தோல்விகளிலேயே

துவண்டு கொண்டிருக்கிறான்.

ஏனெனில் மனநிலை மகிழ்ச்சியாக இருக்கும் போது மூளை மகிழ்ச்சியான

எண்ண அலைகளைப் பிரபஞ்சத்திற்கு அனுப்பிக் கொண்டிருக்கிறது.

அதனால் பிரபஞ்சம் அந்த மனிதனின் மகிழ்ச்சியை அதிகரிப்பதற்குரிய

பணிகளைச் செய்யத் துவங்குகிறது. அதன் முதற்படியாக மகிழ்ச்சியை

அதிகரிக்கின்ற சூழல்களை உருவாக்கக் கூடிய மனிதர்களை நெருக்கமான

வட்டத்திற்குள் கொண்டு வருகிறது.

மேலும் மகிழ்ச்சிகரமான மூளையை நோக்கி, எங்கெங்கிருந்தோ அற்புதமான

யோசனைகள் வரத் துவங்கி, மனிதனின் மூளை ஒரு யோசனைக் களஞ்சியமாக

மாறுகிறது. ஒரே ஒரு சரியான யோசனை கூட மகா வெற்றியடையப் போதுமானது.

அது தவிர, அந்த யோசனைகளின் படி செயல்படக் கூடிய ஊக்கத்தையும்

உற்சாகத்தையும் பிரபஞ்ச சக்தி மனிதனுக்கு அளிக்கிறது. சிறந்த முடிவுகளை

எடுக்கும் படி மனிதனை நெட்டித் தள்ளுகிறது. மோசமான முடிவுகளைக்

கைவிடச் செய்கிறது. ஏனெனில், ஒரே ஒரு தவறான முடிவு கூட ஒரு

நபரைப் பத்தாண்டுகள் பின்னோக்கித் தள்ளப் போதுமானது.

தோல்வியை எதிர்கொள்ள நேரிட்டாலும், அதுவும் ஒரு நன்மைக்கே என்று

கருதச் செய்கிறது. துவண்டு விடாமல் செயல் படச் செய்கிறது. அதனால்

மனநிலையை மகிழ்ச்சியாக வைத்திருக்கும் கலையைக் கற்றுக் கொண்ட மனிதன்

மகா சாதனையாளனாகிறான்.

ஆகவே மனநிலை என்பது தான் இந்த உலகிலேயே மிகப்பெரிய சொத்து.

அதை மகிழ்ச்சியாக வைத்திருப்பது தான் சாதனைகளுக்கெல்லாம் சாதனை.

மகிழ்ச்சி தான் வெற்றியை ஈர்க்கின்ற காந்தம். மகிழ்ச்சியான மனநிலையை

இழப்பது தான் தோல்விப் பயணத்தின் துவக்க விழா.

எண்ணம் போல் வாழ்வு.

மனிதனின் எந்தவொரு சாதனைக்கும் மூலாதாரம் அவனுடைய

மகிழ்ச்சியான மனநிலை. ஆனால் அந்த மனநிலையைக் கெடுப்பதில் முதலிடம்

வகிப்பது குடும்ப விவகாரச் சண்டை.

மனிதர்களின் மனநிலையைக் கோரமாகக் கொலை செய்வதில் குடும்ப

விவகாரச் சண்டைக்கு இணையான செயல் மனித வாழ்வில் வேறு எதுவும்

இல்லவே இல்லை. குடும்ப விவகாரச் சண்டைகள் அந்த அளவிற்கு ஆபத்தானவை.

ஒருவருடைய மனநிலையை எதிரிகளால் எளிதில் சீரழித்து விட முடியாது.

ஆனால், குடும்ப விவகாரச் சண்டைகளால் முடியும். ஏனெனில், குடும்ப

விவகாரச் சண்டையின் போது சிந்திக்கப் படுகின்ற ஒவ்வொரு எண்ணமும்

வடிகட்டப் படாமல், ஆழ்மனதிற்குள் சென்று பதிவாகக் கூடியவை. ஆகவே

பரம விரோதிகளால் கூட இழைக்க முடியாத கேடுகளையெல்லாம்

குடும்பத்திற்கு இழைக்கக் கூடியவை.

குடும்ப விவகாரச் சண்டைகளின் போது ஆழ்மனதிற்குள் நுழைந்து விடும்

கெட்ட எண்ணங்கள் தான் வாழ்வில் நிகழக்கூடிய அனைத்து விதமான.

கேடுகளுக்கும் முழு முதற் காரணம்.

குடும்ப விவகாரச் சண்டை நடக்கும் போது, தம்பதியர் உணர்ச்சி வயப்பட்ட

நிலையிலே சிந்தனை செய்கிறார்கள். உணர்ச்சி வயப்பட்ட நிலை என்பதே ஒரு

வகையான பைத்திய நிலைதான்

அறிவுக்கு அங்கே இடமிருப்பதில்லை. அறிவு வேலை செய்யாத போது

திருமணத்தால் பெற்றுள்ள நன்மைகள் எதுவுமே நினைவுக்கு வராது. அந்த

நேரத்துப் பிரச்சினை மட்டுமே நினைவில் இருக்கும்.

அதனால், தன்னுடைய திருமண இணை நல்லவரல்ல என்கிற கருத்து

உருவாகி தம்பதியரின் ஆழ் மனதிற்குள் பதிவாகி விடுகிறது. அதன் பின் அந்தப்

பதிவுகளின் படி அவர்கள் இயக்கப் படுகிறார்கள்.

அதன் விளைவாக ஒருவரை மற்றவர் கால் காசுக்குக் கூட மதித்துக்

கொள்வதேயில்லை, சாத்தியமுள்ள ஒவ்வொரு வாய்ப்பிலும் உட்சபட்சமாக

ஒருவரை மற்றவர் இழிவு படுத்திக் கொள்கிறார்கள்.

பாலின்ப ஆற்றாமை நோயால் பாதிக்கப் பட்டிருக்கிற நபர் தன்னுடைய

திருமண இணையை அவமதிப்பதைப் போல, இழிவு படுத்துவதைப் போல், ஒரு

பரம விரோதியால் கூட இழிவு படுத்த முடியாது.

ஒருவருடைய நற்பெயரை இனியொருவர் வார்த்தைகளால் நாசப்

படுத்திக் கொள்கிறார்கள். திருமணத்தின் மூலம் தாங்கள் ஏமாற்றப் பட்டு

விட்டதாக ஒரு எண்ணம் தம்பதியரின் ஆழ்மனதிற்குள் அழுத்தமாக நுழைந்து

விடுகிறது. அதனால் மேற்கண்ட எண்ணத்தின் படி காரியமாற்ற வேண்டிய

நிர்பந்தம் பிரபஞ்சத்திற்கு ஏற்பட்டு விடுகிறது.

அதனால், தம்பதியரின் நற்பெயரைக் களங்கப் படுத்துவதற்குரிய சரியான

ஆட்களைத் தேர்வு செய்து அவர்களுடைய வாழ்க்கைக்குள் அனுப்ப வேண்டிய

கட்டாயத்திற்குப் பிரபஞ்சம் ஆளாகிறது.

பணமீட்டுவதை விட நற்பெயரை ஈட்டுவது கடினம். ஏனெனில்,

ஏதேனும் ஒரேயொரு செயலின் மூலமாகக் கூட பணத்தை ஈட்டி விட

வாய்ப்புண்டு. ஆனால், அத்தகைய ஒற்றைச் செயலின் மூலமாகவெல்லாம்

நற்பெயரை ஈட்டிவிட முடியாது.

சந்திக்கும் அனைவரிடமும் ஒவ்வொரு நடவடிக்கையின் மூலமாகவும்

தன்னைப் புலப்படுத்துவதன் வாயிலாக மட்டுமே நற்பெயர் என்னும் சொத்தை

ஒருவரால் ஈட்ட முடியும். ஒரு நபருடைய தொடர் நடவடிக்கைகளுக்கான பரிசு

தான் நற்பெயர்.

இவ்வாறு சேர்க்கப் பட்ட நற்பெயரை நெருங்கிய உறவினர் ஒருவரால்

எளிதில் களங்கப் படுத்தி விட முடியும். எவ்வித முகாந்திரமும் இல்லாமல் கூட

மிக நெருங்கிய உறவினர்களால் இதைச் சாதிக்க முடியும்.

ஏனெனில், நெருங்கிய உறவினரே கூறுவதால் அது உண்மையாக இருக்க

வாய்ப்புண்டு என்கிற கருத்தின் அடிப்படையில் அவர்களுடைய புறங்கூற்று

அனைத்தும் சமூகத்தால் ஏற்கப் படும்.

அவ்வாறு, காலங்காலமாய்ச் சேர்த்து வைத்திருந்த நற்பெயரை ஒரு

பொய்யான தகவலின் அடிப்படையில் களங்கப் படுத்தக் கூடிய ஒரு கல்

நெஞ்சுக்கார உறவினரைப் பிரபஞ்சம் அனுப்பி வைக்கிறது.

அவர் வருகிறார். தேவைப்படும் காலம் வரை நெருங்கி இருக்கிறார். உரிய

வேளை வரும் போது நற்பெயரை அழித்து விட்டுச் செல்கிறார்.

குடும்ப விவகாரச் சண்டையின் போது, தம்பதியர் இருவரும் பரஸ்பரம் இழிவு

படுத்திக் கொண்ட போது, “இப்படியெல்லாம் நான் இழிவு படுத்தப்படுகிறேனே

கடவுளே” எனத் தோன்றுகிறதல்லவா ஒரு எண்ணம், அந்த எண்ணம்

ஆழ்மனதிற்குள் நுழைந்து விட்டதன் தொடர்ச்சியாகப்பிரபஞ்சம் செயல் பட்டதன்

விளைவு தான் இது.

தீதும் நன்றும் பிறர் தர வாரா.

மனைவிக்காக நான் எவ்வளவு செய்திருக்கிறேன். என்னுடைய வருமானம்

மற்றும் சொத்துக்கள் அனைத்திற்கும் சட்டப் படி உரிமையுடையவளாக மாறிய

பின்பு என்னை இப்படி வதைத்துக் கொண்டி ருக்கிறாளே! திருமண் இணையைத்

தேர்ந்தெடுத்ததில் நான் இந்த அளவிற்கு ஏமாந்து போய் விட்டேனே!

ஈவிரக்கமின்றி இப்படி ஏமாற்றிக் கொண்டிருக்கிறாளே!

குடும்ப விவகாரச் சண்டை முடிந்து, பாலின்பப் பஞ்சத்தோடு உறங்கப் போகும் கணவன் மேற்கண்டவாறெல்லாம் நினைக்கிறான். இது ஒரு மோசமான

சிந்தனை, தன்னுடைய வாழ்க்கையை நோக்கி ஏமாற்றுக்காரர்களையும், வஞ்சகர்களையும் ஈர்க்கக் கூடிய சிந்தனை.

பிரபஞ்சம் ஒரு மகா சக்தி. யாரைப் பயன்படுத்தினால் மனிதனின் எண்ணத்தை எளிதாகவும் உடனடியாகவும் நிறைவேற்ற முடியுமோ அவர்களைப் பயன்படுத்துவதில் பிரபஞ்சம் மிகப் பெரிய சமர்த்து. ஒரு மனிதனின் எண்ணம் மோசமாக இருக்கிறதா? அந்த மோசத்தை மேலும் அதிகரிக்க நண்பனால் மட்டும் தான் முடியுமா? உடனே பிரபஞ்சம் ஒரு நண்பனை உருவாக்குகிறது.

ஒரு நெருங்கிய நண்பனால் மட்டுமே பெருந் துரோகங்களைச் செய்ய முடியும். இதற்கான சான்றுகள் வரலாறு நெடுகிலும் ஏராளமாகக் குவிந்து

கிடக்கின்றன.

ஒவ்வொரு பேரரசின் அழிவும், ஒவ்வொரு தொழில் சாம்ராஜ்ஜியத்தின்

வீழ்ச்சியும், துரோகியாக மாறிய நண்பர்களால் தான் துவக்கி வைக்கப்பட்டுள்ளன.

ஆகவே, ஒரு நெருங்கிய நண்பனைப் பிரபஞ்சம் அனுப்புகிறது.

நெருங்கிய நண்பனே இல்லாத போது, நயவஞ்சக செயலில் துணிந்து இறங்கக் கூடிய மனநிலை உடைய ஒருவனை ஆத்ம நண்பனாகப் பிரபஞ்சமே

‘ உருவாக்குகிறது. பிரபஞ்சத்தால் மிக எளிதாக நண்பர்களை உருவாக்க முடியும்.

உதாரணமாக, ஒரு பணக்காரன் இருக்கிறான். குடும்ப விவகாரச் சண்டை

காரணமாக, அவனுடைய சிந்தனை மோசமாகி விடுகிறது. ஆகவே அவன்

மோசமான விளைவுகளைச் சந்தித்தாக வேண்டும். ஆனால் அவனோ மகா

திறமைசாலி.

அவனுக்கு ஆத்ம நண்பர்களே கிடையாது. உறவினர்களையும் அவன்

நெருங்க விடுவதில்லை. ஆகவே இப்போதுள்ள யாரைக் கொண்டும் அவனை

மேலும் அதிகமான ஏமாற்றத்திற்கு உள்ளாக்க முடியாது. இத்தகைய சூழலில்

ஒரு நண்பனை உருவாக்க பிரபஞ்ச சக்தியே முன்னின்று வழி வகுக்கிறது.

அவன் தன்னுடைய வாகனத்தில் தனியாகச் சென்று கொண்டிருக்கும்

போது, ஒரு நயவஞ்சக செயலில் ஈடுபடும் அளவிற்கு துணிச்சலும்,

சாதுர்யமும், தேவையும் கொண்ட மனிதன் மட்டுமே தனியாக நின்று

கொண்டிருக்கும் இடத்தை அடையும் போது ஒரு பெரிய விபத்தை

ஏற்படுத்துகிறது.

ஒவ்வொரு விபத்தும், விபத்திற்காளான மனிதனின் எண்ணங்களை

நிறைவேற்றுவதற்காக, பிரபஞ்சத்தால் திட்டமிட்டு ஏற்படுத்தப் பட்டவை.

அந்த விபத்தின் போது, அந்த நயவஞ்சகனைத் தவிர அங்கு

யாருமேயில்லை, அதனால் அவன் மட்டுமே வந்து உதவும் சூழல் உருவாகிறது.

இவ்வாறாக நயவஞ்சக சிந்தனையுடைய ஒரு மனிதன் இந்தப் பணக்காரனின்

ஆத்மார்த்த நண்பனாக உருவாகி வருகிறான்.

அவனுடைய இயல்பின் படி பெருந் துரோகங்களைச் செய்கிறான்,

நயவஞ்சகனின் திட்டமிட்ட துரோகத்திற்கு ஆளாகும் போது, மிகப்பெரிய

பொருள் இழப்பு ஏற்பட்டு விடுகிறது.

ஈடு செய்ய முடியாத இழப்பு. ஏராளமான பொருள் நஸ்டம். முதுகிலே குத்தி

விட்டான், தாங்க முடியாத மனவலி. செல்வச் செழிப்பிலே வளர்ந்த குழந்தைகள்

இனி அந்த நிலையை எட்டவே முடியாதோ என்கிற அளவிற்கு விச்சுடையதாக

அந்த துரோகம் இருக்கிறது.

எப்படிப்பட்ட துரோகம் அது? எந்த அளவிற்குத் திட்டமிட்டு அது

நடத்தப்பட்டிருக்கிறது? அதன் இழப்பு எப்படிப்பட்டது? அந்த வலி

எப்படிப்பட்டது? என்பதையெல்லாம் யாரிடமும் கூறி நிரூபிக்கக் கூட முடியாது.

மேற்கண்ட சூழல்களை ஒருவர் எதிர் கொள்ள நேரும்போது, அவருடைய

மனநிலை எப்படியிருக்கும்? எண்ண அலைகள் எப்படியிருக்கும்?

தலை விதிப்படி தான் எதுவும் நடக்கும்.

ஒரு கெடுதல் நடந்த உடனே அதைப் பற்றியே தொடர்ந்து சிந்தித்துக்

கொண்டிருப்பது மனித இயல்பு. அந்தச் சிந்தனையில் வருத்தம் கலந்திருப்பதையும்

தவிர்க்க முடியாது. இத்தகைய வருத்தம் தோய்ந்த சிந்தனைக்குத் தான் கவலை

என்று பெயர். ஆகவே அந்த நபர் கவலைப் பட்டுக் கொண்டிருப்பார்.

கவலை என்பது மன அழுத்தத்தை உருவாக்கக் கூடிய ஒரு உணர்ச்சி. மன.

அழுத்தத்தை உருவாக்கும் ஒவ்வொரு சிந்தனையும் உணர்ச்சிகரமான

சிந்தனையாகி விடும்

உணர்ச்சிகரமான சிந்தனைகள் ஆழ்மனதிற்குள் எளிதில் நுழையக்

கூடியவை, எவையெல்லாம் ஆழ்மனதிற்குள் நுழைந்து விடுகிறதோ, அவை தான்

மூளையின் வழியே எண்ண அலைகளின் வடிவிலே பிரபஞ்சத்திற்குச் சென்று

கொண்டிருக்கும்.

பிரபஞ்சத்திற்கு அனுப்பப் படும் எண்ணங்களே பிரார்த்தனை. பிரபஞ்சம்

மனிதனின் பிரார்த்தனையை நிறைவேற்றியே தீரும். இல்லாவிட்டால் பிரபஞ்சம்

அழிந்து போய் விடும்.

ஆகவே, மனிதனின் எண்ணங்கள் அவன் திட்டமிட்டு அனுப்பியிருந்தாலும்

சரி, கவலைப் படுவதன் வாயிலாக தன்னுணர்வற்ற நிலையிலே

அனுப்பியிருந்தாலும் சரி, பிரபஞ்சத்தால் நிறைவேற்றப்படுகின்றன.

இந்தப் பிரபஞ்ச விதியின் படி, குடும்ப விவகாரச் சண்டையில் ஈடுபடும்

தம்பதியர் மோசமான எண்ண அலைகளை பிரபஞ்சத்திற்கு அனுப்புகிறார்கள்,

அதனால், மென்மேலும் கூடுதலாக மோசமான சூழலையே உருவாக்க வேண்டிய

நெருக்கடி பிரபஞ்சத்திற்கு ஏற்படுகிறது.

அதனால், தேவைப் படுகின்ற ஏமாற்றுப் பேர்வழிகளையும்,

துரோகிகளையும் தேர்ந்தெடுத்து அனுப்பி, குடும்ப விவகாரச் சண்டையில்

ஈடுபடும் தம்பதியர் வாழ்க்கையை முழுமையாகச் சீரழிக்கிறது. இதை நாம்

தெளிவாக இப்போது தெரிந்து கொண்டிருக்கிறோம்.

ஆகவே, ஒரு மனிதனுடைய தலையிலிருந்து எது வெளியேறிக்

கொண்டிருக்கிறதோ அது தான் அவனுடைய வாழ்வில் நடக்கும். பல்லாயிரம்

ஆண்டுகளுக்கு முன்பே இந்திய ஞானிகளால் சொல்லப்பட்ட தலை விதி என்பது

ஒரு பேருண்மை,

தலை விதிப் படி தான் எதுவும் நடக்கும் என்பது ஒரு பேருண்மை.

அதற்கான விளக்கவுரை தான் இந்த அத்தியாயம்.

மீண்டுமொரு முறை இதைத் திரும்பிப் பார்க்கலாம். உணர்ச்சிகரமான

சிந்தனைகள் ஆழ்மனதிற்குள் எளிதில் நுழையக் கூடியவை, எவையெல்லாம்

ஆழ்மனதிற்குள் நுழைந்து விடுகிறதோ, அவை தான் மூளையின் வழியே எண்ண

அலைகளின் வடிவிலே பிரபஞ்சத்திற்குச் சென்று கொண்டிருக்கும்.

பிரபஞ்சத்திற்கு அனுப்பப் படும் எண்ணங்களே பிரார்த்தனை. பிரபஞ்சம்

மனிதனின் பிரார்த்தனையை நிறைவேற்றியே தீரும். இல்லாவிட்டால் பிரபஞ்சம்

அழிந்து போய் விடும்.

ஆகவே, மனிதனின் எண்ணங்கள் அவன் திட்டமிட்டு அனுப்பியிருந்தாலும்

சரி, கவலைப் படுவதன் வாயிலாக தன்னுணர்வற்ற நிலையிலே

அனுப்பியிருந்தாலும் சரி, பிரபஞ்சத்தால் நிறைவேற்றப்படுகின்றன.

மனிதர்களின் எந்தவொரு செயலைக் காட்டிலும், குடும்ப விவகாரச் சண்டை

நடைபெறக் கூடிய நேரத்தில் சிந்திக்கப் படுகின்ற சிந்தனைகள் அனைத்தும்

நேரிடையாக ஆழ்மனதிற்குள் நுழைந்து, தலை வழியாக வெளியேறிக்

கொண்டிருப்பவை, தலைக்குள்ளிருந்து எது வெளியேறிக் கொண்டிருக்கிறதோ

அதன்படி தான் வாழ்க்கை அமையும்,

எதை மனதில் விதைக்கிறீர்களோ அதைத் தான் வாழ்க்கையில் அறுவடை

செய்வீர்கள்.

குடும்ப விவகாரச் சண்டை நடைபெறக் கூடிய நேரத்தில் நடக்கி ன்ற

சிந்தனை அனைத்துமே கெட்டவை, அதாவது என் திருமணம் வாயிலாக நான்

ஏமாற்றப்பட்டு விட்டேன், நான் இமாலயத் தவறைச் செய்து விட்டேன்.

என்னுடைய உடலின் இச்சையைக் கூட பூர்த்தி செய்து கொள்ள முடியாத

அளவிற்கு நான் ஒரு தோல்விகரமான நபர். நான் பயன் படுத்தப் படுகிறேன்.

என் திருமண இணை என்னைக் கால் காசுக்கும் மதிப்பவரல்ல. இந்த

உலகிலேயே மிக அதிகமாக என்னை அவமதிக்கக் கூடிய ஒரு நபரை நான்

திருமணம் செய்து கொண்டு விட்டேன். எந்தவொரு மீட்பராலும் மீட்க முடியாத

படுகுழியில் நான் விழுந்து கிடக்கிறேன் என்றும், இதையொத்த இன்னபிற

எண்ணங்களும் கெட்ட எண்ணங்கள்,

மேற்கண்ட எண்ணங்கள் ஆழ்மனதிற்குள் நுழைந்து விடுவதால்

பிரபஞ்சத்திடம் வைக்கப்படும் கோரிக்கைகளாகி விடுகின்றன. அதன் பின்

பிரபஞ்சம் அந்த எண்ணங்களின் படி கெட்ட சம்பவங்களை தம்பதியரின் வாழ்வில்

அரங்கேற்றுகிறது.

மென்மேலும் இவர்களை ஏமாற்றவும், இமாலயத் தவறுகளைச் செய்ய

வைக்கவும், இவர்கள் வாழ்க்கையை மேலும் தோல்வி கரமானதாக மாற்றவும்,

யாராலும் மீட்க முடியாத படுகுழியில் தள்ளவும் பிரஞ்சம் உழைக்கத் துவங்கி,

அதை இம்மி பிசகாமல் நிறைவேற்றி வைக்கிறது.

குடும்ப விவகாரச் சண்டையின் போது ஆழ்மனதிற்குள் நுழைந்த வருத்தம்

நிறைந்த எண்ணங்களைப் போன்று பல்லாயிரம் மடங்கு கூடுதலாக

வருத்தப்படுவதற்கேற்ற சம்பவங்களைப் பிரஞ்ச சக்தி அரங்கேற்றி வைக்கிறது.

அதனால் தான் குடும்ப விவகாரச் சண்டையில் ஈடுபடும் தம்பதியர்,

தங்கள் திறமைக்குரிய, தகுதிக்குரிய சிகரங்களைத் தொட முடியாமல், அற்ப

வெற்றிக்கு உரியவர்களாக மாறிப் போகிறார்கள். அவர்களை விடப் பன்மடங்கு

குறைவான திறமையுடைய நபரின் கீழ் பணியாற்றிக் கொண்டிருக்கிறார்கள்.

தொழிற் போட்டிகளில் தோல்வியடைகிறார்கள்.

உறவினர்களின் வஞ்சகச் செயல்களால் வீழ்த்தப்படுகிறார்கள், நெருங்கிய

நண்பர்களின் துரோகங்களுக்கு ஆளாகிறார்கள். கூட்டாளிகளால்

இரக்கமின்றி

ஏமாற்றப் படுகிறார்கள், காதற் படுகுழியில் விழுந்து, கல்வியைத் துறக்கும்

குழந்தைகளை உருவாக்குகிறார்கள். போதைப் பொருட்களுக்கு

அடிமையாகிறார்கள், உயிர்க்கொல்லி நோய்க்கு ஆளாகிறார்கள். கோரமான

விபத்துக்களில் சிக்குகிறார்கள், இள வயதிலேயே செத்துப் போகிறார்கள். தங்கள்

ஆயுளைப் பத்தாண்டுகள் வரை குறைத்துக் கொள்கிறார்கள்.

அதாவது, குடிசையின் ஒரு மூலையில் சிறிய தீப்பொறியை வைக்கும்

வேலையை குடும்ப விவகாரச் சண்டை செய்து விடுகிறது. அதன் பின் அந்தக்

குடிசையை முழுமையாக எரித்தழிக்கும் வேலையை தனியாகவும், பிரபஞ்சத்தின்

துணையுடனும் ஆழ்மனம் செவ்வனே செய்து முடிக்கிறது.

ஏனெனில், மனிதனின் தலைக்குள்ளிருந்து எந்த உணர்ச்சியலைகள்

வெளி யேறிக் கொண்டிருக்கிறதோ, அந்த உணர்ச்சியைப் பன்மடங்கு

அதிகரிக்கக் கூடிய சம்பவங்களைத் தான், பிரஞ்ச சக்தி மனிதனின் வாழ்வில்

தொடர்ச்சியாக அரங்கேற்றிக் கொண்டிருக்கும்.

எதைக் கொடுக்கிறீர்களோ அதையே திரும்பப் பெறுவீர்கள். எதை

விதைக்கிறீர்களோ அதைத்தான் அறுவடை செய்வீர்கள். எண்ணம் போல் வாழ்வு.

என்று இதைத்தான் பல்வேறு ஞானிகள் அவரவர் பாணியில் சொல்லி

இருக்கிறார்கள்.

எதுவும் இங்கே இரகசியமில்லை.

மேற்கண்ட விஞ்ஞான பூர்வ தகவலை அறிந்து கொண்டதன் காரணமாக,

நாம் தெளிவாக அறிந்து கொள்கிற உண்மை என்னவென்றால், குடும்ப

விவகாரச் சண்டையின் போது ஆழ்மனதிற்குள் நுழையக்கூடிய மோசமான

எண்ணங்கள் தான் ஒரு குடும்பத்தை நோக்கி மோசமான

விளைவுகளைக்

கொண்டு வருகின்றன.

ஆகவே ஒரு குடும்பத்தின் எழுச்சியும், வீழ்ச்சியும் தம்பதியருடைய

செயல்களைப் பொறுத்தே அமைகிறது.

குடும்ப வாழ்வில் நிலவக்கூடிய நிம்மதியே அந்தக் குடும்பம்
அடையக்கூடிய

வெற்றிகளுக்கான அடித்தளம். வாழ்க்கை போர்க் களமானால், அந்தக்
குடும்பம்

படு தோல்வியடைந்து விடும். தீதும் நன்றும் பிறர் தர வருவதில்லை.

ஆகவே, எந்தக் குடும்பம் தாழ்வை நோக்கிப் பயணித்துக்

கொண்டிருக்கிறதோ, துன்பங்களுக்கும், ஏமாற்றங்களுக்கும்,
துரோகங்களுக்கும்,

வஞ்சகங்களுக்கும் பலியாகிக் கொண்டிருக்கிறதோ அந்தக்
குடும்பத்தைச்

சேர்ந்த தம்பதியர் குடும்ப விவகாரச் சண்டையிட்டுக்
கொண்டிருக்கிறார்கள்.

அங்கே வாழும் பெண் போகப் பொருளாகப் பயன்படுத்தப் படுகிறாள்.

மேலும், எந்தக் குடும்பம் வளராமலே இருக்கிறதோ, அல்லது
தகுதிக்குரிய

வெற்றிகளைப் பெறத் தவறிக் கொண்டிருக்கிறதோ, அல்லது அற்ப
வெற்றிகளை

மட்டும் பெற்றுக் கொண்டிருக்கிறதோ அந்தக் குடும்பத்தைச் சேர்ந்த

தம்பதியரும் குடும்ப விவகாரச் சண்டையிட்டுக் கொண்டிருக்கிறார்கள்.
அங்கே

வாழும் பெண் போகப் பொருளாகப் பயன்படுத்தப் படுகிறாள்.

ஆக, ஒருவருடைய வாழ்க்கைத் தரத்தை வைத்தே அவருடைய
அந்தரங்க

வாழ்க்கையின் நிலவரத்தைகூட நாம் இனிமேல் எடையீட்டு விடலாம்.

அந்த அளவிற்கு குடும்ப விவகார சண்டையைப் பற்றியும், அதனால்

விளையக்கூடிய கேடுகளைப் பற்றியும் நாம் மிகத் தெளிவாக அலசி
ஆராய்ந்து

புரிந்து கொண்டிருக்கிறோம்.

மனதில் இருப்பதை யாராலும் முழுமையாக மறைத்து விட முடியாது.

உடல்மொழி மூலம் வெளியே கசிந்தே தீரும். இதைத் தான் அகத்தின் அழகு

முகத்தில் தெரியும் என்று கூறுகின்றனர்.

அதேபோல, தம்பதியரிடையே நிலவும் உறவின் நிலையை அவர்களால்

இரகசியமாக மறைத்து விட முடியாது. ஏனெனில் ஒரு குடும்பத்தின்

வாழ்க்கைத் தரம், அந்தக் குடும்பத்தைச் சேர்ந்த தம்பதியரிடையே நிலவிக்

கொண்டிருக்கும் உறவைத் தான் பிரதிபலிக்கிறது எனத் தெரிந்து கொள்ளும்

அளவிற்கு நாம் காமத்தைப் பற்றியும், அதனால் நிகழக்கூடிய குடும்ப விவகாரச்

சண்டை பற்றியும் தெளிவாகப் புரிந்து கொண்டிருக்கிறோம்.

சரியான புரிதலுக்குப் பெயர் தான் தீர்வு.

சரியான புரிதலுக்குப் பெயர் தான் தீர்வு.ஏனெனில், புரிதல் சரியாகும்

போதே பிரச்சினைக்கான காரணம் தெரிந்து விடும். காரணமும் தீர்வும் ஒரே

நாணயத்தின் இரண்டு பக்கங்கள்.

சென்றடைய வேண்டிய இடம் எதுவெனத் தெரிந்தவுடனே, செல்ல

வேண்டிய பாதை தெரிந்து விடுவதைப் போலவே, எந்தப் பிரச்சினைக்கும்

மூலமாக இருக்கக் கூடிய காரணத்தை மட்டும் கண்டுபிடித்து விட்டால், அந்தக்

காரணத்தைக் களைவதற்குரிய வழிகளும் நமக்குத் தெரிந்து விடும்.

மனிதப் பிறவியின் ஒவ்வொரு செயலையும், மறைவாக இருந்து இயக்கிக்

கொண்டிருப்பது காமம், அதே போல, ஒரு குடும்பத்தின் உயர்வு தாழ்வை

நிர்ணயித்துக் கொண்டிருப்பது அந்தக் குடும்பத்தைச் சேர்ந்த தம்பதியரிடையே

நிலவிக் கொண்டிருக்கும் உறவும் பூசலும்,

தம்பதியரிடையே நிலவும் ஆழமான அன்பு நிறைந்த உறவுக்கு

காரணம்

தணிக்கப்ட்ட காமம். பரஸ்பரம் கடுமையாகச் சபித்துக் கொள்கின்ற பூசலுக்குக்

காரணம் தணிக்கப்படாத காமம்.

அந்தக் காமம் காரணமாக ஆழ்மனதிற்குள் நுழைந்து தலை வழியாக

வெளியேறிக் கொண்டிருக்கும் எண்ணங்களே நம் வாழ்க்கைக்குள்

அனைத்தையும் ஈர்த்துக் கொண்டு வருகின்றன.

தணிக்கப்படாத காமத்தால் ஏற்படும் மோசமான எண்ணங்கள் தான்

வஞ்சகர்களையும், துரோகிகளையும், ஏமாற்றுப் பேர்வழிகளையும் குடும்பத்தை

நோக்கி ஈர்த்து வந்து, எல்லாவகைக் கேடுகளும் நிகழக் காரணமாக இருக்கின்றன.

திருப்தியுற்ற காமம் மனநிலையை மகிழ்ச்சிப்படுத்தி, சிறந்த வளங்களை

குடும்பத்தை நோக்கி ஈர்த்து இல்லற வாழ்வைச் சொர்க்கமாக வைத்திருக்கிறது.

மேற்கண்ட உண்மையை ஆதாரபூர்வமாக நிரூபிப்பதற்காகத் தான் எட்டு

அத்தியாயங்களை இந்த நூல் செலவிட்டிருக்கிறது. இனியும் ஐயமிருப்போர்

மீண்டுமொரு முறை இந்த நூலின் முதல் பாகத்தைப் படித்துப் பாருங்கள்.

ஆரம்பப் பள்ளி ஆசிரியை, கணித வாய்ப்பாட்டைப் பல்வறு கோணங்களில்,

பல்வறு விதங்களில் குழந்தைகளுக்கு சொல்லித் தர முயற்சிப்பதைப் போல்,

எளிமையாக, தெளிவாக, திரும்பத் திரும்ப சொல்ல வேண்டியவற்றைத்

திரும்பத் திரும்பச் சளைக்காமல் சொல்லி, அவ்வாறு சொல்லப்பட்ட ஒவ்வொரு

தகவலுக்கும் உரிய விஞ்ஞான பூர்வ நிரூபணங்களையும் இந்த நூலின்

முதல் பாகம் வழங்கியிருக்கிறது.

அத்தகைய முதல் பாகத்தைப் படித்தும் கூடப் புரிந்து கொள்ள

முடியாதவர்கள், உளவியலின் தந்தை என போற்றப்படுகின்ற

சிக்மண்ட் ஃப்ராய்ட்,

கின்ஸி, மாஸ்டர்ஸ் அண்ட் ஜான்சன், கார்ல் ஜங்க், பெர்ரி. பவர்லீ விப்பில்

போன்ற மருத்துவர்களின் நூல்களைப் படித்துத் தெரிந்து கொள்ளுங்கள்.

தலை தான் அனைத்திற்கும் காரணம். தலையில் என்ன நிகழ்கிறதோ

அது தான் வாழ்க்கையில் பிரதிபலிக்கிறது. ஆகவே, தலையை மாற்றாத வரை

தலை விதியை மாற்ற முடியாது,

ஆகவே, முதலில் தலையை மாற்றும் வழிமுறைகளைக் கற்றுக் கொள்ள

வேண்டும், அதே போல் தலையை மிக மோசமாகக் கெடுப்பதில் முதலிடம்

வகிக்கக் கூடிய குடும்ப விவகாரச் சண்டைக்கும் முடிவு கட்ட வேண்டும்.

அதற்கான வழிமுறைகளைக் கண்டறிய வேண்டும். தவறாமல் வாழ்வில் பின்பற்ற

வேண்டும். இதுதான் இன்றைய ஆணின் முதற்தேவை.

அதற்கான விஞ்ஞான பூர்வ வழிமுறைகள் அடுத்த அத்தியாயத்தில்

திரை விலக்கப் படுகின்றன**.**

## **9.** தலைவிதியை மாற்றுவது எப்படி**?**

### தண்டிப்பவர் கடவுள் அல்ல

தோல்விகள், துயரங்கள், ஏமாற்றங்கள், வருத்தங்கள், வஞ்சகங்கள், பெருந்

துரோகங்கள் போன்ற தடைக்கற்களைக் கொண்டது தான் மனிதனின் குடும்ப

வாழ்க்கை, இவையனைத்தும் தம்பதியரால் தங்கள் வாழ்விற்குள் ஈர்த்துக்

கொள்ளப்பட்டவை,

அதாவது, குடும்ப விவகாரச் சண்டையின் போது, தன்னுணர்வற்ற

நிலையில், தம்பதியின் ஆழ்மனதிற்குள் நுழைந்து விடும் மோசமான எண்ணங்கள்

காரணமாகத் தம்பதியரால் தங்கள் குடும்பத்தை நோக்கி வலிந்து ஈர்க்கப்படும்

பாதகங்கள் தான் இவை.

மனைவி போகப் பொருளாகப் பாவிக்கப்படும் சூழலைக் கொண்ட

ஒவ்வொரு குடும்பமும் மேற்கண்ட நிலைமைகளில் ஏதேனும் ஒரு பாதகத்தைச்

சந்தித்திருக்கக் கூடும்.

மேற்கண்ட பாதகங்களால் பாதிக்கப் படும் போது ஏற்படும் வலி, மனதில்

இருக்கும் வரை, யாராலும் மேடேற முடியாது. ஏனெனில் அந்த வலி

மனநிலையைத் துயரத்திலேயே வைத்திருக்கும்,

அதனால் துயரமிக்க எண்ண அலைகளையே முளை அனுப்பிக்

கொண்டிருக்கும். அதன் காரணமாக, துயர சம்பவங்களையே பிரபஞ்சம்

தொடர்ந்து நிகழ்த்திக் கொண்டிருக்கும், தோல்விப் பயணம் ஒரு

தொடர்கதையாகவே இருந்து கொண்டிருக்கும்,

ஆகவே, மன வலிகளிலிருந்து வெளியேறக் கற்றுக் கொள்ள வேண்டும்.

தலையை தூய்மைப் படுத்தக் கற்றுக் கொள்ள வேண்டும். அதற்கான

முதற்படியாக நமக்குள் ஊட்டப் பட்டுள்ள ஒரு தவறான நம்பிக்கையைக்

களைந்தெரிய வேண்டும்.

தண்டிப்பவர் கடவுள் அல்ல.

ஏமாற்றுக்காரனும் துரோகியும் கடவுளால் தண்டிக்கப் படுவான், நமக்குக்

கெடுதல் செய்த வனைக் கடவுள் தண்டிப்பார், அரசன் அன்று கொல்வான்.

தெய்வம் நின்று கொல்லும், என்றெல்லாம் கூறி மனித மனதில் தவறான

நம்பிக்கை ஊட்டப் பட்டிருக்கிறது.

இது ஒரு அப்பட்டமான பொய், காட்டுமிராண்டிகளை ஒழுங்கு முறைக்குள்

கொண்டு வருவதற்காகத் திட்டமிட்டுச் சொல்லப்பட்ட பொய் இது.

காட்டுமிராண்டி கள் முரடர்கள். முரடனின் இனியொரு பெயர் தான்

முட்டாள், முட்டாள்தனமான ஒரு நபரால் பெருந்தன்மையாகச் சிந்திக்க

முடியாது. ஆகவே, முட்டாள்கள் அனைவரும் கீழ் மக்களே.

அச்சமே கீழ்களது ஆசாரம். அச்சுறுத்துவதன் மூலம் மட்டுமே ஒரு ஒழுங்கு

முறைக்குள் கீழ்மக்களைக் கொண்டு வர முடியும்.

ஆகவே, சமூக அமைப்பை உருவாக்கிய போது, காட்டு மிராண்டிகளை

ஒழுங்கு முறைக்குள் கொண்டு வருவதற்காக, அவர்களை அச்சுறுத்த

வேண்டியிருந்தது. மனிதர்களைக் காட்டியெல்லாம் ஆழ்மன அச்சத்தை

உருவாக்க முடியாது. அதனால், அன்றைய ஞானிகள் கடவுளின் பெயரைப் பயன்

படுத்தினார்கள்.

வஞ்சகனையும், துரோகியையும் கடவுள் தண்டிப்பார் என்கிற கருத்து

அவ்வாறு அச்சுறுத்துவதற்காகச் சொல்லப்பட்ட கருத்து. அது தான்

கடத்தப் பட்டு நம் காலம் வரையிலும்

ஒவ்வொருவர் மனதிலும் பதிக்கப் படுகிறது

ஒரு நபர் குழந்தையாக இருக்கும் போது இந்த நம்பிக்கை ஆழ்மனதில்

பதிக்கப் படுகிறது. ஏனெனில் குழந்தைகளின் ஆழ்மனம் ஏழு வயது

வரை திறந்தே இருக்கக் கூடியது. ஏழு வயதிற்குப் பிறகு தான் மேல்மனம்

என்கிற காவலாளியை ஆழ்மனம் நியமிக்கிறது.

மேல்மனம் என்கிற காவல்காரனை நியமிக்காத, அப்பாவித்தனமான

குழந்தைப் பருவத்தில், குறும்பு செய்தால் கடவுள் மூக்கை அறுத்து விடுவார்

என்று மிரட்டத் தொடங்கிய போது ஆழ்மனதில் நுழைந்த தவறான நம்பிக்கை இது.

பெற்றோராலும், சுற்றுப்புறத்தாலும், ஆசிரியர்களாலும் நாம் வளர்க்கப்

படுகிறோம். தவறு செய்தவனைக் கடவுள் தண்டிப்பார் என்கிற நம்பிக்கை

அவர்களுக்கு ஊட்டப் பட்டிருந்தது. அதையே அவர்கள் தன்னுணர்வற்ற

நிலையில், நமக்கும் ஊட்டி விடுகிறார்கள்.

வாழ்வியல் விவகாரங்களில் நாம் சுயமாகச் சிந்திக்கக் கூடியவர்கள் அல்ல.

அடுத்தவர்களுடைய பிரதிகள், பெற்றோரால், சுற்றத்தாரால், அடிப்படை

அயலால், மற்றும் ஆசிரியர்களால் அவர்களுடைய அறிவிற்கேற்ப பக்குவப்

படுத்தப் பட்டுள்ள இயந்திரங்களாகவே நாம் செயல் பட்டுக்கொண்டிருக்கிறோம்.

குழந்தையாயிருந்த போது உருவாக்கப்பட்ட நம்பிக்கைகளின்

அடிப்படையிலேயே நாம் சிந்தித்துக் கொண்டிருக்கிறோம், காமத்தைப் பற்றி

நம்மிடமுள்ள தவறான கருத்துக்களும் அப்படிப்பட்டவையே,

அடுத்தவர்களால் அவர்களுடைய நம்பிக்கைகளுக்கேற்ப,

அனுபவங்களுக்கேற்ப, தகுதிக்கேற்ப நம்முடைய மனம் வடிவமைக்கப்

பட்டிருக்கிறது. அதனால் தவறு செய்தவனுக்கு தண்டனை கிடைக்கும் என்று

உறுதியாக நம்பிக் கொண்டி ருக்கிறோம். இது ஒரு தவறான நம்பிக்கை,

துரோகிகளையும், வஞ்சகர்களையும், ஏமாற்றுப் பேர்வழிகளையும் கடவுள்

தண்டிப்பார் என நம்புவது, வஞ்சகத்தால் வீழ்த்தப்பட்டுள்ள மனிதனை

மென்மேலும் வீழ்ச்சியடையச் செய்கிறது. நம்மை ஏமாற்றியவனுக்கு தண்டனை

கிடைக்கும், கெட்டது நடக்கும் என்று நம்புவது தான் மிகப் பெரிய ஆபத்து.

தவறான நம்பிக்கைகளிலேயே தலையாயது.

ஒரு வஞ்சகச் செயலுக்கோ, துரோகத்திற்கோ நாம் ஆளாகும் போது,

அதற்குக் காரணமாக இருந்தவர்கள் ஏதேனும் ஒரு வகையில் மோசமாகத்

தண்டிக்கப் படுவார்கள் என்று நாம் நம்புகிறோம்.

இந்த நம்பிக்கை முதலில் ஒரு எதிர் பார்ப்பாக இருக்கிறது. அதன் பின் அந்த

எதிர்பார்ப்பு வஞ்சகனுக்கும், துரோகிக்கும், ஏமாற்றுக்காரனுக்கும் கெட்டது

நடக்க வேண்டும் என்கிற ஆசையாக தன்னுணர்வற்ற நிலையிலே

மாறி, அந்த

ஆசையே தொடர் சிந்தனையாகவும் நடைபெறத் தொடங்கி விடுகிறது.

துரோகத்திற்கு ஆளான வலியோடு சிந்திப்பதால் அது உணர்ச்சிகரமான

சிந்தனையாகி, நம்முடைய பிரார்த்தனையாகவே மாறி விடுகிறது.

இறுதியில் கெட்டது நடக்க வேண்டும் என்கிற பிரார்த்தனை இம்மி பிசகாமல்

நம்முடைய வாழ்விலேயே நிறைவேறுகிறது.

ஏனெனில், பிரபஞ்சத்திற்கு பெயர்ச் சொற்கள் தெரியாது. உணர்ச்சிகரமான

வினைச் சொற்கள் மட்டுமே புரியும். அதனால் தான் வினை விதைத்தவன்

வினை அறுப்பான், தினை விதைத்தவன் தினை அறுப்பான் என்றும் எண்ணம்

போல் வாழ்வு என்றும் ஞானிகள் கூறியுள்ளனர்.

ஏமாற்றுக்காரர்கள் ஒருபோதும் தண்டிக்கப் படுவதில்லை.

ஏமாற்றுக்காரனோ, பெரும் துரோகியோ, வஞ்சகனோ வாழ்வில் ஒரு போதும்

கெட்டுப் போவதில்லை, குறிப்பிட்ட அந்தச் செயலுக்காகத் தண்டிக்கப்

படுவதில்லை. இது ஒரு பேருண்மை, மனித வரலாறே இதற்கான ஆதாரம்.

இரக்கமற்ற கொலைகாரர்களும், பெருந் துரோகிகளும், மகா

சூழ்ச்சியாளர்களும், கடைந் தெடுத்த வஞ்சகர்களும், சண்டாளப் படுபாவிகளும்

தான் மனித இனத்தின் வரலாறு நெடுகிலும், ஆட்சியாளர்களாக

இருந்திருக்கிறார்கள், ஏக போக சுகத்துடன் வாழ்ந்து மடிந்திருக்கிறார்கள்.

ஆகவே தவறு செய்தவன் கடவுளால் தண்டிக்கப் படுவான் என்கிற

கருத்தை நம்பாதீர்கள், கடவுள் யாரையும் தண்டிப்பதில்லை. மேலும் தண்டிக்கும்

மனோபாவம் உடையவர் ஒரு போதும் கடவுளாக இருக்க முடியாது.

கடவுளுக்குத் தெரிந்த ஒரே மொழி கருணை மட்டுமே. மன்னித்தலே

கடவுளின் தண்டனை.

கேட்டதைக் கொடுப்பது மட்டுமே கடவுளின் வேலை. இதைத் தவிர

வேறெந்த கெடுதலையும் செய்யத் தெரியாத அப்பாவி தான் கடவுள்,

மனிதர்களை நல்லவன், கெட்டவன் என்றெல்லாம் பாகு படுத்திப் பார்க்க

கடவுளுக்குத் தெரியாது.

மேலும் வஞ்சகனையோ, துரோகியையோ, நம் வழியில் கொண்டு வந்து

கடவுள் தான் நிறுத்துகிறார்.

அதாவது, குடும்ப விவகாரச் சண்டையின் போது நம் ஆழ்மனதில் நுழைந்து

விட்ட மோசமான எண்ணத்தின் படி, காரியங்களை நிகழ்த்தியாக வேண்டிய

கட்டாயத்தில் ஆழ்மனம் இருந்தது. தன்னால் முடிந்த வரை செய்தது.

தன்னந்தனியே தன்னால் நிறைவேற்ற முடியாத எண்ணங்களைத்

தொடர்ச்சியாகப் பிரபஞ்சத்திற்கு அனுப்பிக் கொண்டிருந்தது.

அதனால் அந்த எண்ணத்தை நம் பிரார்த்தனையாக ஏற்றுக் கொண்டு,

அந்தப் பிரார்த்தனையைச் செவ்வனே, உடனடியாக நிறைவேற்றிட பிரபஞ்சம்

முடிவெடுத்தது.

அந்த முடிவின் படி, ஒரு மனிதனின் நெஞ்சில் வஞ்சக சிந்தனையை

உருவாக்கி நம்முடைய வழியில் கொண்டு வந்து நிறுத்தி, வஞ்சகச் செயல்களில்

ஈடுபடும் படி அவனை இயக்குகிறது.

ஆகவே, நமது எண்ணங்களின் படி, நமக்குக் கெடுதல் உண்டாக

வேண்டுமே என்கிற நோக்கத்தில் கடவுளால் அனுப்பப் பட்ட தூதர்கள் தான்

மோசக்காரர்கள்.

ஆகவே, தானே தேர்ந்தெடுத்து, தானே மோசக்காரர்களாக உருவாக்கி

தானே முன்னின்று, நம் வாழ்க்கைக்குள் அனுப்பிய தன்னுடைய தூதர்களையே

கடவுளால் எப்படி தண்டிக்க முடியும்?

ஆகவே தவறு செய்தவர்களைக் கடவுள் தண்டிப்பார் என்கிற கருத்தை

நம்பாதீர்கள். ஒருக்கால் அந்த நம்பிக்கையை விட முடியாத போது, பசுவையும்

சிங்கத்தையும் நினைத்துக் கொள்ளுங்கள்.

பசு ஒரு சாதுவான சைவப் பிராணி, எவ்வகையிலும் சிங்கத்திற்குக்

கெடுதலை இழைக்காத ஒரு உயிரினம். சிங்கத்தின் உணவிற்குக் கூட பசு

போட்டியாக இல்லை, எனினும் அப்பாவிப் பசுவை முரட்டுச் சிங்கம் உயிரோடு

பிடித்து உண்கிறது

இது மிகவும் கொடூரமான செயல். ஆனால், இத்தகைய கொடூரச் செயலுக்காக

இதுவரை எந்தச் சிங்கமும் கடவுளால் தண்டிக்கப் பட்டதில்லை,

இங்கே குழப்பத்தை உருவாக்கக் கூடிய ஒரு எண்ணம் தோன்றலாம்,

சிங்கம் என்பது பிற விலங்குகளைக் கொன்று வாழும் வகையில் தான்

இயற்கையாலேயே படைக்கப்பட்டுள்ளது. அதனால் அது தண்டிக்கப்

படுவதில்லை என்கிற கருத்து உருவாகலாம்,

அந்தக் கருத்து சரியானதே. சிங்கத்தைத் தண்டிக்க முடியாது தான்,

ஆனால், சிங்கத்தைப் போலவே தான் மனிதர்களும் படைக்கப் ட்டுள்ளனர்.

ஒருவனை மற்றவன் மிஞ்ச வேண்டும் என்கிற எண்ணத்துடன் செயல் படும்

படியாகத் தான் மனிதப் பிறவிகளும் படைக்கப் பட்டுள்ளன,

ஆகவே, ஒருவனை மிஞ்சுவதற்காக மற்றவன் செய்கிற வஞ்சகங்களும்,

துரோகங்களும், ஏமாற்று வித்தைகளும் போர்த் தந்திரங்களாகத் தான் இயற்கை

எடுத்துக் கொள்கிறதே தவிர, குற்றமாகப் பார்ப்பதில்லை,

ஆகவே, எந்தக் கொடி யவனும் இயற்கையால் தண்டிக்கப்

படுவதில்லை, அதை விட முக்கியமாக இயற்கையின் பார்வையில்,

நல்லவன், கெட்டவன் என்கிற பேதங்கள் இல்லை.

மேலும், கயவர்களைத் தண்டிப்பது என்கிற முடிவைக் கடவுள்

எடுக்கின்ற தானில், இந்தப் பூமியில் உள்ள குழந்தைகளைத் தவிர மற்ற

அனைவரும் தண்டிக்கப் படுவார்கள்.

ஏமாளியே மென்மேலும் தண்டிக்கப் படுவான்.

கொலைகாரச் செயலுக்காக எந்தச் சிங்கமும் தண்டிக்கப் படுவதில்லை.

அதேபோல், எந்தவொரு மோசக்காரனும், வஞ்சகனும், துரோகியும் ஏமாற்றுப்

பேர்வழியும் கடவுளால் தண்டிக்கப்படுவதில்லை. அதற்கு மாறாக, துரோகத்திற்கு

ஆளானவனே மென்மேலும் தண்டிக்கப் படுவான். மென்மேலும்

துரோகங்களுக்கு ஆளாகிக் கொண்டேயிருப்பான். மென்மேலும் ஏமாற்றப்

படுவான்.

ஏனெனில், துரோகத்திற்கு ஆளாகும் நபர் தான் தனக்குள்ளேயே குமைந்து

கொண்டிருப்பான், குமுறி அழுது கொண்டிருப்பான். மனதிற்குள்ளே மறுகிக்

கொண்டிருப்பான், தனியாய் அமர்ந்து கதறிக் கொண்டிருப்பான். மனமொடிந்து

மூலையிலே போய் முடங்கி கிடப்பான்.

அவனுடைய கனவுகளையெல்லாம் தூக்கியெறிந்து விட்டு, அவனை

வஞ்சித்த வஞ்சகர்களையும், அவனுக்கு துரோகம் இழைத்த துரோகிகளையும்,

அவையெல்லாம் இழைக்கப்பட்ட விதத்தையும் நெஞ்சம் நிறைய வைத்துக்

கொண்டு, ஒரு ஒளிப்படக் காட்சியாகத் திரும்பத் திரும்ப மனதிற்குள் ஓட்டிப்

பார்த்துக் கொண்டு, அரை பைத்தியமாகச் சுற்றிக் கொண்டிருப்பான்.

கழிவிரக்கமும், சுயபச்சாதாமும் அவனைத் தான் வாட்டு வாட்டென்று வாட்டி

வதைத்துக் கொண்டிருக்கும்,

மேற்கண்டவாறு நிகழக்கூடிய எண்ணங்கள் அனைத்தும் மிகவும்

உணர்ச்சிகரமானவை, அதனால் அவனுடைய ஆழ்மனதிற்குள் மிக எளிதில்

நுழையக் கூடியவை, ஆழ்மனதிற்குள் நுழைகின்ற சிந்தனை மட்டுமே

தொடர்ச்சியாக நடைபெறக் கூடிய சிந்தனை.

தொடர்ச்சியாக நடைபெறக்கூடிய சிந்தனை தான் பிரபஞ்ச சக்தியின் முன்

வைக்கப்படுகின்ற பிரார்த்தனை.

யாருடைய பிரார்த்தனையையும் பிரபஞ்ச சக்தியால் நிராகரிக்க முடியாது.

எப்படிப்பட்ட பிரார்த்தனையாக இருந்தாலும், எதிர்க் கேள்வியின்றி நிறைவேற்றப்

படும்.

துரோகத்திற்கும், வஞ்சகத்திற்கும், ஏமாற்றுச் செயலுக்கும் ஆளான

அப்பாவி, மனதிற்குள் குமுறிக் கொண்டிருப்பதும், மறுகிக் கொண்டிருப்பதும்,

கதறிக் கொண்டிருப்பதும் அவனுடைய பிரார்த்தனையாக ஏற்கப்படும்.

அதனால் மென்மேலும் பன்மடங்கு கூடுதலாக அவன் குமுறிக்

கொண்டிருக்கவும், மறுகிக் கொண்டிருக்கவும், கதறிக் கொண்டிருக்கவும் என்ன

செய்ய வேண்டுமோ அதைப் பிரபஞ்ச சக்தி நிகழ்த்திக் கொண்டிருக்கும்.

மென்மேலும் அதே போன்ற அனுபவங்களையே தொடர்ந்து பெற்றுக்

கொண்டிருப்பான், வாழ்க்கை நரகமாக மாறிக் கொண்டிருக்கும். இது தான் பட்ட

காலிலே படும், கெட்ட குடும்பமே கெடும் என்கிற பழமொழிக்கான விஞ்ஞான

பூர்வ விளக்கவுரை.

ஆனால், வஞ்சித்தவன் ஒளியுடன் இருப்பான். வெற்றி பெற்று விட்டதாகக்

கருதிக் கொண்டிருப்பான், அவனுடைய சூழ்ச்சி வலைகளையெல்லாம்

தன்னுடைய தனித் திறமையெனக் கருதிக் கொண்டிருப்பான். அதனால்

அவனுடைய முளை அற்புதமாக வேலை செய்யும். அவனுடைய தன்னம்பிக்கை

மிதமிஞ்சிய அளவிற்கு அதிகரித்திருக்கும்.

நெருங்கிய நண்பனையே நம்ப வைத்துக் கழுத்தறுத்தவன், இரத்த

உறவையே வீழ்த்தி விட்டவன். ஆகவே சந்திக்கும் யாரையும் எளிதாக வெல்ல

முடிந்தவன், எதையும் சாதிக்கப் பிறந்தவன். என்றெல்லாம் எண் ணிக்

கொண்டிருப்பான்.

அவனுடைய தன்னம்பிக்கை வலுப்பட்டிருக்கும். மன நிலை மிகவும்

மகிழ்ச்சியாக இருக்கும். அதனால் மகிழ்ச்சி நிறைந்த எண்ண அலைகளையே

பிரபஞ்சத்திற்கு அவன் அனுப்பிக் கொண்டிருப்பான். அந்த மகிழ்ச்சிகரமான

எண்ண அலைகளே அவனுடைய பிரார்த்தனையாக பிரபஞ்ச சக்தியால் ஏற்கப்

படும்.

அதனால், அவனுடைய மகிழ்ச்சியை மென்மேலும் அதிகரிக்கக் கூடிய

அனுபவங்களையே பிரபஞ்சம் அவனுக்கு வழங்கிக் கொண்டிருக்கும். அவன்

மென்மேலும் வளர்ந்து கொண்டிருப்பான்.

ஆகவே, கொலைகாரச் செயலுக்காக எந்தச் சிங்கமும் தண்டிக்கப்

படுவதில்லை, அதே போல் எந்த மனிதனும் தன் வஞ்சகச் செயலுக்காக, செய்த

துரோகத்திற்காகத் தண்டிக்கப் படுவதில்லை.

மன நிம்மதிக்கான ஒரே சூத்திரம்

ஒவ்வொரு தம்பதியும் தாங்கள் போட்டுக் கொண்ட குடும்ப விவகாரச்

சண்டைக்கேற்ப, மோசமான எண்ண அலைகளைப் பிரபஞ்சத்திற்கு அனுப்பி,

அதற்கேற்ற வஞ்சகர்களை ஈர்த்து, ஏதேனும் ஒரு வஞ்சகச் செயலுக்கு பலியாகி

இருக்கக் கூடும். அந்த வஞ்சகச் செயலால் ஏற்பட்ட மனவலியிலிருந்து மீள

முடியாமல் தவித்துக் கொண்டிருக்கக் கூடும். அந்தத் தவிப்பான எண்ணங்கள்

மிகவும் ஆபத்தானவை.

ஏனெனில், வலி மிகுந்த எண்ண அலைகள் மென்மேலும் வஞ்சகர்களையே

வாழ்க்கையை நோக்கி ஈர்க்கக் கூடிய இயல்புடையவை. அவ்வாறு ஈர்ப்பதன்

மூலமாக, தொடர் தோல்விகளைக் கொண்ட துயரப் பயணமாக வாழ்க்கையை

மாற்றி விடக் கூடியவை.

ஆகவே, துயரம் நிறைந்த எண்ணங்களிலிருந்து முடிந்த அளவிற்கு

வேகமாக வெளியேறி விட வேண்டும். அவ்வாறு வெளியேறினால் மட்டுமே

வாழ்க்கைப் பாதையில் திருப்புமுனையை உருவாக்க முடியும். அதற்கான ஒரு

எளிய சூத்திரம் ஒன்று உள்ளது.

துயரமிக்க எண்ணச் சுழற்சியிலிருந்து வெளியேறும் பொருட்டின்

முதற்படியாக, நாம் எதிர்கொள்ள நேர்ந்த துரோக சம்பவத்தையும், அந்த துரோகச்

செயலை இழைத்துள்ள மனிதரையும் மறக்க முயற்சிக்க வேண்டும்.

எக்காரணம் கொண்டும் மோசக்காரர்களை நிந்திக்கக் கூடாது.,

நிந்தித்தால் மென்மேலும் மோசக்காரர்களையே நாம் ஈர்த்துக் கொண்டிருப்போம்.

பட்ட காலில் பட்டுக் கொண்டேயிருக்கும்

அதுதவிர, துரோகிகளையும், ஏமாற்றுக்காரர்களையும் நினைத்துக்

கொண்டிருக்கும் வரை நம்முடைய எதிர்காலத் திட்டங்களில் நம்மால் கவனம்

செலுத்த முடியாது.

எந்நேரமும் நமது நெஞ்சில் அவர்களையே நாம் சுமந்து கொண்டிருப்போம்.

அதனால் மனம் துயருற்ற நிலையிலேயே இருக்கும். துயர்மிக்க மனதால் எதைப்

பற்றியும் தெளிவாகச் சிந்திக்க முடியாது.

நம்முடைய விலை மதிப்பற்ற சொத்தான ஆழ்மனம் துரோகி களின்

சொகுசான சிம்மாசணமாகவே இருந்து கொண்டிருக்கும். இமயமலைக்கே

சென்றாலும், அங்கேயும் அவர்களைத் தான் சுமந்து கொண்டேயிருப்போம்.

துரோகி வெது வெதுப்பாக நம் மனதிற்குள் சுகமாக அமர்ந்து கொண்டிருப்பான்.

நாம் தான் இமயத்தின் பனியிலே உறைந்து போயிருப்போம்.

ஒவ்வொரு மனிதனிடமும் உள்ள ஆழ்மனம் தான் அவனிடமுள்ள மிகப்

பெரும் சொத்து. ஆழ்மனதோடு ஒப்பிடும் போது, பத்து இலட்சம் கோடி ரூபாய்

கூட ஆழ் மனதிற்கு இணையாக முடியாது,

ஆழ் மனதிலே கனவுத் திட்டங்களை விதைத்து விட்டால் எப்படிப்பட்ட

கனவையும் அது நனவாக்கி விடும். ஆனால், அப்படிப்பட்ட விலை மதிப்பற்ற

சொத்தை நாமே துரோகிகளுக்குத் தாரை வார்த்துக் கொண்டிருக்கிறோம்.

மோசக்காரர்களையும், துரோகிகளையும் மனதிலிருந்து வெளியேற்றாத வரை,

நம்முடைய விலை மதிப்பற்ற சொத்தான நம் ஆழ் மனதை நம்மால் திரும்பக்

கைப்பற்ற முடியாது. நம் ஆழ்மனம் நம்முடைய சொத்தாக மாறாத வரை,

நம்முடைய கனவுகளை நம்மால் விதைக்க முடியாது.

ஆகவே மோசம் செய்தவர்களை நம் மனதிலிருந்து முதலில் வெளியேற்ற

வேண்டும். அவர்களையும் அவர்களால் நிகழ்ந்த கெடுதல்களையும் நாம் மறந்து

விட முயற்சிக்க வேண்டும்,

அவ்வாறு நம்மைக் காத்துக் கொள்வதற்குரிய எளிய சூத்திரம் ஒன்று

இருக்கிறது. அந்த சூத்திரத்தின் பெயர். மறப்போம். மன்னிப்போம். நன்றி

செலுத்துவோம். அதன் முதற்படியாக, அவர்களை மறந்து விட வேண்டும்.

நன்றிப் பயணத்தைத் துவக்குங்கள்.

சொல்வது எளிது. ஆனால் செயல்படுத்த முடியுமா? என்று கேட்கலாம்.

புரியாத வரை தான் எதுவுமே புதிராக இருக்கும். சூத்திரத்தைப் புரிந்து

கொண்டால், பின்பற்றுவது எளிதாகி விடும்.

உங்கள் ஆழ்மனதை துரோகிகளின் பிடியிலிருந்து திரும்பக் கைப்பற்றும்

போரில் வெற்றியடைய, துரோகிகளை மறந்து விடுங்கள். மறக்க முடியாத போது

அவர்களை மன்னித்து விடுங்கள். மன்னிக்கவும் முடியாத போது அவர்களுக்கு

நன்றி செலுத்துங்கள்.

துரோகிகளை நோக்கி நன்றி செலுத்த முடியாத போது, நமக்கு நன்மை

செய்துள்ள மனிதர்களுக்கு நன்றி செலுத்துங்கள்.

நன்மை செய்தவர்களைப் பற்றிய நினைவுகளே இல்லையா?

பெற்றோருக்கும், திருமண இணைக்கும் நன்றி செலுத்துங்கள்.

அவர்களைப் பற்றி நல்ல விதமாக நினைக்கவே முடியாதா? உங்கள்

குழந்தைகளுக்கு நன்றி சொல்லுங்கள்.

அதைக் கூடச் செய்ய முடியாதா? இயற்கைச் சக்திகளுக்கு நன்றி

செலுத்துங்கள்.

உங்களிடம் நிறைந்து கிடக்கின்ற வளங்களுக்கு நன்றி சொல்லுங்கள்.

சொல்லிக் கொள்ளும்படியாக வளம் இல்லையெனில், உங்கள் உடல் நலத்திற்கு

நன்றி சொல்லுங்கள்.

ஐம்புலன்களை, கைகளை, கால்களை, ஆரோக்யமான உடலைப்

பெற்றிருப்பதற்கு நன்றி சொல்லுங்கள். மாறு கண் நோய் இல்லை. காக்காய் வலிப்பு

வியாதி இல்லை. இதற்காக நன்றி சொல்லுங்கள். இந்த வினாடியில் இந்த

நூலைப் படிப்பதற்குக் கிடைத்த வாய்ப்பிற்கு நன்றி சொல்லுங்கள்.

நூலிலுள்ள கருத்துக்களைப் புரிந்து கொள்ளும் அளவிற்குத் தெளிவாக

உள்ள உங்கள் அறிவுக்கும், புரிந்து கொள்ளும் திறனுக்கும் நன்றி சொல்லுங்கள்.

இவ்வாறாக எங்கே தொடங்குவதற்குச் சாத்தியப் படுகிறதோ அங்கிருந்து உங்கள்

நன்றிப் பயணத்தைத் துவக்குங்கள்.

எவ்வளவு அருமையான தென்றல் எப்படிப்பட்ட பசுமை! பறவைகள்!

மேகக்கூட்டம்! இவற்றையெல்லாம் கண்டு களிக்க கண்களைக் கொடுத்த

கடவுளுக்கு நன்றி. என் கண்களுக்கு நன்றி.

அழகை ரசிக்கத் தெரிந்த என் மனதிற்கு நன்றி என்னை உலகுக்குக்

கொண்டு வந்த என் பெற்றோருக்கு நன்றி. என்னோடு இப்போதும் இணைந்துள்ள

என் நண்பர்களுக்கு நன்றி. அண்டை அயலாருக்கு நன்றி.

எப்படிப்பட்ட உடல் நலத்தை நான் பெற்றிருக்கிறேன். அதற்கு நன்றி.

என் மூளை சிந்திக்கும் திறனை இன்னும் இழந்து விடவில்லையே. அதற்கு நன்றி.

இந்த நூலை எழுதியுள்ள ஆசியருக்கு நன்றி. இந்த படித்துப் பயன் பெறும்

அளவிற்கு என்னை உயிரோடு வீட்டு வைத்துள்ள அந்த துரோகிக்கு நன்றி.

என்னைக் கொன்றிருக்க முடியும். ஆனால், அந்த துரோகி அதைச்

செய்யவில்லை. அதற்கு நன்றி. இவ்வாறாகப் படிப்படியாக நெருங்கி

உண்மையான நன்றியறிவிப்பை உருவாக்கிக் கொள்ளுங்கள்.

என் அன்பார்ந்த உறவினனே நண்பனே, வாழ்க்கையில் எதுவுமே தானாக

நிகழ்வதில்லை. வாழ்க்கை பதில்களை மட்டுமே அளிக்கிறது. ஒவ்வொருவரும்

கேட்ட கேள்விக்கு வாழ்க்கை அளிக்கும் பதில்கள் தான் வாழ்வில் நிகழ்வுகளாக

இருக்கின்றன என்பதை நான் இப்போது உணர்ந்திருக்கிறேன்.

ஆகவே, என் வாழ்க்கையை நோக்கி உன்னை ஈர்த்து வந்ததும், என்னிடம்

உன்னை நெருங்கி உலாவ விட்டதும் எனது எண்ண அலைகளே என்பதை

உணர்கிறேன்,

ஆகவே உன் மீது தவறில்லை. நீ ஒரு கருணையாளன். உன் மீது நான்

கொண்டிருந்த நம்பிக்கைக்கு நீ எவ்வளவோ பெரிய கெடுதல்களைச் செய்திருக்க

முடியும். ஆனால், நீ செய்யவில்லை. ஒற்றை துரோகத்துடன் என்னை விட்டு

விட்டாய். அதற்காக உனக்கு நன்றி.

என் அன்பார்ந்த உறவினனே நண்பனே, நீ நினத்திருந்தால் என்னைப்

பைத்தியமாகவே கூட ஆக்கியிருக்க

முடியும். ஆனால், நீ செய்யவில்லை.

என்னை அறிவுடன் வீட்டு விட்டாய். அதற்காக உனக்கு என் மனமார்ந்த நன்றி,

என் அன்பார்ந்த உறவினனே நண்பனே, நீ என்னை ஒரு விபத்தில் சிக்க

வைத்திருக்க முடியும். ஆனால் அதைச் செய்யவில்லை, உன் கருணைக்கு நன்றி.

என் அன்பார்ந்த உறவினனே நண்பனே, உன்னிடமிருந்த கெட்ட

பழக்கங்கள் அனைத்தையும் எனக்குக் கற்றுக் கொடுத்திருக்க முடியும். ஆனால்

அவ்வாறு செய்யவில்லை. என்னை உடல் நலத்துடன் விட்டதற்கு மிகவும் நன்றி,

என்னுடைய வளமையின் ஊற்றுக்கள் அனைத்தையும் காட்டினேன்,

அனைத்தையும் நீ அடைத்திருக்க முடியும். ஆனால், சிலவற்றை மட்டும் தான்

அடைத்திருக்கிறாய். அந்த அளவிற்கு என் குழந்தைகளின் மீது நீ கருணை

காட்டியதற்கு மிக்க நன்றி.

மேற்கண்டவாறு உங்கள் வாழ்க்கைச் சூழல் எவ்வாறு இருந்ததோ

அதற்கேற்ப ஒரு நன்றி யறிவிப்புப் பட்டியலை உருவாக்கிக் கொண்டு,

உங்களால் முடிந்த போதெல்லாம் நன்றி தெரிவியுங்கள். இவ்வாறு நன்றி

தெரிவிக்கும் போது அந்த நபர் உங்கள் எண்ணத்திலிருந்து விடுதலை பெறுகிறார்.

இது வரை வெளி வராத ஞானம்.

ஒருக்கால், நன்றியறிவிப்பின் மூலமாகவும் மனதை அமைதிப் படுத்த

முடியாத போது, உங்களை ஏமாற்றிய, வஞ்சித்த, துரோகித்த நபரிடம் மானசீகமாக

மன்னிப்புக் கோருங்கள்,

ஏனெனில், அவர் ஒரு ஏமாற்றுப் பேர்வழியாக, வஞ்சகராக, துரோகியாக

உருவானதற்கு நீங்கள் தான் முழு முதற் காரணம்,

உங்கள் உணர்ச்சி அலைகளை உங்கள் ஆழ்மனம் பிரபஞ்சத்திற்கு

அனுப்பி வைத்தது. அதனால், அந்த உணர்ச்சியை அதிகப்படுத்துவதற்குரிய

காரியங்களை ஆற்றியாக வேண்டிய நெருக்கடி பிரஞ்ச சக்திக்கு ஏற்பட்டது.

அந்த நெருக்கடி காரணமாக, உங்கள் வட்டத்திலிருந்தே ஒரு சில

நபர்களை பிரபஞ்சம் தேடிப்பிடித்து, உங்கள் வாழ்க்கைக்குள் நெருக்கமாக

ஊடுருவி, துரோகத்தையும், வஞ்சகச் செயலையும் இழைக்கச் செய்திருக்கிறது.

அதன் மூலமாக, உங்கள் எண்ண அலைகளிலிருந்த உங்கள் உணர்ச்சியைப்

பன்மடங்கு அதிகரிக்கச் செய்திருக்கிறது.

ஆகவே, ஒரு நபரை உங்கள் வாழ்க்கைக்குள் நெருக்கமாக ஊடுருவி,

ஏமாற்றுக்காரனாக, வஞ்சகனாக, துரோகியாக மாற்றும் வேலையை உங்கள்

எண்ணங்கள் தான் செய்திருக்கின்றன.

இங்கேயுள்ள முக்கியமான தகவல் என்னவென்றால், உங்கள் உணர்வற்ற

நிலையில் இது நிகழ்ந்திருக்கிறது. அதனால், உங்களுக்குத்

தெரிந்திருக்கவில்லை.

தெரியாமல் செய்தாலும் தவறு தவறு தான். ஆகவே ஒரு அப்பாவியை

மோசக்காரனாக, வஞ்சகனாக, துரோகியாக, ஏமாற்றுப் பேர்வழியாக மாற்றிய

உங்கள் செயலுக்காக, அவரிடம் நிபந்தனையற்ற மன்னிப்புக் கோறுங்கள்,

மனப் பூர்வமாக மன்னிப்புக் கோறுங்கள். அவ்வாறு உண்மையை உணர்ந்து

மனப்பூர்வமாக மன்னிப்புக் கோறும் போது, உங்கள் மனம்

உடனடியாக

தன்னுடைய துயரப் படுகுழியிலிருந்து வெளியேறி, அமைதி நிலையை அடைந்து

விடுவதை உங்களால் உணர முடியும்.

மன அமைதி தான் முதல் தேவை. அமைதியான மனம் தான், நிம்மதியான

மனநிலை தான் ஒரு மனிதனின் மிகப்பெரும் சொத்து. இது மட்டும்

இருக்குமானால் எதையும் மிக எளிதாக ஈட்டி விட முடியும் ஏனெனில்,

எல்லாச் சொத்துக்களும் நிம்மதியான மனநிலையின் உப விளைவுகளே,

ஆகவே, நமக்குத் துரோகம் இழைத்துள்ள துரோகி களிடமும், நம்மை

வஞ்சித்துள்ள வஞ்சகர்களிடமும், நம்மைப் பெருமளவில் ஏமாற்றியுள்ள

ஏமாற்றுக்காரர்களிடமும் மன்னிப்புக் கோர வேண்டிய முழுப்பொறுப்பும்

நம்முடையது.

ஏனெனில் அவர்கள் அவ்வாறு உருவாக நாம் தான் காரணமாக

இருந்திருக்கிறோம்.

இது ஒரு பேருண்மை. எனினும் மனோ விஞ்ஞானம் பற்றிப் பேசியுள்ள எந்த

ஞானியும் இது வரை இந்த உண்மையைக் கூறியதில்லை, கெடுமதியாளரை

மன்னித்து விடுங்கள். அப்போது தான் உங்கள் மனம் அமைதி அடையும்.

அப்போதும் மன அமைதி கிடைக்காவிட்டால் அவர்களுக்கு மேற்கண்ட

அனுபவத்தை வழங்கியதற்காக மானசீகமாக நன்றி சொல்லுங்கள். நிச்சயம்

மனம் அமைதியுறும் என்று தான் இதுவரை சொல்லிருக்கிறார்கள்,

ஆனால், எங்கோ சுற்றிக் கொண்டு, எங்கோ போக வேண்டிய மனிதர்களை,

உங்கள் எண்ண அலைகள் தான் உங்களை நோக்கி ஈர்த்து வந்திருக்கிறது.

உங்கள் வாழ்வில் முதல் வட்டத்திற்குள் நுழையக் கூடிய நெருக்கமான நபராக

அவர்களை மாற்றியிருக்கிறது.

சூழல்களை உருவாக்கிக் கொடுத்து, அவர்களை வஞ்சகர்களாகவும்,

துரோகிகளாகவும் மாற்றியிருக்கிறது. ஆகவே, அவ்வாறு அவர்களை

மாற்றியதற்காக அவர்களிடம் மன்னிப்புக் கோறுங்கள் என்று இது வரை எந்த

ஞானியும் சொன்னதில்லை,

இந்த நூலில் சொல்லப்பட்டுள்ள ஏராளமான கருத்துக்களில் எந்தவொரு

நூலிலும் சொல்லப்படாத ஒரு கருத்தொன்று இருக்குமானால், அந்தக் கருத்து

இது மட்டுமே.

இந்தத் தத்துவம் எந்தவொரு நூலிலும் இது வரை வெளி வந்ததில்லை.

நான் ஒரு பெருந் துரோகத்திற்கு ஆளாகித் துடித்துக் கொண்டிருந்த போது,

இமய மலையில் வாழ்ந்த ஒரு சாது வாய் வழியாக எனக்குச் சொல்லிக் கொடுத்ததன்

அடிப் படையில், எனக்குள் ஏற்பட்ட புரிதல் இது.

தெளிவான புரிதலின் அடிப்படையில் மனப்பூர்வமாக மன்னிப்புக் கேட்டதன்

விளைவாக, சில வினாடிகளிலேயே மனம் அமைதியடைந்து விட்டது. மனம்

முழுவதையும் நிறைத்திருந்த துயரமிக்க எண்ணங்கள் வெளியேறி விட்டது. மனம்

காலியாகி விட்டது.

அதன் பிறகு தான், வாழ்க்கையின் அடுத்தகட்ட நடவடிக்கை குறித்துத்

திட்டமிடுவதற்கான, யோசிப்பதற்கான வாய்ப்பே கிடைத்தது. இது என்னுடைய

சொந்த அனுபவம்,

மேற்கண்ட வழி முறையைப் பயன்படுத்தி இதுவரை சந்தித்துள்ள

ஏமாற்றங்கள், வஞ்சகங்கள், பெருந்துரோகங்கள் போன்றவற்றால் ஏற்பட்டுள்ள

வலிகளைப் போக்கிக் கொள்ளுங்கள்.

வலி நிறைந்த எண்ணத்திலிருந்து உங்கள் ஆழ்மனதை மீட்டெடுங்கள்.

உங்கள் எண்ண அலைகளைச் சுத்தப் படுத்துங்கள். அது நிகழ்ந்த பிறகு தான்

எந்நேரமும் துயரத்தைச் சுமந்து கொண்டிருந்த மூளை, கனவுகளின் பிறப்பிடமாக

மாறும்,

கனவு ஆயிரம் கோடி ரூபாயை ஈட்டுவதாக இருக்கலாம். அல்லது ஒரு

இலட்சம் கோடியாகக் கூட இருக்கலாம். இதை விடப் பெரிய வேறொன்றாகவும்

இருக்கலாம். நிச்சயம் அது நிறைவேறும்.

ஏனெனில், இலட்சம் கோடி என்பது மனிதனுக்குப் பெரிதாகத் தெரியலாம்.

பிரபஞ்சத்திற்கு ஒரு விநாடி நேர வேலை அது.

ஆகவே, கனவைத் தெரிவித்து விட்டு, பிரபஞ்ச சக்திக்கு கதவைத் திறந்து

போதும். வழியை அடைக்காமல் சற்றே ஒதுங்கி நின்றால் போதும்.

நம் கனவுகள் அனைத்தும் பிரபஞ்ச சக்தியால் நிறைவேற்றி வைக்கப்படும்.

ஆகவே, வளமையும், செழுமையும் எங்கோ வெகு தொலைவில் இல்லை.

நம்முடைய மண்டைக்குள் தான் இருக்கிறது.

பிரார்த்தனை பலிக்காமப் போவதில்லை**.**

மேற்கண்ட சூத்திரத்தைப் பயன்படுத்தி முதலில் மனதைக் கழுவிச் சுத்தப்

படுத்திக் கொள்ளுங்கள். மனம் சுத்தமானதும் மனதை வலுப்படுத்தும் ஒரு

பயிற்சியை மேற்கொள்ளுங்கள்.

மனதை வலுப்படுத்தும் பயிற்சிக்குப் பெயர் தான் பிரார்த்தனை.

ஒவ்வொரு நாளும் கடவுளிடம் பிரார்த்தனை செய்யுங்கள்.

ஒரு நாளின் கடைசி வேலையாகப் பிரார்த்தனை இருக்கட்டும். அந்தப்

பிரார்த்தனையின் போது கடவுளுக்கு நன்றி செலுத்துங்கள்.

கடவுள் யார் என்பது முக்கியமல்ல. நம்பிக்கை தான் முக்கியமானது.

எந்தக் கடவுளை நம்பினாலும், உங்கள் பிரார்த்தனை உணர்ச்சிகரமாக

இருக்குமானால், அது நிச்சயமாக நிறைவேறியே தீரும்.

கடவுளிடம் கெஞ்சாதீர்கள், மாறாகக் கடவுளுக்கு உத்தரவிடுங்கள்.

கடவுளைக் கண்டு அஞ்சாதீர்கள், தாயை விடக் கடவுள் கூடுதலான கருணை

மிக்கவர்.

ஆகவே அடம் பிடியுங்கள், ஆனால், இறுதியில் அனைத்தையும்

வழங்கியதற்காக கடவுளுக்கு நன்றி செலுத்துங்கள்.

உங்களை உயிருடன் வைத்திருப்பதற்காக, உங்களுக்கு ஒரு திருமண

இணையை வழங்கியிருப்பதற்காக, குழந்தைகள், பிற செல்வங்களை

வழங்கியிருப்பதற்காக, கடவுளுக்கு நன்றி சொல்லுங்கள்.

அந்த நன்றிக்கு ஈடாகக் கடவுள் நல்லதே செய்வார், கடவுள் நம்பிக்கை

காரணமாக தன்னம்பிக்கையை அதிகரிக்கக்கூடிய வேதிகள் மூளையிலே

சுரக்கின்றன. இதை அறிவியலும் நிரூபித்திருக்கிறது.

எந்தக் கடவுளை நம்பினாலும் அந்த வேதி சுரக்கும். உங்கள்

தன்னம்பிக்கை அதிகரிக்கும்,

தன்னம்பிக்கை அதிகரிக்கும் போது எண்ண அலைகள் நல்லவையாகும்.

அதனால், நல்லவிதமான எண்ண அலைகளை மூளை வெளிவிடத் தொடங்கும்.

அதனால் நல்ல மனிதர்களையும், நல்ல சம்பவங்களையும் வாழ்க்கையை நோக்கி

பிரபஞ்ச சக்தி அனுப்பி வைக்கும்.

நல்லவர்களாலும், நல்ல சம்பவங்களாலும் சூழப்படும் போது, வாழ்க்கை

தானாகவே மகிழ்ச்சிகரமானதாக மாறி விடும்.

தொடர் மகிழ்ச்சி பெரு வெற்றிகளைக் கொண்டு வந்து குவிக்கத் தொடங்கும்.அதனால், வாழ்க்கை ஒரு வெற்றிப் பயணமாக மாறும். அதனுடைய சுருக்கமான

பெயர் தான் சொர்க்கம்

அந்த சொர்க்கத்தை அடைவதற்கான ஒரே வழி பிரார்த்தனை.

தந்த்ரா- பண்டைய இந்திய ஞானம்

மேற்கண்டவாறு மனதைச் சுத்தமாகக் கழுவி, வலுப்படுத்திக் கொள்வதன்

மூலம் இதுவரை அனுபவித்துக் கொண்டிருந்த துயரங்களிலிருந்து நாம் எளிதாக

வெளியேறி விடலாம். அதன் பின் மேற்கொண்டு மனம் அழுக்கடையாமல்

பாதுகாப்பாக வாழக் கற்றுக் கொள்ள வேண்டும்.

மனம் அழுக்கடையாமல் வாழ வேண்டுமானால், மனதை எளிதில்

அழுக்கடையச் செய்கின்ற குடும்ப விவகாரச் சண்டையில் ஈடுபடக் கூடாது.

குடும்ப விவகாரச் சண்டைகள் தான் குடும்பத்தை நோக்கி அனைத்து

விதமான தீமைகளையும் ஈர்த்துக் கொண்டு வருகின்றன.

இன்னும் தெளிவாகச் சொல்வதென்றால், குடும்ப விவகாரச்

சண்டைகள் மட்டுமே வாழ்வில் நிகழ்கின்ற எல்லா வகையான

கேடுகளுக்கும் முழு முதற் காரணம்.

குடும்ப வாழ்வில் நிலவும் நிம்மதியான சூழலே ஒரு ஆணின்

அனைத்து வெற்றிகளுக்கும் அடித்தளம். குடும்ப விவகாரச் சண்டைகளே

அனைத்து தோல்விகளுக்கும் அடித்தளம்.

அந்தக் குடும்ப விவகாரச் சண்டைகளுக்குக் காரணமாயிருப்பதோ

மனைவியின் தணிக்கப்படாத காமம், அந்தத் தணிக்கப் படாத காமத்திற்குக்

காரணம் கணவனிடமுள்ள பாலியல் அறியாமை.

புறம் சார்ந்த எந்தவொரு செயலால் மோசமான உணர்ச்சிகள் தோன்றி தலை

கெட்டுப் போனாலும், காமத்தின் மூலம் அதைச் சரி செய்து விடலாம். ஆனால்,

காமத்தின் மூலமே தலை கெடுமானால், அதைச் சீர் செய்ய இந்த உலகில்

எந்தவொரு வழியும் இல்லை,

அழிவும், வீழ்ச்சியும் அல்லது எவ்வித வளர்ச்சியுமின்றி வாழ்வது மட்டுமே

விளைவுகளாக இருக்கும்.

ஆகவே, மனைவிக்கு உரிய பாலின்பங்களை வழங்க ஒவ்வொரு கணவனும்

கற்றுக் கொள்ள வேண்டும். பாலுறவு என்பது உடல் மூலமாக அன்பைப்

பரிமாறிக் கொள்ளும் செயல்,

ஆனால், அன்பேயில்லாத இயந்திரத்தனமான பாலுறவு தான், பாலுறவே

இல்லாத வாழ்க்கையை நோக்கிப் பெண்ணைத் தள்ளுகிறது. மோசமான

பாலுறவை காட்டிலும் பாலுறவே இல்லாமல் வாழ்வதையே ஒரு பெண்ணின்

உடலும் மனமும் விரும்புகிறது. அதனால் தான் பாலுறவில் ஈடுபட மனைவி

மறுக்கிறாள். அதனால் தான் குடும்ப விவகாரச் சண்டை உருவாகிறது

ஆனால், பெண்ணின் உடலில் நிகழக் கூடிய பாலின்பங்களை, தவறாமல்

வழங்கிட ஒரு ஆண் கற்றுக் கொள்ளும் போது, அவனுடைய மனைவி ஒரு

போதும் பாலுறவை மறுக்கும் நிலையில் இருக்க மாட்டாள் என்பதோடு

தானே பாலுறவைத் துவக்குபவளாகவும் மாறிப் போவாள்.

அதனால், கணவனுக்குரிய பாலின்பம் மறுக்கப் படாமல் வழங்கப்

படுமாகையால், கணவனின் மனநலமும் சிறப்பாக இருக்கும்.

மேலும், பாலின்பங்கள் நிகழ்வதன் காரணமாக, மனைவியின் மூளையிலும்

அன்பை உருவாக்கக் கூடிய, நுண்ணறிவை உருவாக்கக்கூடிய வேதிகள்

சுரக்கத் தொடங்கி விடும்,

அதனால் குறை காணும் போக்கைக் கொண்டிருந்த அறிவு மழுங்கி,

மன்னிக்கும் மனப்பான்மையையும், புரிந்து கொள்ளும் திறனையும் மனைவியின்

மூளை பெற்று விடும்.

அதாவது மூளையில் அதற்குரிய வேதிகள் சுரந்து விடும். அதனால் குடும்ப

விவகாரச் சண்டைகள் முடிவுக்கு வந்து விடும்.

ஆகவே, மனை வி யை ஒரு போகப் பொருளாகப் பயன்படுத்திக்

கொண்டிருக்கும் போக்கைக் கை விட்டு விட்டு, மனைவிக்குரிய

பாலின்பங்களைத் தவறாமல் வழங்கும் வழிமுறைகளைக் கணவன் கற்றுக் கொள்ள

வேண்டும்,

அதற்குரிய வழிமுறைகளையும் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு

முன்பே இந்திய ஞானிகள் கண்டு பிடித்து, மனித குலத்திற்கு வழங்கிச்

சென்றுள்ளார்கள்.

ஆனால், அந்த வழிமுறைகள் சாமான்ய மனிதனை வந்தடையவில்லை,

பேரரசர்களும், பிரபுக்களும், குருமார்களும், ஆளும் வர்க்கமும் மட்டுமே அந்த

வழிமுறைகளைப் பயன் படுத்திக் கொண்டிருந்தார்கள். சாமான்யர்களுக்கு

அந்த அறிவு மறுக்கப் பட்டிருந்தது.

அந்த அறி வனைத்தும் மந்திரங்கள் என்றும், அவற்றை வெளியில்

சொன்னால் பலிக்காமல் போய் விடும் என்றும் மூடி வைக்கப் பட்டிருந்தது.

அந்த அறிவைத் தான் இந்த நூல் சாமான்ய மக்களுக்காக விரித்து வைக்கிறது.

அந்த அறிவின் பெயர் தான் தந்த்ரா. ஒரு தார மணத்தை வலியுறுத்தும்,

மேற்கத்திய நாடுகளைச் சேர்ந்த மக்கள் தந்த்ரா ஞானத்தைத் தான் தங்கள்

வாழ்க்கை நெறியாகக் கொண்டு இப்போது வாழத் தொடங்கியிருக்கிறார்கள்.

தந்த்ரா-பண்டைய இந்திய ஞானம்! புத்தராலும், சீனாவின் தாவோ

ஞானியராலும் புரிந்து கொள்ளப்பட்ட ஞானம், பாலின்பத்தை ஞானத்தின்

முதற்படியாய்க் கருதிய ஞானம், மனவளமைக்கும் பாலின்பத்திற்கும் இடையே

இருந்த உறவைப் புரிந்து கொண்ட ஞானம்,

மனித மனதைச் செழுமையோடு சிந்திக்கச் செய்வதில், வளமையோடு

சிந்திக்கச் செய்வதில், வலிமையோடு சிந்திக்கச் செய்வதில், மனிதத் தன்மையோடு

சிந்திக்கச் செய்வதில், நுண்ணறிவோடு சிந்திக்கச் செய்வதில், புரிதல் திறனோடு

சிந்திக்கச் செய்வதில், பாலின்பம் எவ்வாறெல்லாம் பங்காற்றுகிறது என்பதை மனித

குலத்திற்குப் புரிய வைத்த ஞானம்.

காம உணர்வு புனிதமான உணர்வு. காமமே படைப்பாக்கங்கள்

அனைத்திற்கும் மூலம், ஆகவே, காமத்தைக் கொல்வதும் கனவுகளைக்

கொல்வதும் வெவ்வேறல்ல.

அபரிமிதமான காம உணர்வு ஒரு சிறப்பு வரம். காம உணர்வு முழுவதையும்

ஒருதார உறவில் முழுமையாக அனுபவிக்கும் போது மனிதனின் கவலைகள்

மறைகின்றன. எண்ணங்களை ஒளிக்கற்றையாக மாறுகின்றன.

அதனால் அவன் மகா வெற்றி பெறுகிறான். பேரரசனாய்ப்,

பெருந்தலைவனாய், இணயற்ற படைப்பாளியாய், அழியாக் கவிஞனாய், மனித

சமூகத்திற்கு மிகப் பெரும் நன்மைகளை செய்யக் கூடியவனாய் உருவாகிறான்

என்கிற உண்மையைப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே ஆதாரபூர்வமாக

நிரூபித்து வைத்துள்ள ஞானம்.

ஆகவே குடும்ப வாழ்க்கையை நிம்மதியாக, மகிழ்ச்சியாக வாழ விரும்பும்

ஆண் காம உணர்வின் சக்தியைப் பற்றிப் புரிந்து கொண்டு, அதை முறையாகப்

பயன் படுத்தக் கற்றுக் கொள்ள வேண்டும்,

மனைவியை போகப் பொருளாகப் பயன்படுத்தும் மடமைக்கு முடிவு கட்ட

வேண்டும். அப்போது தான் அவன் தன் தகுதிக்குரிய

சாதனையாளனாக உருவாக

முடியும்.

தந்த்ரா அறிவைக் கற்றுக் கொள்வதன் முதற்படியாகக் காம உணர்வைக்

கொல்லக் கூடிய எதிரிகள் அனைத்தையும் குடும்ப வாழ்விலிருந்து அப்புறப்

படுத்த வேண்டும்.

துயரம் மிக்க மனநிலை காம உணர்வைக் கொல்வதில் முதலிடம் வகிப்பது.

ஆனால், துயரமிக்க சூழலால், துன்புறும் மனதைச் சுத்தப் படுத்த நாம் இப்போது

கற்றுக் கொண்டு விட்டோம்.

இதைத் தவிர, காம உணர்வைக் கொல்லக் கூடிய வேறு பல

வாழ்க்கைச் சூழல்கள் உள்ளன. அவற்றையும் கண்டறிந்து வாழ்க்கை

யிலிருந்து களைந்தெரியும் வழிகளைக் கற்றுக் கொண்டபின், தந்திரா

ஞானத்தைக் கற்றுக் கொள்ளத் துவங்குவோமாக!

## பாகம்-**2**

## காம உணர்வைக்

## கொல்லும் கயவர்கள்

## தந்த்ராவழியில் தாம்பத்யவாழ்க்கை

### **1.** மாமியார் மருமகள் சண்டை**.**

“மாமியார் என்பவர் முதலில் ஒரு பெண், அதன்பிறகு தான் மாமியார்

தம்பதியரின் துயரம் மிக்க மனநிலை, மென்மேலும் பன்மடங்கு கூடுதலான

துயரங்களைக் குடும்பத்தை நோக்கி ஈர்த்து வந்து இல்லற வாழ்வை

நரகமாக்குவதோடு நின்று விடாமல், தாம்பத்ய உணர்வைக் கொல்வதிலும்

முதலிடத்தை வகிக்கக் கூடியதென்றால், மாமியாருக்கும் மருமகளுக்கும் இடையே

ஏற்படக்கூடிய சண்டை தம்பதியரின் தாம்பத்யத்தைப் பாதிப்பதன் மூலமாக

குடும்ப வாழ்க்கையை நரகமாக்குவதில் இரண்டாமிடத்தை வகிக்க்க் கூடியது.

மருமகள் வீட்டிற்குள் நுழைந்தவுடனே, அவள் எப்படிப்பட்டவள்

என்பதைத் தெரிந்து கொள்ளும் நோக்கில், மருமகளின் ஒவ்வொரு செயலையும்

கண்காணிக்கக் கூடிய இரகசியக் காவலராக மாமியார் மாறுகிறார். புத்திமதி

சொல்வதைப் போன்ற தோரணையில், உத்தர விடும் அதிகாரியாக மாறுகிறார்.

மருமகளும் இதைப் புரிந்து கொள்கிறாள்.

இருப்பினும், மாமியாரின் விருப்பத்திற்கேற்ப நடந்து கொள்ளவே மருமகள்

முயற்சிக்கிறாள். எந்த அளவிற்கு மருமகள் அனுசரிக்க முயற்சிக்கிறாளோ அந்த

அளவிற்கு மாமியாரின் நெருக்கடிகள் அதிகரிக்கத் தொடங்குகின்றன.

எந்த நாளில் பாலுறவு கொள்ள வேண்டும், எந்த நாளில் பாலுறவில்

ஈடுபடக்கூடாது என்பதைப் பற்றியெல்லாம் கூட புத்திமதி என்கிற பாவனையில்

மாமியார் உத்தரவிடத் தொடங்கும் போதுதான் லேசான உரசல் ஆரம்பமாகிறது.

இரவில் கணவனோடு விளையாடிய காரணத்தால், பின்னிரவில் உறங்கி

அடுத்த நாள் காலையில் சற்று நேரம் கழித்து எழுந்த போது காண நேர்ந்த

மாமியாரின் இழிவான பார்வை தான் மருமகளை மனதிற்குள் வெகுண்டெழச்

செய்கிறது.

அதுவரை மாமியாரிடம் மரியாதையோடு நடந்து கொண்டிருந்த மருமகள்

அதன் பிறகு தான் அண்டை வீட்டுக்காரியிடம் நடந்து கொள்வதைப் போல

நடந்து கொள்ளத் தொடங்குகிறாள். இவ்வாறாக மாமியார் மருமகள் பிரச்சினை

உருவாகிறது.

சண்டைக்குக் காரணம் மாமியாரின் பொறாமை உணர்வு.

பிரச்சினைக்கு முதற் காரணம் மாமியாரின் பொறாமையுணர்ச்சி. இந்தப்

பொறாமை மாமியாருக்குத் தெரியாமலே அவரது மனதில் உருவாகிறது. இதற்குக்

காரணம் அவரது மகன் மீதுள்ள பாசம்.

கணவன் என்பவன் கழுத்துப் புருசன். மகன் என்பவன் வயிற்றுப் புருசன்

என்று பழமொழி இருக்கிறது. அந்தப் பழமொழி இங்கே செயலாக்கம் பெறுகிறது.

தாயைப் பொறுத்தவரை, மகன் அவளது காலையே சுற்றிக் கொண்டிருந்த

குழந்தை. அந்தக் குழந்தை மீது அவர் உயிரையே வைத்திருக்கிறார். அதே போல

அந்தக் குழந்தையும் தாயின் மீது தான் அதிகமான பாசத்தை வைத்திருந்தது.

தந்தையெல்லாம் இரண்டாம் பட்சமே,

மகனுடைய திருமணத்திற்குப் பின்னும் மாமியார் மாறவில்லை, ஆனால்

மகன் மாறிவிட்டான், அதாவது, மகன் மாறிவிட்டதாகவும், அவ்வாறு மருமகள்

தான் மாற்றி விட்டதாகவும் மாமியார் கருதுகிறார் இதுதான் பிரச்சினை.

ஆனால், உண்மையில் மகன் மாறவில்லை. தாயின் மீதிருந்த அவனுடைய

அன்பு கடுகளவும் குறையவே இல்லை, எனினும் அவனுடைய செயல்கள்

அதைப் பிரதிபலிப்பதாக இல்லை.

மருமகளாகப் பட்டவள் தினம் தவறாமல் தன்னுடைய தாயுடன் இரண்டு

மணி நேரமாவது கைபேசி மூலமாக பேசுகிறாள். மேற்கொள்ளப்படும் தொடர்புகள்

அனைத்தும் இலவசம் என்கிற அட்டவணையின் கீழ் கைபேசிகளை வாங்கி

தாயிடம் ஒன்றைக் கொடுத்து விட்டு, தானொன்றை வைத்துக்

கொண்டிருக்கிறாள்.

ஆனால் இந்த மகனோ, தன் தாயுடன் வாரத்திற்குப் பத்து நிமிடம் பேசுவதே

அபூர்வமாக இருக்கிறது. அதனால், தன் மகனுடைய பாசத்தை, மருமகள் தான்

கொன்று விட்டதாகக் கருதுகிறாள்.

பெண் குகையி லே வசித்தவள், அதனால், எந்நேரமும் பேசிக்

கொண்டேயிருந்தவள். அதனால், பெண்ணைப் பொறுத்தவரை, பேசுவதென்பது

சுவாசிப்பதைப் போன்றது.

தினமும் பத்தாயிரம் வார்த்தைகளாவது பெண்ணின் வாயிலிருந்து

வெளியேறியாக வேண்டும். இல்லையேல் பெண்ணுக்குப் பைத்தியம் பிடித்து

விடும்.

ஆனால், ஆண் என்பவன் வேட்டையாடிக் கொண்டிருந்தவன். பலமாகச்

சுவாசித்தாலே பதுங்கியுள்ள மிருகம் தப்பித்து ஓடி விடும். அல்லது அவன் மீதே

பாய்ந்து விடும்.

ஆகவே, ஊமையாகவே வாழ்ந்து கொண்டிருந்தவன். அதனால்,

ஆண்களுக்கு தேவையின்றிப் பேசுவது பிடிக்காது.

அவ்வாறு பல்லாயிரம் ஆண்டு கால அனுபவத்தின் வாயிலாகப் பெற்றுள்ள

சுபாவத்தின் படி தான், மகன் தன் தாயுடன் பேசாமல் இருக்கிறான். ஆனால்,

மேற்கண்ட உளவியல் உண்மை மாமியாருக்குத் தெரியாது.

ஆதனால், தன் மீதான மகனுடைய பாசத்தை, தலையணை மந்திரம்

மூலமாக மருமகள் தான் கொன்று விட்டதாகக் கருதுகிறாள்.

திருமணத்திற்கு முன்பு தன்னுடைய ஒவ்வொரு தேவைக்கும் தாயை

நாடியவன் இப்போது மனைவியைத்தான் நாடுகிறான். அவனுக்கு எந்த உணவு

பிடிக்கும் என்பது தாய்க்கு நன்றாகத் தெரியும், ஆனால், பார்த்து பார்த்து

பரிமாற வாய்ப்பில்லை, அவனுடைய மனைவி தான் பரிமாறுகிறாள்.

ஒரு நாளில் பெரும் பகுதியை, மனைவியோடு தான் அவன் கழிக்கிறான்.

அவ்வப்போது மட்டுமே தாயோடு பேசுகிறான்.

அவனுடைய உலகமே மனைவி தான் என்றாகி விட்டது. அதனால், மகன்

கை நழுவிப் போய் விட்டான்.

இல்லையில்லை, திட்டமிட்டு மருமகள் அபகரித்துக் கொண்டாள் என்கிற

எண்ணம் மாமியாரின் மனதில் ஏற்பட்டு விடுகிறது. அதனால் மருமகள் மீது

பொறாமையுணர்வு உருவாகிறது.

மருமகளோடு தன்னை ஒப்பிட்டுப் பார்க்கிறார்,

இவ்வாறு உருவாகிற பொறாமையுணர்வு கொஞ்சம் கொஞ்சமாகப் பெருகி,

மருமகளின் ஒவ்வொரு செயலோடும் தன்னுடைய வாழ்க்கையை ஒப்பிட்டுப்

பார்க்கச் செய்கிறது. ஒப்பீட்டுப் படலம் துவக்கமாகிறது. தலைமுறை இடைவெளி

காரணமாக, மாமியார் காலத்தை விட மருமகளின் காலம் முன்னேறியதாகத் தான்

இருக்கும். இது நாட்டின் வளர்ச்சி சார்ந்தது.

உதாரணமாக, மாமியார் காலத்தில், எங்காவது செல்ல வேண்டியிருந்த போது,

பெரும்பாலும் பஸ்ஸில் தான் சென்றிருப்பார். அல்லது அதிக பட்சமாக இரு சக்கர

வாகனத்தில் சென்றிருக்கக் கூடும். ஆனால் இப்போது மருமகள் காரில் செல்கிறாள்.

மாமியாருக்கு பத்துப் புடவைகள் இருந்திருந்தாலே பெரிய அதி சயம்,

ஆனால், மருமளுக்கோ நூற்றுக்கணக்கான புடவைகள் உள்ளன. மாமியாருக்கு

ஐந்தாறு பட்டுச் சேலைகள் தான் இருந்திருக்கும், ஆனால் மருமகளோ பக்கத்து

விட்டுத் திருமணத்திற்குக் கூடப் பட்டுச் சேலை வாங்குகிறாள்.

மாமியாரின் காலம் கூட்டுக் குடும்பம். இப்போது தனிக்குடித்தனம் தான் கலாச்சாரம்.

மாமியாரின் காலத்தில் நினைத்த போதெல்லாம் சண்டை போட முடியாது.

பெரியவர்கள் ஆட்சி செய்த காலம் அது. ஆனால் இப்போது மருமகளின் ஆட்சி

தான் எங்கும் நடைபெறுகிறது.

மாமியார் காலத்தில் கைபேசி இல்லை. ஆனால், இப்போது கொஞ்சம்

சோர்வாக இருந்தால் கூட கைபேசியை எடுத்து, கணவனோடு காலையில்

துவங்கிய சண்டையைத் தொடரலாம். குறுஞ்செய்திகள், வலைதளம் என புகுந்து

விளையாடிக் கொண்டிருக்கலாம்.

மாமியாரை விட கூடுதலான நகைகளை மருமகள் வைத்திருக்கிறாள்,

சுயமாகச் சம்பாதிக்கிறாள், மாமியாரும் சம்பாதித்திருக்கலாம். எனினும், மாமியாரை

விட மருமகள் பன்மடங்கு அதிகமாகச் சம்பாதிக்கிறாள்.

மாமியார் காலத்தில் சுயசம்பாதனை இருந்திருந்தாலும் பெண்ணடிமைத்

தனம் காரணமாக சில சிரமங்களுக்கு உள்ளாகியிருப்பார்.

தலைமுறை இடைவெளி,

கடந்த கால் நூற்றாண்டு காலத்தில் பெண் சுதந்திரம் எவ்வளவோ

முன்னேறியிருக்கிறது. இன்றைய புதுமைப் பெண்ணுக்குக் கிடைத்துள்ள

சுதந்திரம் மாமியாருக்கு வழங்கப் படவில்லை.

மாமியார் நினைத்த நேரத்தில் எல்லாம் வெளியே செல்ல முடியாது.

மணிக்கணக்கில் அலை பேசியில் பேச முடியாது. சக நண்பனோடு இரு சக்கர

வாகனத்தில் தெரு முனை வரை வந்து இறங்க முடியாது.

மாமியார் காலத்தில் ஒரு முறை கூட பெண், அழகு நிலையத்திற்குச்

சென்றிருக்க மாட்டாள். ஆனால் மருமகளோ மாதத்திற்கு இரண்டு முறை

செல்கிறாள். தன்னை அலங்கரித்துக் கொள்வதன் பின்னால் உள்ள உளவியல்

காரணத்தைப் புரிந்து கொள்ளாமலே, புருவம் முதல் கால் முடி. வரை நேர்த்தி

செய்து கொண்டிருக்கிறாள்,

மாமியார் காலத்தில் நினைத்த நேரத்தில் எல்லாம் கணவனோடு பேச

முடியாது, மாமியார் காலத்தில் கணவன் மனைவியை அடிப்பது சகஜம்,

பாலுறவைக் கணவன் கேட்டால், மறுக்க முடியாது. மறுத்தால் அடி விழும்.

ஆனால் மருமகள் காலத்தில் அந்த வேலையெல்லாம் நடக்காது. உரக்கக்

கத்திப் பேசுவதற்கே இப்போது மனைவியிடம் அனுமதி பெற வேண்டும்.

பாலுறவென்பது இப்போது மனவியின் விருப்பத்திற்கேற்ப மட்டுமே

நடைபெற முடியும். மாதக்கணக்கில் கூட கணவனைக் காயவைக்க இன்றைய

மனைவியால் முடியும்.

மாமியார் காலத்தில் மாமியார் கொடுமை மிகுந்திருந்திருக்கலாம். ஆனால்

இப்போது மாமியார் கொடுமை என கொஞ்சம் தெரிந்தாலும் வரதட்சிணை

அல்லது குடும்ப வன்முறை வழக்குகள் பாய்ந்து விடும்.

மாமியார் காலத்தில் மாமியார் வைத்தது தான் சட்டம். ஆனால் இப்போது

மருமகள் வைத்தது தான் சட்டம்.

மாமியார் காலத்தில் மருமகளின் உறவுகள் இன்றைய காலகட்டத்தை போல்,

இவ்வளவு சுதந்திரமாக வர முடியாது. கணவனின் உறவுகளுக்கும் மரியாதை

இருந்த காலம் அது. ஆனால் இப்போது மருமகளின் உறவுகளுக்குத் தான்

முதலிடம். மாமியாரின் உறவுகள் அந்நியர்கள் ஆகி விட்டனர்.

இவ்வளவு பாத்திரங்கள் இருந்திருக்காது. அணைக்கப்படாத

தொலைக்காட்சி, வலைத்தளம். ஃபேஸ்புக், பல ஜோடி செருப்புகள், மாளிகை

போன்ற மாடி வீடு இருந்திருக்காது. நினைத்த நேரத்துக்கு கடை வீதிக்குப்

போயிருக்க முடியாது.

பெண்களுக்கான இத்தனை பத்திரிகைகள், பிரத்யேகமான தனிக்குடித்தன

வசதி, கணவனிடம் வீட்டு வேலை வாங்கும் வாய்ப்பு குளிர்சாதனப் பெட்டி,

மற்றும் இவற்றைப் போன்ற இன்ன பிற நவீன வசதிகள் இருந்திருக்காது.

இவற்றையெல்லாம் ஒரு மாமியாராக இல்லாமல், ஒரு பெண்ணாக ஒப்பிட்டுப்

பார்க்கிறாள். அதனால் மாமியாரின் மனதில் பொறாமை ஏற்படுகிறது.

அந்தப் பொறாமை மாமியாரையும் அறியாமல் கசிந்து விடுகிறது. இதை

மருமகளும் புரிந்து கொள்கிறாள்.

அந்தப் பொறாமை மாமியாரையும் அறியாமல் கசிந்து விடுகிறது. இதை

மருமகளும் புரிந்து கொள்கிறாள்.

ஏனெனில், உடல்மொழி மூலம் உரையாடுவதிலும், பதிலுரையைப் புரிந்து

கொள்வதிலும் பெண்களுக்கு உள்ள திறன் தனிச் சிறப்புடையது. முதல்

ஓமூன்றாண்டு காலக் குழந்தை வளர்ப்பிற்காக, இயற்கையால் பெண்ணுக்கு

வழங்கப்பட்டுள்ள கூடுதல் திறன் அது.

வாயைப் பயன்படுத்தி ஒரு வார்த்தை கூடப் பேசாமலே, தற்கொலை

செய்து கொண்டு செத்துப் போகும் அளவிற்கு இரு பெண்களால்

சண்டையிட்டுக் கொள்ள முடியும்.

அதாவது, நூற்றுக்கணக்கான முறை உடல் மொழி மூலம் தன் காதலைக்

குறிப்பிட்ட ஆணிடம் பெண் தெரிவித்துக் கொண்டேயிருப்பாள். ஆனால், அந்த

ஆணோ தன் காதலை, அந்தப் பெண்ணிடம் தெரிவித்தால் செருப்பைக்

கழட்டிக்

காட்டி விடுவாளோ என அஞ்சி, எச்சிலை விழுங்கியபடித் தன் காதலைத்

தெரிவிக்காமலே ஒதுங்கிக் கொள்வான்.

இவ்வாறு துவங்காமலே செத்துப் போன காதல் கதைகள் ஒவ்வொரு

பெண்ணிடமும் உண்டு. ஆகவே உடல் மொழி மூலம் அவமதிக்கப் படுவதை

மருமகள் கண்டு பிடித்து விடுவாள்.

மாமியாரின் அரசியல்.

அடுத்தது அரசியல், அரசியல் என்பதே ஆட்சி செய்வது தொடர்பானது.

இதுவரை மாமியாரின் சொல் தான் குடும்பத்தில் சட்டமாக இருந்தது. வீட்டின்

ஒவ்வொரு அங்குலமும் அவளது கட்டுப்பாட்டில் இருந்தது.

ஆனால் இப்போது தனி மாநிலம் ஒன்று உருவாகி விட்டது. ஒரு குறிப்பிட்ட

அறைக்குள் நினத்த நேரத்தில் நுழைய முடியாது.

முதலில் மாமியார் தான் முடிவடுக்கும் அதிகாரி. ஆனால், இப்போது

மகனுடைய ஓய்வு நேரத்தை எவ்வாறு செலவிட வேண்டும் என்பதை மருமகள்

தான் தீர்மானிக்கிறாள்.

இதையெல்லாம் பார்க்கும் போது, மாமியாரின் அதிகாரம் கைநழுவிப்

போய் விட்டதாக மாமியார் உணர்கிறார். இந்த அதிகார மாற்றம் தவிர்க்க

முடியாதது. எனினும் அதை ஏற்றுக் கொள்ள முடியாமல் மாமியார் தவிக்கிறார்.

அதனால், மருமகளோடு வம்புச் சண்டைக்குச் செல்கிறார்.

மருமகளுடைய தாம்பத்யம்

மாமியாரும் பாலுறவு சுகத்தை அனுபவித்திருப்பார். எனினும் இன்றைய

கால கட்டத்தில் இருக்கும் சுதந்திரம் இருந்திருக்காது.

கூட்டுக் குடும்பம். அதனால், நேரங்காலம் பார்த்துத் தான் விளையாட

வேண்டியிருந்திருக்கும். அல்லது கணவன். ஒரு வேலையடிமையாக

இருந்திருக்கலாம். அதனால் இளமைப் பருவத்தை கொண்டாடும் வாய்ப்பு

மாமியாருக்கு இல்லாமலே கூடப் போயிருக்கலாம்.

ஒரு பெண்ணாக அவர் அனுபவித்ததை ‘ மருமகளுடைய

கொண்டாட்டத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கிறார். இந்த ஒப்பீடு மாமியாருக்கே

தெரியாமல், அவருடைய ஆழ்மன அளவில் நடைபெறுகிறது.

தன்னை விட மருமகள் ஏராளமான இன்பங்களை அனுபவிப்பதாக

எண்ணுகிறார். அதனால், ஒரு பெண் என்கிற முறையிலே தன்னுணர்வற்ற

நிலையில், அவரையறியாமலே அவருடைய மனதில் மருமகளின் மீது பொறாமை

ஏற்படுகிறது. அதனால், மருமகளோடு வம்புச் சண்டைக்குச் செல்கிறார்.

மாமியாரின் பாலியல் ஆற்றாமை**.**

ஒரு பெண் மாமியாராக மாறும் போது ஏறக்குறைய தனது மாதவிடாயின்

முடிவுப் பகுதியை நெருங்கி விடுகிறார். இது தான் பெரும்பாலான இந்தியப்

பெண்களுக்கான பொற்காலம்.

ஏனெனில், உச்சகட்ட பாலின்பங்களை அனுபவித்திராத தொண்ணூறு

சதவிகித பெண்களுள் ஒருவராக இருந்திருக்கும் பட்சத்தில், நிச்சயமாக இந்த

மாமியாரும் ஒரு போகப் பொருளாகத்தான் பயன்படுத்தப் பட்டிருப்பார்.

அதனால், போதுமான இன்பத்தை தானும் அனுபவித்திருக்க மாட்டார்.

கணவனைச் சமாளித்து, தாம்பத்ய வாழ்க்கையை வாழ்ந்து முடித்திருப்பார்.

கணவனுக்கும் அளித்திருக்க மாட்டார். சாக்குப் போக்குகள் மூலமே தன்

இச்சூழலில் வாழும் பெண்கள் மாதாவிடாயின் முடிவுப் பருவம் எப்போது

வருமெனக் காத்திருப்பார்கள். ஏனெனில், பெண்ணின் காமம்

மாதவிடாய்ப்

பருவத்தோடு முடித்து விடுவதாக ஒரு கருத்து நிலவுவதால், இதையே ஒரு

சாக்காகப் பயன்படுத்திக் கொள்வார்கள். கணவனின் தொல்லையிலிருந்து

எளிதாகத் தப்பித்து விடுவார்கள்.

மாதவிடாய்க் காலத்தைக் கடப்பதற்கும், பாலின்பத்தைப் பெண்

அனுபவிப்பதற்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை என்பது கணவனுக்கு

தெரியாது. அதனால், கணவனும் மனைவியை நெருங்குவதில்லை.

அதனால், பாலின்பத்தை அந்த மாமியார் அனுபவிப்பதில்லை.

பாலின்பமும் சரச சல்லாபங்களும் ஒரே நாணத்தின் இரு பக்கங்கள். ஆகவே,

பாலின்பம் இல்லாமல் போன உடனே அதன் நிழலான கொஞ்சல்,

குலாவல்களும் இல்லாமல் போய் விடும்.

ஒரு நபர் பாலின்பத்தை அனுபவிக்கா விட்டாலே, அவரது மனம் பிசாசு

மாதிரி தான் சிந்தனை செய்யும்.

அன்பு, கருணை, இரக்கம், ஈகை, மன்னித்தல், பெருந்தன்மை. விட்டுக்

கொடுத்துப் போவது, போன்ற மனித குணங்களுக்குப் பதில் குரோதம்,

பொறாமை, குற்றங்காணல், குறைகூறல், சண்டையிடுதல் போன்ற மிருக

குணங்கள் தான் மனதில் இடம் பிடிக்கும்.

அதாவது பாலின்ப ஆற்றாமை மிருக குணங்களாக மட்டுமே வெளிப்படும்.

மேலும், இல்லற வாழ்வில் தன் கணவனால் போகப் பொருளாகப்

பயன்படுத்தப் படுகின்ற ஒவ்வொரு பெண்ணும் தனக்கு மட்டும் தான் இந்தத்

துயரம் நேர்ந்து விட்டதாகக் கருதுகிறாள்.

தன்னுடைய கணவன் மட்டுமே கையாலாகாதவன். மற்ற ஆண்கள்

அனைவருமே தன் மகன் உட்பட அனைவருமே, பெரும் தீரர்கள் என்றே

நினைக்கிறாள்.

பாலுறவைப் பொறுத்த வரை மகனும் தன் தந்தையைப் போன்ற மற்றொரு

மடையனே என்பது மாமியாருக்குத் தெரியாது. அதனால் தான் அனுபவிக்காத

இன்பங்களையெல்லாம் தன் மருமகள் அனுபவிப்பதாய் மாமியார் கருதுகிறார்.

தான் அனுபவிக்காத ஒரு இன்பத்தை மற்றவர் அனுபவிக்கும் போது அதைக்

கெடுக்க முயல்வது மனித இயற்கை. அதனால் அதைக் கெடுக்கப் பார்க்கிறார்.

பெண்கள் பேசுவதில் தனிச் சிறப்புடையவர்கள். யாராவது எங்காவது

ஒதுங்கினால் போதும், உடனே ஊறுகிறது, பறக்கிறது என்று கதை கட்டிக்

கெடுப்பதில் வல்லவர்கள், இந்த மனோபாவத்தின் காரணமாகவும்

நடவடிக்கைகளை விமரிசிப்பதன் மூலமாகவும் மருமகளின் நிம்மதியை மாமியார்

கெடுக்கிறார்.

மேலும் பெண்மைக் குணங்களுக்குக் காரணமான வேதி மாமியாரின்

உடலில் சுரப்பதில்லை. அதனால், ஒரு சிலருக்கு மீசை கூட அரும்பத் தொடங்கி

விடும். மாமியாரின் குணநலன் கடுமையானதாக மாற இதுவும் ஒரு காரணம்.

இவ்வாறாக, மாமியாரின் பொறாமையும், பாலின்ப ஆற்றாமையும் தான்

மருமகளோடு சண்டையிடுவதற்கான காரணங்களாக இருக்கிறது. ஆனால்,

இதை எந்த மாமியாரும் ஒப்புக் கொள்ள மாட்டார், ஏனெனில், இவையெல்லாம்

அவருக்கே தெரியாமல் ஆழ்மனதால் நடத்தப் படுகின்ற லீலைகளாகும்.

ஒரு சில ராட்சச மாமியார்கள்.

ஏறக்குறைய கால் நூற்றாண்டு கால இல்லற அனுபவத்திற்குப் பிறகு தான்

ஒரு பெண்மணி மாமியார் என்கிற பதவியைப் பெறுகிறார். இந்தக் கால்

நூற்றாண்டு காலத்தில், முதல் ஐந்தாண்டுகள் போகப் பொருளாகக் கணவனால்

பயன்படுத்தப் படுகிறார். அதனால், பாலின்ப ஆற்றாமை நோயால் பாதிக்கப்

படுகிறார். அந்தப் பாதிப்பால் பிடாரியாக மாறி விடுகிறார்.

அதன் காரணமாக, முதல் பத்தாண்டுகள் தொலைக்காட்சியில் விளம்பரம்

வருகிற நேரத்திலெல்லாம் தன்னுடைய குழந்தைகளையும், கணவனையும்

வதைப்பவராக வாழ்ந்திருக்கிறார்.

அவரைக் குற்றம் சொல்ல முடியாது. பாலின்ப ஆற்றாமையோடு

தொலைக்காட்சி நெடுந்தொடர்களும் சேர்ந்து ஏற்படுத்துகின்ற உளவியல்

தாக்கம் அது.

அவையிரண்டும் சேரும் போது, பேயும், பிசாசும் சேர்ந்து கொண்டு செய்கிற

வேலைகளைத் தான் ஒரு பெண்ணால் செய்ய முடியும். அதை விட மோசமாகத்

தான் செயல் பட முடியுமே தவிர, பண்பட்ட நபராகச் செயலாற்ற முடியாது.

ஆனால், பத்து வயதைக் கடக்கத் துவங்கும் போதே, தாயின் பருப்பு

குழந்தைகளிடம் வேகாது. குழந்தைகள் நூறு சதவீதம் நியாயமானவர்கள்.

அதனால், அக்கிரமத்தை வெளிப்படையாக எதிர்க்கத் தொடங்கி விடுவார்கள்,

அதாவது மனைவியின் அடாவடித்தனமான செயல்களை எதிர்ப்பதைப்

போலக் கணவன் நடித்துக் கொண்டிருப்பான். உண்மையாக எதிர்க்க முடியாது.

ஆனால், குழந்தைகளோ உண்மையாகவே எதிர்ப்பார்கள்.

அதனால், குழந்தைகளிடம் தாயின் பருப்பு வேகாது. அதனால் அடுத்த

பத்தாண்டு காலத் தொலைக்காட்சி இடைவேளைகளில் கணவனை மட்டும் தான்

அவரால் வதைத்திருக்க முடியும்.

அந்த வதைப்பின் காரணமாக, திருமணமான இருபதாண்டு

களுக்குள்ளேயே சில குடும்பங்களில் கணவன் செத்துப் போய்விடுகிறான். ஆகவே

செத்தவனை வதைக்க முடியாது.

சில குடும்பங்களில் கணவன் நோயாளியாகி விடுகிறான். கிடை

நோயாளியாகா விடினும், உயர் இரத்த அழுத்தம், இதயக் கோளாறு, சர்க்கரை

வியாதி போன்ற மன அழுத்தத்தால் உருவாக்க கூடிய வியாதிகளால் தாக்கப்பட்டு

விடுகிறான்.

இந் நிலையில் மேலும் வதைத்தால், அவனுடைய சேமிப்பை மருத்துவ

சிகிட்சை பிடுங்கிக் கொள்ளும். ஆகவே, ஒரு எல்லைக்கு மேல் அவனை வதைக்க

முடியாது.

சில குடும்பங்களில் மனைவியைச் சமாளிக்கும் கலையை முதல்

பத்தாண்டுகளில் கணவன் சுற்றுக் கொண்டு விடுகிறான். மனைவி உறங்கிய

பின் வீட்டிற்கு வந்து, விழிக்கும் முன் வெளியேறும் வித்தையைக் கற்று விடுகிறான்.

அல்லது எந்த வதைப்பையும் உணர முடியாத அளவிற்கு குடித்து விட்டு

வரத் தொடங்கி விடுகிறான். ஆகவே அவனை வதைப்பதன் மூலம் மனைவியின்

குரூரம் தணிவதில்லை.

சில குடும்பங்களிலோ முதல் தரப் பிள்ளைப் பூச்சியாகவே கணவன் மாறி

விடுகிறான். ஆகவே, அவனையும் வதைக்க முடியாது. செத்த பாம்பை அடிக்க

ஆர்வம் இருக்காது.

இவ்வாறாக, ஏறக்குறைய இருபதாண்டுகள் தன்னுடைய குடும்பத்தின்

சர்வாதிகாரியாக வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு பெண் வதைப்பதற்கு

ஆளில்லாமல் தவித்துக் கொண்டிருக்கிறார். இந்த நிலையில் தான் மருமகளாக

ஒரு புதிய நபர் வீட்டிற்குள் நுழைகிறாள்,

அவ்வாறு நுழையக்கூடிய பெண் வாய் செத்தவளாக வந்து விடும் போது

தான் மாமியாரின் ராட்சச குணம் முழுமையாக வெளிவரத் தொடங்குகிறது.

குழந்தைகளின் கையில் ஒரு சிலந்திப்பூச்சி கிடைத்து விட்டால் ஒவ்வொரு

காலாக அதன் உடலிலிருந்து பிய்த்துச் சித்திரவதை செய்து விளையாடுவார்கள்.

அதைபோல் தன்னுடைய மருமகளை இந்த மாமியார் வதைக்கத் தொடங்கி

விடுகிறார்,

மேற்கண்ட இராட்சச குணமுடைய மாமியார்கள், தங்களுடைய பிள்ளையின்

திருமண வாழ்வை அழிக்காமல் ஓய்வதில்லை,

சில மாமியார்கள் மிகவும் நல்லவர்களாக வீட்டில் நடந்து கொள்வார்கள்.

ஆனால், அண்டை அயலில் போய் மருமகளைப் பற்றி இல்லாததும்,

பொல்லாததுமாகக் கூறிக் கொண்டிருப்பார்கள்,

அண்டை அயலாரும் மாமியாரிடம் கறக்க முடிந்த அளவிற்குக் கறந்து,

அதைத் திரித்து வெண்ணையாக்கி கருமமே கண்ணாயிரமாக மருமகளிடம்

கொடுத்து விட்டுப் போய் விடுவார்கள்.

அந்த வெண்ணை தம்பதியரின் படுக்கையறையில் நெய்யாகக் கொதித்துக்

கொண்டிருக்கும்.

சில மாமியார்கள் மருமகளிடம் இருப்பதெல்லாம் இரண்டிரண்டாகத் தன்

மகளிடம் இருக்க வேண்டும் என்று விரும்புவார்கள். அதனால்,

கிடைத்ததையெல்லாம் சுருட்டி மகளிடம் சேர்க்கத் தொடங்கி விடுவார்கள்,

மகனுடைய பணத்தையே திருடுவார்கள். அந்தப் பழியை மருமகள் மீது

சுமத்துவார்கள். இதனாலும் படுக்கையறை போர்க்களமாகும்.

ஒரு சில மாமியார்கள் மருமகளின் பெற்றோரை எதிரிகளாகவே

பார்ப்பார்கள், தன்னுடைய பிள்ளை தன்னைக் கவனித்துக் கொள்வதைப் போலத்

தன்னுடைய மருமகள் அவளுடைய பெற்றோரைக் கவனித்துக் கொள்வதை

ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். வீட்டிற்கு வந்தவர்களை உதாசீனப்படுத்துவார்கள்.

தன்னுடைய பெற்றோரை உதாசீனப் படுத்தியவரின் மகனைப் படுக்கை

அறையில் மருமகள் உதாசீனப் படுத்திக் கொண்டிருப்பாள்.

சில மாமியார்கள் தன்னுடைய மகள் வயிற்றுப் பேரக் குழந்தைகளின் மீது

பொழிகிற அன்பை மகன் வயிற்றுப் பேரக் குழந்தைகளின் மீது பொழிய

மாட்டார்கள். இதைப் பார்க்கின்ற மருமளின் மனம் வேகும். அந்த வேக்காட்டின்

சூடு படுக்கையறையில் பற்றியெறியும்.

இவ்வாறான மாமியார்களின் லீலைகளை எல்லாம் ஒன்று விடாமல் எழுதத்

தொடங்கினால் அதற்கென்றே தனியாக ஒரு நூலை எழுத வேண்டியிருக்கும்.

ஆகவே, மேற்கண்ட உதாரணங்களோடு, இதிலிருந்து விடுபட்டு, நூலின் மூலக்

கருத்திற்கு வந்து விடலாம்.

தன்னை போகப் பொருளாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கும் கணவனுக்கு

பாலுறவு சுகத்தைத் தர அவ்வப்போது மறுத்துக் கொண்டிருந்த மருமகளுக்கு

மேற்கண்ட மாமியாரால் காரணங்கள் கிடைத்துக் கொண்டேயிருக்கும்.

அதனால் தம்பதியிடையே பாலுறவு சரிவர நடைபெறாது. பாலின்பம்

கிடைக்காத பாலைவன வாழ்க்கையைக் கணவன் வாழ்ந்து

கொண்டிருப்பான்.

அந்தப் பாலைவன வாழ்க்கை அதற்குரிய விளைவுகளைத் தான் கொடுத்துக்

கொண்டிருக்கும், அது ஒட்டு மொத்தக் குடும்பத்தின் நலனை மோசமான

வகையில் பாதிப்பதாக இருக்கும்.

இந்த இரகசியத்தை ஒவ்வொரு மாமியாரிடமும் தெரிவித்து, மகனை

நிம்மதியாக வாழவிடும் படி கேட்டுக் கொள்வது மட்டுமே இந்த அத்தியாயத்தின்

முதன்மையான நோக்கம்.

மாமியாரின் பிரதிநிதியே கணவன்.

எந்த மருமகளும் மாமியாரோடு நேரிடையாக சண்டையிடுவது இல்லை. தன்

கணவனிடம் கூறுகிறாள், கணவன் கவனிக்கிறான், மனைவி சொல்வதைப்

போல் தன் தாய் நடந்து கொள்வதாய் அவனுக்குத் தெரிவதில்லை. ஏனெனில்,

தாயின் உடல் மொழி அவனுக்குப் புரிவதில்லை,

மேலும், எந்த மாமியாரும் மகனுக்கு எதிரில் தன் மருமகளை

அவமதிப்பதில்லை, அதனால் அந்த மகனாகப் பட்டவன் தன் தாயிடம் எந்தக்

குறையையும் காண முடிவதில்லை,

ஒருக்கால், ஏதேனுமொரு குறை தெரிந்தாலும், தாயையும் பகைத்துக்

கொள்ள முடியாமல், மனைவியையும் சமாதானப்படுத்த முடியாமல் இறுதலைக்

கொள்ளி எறும்பாய்த் தவிக்கிறான், அதனால், மாமியாரின் கொடுமை

அரங்கேறுகிறது.

இது போன்ற சூழலில் மருமகள் நேரிடையாக மாமியாரோடு சண்டையிடுவது

இல்லை. மாமியாரின் பிரதிநிதியான தன் கணவனோடு தான் சண்டையிடுகிறாள்.

ஆம். ஒரு மாமியார் தன் மருமகளுக்கு இழைக்கும் ஒவ்வொரு கொடுமையும்,

பத்து மடங்கு கூடுதலான வீரியத்துடன் அவளுடைய மகனுக்கு உடனுக்குடன்

படுக்கையறையில் திருப்பி இழைக்கப் படுகிறது.

படுக்கையறை தான் போர்க்களம், கொடுக்கப் படும் முதற்பல பாலின்பம்.

பாலின்பம் மறுக்கப்பட்ட உடனே கணவனுடைய உடலின் தட்ப வெப்ப நிலை சீர்

கெடத் தொடங்குகிறது. உடலில் உள்ள சக்தி மையங்களான சக்கரங்கள்

தங்களுக்கிடையிலான சம நிலையை இழக்கத் தொடங்குகின்றான்.

அதனால், மன நிலையில் மாற்றம் ஏற்பட்டு, எதிர்மறைச் சிந்தனை ஆணின்

மனதில் ஏற்படுகிறது. அவ்வாறு ஏற்பட்ட சிந்தனை ஆல்ஃஃபா நிலையில் முளை

இருக்கும் போது சிந்திக்கப் படுவதால் ஆழ்மனதில் இடம் பிடிக்கிறது.

மேலும் எதிர்மறை எண்ணங்கள் உணர்ச்சிகரமாகச் சிந்திக்கப் படுவதால்

பிரபஞ்ச அலைகளோடு எளிதில் இணைகின்றன. அதன் பின் பிரபஞ்சம் தன்

கடமையைத் தவறாமல் நிறைவேற்றுகிறது.

அதாவது மாமியார் மனதில் உருவான எதிர்மறைச் சிந்தனை காரணமாக,

முதலில் மருமகளை அவர் அவமதிக்கிறார். அதனால் மருமகளின் மனம்

எதிர்மறைச் சிந்தனையை உணர்ச்சிகரமாகச் சிந்திக்கத் தொடங்குகிறது. அதை

தன் கணவனிடம் அவள் ஒட்ட வைக்கிறாள்.

கணவன் எதிர்மறைச் சிந்தனைக்கு ஆளான பிறகு அந்தக் குடும்பத்தில்

வாழும் அனைவருமே எதிர்மறைச் சிந்தனையை உணர்ச்சி கரமாகச்

சிந்திப்பவர்களாக மாறி விடுகிறார்கள்.

நேர்மறைச் சிந்தனையாளர்களால் சூழப்பட்டுள்ள நபர் எளிதில் வெற்றி

பெறுவார். அதே சமயத்தில் எதிர்மறைச் சிந்தனையாளர்களால் சூழப்பட்டிருப்பவர்

நிச்சயமாகத் தோல்வியுறுவார்.

இங்கேயோ வீடு முழுவதும் எதிர்மறைச் சிந்தனை அலைகளால் நிரம்பி

வழிகிறது. எதிர்மறைச் சிந்தனை அலைகள், உணர்ச்சிகரமானவையாக

இருப்பதால், பிரபஞ்ச அலைகளோடு உடனடியாக இணைவதில் மகா சக்தி

படைத்தவை.

அதனால் எதிர்மறையான விளைவுகளை அவர்கள் குடும்ப வாழ்வில்

ஏற்படுத்தியாக வேண்டிய நெருக்கடி பிரபஞ்ச அலைகளுக்கு ஏற்படுகிறது.

பிரபஞ்சத்திற்கான நெருக்கடி.

அதாவது, இவர்களுடைய எதிர்மறைச் சிந்தனை அலைகளானது,

இவர்களுடைய குடும்பத்திற்குக் கெடுதல் நடப்பதற்குரிய ஏற்பாடுகளைச்

செய்யும் படி, பிரபஞ்சத்திற்கு உத்தரவிடுகின்றன.

மனிதர்களின் உணர்ச்சிகரமான எண்ண அலைகளின் அடிமை தான்

பிரபஞ்சம், அதனால் இவர்களுடைய உத்தரவே தனது சித்தம் என்று பிரபஞ்சம்

செயலாற்றுகிறது.

அதன் நிமித்தமாக, இந்தக் குடும்பத்திற்கு அறிமுகமுள்ள ஒவ்வொரு

நபருடைய எண்ண அலைகளையும் பிரபஞ்சம் பரிசோதிக்கிறது. அவ்வாறு

தெளிவாகப் பரிசோதித்து அறிந்த பின், இவர்களுக்குக் கெடுதலைச் செய்யக்கூடிய

நண்பர்களைத் தேர்ந்தெடுக்கிறது.

துரோகங்களைச் செய்யக்கூடிய உறவினர்களைத் தேடிப் பிடிக்கிறது.

இவர்களுடைய மனதை மென்மேலும் வருத்தத்தில் ஆட்படுத்தக்கூடிய

சம்பவங்களை உருவாக்கும் வல்லமையுடைய நபர்களையெல்லாம் பிரபஞ்சம்

ஒன்று திரட்டுகிறது.

அதன்பின் ஒவ்வொருவராக இவர்களுடைய வாழ்க்கப் பாதையில்

நிறுத்துகிறது. அல்லது இவர்களை நோக்கி அனுப்பி வைக்கிறது. வந்தவர்கள்

அவர்களால் முடிந்த அளவிற்கு கெடுதல்களையும், துரோகங்களையும்

செய்கிறார்கள். குடும்பத்தின் வாழ்க்கை நரகமாக மாறத் தொடங்குகிறது.

வாழ்க்கை நரகமாக மாறிய பிறகு தம்பதிகளிடையே சரச சல்லாபங்களுக்குக்

கூட இடமில்லாமல் போகிறது. அதனால் பாலின்பம் என்பது அவர்கள்

வாழ்விலிருந்து விடைபெற்று விடுகிறது. அதன்பின் அந்த வீடு ஒரு நிரந்தரமான

போர்க்களமாகி அண்டை அயலாரின் காட்சிப் பொருளாக மாறி விடுகிறது.

இவ்வாறாக, ஒரு மாமியாரின் மனதில் அவரறியாமலே மருமகளின் மீது

உருவான பொறாமையுணர்வு அந்தக் குடும்பத்தின் வளமையைத் தடுக்கக்கூடிய

தடைச்சுவராக மாறிப்போகிறது.

தன் மருமகளைத் தாக்குவதாய்க் கருதி அவரால் ஏவப்பட்ட ஆயுதங்களுக்கு

அவரது மகனுடைய வாழ்க்கை தான் பலியாகிறது. அதன் பின் விளைவுகளை

மாமியாரும் சேர்ந்தே அனுபவிக்க நேர்கிறது.

இதைத் தான் கொண்டவனையே கொல்லும் அழுக்காறு என்று ஞானிகள்

சுருக்கமாகக் கூறுகிறார்கள்,

பொறாமை என்பது வீட்டிற்குள் வரக்கூடிய பெரும் செல்வத்தைத்

தடுக்கக்கூடிய தடைச்சுவர் மட்டுமல்ல. வறுமையை வீட்டிற்குள் வலிந்து

ஈர்க்கக் கூடிய காந்தமும் கூட.

நல்ல மாமியாரும், ராட்சச மருமகளும்.

சில குடும்பங்களில் மாமியார் மிகவும் நல்லவராக இருக்கிறார். பிள்ளைப்

பூச்சியாகவே இருக்கிறார். ஆனால், மருமகள் தான் ராட்சசியாக வந்து வாய்த்து

விடுகிறாள். இதற்கான முதற்காரணம் மருமகளைப் பிடித்துள்ள

பாலின்ப

ஆற்றாமை நோய்.

கணவன் தன்னுடைய மனைவியைப் போகப் பொருளாகப்

பயன்படுத்துவதன் மூலம், அவளுடைய அடிப்படைப் பசியான காமத்தைத்

தணிக்கத் தவறுகிற போது, பாலின்ப ஆற்றாமை நோய் உருவாகிறது. அதன்

விளைவாக மனைவி பிடாரியாகிறாள்.

பாலின்ப ஆற்றாமை நோய் அந்தக் கணவனைப் பெற்றெடுத்துள்ள

மாமியாரின் மீது பாய்கிறது.

ஒரு சுய நலமியைப் பெற்றெடுத்தவள், கையாலாகாதவனைப்

பெற்றெடுத்தவள், என்னைத் தேடி வந்து கட்டி வைத்தவள். இப்படிக் கூடவா

ஒரு ஆண் மகனைப் பெற்றெடுப்பது? என்றெல்லாம் மாமியாரின் மீது கோபம்

கொள்கிறது.

அந்தக் கோபம் தான் அவளுடைய ஒவ்வொரு செயலிலும் வெளிப்படுகிறது.

கோபம் வெளிப்படும் விதம் மாமியாரின் பின்புலத்திற்கேற்பவும், அவரது எதிர்ச்

செயலுக்கேற்பவும் மாறுபடுகிறது.

மாமியார் பிள்ளைப் பூச்சியாக இருந்தால் கொடுமையின் அளவு

அதிகரிக்கிறது. மாமியாரும் மருமகளுக்கு இணையாகக் கொம்பு சீவி கொண்டால்,

தனிக் குடித்தனம் உருவாகிறது.

அதன்பின் மருமகளின் வீட்டிற்குள் நுழையும் உரிமையும், தன் பேரக்

குழந்தைகளைப் பார்க்கும் உரிமையும் கூட மாமியாருக்கு மறுக்கப் பட்டு

விடுகிறது. குழந்தைகளின் மனதில் தந்தையின் தரப்பு உறவுகள் மீது மோசமான

பிம்பத்தை ஏற்படுத்தி, அவர்கள் மீதான அன்பு கொல்லப்பட்டு வெறுப்பை

வளர்க்கும் சூழல் கூட உருவாகிறது. இவையெல்லாம் பாலின்ப ஆற்றாமை

நோயின் விளைவுகள்,

இந்த நோயால் பாதிக்கப் பட்டிருக்கிறோம் என்பதை சராசரிப் பெண்ணால்

உணர முடியாது. ஆகவே உணர்த்த முயற்சிப்பதில் பலனிருக்காது. மேலும் அது

எதிர்விளைவுகளையே ஏற்படுத்தும்.

ஆற்றாமை நோயைக் குணப்படுத்துவது மட்டுமே ஒரே தீர்வு. ஒரு

பெண்ணின் உடலில் நிகழ வேண்டிய பாலின்பங்களை வழங்குவது மட்டுமே

ஆற்றாமையைக் குணப்படுத்துவதற்கான ஒரே மருந்து.

மருமகளும் மோசமாக இருக்கலாம்**.**

அடுத்த காரணம். எதிர்மறைச் சிந்தனை. மனைவி பெற்றுள்ள பாரம்பரியப்

பண்பு, குழந்தைப் பருவ வளர்ப்பு, அவளுடைய தாய் எதிர்கொண்ட

பிரச்சினைகளால் ஏற்பட்டுள்ள மன பாதிப்பு, சுற்றுபுறத்தால் ஏற்பட்டுள்ள

குணநலன்கள் போன்றவையும் மருமகளின் ஆழ்மனதை ஆட்சி செய்து

கொண்டிருக்கலாம்.

அதனால் பார்க்கும் ஒவ்வொன்றிலும் குறை காணும் குணமுடையவளாக

மருமகள் இருக்கலாம். அதன் காரணமாக தன்னுணர்வற்ற நிலையில்,

எடுத்ததற்கெல்லாம் மாமியாரோடு சண்டையிடுபவளாக இருக்கலாம்.

இத்தகைய பெண் குடும்பத்திற்குள் நுழைந்து ஒரு அடங்காப் பிடாரியாகச்

செயல்படும் போது, அவளுடைய காமத்தைத் தணிப்பது மட்டுமே முழுத் தீர்வை

அளித்து விடாது.

மேலும், காம சுகத்தை அனுபவிப்பதில் கூட, எதிர்மறையான கருத்து தான்

இது போன்ற பெண்ணிடம் குடிகொண்டிருக்கும். எதிர்மறைச் சிந்தனை

நோயாளியான ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொள்ள நேர்ந்த ஒரு ஆண்

கூறுகிறார்.

என்னால் என் மனைவியின் அணுகுமுறையைப் புரிந்து கொள்ளவே

முடியவில்லை. மகிழ்ச்சியாக இரு. அப்போது தான் நம் வீட்டை நோக்கி

வளமையும், செழுமையும் வந்தடையும் என்று சொன்னால், வளமையும்,

செழுமையும் வீட்டிற்குள் வரட்டும். அதன்பின் மகிழ்ச்சியாக இருப்பதைப் பற்றி

யோசிக்கலாம் என்று கூறுகிறாள்.

எங்கள் இருவருடைய மன நிலையையும் மகிழ்விக்கும் பொருட்டு,

பாலுறவில் ஈடுபடலாமா எனக் கேட்டால், முதலில் இன்பம் நிகழட்டும். அதன்

பின் உறவு கொள்வதைப் பற்றிப் பேசலாம் என்கிறாள். இந்தச் சூழலை எப்படி

எதிர்கொள்வதென்றே எனக்குத் தெரியவில்லை.

ஒரு சில பெண்கள் கால் வைத்த வீடு தன்னுடைய வளமைகள் மற்றும்

பெருமைகள் அனைத்தையும் இழந்து, புல் பூண்டு கூட முளைக்கத்

தகுதியற்றதாகப் போய் விடும் என்று இத்தகைய குணநலன் கொண்ட

பெண்களை மனதிற் கொண்டு தான் முன்னோர்கள் கூறியுள்ளனர்.

ஒரு மனைவியால் தன் கணவனை மகா வெற்றியாளனாக உருவாக்கவும்

முடியும். விலாசமே இல்லாமற் போகுமளவிற்கு அழித்தொழிக்கவும் முடியும்

என்று நெப்போலியன் ஹில்லும் இவர்களைப் பற்றித்தான் குறிப்பிடுகிறார்.,

உளவியல் மருத்துவரை அணுகி அவரது ஆலோசனையைப் பின்பற்றுவது

மட்டுமே குழந்தைப் பருவம் முதல் ஒருவரிடம் குடிகொண்டுள்ள எதிர்மறைச்

சிந்தனையிலிருந்து விடுபடுவதற்கான ஒரே தீர்வு. ஏனெனில், அது வெளியில்

தெரியாத மனநோய்.

அவர்கள் இருவரிடையே நடைபெறும் சண்டை குடும்பத்தின் எதிர்

காலத்தை எவ்வாறு பாதிக்கும் என்கிற புரிதலைத் தர முயற்சிக்கலாம்.

அதன்

பிறகும் அவர்களுடைய போக்கில் மாற்றமில்லையெனில், சிறந்ததொரு உளவியல்

அறிஞரின் ஆலோசனைக்கு அவர்களை உட்படுத்துவதைத் தவிர வேறு

சிறந்த வழியெதுவும் இல்லை.

பொறாமை என்பது மூதேவியின் காதலன். வீட்டிற்குள் வருகின்ற

செல்வத்தைத் தடுத்து நிறுத்துவதோடு, வறுமையை வீட்டிற்குள் ஈர்க்கின்ற

காந்தங்களில் ஒன்று.

ஒரு சில பெண்கள் பிள்ளைப்பூச்சிகளைப் போல் குடும்பத்திற்குள்

நுழைவார்கள், சொத்துக்கள் பற்றியும், வருமான வாய்ப்புக்களைப் பற்றியும், அதில்

கணவனின் நிலை பற்றியும் தெளிவாகத் தெரிந்து கொள்வார்கள். ஒரு குழந்தை

பிறக்கும் வரை இயங்குவது தெரியாமல் அனைத்தையும் ஆய்வு செய்து

கொண்டிருப்பார்கள்.

குழந்தை ஒன்று பிறந்த பிறகு கணவனைத் தன்னுடைய அடிமையாக,

அல்லது தனக்கு மட்டுமே உரிமையுடைய பொருளாகப் பயன்படுத்தும் முயற்சி

தொடங்கப் படும்.

கணவனுடைய பெற்றோருக்கும், உடன் பிறந்தோருக்கும் எவ்வித உதவியும்

செய்வதை அனுமதிக்க மாட்டார்கள். ஒரு சிலர் அவனுடைய பெற்றோரிடம்

வெறும் வாய்ப்பேச்சு வைத்துக் கொள்வதைக் கூட அனுமதிப்பதில்லை.

அதனால் ஆணைப் பெற்ற சிலர் அனாதைகளாக வாழ்ந்து

கொண்டிருக்கிறார்கள், தன் குடும்பம், தன் கணவன், தன் குழந்தை என்கிற

குறுகிய வட்டத்திற்குள் வாழ முயற்சிப்பார்கள், அப்போது தான் ஆணின்

வாழ்க்கை நரகமாகும்.

ஏனெனில், தாய் தான் ஒரு ஆணின் முதற் காதலி. தன்னுடைய தாயை நெருங்கும் தந்தையின் மீது பிஞ்சுக் குழந்தையாய் இருக்கும் ஆண் குழந்தைக்குப் பொறாமை ஏற்படுவதை, விழிப்புள்ள பெற்றோரால் உணர்ந்திருக்க முடியும். ஆகவே தன் முதற்காதலியை எந்த ஆணாலும் கைவிட முடியாது.

மேலும், தன் பெற்றோரைச் சந்தித்தாலே, பெற்றோரிடம் பேசினாலே தன் தாம்பத்ய வாழ்க்கை பறி போய் விடும் என்கிற நிலைமை உருவாகும் போது தான் ஆணுக்குரிய நரகத்தின் கதவுகள் திறக்கப் படுகின்றன.

மாமியார் மருமகள் பிரச்சினைக்கான தீர்வு.

ஆகவே சுயநலப் புலியைத் திருமணம் செய்து கொள்ளும் ஆணின் வாழ்க்கை நிம்மதியற்றதாக மாறிவிடும். இதற்கான ஒரே தீர்வு உளவியல் அறிஞரின் மூலமாக அந்த மருமகளுக்கு உரிய அறிவுரை கொடுப்பது மட்டுமே. ஏனெனில், மிதமிஞ்சிய சுயநலமும் எதிர்மறைச் சிந்தனையே.

ஆகவே அதுவும் மனதோடு தொடர்புடைய ஒரு வகை நோயே. ஆனால் எக்காரணத்தை முன்னிட்டும் கணவனே நேரிடையாக மனைவிக்கு அறிவுரை கூறக் கூடாது. அவன் ஒரு உளவியல் அறிஞராகவே இருந்தாலும் கூட எதிர்மறை விளைவுகளை அது உருவாக்கி விடும்.

அடுத்ததாக ஒரு எளிய தீர்வொன்றும் இருக்கிறது. மாமியாருக்கும், மருமகளுக்கும் தமிழ் படிக்கத் தெரியுமென்றால், இந்த நூலைக் கொடுத்து படித்துப் பார்க்கச் சொல்லலாம்.

மாமியார் மருமகள் இடையே பிரச்சினை துவங்குவதற்கான சாயல் நுண்ணிய அளவில் வெளிப்படும் போதே, இந்த நூலிலுள்ள இந்தப் பகுதியைப் படித்துப் பார்க்கும் படி இருவரையும் அறிவுறுத்தலாம்.

அதாவது மருமகளுக்குக் கிடைக்கக் கூடாது என்று மாமியாரும்,

மாமியாருக்குக் கிடைக்கக் கூடாது என்று மருமகளும் சிந்திக்கும் போது

அவர்களுடைய வீடும் சுற்றுப்புறமும் கிடைக்கக் கூடாது என்கிற சிந்தனை

அலைகளால் நிரப்பப் படுகிறது.

அந்த அலைகள் கிடைக்கக் கூடாது என்கிற பிரபஞ்ச அலைவரிசையோடு

சேருகிறது. அதனால், அவர்கள் இருவருக்கும் கிடைக்காமல் போவதற்கு

என்னவெல்லாம் செய்யவேண்டுமோ அதையெல்லாம் பிரபஞ்ச சக்தி தவறாமல்

செய்யத் தொடங்குகிறது.

தேவைப்பட்டால், மாமியார், மருமகள் ஆகிய இருவருடைய

கோரிக்கையான, கிடைக்கக் கூடாது என்பதை நிறைவேற்றும் பொருட்டு

இருவருக்கும் பொதுவான ஆனை ஏதேனும் ஒரு விபத்தின் மூலம்

கொல்லக் கூட பிரபஞ்ச சக்தி தயங்குவதில்லை.

ஒருக்கால் கொல்லாமல் விட்டு விட்டாலும்,அவனைப் பொருளாதார ரீதியாகவாவது பிரபஞ்சம் வீழ்த்தி விடும். இதில் அணுவளவும் ஐயம் வேண்டாம்.

இதற்கான சூத்திரம் இது. எந்தக் குடும்பத்தில் பெண்களுக்கிடையே சண்டை நிகழ்ந்து கொண்டிருக்கிறதோ, அந்த வீட்டில் வாழும் ஆண் எவ்வளவு பெரிய மேதாவியாக இருந்தாலும், தான் மேற்கொண்டுள்ள பணியிலும், தொழிலிலும் தோற்றுப் போவான், ஒருக்கால் தோற்காவிட்டாலும், அவனுடைய அறிவின் வி சாலத்திற்கேற்ற வெற்றியைப் பெற முடியாது.

## **2.** பொருளாதார வீழ்ச்சியும் காமத்தின் மரணமும்

எல்லோரையும் நம்பு. ஆனால், எச்சரிக்கையோடு நம்பு

எல்லோரையும் நம்ப வேண்டும் என்பது நேர்மறைச் சிந்தனை. அதற்காக

நள்ளிரவில் வீட்டின் கதவைத் தாளிடாமலே படுத்து உறங்குவது மகா முட்டாள் தனமானது.

அதே போல நண்பர்களை உருவாக்கிக் கொள்ள வேண்டும் என்பது

நேர்மறைச் சிந்தனை, அதற்காக நம் வளமையின் ஊற்றுக்களை யெல்லாம்

நண்பனுக்குக் காட்டுவது மகா மடத்தனமானது.

மேலும், உறவுகளையெல்லாம் அன்போடு பராமரிக்க வேண்டும் என்பது

நேர்மறைச் சிந்தனை, அதற்காக நம்முடைய உயர்வின் இரகசியம் முழுவதையும்

உறவினர்களிடம் பகிர்ந்து கொள்வது மகா மகாக் கேனத்தனமானது.

பாலுணர்வும், கனவு காணும் திறனும்,

பொருளாதாரம் சீர்குலையும் போது காமம் சாகும். அதே போல, காமம்

மறுக்கப்படும் போது பொருளாதாரம் சீர்குலையும். இது ஒரு சுழல்.

பொருளாதாரச் சீர்குலைவென்பது தம்பதியருடைய பாலுணர்வைக்

கொல்லக் கூடிய எமன். கணவனின் காமம் குற்றுயிராக்கப் பட்டாலும்

உயிருடனாவது இருக்கும். ஆனால் மனைவியின் காமமோ முழுமையாகக்

கொல்லப்பட்டு விடும்.

ஏனெனில் மனைவி என்பவள் ஒரு மனைவியாக மட்டும் இப்போது இல்லை.

ஒரு தாயாகவும் இருக்கிறாள். தன் குழந்தையைக் கடந்த ஆண்டில் வளர்க்க

முடிந்ததைப் போல், இந்த ஆண்டும் வளமையாக வளர்க்க முடியாத சூழலில்

ஒரு தாய் இருக்கும் போது, அவளை அணுகாமலிருப்பதே கணவனுக்கு நல்லது.

வற்புறுத்திப் பெற்றாலும் அதில் இன்பம் இருக்காது. ஏனெனில், யோனியில்

சுரக்க வேண்டிய உயவுத் திரவம் துயரமான மனநிலை காரணமாக

சுரக்கவே சுரக்காது.

யோனியில் வாழும் உயிரணுக்கள், லிங்கத்தில் வாழும் உயிரணுக்களை

வரவேற்காது. அதனால், லிங்கத்தோடு யோனி ஒத்துழைக்காது. அதனால்

வலியும் எரிச்சலும் தான் ஏற்படும். பிரச்சினை தான் வலுக்கும்.

பொருளாதார சீர்குலைவு காமத்தைக் கொல்லும். காமம் சாவதால்,

நுண்ணறிவை உருவாக்கும் வேதிகள் எதுவும் மூளையில் சுரக்காது. கனவு

காணும் திறனும் முடங்கி விடும், சிந்தனை அலைகள் உணர்ச்சிப் படிகளின்

அடியாழத்திற்கு வந்து விடும். அதனால் தவறான முடிவுகள் எடுக்கப் படும்.

அந்தத் தவறான முடிவுகளால், பொருளாதாரம் மேலும் பயங்கரமாகச்

சீர்குலையும், அதனால் ஏற்படும் மோசமான எண்ணங்கள் அடுத்தடுத்த

தோல்விகளை வாழ்விற்குள் ஈர்த்து வந்து விடும். குடும்பத்தால் திட்டமிட்ட

இலக்கை எட்ட முடியாமல் போய் விடும்.

ஆகவே, பொருளாதார சீர்குலைவு காமத்தைக் கொல்லக்கூடிய முக்கியக்

காரணிகளில் ஒன்று.

அதாவது ஒரு பிறவி ஏழை இருக்கிறான். தங்கத் தட்டோடு பிறந்த

செல்வந்தன் இருக்கிறான். இருவருடைய பாலுணர்வும் ஒரே மாதிரியாகவே

இருக்கும். ஏற்றத் தாழ்வு இருக்காது.

செல்வந்தனின் கப்பல் ஒரு மோசமான நாளில் மூழ்கிப்போய் விட்டது.

மாளிகையும், தங்க நகைகளும், நில புலன்களும், வங்கி சேமிப்பும், வட்டிக்குக்

கொடுத்த பணமும் மட்டுமே இப்போது அவனிடம் மீந்துள்ளன. எனினும்

அவனுடைய பாலுணர்வு வேட்கை காணாமற் போய்விடும்.

அருகிலுள்ள பிறவி ஏழையைக் காட்டிலும் கோடி மடங்கு கூடுதலான பணம்

அவனிடம் இருக்கும். இருப்பினும் அவனுடைய பாலுணர்வு கொல்லப் பட்டு

விடும்,

ஏனெனில், எதிர்பாராத பொருளாதார சீர்குலைவால் மனம் பேதலித்து விடுகிறது. அந்த பேதலிப்பால், மனதின் சம நிலை தவறி விடுகிறது. சமநிலை தவறுவதென்பது அரைப் பைத்திய நிலைக்குச் சமம்.

ஞானமும் பைத்தியமும் காமத்தைக் கடந்த நிலைகள். ஆகவே, மனம் குழப்பத்தில் இருக்கின்ற போது பாலுணர்வு கிளர்ந்தெழாது.

பாலுணர்வு கோமா நிலைக்குச் சென்று விட்டாலே இல்லம் என்பது ஒரு போர்க்களமாகி விடும். அதனால் குடும்ப வாழ்க்கையானது வாழும் நரகமாக மாறிவிடக் கூடிய அபாயம் இருக்கிறது எனக் கூறி எச் சரிப்பதே இந்தப் பகுதியின் நோக்கம்.

கொலையும் செய்வான் கூட்டாளி.

கூட்டுத்தொகை முழுவதையும் அபகரித்துக் கொள்ள கூட்டாளியின் மரணம்

கூட்டாளி என்பவன் கொள்ளையிடப் பிறந்தவன், அதாவது,

உதவுமானால், அவனைக் கொலை செய்யவும் தயங்காதவன் தான் இன்றைய கூட்டு வியாபாரங்களில் நீக்கமற நிறைந்திருக்கிறான்.

வலிய வந்து கூட்டுச் சேரும்படி எவனாவது அழைத்தால், அவன் தெளிவானதொரு சதித் திட்டதோடு இருக்கிறன் என்று பொருள்,

கூட்டுச் சேர்ந்தால், உனக்கு இவ்வளவு இலாபம் வரும், அவ்வளவு இலாபம் வரும் என்று சொல்வது தான் குதிரையின் முன்னால் கட்டப் படுகின்ற புல்.

கூட்டாளி சொல்வதைப் போல உண்மையாகவே ஏராளமாக இலாபம் வரக்கூடிய வாய்ப்பாக இருந்தால், எவனும் கூட்டாளிகளை தேட மாட்டான்.

கடன் தருபவர்களைத் தான் தேடுவான், மொத்த இலாபத்தையும் தானே அனுபவிக்கத் தான் எப்படிப் பட்ட மனிதனும் விரும்புவான். இலட்சத்தில் ஒரு நபர் விதிவிலக்கு.

ஆகவே கயவனோடு கூட்டுச் சேர்ந்து, குடும்பத்தை நடுத்தெருவுக்குக்

கொண்டு வரும் முன் கோடி முறை அதைப் பற்றிச் சிந்திப்பது நல்லது.

முதலீடு உன்னுடையது. தொழில் நுணுக்கம் என்னுடையது என்று

சொல்லிக் கொண்டு யாரேனும் அணுகினால், அவன் தான் கையில் உள்ள

பணத்திற்கான எமன், எச்சரிக்கை.

நீங்கள் மகா திறைமைசாலி. நல்லவர். மதிப்பு மிக்கவர். ஆகவே, உங்களை

என்னுடைய கூட்டாளி ஆக்கிக் கொள்வதில் நான் பெருமை கொள்கிறேன் என

யாரேனும் வலிய வந்து கூறுவது தான் கொல்லப்படும் ஆட்டின் கழுத்தில்

போடப் படுகின்ற பூமாலை, முகஸ்துதி செய்பவன் மகா மகா நய வஞ்சகன்.

அவனிடம் மும்மடங்கு எச்சரிக்கை தேவை,

நண்பனால் மட்டுமே துரோகியாக முடியும்.

நீங்கள் வளர்ச்சிப் பாதையில் செல்பவராக இருக்கும் சூழலில், வாழ வழி

தெரியாத நிலையில் உள்ள உங்களுடைய நெருங்கிய நண்பனுக்கு உரிய

உதவி புரிந்து, அவனுக்கொரு வாழ்வாதாரத்தை ஏற்படுத்திக் கொடுத்து விடுவது

நல்லது. அவ்வளவு பரந்த மனம் இல்லையென்றால் எச்சரிக்கை தேவை.

ஏனெனில், மனிதனுடைய நெருக்கடிகள் நெறிகளைக் கடந்து சிந்திக்கச்

செய்யும் வலிமையுடையவை. பசியை வெல்ல நட்பால் முடியாது.

நண்பர்களால் அழிந்த பேரரசுகளும், தொழில் சாம்ராஜ்ஜியங்களும்

எண்ணற்றவை, ஏனெனில், நெருங்கிய நண்பனால் மட்டுமே பெருந்

துரோகியாகவும் மாற முடியும்.

குசேலனின் அவல் ஒரு விதிவிலக்கு. இன்றைய கால கட்டத்தில்

இலட்சத்தில் ஒரு நபர் கூட நட்பிலணக்கம் அறிந்தவராய் இல்லை. ஆகவே,

நண்பர்கள் என்கிற போர்வையில் நெருங்கும் அன்னியர்களிடம் எச்சரிக்கை

தேவை.

சேர்க்கையைப் பொறுத்தே பழக்க வழக்கங்கள் உருவாகின்றன.

குடும்பத்தின் எதிர்காலமும் அமைகிறது.

ஒரு நபரிடமிருந்து எதை பிடுங்க முடியும்? எவ்வளவு சுருட்ட முடியும்

என்பதைக் கணக்கிட்டே நண்பனாகும் காலம் இது. ஆகவே ஆராயாமல் நட்புக்

கொள்வது பொருளாதார ரீதியான தற்கொலைக்குச் சமம்.

நண்டர்கள் என்கிற போர்வையில் நம்மை நெருங்கும் கயவர்கள், தெளிவாகத்

திட்டமிட்டு காலை வாறி விட சிறிதும் தயங்குவதில்லை. நட்பு, அன்பு, இரக்கம்

போன்றவையெல்லாம் அவர்களுடைய கபட வேடத்தின் முகமூடிகள்,

அடையாளம் தெரியாதவர்களிடம் யாருமே எளிதில் ஏமாறுவதில்லை.

ஆனால், நெருங்கிய நண்பனைப் போல் திட்டமிட்டு நடிக்கும் கபட

வேடதாரியிடம் எப்படிப்பட்ட மேதையும், பொருளாதார விவகாரங்களில்

ஏமாந்து போவான்.

பெரும்பாலான கள்ளத் தொடர்புகள் கூட நட்பு என்கிற முகமூடி அணிந்த

படி தான் தொடங்கப் படுகின்றன.

பலங்களையும் பலவீனங்களையும் நண்பர்களிடம் முழுமையாகப்

பகிர்ந்து கொள்வது மிகவும் ஆபத்தானது. நம் பலவீனங்களையே பயன்படுத்தி

வீழ்த்தி விட்டு, நம்மிடமுள்ள பலங்களை அவர்கள் பெற்று விடுவார்கள்,

மேலும், இரண்டு மூன்று நண்பர்கள் கூட்டாகச் சேர்ந்து, கூட்டுச் சதி

மூலம் அவர்கள் பலனடைய முடிவெடுத்து விட்டால், எப்படிப்பட்ட கொம்பனும்

தப்பிக்க முடியாது. வீழ்ச்சி நிச்சயம்.

ஆகவே, அளவோடு பகிர்ந்து கொள்ளவும், நண்பர்கள் மனதில் பொறாமை

எழாதவாறு உதவிகரமாக நடந்து கொள்ளவும்.

மேலும், வளமான நண்பனிடமிருந்து வேண்டிய ஒன்றைப் பெறுவதற்காக,

தன் மனைவியையே அவனுக்குத் தாரை வார்த்துப் பிழைப்பதன் மூலமாக

நடைபெறும் கள்ள உறவுகள் யாரும் கேள்விப்படாத தகவல்கள் அல்ல.

குறிப்பிட்ட நண்பனிடமிருந்து பணத்தையோ அல்லது ஒரு தொழில்

நுணுக்கத்தையோ அபகரிக்கும் வரை மட்டுமே, அவனோடு தன் மனைவியைப்

பரத்தையரைப் போல் நடந்து கொள்ளச் செய்வது என்கிற சூழ்ச்சி ஆங்காங்கே

நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. ஆகவே, நெருக்கத்திற்கேற்ப, எச்சரிக்கை

அவசியம்.

ஆபத்துக் காலத்தில் கேளாமலே உதவக்கூடியவன், கெட்ட பழக்கங்களை

ஒட்ட வைக்காதவன், அனாவசியமாகக் கடன் கேட்டு நட்பை விலை

பேசாதவன். நண்பனின் மனைவியை சகோதரியாகக் கருதக் கூடியவன். புறம்

பேசாதவன், வேலை நேரத்தைக் கெடுக்காதவன், சிறிய விரலைக் கொடுத்து

பெரிய விரலைப் பிடுங்காதவன். நம் தவறுகளைக் கண்டிக்கக் கூடியவன்.

இவையே நல்ல நண்பனுக்கான அடையாளங்கள். இத்தகைய பண்புகளைக்

கொண்டவரோடு கொடுத்தும் கொளல் வேண்டும் நட்பு.

உறவினரால் மட்டுமே பொறாமை கொள்ள முடியும்.

உறவினர்கள் மதிக்கப்பட வேண்டியவர்கள். உறவு என்றால் உதவு என்று

தான் பொருள். உதவ வேண்டும். உறவு பாராட்ட வேண்டும். ஆனால் கிட்டப்

போகவும் கூடாது. நெருங்க விடவும் கூடாது.

பொருளாதார ரீதியாக வளர்ந்து கொண்டிருக்கும் போது, இந்த

விதியை மீறுவது ஆபத்து. ஏனெனில், முன்னேற்றத்துக்கு உறவினர்

முடிவுரை எழுதி விடுவார்கள்,

பிறந்தது முதற்கொண்டு பார்த்துக் கொண்டிருப்பவர்கள் உறவினர்கள்.

நெருக்கமாகப் பார்க்கக் கூடிய வாய்ப்பும் நெருங்கிய உறவினர்களுக்கு மட்டுமே

உண்டு. ஆகையால் தங்களை விடத் தங்கள் உறவினர் உயர்வதைப் பார்த்துக்

கொண்டு வாளாவிருக்க அவர்களால் முடியாது.

இந்த குணம் ஏதோ ஒரு சிலரிடம் மட்டுமே உள்ள ஒரு பலவீனம் அல்ல.

மனித மனம் என்பதே பொறாமைப் படும் இயல்புடையது. பொறாமையும்,

மனித மனமும் ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்கள். பொறாமையால்

தூண்டப்படாத மனிதர்கள் இதுவரை இப்பூமியில் தோன்றியதில்லை,

மனோ விஞ்ஞானத்தைக் கற்றுக் கொண்ட பண்பட்ட மனிதர்களால்

மட்டுமே பொறாமையிலிருந்து வெளியேற முடியும், சராசரிகளால் நிச்சயமாக

முடியாது. இது ஒரு இயற்கை விதி. எந்த உறவுகளும் இங்கே விதி விலக்கில்லை.

ஆகவே, அவர்களுடைய மனதில் தன்னியல்பாகத் தோன்றுகின்ற

பொறாமை காரணமாகத் தங்களையறியாமலே, கெடுதல் செய்து விடுவார்கள்.

நமது வளத்தின் ஊற்றை எப்படியாவது அடைத்து விடுவார்கள். உரியதோர்

காரணத்தைக் கூறித் தங்கள் செயலை நியாயப் படுத்தியும் விடுவார்கள்.

நீங்கள் வளர்ந்து கொண்டிருப்பவர் எனில், உறவினர்களில் நல்லவர்கள் யார்?

உங்கள் வளர்ச்சியைக் கண்டு மனம் புழுங்காதவர்கள் யார்? உங்களுக்குக்

கெடுதல் செய்யும் எண்ணமற்ற உறவினர்கள் யார்? என்பதை இனங்காண்பது

மிகவும் எளிது.

அவ்வப்போது உறவினர்கள் பங்கேற்கும் சிறு விருந்தொன்றை நடத்தவும்.

அந்த விருந்தில் கலந்து கொள்ளும் போது, அவர்களுடைய உடல்மொழியைக்

கவனிக்கவும்.

சிரிக்க முடியாமல் சிரிப்பவர், போலியான மகிழ்ச்சியை வெளிப் படுத்துபவர்,

கூட்டத்தில் கலக்காமல் ஒதுங்கி நிற்பவர், முகம் கறுத்துக் கிடப்பவர், அவருடைய

உண்மையான குரலில் பேச முடியாதவர் போன்ற அனைவருமே உங்கள்

வளர்ச்சியைக் கண்டு பொறாமைப் பட்டு, மனதிற்குள் வெந்து செத்துக்

கொண்டிருப்பவர்கள்.

அவர்களுக்கு அத்தியாவசியமாகத் தேவைப்படுகின்ற உதவியைச் செய்து,

மனதை மாற்றவும். அல்லது அவர்களிடம் எச்சரிக்கையுடன் இருக்கவும்.

எந்த உறவினர் உங்கள் இருவருக்கும் பொதுவாக உள்ள உறவினர்

ஒருவரைப் பற்றி உங்களிடம் புறம் கூறுகிறாரோ, அவர் மிகவும் ஆபத்தானவர்.

ஏனெனில் இனியொரு நாள் உங்களைப் பற்றி வேறொரு உறவினரிடம் அவர்

புறம் கூறிக் கொண்டிருப்பார்.

புறங்கூறல் என்பது தான் பிரித்தாளும் சூழ்ச்சியின் முதல் அடையாளம்.

பிரித்தாள் நினைப்பது தான் பொறாமையின் வெளிப்பாடு.

ஆகவே வளர்ந்து கொண்டிருக்கும் நிலையில், இத்தகைய உறவினர்களிடம்

மிகவும் எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது. இல்லாவிட்டால் வளர்ச்சிக்கான

முடிவுரையைச் சத்தமில்லாமல் நிச்சயமாக எழுதி விடுவார்கள்.

உறவினர்களில் நிச்சயமாக விதிவிலக்குகள் உண்டு. ஆனால் அவ்வாறு

விதிவிலக்குகளாக இருக்கும் உறவினர்களை எளிதில் இனங்கண்டு விடலாம்.

பொறாமையுணர்வும், அதன் விளைவான புறங்கூறலும் அவர்களிடம் ஒரு போதும்

இருக்காது.

பிரித்தாளும் சூழ்ச்சியைப் பயன்படுத்தி, உறவினர்களிடையே பகைமையை

உருவாக்க மாட்டார்கள்.

பரந்த மனப்பான்மையும், அனைவரும் உயர வேண்டும் என்கிற உயர்வான

பண்பும் அவர்களுடைய ஒவ்வொரு செயலிலும் வெளிப்படையாகத் தெரிந்து

கொண்டேயிருக்கும். அவர்களுடைய அன்பிற்குக் குறை காணத் தெரியாது.

ஆகவே, உறவினர்களில் நல்லவர்கள் சூரியனைப் போன்றவர்கள். அவர்களைத்

திரையிட்டெல்லாம் மறைக்க முடியாது.

மேலும், நல்ல நண்பனுக்கான அடையாளங்கள் அனைத்தும் நல்ல

உறவினர்களுக்கும் பொருந்தும்,

எம். எல். எம். என்றொரு எமன்.

எம்,எல்.எம் என்பது ஒரு எமன். முதலில் முதலீடே இல்லாத தொழில் என்று

சொல்லப் படும். உள்ளே நுழைந்த பின் முதலீடின்றி தொழிலில் வெற்றியா என்று

கேட்கப் படும்,

மூளையை மழுங்கடிக்கவே வாராந்திரக் கூட்டங்கள் நடத்தப் படும்.

எம்.எல்.எம் வியாபாரத்தில் நடைபெறுவது அனைத்துமே ஏமாற்று வித்தைகள்.

எப்படிப்பட்ட திறமைசாலியையும் சிறிது காலத்திற்குத் தன் வலைக்குள்

விழ்த்தும் சக்தி எம்.எல்.எம் கூட்டங்களுக்கு உண்டு.

ஆகவே எம்.எல்.எம் என்று சொல்லிக் கொண்டு வருகிற நபரை வீட்டிற்குள்

அனுமதிப்பது கடைந்தெடுத்த ஒரு திருடனை அனுமதிப்பதைப் போன்றது. காது

கொடுத்துக் கேட்டால் போதும். கவிழ்வது உறுதி.

நெருங்கிய நண்பனோ, உறவினரோ இந்தச் சண்டாளர்களிடம் சிக்கிக்

கொண்டிருந்தால், உடனடியாக, தக்க உளவியல் அறிஞர்கள் மூலமாய்

ஆலோசனை அளித்து அவர்களைக் காப்பாற்றுவதே சிறந்த தற்காப்பு.

இல்லையேல் அவர்களால் உங்களுக்கு ஆபத்து வந்து விடும்.

ஏனெனில், எம்,எல்.எம் என்பது பொய்யிலே பிறந்து, பொய்யிலே வளர்ந்து,

பொய்யிலேயே வாழ்ந்து கொண்டிருக்கக் கூடிய கொடியவர்களின் கொலைக்

கூடாரம்,

கோடிக்கணக்கான மக்களின் ஒரு வருட வாழ் நாளை நாசப்படுத்தியுள்ள

நாசகாரச் சக்தி, நிம்மதியான குடும்ப வாழ்க்கையை அழிக்கப் பிறந்துள்ள எமன்.

பிற திருடர்கள்.

பதிவு செய்யப்படாத, பொருளாதாரப் பின் புலமற்ற சீட்டு நிறுவனங்கள்,

அதிகமான வட்டி தருவதாய்க் கூறி வைப்பு நிதியை வசீகரிக்கின்ற தனியார்

நிறுவனங்கள், பறவையின் சாணமே கிராம் ஆயிரம் ரூபாய் என்கிற வகையில்

வருகிற நம்ப முடியாத அதிசய விளம்பரங்கள், பிணைக் கையெழுத்து கேட்டு

வருகின்ற கோரிக்கைகள், மிக மிகக் குறைந்த விலையிலே கிடைக்கக் கூடிய

செவ்வாய் கிரகத்து வீட்டு மனைகள், போன்ற அனைத்துமே மக்களின் பணத்தைக்

களவாடும் நோக்கமுடையவை. அவற்றிடம் எச்சரிக்கை தேவை,

கடன்- தற்கொலைக்கான குறுக்கு வழி

தனியாரிடம் கடன் வாங்கினால் வட்டி கட்டியே குடும்ப பொருளாதாரம்

அழிந்து விடும், உதாரணமாக ஒரு வங்கியில் கடன் பெற்றால், மாதாந்திரத்

தவணைகளின் போது அசலும் சேர்ந்து அடைபட்டுக் கொண்டிருக்கும். ஆனால்,

தனியாரிடம் கடன் பெற்றால், அசலைப் போல் இரண்டு மடங்கு கொடுத்த

பிற்கும் ஒரு ரூபாய் கூடக் குறையாமல் அசல் அப்படியே இருக்கும்,

அதே போலத் தனி நபர்களுக்குக் கடன் கொடுத்தால் அசலை இழக்க

வேண்டியிருக்கலாம். அல்லது நட்பையோ, உறவையோ இழக்க

வேண்டியிருக்கலாம்.

மேலும் உரிய பொருளாதார நிபுணரின் ஆலோசனையின்றி எடுக்கப்படும்

முதலீட்டு முடிவுகள் அனைத்துமே பெரும்பாலும் தோல்வியைத் தரக் கூடியவை.

ஆலோசனை பெற ஐயாயிரம் ரூபாயைச் செலவளி க்கத் தயங்குபவர்களே

இலட்சக் கணக்கில் இழக்கிறார்கள்.

ஆகவே வலியைத் தருமளவிலான தொகையை முதலீடு செய்யும் முன்

நிபுணரின் ஆலோசனை பெறுவது அவசியம்.

தெரியாத தொழிலைச் செய்தவனும் கெட்டான். தெரிந்த தொழிலை

செய்யாதவனும் கெட்டான் என்பது பழமொழி. ஆகவே தெரியாத தொழிலில்

இறங்க கூடாது.

அளவிற்கு மீறிய ஆர்வமோ அல்லது அரிப்போ இருக்குமானால், சிறிய

அளவிலான முதலீட்டுடன் செய்து பார்க்கலாம். அடிமட்டத்திலிருந்து

தொழிலைக் கற்றுக் கொண்டபின் பெரிய அளவில் அபிவிருத்தி செய்வதே நல்லது.

புதிய தொழிலில் காலூன்று முன்பே இருக்கும் வேலையை விடுதலும்,

வளராத நிலையில் இருக்கும் போது. ஒரே நேரத்தில் பல தொழில்களில்

இறங்குதலும் கூட வழுக்குப் பாறைகளே.

நிலத்தில் செய்யும் முதலீடு.

நிலத்தில் செய்யும் முதலீடு ஒருபோதும் ஏமாற்றி விடாது. மண் மோசம்

செய்யாது. ஆனால், செய்யும் முதலீடு உண்மையாகவே நிலத்தின் பேரிலானதாக

இருக்க வேண்டும். போலிப் பத்திரம், புறம்போக்கு நிலம், குளம்,

கற்பாறை,

விற்கவே முடியாத இடம், பாலைவனம், கடல் போன்ற பகுதியாக இருந்து விடக்

கூடாது.

அதற்கான முதல் எச்சரிக்கை. ஒரு சொத்தை வாங்குவது குறித்து

அவசரமாக முடிவெடுக்கக் கூடாது. நான்கு பேரிடமாவது விசாரித்துப் பார்த்த

பிறகு தான் வாங்க முடிவெடுக்க வேண்டும். நம் மீது உண்மையான

அக்கறையுடைய ஒருவராவது அந்தச் சொத்தைப் பார்வையிட வேண்டும். அந்த

முதலீடு தவறாக இருக்கும் பட்சத்தில் அவரும் பாதிக்கப் படுவார் என்பதை அந்த

நபரும் அறிந்திருக்க வேண்டும்.

எந்தத் தருணத்திலும் ஒற்றை நபரை மட்டும் ஒரு போதும் நம்பக்

கூடாது. நிலத்தின் ஒவ்வொரு சதுர அடியிலும் கால் படும் முன்பாக முன்பணம்

கூடக் கொடுக்கக் கூடாது. சட்ட ஆலோசனை மிகவும் அவசியம். அசல்

பத்திரங்கள் இல்லாத சொத்து, மைனர் வாரிசுகள் உள்ள சொத்து, கோவில் சொத்து,

அரசாங்கம் ஏழைகளுக்கு வழங்கியுள்ள சொத்து போன்றவை தொல்லைகள்

கொண்டவை.

மேலும் எந்த இடமாக இருந்தாலும், அதற்கு அருகில் வசிப்பவர்களைத்

தனியாகச் சென்று சந்தித்து விசாரிக்க வேண்டியதும், வீட்டிலுள்ள அனைவரையும்

அழைத்துச் சென்று இடத்தைக் காட்டி முடிவெடுக்க வேண்டியதும் மிக மிக

முக்கியம். ஏனெனில் வீட்டிற்குத் தெரியாமல் வாங்கப் படும் சொத்துக்கள்

பெரும்பாலும் வீடு வந்து சேர்வதில்லை,

முடியாது என்று சொல்ல முடியாது.

அடுத்ததாக குடும்பத்தின் பொருளாதாரத்தைச் சீரழிப்பதில் மிக முக்கியப்

பங்கு வகிக்கின்ற தகவல் ஒன்று உள்ளது.

அதாவது யாராவது ஏதேனும் உதவி கோரும் போது, என்னால் செய்ய

முடியாது என்று சொல்லத் தோன்றும். ஆனால் முடியாது என்று சொல்லத் தயங்கி,

அவர்களுடைய கோரிக்கையை ஏற்றுக் கொள்வோம். இது நிச்சயமாகத்

தோல்வியைத் தான் கொண்டு வரும்,

ஏனெனில், முடியாது என்று தோன்றுகிற எண்ணம் தான் உள்ளுணர்வு.

உள்ளுணர்வு என்பது தெய்வத்தின் குரல்.

ஆகவே முடியாது என்று கூற விரும்பியும் அவ்வாறு கூற முடியாமல்

தத்தளி க்கும் போது, முடியாது எனக் கூறி பிறரது நிர்பந்தத்திலிருந்து

வெளியேறும் துணிச்சலைக் கற்றுக் கொள்ளுங்கள்.

அல்லது இந்த நூலின் இந்தப் பக்கத்தைத் திறந்து காட்டுங்கள் போதும்.

கோரிக்கை வைத்தவர் ஒதுங்கிக் கொள்வார். உங்களுக்கு வரவுள்ள துன்பம்

வாயிற்படியோடு வெளியேறி விடும்.

அவருடனான நட்போ, அல்லது உறவோ உங்களிடமிருந்து ஒன்றை

அபகரிப்பதை அடிப்படையாகக் கொண்டிருக்கும் பட்சத்தில் மட்டுமே செத்துப்

போகும். உண்மையாக இருக்கும் பட்சத்தில் பாதிக்கப் படாது.

தீர்வு.

பொருளாதாரம் சீர்குலையும் போது தம்பதியிடையே பூசல்கள் வரும்.

இருவரும் சேர்ந்தே முடிவுகளை எடுத்திருந்தால் கூட, அதைச் செயல்படுத்துவது

கணவனே ஆகவே, தன் குழந்தைக்குக் கேடு விளைவித்த மனிதனை

மனைவியால் ஏற்க முடியாது. இது ஒரு இயற்கை விதி. ஆகவே உளவியல்

அறிஞரின் ஆலோசனையைப் பெறுவது குடும்பத்திற்கு நல்லது.

இல்லையேல் இருவரிடையே பாலுறவு நடைபெறாது. சரச சல்லாபங்கள்

இருக்கவே இருக்காது. அதனால் தம்பதியரிடையே பேசுவதற்கு இந்த

தோல்விகளைத் தவிர வேறு எதுவும் இருக்காது.

பரஸ்பர் குற்றச் சாட்டுகள் துவக்கமாகும், வாக்கு வாதங்கள் பிறக்கும். இது

தான் மனநோயின் அறிகுறி, இதற்கு ஒரே மருந்து பாலின்பம், அந்த மருந்தை

அளிப்பது தான் உளவியல் அறிஞரின் ஆலோசனை. இவர் தான் நோயின்

மூலத்தைக் குணப்படுத்துபவர்.

ஏமாறுவது என்பது வெறுமனே ஏமாறுவது மட்டுமல்ல. பிறரிடம்

ஏமாறுவது என்பது தன்னை நம்பியுள்ள குடும்பத்திற்கும் குழந்தைக்கும்

செய்யக் கூடிய மிகப் பெரிய துரோகம்.

இந்தக் கருத்தை மனதில் ஆழமாகப் பதித்துக் கொண்டால்,

அடுத்தவர்களால் நம்மை எளிதில் ஏமாற்ற முடியாது. ஏனெனில், ஆழமாக

ஆராயாமல் முடிவெடுக்க மாட்டோம். அதனால், எக்குத் தப்பாக எங்கோ ஒரு

முட்டுச் சந்தில் சிக்கி கொண்டு முழிக்கத் தேவையிருக்காது.

இங்கே இறுதியாக சொல்லப்பட வேண்டிய முக்கியமான தகவல்

ஒன்றுண்டு. மேலே சொல்லப்பட்ட எந்த வழியில் ஒரு குடும்பம் பாதிக்கப்

பட்டாலும் அதற்கு அந்தத் தம்பதி மட்டுமே காரணம். ஏனெனில், அவர்களுடைய

சிந்தனை அலைகளின் படி தான், அவர்கள் குடும்பத்தை நோக்கி, தீமைகள்

ஈர்க்கப் பட்டுள்ளன.

அந்த மோசமான சிந்தனை அலைகளுக்கு மூல காரணம் குடும்ப விவகாரச்

சண்டையாக இருக்கலாம். ஏனெனில் அப்போது தான் மோசமான எண்ணங்கள்

ஆழ்மனதிற்குள் எளிதாக நுழைகின்றன.

ஆகவே, தவறான பொருளாதார முடிவு எடுக்கப்பட்டு விட்டது என்பதைப்

புரிந்து கொண்ட அடுத்த விநாடியே உளவியல் அறிஞர் ஒருவரை நாடவும். உரிய

ஆலோசனை பெற்று, உடனடியாக மனதை நேர்மறைச் சிந்தனைக்குக் கொண்டு

வந்து விடவும். ஒருவர் மற்றவர்க்கு உரிய பாலின்பங்களைப் பரஸ்பரம் வழங்கிக்

கொள்ளவும், இழந்ததை மறந்திட, ஒருவரை மற்றவர் மகிழ்ச்சிப் படுத்திக்

கொள்ளவும். மகிழ்ச்சி காரணமாக படுத்தவுடனே உறக்கம் வந்து விடும்.

இழப்புக்களை எண்ணி அசை போடுவதன் மூலம், மென்மேலும் இழப்புக்களையே

ஈர்க்கும் கொடுமையிலிருந்து விடுபட்டு விடலாம்.

மேலும், புத்துணர்வோடு செயலாற்றத் தேவைப்படுகின்ற துணிவையும்

மகிழ்ச்சியான உள்ளம் பெற்று விடும். கடுமையாக உழைக்க உடல் தயாராகி விடும்.

ஆகவே, தவறான பொருளாதார முடிவைத் தொடர்ந்து அடுத்தடுத்து ஏற்படும்

கேட்டினைத் தடுத்து நிறுத்திட, பாலின்பங்களை ஒருவர்க்கு மற்றவர் வழங்கி

மகிழ்ச்சிப் படுத்திக் கொள்ளவும், இழப்புக்களிலிருந்து மீள்வதற்கான

வழி களிலேயே இது தான் மிகவும் எளிய வழி.

## **3.** அரசியலும்**,** பாலின்பமும்

அரசியல் என்பது சீதோஸ்ணம் போன்று எல்லோரையும் பாதிக்கக் கூடியது

அரசியல்வாதிகள் பிம்பங்கள்**.**

அரசியல் என்பது சீதோஸ்ணம் போன்றது. ஒரு நபர் அரசியலில் இருந்தாலும்

சரி, இல்லையென்றாலும் சரி, அரசியலில் எடுக்கப்படும் முடிவுகள் நல்ல

வீதமாகவோ, அல்லது கெட்ட விதமாகவோ ஒவ்வொருவரையும் பாதித்தே தீரும்.

ஆகவே, ஒதுங்கி நின்று வேடிக்கை பார்ப்பதைக் காட்டிலும் ஏதேனும் ஒரு

அரசியல் கட்சியில் சேர்ந்து கொள்வது நல்லது.

இன்றைய கால கட்டத்தில், பொது ஜனமாக இருப்பது என்பது பொதுச் சொத்தாக இருப்பதைப் போன்றது. ஆனால் ஒரு அரசியல் கட்சியில் உறுப்பினராகி விடுவது, படைப்பிரிவின் பாதுகாப்பில் வாழ்வதைப் போன்றது.

யாரையும் முழுநேர அரசியல் வாதியாகும் படி நெருக்குவது நூலின் நோக்கமல்ல. ஒருக்கால் தற்காப்பிற்காக அரசியலில் சேரப் போய், அதன் விளைவாக ஒரு நபர் அரசியல்வாதியாகி விட்டாலும் அதில் தவறேதும் இல்லை.

ஏனெனில், பலர் சொல்வதைப் போல முழு நேர அரசியல்வாதியாவது அப்படியொன்றும் இழிவான செயலும் அல்ல. எளிதான செயலும் அல்ல.

அரசியல்வாதிகள் ஆகாயத்தில் இருந்து குதித்தவர்கள் அல்ல. அவர்கள் மக்கள் கூட்டத்திலிருந்தே உருவாகிறார்கள். ஆகவே அவர்கள் நம்முடைய சம காலச் சமூகத்தின் பிம்பங்கள், சமூகத்தின் தரத்தைத் தான் அரசியல்வாதிகள் பிரதிபலிக்கிறார்கள்,

ஆகவே அரசியல்வாதிகளைப் பழித்துரைக்கும் எந்தச் செயலும் தன்னைத் தானே பழித்துரைப்பதற்கு இணையான அறியாமை மிக்க செயல்.

அரசியல்வாதிகளை இழித்துரைப்பதற்கான காரணம் அவர்கள் மீது ஏற்படுகின்ற பொறாமை, அரசியல்வாதிகளையே ஒட்டுமொத்தமாக வெறுப்பதைப் போல் காட்டிக் கொள்வது ஒரு கடைந்தெடுத்த கட்ட நாடகம்.

ஒவ்வொரு நபரும் பிரபலமான அரசியல் வாதிகளுடன் நட்புக் கொள்ளவே மனதார விரும்புகிறான், அரசியல் வாதிகளுடனான நட்பைப் பெருமைக் குரியதாகவே கருதுகிறான். வாய்ப்பற்றவன் தான் ச்சீ..ச்சி. இந்தப்பழம் புளிக்கும் என்று கூறி தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்கிறான்.

ஆகவே அரசியல்வாதிகளுக்கு எதிரான போலித்தனமான

வாதங்களைத்

தூக்கியெறிந்து விட்டு ஏதேனும் ஒரு அரசியல் கட்சியில் தன்னை ஐக்கியப்படுத்திக் கொள்வது ஒருவருடைய குடும்பத்திற்கு மிகவும் பாதுகாப்பானது.

அரசியலும். பாலுணர்வும்.

இது தற்காப்புக் கலையொன்றைக் கற்று கொள்வதைப் போன்றது.

தற்பாதுகாப்பற்ற நாடும் சரி, குடும்பமும் சரி சுற்றியுள்ளோரால் அலைக்கழிக்கப்

படும் வாய்ப்புகள் இப்போது மிகவும் அதிகம்.

மேலும் அரசாங்கங்கள் தனி நபர்களின் சொல்லுக்கு அவ்வளவு எளிதில் செவி

சாய்ப்பதில்லை. அண்ணன் தம்பி இல்லை, மாமா மைத்துனன் இல்லை,

அத்தைமார் இல்லை. ஆகவே சுற்றியுள்ள உலகம் மட்டுமே உங்கள் சுற்றம்,

ஆனால், தற்பாதுகாப்பற்ற குடும்பத்தோடு சுற்றுப்புறம் கூட நட்புக்

கொள்வதில்லை. ஆகவே, ஏதேனும் ஒரு அரசியல் கட்சியில் உறுப்பினராசி

விடுவது நல்லது.

பெரும்பாலான அரசியல் தலைவர்களே கூட, முதலில் தங்கள்

தற்காப்புக்காக கட்சிகளில் சேர்ந்தவர்களே.

இது யாராலும் செய்ய முடிந்த ஒரு எளிய செயல். பாதுகாப்பை அதிகரித்துக்

கொள்கின்ற செயல். இவ்வாறு சேர்ந்து கொள்ளும் போது. ஒருவருடைய சுயமதிப்பு

அதிகரிக்கும். அதன் காரணமாகத் தன்னம்பிக்கை வலுவடையும். நேர்மறைச்

சிந்தனையின் தாக்கம் ஒவ்வொரு செயலிலும் எதிரொலிக்கும்.

மேலும், ஒரு அரசியல் கட்சியோடு தன்னை ஐக்கியப் படுத்திக்

கொண்டுள்ள ஒருவரைத் தங்கள் இலக்காக ஏமாற்றுப் பேர்வழிகள் தேர்தெடுக்க

மாட்டார்கள்,

யாருடனும் வம்புச் சண்டைக்குப் போகாத வரை, குடும்பத்தின்

அமைதிக்குப் பங்கம் வராது. அரசிடமிருந்து உரிமங்கள் பெறுவது, சான்றிதழ்

பெறுவதெல்லாம் கூடச் சற்று எளிதாய் முடியும்.

குடும்பத்தின் நிம்மதியைக் கெடுக்கும் வகையில் ஒருவருடைய வாழ்வில்

உருவாகக்கூடிய பல சம்பவங்களை, அருகிலேயே நெருங்க விடாமல் பாதுகாக்கும்

திறண் அரசியலுக்கு உண்டு. ஆகவே ஏதேனும் ஒரு அரசியல் கட்சியில் சேர்ந்து

கொள்வது நல்லது. தற்காப்பே சிறந்த ஆயுதம்.

ஒருவருடைய மனதில் நிலவும் பாதுகாப்புணர்வின் அளவிற்கேற்ப

அவருடைய பாலுணர்வு கூர்மையுடன் இருக்கும், பாலுணர்வு கூர்மையாக

இருக்கும் வரை பாலுறவு நீடித்திருக்கும். பாலுறவு நீடித்திருக்கும் வரை

தம்பதியரிடையே பிரச்சினைகளே ஏற்படாது. மேலும் நோய் நொடி கூட எளிதில்

நெருங்காது. வாழ்நாள் கூட அதிகரிக்கும்.

ஆகவே, சமூகத்தில் மிகவும் பிரபலமாக விளங்கும் தொழிலைச் சார்ந்து

வாழும் வாய்ப்பற்ற குடும்பத்தினர், ஏதேனும் ஒரு அரசியல் கட்சியில் தங்களை

ஐக்கியப்படுத்திக் கொள்வதன் மூலம் மேற்கண்ட நன்மைகளையும் பெறுவதோடு,

நிம்மதியாகவும் வாழ முடியும்.

சேரும் போது இருப்பதில் நல்ல கட்சியாக இருப்பதைப் பார்த்துச் சேருங்கள்.

கூடுமானவரை, கொள்கைப் பிரகடனத்தைப் படித்துப் பார்த்த பின்

சேருங்கள். உங்கள் அடிப்படை நம்பிக்கைகளை பாதிக்காத கட்சியைத்

தேர்ந்தெடுத்துச் சேருங்கள்.

அந்தக் கட்சியில் இருக்கும் பெரும்பாலான நபர்களின் நடத்தை

உங்களுக்குப் பொருந்திப் போகுமா என்பதை ஆய்ந்தறிந்த பின் சேருங்கள்.

இவ்வாறு ஆராய்ந்து முடிவெடுத்த பின் சேர்ந்தால், சேர்ந்த பின் கட்சி மாறிக்

கொண்டிருக்கத் தேவையிருக்காது.

அடிக்கடி கட்சி மாறுபவர்களுக்கு மதிப்பிருக்காது. ஆகவே,
கட்சியைத் தேர்வு செய்யும் போது எச்சரிக்கையோடு முடிவெடுக்கவும்.

**4.** சுய தொழில் வெற்றியில் பாலின்பத்தின் பங்கு

நாலாள் வேலையை ஓராளே செய்வதற்குப் பெயர் தான் சுயதொழில்.

தொழில் தான் முதல் மனைவி.

சொந்தத் தொழில் செய்வதென்பது ஒரு மாவட்ட ஆட்சித் தலைவரின் பதவி

போன்றது. எந்த நேரத்திலும் வேலை வரலாம். எதிர்பாராத விதத்திலும் வேலை

வரலாம், சுயதொழில் செய்வோருக்காகவே கண்டுபிடிக்கப் பட்ட பழமொழி

“செய்ய வேலையிருக்காது. நிற்க நேரமிருக்காது”.

சுய தொழில் செய்யும் நபருக்கு அவரது தொழில் தான் முதல் மனைவி,

சுருக்கமாகச் சொல்வதென்றால் சுய தொழில் செய்வதென்பது வேறொன்றுமல்ல,

ஒரே நபர் ஐந்தாறு நபர்களின் வேலையைச் செய்வது. அவ்வளவு தான்.

நாள் முழுக்க ஓய்வு கிடைக்கலாம். வாரக்கணக்கில் தொடர்ந்து கிடைக்கலாம்.

திடீரென நிலைமை மாறி, பத்துப் பேருடைய வேலையை ஒற்றையாளாகச் செய்ய

வேண்டி வரலாம்.

நாட்கணக்கில் வீட்டுப் பக்கமே வர முடியாமலும் போகலாம், தெரிந்தவர்

வீட்டு ஈமச் சடங்கில் கூடக் கலந்து கொள்ள முடியாமற் போகலாம். தன்னுடைய

இலட்சியத்தை எட்டும் வரை இது தான் சுயதொழில் செய்பவரின்

தலையெழுத்து.

நிறைய வருமானம் வரலாம். நேரம் கனிந்து விட்டதெனக் கருதும்

வேளையில் தொழில் நொடிந்து போகலாம். துரோகங்களுக்குப் பலியாக நேரலாம்.

அதற்கான வாய்ப்புகள் இங்கு மிக மிக அதிகம்.

பணியாளர்களால் ஆதரிக்கப் படலாம். அல்லது கண்டிப்பான

நிர்வாகத்தால், பணியாளர்களால் பழியெடுக்கப் படலாம். அரசாங்க முடிவுகளால்

பாதிக்கப்படலாம், மனைவி, குழந்தைகள், பெற்றோர் என யாருடனும் மனம்

விட்டுப் பேச முடியாத சூழல் வரலாம். அல்லது பேசுவதனைத்துமே தொழிலைப்

பற்றியதாகவே இருக்கலாம்.

நிம்மதியை இழக்க வேண்டி வரலாம். வீட்டில் வைத்து முன் கோபம்

வரலாம், தொழிற் கூடம் அளிக்கின்ற வலியை இறக்கி வைக்கும் இடமாக

இல்லம் மாறிப் போகலாம். சுமைதாங்கியாக மனைவியைப் பயன்படுத்தலாம்.

ஒய்வு என்பதே, செய்து கொண்டிருக்கும் வேலையை விட்டு விட்டு,

வேறொரு வேலையைச் செய்யத் தொடங்குவதாக இருக்கலாம். மனைவி,

குழந்தைகளுக்கான பரிசுப் பொருட்கள், ஆடை அணிகலங்கள், இன்ன பிற

அத்தியாவசியப் பொருட்கள் வாங்குவதற்காக ஒதுக்கும் நேரம் கூட பணிசார்ந்த

பயணங்களில் ஒன்றாக இருக்கலாம்.

இந்த மாதிரி இருந்தாலும் பாலின்பம் மட்டும் நிச்சயமாகத் தேவைப் படும்.

இன்னும் தெளி வாய்ச் சொல்வதென்றால், சுய தொழிலில் ஈடுபட்டி

ருப்பவர்களுக்குத் தான் பாலின்பம் அதிகமாக தேவைப் படும்.

மன அழுத்தமும் பாலின்பமும்**.**

சுயதொழிலில் எந்த நேரமும் மன அழுத்தம் இருந்து கொண்டே இருக்கும்.

அதற்கு மருந்தாக பாலின்பம் தேவைப்படும். பாலின்பம் கிடைப்பதில் சிக்கல்

ஏற்பட்டால், இவர்கள் மதுவோடு உறவாடத் தொடங்கி விடுவார்கள்.

மது என்பது மன அழுத்தத்தைப் போக்கக்கூடிய மற்றொரு மருந்து.

மனைவியோடு உறவாட முடியாத மனிதர்கள் தான் பெரும்பாலும்

மதுவோடு

உறவு கொள்கிறார்கள் என்று ஒரு ஆய்வு தெரிவிக்கிறது.

மன அழுத்தத்திற்கான மருந்துகளில் முதன்மையானது மாது. அடுத்தது மது.

பாலுறவில் ஈடுபட மனைவி மறுக்கும் சூழலால் தான் பல ஆண்கள் மதுவை நாடிப் போகிறார்கள்.

மதுவோடு உறவேற்படும் போது தொழில் துவக்க நிலையில் இருக்குமானால்

தொழிலே கூடத் திசைமாறி விடலாம். நசிந்தும் போகலாம். அப்படியாகும்

போதும் குடும்ப வாழ்க்கை நரகமாகிப் போகும்.

தொழிலில் வலிமையாகக் காலூன்றிய பின் மதுவோடு உறவேற்பட்டால்,

தொழிலுக்கு பெரிய பாதிப்பு இருக்காது. நிர்வாகம் ஒழுங்கு முறைப் படுத்தப்

பட்டிருக்கும்,

ஆனால் மித மிஞ்சிய மதுவால், மனிதன் விரைவில் நோய் வாய்ப் பட்டு

விடுவார், மாரணம் கூட நெருங்கி விடக் கூடும். இவ்வாறு தொழிலில் மகத்தான

வெற்றி பெற்றும் கூட, மதுவால் தங்கள் நாற்பதுகளில் இறந்தோர் பலருண்டு.

விபத்தின் மூலமாக ஏற்படக்கூடிய அகால மரணமாக இருக்கலாம். அல்லது

அதிகப் படியான மதுவால் ஏற்படும் கல்லீரல் சார்ந்த நோய்களால் நிகழக் கூடிய

மரணமாக இருக்கலாம். அல்லது பாலின்பம் இல்லாததால் வரக்கூடிய மாரடைப்பு

போன்ற மரணமாக இருக்கலாம்,

வழி எதுவாக இருப்பினும், மதுவால் மரணம் நெருங்குவது உறுதி.

மன அழுத்தத்தை எளிதில் உருவாக்கக் கூடியது சுய தொழில். அதற்கான

மிகச் சிறந்த மருந்து பாலின்பம்.

எந்த விதமான பக்க விளைவுகளையும் உருவாக்காமல் மன அழுத்தத்தைப்

போக்கும் மருந்து இது. அது இல்லாமற் போகும் போது தொடப்படும் மருந்து

மது. மன அழுத்தத்தை மது போக்குமெனினும், மோசமான பக்க விளைவுகளைக்

கொண்டது அது.

ஆகவே, எளிதில் மன அழுத்தத்தைத் தரக்கூடிய தொழில் செய்வோர்க்கு,

பாலின்பம் இல்லாமற் போகும் போது, மதுவினாலோ, அல்லது பாலின்பம்

இல்லாமற் போவதாலோ மரணம் நெருங்குவதென்பது உறுதி,

இல்லத்தரசியும்**,** தொழிலரசியும்**.**

ஒரு சில இடங்களில் நிலைமை வேறு விதமாக இருக்கிறது. பாலின்பம் தர

மனைவி மறுக்கும் போது தன் நிறுவனத்தில் பணியாற்றும் பெண்களில்

ஒருத்தியை தன்னுடைய மன அழுத்தத்திற்கான மருந்தாகப் பயன்படுத்தும்

போக்கும் அங்காங்கே இருக்கிறது.

அவ்வாறு மனைவிக்கு மாற்றாக வேறொரு பெண்ணைப் பயன்படுத்தும்

வாய்ப்புடையவர் பெரும்பாலும் தொழிலில் வெற்றி பெற்றவராகவே

காணப்படுகிறார்.

இதிலுள்ள இரகசியம் என்னவென்றால், இவரது ஆசை நாயகியாகும் பெண்

அவரது உளவாளியாக செயல்படுதல், நிறுவனத்தை தன்னுடைய நிறுவனம்

போல் கவனித்துக் கொள்தல், உண்மையாக உழைத்தல், வெளிப்படையாகவே

நிர்வகிக்கத் தொடங்குதல் என மிக மிக உதவிகரமானவளாக மாறிப் போகிறாள்,

மனைவியை இல்லத்தரசியாகவும், துணைவியைத் தொழிலரசியாகவும் ஒரு

சிலர் பயன்படுத்துவதை யாரும் மறுக்க முடியாது. அதனால், அவர்களுக்கு

தொழில் வெற்றி எளிதாகிப் போகிறது.

எனினும் அவரது தனிப்பட்ட வாழ்வில் நிம்மதி இருக்காது. ஏனெனில்

மனைவியின் தணிக்கப்படாத காமம் மனைவியின் மன நிலையைப் பாதிக்கும்,

அந்த மனநிலை பாதிப்பால், அவள் கணவனின் மனநிலையைக் கொதி நிலைப்

படுத்துவாள். அக்கொதி நிலை தொழில் புரியும் இடத்தில் எதிரொலிக்கும்.

அதனால், தொழில் பாதிக்கப்படலாம்,

அல்லது குடும்ப வாழ்க்கை என்பது ஒரு நரக வாழ்க்கையாக மாறிப்

போகலாம். அதன் காரணமாக கூட அவரது ஆயுள் குறைந்து போகலாம்.

ஆகவே, மனைவியின் காமத்தைத் தணிப்பதில் அக்கறையற்றவர் தன்

தொழிலில் வெற்றி பெற்று விட்டாலும், வாழ்க்கையில் தோற்றுப் போவார்.

ஆயுளைக் குறைத்துக் கொள்வார்.

கண்களை விற்றுச் சித்திரம் வாங்கிய கதையாக தொழிலில் வென்று,

வாழ்க்கையில் தோற்றுப் போவார்.

ஆகவே ஒரு ஆண் எந்தத் தொழில் செய்பவராக இருந்தாலும்

மனைவியின் பால் உணர்வுகளைத் தணிக்கக் கற்றுக் கொள்வது தான்,

அவரது வாழ்க்கையைச் சொர்க்கமாக வைத்திருக்கும்.

நோய் நொடியின்றி தம்பதியர் இருவரும் நிம்மதியாக வாழலாம்.

குழந்தைகளின் எதிர்காலமும் சிறப்பாக இருக்கும். ஆண்கள் இதை

மனதிற் கொள்வது நல்லது.

## **5.** ஆபாசப் படங்களும் ஆழ்மனமும்

ஆபாசப்படங்களும் திரைப்படங்களே.ஒரே வித்தியாசம் நடிகர்கள் இங்கே உடையணிவதில்லை.

பாலுறவுக் காட்சிகள் மறக்க முடியாதவை**.**

ஆணும் சரி, பெண்ணும் சரி, ஆபாசப் படங்களில் காட்டப் படுபவை

அனைத்தும் உண்மை என்றே நம்பிக் கொண்டிருக்கிறார்கள். இது தவறு.

திரைப்படங்களில் காட்டப்படுவதெல்லாம் உண்மையென ஒரு குழந்தை

நம்புவதைப் போன்ற நம்பிக்கை இது. இந்த நம்பிக்கை அவர்களுடைய

ஆழ்மனதில் பதிவாகி விடுகிறது.

ஏனெனில், காமம் சார்ந்த அனைத்தும் நேரிடையாக ஆழ்மனதில் பதிந்து

விடக்கூடியவை. அதாவது காமம் ஆழ்மனம் சார்ந்தது. அதனால் காமம் சார்ந்த

எந்தவொரு நிகழ்வையும் யாரும் முயற்சி செய்து நினைவில் வைத்திருக்கத்

தேவை இல்லை.

குழந்தையாக இருந்தது முதல் இந்த விநாடி வரை, தான் கண்ட காமம்

சார்ந்த ஒரு உண்மைக் காட்சியையோ அல்லது தனக்கு ஏற்பட்ட காமம் சார்ந்த

அனுபவத்தையோ, எந்தவொரு மனிதப் பிறவியாலும் மறக்க முடியாது.

அதாவது காமம் சார்ந்த பிறரது நடவடிக்கைகளை எதேட்சையாகப்

பார்த்திருந்தாலும் சரி, அல்லது திட்டமிட்டு ஒளிந்திருந்து பார்த்திருந்தாலும் சரி,

மனிதனால் தான் கண்ட காட்சியை மறக்க முடியாது.

அதே போல தனக்கு ஏற்பட்ட காமம் சார்ந்த எந்தவொரு அனுபவத்தையும்

மனிதனால் மறக்க முடியாது. ஏனெனில் காமம் என்பது நேரிடையாக

ஆழ்மனதிற்குள் இடம் பிடிக்கக் கூடியது. முயற்சி செய்து நினைவில் வைத்திருக்க

வேண்டியதில்லை.

திருமணம் வரை, சுய இன்பத்தில் ஈடுபட்ட அனுபவமெல்லாம் மறந்து போய்

விடும். ஆனால், எதிர் இனத்தோடு ஆறு வயதில் விளையாடிய அப்பா, அம்மா

விளையாட்டு முதல், பாலுறுப்புக்களைப் பொருத்திப் பார்த்தது வரை

எந்தவொரு

அனுபவமும் மறக்கவே மறக்காது.

மரணப் படுக்கையில் கூட நினைவிலிருக்கும். இது இருடாலினத்திற்கும்

பொருந்தும்.

ஆபாசப் படங்களும், ஆண்களும்.

ஆபாசப் படங்கள் என்பவை காமம் தொடர்பானவை. ஆகவே,

ஆபாசப்படங்களைப் பார்க்கிற போது அதில் காட்டப் படுபவை அனைத்தும்

ஆழ்மனதில் பதிவாகி விடுகிறது. குறிப்பாக அதில் காட்டப்படும் ஆணுறுப்பின்

அளவு மிகவும் தெளிவாக ஆணின் ஆழ்மனதில் பதிவாகி விடுகிறது.

அதனால் ஒருவிதக் கவலை உருவாகத் தொடங்குகிறது. தனக்கு அது

போல் பெரிய ஆணுறுப்பு இல்லையே! அதுபோல் நீண்ட நேரம் இயங்க

முடியவில்லையே! பெண்ணைக் கதறவைக்க முடியவில்லையே! விதவிதமாக

ஈடுபட உடல் ஒத்துழைப்பதில்லையே! என்கிற கவலை உருவாகத்

தொடங்குகிறது.

கவலை என்பது ஒரு உணர்ச்சி, உணர்ச்சிகள் அனைத்தும் உடனடியாக

ஆழ்மனதிற்குள் நுழைந்து விடக் கூடியவை. அதனால், ஆபாசப் படக்

கதாநாயகனைப் போலப் பெரிய பாலுறுப்பு இல்லையே என்கிற கவலை

ஆணின் ஆழ்மனதில் நுழைந்து விடுகிறது.

ஆழ்மனதிலே தன்னுடைய ஆணுறுப்பின் அளவு பற்றியும், அதன்

செயல்பாடு பற்றியும் ஒரு விதக் கவலை தோய்ந்த கருத்தை மனிதன் பதிய

வைத்து விடுகிறான்.

தனக்குள் எந்தக் கருத்தை மனிதன் பதித்து வைக்கிறானோ அந்தக் கருத்து

நிஜமாகும் வண்ணம் அவனைச் செயல்பட வைக்கின்ற ஒரு மகாசக்தி தான்

ஆழ்மனம்.

அதன் காரணமாக அவன் செயல் படும் போது, அவனுடைய கருத்தை

உண்மையாக்கும் வகையிலான செயலாற்றலை மட்டுமே ஆழ்மனம் அளிக்கிறது.

அதனால், அவனுடைய தாம்பத்ய வாழ்க்கை துரித ஸ்கலிதத்துடன் கூடிய

ஒரு தோல்விகரமான அனுபவமாக மாறி விடுகிறது.

ஆபாசப் படங்களின் அடிமைகளாக வாழ்ந்த ஆண்களில் பலர் தங்களுடைய

நாற்பத்தைந்து வயதிலேயே ஆண்மையை நிரந்தரமாகவே இழந்து விடுவதாக

ஆய்வுகள் தெரிவிக்கின்றன. அவர்களுடைய பாலுறுப்பு நிரந்தரமாகச் செத்துப்

போய் விடுகிறது.

இந்நிலை அவனுடைய மனநிலையை மட்டுமின்றி மனைவியின்

மனநிலையையும் மிக மோசமாகப் பாதித்து விடுகிறது. அது தவிர, ஆணுறுப்பின்

மரணம் என்பது ஆணின் மரணத்தை விரைவாக ஈர்த்துக் கொண்டு வரக்கூடியது.

ஆபாசப் படங்களும், பெண்களும்.

ஆபாசப் படங்களைப் பார்க்கும் பழக்கமுடைய பெண்ணின் மனதிலும் இதே

போன்ற எண்ணங்கள் ஏற்படுகிறது. அவற்றில் காட்டப்படுகின்ற காட்சிகள் பல

முறை எடுக்கப்பட்டு, உரியவற்றை மட்டும் துண்டுகளாக வெட்டி ஒட்டப்

பட்டவை என்கிற தகவல் அவர்களுக்குத் தெரியாது.

அதனால், ஆபாசப்படத்தின் கதாநாயகனைப் போல் தன் கணவனால்

நீண்ட நேரம் இயங்க முடிவதில்லையே, அட, அதில் பாதி நேரம் கூட

வேண்டாம். கால் பங்கு நேரம் கூட இவனால் இயங்க முடிவதில்லையே, என்கிற

ஏக்கம் ஏற்படுகிறது. ஆபாசப் படக் கதாநாயகனின் ஆணுறுப்பு அளவிற்கு

கணவனுடைய ஆணுறுப்பு இல்லையே என்கிற கவலை கூட எழுகிறது.

அதோடு, மற்ற ஆடவர் அனைவரும் தீரர்கள். செயல் வீரர்கள். செயலாற்றல்

மிக்கவர்கள். ஆண்மை யுள்ளவர்கள். ஆபாசப் படக் கதாநாயகனைப் போன்றே

செயல்படும் ஆற்றலுடையவர்கள்.

ஆனால் தன் கணவன் மட்டுமே கையாலாகாதவன். சுயநலமி,

என்றெல்லாம் தன்னுணர்வற்ற நிலையிலே ஒரு கருத்து உருவாகி விடுகிறது.

இது காமம் தொடர்பான கருத்தாக இருப்பதால், எவ்விதத் தடையுமின்றி

நேராக ஆழ்மனதிற் சென்று பதிவாகி விடுகிறது.

அதற்கேற்றாற் போல், பெண்ணின் உடலில் நிகழ வேண்டிய உச்ச கட்ட

இன்பமும் நிகழாத போது கணவனின் மீது ஒரு வகையான குரோத உணர்ச்சி

உருவாகிறது.

கையாலாகாதவனைக் கட்டி வைத்து விட்டார்களே என்கிற சுய பச்சாதாப்

எண்ணம் ஏற்பட்டு இறுதியில் அது ஏக்கமாகவும் ஏமாற்றமாகவும், விரக்தியாகவும்,

கோபமாகவும் வடிவெடுக்கிறது.

அதனால், கணவனோடு பாலுறவில் ஈடுபட மறுக்கிறாள். அவ்வாறு

மறுப்பதால், இரவு நேரக் குடும்ப விவகாரச் சண்டை துவக்கமாகிறது.

அதன் விளைவாக குடும்ப வாழ்க்கை ஒரு போர்க்களமாகிறது. அதன்பின்

எல்லாவகையான கேடுகளும் குடும்பத்தை நோக்கி வரத் துவங்குகின்றன.

ஆகவே, ஆபாசப் படங்களைப் பார்ப்பது நல்ல விளைவுகளை

உருவாக்குவதில்லை என்பதோடு, தீய விளைவுகளை உருவாக்கத்

தவறுவதும் இல்லை.

## **6.** காமமும்**,** கபட வேடமும்

பாலுறவைக் கொச்சைப் படுத்தும் ஒவ்வொரு நபரும் பால் வெறியரே,

ஏனெனில், எதிர்ப்பது வலுக்கும் என்பது உளவியல் விதி.

முதலிரவு தான் துவக்க விழா

குடும்ப வாழ்வில் தம்பதியிடையே பிரச்சினைகள் உருவாவதற்கும்,

சிலர் நிரந்தரமாகப் பிரிந்து விடுவதற்கும் காரணம் என்ன?

ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே திருமணம் நடைபெறுகிறது. அந்த

நிகழ்ச்சி முடிந்தவுடனே அடுத்ததாக நடைபெறக்கூடிய நிகழ்ச்சி முதலிரவு.

அதாவது முதலிரவு தான் குடும்ப வாழ்வின் உண்மையான துவக்க விழா,

துவக்க விழாவின் போது, மணமகனுக்கு ஆண்மையே இல்லை என்கிற

உண்மை அந்த மணமகளுக்குத் தெரிய வந்தாலோ, அல்லது அந்த மணமகள்

ஒரு பெண்ணே அல்ல, திருநங்கை என்கிற உண்மை மணமகனுக்குத் தெரிய

வந்தாலோ, அவர்களுடைய திருமண வாழ்க்கை அந்த விநாடியே முறிந்து

போய் விடும்.

ஏனெனில், அவர்களிடையே முறையான பாலுறவு நிகழவில்லை.

நிகழ்வதற்கான வாய்ப்பும் இல்லை. அதனால் அவர்களிடையே அன்பு

உருவாகவில்லை. அதனால் அவர்களிருவரும் பிரிந்து விடுகின்றனர்.

இதிலிருந்து என்ன தெரிய வருகிறது? பாலின்பம் என்பது

எதிர்பாலினத்தைச் சேர்ந்த இருவரை இணைக்கக் கூடிய பசை. ஆணுக்கும்

பெண்ணுக்கும் இடையே ஆழமான அன்பை உருவாக்கக் கூடிய இரசாயனம்.

ஆகவே பாலுறவு நடைபெறா விட்டால் இருவரும் பிரிந்து விடுவர் என்பது

தெரிகிறதல்லவா?

இதிலிருந்தே பாலுறவு தான் குடும்ப வாழ்க்கைக்கு ஆதாரமாக,

ஆணிவேறாக இருக்கிறது என்பது தெரிய வருகிறதல்லவா?

மேலும் வாழ்க்கையைத் துவக்குவதற்கு மட்டுமல்ல, நிம்மதியாக

தொடர்ந்து

வாழ்வதற்கும் கூட இந்த பாலின்பம் என்கிற பசையும், இரசாயனமும் தேவை.

ஏனெனில், பாலின்பம் இல்லாமல் போனால், இணப்பை ஏற்படுத்தக்கூடிய

பசையின் அடர்த்தி குறைந்து போய் விடும், அன்பை உருவாக்கக் கூடிய

இரசாயனம் நீர்த்துப் போய்விடும்.

எப்போது இணைப்புப் பசை இல்லாமல் போகிறதோ, இரசாயனம் நீர்த்துப்

போகிறதோ, அப்போதே குற்றங் குறைகள் கண்ணுக்குத் தெரியத் தொடங்கி

விடும். குடும்பத்திற்குள் குறை கூறும் படலம் துவங்கும் போதே அன்பு கோமா

நிலைக்குச் சென்று விடும்.

தம்பதியரிடையே, இருக்க வேண்டிய அன்பு கோமா நிலைக்குப் போகும்

போது, அவர்களிடையே சரச சல்லாபங்கள் கூட இருக்காது. எந்தக்

தம்பதியரிடையே சர்ச் சல்லாபங்களுக்குக் கூட இடமில்லையோ அங்கே

சண்டை சச்சரவுகளுக்குப் பஞ்சமேயிருக்காது.

ஆகவே தம்பதியரிடையே நடைபெறக்கூடிய பாலுறவு தான்

அனைத்திற்குமே முழு முதற் காரணமாயிருக்கிறது என்பது தெளிவாகத்

தெரிகிறதல்லவா?

பாலுறவு பௌதீகம் மட்டுமல்ல. இரசாயனமும் கூட.

பாலுறவானது ஆணையும், பெண்ணையும் ஒன்றிணைக்கின்ற ஒரு

இணைப்புப் பசையாகவும், அன்பை உருவாக்குகின்ற இரசாயனமாகவும்,

குடும்ப வாழ்க்கையை நிலையாய் நிறுத்தச் செய்கின்ற ஆணிவேறாகவும்

இருக்கக் காரணம் என்ன?

பாலுறவில் ஈடுபட்டு ஆணும், பெண்ணும் உச்சகட்ட இன்பங்களை

அனுபவிக்கும் போது, அவர்கள் மூளையிலே சில வேதிப்பொருட்கள் சுரக்கின்றன,

அவ்வாறு சுரக்கின்ற அந்த வேதிப் பொருட்களில் ஒன்று. அந்த இன்பத்தை

வழங்கிய நபர் மீது கண் மூடித்தனமான அன்பை உருவாக்கக் கூடியது. அதனால்

பாலுறவில் ஈடுபட்டு உச்ச கட்ட இன்பத்தை அனுபவித்த ஆணுக்கும்

பெண்ணுக்கும் இடையே ஆழ்ந்த அன்பு உருவாகிறது.

அந்த அன்பிற்கு குறை காணவே தெரியாது. குடிப்பது ஒரு குறையல்ல.

அடிப்பது ஒரு குறையல்ல, சம்பாதிக்காதது ஒரு குறையல்ல. வறுமை கூட ஒரு

குறையாகத் தெரியாது. தறுதலைத்தனம் கூட ஒரு வீரச் செயலாகத் தான்

தெரியுமே தவிர, ஒரு குறையாகவே தெரியாது.

ஏறக்குறைய தாயன்பிற்கு இணையான அன்பை அந்த வேதி

உருவாக்குகிறது. தம்பதியரிடையே இப்படிப்பட்ட அன்பு ஏற்பட்டு விடுவதால்,

அவர்களுடைய இல்லற வாழ்க்கை எவ்விதப் பிணக்குகளும் இல்லாமல் நிம்மதி

நிறைந்ததாக, மகிழ்ச்சி மிக்கதாக அமைகிறது.

குடும்ப வாழ்க்கையா**?** போர்க்களமா**?**

தம்பதியர் அனைவரும் பாலுறவில் ஈடுபடத்தானே செய்கிறார்கள்.

அப்படியிருந்தும் அவர்களிடையே பிரச்சினைகளும், பிணக்குகளும்

ஏற்படத்தானே செய்கின்றன?

தம்பதியர் அனைவரும் பாலுறவில் ஈடுபடுகிறார்களே தவிர, பாலின்டங்களை

அவர்கள் முழுமையாக அனுபவிப்பதில்லை. குறிப்பாக, மனைவிக்குரிய உச்ச

கட்ட இன்பங்களை கணவர்கள் வழங்குவதேயில்லை,

பெரும்பாலான கணவர்கள் தங்கள் மனைவியை, தங்களுக்குரிய

இன்பத்தைத் தரக்கூடிய ஒரு போகப் பொருளாகவே பயன்படுத்திக்

கொண்டிருக்கிறார்கள். ஆகவே, பாலுறவென்பது ஆண்களின் சுய நலம்

சார்ந்ததாகவே இருக்கிறது.

இவ்வாறு தன் மனைவியை ஒரு போகப் பொருளாகப் பயன்படுத்திக் கொண்டு, மனைவிக்குரிய இன்பங்களை வழங்க கணவன் தவறிக் கொண்டிருக்கிற காரணத்தால், குடும்ப வாழ்வில் தம்பதியரிடையே ஆரோக்யமான பாலுறவு நிகழ்வதில்லை.

அதனால், அவர்களிடையே ஆழ்ந்த அன்பை உருவாக்கக் கூடிய வேதிப்பொருள் அவர்கள் மூளையில் சுரப்பதில்லை, ஆகவே அவர்களிடையே

ஆழ்ந்த அன்பு ஏற்படுவதில்லை.

ஆழ்ந்த அன்பு ஏற்படாத காரணத்தால், அவர்கள் கண்களுக்கு எதைப் பார்த்தாலும் குறையாகவே தெரிகிறது. குறை தெரிவதால், ஒருவரையொருவர்

குற்றஞ் சொல்லத் தொடங்குகிறார்கள். அந்தக் குற்றச் சாட்டுகளால், வாக்குவாதங்கள் ஏற்படுகிறது. அவரவர் அவரவரை நியாயப் படுத்திக் கொள்கிறார்கள். அதனால், வாய்ச் சண்டை மூள்கிறது. முடிவில் அது பெரும்

சண்டையாக, தொடர் சண்டையாக மாறி விடுகிறது.

எப்போதுமே எதிரிகளாக இருப்பதும், ஒரு இடைவேளை போல அவ்வப்போது மகிழ்ச்சியாய் இருப்பதும் மட்டுமே வாழும் வழிமுறையாய்

மாறிவிடுகிறது. அதனால், குடும்ப வாழ்க்கை நிம்மதியற்றதாக ஆகிவிடுகிறது.

ஆகவே, போகப் பொருளாக மனைவியை பயன் படுத்திக் கொண்டிருப்பது

தான் குடும்ப வாழ்க்கை போர்க்களமாக மாறிப் போவதற்கான முழு முதற் காரணம்.

ஆணின் அறியாமையும், ஆதிக்க உணர்வும்.

ஒரு கணவன் தன் மனைவியை ஒரு போகப் பொருளாகப் பயன்படுத்திக் கொண்டு, மனைவிக்குரிய இன்பங்களை வழங்க தவறிக் கொண்டிருப்பதற்கான காரணம் என்ன?

முதற் காரணம் பாலியல் அறியாமை. அதாவது, பல்லாயிரக்கணக்கான ஆ ண்டுகளாக ஆண்கள் தங்கள் மனைவியை அடிமையாகவே நடத்தி

வந்திருக்கிறார்கள், மனைவி என்பவள் கணவனின் அடிமை. அவனுக்குரிய

இன்பத்தை மட்டும் வழங்கக் கடமைப்பட்டவள். அவளுக்கென்று எவ்வித

இன்பங்களும் கிடையாது. அதனால் எதுவும் வழங்கப் பட மாட்டாது.

ஆயினும் அவள் தன்னுடைய கணவன் கேட்கும் போதெல்லாம்

அவனுக்குரிய இன்பத்தை வழங்க வேண்டும், மறுப்பது ஒரு தண்டனைக்குரிய

குற்றச் செயல்.

மேலும் அவள் தனக்குரிய இன்பத்தை வெளியில் சென்றும் அவ்வளவு

எளிதில் பெற்று விட முடியாது, சமூகக் கட்டுப்பாடு மட்டுமன்றி கற்புக்

கவசங்களால் கூட அவர்கள் கட்டுப் படுத்தப் பட்டிருந்தார்கள்.

ஆனால், பெண்கள் இப்போது தங்களுக்குரிய உரிமைகளில்

பெரும்பாலானவற்றைப் பெற்று விட்டார்கள், இன்றைய பெண்ணால் தன்

கணவனுக்குரிய இன்பத்தை வழங்க மறுக்க முடியும்.

அது அவளுடைய பிறப்புரிமை. இப்போது அவள் அந்த உரிமையைப்

பெற்று விட்டாள். ஆனால், ஆண்கள் மட்டும் இன்னும் மாறவில்லை. இன்னும்

அந்தக் காலத்திலேயே இருக்கிறார்கள்.

மனைவியை ஒரு போகப்பொருளாகப் பாவிக்கின்ற போக்கு இன்னும்

மாறவில்லை. பல்லாயிரமாண்டு காலப் பழக்கம் காரணமாக அது ஆணின்

மரபணுவிலேயே இடம் பிடித்து விட்டது. அதனால் பெண்ணுக்கும் இன்பங்கள்

உண்டு. அவற்றை வழங்க வேண்டியது அவளுடைய கணவனின் முதற்கடமை

என்கிற எண்ணம் இன்னும் ஆண்களுக்கு வரவில்லை.

அதனால், பெண்ணுக்குரிய இன்பங்கள் எவை? அவற்றை வழங்குவது

எப்படி? என்பதைப் பற்றிக் கற்றுக் கொள்ள வேண்டும் என்கிற எண்ணமும்

அவர்களுக்கு ஏற்படவில்லை,

இந்த அறியாமை தான் மனைவியை ஒரு போகப்பொருளாகக் கணவன் பயன்படுத்திக் கொண்டிருப்பதற்கான முதற்காரணமாகும்.

அடுத்தது வெட்கம். அதாவது சில ஆண்கள் தங்கள் மனைவிக்குரிய இன்பங்களை வழங்க மனதார விரும்புகிறார்கள். அனால், அதை வழங்குவதற்குரிய வழி தெரியாமல், தடுமாறுகிறார்கள். அதைப் பற்றி அடுத்தவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள வெட்கப்படுகிறார்கள். பெண்ணுக்குரிய பாலின்பங்கள் எவை? அவற்றை வழங்குவது எப்படி? என்பதை மற்றவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்வது தங்களுடைய ஆண்மைக்கு இழுக்கு எனக் கருதுகிறார்கள். மனைவியை ஒரு போகப்பொருளாகக் கண வன் பயன்படுத்திக் கொண்டிருப்பதற்கான இரண்டாவது காரணம் இந்த வெட்கம்.

மூன்றாவது காரணம் ஆணாதிக்கச் சிந்தனை. பெண்ணின்

உடலமைப்பைப் பற்றி, பெண்ணின் மனம் செயல்படும் விதத்தைப் பற்றி,

பெண்ணின் மனதிற்கும் பாலின்பத்திற்கும் இடையே உள்ள ஆழமான

தொடர்பைப் பற்றியெல்லாம் கல்லூரியில் சென்று, பல்லாண்டுகள் படித்து விட்டு,

அதன்பின், திருமணம் செய்து கொண்டதைப் போல் பல ஆண்கள் தங்களைப்

பற்றிக் கருதிக் கொண்டிருக்கிறார்கள்.

ஆணாகப் பிறந்து விட்ட காரணத்தாலேயே, பெண்ணைப் பற்றி அனைத்தும்

தெரியும் என்று பல ஆண்கள் கருதிக் கொண்டிருக்கிறார்கள்.

பெண்ணுறுப்பின் வெளிப்புற வடிவத்தைத் தவிர, வேறு எதுவுமே தெரியாத

நிலையில் தான் பெரும்பாலான ஆண்கள் இருக்கிறார்கள். ஆனால், எல்லாம்

தெரிந்த மாதிரி நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

மேலும் அவர்களைப் பொறுத்த வரை, பாலறிவை வளர்க்கக் கூடிய ஒரே

சாதனம் ஆபாசப் படங்கள் மட்டுமே. ஆபாசப் படங்களைப் பார்த்து அதை

உண்மை என்று நம்பிக் கொண்டிருக்கிறார்கள்.

அதாவது திரைப்படங்களைப் பார்க்கிற குழந்தைகள் அதில் வருபவை

அனைத்தும் உண்மை என்று நம்புவதைப் போலவே, ஆபாசப் படங்களில்

காட்டப் படுபவை அனைத்தும் உண்மை என்று திருமணமான பல ஆ எண்கள்

நம்பிக் கொண்டிருக்கிறார்கள். அதனால், ஆபாசப்யங்களில் காட்டப்படுவதைப்போலவே பாலுறவில் ஈடுபடுகிறார்கள்,

ஆனால், ஆபாசப் படங்களில் காட்டப் படுவதைப் போல், பாலுறவில்

ஈடுபட்டால் எந்தக் கொம்பனாலும் மனைவிக்குரிய உச்சகட்ட இன்பங்களை

வழங்க முடியாது. அதனால், மனைவிக்குரிய உச்சகட்ட இன்பம் வாழ்வில் ஒரு

முறை கூட நிகழ்வதில்லை.

பாலுறவு என்பது உடலையும் மனதையும் ஒருங்கே பயன்படுத்தி

விளையாடக் கூடிய ஒரு விளையாட்டு. எந்தவொரு விளையாட்டில்

ஈடுபடுவதற்கும் குறிப்பிட்ட பயிற்சிகள் உள்ளதைப் போன்றே பாலுறவு

விளையாட்டில் ஈடுபடுவதற்கும் சில பயிற்சிகள் உள்ளன.

ஆனால், பெரும்பாலான ஆண்கள் அந்தப் பயிற்சிகளைப் பற்றி எதுவும்

அறியாதவர்களாகவே இருக்கிறார்கள்,

மேற்கண்ட காரணங்களால் தான், பல ஆண்கள் மனைவிக்குரிய

இன்பங்களை வழங்காததோடு, தங்களுக்குரிய இன்பத்தை தருகின்ற போகப்

பொருளாக மனைவியைப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்கள்.

பாலுறவு அசிங்கமானது. அருவருப்பானது, அற்பத்தனமான

இன்பத்தை தரக்கூடியது. பாவகரமானது. மிருகத்தனமான து.

இனப்பெருக்கத்திற்கு மட்டுமே பயன்படுத்தப்பட வேண்டியது. உடல்

நலத்தைப் பாதிக்கக் கூடியது. என்றெல்லாம் பல்வேறு கருத்துக்கள்

கூறப்படுகிறதே?

இவ்வாறெல்லாம் பாலுறவு பற்றிய கருத்துடையவர் ஒன்று

கடைந்தெடுத்த

முட்டாளாக இருக்க வேண்டும். அல்லது திட்டமிட்டு மனித சமூகத்தைத்

தவறாக வழி நடத்துபவராக இருக்க வேண்டும்.

ஏனெனில் இவர் தன்னுடைய பிறப்பையே அவமதிக்கிறார். தான் உருவாகக்

காரணமாக இருந்த ஒரு இயற்கைச் சக்தியையே பழித்துரைக்கிறார்.

இது எவ்வாறு என்பதை நாம் தெளிவாக ஆராய்ந்து பார்ப்போம். பாலுறவு

அசிங்கமானது என்கிற கருத்து எதனால் உருவாகிறது? பாலுறவில் ஈடுபடக்

கூடிய உறுப்புக்கள் கழிவுறுப்புக்களாகவும் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன.

அதனால் தான் பாலுறவு அசிங்கமானது என்கிற கருத்து உருவாகிறது.

ஆனால், இங்கேயுள்ள முக்கியமான உண்மை என்னவென்றால், பாலுறவில்

ஈடுபடக்கூடிய உறுப்புக்கள் கழிவுறுப்புக்களாக இருந்தாலும் அதனால்

ஏற்படக்கூடிய இன்பத்தை உணர்வது மூளை,

ஆகவே பாலின்பம் என்பது மூளை சார்ந்ததே ஒழிய கழிவுறுப்புக்கள்

சார்ந்தது அல்ல,

மேலும் பாலுறவில் ஈடுபடத் தெரியாதவர்கள் தான் கழிவுறுப்புக்களைக்

கொண்டு மட்டுமே விளையாடக் கூடியவர்கள். பாலியல் ஞானமுடையவர்களைப்

பொறுத்தவரை, உடல் முழுவதுமே பாலுறுப்பு தான்.

ஆகவே பாலுறவு அசிங்கமானது என்று கூறினால் மொத்த உடலும்

அசிங்கமானது என்று பொருளாகிறது. கடவுள் அசிங்கமான எதையும் படைக்கக்

கூடியவரல்ல. ஆகவே பாலுறவு அசிங்கமானது என்கிற கருத்து

முட்டாள்தனமானது மட்டுமன்றி கடவுளுக்கும் எதிரானது.

மேலும், இந்த உலகிலேயே உயிர் தான் விலை மதிப்பற்றது. அந்த

உயிரானது பாலுறவு மூலமாகத் தான் உருவாகிறது. உருவாகிக்

கொண்டுமிருக்கிறது. உலகம் உள்ள வரை இதை யாராலும் மாற்ற

முடியாது.

ஆகவே விலைமதிப்பற்ற உயிர் உருவாக ஒரு அசிங்கமான செயலையா

கடவுள் தேர்ந்தெடுத்திருப்பார்?

பாலுறவு அருவருப்பானது.

அருவருப்பு என்பது அவரவர் மனம் சார்ந்தது. மலம் அருவருப்பானது. சிறு

நீர் அருவருப்பானது. உமிழ் நீர் அருவருப்பானது. வியர்வை அருவருப்பானது.

மனித வாடை அருவருப்பானது. கண்ணீர் அருவருப்பானது. காயங்கள்

அருவருப்பானது.

புண் அருவருப்பானது. சளி அருவருப்பானது. உடலுக்குள் சுரக்கும்

திரவங்கள் அருவருப்பானது. மூளை அருவருப்பானது என்று சொல்லிக்

கொண்டே சென்றால் கடைசியில் முழு மனித உடலும் அருவருப்பானது என்கிற

முடிவிற்குத் தான் வர வேண்டியிருக்கும்.

உலகில் உள்ள உயிரினங்கள் அனைத்தையும் அடக்கியாளும்

திறமையுடைய உயிரினமான மனித இனத்தை கடவுள் அருவருப்புடையதாகப்

படைத்திருப்பார் என்பதை நம்ப முடியவில்லை,

ஆகவே பாலுறவு என்பது அருவருப்பானது என்கிற கருத்து முற்றிலும்

தவறான கருத்து என்பது தெள்ளத் தெளிவாகத் தெரிகிறது.

பாலுறவு அற்பத்தனமான இன்பத்தை தரக்கூடியது.

பாலுறவில் ஈடுபடும் போது உடலில் உள்ள ஐந்து புலன்களுமே இன்பத்தை

அனுபவிக்கின்றன. உச்சந்தலை முதல், கால் விரல் நுனி வரையில் உள்ள

ஒவ்வொரு உயிரணுவும் இந்த இன்பத்தை அனுபவிக்கிறது. இதற்கு இணையாக

மனித உடலுக்கு இன்பத்தை அளிக்கின்ற சக்தி எந்தவொரு செயலுக்கும்

இல்லை என்பது அனைவரும் அறிந்துள்ள இரகசியம்.

ஆகவே, ஐந்து புலன்களுக்கு மட்டுமின்றி, உடலில் உள்ள ஒவ்வொரு

உயிரணுவுக்கும் இன்பத்தைத் தருகிற ஒரு செயல் அற்பத்தனமான

இன்பமெனில், வேறு எது புனிதமான இன்பம் என்று கேள்வி எழுகிறது.

ஆகவே பாலுறவு என்பது ஒரு அற்பத்தனமான இன்பத்தை தரக்கூடியது

என்று சொல்வது தவறானது.

பாலுறவு பாவகரமானது.

மனித சமூகம் உருவான நாள்முதலாக பல்வேறு செயல்களைப் பாவச்

செயல்கள் என்று ஒரு சிலர் சொல்லி வந்திருக்கிறார்கள். அதை ஒட்டு மொத்த

சமூகமும் கேள்வியின்றி ஏற்றுக் கொண்டிருக்கிறது. அவற்றில் சிலவற்றை ஆய்வு

செய்வதன் மூலமாக பாலுறவு பாவகரமானதா என்பதைப் பற்றிப் புரிந்து

கொள்ள முயற்சிக்கலாம்.

பெண்கள் மாதவிடாய் அடைதல் என்பது ஒரு இயற்கை நிகழ்வு.

சொல்லப்போனால் அது ஒரு சுப நிகழ்வும் கூட. ஏனெனில், மாதவிடாய்

அடையும் பெண் தான், மனித உயிரினத்தைத் தளைக்கச் செய்கிற தேவதை.

அந்த தேவதைகள் இப்போது மாதவிடாய் அடைவதைப் போன்றே தான் இருபது.

வருடங்களுக்கு முன்னாலும் மாதவிடாயானார்கள்.

ஆனால் அப்போது மாதவிடாய் அடையும் பெண் வீட்டிற்குள் நுழையக்

கூடாது. நுழைந்தாலும் ஏதோ ஒரு மூலையில் தான் ஒதுங்கி இருக்க வேண்டும்.

அவளுக்கென்று தனியாக ஒரு உணவுத் தட்டும், தண்ணீர்க் குவளையும்

கொடுக்கப்பட்டு விடும்.

அதைத் தவிர வேறு பொருளை அவள் தொடக்கூடாது. தொட்டால் அது

ஒரு பாவச் செயல். அந்தப் பொருள் தீட்டுப்பட்டு விடும். மேலும் தன் குழந்தையைக் கூட அவள் தொடக்கூடாது என்று சொல்லி பெண்ணை ஒடுக்கி வைத்திருந்தார்கள். ஆனால், இப்போது என்ன நடக்கிறது? இப்போதும் அத்தனை பெண்களும் அவரவர் பருவத்தில் தவறாமல் மாதவிடாய் அடைகிறார்கள். ஆனால், மாதத்தின் முப்பது நாட்களும் தவறாமல்

கடவுளின் முன் பெண் விளக்கேற்றுகிறாள். ஆனால் எந்தப் பெண்ணுக்கும்

எந்தத் தண்டனையும் வழங்கப்படவில்லையே?

அதாவது எந்தப்பெண்ணும் இப்போது தன் மாத விடாய் நேரத்தில் ஒடுங்கி

நிற்பதில்லை. அனைவருடனும் ஒன்றிணைந்து தான் செயலாற்றுகிறாள். அது ஒரு

பாவச் செயலாக இருந்திருக்குமானால், பெண்கள் தண்டிக்கப்பட

வேண்டுமல்லவா? ஆனால், யாரும் இதுவரை இந்தச் செயலுக்க்க தண்டிக்கப்

பட்டதில்லை. இதிலிருந்து என்ன தெரிகிறது?

மாதவிடாய் அடையும் போது பெண் அடுத்தவர்களோடு ஒருங்கிணைந்து

செயலாற்றுதல் பாவச்செயல் என்று சொல்லப்பட்ட கருத்து தவறானது. திட்டமிட்டு

பெண்களின் மீது நடத்தப்பட்ட அடக்குமுறை என்பது புரிகிறதல்லவா?

அதேபோல பாவச்செயல் என்று சொல்லப்பட்டு பெண்களால் இப்போது

தகர்த்தெரியப்பட்டுள்ள இனி யொரு செயலும் இருக்கிறது. அதாவது

ஐம்பதாண்டுகளுக்கு முன் பெண்களுக்கு பத்து வயதிற்குள்ளேயே திருமணமாகி

விடும். அவ்வாறு திருமணமான பெண்ணின் கணவன் விளையாடிய இடத்தில்

பாம்பு கடித்தோ, அல்லது பள்ளத்தில் வந்த திடீர் மழைத் தண்ணீரில்

விழுந்தோ செத்துப் போவான்,

அவனும் ஒரு சிறுவனே. அவனுக்கும் பத்தோ பன்னிரெண்டோ வயது தான்

ஆகியிருக்கும். அந்த சிறுவன் செத்துப் போனபின் அவனுடைய மனைவியான்

அந்த பத்து வயதுப் பெண்குழந்தை விதவையாகி விடுவாள்.

அதன் பின், அவள் பொட்டு வைக்கக் கூடாது. பூ வைக்கக்கூடாது.

அணிகலங்கள் அணியக் கூடாது. வண்ண ஆடைகளை உடுத்தக்கூடாது.

அடுத்தவர் எதிரில் வரக்கூடாது. தன்னை நோக்கி ஆண்களை ஈர்க்கிற வகையில்

அவள் எந்தக் காரியத்தையும் செய்யக்கூடாது. செய்தால் அது பாவச் செயல்.

அதாவது பாவச் செயல் என்கிற பெயரில் பெண்களின் மீது சுமத்தப்பட்ட

அடக்கு முறைகளிலேயே இது தான் மிகவும் கொடூரமானது. ஆனால் இப்போது

என்ன நடக்கிறது? இப்போதும் ஒருசில பெண்களின் கணவன் இள்

வயதிலேயே இறப்பது நடக்கத் தான் செய்கிறது. ஆனால் பெண் என்ன

செய்கிறாள்?

கணவன் இறந்த சில மாதங்களிலோ அல்லது வருடங்களிலோ பெண்

மறுமணம் செய்து கொள்கிறாள். மறுமணம் செய்யாத சிலர் ஒரு ஆணுடன்

சேர்ந்து வாழ்கிறார்கள். அவ்வாறு சேர்ந்தும் வாழாத சிலர் யாரேனும் ஒரு ஆணுடன்

தொடர்பிலிருக்கிறார்கள், இந்த மூன்று வகையிலும் சேராமல், தனித்து வாழும்

பெண்களும் இருக்கத்தான் செய்கிறார்கள்,

அதாவது, அவர்கள் வளர்ந்த மற்றும் வாழ்ந்து கொண்டிருக்கும்

குடும்பங்களின் கலாச்சார பிண்ணனியால் தளையுண்டிருப்பவர்கள், மற்றும்

வளர்ந்த நிலையில் குழந்தைகளைக் கொண்டிருக்கும் சிலர் தனிமை வாழ்க்கையை

வாழத்தான் செய்கிறார்கள், எனினும், அவர்களும் பிற பெண்களைப் போன்று

அதாவது சுமங்கலிகளைப் போன்று தான் காட்சியளிக்கிறார்கள்,

இவ்வாறு மறுமணம் செய்து கொண்டதற்காகவோ, சுமங்கலிக் கோலத்தில்

காட்சியளிப்பதற்காகவோ எந்தப் பெண்ணும் தண்டிக்கப்பட்டதில்லையே.

பாவச்செயலாக இருந்திருந்தால் பெண்கள் தண்டிக்கப் பட்டிருக்க

வேண்டுமல்லவா?

இதே போலத் தான் பாலுறவு ஒரு பாவச் செயல் என்று கூறுகிறார்கள்.

இன்னும் சில ஆண்டுகளில் இதுவும் தகர்க்கப்பட்டு விடும். இதற்காக யாரும்

போராடக்கூடத் தேவையில்லை. இந்தத் தகர்ப்பு வேலையை இன்றைய நவீன

மருத்துவ அறிவியலே முன்னின்று முடித்து வைக்கும்.

அதாவது இன்றைய நவீன மருத்துவ அறிவியலைப் பொறுத்த வரை,

பாலின்பம் என்பது ஒரு இன்பச் செயல் அல்ல.

அது மனிதனின் உடல் நலத்தை மட்டுமின்றி மனநலத்தையும் சிறப்பான

முறையில் பேணக்கூடிய மருத்துவ குணம் கொண்டது. ஆகவே தினமும்

பாலுறவில் ஈடுபடுவது மிகவும் நல்லது.

அதாவது, தவறாமல் பல் துலக்குவதைப் போல் பாலுறவில் ஈடுபடுவதும்

தினசரி நடவடிக்கைகளில் ஒன்றாக இருக்கட்டும் என்று இன்றைய நவீன

மருத்துவ அறிவியல் தனது பிரச்சாரத்தைத் துவங்கி விட்டது. ஆகவே பாலுறவு

என்பது ஒரு பாவச் செயல் என்கிற கருத்து மிகவும் தவறானது.

மேலும், பெரும்பாலான கடவுள்கள் இல்லறவாசிகளாகவே

வாழ்ந்திருக்கிறார்கள். முடியாட்சிக் காலத்தில் ஒவ்வொரு அரசனும் பல

மனைவிகளோடு வாழ்ந்திருக்கிறான். பாலுறவு பாவகரமானது என்று சொல்லக்

கூடியவர்கள் அரசர்களிடம் அதைக் கூறாததற்குக் காரணம் என்ன?

ஆகவே பாலுறவு பாவகரமானது என்று சொல்பவர்கள் கடைந்தெடுத்த

கபட வேடதாரிகள், மேலும் பாவச் செயல் என்று கூறுபவர்கள் தான்

பாவகரமானவர்கள். ஏனெனில், அவர்கள் தான் பாவச் செயல் என்று நம்பியபடியே

பாலுறவிலும் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

ஆகவே பாலுறவு என்பது பாவச் செயல் அல்லவே அல்ல.

பாலுறவு பாவகரமானது என்று யாரேனும் ஒரு ஞானி கூறினால் அதைக்

கடுகளவும் நம்பாதீர்கள். அந்த மனிதர் ஞானமடையாதவர் என்பதற்கே இது

தான் அடையாளம்,

ஏனெனில், பிரபஞ்சம் அனைத்தும் கடவுளின் அம்சம். முழுமையானது.

இதில் நல்லவை என்றும் தீயவையென்றும் இரண்டு விசயங்கள் இல்லை.

மனதின் இருமை நிலையே, இருமை இயல்பே ஆன்மீக அறியாம்ை. அனைத்தும்

ஒன்றே என்று உணர்வது தான் ஞானம்,

இருமை நிலையிலிருந்து ஒருமை நிலையை அடைவது தான் ஞானம்.

பாவகரமானவை என்றும், புண்ணியகரமானவை என்றும் பிரித்துப் பார்ப்பதே

ஆன்மீக நிலைக்கு எதிரானது. அனைத்தும் கடவுளின் படைப்பே, ஆகவே

கடவுளின் படையில் எந்தத் தவறும் இருக்க முடியாது என்பதை உணர்வதே

ஆன்மீகப் பயணத்தின் அரிச்சுவடி.

மிருகத்தனமானது.

பாலுறவை இனப்பெருக்கத்துக்கு மட்டுமே மிருகங்கள் பயன்படுத்துகின்றன.

அதனால் தான் அவை மிருகங்களாகவே இருக்கின்றன. ஆனால், பாலுறவை.

இன்பச் செயலாகவும் பயன்படுத்தும் மனிதன் தான் மனிதனாக இருக்கிறான்.

உயிரினங்களின் தலைவனாகவும் இருக்கிறான்,

உயிரினங்களிலேயே மிகப்பெரிய உருவத்தைக் கொண்டது திமிங்கலம். ஒரு

நாளில் ஐந்து டன் எடையுள்ள மீன்களை அது உணவாக விழுங்குகிறது.

அதனுடைய பாலுறுப்பின் எடை மட்டும் அரை டன் எடையுடையது.

ஆனால் அதன் பாலுறுப்பின் எடையில் பத்தில் ஒரு பங்கு எடை கூட

இல்லாத இல்லாத ஜப்பானியன், துரத்தித் துரத்தி திமிங்கலத்தை

வேட்டையாடுகிறான். அவ்வளவு பெரிய ஜீவன் ஒளிந்து கொள்ள இடமில்லாமல்

கடலிலே தத்தளித்துக் கொண்டிருக்கிறது.

மனித அறிவின் முன், திமிங்கலத்தின் அசுர பலம் தோற்றுப் போய்

விட்டது. இதற்குக் காரணம் என்ன? மனிதனின் அறிவு இந்த அளவிற்கு

வளர்ச்சியடையக் காரணம் என்ன?

ஒரே காரணம் பாலின்பம். பாலுறவில் அடிக்கடி ஈடுபடும் உயிரினம் மனித

இனம். அவ்வாறு அடிக்கடி ஈடுபடும் போது பால் சார்ந்த உச்சகட்ட இன்பங்கள்

முளையில் நிகழ்கிறது. அவ்வாறு இன்பம் நிகழும் போது, மூளையில் சில

வேதிப்பொருட்கள் சுரக்கின்றன.

அந்த வேதிப்பொருட்களில் ஒன்று நுண்ணறிவை உருவாக்கக் கூடியது.

அந்த நுண்ணறிவு தான் மற்ற உயிரினங்கள் அனைத்தையும் விட உயர்வான

இடத்தில் மனித இனத்தை வைத்திருக்கிறது.

நெப்போலியன் ஹில் சொல்கிறார். செக்ஸ் உணர்வு புனிதமானது.

அபரிமிதமான செக்ஸ் உணர்வு இருப்பது ஒரு வரம். ஏனெனில் அபரிமித செக்ஸ்

உணர்வு இருப்பவர்கள் தான் மகா வெற்றியாளர்களாக உருவாகிறார்கள்.

காதலும், சரசமும், செக்சும் தான் ஒரு நபர் ஜீனியஸ் ஆவதற்கான

படிக்கட்டுகள். இதைத்தவிர, ஒரு மனிதன் ஜீனியஸ் ஆவதற்கு வேறெந்த

குறுக்கு வழியும் இல்லவே இல்லை.

மேலும், உலகம் தோன்றிய நாள் முதலாக, செக்ஸ் உணர்வைப்

பயன்படுத்தாமல், ஒரு பேரரசனோ, பெருந்தலைவனோ, கலைஞனோ,

கவிஞனோ உருவானதேயில்லை. இனி மேலும் உருவாகவும் முடியாது.

மனித வரலாற்றை ஆழமாக ஆராய்வதன் வாயிலாகவும் நாம் மேற்கண்ட

உண்மையை உணர்ந்து கொள்ளலாம். பாலுறவில் அதிகமாக ஈடுபடும் இனம்

தான் இது வரை உலகம் முழுவதையும் ஆட்சி செய்திருக்கிறது.

ஆயிரத்து ஐநூறு ஆண்டுகளுக்கு முன் வரை, இந்தியா தான் உலகின்

அரசனாக இருந்திருக்கிறது. அப்போது இந்தியா பாலுறவிற்கு ஆதரவான

மனநிலையில் இருந்திருக்கிறது.

காமத்திற்கு சூத்திரம் எழுதிய காலமும் சரி, கஜுராகோ கோவிலின்

சிற்பங்களை உருவாக்கிய காலமும் சரி இந்திய பூமியின் பொற்காலமாக

இருந்திருக்கிறது.

இப்போது அமெரிக்கா தான் உலகின் பெரியண்ணனாக இருந்து

கொண்டிருக்கிறது. மேற்கத்திய நாடுகளே வளமாக வாழ்ந்து கொண்டிருக்கின்றன.

அதற்கான ஒரே காரணம் அந்த நாடுகள் பாலின்பத்திற்கு ஆதரவான

நிலைப்பாட்டைக் கொண்டிருக்கின்றன,

பாலுறவு விவகாரத்தில் அவை கபட நாடகம் ஆடுவதில்லை.

பிரெஞ்சுக்காரர்கள் தான் உலகில் நீண்ட நாள் நோய் நொடியின்றி உயிர்

வாழ்கிறார்கள். ஏனெனில் அவர்கள் தான் உலகிலேயே அதிக அளவில் பாலுறவில்

ஈடுபடுபவர்களாக இருக்கிறார்கள்.

மிருகங்கள் மட்டுமே இனப்பெருக்கத்துக்காக மட்டுமே பாலுறவில்

ஈடுபடுகின்றன. அதனால் அவற்றின் மூளையில் நுண்ணறிவை உருவாக்கும்

வேதிகள் எப்போதோ ஒரு முறை தான் சுரக்கின்றன. அதனால், அவற்றின் அறிவு

வேகமாக வளரவில்லை. தொடர்ந்து மிருகங்களாகவே இருக்கின்றன,

அதே போல் மனிதனும் இனப்பெருக்கத்துக்கு மட்டுமே பாலுறவைப்

பயன்படுத்தினால், மனித இனமும் மிருக இனமாக மாற்றமடைந்து விடும்,

மனநிலை சீரழிந்து, அத்தனை பேரும் மிருகங்களாக மாறி விடுவார்கள். அதன்

பின் சமூக ஒழுங்கோ சட்ட ஆட்சியோ இருக்கவே இருக்காது.

ஆகவே மனிதனின் மனநிலையைச் சிறப்பாக வைத்திருக்க உதவக்கூடிய

பாலுணர்வு மிருகத்தனமான இச்சை அல்ல.

உடல் நலத்தைப் பாதிக்கக் கூடியது.

விந்து விட்டவன் நொந்து கெட்டான் என்கிற பழமொழி சரியான பழமொழி

தான், ஆனால், அதற்கு முன்னால் இருந்த இரண்டு வார்த்தைகள் தவற

விடப்பட்டு விட்டன.

திருத்தப்பட்ட பழமொழி இது தான், கண்ட இடத்தில் விந்து விட்டவன்

நொந்து கெட்டான் என்பது தான் சரியான பழமொழி மேலும், ஒரு தார்.

வாழ்வில் விந்து விடாதவன் தான் பிராஸ்டேட் சுரப்பியில் புற்று நோய் வந்து

அற்ப ஆயுளில் செத்துப் போவான் என்பதே இன்றைய அறிவியல் நமக்கு

வழங்குகின்ற புது மொழி.

பாலுறவால் நிகழக் கூடிய நன்மைகளின் பட்டியல்.

பாலுறவால் ஏற்படக் கூடிய நன்மைகள் எண்ணற்றவை. அவற்றின் பட்டியல்

நூலின் வேறொரு இடத்தில் இடம் பெற்றுள்ளது. பாலுறவு உடல்நலத்தைப்

பாதிக்கக் கூடியது என்கிற கருத்தைச் சொல்வோர் இதைப் போன்ற ஒரு

பட்டியலை அளிக்க முடியுமா?

ஆகவே, பாலுறவு அசிங்கமானதோ, அருவருப்பானதோ,

பாவகரமானதோ அல்லவே அல்ல. அது இயற்கையால் மனித இனத்துக்கு

வழங்கப் பட்டுள்ள ஒரு கொடை,

**7.** நவீன காலத்திற்கேற்ற திருமண விதிகள்

“மனைவி அமைவதெல்லாம் இறைவன் கொடுத்த வரம் தாரம் மாணாதது

வாழ்க்கை அன்று.” ஏறுக்கு மாறாக மனைவி இருப்பாளேயானால் கூசாமல்

சன்னியாசம் கொள்,” மனைவியைத் தெரிவு செய்வதில் தவறு செய்பவன் தன்

மரணத்தை விரைவுபடுத்துவதில் வெற்றி பெறுகிறான்.” உள்ளதென் இல்லவள்

மாணாக்கடை?” “ஒரு ஆணின் வெற்றி தோல்விகள் அவனுடைய மனைவியின்

அறிவைப் பொறுத்தது.” மனைவியால் தன் கணவனை உருவாக்கவும் முடியும்.

அழித்தொழிக்கவும் முடியும்.” ஆவதும் பெண்ணாலே, அழிவதும்

பெண்ணாலே.” இவையெல்லாம் பேரறிஞர்களால் கூறப்பட்டவை.

திருமணம் என்பது ஆயிரங்காலத்துப் பயிர்.

திருமணம் என்பது ஒரு நிறுவனம். ஒரு குடும்பத்திற்கு உள்ள அத்தனை
நிறுவனங்களையும் நிர்வகிக்கக் கூடிய தலைமை நிறுவனம். ஆகவே தலைமை
நிறுவனமான திருமண நிறுவனம் முறையாக இயங்கிக் கொண்டிருந்தால் தான்,
குடும்பத்திற்குள்ள பிற நிறுவனங்களும் சிறப்பாகச் செயல்பட முடியும்.

திருமண இணை என்பவர் ஒரு குடும்பத்திற்குள்ள அத்தனை
நிறுவனங்களையும் நிர்வகிக்கும் சக்தி வாய்ந்த திருமண நிறுவனத்தின்
இயக்குனராகப் பொறுப்பேற்கக் கூடியவர். நிறுவனத்தின் முதன்மையான
இயக்குனரையும் இயக்கக் கூடியவர்.

திருமண இணை என்பவர் ஒரு கடைநிலை ஊழியராகப் பணிக்குச் சேர்பவர்
அல்ல, அவர் தலைமை நிர்வாகி. இருபாலருக்கும் இது பொருந்தும்,
எடுத்த எடுப்பில் நேரிடையாக குடும்பத்திற்குள்ள அத்தனை
நிறுவனங்களையும் நிர்வகிக்கும் ஆற்றல் வாய்ந்த திருமண நிறுவனத்தின்
இயக்குனராகப் பதவியேற்கக் கூடியவர்.

அவருடைய ஒவ்வொரு செயலும் குடும்பத்திற்குள்ள ஒவ்வொரு
நிறுவனத்திலும் தாக்கத்தை ஏற்படுத்தக் கூடியது. அதோடு அவரைப்
பதவியிறக்கமும் செய்ய முடியாது.

அதுமட்டுமல்ல, குடும்பத்திற்குள்ள சமூக மதிப்பு, குழந்தைகளின்
எதிர்காலம், உடல்நலம் மற்றும் ஆயுட்காலம் என அனைத்தையும் நிர்ணயிக்கும்
சக்தி உடையவர்.

திருமணத்தை ஆயிரங்காலத்துப் பயிர் என்று நம் முன்னோர்கள்
சொல்வார்கள். அது உண்மையான தகவல்.

ஏனெனில், சொல்லிக் கொடுப்பதை வைத்து எந்தக் குழந்தையும்
வளர்வதில்லை. குடும்ப வாழ்வில் நடைபெறும் நிகழ்வுகளைக் கண்டே ஒவ்வொரு

குழந்தையும் வளர்கிறது. அவ்வாறு வளரும் போது எதையெல்லாம் கண்டு

வளர்ந்தார்களோ .அவை தான் குழந்தைகளின் வாழும் வழிமுறையாக உருவாகிறது.

மேலும் அந்தக் குழந்தைகளும் தங்கள் குழந்தைகளை, தங்களுக்கு

ஊட்டப்பட்டுள்ள வழிமுறைகளின் படியே வளர்க்கிறார்கள். இது தலைமுறை

தலைமுறையாகத் தொடர்கிறது.

இவ்வாறாக, ஒரு தம்பதியருடைய இல்லற வாழ்க்கை ஆயிரம்

ஆண்டுகளுக்குப் பின்னால் வரக்கூடிய அவர்களுடைய பத்தாவது வாரிசைக் கூட,

பரம்பரை குணங்களைக் கொண்டு செல்வதன் மூலம் பாதிக்கிறது.

அதன் அடிப்படையில் தான் திருமணத்தை ஆயிரங்காலத்துப் பயிர் என்று

முன்னோர்கள் சொன்னார்கள்.

மேலும், தன்னுடைய திருமண விசயத்தில் தவறான முடிவெடுத்த நபர்

பெரும்பாலும் ஒரு தோல்வியாளனாகவே வாழ்ந்து மடிகிறான், எடுத்தேன்

கவிழ்த்தேன் என அவசர கோலத்தில் முடிவெடுக்கப்பட்டு துவக்கப்பட்ட

திருமண நிறுவனங்கள் பெரும்பாலும் வெற்றியடைவதில்லை.

சமூகத்தில் தங்களை ஒத்த தம்பதியர் பெறுகின்ற வெற்றிகளை, முன்

யோசனையின்றித் திருமணம் செய்து கொண்ட தம்பதிகளால் பெற முடிவதில்லை,

ஆகவே திருமண நிறுவனத்தைத் துவக்க விரும்பும் ஒவ்வொரு நபரும்

மிகவும் கவனமாகவும், எச்சரிக்கையுடனும் தான் முடிவெடுக்க வேண்டும்.

ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னால் வரை, திருமண விவகாரத்தில் சட்டம்

தலையிடவில்லை, ஆணோ பெண்ணோ யாராயிருப்பினும் பருவத்திற்கு வந்த

உடனே அவர்களுக்குத் திருமணம் நடந்து விடும்.

ஆனால், இப்போது ஆண் இருபத்தியொரு வயதையும், பெண்

பதினெட்டு

வயதையும் கடக்கும் வரை காத்திருக்க வேண்டும். உரிய வயதை அடைவதற்கு

முன் திருமணம் செய்தால் அது சட்டப்படி குற்றம். அது மட்டுமல்ல. பாலுறவிலும்

ஈடுபடக் கூடாது.

அந்தச் சட்டப்படி, ஆணும் பெண்ணும் மனமுவந் தே பாலுறவில்

ஈடுபட்டிருந்தாலும் சரி, அல்லது திருமணம் செய்து கொண்டு பாலுறவில்

ஈடுபட்டாலும் சரி, பதினெட்டு வயதைப் பூர்த்தி செய்யாத பெண்ணுடன் ஒரு

ஆண் கொள்ளும் பாலுறவானது தண்டனைக்குரிய குற்றச் செயல்.

அங்கே ஆண் மட்டுமே குற்றவாளி. பெண் குற்றமற்றவள். இருவரும்

மனமுவந்தே ஈடுபட்டிருந்தாலும், இருவருடைய உடலும் இன்பக் கிளர்ச்சியை

மகிழ்ச்சியோடு அனுபவித்திருந்தாலும், ஆண் என்கிற ஒரு தனி நபர் மட்டுமே

செய்துள்ள குற்றமாகவே சிறார்களின் பாலுறவு, சட்டத்தால் கருதப் படுகிறது.

பருவ வயதின் விரக தாபத்தால் ஒரு பெண்ணே விரும்பி பாலுறவில்

ஈடுபட்டாலும், அவளுடன் இணை சேரும் ஆண் தண்டிக்கப்படுவான். அதனால்,

சட்டப்படி உரிய வயதைக் குழந்தைகள் எட்டிய பிறகு தான் திருமணம் செய்ய

முடிவெடுக்க வேண்டும் என்பது முதல் விதி.

திருமணத்தின் எவையெல்லாம் பார்க்கப் படுகின்றன**?**

திருமணம் செய்ய முடிவெடுக்கும் போது பெரும்பாலான மக்களால் முதற்

பொருத்தமாகப் பார்க்கப் படுவது ஜாதி. அதாவது பெற்றோரால் ஏற்பாடு

செய்து நடத்தப்படும் பெரும்பாலான திருமணங்களில் ஜாதி தான் முதற்

பொருத்தமாகப் பார்க்கப் படுகிறது.

பரம்பரைக் குணங்கள், வளர்ப்பால் ஏற்பட்ட பழக்க வழக்கங்கள்,

குடும்பங்களின் பண்பாடு, அவரவர் நெறிகளைப் பேணல், தெய்வ வழிபாடு

போன்ற பல விசயங்களில் தம்பதியரிடையே முரண்பாடு தோன்றி விடாமலிருக்க

ஜாதியை முன்னிலைப் படுத்துவது உதவுவதாக ஜாதிப் பிரியர்கள் கூறுகிறார்கள்.

அடுத்ததாக பொருளாதாரப் பின்புலம் மதிப்பிடப் படுகிறது. தன்னுடைய

நெருங்கிய உறவினர்களாகவே இருந்தாலும், எந்தக் கோடீசுவரனும்

கூலிக்காரனோடு சம்பந்தம் வைத்துக் கொள்வதில்லை.

பணம் தான் அங்கே தீர்மானிக்கும் சக்தியாக இருக்கிறது. பணத்தின் முன்

ஜாதி மட்டுமல்ல, உறவு முறை கூட செத்துப் போய் விடுகிறது.

பொருளாதார ரீதியான வசதி வாய்ப்புகள் தான் திருமண இணையைத்

தீர்மானிப்பதில் ஜாதியை விட வலிமை மிக்க காரணிகளாக இருக்கின்றன,

ஏழ்மை என்பது ஒரு நோய், ஒரு நபர் ஏழையாக இருப்பதற்கு அரசாங்கமோ,

முதலாளிகளோ, அண்டை அயலாரோ அல்லது சீதோஸ்ண நிலையோ

காரணமல்ல,

சோம்பேறித்தனமும், மனோபாவமும் தான் ஏழ்மை என்கிற நோயின்

மூலங்கள். ஆகவே ஏழை என்பவர் ஒரு மன நோயாளி. அத்தகைய மன

நோயாளியை வீட்டிற்குள் கொண்டு வர வசதி படைத்தவர்கள் அஞ்சுகிறார்கள்.

மூன்றாவதாகப் பார்க்கப்படுவது மணமக்களின் கல்வி, வேலை நிலவரம்

மற்றும் வருமானம், குறைந்த பட்சம் இன்றைய வளமான நிலையாவது

நீடித்திருக்குமா எனப் பார்க்கப் படுகிறது.

நான்காவதாகப் பார்க்கப் படுவது ஜாதகம். அதன் அடிப்படையிலான

பொருத்தங்கள். ஐந்தாவது மணமக்களின் தோற்றம். ஆறாவது குடும்பங்களின்

பொதுவான பாரம்பரியம். ஏழாவது உறவுகளின் சூழல், மேற்கண்ட

அளவுகோல்களின் அடிப்படையில் தான் திருமணங்கள் ஏற்பாடு செய்யப்

படுகின்றன.

ஆனால் இனி மேல், மேற்கண்ட பொருத்தங்களைப் பார்த்தாலும்,

பார்க்காவிட்டாலும், முக்கியமான மூன்று புதிய விதிகளைப் பின்பற்றுவது

பாதுகாப்பான குடும்ப வாழ்க்கையை வாழ்வதற்கு இன்றியமையாதது.

முக்கியமான மூன்று திருமண விதிகள்,

இன்றைய நவீன கால கட்டத்தில் தவறாமல் பார்க்க வேண்டிய மூன்று

விசயங்களில் முதலாவது முழு உடல் நலப் பரிசோதனை குறித்த மருத்துவ

அறிக்கை.

ஒரே கூரையின் கீழ் அனைத்து வசதிகளும் கொண்ட தகுதி வாய்ந்த

மருத்துவ மனையில் மணமக்கள் இருவரும் முழு உடல் நலப் பரிசோதனையை

மேற்கொண்டு, அந்த அறிக்கையைப் பரஸ்பரம் பரிமாறிக் கொள்ள வேண்டும்.

இவ்வாறு மருத்துவ அறிக்கையைப் பரிமாறிக் கொள்வதை யாரும் தவறாகக்

கருதக் கூடாது. யாரையும் இழிவு படுத்தும் நோக்கம் இங்கே இல்லை.

மாறாக அவரவருடைய எதிர்கால குடும்ப வாழ்வின் நிம்மதியைப்

பாதுகாத்துக் கொள்கின்ற முன்னெச்சரிக்கை நடவடிக்கை தான் இது.

ஒவ்வொரு நபரும் உடல் நலம் மிக்க ஒருவருடன் தான் வாழ விரும்புகிறார்.

முன்பின் தெரியாத ஒரு நோயாளிக்குக் காலமெல்லாம் பணிவிடை செய்வதற்காக

யாரும் திருமணம் செய்து கொள்வதில்லை.

இந்நிலையில் உடலில் உள்ள ஏதேனும் ஒரு குறைபாட்டை மறைத்த

நிலையில் திருமண வாழ்விற்குள் ஒருவர் நுழையும் போது, மற்றவருடைய

எதிர்பார்ப்பு நொறுங்கிப் போகிறது. ஏமாற்றம் சூழ்கிறது. அது குடும்ப வாழ்வில்

பிரச்சினையை உருவாக்குகிறது.

மேலும் நோயாளிகளுக்கு பாலுணர்வு குறைவாகத் தான் இருக்கும்,

ஒருக்கால், பாலுணர்வைப் பாதிக்காத நோயாகவே இருந்தாலும், நோயின்

நிமித்தமாக அவர்கள் எடுத்துக் கொள்கின்ற மருந்துகள் அவர்களுடைய

பாலுணர்வைக் கொலை செய்து விடும்.

அதனால் நோயாளிகளால், உடல் நலம் மிக்க மனிதர்களைப் போல்

பாலுறவில் ஈடுபட ஒரு போதும் முடியாது.

அடிக்கடி பாலுறவு நடைபெறாத இல்லற வாழ்க்கையில் அன்பு ஏற்படாது.

அன்பே இல்லாத வாழ்க்கைக்குப் பெயர் தான் பாலைவன வாழ்க்கை..

இந்தப் பாலைவன வாழ்க்கையை வாழ நேரும் போது தான், உடல்நலம்

மிக்கவராக இருப்பவர் கள்ளக் காதல் என்கிற படுகுழியில் விழுந்து விடுகிறார்.

திருமண விசயத்தில் ஏமாந்து போய்விட்டோம் என்கிற காரணத்தால்

யாருடைய பாலுணர்வும் குறைந்து போய் விடாது. இன்றைய கலாச்சாரத்தில்

பாலுறவு விவகாரத்தில் தியாகமெல்லாம் சாத்தியமில்லை.

மேலும், இல்லற வாழ்வில் எது கிடைக்கவில்லையோ அதன் மீதான ஆர்வம்

நிச்சயமாக அதிகரிக்கும். அதனால், உடல்நலம் மிக்கவராக இருப்பவர் கள்ளக்

காதலில் ஈடுபடுவது தவிர்க்க முடியாதது.

இல்லற வாழ்வில் இருந்தபடியே கள்ளக் காதலில் ஈடுபட வாய்ப்பில்லாத

போது, திருமணத்தை இரத்து செய்து விடவே அவர் விரும்புவார். திருமண

நிறுவனம் நிச்சயமாகச் சிதைந்து போகும்.

இதன் மூலம் நோயாளியின் வாழ்க்கை மட்டுமல்ல, நலமாக இருக்கும்

ஒருவருடைய வாழ்க்கையும் நாசமடைகிறது. ஆகவே, உடல் நலப் பரிசோதனை

அறிக்கைகளைப் பகிர்ந்து கொள்வது, இன்றைய சூழலில் மிக மிக முக்கியமானது.

எதேனும் உடல் பாதிப்புகள் உள்ளதா என்பதை முன் கூட்டியே தெரிந்து

கொள்வதன் மூலமாக, ஒருவருடைய மண வாழ்க்கை களவாடப் படுவதைத்

தடுத்து விடலாம்.

எதுவுமே இல்லையா? மிகவும் நல்லது. ஏதேனும் இருக்கிறதா? அதைத்

தெரிந்து கொண்ட நிலையிலும் திருமணம் செய்து கொள்ள விரும்புகிறார்களா?

நல்லது.

அப்படியின்றி உடல் சார்ந்த குறைகளை மறைத்து நடத்தப் படும்

திருமணங்கள் வெற்றி பெறுவதில்லை.

முன் கூட்டியே தெரிந்து கொண்டு சம்மதிக்கும் போது அதனால் ஏற்படும்

பாதிப்புகள் குறைவு. ஆனால், எதுவுமே தெரியாமல் திருமணம் நிகழ்ந்த பிறகு

தெரிய வரும் போது, விவாகரத்தில் முடிவதற்கான வாய்ப்புக்கள் அதிகம்..

எதிர்மறைச் சிந்தனை ஒரு தொற்று வியாதி.

இரண்டாவது திருமண விதி, உளவியல் அறிஞரின் ஒப்புதல், திருமணம்

நிச்சயிக்கப் படுவதற்கு முன் ஒரு உளவியல் அறிஞரின் பார்வைக்கு இளைஞனும்

யுவதியும் உட்படுத்தப் பட வேண்டும்

அவர்களுக்கிடையே ஒன்றாய்க் கூடி வாழ்வதற்குரிய குணங்கள் அதிகமாக

இருக்கிறதா என்பதை ஆய்வு செய்ய வேண்டும்.

ஒவ்வொரு நபரும் பரம்பரைக் குணங்களோடு தான் பிறக்கிறார். அது தவிர

குழந்தைப் பருவத்தின் முதல் ஏழாண்டு கால வளர்ப்பு குறிப்பிட்ட குண

இயல்புகளையும், கருத்துக்களையும் உருவாக்கி வைத்திருக்கிறது.

அவற்றையெல்லாம் யாராலும் மாற்ற முடியாது.

ஆகவே மணமக்களுடைய அடிப்படையான குண இயல்புகள் ஒன்றுடன்

ஒன்று பொருந்திப் போகக் கூடியவையா அல்லது ஒரு குழந்தை பிறந்த பின்,

முரண்பட்டு மோதிக் கொள்ளக் கூடியவையா என்பதை ஒரு உளவியல்

அறிஞரால் மட்டுமே கண்டு பிடிக்க முடியும்.

எதிர்மறைச் சிந்தனையின் வெளிப்பாடுகள்**.**

எதிர்மறைச் சிந்தனை என்பது ஒரு வியாதி. புற்று நோய், மாரடைப்பு

போன்றவற்றைக் காட்டிலும் ஆபத்தான வியாதி,

ஏனெனில், புற்று நோயும், மாரடைப்பும் தொற்று வியாதிகளல்ல. ஆனால்,

எதிர்மறைச் சிந்தனை என்பது ஒரு தொற்று வியாதி. குடும்பத்தில் ஒருவருக்கு

இருந்தால் மற்ற அனைவருக்கும் தொற்றிக்கொள்ளக்கூடிய வியாதி.

குறிப்பாக மனைவிக்கு இந்த வியாதி இருந்தால், அவளுடைய கணவனும்,

குழந்தைகளும் இந்த தொற்றிலிருந்து ஒரு போதும் தப்பிக்க முடியாது.

மேலும் இந்த வியாதிக்கு ஒருவர் ஆட்பட்டிருந்தால், அது வெளியில்

யாருக்கும் தெரியாது. ஏனெனில் இது ஒரு மன வியாதி. ஆனால் வியாதி மாதிரி

காட்சியளிக்காது. மிக மிக நுண்ணிய அளவில் தான் இது வெளிப்படும்.

கண்ணுக்குத் தெரியாமல் சளி வைரஸ் பரவுவது போல், அம்மைக் கிருமி

பரவுவது போல் தவறாமல் அந்த நபரைச் சுற்றியிருப்பவர்களிடம் பரவக்கூடிய

இயல்புடையது இது.

பெரும்பாலும் குழந்தைப் பருவ வளர்ப்பால் இது உருவாகிறது. மிகப் பெரிய

தோல்வி ஏற்படும் போது இந்த வியாதி ஏற்படக்கூடும். பாலின்பம் சார்ந்த

உச்சகட்ட அனுபவங்கள் கிடக்காத போதும், இந்த வியாதி பிடிக்கக் கூடும்.

எதிர்மறைச் சிந்தனை எந்தெந்த விதங்களில் வெளிப்படும்**?**

மனிதரிடம் உள்ள நிறைகளை விட குறைகளை மட்டுமே காண்பது,

நல்லவற்றை விட கெடுதல்களை மட்டுமே பார்ப்பது இதன் முதல் அறிகுறி,

நண்பர்கள் இருப்பது அரிது.

நீண்ட கால் நட்பு இருக்காது. உறவுகள் தளைக்காது. தளைத்தாலும்

நீடித்து நிலைத்திருக்காது. யார் மீதும் உண்மையான அன்பு இருக்காது.

எதிர்காலம் குறித்த நம்பிக்கை இருக்காது.

உதாரணமாக ஒரு இளைஞன் ஒரு யுவதியைக் காதலித்தான், அவன்

பணக்காரன், அவளோ பரம ஏழை. ஒரு நாள் அவன் அவளை தன் வீட்டிற்கு

அழைத்து வந்தான், வந்தவளை நேராகத் தன் படுக்கையறைக்குள் அழைத்துச்

சென்றான்.

பணப் பெட்டியைத் திறந்தான். கட்டுக் கட்டாய் அடுக்கி வைக்கப்பட்டிருந்த

பணத்தை காட்டினான், அப்போது பார்த்த அளவில் நூறில் ஒரு பங்கைக் கூட

அவள் எப்போதும் நேரில் பார்த்ததில்லை.

ஆயினும் கூறினாள்,” என்ன இது? முழுப் பெட்டியையும் காகிதங்களைக்

கொண்டு நிரப்பி வைத்திருக்கிறீர்கள்.? இதுதான் எதிர்மறைச் சிந்தனை

வெளிவரும் விதம்.

நகைச்சுவையில் கூட எதிர் மறையான கருத்துக்களே வரும்.

இவ்வளவு பணத்தைக் காட்டியும் கூட தன் காதலியை பிரமிக்கச் செய்யத்

தன்னால் முடியவில்லையே என மெல்லியதொரு வருத்தக்கீற்று அந்த

இளைஞனின் மனதில் ஒரு விநாடி நேரம் தோன்றி மறைந்தது.

அவ்வாறு மனதில் தோன்றி மறைகிற விநாடி நேர வருத்தம் தான் எதிர்மறைச்

சிந்தனை ஒருவரிடமிருந்து இன்னொருவருக்குள் நுழையும் விதம், உளவியல்

கற்காத மனிதர்கள் இந்தத் தொற்றிலிருந்து தப்பிப்பது கடினம்.

அடுத்த ஒரு நிகழ்ச்சி. ஒரு கணவனுக்கு அன்றைய தினம் ஒரு அதிர்ஸ்ட

தினம். எதிர்பாராத விதத்தில் நிறையப் பணம் வந்திருந்தது. அதனால்

மகிழ்ச்சியாக இருந்தான், அந்த மகிழ்ச்சியை மனைவியோடு சேர்ந்து கொண்டாட

விரும்பினான்.

பெரிய துணிக்கடைக்கு அழைத்துச் சென்றான். பத்துக்கும் மேற்பட்ட

சேலைகளை, அவளது விருப்பப்படியே வாங்கிக் கொடுத்தான். நகைக் கடைக்குள்

நுழைந்தான். அவள் விரும்பிய வடிவங்களில் ஐம்பது சவரன் நகைகளை எடுத்துக்

கொடுத்தான், ஐந்து நட்சத்திர விடுதியில், அவளுக்குப் பிடித்த

உணவருந்தினான். வீட்டிற்கு அழைத்து வந்தான்.

இரவு மனைவியோடு இருக்கும் போது, அவன் வாங்கிக் கொடுத்த பரிசுப்

பொருட்களைப் பற்றி மனைவி சொன்னாள். பத்து சேலைகளை வாங்கியதற்குப்

பதிலாக, இரண்டு பட்டுச் சேலைகள் வாங்கி யிருக்கலாம். ஐம்பது சவரன் தங்கம்

வீட்டோம். நாம் ஏமாந்து போய் விட்டோம்.

வாங்கியதற்குப் பதில் ஒரு வைர செட் வாங்கியிருக்கலாம். நாம் தவறு செய்து

நன்றாக விரைப்படைந்திருந்த அவனது ஆணுறுப்பு அந்த விநாடியே

தளர்வடைந்து போயிற்று. அதிர்ஸ்ட தினமாகத் துவங்கிய ஒரு நாளில் அவனால்

பாலுறவில் கூட ஈடுபட முடியவில்லை. அவனது மனதில் ஏற்பட்ட மெல்லிய

வருத்த இழை தான் எதிர்மறைச் சிந்தனை நுழையும் விதம்.

தோல்விகளின் ஊற்று**.**

இது போல் மெலிதாக, நுண்ணிய அளவில், மனதில் தோன்றக்கூடிய இந்த

வருத்தம், அதையடுத்து, அது போன்ற எண்ணங்களையே தொடர்ந்து மனதில்

தோற்றுவித்துக் கொண்டே இருக்கும். ஒவ்வொன்றாக உருவாகத் தொடங்கி

இறுதியில் ஒரு கயிறாக மாறி, அந்த நபரின் ஆற்றல் அனைத்தையும் கட்டிப்

போட்டு விடும்,

வாழ்வியல் சார்ந்த எதிர்மறைச் சிந்தனை எப்படிப்பட்ட நல்லவனையும்,

கல்வி யாளனையும், அறிஞனையும், திறமைசாலியையும், செல்வந்தனையும்,

பலசாலியையும், படை பலமுள்ளவனையும், புகழுடையவனையும், எப்படிப்பட்ட

சகலகலா வல்லவனையும், பெருந் தலைவனையும், பேரரசனையும்

தோல்வியடையச் செய்து விடும். ஏனெனில், மனம் செய்து கொள்கிற ஒரு

தற்கொலை அது.

அதனால் தான் சொல்கிறார்கள். “எதிரியைத் தோற்கடிக்க விரும்பினால்,

முதலில் அவன் மனதைக் கொல். மன நிலையைச் சாகடி. அதன் பின் அவனே

அவனைத் தோற்கடித்துக் கொள்வான்.”

ஏனெனில், மனநிலை தான் வெற்றி தோல்விகள் அனைத்திற்கும் முழு

முதற் காரணம், ஆகவே திருமணத்தை நிச்சயிப்பதற்கு முன் கண்டிப்பாக

உளவியல் அறிஞர் ஒருவருடைய ஒப்புதலைப் பெற்றுக் கொள்ள வேண்டும்,

வெற்றிகரமான, மகிழ்ச்சிகரமான, நீண்ட ஆயுளுடன் கூடிய வாழ்க்கையை

வாழ விரும்புவோர் எக்காரணத்தைக் கொண்டும் இதைத் தவிர்க்கவே கூடாது.

மூன்றாவது பாலியல் மருத்துவரின் ஆலோசனை. திருமணம் நிச்சயம்

செய்த பிறகு, ஆனால் முதலிரவு நடத்தப்படும் முன்பு நிச்சயமாக ஒரு பாலியல்

அறிஞரின் ஆலோசனையை மணமக்கள் பெற்றுக் கொள்ள வேண்டும்,

இந்த நூலைப் படித்திருந்தாலும், பாலியல் அறிஞரின் ஆலோசனை

பெற்ற

பின் முதலிரவைத் துவக்குவதே மிகச் சிறந்த துவக்கமாக இருக்கும்.

அதைத் தவிர்த்து விட்டு வெறும் சுய இன்ப அனுபவத்தையும் ஆபாசப்

படங்கள் தருகிற தவறான வழிகாட்டுதலையும் மட்டுமே வைத்துக் கொண்டு

முதலிரவைத் துவக்கினால், அது உடனடியாக இல்லா விடினும், ஒரு சில

வருடங்களுக்குப் பிறகாவது உறவைப் பாதித்து விடும்.

ஏனெனில் முதலிரவு அனுபவங்கள் மரணம் வரை மறப்பதில்லை. மோசமான

முதலிரவு அனுபவம் ஒரு பெண்ணின் மனதில் ஏற்படுத்தும் ஆழ்மன

எண்ணங்களையும் கருத்துக்களையும் அவ்வளவு எளிதில் மாற்றி விட முடியாது.

ஆகவே, திருமண நிறுவனத்தைக் கட்டமைக்க முடிவெடுக்கும் போது

பண்டைய வழக்கங்களைப் பின்பற்றுவதும் நிராகரிப்பதும் அவரவர் விருப்பம்,

ஆனால் நவீன காலத்திற்கேற்ற விதிமுறைகளான மருத்துவப் பரிசோதனை

அறிக்கைப் பரிமாற்றம், உளவியல் அறிஞர் அளிக்கக் கூடிய ஒப்புதல், மற்றும்

பாலியல் அறிஞரின் ஆலோசனை ஆகிய மூன்றும் எக்காரணத்தை

முன்னிட்டும் தவிர்க்காமல் பின்பற்றப் பட வேண்டியவை.

திருமண விசயத்தில் யாரையும் யாரும் திட்டமிட்டு ஏமாற்றக் கூடாது

என்கிற கருத்தின் அடிப்படையில், காதல் திருமணத்திற்கும் இந்த விதிகள்

பொருந்தும், பாலுறவு கொள்ளும் முன், காதலை உதறுவது தவறல்ல,

இரண்டு குருமார்கள்,

திருமண நிறுவனத்தைத் துவக்கும் போதே அந்த நிறுவனத்தைப்

பாதுகாக்கும் தூண்களில் ஒன்றாக, மிகப் பெரிய வெற்றியைப் பெற வைக்கும்

முதற்காரணியாக ஒரு உளவியல் அறிஞரை நியமித்துக் கொள்வது நல்லது.

குடும்ப மருத்துவர் ஒருவரை நியமித்துக் கொள்வதைக் காட்டிலும்,

குடும்பத்திற்கான மனநல மருத்துவர் ஒருவரை உடனடியாக நியமித்துக் கொள்வது

இன்றைய காலகட்டத்திற்கு மிகவும் முக்கியமானது.

மருத்துவரோ வரு முன் காப்பவர். நோயின் மூலத்தையே குணமாக்குபவர்.

மருத்துவர் என்பவர் நோயைக் குணமாக்குபவர். ஆனால், மன நல

ஆகவே நிம்மதியான குடும்ப வாழ்க்கையை வாழ விரும்பும் தம்பதியர்

அவர்கள் குடும்பத்திற்கென ஒரு மன நல மருத்துவரை நியமித்துக் கொள்வது

மிகவும் பாதுகாப்பானது.

மோசமான உணர்ச்சிகள் அனைத்தும் மன நோயின் அறிகுறிகள், பரஸ்பர்க்

குற்றச்சாட்டுகளும் அவரவர் செயல்களை நியாயப்படுத்திக் கொள்ளும்

வாக்குவாதங்களும் தான், மன நோயின் அடையாளங்கள், முளையிலேயே

அவற்றைக் கிள்ளியெறிவது மிகவும் அவசியம்.

இல்லாவிட்டால், அந்த மோசமான உணர்ச்சிகள் படுபயங்கரமான

விளைவுகளை பிரபஞ்ச சக்தியின் துணையோடு ஈர்த்துக் கொண்டு வந்து விடும்.

உளவியல் அறிஞர்களின் தொடர்பு மட்டும் இருக்குமானால், மோசமான

உணர்ச்சிகள் மனதில் உருவான வேகத்திலேயே, அவற்றைக் களைந்தெறிந்து விட

முடியும். அதனால், குடும்ப நலன் பெருமளவில் பாதுகாக்கப்படும்.

உதாரணமாக, எதிர்பாராத வகையில், ஒரு சிறு தோல்வியோ,

அவமானம் எனக் கருதப் படும் ஒரு நிகழ்வோ, அல்லது சிறு இழப்போ வாழ்வில்

ஏற்படுவது தவிர்க்க முடியாதது. அவ்வாறு ஏற்படும் சிறு கெடுதல் கூட

மோசமான தாக்கத்தை மனதில் ஏற்படுத்தக் கூடியவை.

அந்தத் தாக்கமும், அதனால் ஏற்படக்கூடிய மோசமான மனப்

பதிவுகளும், நமக்கே தெரியாமல், அடுத்தடுத்த மோசமான முடிவுகளை

எடுக்கச் செய்து விடும். தன்னுணர்வற்ற நிலையில் எடுக்கப்படுகின்ற அந்தத்

தவறான முடிவுகள் பெருந் தோல்வியாளராக நம்மை உருமாற்றி விடும்.

ஆனால், தோல்வி என்றோ, அவமானகரமானது என்றோ கருதப்படும் ஒரு

நிகழ்வு வாழ்வில் நிகழ்ந்த உடனே, குடும்பத்திற்கென்றுள்ள மன நல

ஆலோசகரைச் சந்தித்து உரிய அறிவுரை பெறுவதன் மூலமாக, தொடர்ச்சியான

தோல்விகளிலிருந்து குடும்பத்தைக் காப்பாற்றி கொள்ளலாம்.

உளவியல் அறிஞர் ஒருவருடைய சேவையை எந்தக் கொம்பனாலும்

தனக்குத் தானே அளித்துக் கொள்ள முடியாது.

ஏனெனில், உள்ளங்கையைக் கொண்டு போய் அரை அங்குல

இடைவெளியில் கண்ணருகில் வைத்துப் பார்த்தால் எப்படி அவரவருடைய கை

ரேகைகள் அவரவருக்குத் தெரியாதோ, அதே போல அவரவர் பிரச்சினைக்கான

காரணங்கள் அவரவர்க்குத் தெரியாது. சரியான காரணத்தைக் கண்டறிய

முடியாத வரை தீர்வைக் கண்டு பிடிக்க முடியாது.

ஒருக்கால், தம்பதியரில் ஒருவர் அதி புத்திசாலியாக இருந்து, மிகச் சரியான

தீர்வைக் கண்டறிந்து சொன்னாலும் அடுத்தவர் அதை ஏற்றுக் கொள்ள மாட்டார்.

ஆனால், மருத்துவர் சொல்வது பொதுவான கருத்தாக இருக்குமாதலால்,

தம்பதியர் இருவரும் ஏற்றுக் கொள்வது ஒரு இயல்பான செயலாக இருக்கும்.

ஆகவே, திருமண நிறுவனத்தைத் துவக்கிய உடனே குடும்பத்தின்

ஆலோசகராக உளவியல் அறிஞர் ஒருவரை நியமித்துக் கொள்வது சிறப்புடையது.

அத்தகைய ஆலோசகரை அடிக்கடி மாற்றாமல் இருப்பது அதனினும்

சாலச்சிறப்பு.

அதேபோல தாம்பத்ய வாழ்வில் சிறு பிரச்சினை ஏற்பட்டாலும் பாலியல்

அறிஞரைச் சந்திக்கத் தவறக் கூடாது.

முதலில் மனம் நோய்வாய்ப்படுகிறது. அதன் பின் அந்த நோய் வாய்ப்பட்ட

மனம் உடலில் உள்ள பாதுகாப்பு அரண்களின் கவனத்தைத் திசை திருப்பி

உடலில் நோய்களை உருவாக்குகிறது. அவ்வாறு, மனம் நோய்வாய்ப் படுவதற்கான முதற் காரணம் அன்பின்மை.

அன்புப் பஞ்சத்தை தம்பதியரின் மனம் உணர்வதற்குக் காரணம் பாலின்பப் பஞ்சம்.

தம்பதியர் இருவரும் தங்களுடைய பரஸ்பர அன்பை நிரூபித்துக் கொள்வதில், பாலுறவிற்கு நிகரான வேறொரு செயல் இப்பூவுலகில் இல்லவே இல்லை, எந்தப் பரிசும் பாலின்பம் நிகழ்த்தக் கூடிய அன்பையும், அதிசயங்களையும் இல்லற வாழ்வில் ஏற்படுத்த முடியாது.

ஆகவே பாலின்பத்தை எதிர்க்கலாகாது. பாலின்பத்திற்கு எதிரான கருத்துக்கள் அனைத்தும் மனிதன் நடத்துகின்ற கபட நாடகங்கள், தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்வதோடு தன்னுடைய இணையையும் ஏமாற்றக் கூடிய செயல்.

ஆகவே, பாலுறவு சார்ந்த சிறு பிரச்சினை ஏற்பட்டாலும், பாலியல் அறிஞரைச் சந்தித்து ஆலோசனை பெறத் தயங்கவே கூடாது.

அதாவது, உளவியல் அறிஞரையும், பாலியல் நிபுணரையும் அவ்வப்போது சந்திப்பது என்பது, உடலில் உருவாகக் கூடிய கொலைகாரர்

வியாதிகளையும், CDD குடும்பத்தை நோக்கி வரக் காத்திருக்கும் பொருளாதாரப் பின்னடைவுகளையும், வருமுன் தடுக்கின்ற புத்திசாலித்தனமான நடவடிக்கையாகும்.

பெற்றோரின் அறிவுரை கூட, அந்த இருவரின் ஆலோசனைக்கு இணையாக உதவ முடியாது.

ஏனெனில், இல்லற வாழ்க்கையை ஒரு நாணயம் எனக் கொண்டால் அந்த நாணயத்தின் ஒரு பக்கம் பாலியல், மறுபக்கம் உளவியல், இந்த இரண்டையும் தவிர இல்லற வாழ்வில் வேறெதுவும் இல்லை,

இன்றைய நவீன காலத்தில் மேற்கண்ட விதிகளைப் பின்பற்றி வாழக் கூடிய திருமண வாழ்க்கை மட்டுமே வெற்றிகரமானதாக இருக்க முடியும்.

ஆகவே, ஒவ்வொரு இளைஞனும், யுவதியும் மேற்கண்ட விதிகளைப் பின்பற்றத் தயங்கக் கூடாது. இது தான் காலத்திற்கேற்ற அறிவு.

## **8.** விவாகரத்து**.** குழந்தையின் மீதான கொடூரத் தாக்குதல்

விவாகரத்து எண்ணம் ஏற்பட்டவுடனே பாலுறவு நிகழாது. நிகழ்ந்தாலும் பாலின்பம் நிகழாது.

பெண்ணின் விருப்பம்**.**

விவாகரத்து செய்வதற்கான சரியான நேரம் ஒவ்வொருவருடைய வாழ்விலும் தவறாமல் வருகிறது. ஆனால், அந்த அருமையான நேரத்தை மனிதர்கள் தவற விட்டு விடுகிறார்கள். ஏனெனில், அந்தப் பொன்னான நேரம் திருமணத்திற்கு முந்தைய நாளன்றே வந்து போய் விடுகிறது என்று ஒரு அறிஞர் கூறுகிறார்.

ஆணும், பெண்ணும் சமம். சட்டப்படி சம உரிமை உள்ளவர்கள். ஆனால் அவர்களிருவரும் கணவன் மனைவியாக மாறும் வரை மட்டுமே இந்த சட்டம் செல்லுபடியாகும், எந்த விநாடி கணவன் மனைவியாக இருவரும் மாறுகிறார்களோ அந்த விநாடியே, நிலைமை தலைகீழாக மாறி விடும்.

ஏனெனில், மனைவியாக மாறும் பெண்ணுக்கு ஏராளமான உரிமைகளை சிறப்புச் சட்டங்கள் வாயிலாக அரசாங்கம் வழங்கியிருக்கிறது. அத்தகைய சிறப்புச்

சட்டங்கள் காரணமாக, தங்களுடைய பிறப்புரிமைகளில், பாலியல் உரிமையைத்

தவிர, மற்ற அனைத்தையும் பெண்கள் பெற்று விட்டார்கள்.

அந்த உரிமைகள் காரணமாக, இன்றைய திருமண வாழ்க்கை நிலை

பெறுவதும், நிலை குலைந்து போவதும் பெண்ணின் முடிவையே பெரும்பாலும்

சார்ந்திருக்கிறது.

தம்பதியரிடையே பிணக்கு ஏற்படுவதற்கான காரணம், போகப்

பொருளாகப் பயன்படுத்தப் படுவதாக இருந்தாலும், சட்டம் ஏற்கக் கூடிய

குற்றச் சாட்டுகளைக் கணவனின் மீது கூறுகிறார்கள், அதனால், அந்தக் குற்றச்

சாட்டுக்கள் அனைத்தும் வழக்குகளில் வெல்வதற்காகப் புனையப்பட்டவை

யென அனைவருமே அறிந்திருக்கிறார்கள்.

அவ்வாறு புனையப்பட்ட குற்றச்சாட்டுகளுக்குப் பின்னால், ஒரு சட்ட

விரோதமான ஆண் இருப்பதாகவே கணவர்கள் கருதுகிறார்கள்.

சட்ட பூர்வ உரிமையாளனுக்கும், சொத்தைக் கொள்ளையிட முயலும்

கொள்ளைக்காரனுக்கும் இடையே நடைபெறக் கூடிய போர் தான் விவாகரத்து

வழக்கு என்றே பலர் கூறுகிறார்கள்.

கற்காலத்தில் ஆயுதங்களைப் பயன்படுத்தி அடுத்தவனுடைய இணையைக்

கொள்ளையடித்த ஆண், இப்போது பெண்களைப் பாதுகாப்பதற்கென

இயற்றப்பட்டுள்ள சட்டங்களைப் பயன்படுத்தி, அடுத்தவனுடைய மனைவியை

அபகரிக்கிறான்.

ஆகவே பெண்கள் விவகாரத்தில் காட்டுமிராண்டி காலத்திய ஆணுக்கும்,

இருபத்தோராம் நூற்றாண்டில் வாழும் ஆணுக்கும் எவ்வித வித்தியாசமும் இல்லை,

அதேபோல முற்காலக் குகை வாழ்க்கையில் தன்னைப் பயன்படுத்திக்

கொண்டிருந்த பலவானை, தன் நண்பனோடு சேர்ந்து போட்டுத் தள்ளிய காட்டு

மிராண்டிப் பெண்ணாக மேற்கத்திய நாடுகளைச் சேர்ந்த பெண்கள் மாறிக்

கொண்டிருக்கிறார்கள். நாம் மேற்கத்திய நாடுகளைப் பின்பற்றிக்

கொண்டிருக்கிறோம்.

மேலும், ஆண்கள் மூலமாகவும் விவாகரத்து கோரப்படுகிறது. ஆனால்

அவர்களால் கோரப்படும் விவாகரத்துகள் பெரும்பாலும் மனமுவந்து கோரப்

படுபவை அல்ல, விவாகத்தை ரத்து செய்யும் படி கோரியே ஆக வேண்டிய

நிர்பந்தம் ஆண்களின் மீது சுமத்தப் படுகிறது. ஆகவே, சில விதிவிலக்குகளைத்

தவிர்த்து, பெரும்பாலான ஆண்களின் விவாகரத்து விண்ணப்பங்கள் அவர்கள் மீது

திட்டமிட்டுத் திணிக்கப் பட்டவை.

அதாவது, சட்டபூர்வமான முறையில் ஒரு குழந்தையைப் பெற்றெடுத்த பின்

மனைவி கணவனைப் பிரிந்து விடுகிறாள். அவளோடு குழந்தையையும் எடுத்துச்

சென்று விடுகிறாள். குழந்தையைப் பார்க்காமல் கணவனால் வாழ முடிவதில்லை.

குழந்தை மட்டும் பிறக்காமல் இருந்திருந்தால், தங்களை விட்டுப் பிரிந்து செல்ல

விரும்பும் பெண்ணைத் தன்னுடன் வந்து வாழ்ந்தாக வேண்டும் என்று

பெரும்பாலான ஆண்கள் வற்புறுத்த மாட்டார்கள். ஆனால், தங்களுடைய

குழந்தையைப் பிரிந்து வாழ வேண்டிய துர்ப்பாக்கிய நிலையைச் சகித்துக் கொள்ள

முடியாமல் தான் ஆண்கள் விவாகரத்தை எதிர்க்கிறார்கள்.

அதனால் தான், கூடி வாழ்வதற்கான முயற்சிகளை தங்களால் இயன்ற

வழி களில் எல்லாம் மேற்கொள்கிறார்கள், எந்தவொரு சமரசத் திட்டமும்

மனைவியிடம் செல்லுபடியாகாத போது தான் தனி மரமாகவே தங்களுடைய

வாழ்க்கை போய் விடக் கூடாது என்கிற நோக்கில் நீதிமன்றத்தை நாடுகிறார்கள்.

இத்தகைய சூழலை எதிர்கொள்ளும் பெண் இரட்டை வேடமிடும்

சூழ்ச்சியைப் பயன் படுத்துகிறாள். நீதி மன்றத்திற்கு வெளியே நடைபெறும்

சமரசப் பேச்சுக்களின் போது கணவனோடு சேர்ந்து வாழும்படி, அவள் முன்

வைக்கப்படுகின்ற கோரிக்கையை நிர்த்தாட்சண்யமாக நிராகரிக்கிறாள்.

ஆனால், நீதிமன்றத்திற்குள் நுழைந்ததும் சேர்ந்து வாழ விரும்புவதாகத்

தெரிவிக்கிறாள்.

அவ்வாறு சேர்ந்து வாழக் குறிப்பிட்ட கால அவகாசத்தைக் கோருகிறாள்,

நீதிமன்றமும் அவகாசமளிக்கிறது. அந்த அவகாசம் கடந்தும் கூட மனைவி

தன்னுடன் வாழ வராதபோது கணவன் மீண்டும் நீதிமன்றத்தை நாடுகிறான்.

அவனுடன் வாழ விரும்புவதாகவே அப்போதும் மனைவி கூறுகிறாள்.

எந்த அளவிற்கு தன்னை போகப் பொருளாகப் பயன்படுத்திக்

கொண்டானோ அந்த அளவிற்கு வழக்கை இழுத்தடிக்க முயற்சிக்கிறாள். அதாவது

விவாகத்தை ரத்து செய்வது குறித்து முடிவெடுக்க வேண்டிய நெருக்கடியைக்

கணவனின் மீது சுமத்துகிறாள்.

அவள் எதிர்பார்க்கும் தொகை கைமாறும் போது தான், பரஸ்பர விருப்பத்தின்

பேரில் விவாகரத்து என்கிற முடிவை அறிவிக்க ஒப்புக் கொள்கிறாள்.

ஆணுக்குள்ள நிர்பந்தம்.

இந்தப் பிறவியில் தனக்குக் கிடைத்த வாழ்க்கையை வாழ்வதற்கும், சட்டம்

ஏற்கிற வகையில் பாலுறவில் ஈடுபடுவதற்கும் வழியற்ற நிலைமை உருவாகும்

போது தான்,சட்டபூர்வமான ஒரு வழியை உருவாக்கிக் கொள்வதற்காக கணவன்

விவாகரத்து முடிவை எடுக்கிறான்.

அந்த நிலையிலும் கூட சேர்ந்து வாழ்வதற்கான சமரச முடிவுகளை ஏற்கும்

மனநிலையிலேயே பெரும்பாலான கணவர்கள் இருக்கிறார்கள்,

ஏனெனில், விவாகரத்து என்பது பெண்ணைப் பொறுத்தவரை கூடுதலான

வருமானத்தையும், சொத்துக்களையும், சுதந்திரத்தையும் பெறுவதற்கான

வாய்ப்பாக இருக்கிறது. ஆனால், ஆணைப் பொறுத்த வரை, ஏராளமான

இழப்புக்களை ஏற்படுத்தக் கூடிய பெருந்தோல்வியாக இருக்கிறது.

விவாகரத்தின் மூலம் தன் குழந்தையோடு முழுநேரமும் வாழும் வாய்ப்பை

ஆன் பறி கொடுக்கிறான். இது மிகப் பெரிய மன வலியைத் தரக்கூடியது.

அடுத்து, மனைவியின் விருப்பத்தின் பேரிலேயே கணவனைப் பிரிந்து

வாழ்ந்தாலும், மனைவிக்கும் குழந்தைக்குமான பராமரிப்புச் செலவிற்கு கணவன்

தான் பணம் தர வேண்டும். முடிவில், கணிசமான பணத்தை இழப்பீடாக

மனைவிக்குத் தர வேண்டியிருக்கும்.

அது தவிர, தன்னுடைய பூர்வீக சொத்துக்களின் பேரில் அவனுடைய

குழந்தைக்கு சட்டபூர்வமாகச் சேர வேண்டிய சொத்துக்களையும் தன்னுடைய

மனைவியிடம் கணவன் ஒப்படைத்தாக வேண்டும்,

மேலும் தனிப்பட்ட முறையில் யாருக்குமே நேராத மிகப் பெரிய

அவமானத்திற்கு ஆளாகி விட்ட மனவலியையும் அவன் அனுபவிக்க நேர்கிறது.

ஏனெனில், விவாகரத்தை எதிர்கொள்ளும் ஆணின் ஆ எண்மை மற்ற

வீரர்களின் விவாதப் பொருளாகி விடுகிறது. அதனால், இந்த ஆண் தன்னுடைய

ஆண்மையை நிரூபித்தாக வேண்டிய நெருக்கடிக்கு ஆளாகிறான்,

இந்தியா போன்ற நாடுகளில் அதை நிரூபிப்பது மிகவும் சுலபம்.

ஏனெனில், ஒரு பெண்ணைக் கருவுறச் செய்து விடுவது தான் இங்கே

ஆண்மைக்கான அடையாளம்.

ஆகவே, விவாகம் ரத்தாகி, மறுமணம் செய்து ஒரு குழந்தைக்குத்

தந்தையாகும் வரை அவனுடைய ஆண்மை வேறு கேள்விக்குரிய நிலையில்

இருக்கிறது, ஒரு ஆணாக இதை எதிர்கொள்ளும் போது, ஏற்படக்கூடிய

மனவலியை வார்த்தைகளால் விளக்கிக் கூற முடியாது.

இவ்வாறான எண்ணற்ற பாதகங்களை எதிர்கொள்ள வேண்டிய நிலையில்

தான் விவாகரத்துக் கோரக் கூடிய கணவன் இருக்கிறான்,

ஆகவே, பெண்ணின் விருப்பம் காரணமாகவே பெரும்பாலான விவாகங்கள்

ரத்து செய்யப் படுகின்றன, தறுதலையாகத் திரிந்து கொண்டிருக்கும் ஆணும்,

இழப்பதற்கு எதுவுமே இல்லாதவனும் விதிவிலக்குகள்,

திருமணம் என்பது கண்ணாடிக் குடுவை**,**

கூட்டுக் குடும்பக் கலாச்சாம் இருந்த வரை விவாகரத்துகள் பெருமளவில்

நடைபெறவில்லை. ஆனால், அது கொலை செய்யப் பட்டு விட்டது. கூட்டுக்

குடும்பங்கள் கொலையுண்டு போனதால், தனிக் குடும்பங்கள் மனைவியருடைய

களமாக மாறி விட்டது.

மனைவியின் குற்றச்சாட்டுக்கு ஆளாகும் கணவனைக் காப்பாற்றுவதற்கான

சாட்சியங்கள் எதுவுமே இல்லாத சூழல் உருவாகி விட்டது. கணவனுக்கு

சாட்சிகளாக வரக்கூடிய ஓரிரு நபர்களும் தண்டிக்கப் படுகின்ற சூழல் தான்

நிலவிக் கொண்டிருக்கிறது.

உதாரணமாக மகன் நிமித்தமாக வரதட்சணை கேட்டதாக, உயர்நீதிமன்ற

நீதிபதி மீதே கூட, குற்றம் சுமத்தப்பட்ட வரலாறு உண்டு.

அவ்வாறு எத்தகைய வலிமையுடைய மனிதர்களையும் பெண்களைப் பாதுகாப்பதற்கென இயற்றப்பட்டுள்ள சட்டங்களைப் பயன்படுத்தி, வீழ்த்தக்கூடிய வலிமை பெண்ணுக்கு உண்டு. அதனால் தான், திருமண நிறுவனத்தைப் பெண்களால் மிக எளிதில் தகர்க்க முடிகிறது.

அந்தத் தகர்ப்பின் போது, குழந்தைகள் பொருட்களாகி விட்டார்கள். அந்தப்

பொருட்களின் உரிமையாளராக பெண்களே அங்கீகரிக்கப் படுகிறார்கள்.

அவ்வாறு உரிமையாளர் ஆகி விடுவதன் காரணமாக கணவனின் குடும்பச்

சொத்துக்களில் குழந்தைக்கு சேர வேண்டிய சட்டபூர்வ பூர்வீகச் சொத்துக்களுக்கும் அந்தப் பெண்ணே உரிமையாளராகி விடுகிறாள்.

ஆன் என்பவன் ஆதரவற்ற அனாதையாகிக் கொண்டிருக்கிறான்.

ஆகவே, இன்றைய கால கட்டத்தைப் பொறுத்த வரை, திருமணம் என்பது பெண்ணின் கையில் உள்ள ஒரு கண்ணாடிக் குடுவை. அதே நேரத்தில், ஆணின் கையில் பூட்டப் பட்டுள்ள விலங்கு.

பெண்ணின் கவனச் சிதறலால் கை தவறி விழுந்து விட்டாலும் சரி, அல்லது

ஆணின் விலங்கு அந்தக் குடுவைக்குப் பலமாகப் பட்டு விட்டாலும் சரி, சுக்கு

நூறாக உடையப் போவதென்னவோ திருமணம் என்கிற அந்தக் கண்ணாடிக்

குடுவை தான்.

அவ்வாறு குடும்பம் சிதறும் போது, பொருளாதார ரீதியாகவும், சமூக அந்தஸ்து ரீதியாகவும் மிகப் பெரிய அளவில் கணவன் தான் பாதிக்கப் படுவான்.

அதை விட விவாகரத்தால் கணவனின் உளவியலில் ஏற்படக்கூடிய பாதிப்புகள்

மிகவும் ஆபத்தானவை.

ஆணின் அறிவை மட்டுமன்றி, மன உளைச்சலின் மூலம் புற்று நோய் போன்ற வியாதிகளை உருவாக்கி அவனுடைய ஆயுளையே கூட

குறைக்கக்

கூடிய வல்லமை விவாகரத்தால் ஏற்படக்கூடிய மன வலிகளுக்கு உண்டு.

ஆகவே கண்ணாடிக் குடுவை பாதுகாப்பாக இருக்க வேண்டுமானால்,

மனைவியைப் பாதுகாப்பாக வைத்திருக்க வேண்டியது கணவனின் முதற்

கடமை, வாழ்வியல் மாற்றங்களை உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருக்கும்

அறிஞர்கள் தான், விவாகரத்தின் இன்றைய நிலவரம் குறித்து இவ்வாறு

கூறுகிறார்கள்.

இரண்டாம் திருமணம் நரகத்தில் நிச்சயிக்கப் படுகிறது**.**

பெரும்பாலான விவாகரத்து வழக்குகள் கணவன் மனைவிக்கிடையே

மட்டும் நடைபெற்றுக் கொண்டிருக்கக் கூடிய போர் அல்ல. மூன்றாவதாக ஒரு

தலை, யாரோ ஒருவரின் பின்னால் மறைந்திருக்கும்,

விவாகம் ரத்தான பிறகு தான், அந்த தலை மறைவிலிருந்து வெளியில்

வரும். அந்தத் தலை தான் விவாகரத்திற்கான மூலகர்த்தா.

இவ்வாறு இரண்டாம் திருமணத்திற்கான வலுவான அடித்தளத்தை

அமைத்த பின் விவாகரத்து கோரப்படும் நடை முறை சமூகத்தில் அதிகரித்துக்

கொண்டிருக்கிறது.

மூன்றாம் நபருடைய தலையீடு இல்லாமல் நீதிமன்றப் படியில் கால்

வைக்கும் தம்பதியர் சமரச முடிவை ஏற்றுக் கொள்கிறார்கள், விவகாரம்

கொடூரமானதாக இருந்தாலும், குழந்தைகளின் மீது ஆழமான அன்புள்ள

பெற்றோர் சமரசத் திட்டத்தை ஏற்றுக் கொள்கிறார்கள்.

ஆனால், மூன்றாவதாக ஒரு தலை மறைந்துள்ள இடங்களில், சமரசப்

பேச்சைத் துவக்குவதற்கே கூட அந்தத் தலை விடுவதில்லை.

பெரும்பாலான இரண்டாம் திருமணங்கள் வெற்றிகரமாக அமைவதில்லை.

ஏனெனில், இரண்டாம் திருமணம் இனிப்பதைப் போல் துவங்கும். ஆனால்,

இனிப்பைப் பூரணமாக அனுபவிப்பதற்கு முன் கசக்கத் தொடங்கி விடும்.

முதல் கணவனிடமிருந்து இழப்பீடாகக் கிடைத்த பணத்திற்கும்,

சொத்துக்களுக்கும் இரண்டாம் கணவனால் ஆபத்து உண்டு. அவனிடம்

கொடுத்தால் திரும்பப் பெற முடியாது. கொடுக்கா விட்டால், மெல்லிய

அளவிலான இடைவெளி உருவாகும். அது இரண்டாம் திருமணத்திற்கும் வெட்டு

வைக்கலாம், அல்லது விட்டு விட்டு ஓடிப் போக இரண்டாம் கணவன்

திட்டமிடலாம்.

முதல் திருமணம் பற்றி இரண்டாம் இணையால் விமரி சி க்கப் படும்

சூழ்நிலை உருவாகியே தீரும், நடத்தை குறித்த சந்தேகங்கள் எழும், புதிய

இணைக்கும், பழைய இணைக்கும் இடையே துவக்கத்தில் காணப்படும்

வித்தியாசங்கள் அனைத்தும் விரைவில் காணாமற் போகும்.

இரண்டாம் திருமண இணையால் முதல் திருமண குழந்தைகளுக்கு பாதிப்பு

வர வாய்ப்புண்டு. குறிப்பாக பெண் குழந்தைகளின் நலன் பாதிக்கப் படும். முதல்

திருமணம் எங்கே வேண்டுமானாலும் நிச்சயிக்கப் பட்டிருக்கலாம். ஆனால்,

இரண்டாம் திருமணம் நிச்சயமாக நரகத்தில் தான் நிச்சயிக்கப் படுகிறது.

மேற்கண்ட தகவல்களை விவாகரத்திற்குப் பின் இரண்டாம் திருமணம்

செய்து கொண்ட அனுபவசாலிகள் கூறுகிறார்கள். சில பிரபலங்களின் வாழ்க்கை

விதிவிலக்காக இருக்கலாம்.

தனித்தே வாழும்போது எதிர்கொள்ள வேண்டிய சிரமங்கள்,

இனிப்பிருக்கும் இடம் தேடி ஈக்கள் வருவது இயற்கை. விவாகரத்திற்குப்

பின் தனிமையில் வாழும் நபர் எதிர்பாலினத்தைச் சேர்ந்தவர்களால் தவறாமல்

சூழப்படுவார். ஆனால் அந்த சூழல் நீடிக்காது.

இளமையின் மிளிர்ச்சி விடைபெறும் போது ஈக்கள் வேறு திசை

நோக்கிப்

பறந்து விடும்.

விவாகரத்துக்குப் பின் விருப்பப்படி வாழலாம், சமூகத்தால் எதுவும் செய்ய

முடியாது என்று கருதுகிறார்கள். ஆனால், ஆபத்தான தருணங்களில் உதவ

மறுத்து சமூகம் பழியெடுத்து விடும்.

இழப்பீடாகப் பெற்ற பணம் இருக்கும். கூடவே பாதுகாப்புக் குறைபாடும்

இருக்கும். உடல் நலக் குறைபாடுகளை எதிர்கொள்ளும் போது, உதவி செய்ய

ஆள் கிடைக்காது.

ஒரு கட்டத்தில் தனிமை காரணமாக இனம் புரியாமல் ஏற்படும் கோபம்

குழந்தையின் மீது பாயும். அது குழந்தையின் மனதில் குரோதத்தை உருவாக்கி

விடும். முதுமையில் பழியெடுக்கப் படலாம்.

குழந்தைக்கு அளிக்கப் படும் தண்டனை**.**

பெற்றோரிடையே ஏற்படக்கூடிய நிரந்தரமான பிரிவு தான், ஒரு

குழந்தையின் மீது செலுத்தப்படும் வன்முறைகளிலேயே உச்சபட்ச கொடூரமான

வன்முறை. ஏனெனில், பெற்றோரின் விவாகம் இரத்தாகும் போது குழந்தையின்

உள் உலகம் நார் நாராகக் கிழித்தெறியப் படுகிறது.

குழந்தையின் மகிழ்ச்சியை விட தன்னுடைய மகிழ்ச்சிக்கே முதலிடம் தரக்

கூடிய உட்ச பட்ச சுயநலச் செயல் விவாகரத்து.

அனாதையாக்குவது தான் ஒரு நபருக்கு அளிக்கப் படும் மிகக் குரூரமான

தண்டனை. விவாகரத்து குழந்தையை அரை அனாதையாக்குகிறது.

குழந்தையைக் குப்பைத் தொட்டியில் போடுவதை விட, அடையாளம்

தெரிந்த பின், அதனைப் பெற்றவர்களில் ஒருவரிடமிருந்து பிரிப்பது கொடூரமானது.

தன்னுடைய மனநோய் காரணமாக குழந்தையை மரணம் வரையிலான மன
நோயாளியாக்கும் செயல் விவாகரத்து.

பெற்றோரின் மகிழ்ச்சி தான் குழந்தையின் மகிழ்ச்சி. இந் நிலையில்

பெற்றோரிடையே நடைபெறும் போரால், குழந்தையின் பிஞ்சு மனம் நஞ்சாகிவிட,

எதிர்ப் பாலினத்தின் மீது வெறுப்பு ஏற்படும். குழந்தைப் பருவத்து

மகிழ்ச்சியான மனநிலை நுண்ணிய அளவிலாவது பாதிக்கப்படும்.

வாழக் கிடைத்த வாய்ப்பை குழந்தையிடமிருந்து விவாகரத்து தட்டிப்

பறிக்கிறது.

தந்தையின் ஆலோசனை இருக்காது. தந்தை இருக்கிறார் என்பதால்

உருவாகின்ற உளவியல் சார்ந்த பாதுகாப்புணர்வு இருக்காது. தனக்கு துரோகம்

இழைக்கப்பட்டு விட்டதாக மனதில் ஒரு கருத்து ஏற்படும்.

குழந்தையின் மனநிலை மாசடைகிறது**.**

பெற்றோரிடையே ஏற்படும் விவாகரத்து, குழந்தையின் ஆழ்மனதில் குழப்ப

நிலையை உருவாக்குகிறது. அதனால், பிற குழந்தைகளோடு பழகும் திறனைக்

குறைக்கிறது.

குழந்தையின் அறிவாற்றலைக் குறைக்கிறது. குழந்தையின் சுய

மதிப்பையும், தன்னம்பிக்கையையும், தைரியத்தையும் குறைக்கிறது.

குழந்தையின் கவனம் சிதறுகிறது. கல்வி பாதிக்கப்படுகிறது. மன அழுத்தம்

காரணமாக மனதின் வளமையும் செழுமையும் குறைகிறது. பச்சாதாபத்தாலும்,

கழிவிரக்கத்தாலும் மனம் பாதிக்கப் படுகிறது.

பெற்றோரிடையே ஏற்படும் விவாகரத்தானது, மரணம் வரையிலும் ஏதேனும்

ஒரு வகையில் குழந்தைகளைப் பாதிக்கக் கூடிய தாக்கங்களைக் கொண்டது.

பள்ளியில் சக மாணவர்களோடு ஒப்பிட்டுப் பார்க்கிறது. அதனால்

தாழ்வு

மனப்பான்மை நோயால் தாக்கப் படுகிறது.

அன்பின் சுவை தெரியாமல் வளர்வதால், வன்முறைச் செயல்களில் ஈடுபடும்

குணம் உருவாகி விடுகிறது. சக மாணவனைக் கொல்வது வரை கூட,

குழந்தையின் மனம் பாதிக்கப் படுவதற்கான ஆபத்து உண்டு,

ஆசிரியர்களோடு பிரச்சினை, விதிகளுக்குக் கட்டுப்பட மறுக்கும் போக்கு,

அடுத்தவர்களை நம்ப மறுத்தல், சந்தேக மனப்பான்மை, அதீத வாதம்,

தனிமையுணர்வு, பழியெடுத்தல், அடுத்தவர்களை கெடுக்கும் நோக்கத்துடன்

பழகுதல், தற்கொலை எண்ணம், ஏமாற்ற உணர்வு, மனநிலை பாதிப்பால்

ஏற்படக்கூடிய உடல் நிலை பாதிப்பு போன்றவைகளை குழந்தை எதிர்கொள்ள

நேர்கிறது.

யார் தரப்பில் நிற்பது என்பதில் குழந்தைப் பருவத்தில் ஏற்படும் குழப்பம்,

முடிவெடுக்க முடியாத மனநிலையை குழந்தையின் இயல்பாகவே மாற்றி

விடுகிறது.

போதைப் பழக்கத்திற்கு அடிமையாகும் வாய்ப்புகள் ஒற்றைப் பெற்றோரின்

குழந்தைகளுக்கு அதிகம். சமூகத்தோடு ஒன்றிணைந்து செயல்படுவதில் சிரமப்

படும் சூழலும் உருவாகிறது.

சிறு வயதில் ஏற்படும் மனக் காயங்களின் வடுக்கள் மரணம் வரை

மறைவதில்லை. குழந்தையின் ஆழ்மனதில் இருந்தபடி, ஒவ்வொரு செயலிலும்

அந்த வடுக்களினால் ஏற்படும் ஆற்றாமை எதிரொலித்துக் கொண்டேயிருக்கும்.

அதனால் குழந்தையின் எதிர்கால நட்பும், சுற்றமும் பாதிக்கப் படுகிறது.

பிறரோடு பழகும் திறன் குறைவாகவே இருக்கும். அதனால், கலகத்தில்

ஈடுபடுதலும், வம்புச் சண்டையிடுதலும் குழந்தையின் இயல்புகளாக இருக்கும்.

பெண் குழந்தையாக இருந்தால் இள வயதிலேயே பாலுணர்வு வேட்கையால்

வழி தவறிப் போகக் கூடிய ஆபத்து உண்டு.

நிச்சயமாக எதிர்மறைச் சிந்தனையால் குழந்தைகள் மனநிலை பாதிக்கப்

படுவது உறுதி.

குழந்தையின் குடும்ப வாழ்க்கையையும் பாழாகும்.

எந்த இனத்தால் வளர்க்கப் படுகிறதோ அந்த இனத்தை (ஆண், பெண்

இனம்) வெறுக்கும் நபராக குழந்தை மாறுகிறது. வளர்ந்த பின்பும் கூட, சக

நண்பர்களால் மறைமுகமாக அவமதிக்கப் படுகிறது. அதனால், அளவுக்கு மீறி

வெட்கப்படும் நபராக உருவாகிறது.

தான் ஒரு கருவியாகப் பயன்படுத்தப் பட்டதை அறிய நேரும் போது குற்ற

உணர்வு கொள்கிறது. எதிர்பாலினத்தின் மீது காரணமற்ற குரோத

மனப்பான்மையோடு குழந்தை வளரக்கூடிய ஆபத்தும் உண்டு.

குழந்தையின் திருமணம் நிச்சயமாகத் தடைப்படுகிறது. தங்கள் திருமண

இணையுடன் சண்டையிடும் மனப்போக்குடையவர்களாக குழந்தைகள்

உருவாகக் கூடிய ஆபத்தும் உண்டு.

திருமணத்திற்குப் பிறகு தன் இணையால் அவமதிக்கப்படுகிறது. இரண்டாம்

தர நபராக கருதப்பட வாய்ப்பேற்படுகிறது. திருமண இணையோடு ஏதேனும் பூசல்

வரும்போது, தன்னுடைய குடும்பத்தைப் பற்றி தரக்குறைவான கருத்துக்களை

எதிர்கொள்ள நேர்கிறது. அதனால், குழந்தையின் குடும்ப வாழ்க்கையும் துயரம்

நிறைந்ததாக இருப்பதற்கான வாய்ப்புகள் அதிகம்.

பெரும்பாலும் குழந்தையின் வாழ்க்கையும் விவாகரத்தைச் சந்திக்க

நேரலாம். மொத்தத்தில், பெற்றோரின் விவாகரத்து குழந்தைகளின்

எதிர்காலத்திற்கு ஒரு தீராத அவமானத்தை நிரந்தரப் பரிசாக வழங்கி விடும்

ஆபத்தைத் தவறாமல் செய்கிறது.

எவ்வளவு தான் திட்டமிட்டு மறைத்து விட்டாலும், யாருடைய சுயநலம்

தன்னுடைய இளமைக்கால துயரத்திற்கு காரணமாக இருந்திருக்கிறது என்பதை

ஒவ்வொரு குழந்தையும் கண்டு பிடித்து விடுகிறது.

அதற்கான பரிசை முதுமைக் காலத்தில் தவறாமல் வழங்குகிறது. அந்தக்

கால கட்டத்தில், அடைக்கலமடையக் கூட விவாகரத்துக் கோறும் சுயநலப்

புலிகளுக்கு இடம் கிடைக்காது.

விவாகரத்து செய்து கொண்ட தம்பதிகளின் குழந்தைகளுக்கு,

பெற்றோர் இருவருடனும் இயல்பான சூழலில் வளரக்கூடிய குழந்தைகளை

விட ஆயுள் குறைவு என்று ஆய்வு முடிவுகள் கூறுகின்றன.

ஆகவே விவாகரத்துக்கு விண்ணப்பிக்கும் முன்பாக, குழந்தைகளின்

எதிர்காலத்தைப் பற்றிக் கருணையோடும், இரக்கத்தோடும் எண்ணிப் பார்ப்பது.

நல்லது.

பெண்களுக்கான கேள்விகளின் பட்டியல்**.**

விவாகத்தை ரத்து செய்வதற்காக விண்ணப்பிக்கும் முன்பாகத் தனக்குத்

தானே, ஒரு பெண்ணால் கேட்டுக் கொள்ள வேண்டிய கேள்விகளின் பட்டியல்.

இந்த விவாகத்தை ரத்து செய்ய விரும்புவதற்கான காரணம் என்ன? நீங்கள்

சொல்கிற காரணம் அல்லாமல், உண்மையாக இருக்கக் கூடிய காரணம் என்ன?

ஒரு உளவியல் அறிஞரைச் சந்தித்து உண்மையான காரணத்தை அறிந்து

கொண்டீர்களா?

உங்கள் விவாகத்தை ரத்து செய்வதன் மூலமாக, உங்களுடைய மனம்

உருவாக்கியுள்ள காரணமும், உளவியல் அறிஞர் கண்டுபிடித்துக் கூறிய

உண்மையான காரணமும் உங்கள் வாழ்விலிருந்து களையப்பட்டு விடுமா?

அந்தக் காரணத்தை ஏற்றுக் கொண்டே வாழும் போது. அதிக ட்சமாக

என்ன கேடு நிகழ்ந்து விடக் கூடும்?

நிரந்தரப் பிரிவின் மூலம் உடனடியாகச் சில பலன்கள் கிடைக்கலாம்.

அப்பலன்கள் எவ்வளவு காலத்திற்கு தொடர்ந்து கிடைக்கக் கூடியவை?

நீண்ட கால நோக்கில் பெறக்கூடிய பலன்கள் என்ன? ஐம்பது வயதிற்குப்

பின்னால் வாழ்க்கை எப்படி இருக்கும்? முதுமைக் காலத்தை நிம்மதியாகக் கழிக்க

முடியுமா? குழந்தையால் பழியெடுக்கப் படுவதற்கான வாய்ப்புகள் இருக்கிறதா?

இந்த விவாதத்தை ரத்து செய்வதன் மூலமாக வாழ்க்கையில் சாதிக்கப்

போவதென்ன? உங்கள் செயல் சட்டப்படி சரியாக இருக்கலாம். ஆனால், தர்மப்படி

உங்கள் செயல் நியாயமானதா?

விவாகத்தை ரத்து செய்வது உங்கள் குழந்தைக்கு இழைக்கப்படுகின்ற

துரோகச் செயலாக இருக்காதா? மேலும், விவாகத்தை ரத்து செய்வதன் வாயிலாக,

உங்கள் குழந்தைக்கு நீங்கள் அளிக்கக் கூடிய செய்தி என்ன? உங்கள்

குழந்தை திருமணம் செய்து கொள்ளலாமா? செய்து கொள்ளக் கூடாதா?

மேலும் இந்தக் கேள்வி மிக மிக முக்கியமான கேள்வி. ஏதோ ஒன்றை

எதிர்பார்த்து திருமண வாழ்விற்குள் வந்தீர்கள். அந்த ஏதோ ஒன்று கிடைக்காத

காரணத்தால் திருமண வாழ்விலிருந்து வெளியேற விரும்புகிறீர்கள் என்றால்,

திருமண வாழ்விலிருந்து வெளியேறுவதன் மூலமாக அந்த ஏதோ ஒன்றை

உங்களால் பெற்று விட முடியுமா?

அந்த ஏதோ ஒன்றை உறுதியாகப் பெறுவதற்கான உத்தரவாதம் திருமண

வாழ்விற்கு வெளியே இருக்கிறதா?

அத்தகைய உத்தரவாதம் இல்லையென்றால், இருக்கின்ற வாழ்க்கையிலேயே

அந்த ஏதோ ஒன்றைப் பெறுவதற்கான முயற்சிகளை மேற்கொள்வதன் மூலம்

நீங்கள் இழக்கப் போவது என்ன?

மேலும் நீங்கள் எதிர்பார்க்கின்ற அந்த ஏதோ ஒன்று இரண்டாம் திருமண

வாழ்விலும் தொடர்ச்சியாகக் கிடைக்காமல் போகும் சூழல் வரலாம், அப்போது,

அந்தத் திருமணத்தையும் சிதறடித்து விடுவீர்களா?

அந்த ஏதோ ஒன்றை எதிர்பார்த்து தான் ஒவ்வொருவரும் திருமண

நிறுவனத்திற்குள் நுழைகிறார்கள். அவ்வாறு அவர்கள் எதிர்பார்த்து வந்த அந்த

ஏதோ ஒன்று எல்லோருக்கும் கிடைப்பதற்கான வாய்ப்பு இருக்குமா?

எதிர்பார்ப்புகள் பூர்த்தியாகாத நிலையில் திருமணம் தொடரக் கூடாதா?

மேற்கண்ட கேள்விகளுக்கான பதில்களை ஒரு தாளில் எழுதி ஒரு

உளவியல் அறிஞரிடம் கொடுத்து, உங்கள் பதில்கள் எந்த அளவிற்கு

நியாயமானவை என்பதைத் தெரிந்து கொள்ளவும்.

ஏனெனில், வெறுப்பு என்பது ஒரு உணர்ச்சி, பாலின்ப ஆற்றாமை நோயால்

உருவாகக் கூடிய உணர்ச்சி அது.

உணர்ச்சிகள் அனைத்துமே மாயை, ஆகவே, அந்த மாயையால்

தூண்டப்பட்டு, சொல்லப்படுகின்ற குற்றச்சாட்டுகள் பெரும்பாலும்

பொய்யானவையாக, நியாயமற்றவையாக, எதிர்காலத்தில் பெரும் கெடுதல்களை

உருவாக்கக் கூடியவையாக, இருக்க வாய்ப்புண்டு.

மேலும், மாயையான காரணங்களால் உருவாகும் உணர்ச்சிகளின்

வேகத்தால் எடுக்கப்படும் முடிவுகள் பெரும்பாலும் தவறானவையாகவே இருக்கக்

கூடுமென உளவியலும் கூறுகிறது.

ஆகவே, உளவியல் அறிஞரிடம் ஆலோசனை பெறும் முன்பாக, நீதி

மன்றத்தின் வாயிற்படியை ஒருபோதும் மிதிக்க வேண்டாம்.

பாலின்ப ஆற்றாமை அணியக் கூடிய முகமூடிகள்

தன்னுடைய விவாகத்தை ரத்து செய்யும் படி ஒரு பெண் ணால்

கோரப்படுகிறது. அவ்வாறு கோரப்படும் கோரிக்கைகள் பெரும்பாலும்

உணர்ச்சிகளின் அடிப்படையிலேயே எடுக்கப்படுகிறது.

விவாகரத்து பெறுவதற்காக நீதிமன்றத்தில் தெரிவிக்கும் காரணங்களை

ஒதுக்கி விட்டு, உண்மையான காரணங்களை ஆராயும் போது தான், பிரச்சினை

உண்மையான தா அல்லது பாலின்ப ஆற்றாமை என்கிற நோயால் உருவான

உணர்ச்சிக் கொந்தளிப்பால் எடுக்கப் படுகின்ற தவறான முடிவா என்பதைக்

கண்டறிய முடியும்.

பாலின்ப ஆற்றாமையின் வெளிப்பாடுகள் தான் குற்றச்சாட்டுக்களாக

வெளி வருகின்றன. ஏதோ ஒன்றை எதிர்பார்த்து திருமண அமைப்பிற்குள்

பெண் வருகிறாள், எதிர்பார்ப்பு நிறைவேறாத போது அவள் வெளியேறுகிறாள்.

ஆகவே பெண்ணிடம் என்ன தவறு இருக்கிறது என்கிற குரலின் மூலம்

பெண்களின் ஏமாற்றம் வெளிப்படுகிறதல்லவா? அந்த ஏமாற்றத்தின் ஆற்றாமை

தான் மேற்கண்ட குற்றச்சாட்டுக்கள்.

இல்லற வாழ்வில் தம்பதியிடையே ஏற்படுகின்ற அனைத்துப்

பிரச்சினைகளுக்கும் மூலம் காமம். கைப் புண்ணைப் பார்க்கக் கண்ணாடி

தேவையில்லை. காமம் தணிக்கப்படாத போது, ஏற்படக் கூடிய விளைவுகள் தான்

மோசமான உணர்ச்சிகள்.

மனம் மோசமான உணர்ச்சிகளால் நிறைந்திருக்கும் போது, பார்ப்பதெல்லாம்

மோசமாகவே தெரியும். தன் இணையின் மீது குற்றம் சாட்டுகின்ற ஒவ்வொரு

உணர்ச்சியும் மோசமான உணர்ச்சியே.

உடலுக்குரிய பாலின்பம் நிகழாதபோது தான், இணையின் மீது குற்றம்

சாட்டுகின்ற உணர்ச்சிகள் மனதில் உருவாகின்றன.

ஆகவே பெரும்பாலான விவாகரத்து மனுக்கள் உணர்ச்சிகளால் உந்தப்பட்ட

நிலையில் தான் தாக்கல் செய்யப் படுகின்றன. உணர்ச்சி வயப்பட்ட நிலை

என்பது ஒரு வகையான மன நோய்.

தான் என்கிற அகம்பாவம் அல்லது ஈகோ என்று அதைச் சொல்வார்கள்.

அந்த மனநோய் காரணமாக மனதில் உருவாகும் மாயையான தகவல்களே

விவாகரத்திற்கான காரணங்களாக இருக்கின்றன.

இதை ஏற்றுக் கொள்வது மிகவும் கடினமாக இருக்கலாம், தக்க உளவியல்

அறிஞர் ஒருவரைச் சந்தித்து ஆலோசனை பெற்றால், அவர் அனைத்தையும்

தெளிவாகப் புரிய வைப்பதோடு இந்த மனநோயிலிருந்தும் மீட்டெடுப்பார்,

அதன்மூலம் உங்கள் திருமண நிறுவனமும் பாதுகாக்கப் படும்,

ஒவ்வொரு ஆணும் தெரிந்து கொள்ள வேண்டியவை.

மீண்டும் மீண்டும் சொல்லப் படுகின்ற கருத்து என்னவென்றால், காற்று,

உணவு, தண்ணீர், உறக்கம், பாலின்பம் இவை தான் ஒரு மனித உடலுக்கான

அடிப்படைத் தேவைகள். இவற்றில் ஒன்றில்லை யென்றாலும் உடல் துன்பப்

படுவது உறுதி, அந்த உடற் துன்பம் காரணமாக மன நலமும் கெடுவது உறுதி.

ஆகவே இவற்றைத் தேடிப் பெறுகின்ற அறிவானது, மனிதனின்

மரபணுக்களிலேயே இடம் பிடித்திருக்கிறது. அந்த அறிவின் படி, எது

கிடைக்கவில்லையோ அதைத் தேடிப் பெற அனைவரும் முயற்சிக்கிறார்கள்.

பெண்களும் விதிவிலக்கல்ல.

இவற்றில் காற்றும், உணவும், நீரும் எளிதில் கிடைத்து விடுகிறது. உறக்கம்

என்பது பாலின்பத்தைச் சார்ந்தது. பாலின்பம் இல்லற இணையைச் சார்ந்தது.

இல்லற இணையின் மூலமாக மட்டுமே பெற முடிந்த உடலின் அடிப்படைத்

தேவையாக பாலின்பம் இருக்கிறது.

அந்த அடிப்படைத் தேவையைப் பூர்த்தி செய்ய இல்லற இணை தவறும்

போது தான், இல்லற வாழ்க்கை நரக வாழ்க்கையாக மாறத் தொடங்குகிறது.

கூட்டுக் குடும்பக் கலாச்சாரத்தை பெண்கள் கொலை செய்து விட்டார்கள்.

குடும்பம் என்பது பெண்களுடைய களமாகவும், கணவனால் ஓய்வெடுக்கக் கூட

முடியாத முட் படுக்கையாகவும் மாறி விட்டது.

அனைத்திற்கும் மேலாக, குடும்ப அமைப்பையும் இப்போது தகர்க்கத்

தொடங்கி விட்டார்கள், அந்தத் தகர்ப்பின் போது முடிந்த வரை பிடுங்கவும்

தொடங்கி விட்டார்கள், குழந்தைகள் பொருட்களாகி விட்டார்கள். அந்தப்

பொருட்களின் உரிமையாளராக பெண்களே அங்கீகரிக்கப் படுகிறார்கள். ஆண்

என்பவன் ஆதரவற்ற அனாதையாகிக் கொண்டிருக்கிறான் என்கிற குரல்

ஆங்காங்கே ஒலிக்கத் துவங்கியிருக்கிறது.

ஆயினும், பெண்கள் தங்களுக்குரிய உரிமைகள் அனைத்தையும் பெற்று

விட்டார்களா எனக் கேட்டால், தங்களுடைய அடிப்படைத் தேவையைத் தவிர,

அனைத்தையும் பெற்று விட்டார்கள் என்றே பெண்ணுரிமையாளர்கள்

சொல்கிறார்கள்.

அந்த அடிப்படைத் தேவை எதுவென்பதையும் மறைமுகமாகக்

கூறத்தான்

செய்கிறார்கள்.

பெண் ஏதோ ஒன்றை எதிர்பார்த்துத் திருமண வாழ்விற்குள் வருகிறாள்.

அவளுடைய எதிர்பார்ப்பு பூர்த்தி அடையாத போது அந்தச் சிறையிலிருந்து அவள்

வெளியேறுகிறாள். இந்த விவகாரத்தில் பெண்ணிடம் என்ன தவறிருக்கிறது என்று

தெளிவாகக் கேட்கிறார்கள். மிகவும் நியாயமான கருத்து.

அந்த “ஏதோ ஒன்று” என்பது வேறொன்றுமல்ல. பாலின்பத்தைத்

தான் அவர்கள் மறைமுகமாக “ஏதோ ஒன்று’ எனக் கூறுகிறார்கள்.

உதாரணமாக, எனக்குரிய பாலின்பத்தைக் கொடு. எனக்குரிய உச்ச கட்ட

பாலின்ப சுகங்களைக் கொடுத்தே தான் ஆக வேண்டும். அதுவும் இப்போதே

கொடுத்தாக வேண்டும் என்று பெண்களால் தன் கணவனிடம் கேட்க முடியுமா?

ஒரு கணவன் தன் மனைவியை பாலின்ப சுகம் கேட்டு வற்புறுத்துவதைப்

போல், பெண்களால் கணவனை வற்புறுத்த முடியுமா? சும்மா அலையாதே என்று

கணவன் சொல்லிவிடுவானோ என்கிற அச்சம் பெண்ணுக்கு இருக்காதா?

மேலும், குடும்ப விவகாரச் சண்டையின் போது, கணவன் சொல்வதைப்

போல், நான் வெளியில் சென்று எனக்குரிய பாலின்பத்தைப் பெற்றுக்

கொள்கிறேன் என்று மனைவியால் சவால் விட முடியுமா?

அந்த ஏதோ ஒன்று எனக் குறிப்பிடப்படுகின்ற பாலின்பமானது உடலின்

முதற் பசி. மனித உடலின் இயற்கைத் தேவை.

அடிப்படைத் தேவையைக் கூட யாரால் கேட்டுப் பெற முடியாதோ அவர்கள்

தான் அடிமைகள். இவ்வாறு மனைவியை அடிமையாய் வைத்துக் கொண்டு,

தனக்குரிய இன்பத்தை மட்டும் தரக்கூடிய ஒரு போகப்பொருளாகவும்

கணவன்

பயன்படுத்திக் கொண்டிருக்கிறான்.

அந்த அடிமைத் தனத்திலிருந்து விடுதலையடைவது எந்த வகையில்

அநியாயம் என்கிற கேள்விகளை பெண்கள் மறைமுகமாக எழுப்புகிறார்கள். அது

நியாயமான கேள்வி தானே.

களவொழுக்கத்திற்கு யார் மூல காரணம்?

மனைவியை போகப் பொருளாகப் பயன்படுத்தக் கூடிய கணவன் இப்போது

தேவையற்றவனாகிக் கொண்டிருக்கிறான். கூடுதலான சுமையாகக்

கருதப்படுகிறான். அதனால் கருத்தரித்தலுக்கு மட்டுமே பயன்படுத்திக்

கொள்ளும் அபாயத்தை அவன் எதிர்கொண்டிருக்கிறான்.

இதுதான் இயற்கைச் சக்தியான காமத்திற்கு உள்ள வலிமை, எந்தக்

கட்டமைப்பையும் சிதறடித்திட காமம் தயங்காது, கட்டுதளைகளைத்

தகர்தெறிவதற்கான புதுப்புதுக் காரணங்களைக் கண்டறியவும் தயங்காது.

ஆகவே இயற்கையை இயற்கையாகப் பார்ப்பதும், அதை அப்படியே ஏற்றுக்

கொண்டு, இயற்கை சக்திகளோடு ஒத்துப் போவதும் தான் வாழ்க்கையை

எளிதாக்கும். இல்லா விட்டால், வாழ்க்கை போர்க் களமாகி, வாழக் கிடைத்த

வாய்ப்பு பறிபோய் விடும்.

இயற்கையோடு ஒத்துப் போகும் வரை அது ஒரு தேங்கிச் செல்லும் ஆறாக

இருக்கும். நீந்திக் கடந்து விடலாம்.

ஆனால், அதை எதிர்த்து நின்றால், அதே ஆறு காட்டாற்று வெள்ளமாகி

விடும். அதன் பின் நீச்சலே தெரிந்தாலும் நீந்தித் தப்பிக்க முடியாது.

பெண்ணுக்குரிய உரிமைகளை வழங்கிய பிறகும், மனைவிக்குரிய

இன்பங்களை வழங்கும் கலைகளைக் கற்றுக் கொள்ளாமல், மனைவியை ஒரு

போகப்பொருளாகவே பயன்படுத்த நினைத்தால், விவாகரத்துகளைத்

தடுக்க

யாராலும் முடியாது.

ஒருக்கால், மறைமுகமான நிர்பந்தங்கள் காரணமாக விவாகரத்தைத்

தடுத்து விட்டாலும், இல்லற வாழ்வை நிம்மதியாக வாழக் கணவனால் முடியாது.

சில ஆண்கள் மனைவியின் களவொழுக்கத்தை விவாகரத்திற்குக் காரணம்

காட்டுகிறார்கள், களவொழுக்கத்திற்கு மூல காரணம் மனைவியின்

தணிக்கப்படாத காமம்.

அவ்வாறு ஒரு பெண்ணின் காமம் தணிக்கப் படாததற்கு மூல காரணம்

அவளுடைய கணவனின் பாலியல் அறியாமை,

ஆகவே, ஒவ்வொரு விவாகரத்துக்கும் தேவைப் படுகின்ற விதைகளைத்

தூவுவது கணவன், அந்த விதைகளின் மேல் நீர்விட்டு முளைக்கச் செய்து,

வளர்த்து மரமாக்கி பலனைக் கொடுக்கச் செய்வது மனைவி, ஆகவே, ஆணின்

பாலியல் அறியாமையே விவாகரத்திற்கான மூல விதை

பெண்ணின் பால் உணர்வுகளும் தணிக்கப் படவேண்டும்

மனித வரலாற்றில் எந்தவொரு கால கட்டத்தையும் விட இன்றைய கால

கட்டத்தில் தான் குடும்ப வாழ்க்கை மிகவும் குழப்பத்துக்குரியதாக

மாறியிருக்கிறது.

பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக கணவனின் அடிமையாக இருந்த

மனைவி இப்போது அடிமையாக இல்லை. ஆனால், பல்லாயிரக்கணக்கான

ஆண்டுகளாக ஆண்டானாக இருந்த ஆண் இன்னும் தன் மனதின்

அடியாழத்திலே ஆண்டானாகவே இருக்கிறான்.

என்னதான் நவீன காலச் சிந்தனாவாதியாகத் தன்னைக் காட்டிக்

கொண்டாலும், தன்னுடைய மனைவி என்று வருகிற போது, ஆண் ஒரு ஆதிக்க

வாதியாகவே இருக்கிறான்.

ஆகவே, இன்றைய நவீன காலத்திற்கேற்ற பாலியல் அறிவை வளர்த்துக்
கொள்வதும், பெண்களைப் பற்றிய கருத்தை மாற்றிக் கொள்வதும் ஒவ்வொரு
ஆணின் தலையாய கடமை.
ஆனால், மனைவியை போகப் பொருளாகப் பயன்படுத்தாமல் ஒரு
உயிரினமாகக் கருதி மனைவிக்குரிய இன்பங்களைக் கணவன் வழங்க
முற்படுவதே குடும்ப அமைப்பைக் காப்பதற்கான ஒரே தீர்வு. அந்தத் தீர்வை
நிறைவேற்றத் தேவைப்படுவது பாலியல் அறிவு.
பாலின்பம் முழுமையாக வழங்கப் படுகின்ற போது மோசமாக உள்ள
உணர்ச்சிகள் அனைத்தும் நல்லவையாக மாறக்கூடியவை. ஆகவே,
தம்பதியிடையே முறையான பாலின்பம் நிகழ்ந்து பெண்ணுக்குரிய இன்பம்
வழங்கப் படுமானால், தம்பதியர் வாழ்வில் நிச்சயமாக விவாகரத்துக்கு
இடமிருக்காது என்பது மட்டுமல்ல சண்டை சச்சரவுகளோ, வாக்குவாதங்களோ,
குற்றச்சாட்டுகளோ கூட குடும்ப வாழ்வில் ஏற்படாது.
ஏனெனில் பாலின்ப ஆற்றாமை என்பது ஒரு மனநோய். உதாரணமாகக்
கடந்த இருபது ஆண்டுகளுக்கு முன்னால் வரை பெண்களைப் பேய் பிடித்தது.
உண்டு. கிராமப் பகுதிகளில் அதைக் “காத்துக் குணம்” என்று கூறுவார்கள்.
ஆனால், பெண்ணை மட்டுமே தேடித் தேடிப் பிடித்துக் கொண்டிருந்தது
பேயோ, பிசாசோ அல்ல, பாலின்ப ஆற்றாமையால் ஏற்பட்டுள்ள “ஹிஸ்டீரியா”
என்கிற மனநோய் என இப்போது கண்டறியப்பட்டு விட்டது.
பெண்ணுக்குரிய பாலின்பங்களை பெண்ணின் உடலில் நிகழ்த்துவதன்
மூலம் இந்த நோயை மேற்கத்திய நாடுகளில் குணப்படுத்தி உள்ளனர். ஆகவே,
ஒவ்வொரு கணவனும் பாலின்ப ஆற்றாமை என்கிற நோய் அண்டி
விடாத வண்ணம், தன் மனைவியின் பாலுணர்வைத் தணித்து வாழக்

கற்றுக்

கொள்வது மட்டுமே குடும்ப வாழ்க்கையை நிம்மதியுடையதாக வைத்துக்

கொண்டிருக்கும்.

பெண்ணின் ஆழ்மனமும் ,மூளை நரம்புகளின் வலைப் பின்னலும்

ஆண்மை மிக்க ஆணின் மார்பில் சரணடைந்து வாழும் படியாகத் தான்

வடி வமைக்கப் பட்டுள்ளன. ஆகவே, மனைவிக்குரிய பாலின்பங்களை

ஈடுபடக்கூடிய ஒவ்வொரு முறையும், தவறாமல் வழங்கக் கூடிய அறிவை

ஒரு கணவன் கற்றுக் கொண்டால், குடும்ப வாழ்க்கை குதூகலமான

கொண்டாட்டங்கள் நிறைந்த ஒரு ஆனந்த நடனமாகி விடும்.

ஆணாகப் பிறந்துள்ள ஒவ்வொருவரும் இதை அறிந்து நடந்து

கொள்வதே காலத்திற்கேற்பப் புத்திசாலித்தனமாக வாழும்

வழிமுறையாகும்.

### 9. சுய இன்பமும், விளைவுகளும்

சுய இன்பம் ஆண்மையைக் கடுகளவும் பாதிப்பதில்லை. ஆனால், சுய

இன்பத்தில் ஈடுபட்டது குறித்த அவனுடைய குற்றவுணர்வு ஆண்மையைப்

பாதிக்கிறது. அதே போலத் தொடர்ச்சியாக சுய இன்பத்தில் ஈடுபட்ட போது,

அவனுடைய மூளையும், பால் மண்டலமும் குறிப்பிட்ட வகையில் தானாக

இயங்கும் படியாக ஒரு பழக்கத்தை ஏற்படுத்திக் கொள்கிறது. அந்தப் பழக்கம்

ஆண்மையைப் பாதிக்கிறது.

வாழ்க்கையைத் துவங்கும் முன்பே திருமண முறிவு ஏன்?

பெற்றோரால் ஏற்பாடு செய்யப்பட்ட ஒரு திருமணம் நடந்தது. முதலிரவும்

முடிந்தது. ஆனால், அதற்கடுத்த ஓரிரு நாளில் அந்தத் திருமணம் நிரந்தரமாக

முறிந்து போயிற்று.

மணப்பெண் தான் முறிவிற்குக் காரணமாக இருந்தாள், ஏனெனில்,

மணமகனுக்கு ஆண்மை இல்லை என்கிற குற்றச் சாட்டை அந்த மணப்பெண்

கூறினாள்.

சமாதானப் பேச்சைத் தொடங்குவதற்கே வாய்ப்பளிக்காத குற்றச் சாட்டு

அது. அதனால், திருமண முறிவு அமுல் படுத்தப் பட்டது. ஏனெனில், இந்த

விவகாரத்தில் தன்னுடைய நிலையை எடுத்துச் சொல்லவோ, ஆண்மைத் திறனை

நிரூபித்துக் காட்டவோ, மணமகனுக்கு எவ்வித வாய்ப்பும் இல்லை,

அதனால், உரிய இழப்பீட்டை வழங்கி விட்டு, ஒதுங்குவதைத் தவிர,

மணமகனுக்கு வேறு வழியில்லை.

பிரச்சினை தெருவிற்கு வருகிறது. பலரும் இது குறித்து ஆராயத் தொடங்கு

கிறார்கள். அப்போது அந்தப் பெண்ணின் காதலைப் பற்றிய தகவல் கிடைக்கிறது.

அந்தப் பெண்ணும் தறுதலையாகத் திரிந்து கொண்டிருக்கும் ஒரு

வாலிபனும் காதலித்திருக்கிறார்கள். காதல் பல ஆண்டுகள் நிகழ்ந்திருக்கிறது.

வருடக் கணக்கில் பாலுறவும் நடந்திருக்கிறது.

ஆனால், பெண்ணின் கன்னிக் காதலை அவளுடைய பெற்றோர்

ஏற்கவில்லை. பெண்ணோடு போராடி, தங்கள் குடும்பத்தின் தகுதிக்கேற்ற இந்தத்

திருமணத்தை ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

தன்னுடைய காதலை மனமாறத் துறந்து விட்டுத் தான், அந்தப் பெண்ணும்

இந்தத் திருமணத்திற்கு சம்மதித்திருக்கிறாள். திருமணத்தின் போது

எடுக்கப்பட்ட ஒளிப்படக் காட்சிகள் இதைத் தெளிவாகப் புலப்படுத்துகின்றன.

எனினும், ஓரிரு நாட்களிலேயே மணமகனுக்கு ஆண்மைக் குறைவு

என்கிற குற்றச்சாட்டைக் கூறித் திருமணத்தை முறித்துக் கொண்டிருக்கிறாள்.

இதற்குப் பின்னால் உள்ள மர்மம் என்ன?

ஒப்பீடு செய்யும் வாய்ப்பு.

அந்தப் பெண்ணுக்கு ஒப்பிட்டுப் பார்க்கும் வாய்ப்பு இருந்திருக்கிறது.

திருமணத்திற்கு முந்தைய பாலுறவு அனுபவத்தோடு, கணவனோடு நிகழ்ந்த

பாலுறவு அனுபவத்தை ஒப்பிட்டுப் பார்க்கிறாள். எது ஆண்மை? எது ஆண்மைக்

குறைவு? என்பதைப் பிரித்தறியும் அறிவு அவளுக்கு இருந்திருக்கிறது,

காதலன் செயல்பட்டதைப் போல் கணவன் செயல் பட வில்லை,

கணவனுக்கு துரித ஸ்கலிதம் ஏற்பட்டு விடுகிறது. அந்த துரித ஸ்கலித நிகழ்வைப்

பாலியல் குறைபாடு என அப்பெண் கருதுகிறாள்.

அந்தக் கருத்தின் அடிப்படையில், அவளது கணவனுக்கு ஆண்மையில்லை,

அதனால் இப்படிப்பட்ட ஆண்மையற்ற கணவனுடன் காலமெல்லாம் வாழ

முடியாது என்று முடிவெடுத்து திருமணத்தை முறித்துக் கொள்கிறாள்.

திருமணத்திற்கு முன்பு பாலுறவு அனுபவம் எதுவுமற்ற ஆணின்

முதலிரவு வெற்றிகரமாக அமையும் என்று கூற முடியாது. ஏனெனில் அவன்

சுய இன்பத்தின் மூலம் பெற்றுள்ள அனுபவத்தின் அடிப்படையிலேயே

இயங்குகிறான்,

மேலும், ஒரு பெண்ணின் உடலை மிகவும் நெருக்கமான நிலையில்

பார்க்கும் போது, அவனுடைய மனதில் ஏற்படும் உணர்ச்சிகளால், அவனுக்கு

துரித ஸ்கலிதம் ஏற்பட்டு விடுகிறது.

பாலுறவில் முன் அனுபவமோ அல்லது அடிப்படையான பாலியல் அறிவோ

அல்லது உரிய பால் மண்டலப் பயிற்சியோ இல்லாத நிலையில் முதலிரவைச்

சந்தித்த ஒவ்வொரு ஆணும் இந்த அனுபவத்தைச் சந்திக்காமல், தன்

வாழ்க்கையைத் துவக்க முடியாது.

பத்துப் பதினைந்து நுழைத்தல்களிலேயே உயிர்நீர் வெளியேறி

விடுவதும்,

அதனால் ஆண் செயலிழந்து விடுவதும் முதலிரவிற்குப் புதியவை அல்ல.

துரித ஸ்கலிதம் என்பது அனைத்து ஆண்களுக்கும் பொதுவானது. எந்த

விதமான பாலுறவு அனுபவமும் இல்லாத, வெறும் சுய இன்ப அனுபவம் மட்டுமே

கொண்டுள்ள, பெண்களோடு நெருங்கிப் பழகும் வாய்ப்புக் கூட இல்லாத ஒரு

ஆணின் பாலுறவு வாழ்க்கை துரித ஸ்கலிதத்தோடு தான் துவங்கும் என்கிற

தகவல் அவளுக்குத் தெரியாது.

சொல்லப் போனால், அவளுடைய காதலனுடனான முதல் அனுபவமும்

இப்படித்தான் இருந்திருக்கும், ஆனால், அதை இந்தப் பெண்ணால்

உணர்ந்திருக்க முடியாது. அப்போது இந்தப் பெண் பாலுறவிற்குப் புதியவளாக

இருந்திருப்பாள்.

அதனால், காதலனின் ஒவ்வொரு செயலும் பெரிய அதிசயமாகவே

இருந்திருக்கும். முதன் முதலாகப் பாலுறவில் ஈடுபடும் ஒரு பெண்ணால்

ஆண்மைக் குறைவையெல்லாம் கண்டு பிடிக்க முடியாது.

உடலெல்லாம் சிலிர்த்து நிற்க, என்ன நடக்கும், எப்படி இருக்கும் என

மலைத்து நிற்கும், பட படப்போடு விழித்துக் கொண்டிருக்கும் பெண்ணுக்கு,

ஆண்மையைப் பற்றி மதிப்பீடு செய்ய வாய்ப்பே இல்லை. மேலும், அவளுடைய

வலியே அங்கே முன்னிலை வகிக்கும்.

அதனால், காதலனுக்கு ஏற்பட்ட துரித ஸ்கலித்ததை இவளால்

உணந்திருக்க முடியாது. பாலுறவு என்பதே இப்படித்தான் இருக்கும்

போலிருக்கிறது என்று தான் எண்ணிக் கொண்டிருந்திருப்பாள்.

ஆனால், அடுத்தடுத்து ஈடுபடும் போது, காதலனின் பதற்ற நிலை குறைந்து

விடுவதால், இந்தப் பெண்ணுக்கு உச்சகட்ட இன்பம் நிகழாவிட்டாலும்

உராய்வின்பமாவது கிடைத்திருக்கும்.

அதனால், பாலுறவென்றாலே குறைந்த ட்சம் உராய்வின்பத்தையாவது தர

வேண்டும். அதைக் கூடத் தராத ஆண் ஆண்மையற்றவன் என்கிற முடிவிற்கு

அந்தப் பெண் வருகிறாள். அதன் அடிப்படையில், திருமணத்தை முறித்துக்

கொள்கிறாள்.

மோசமான முதலிரவும் அதன் விளைவுகளும்.

சில தினங்களில் சரியாகி விடக்கூடிய ஆணின் பலவீனம் நிரந்தரமான

குறைபாடாகக் கருதப்பட்டு, மணமகனுக்கு தண்டனை வழங்கப் படுகிறது.

ஒரு இளைஞனின் இல்லற வாழ்க்கை துவங்கும் முன்பே முடிந்து போகிறது.

இதே இளைஞன் அனுபவசாலியாக இருந்திருந்தால், வாழ்க்கை இப்படிப்

பறி போயிருக்காது. ஆனால், அனைவருக்கும் முன் அனுபவ வாய்ப்புக் கிடைத்து

விடுவதுமில்லை, கிடைக்கிற முன் அனுபவங்களெல்லாம் பாலியல்

அறியாமையைக் களைந்து விடக் கூடிய கல்வியைப் போதித்து விடுவதுமில்லை,

மோசமான முதலிரவுத் துவக்கத்தைக் கொண்ட திருமணங்கள்

அனைத்துமே உடனடியாக முறிந்து விடுவதில்லை. சூழல் காரணமாகச் சில

இடங்களில் திருமண உறவு தொடர்கிறது. எனினும், முதலிரவன்று ஏற்பட்ட

அனுபவத்தால் கணவனின் ஆண்மையைப் பற்றி, பெண்ணின் ஆழ் மனதில்

உருவான கருத்து எளிதில் மாறுவதில்லை.

பாலுறவைப் பொறுத்த வரை, மோசமான கருத்தொன்று ஏற்பட்ட பின்,

கணவனால் காட்டப்படும் மடத்தனமான திறமைகள் எதுவும் மனைவியிடம்

எடுபடுவதில்லை.

அவ்வாறு எடுபடாததன் காரணமாக, சூழல் காரணமாக வலிந்து

தொடரப்பட்ட திருமணங்கள் கூட சில மாதங்களிலோ அல்லது ஓரிரு

வருடத்திற்குள்ளோ முறிந்து போகிறது.

அதற்குள் பெண் கருவுற்று விட்டால், குழந்தையின் பொருட்டு விருப்பமற்ற

இதே வாழ்க்கையையே தொடர்ந்தாக வேண்டிய நிர்பந்தம் உருவாகி விடுகிறது.

அத்தகைய நிர்பந்தம் காரணமாக ஆணும் பெண்ணும் சேர்ந்து வாழத் துவங்கும்

போது தான், இல்லற வாழ்க்கை போர்க்களமாக மாறத் தொடங்குகிறது.

பாலுறவில் முன் அனுபவமற்ற ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே

நடைபெறும் திருமண வாழ்க்கை அமைதியாகத் துவங்கி விடுகிறது.

அதேபோல ஆணுக்கு மட்டும் முன் அனுபவம் இருந்தாலும் வாழ்க்கையைத்

துவக்குவதில் எவ்விதப் பிரச்சினையும் ஏற்படுவதில்லை,

ஏனெனில், திருமணத்தை நிலை நிறுத்துகின்ற அல்லது சீர்குலைக்கின்ற

சக்தியாகத் திகழும் பெண் அதிருப்தி அடைவதற்கான வாய்ப்பு அங்கே

ஏற்படுவதில்லை,

ஆனால், பாலுறவில் முன் அனுபவம் உள்ள பெண்ணுக்கும், சுய

இன்பத்தில் ஓட்டப் பந்தயம் நடத்திக் கொண்டிருந்த ஆணுக்கும் இடையே

துவக்கப் படுகின்ற திருமண உறவு தான், வாழத் துவங்கும் முன்பே முறிந்து

போகிறது. அல்லது தள்ளாட்டத்தோடு தனது பயணத்தைத் துவக்குகிறது.

முறித்துக் கொள்ள முடியாத நிர்பந்தச் சூழலில் தொடரும் வாழ்க்கை

முட்படுக்கையாக மாறிப் போகிறது. ஆகவே, குடும்ப வாழ்க்கையில் நிலவும்

அவலங்களுக்கு ஆணின் சுய இன்ப அனுபவமும் ஒரு காரணமாக இருந்து

கொண்டிருக்கிறது.

ஒரு ஆணின் சுய இன்ப பழக்கம் பதின் பருவத்தில் துவங்குகிறது.

ஏறக்குறைய பத்து ஆண்டுகள் அது தொடர்கிறது. வாரம் ஒரு முறை எனக்

கணக்கிட்டால் கூட, ஐநூறு முறைக்கும் மேல் ஒரு ஆண் சுய இன்பத்தை

அனுபவித்து விடுகிறான், அப்போதெல்லாம் வேக வேகமாக, விரைவில் முடிந்து

விடும் படியாகத்தான் அனுபவித்திருக்கிறான்.

இயற்கையாக உருவாகும் பால் அழுத்தத்தை வெளியேற்ற உடல்

தூண்டுகிறது. தன்னுணர்வற்ற நிலையில் ஆணும் செயல்படுகிறான். மேலும்

யாருக்கும் தெரியாமல் முடித்துக் கொள்ள வேகமாக இயங்குகிறான். குற்ற

உணர்வோடும் ஈடுபடுகிறான், அதனால், தூரித ஸ்கலிதம் நிழ்ந்து விடுகிறது.

இவ்வாறு ஈடுபட்டதால், பால்மண்டலத்தில் வாழும் உயிரணுக்களுக்கு துரித

ஸ்கலிதம் ஒரு பழக்கமாகி விடுகிறது. அதன் பின் பழக்கத்தின் அடிப்படையில்

அவை இயங்குகின்றன. திருமணமான பின் பழக்கப் படுத்தப் பட்ட படியே உடல்

செயல் படுகிறது.

பழக்கத்தை உருவாக்குவது எளிது. உடைப்பது கடினம். மனம் கைவிட

விரும்பினாலும் உடல் ஏற்காது. அதனால் பழக்கப் படுத்தப் பட்டுள்ள படி, வேக

வேகமாக, உடல் இயங்குகிறது. ஆணின் இன்பம் விரைவில் நிகழ்ந்து விடுகிறது.

பெண்ணின் உடலுக்குத் தேவைப்படும் குறைந்த பட்ச உராய்வின்பத்தைக்

கூட வழங்குவதில்லை, அதனால், திருமணத்திலிருந்து பெண் விடுபட்டு

விடுகிறாள். அல்லது பாலின்ப ஆற்றாமை நோயால் பாதிக்கப்பட்டு மனநலம்

கெட்டு, கூட இருந்தே அவனை வதைத்துக் கொண்டிருக்கிறாள்.

சுய இன்பமும் ஆணிண் பாலுறுப்பும்.

உலகம் முழுவதும் உள்ள இளைஞர்களைக் கலவரப் படுத்துகிற ஒரு விசயம்

சுய இன்பம், ஏனெனில், பெரும்பாலான இளைஞர்களுக்கு சுய இன்ப அனுபவம்

இருக்கிறது. அதே சமயத்தில் சுய இன்பம் ஆண்மையைப் பாதிக்கக் கூடியது

என்கிற கருத்தையும் அவர்கள் நம்புகிறார்கள். அதனால், தங்கள் மன அளவில்

பாதிக்கப் பட்டிருக்கிறார்கள். அந்த மன பாதிப்புத் தான் அவர்களுடைய

செயல்பாட்டை மோசமடையச் செய்து விடுகிறது.

தங்களுடைய மருந்துப் பொருட்களை விற்பதற்காக, சில மருத்துவர்களே

கூட பொய்ப் பிரச்சாரத்தில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆனால், சுய

இன்பத்தால் ஆணின் பாலுறுப்பிற்கோ, உடல் நலத்திற்கோ, மன நலத்திற்கோ,

கடுகளவும் தீங்கில்லை.

பாலுறுப்பு சிறுத்துப் போவதாய்ச் சொல்வது பொய், வீரியம் குறைந்து

போவதாய்ச் சொல்ல படுவது மிரட்டல், சீக்கிரத்தில் விந்து வெளியாகி விடும்

என்பது உண்மை, ஆனால், இது ஆண்மைக் குறைவும் அல்ல, ஒரு நோயும்

அல்ல, பழக்க தோசம்,

இந்தப் பழக்க தோசத்தால் ஏற்பட்டுள்ள மோசமான விளைவுகளை அதே

சுய இன்பச் செயலையே பயன்படுத்தி எளிதாக மாற்றி விட முடியும். ஓரிரு வாரக்

காதற் தசை நார்ப் பயிற்சி, மற்றும் வீரிய அளவுகோல் பயிற்சியின் மூலமாக

லிங்கத்தை வலுப்படுத்துவதோடு, பால் மண்டலத்தில் ஏற்பட்டுள்ள பழக்கத்தை

மாற்றி விடலாம்.

ஆகவே, ஆண் தன்னுடைய உயிர் நீரை வெளியேற்றுவதையே நோக்கமாகக்

கொண்டு செயல் படக் கூடாது. அது தான் இன்பம் என்று கருதக் கூடாது.

இன்பத்தையும், உயிர்நீர் வெளியேற்றத்தையும் பிரித்துப் பார்க்கும்

வழிமுறையைக் கற்றுக் கொள்ள வேண்டும். உயிர்நீரை வெளியேற்றாமலே

பன்முறை உச்சத்தை அனுபவிக்கவும் கற்றுக் கொள்ள வேண்டும்.

தந்த்ரா ஞானியாரின் வழிமுறைகளின் படி பாலியல் பயிற்சிகளை மேற்கொள்ள

வேண்டும். பாலியல் அறிவும், முறையான பயிற்சியும் மட்டுமே திருமண

வாழ்க்கைக்கான வெற்றிகரமான அடித்தளத்தை உருவாக்கிக் கொடுக்கும்.

அந்த வலுவான அடித்தளம் காரணமாக ஆணின் இல்லற வாழ்க்கை

அற்புதமான அனுபங்களைக் கொண்டதாக இருக்கும்.

ஒரு இயற்கை நிகழ்வு.

சுய இன்பம் ஒரு இயற்கை நிகழ்வு. பெரும்பாலான மிருகங்கள் சுய

இன்பத்தில் ஈடுபடுகின்றன. எந்தவிதக் கெடுதலையும் அது செய்வதில்லை.

இயற்கையான பாலுறவால் கிடைக்கக் கூடிய நன்மைகள் அனைத்தும் சுய

இன்பத்தின் மூலமாகவும் உடலுக்குக் கிடைக்கிறது. ஆணின் பிராஸ்டேட்

சுரப்பியில் வரக்கூடிய புற்று நோயை அது நிச்சயமாகத் தடுக்கிறது.

ஏனெனில், ஆணின் பதினெட்டு வயதில் தான் ஆண்மைத் தன்மை உட்ச

பட்ச ஆற்றலுடன் இருக்கும். ஆனால், திருமணமோ இருபத்தைந்து வயதிற்கு

மேல் தான் நடைபெறுகிறது. ஆகவே, அதுவரை விந்து வெளியேற்றமே

நிகழாவிட்டால், அது தான் புற்று நோய்க்கு வழி வகுக்கிறது.

புகை பிடித்தல், மது அருந்துதல், ஓரினச் சேர்க்கை போன்றவை தான்

ஏற்படுத்திக் கொண்ட பழக்கங்கள். சுவையறிந்துவிட்டால், கை விடுவது கடினம்.

ஆனால், சுய இன்பத்தில் ஈடுபடுவது ஒரு பழக்கம் அல்ல.

அது ஒரு இயற்கை நிகழ்வு. தவிர்க்க முடியாத நிகழ்வு. உடலில் ஏற்படும்

பால் அழுத்தத்தை வெளியேற்றுவதற்கான தற்காலிக மாற்று ஏற்பாடு. மேலும்

இன்றைய காலகட்டத்திற்கு அவசியமானதும் கூட.

குற்றவாளியாக ஏராளமான வாய்ப்புகளை வழங்கக் கூடிய காலம் இது.

மன அழுத்தம் காரணமாகவே மனிதன் குற்றச் செயல்களில் ஈடுபடுகிறான்.

சுய இன்பம் இளைஞனின் மன அழுத்தத்தைக் குறைத்து, மனதைச்

சாந்தப் படுத்துகிறது. அவ்வாறு குற்றச் செயல்களில் ஈடுபட்டு விடாமல்

இளஞனைத் தடுப்பதன் மூலம், சமூகத்தில் சட்ட ஒழுங்கைப் பேண உதவுகிறது.

பாலின்பம், ஒரு மகா சக்தி, ஆணும், பெண்ணும் ஈடுபடுவதன் மூலம்

பெறக்கூடிய இன்பத்திற்குப் பெயர் பாலின்பம். அதையே தனிப்பட்ட முறையில்

நிகழ்த்திக் கொண்டால் அதன் பெயர் சுய இன்பம். அவ்வாறு சுய இன்பத்தில்

ஈடுபடும் போது, உடலில் ஏற்பட்டுள்ள பால் அழுத்தம் வெளியேறுகிறது.

அதனால், மனநிலை சாந்தமடைகிறது.

மன நலம் சீராக இருந்தால் உடல் நலம் நிச்சயமாக சிறப்பாக இருக்கும்.

உற்சாகம் குறையாமல் இருக்கும். மனம் ஊக்கமுடையதாக இருக்கும். சாதிக்க

வேண்டும் என்கிற இலட்சிய வெறி இருக்கும்.

பிறருடனான உறவு சிறப்பாக இருக்கும், சிந்தனை மிகவும் சிறப்பாக

இருக்கும். செயல் படும் வேகம் சிறப்பாக இருக்கும். மூளையின் ஆற்றல் சிறப்பாக

இருக்கும், அதோடு, உடனடியாகக் காதலித்தேயாக வேண்டும் என்கிற நெருக்கடி

உடலிலும் ஏற்படாது. மனதிலும் ஏற்படாது. அதனால், மேற்கொண்டுள்ள

இலட்சியப் பாதையிலிருந்து கவனம் சிதறாது.

பணிகளில் கவனம் செலுத்த, எதிர்பாலினத்தோடு இயல்பாகப் பழக அது

உதவுகிறது. அதனால் பாலியல் குற்றங்களில் ஈடுபடாமல் இளைஞனைப்

பாதுகாக்கிறது. சமூக அமைதிக்கும் பங்கம் வராது.

சட்டம் போட்டெல்லாம் சுய இன்பத்தில் ஈடுபடுவதைத் தடுக்க முடியாது.

அது இயற்கைக்கு விரோதமானது. ஏனெனில் இயற்கை உபாதைகளைத் தீர்த்துக்

கொள்வதைப் போன்ற ஒரு இயற்கை நிகழ்வு அது.

கருவில் இருக்கும்போதே பாலுறுப்பு விரைப்படைவதும், பாலுறுப்போடு

இளந்தளிர்கள் தொட்டிலுக்குள் விளையாடி மகிழ்வதும், ஐந்து வயதிலேயே எதிர்

இனத்தின் பாலுறுப்போடு தன்னுடைய உறுப்பைப் பொறுத்திப் பார்க்க

முயற்சிப்பதும் எப்படி ஒரு இயற்கை நிகழ்வோ, அதே போன்ற ஒரு இயற்கை

நிகழ்வு தான் சுய இன்பம்.

ஆனால், இந்த இயற்கை நிகழ்வு திருமண வாழ்க்கையைப் பாதிக்கிறது.

திருமணம் என்பது பெண்ணின் கையில் உள்ள கண்ணாடிக் குடுவை. திருமண

வாழ்க்கையைத் தொடரும் விசயத்தில், பெண்ணின் முடிவே இறுதியானது.

அதே நேரத்தில், பரிசோதனை ஓட்டமும் சாத்தியமில்லை. எந்தப் பெண்

எப்படிப்பட்ட வள்? எந்தப் பெண் எதை எதிர்பார்த்து திருமணத்திற்குள்

வருகிறாள்? என்பதையெல்லாம் முன்கூட்டியே அறியும் வாய்ப்பு வாழ்க்கையைத்

துவங்கும் முன் ஆணுக்கு வழங்குவது சாத்தியமும் இல்லை.

ஆகவே எதையும் எதிர்கொள்ளும் பாலியல் திறனுடன் ஆண்

வலுவானவனாக இருப்பதே இன்றைய குடும்ப வாழ்க்கையைக் காப்பாற்றிக்

கொள்ள உதவக் கூடியது. அதனால், வாலிப வயதின் தவிர்க்க முடியாத நிகழ்வான

சுய இன்பச் செயலையே, திருமணத்தைப் பாதுகாத்துக் கொள்வதற்குரிய ஒரு

பயிற்சிக் களமாக இளைஞர்கள் மாற்றிக் கொள்ளலாம்.

நீண்ட நேரம் இன்பம் அனுபவிப்பது எப்படி? வலியில்லாமல் அனுபவிப்பது

எப்படி உயிர்நீரை வெளியேற்றாமலே அனுபவிப்பது எப்படி? பன்முறை

உச்சகட்ட இன்பத்தைப் பெறுவது எப்படி? லிங்கத்தின் வீரியத் தன்மையை நீண்ட

நேரம் நீடித்திருக்கச் செய்வது எப்படி? என்பதை கற்றுக் கொள்வதற்கான ஒரு

வாய்ப்பாக சுய இன்பச் செயலைப் பயன்படுத்திக் கொள்வதே

புத்திசாலித்தனமானது.

ஒரு இயற்கையான நிகழ்வையே, ஒரு திட்டமிட்ட பயிற்சியாகச் செய்வதன்

மூலம், ஆண்களின் ஆண்மைத் தன்மையை அதிகரித்து விடலாம். செயல்படும்

ஆற்றலை நூறு மடங்கு உயர்த்தி விடலாம். அதன்மூலம் ஒரு வெற்றிகரமான

குடும்ப வாழ்க்கைக்கான அடித்தளத்தை அமைத்து விடலாம். பாலியல் காரணமாக

சிதையும் குடும்ப அமைப்பைக் காப்பாற்றி விடலாம்..

தந்த்ரா ஞானிகளும், தாவோக்களும் சுய இன்பம் மூலமாகத்தான்

ஆணின் ஆண்மைச் சக்தியை, லிங்கத்தின் வீரியத்தை, பாலுறவுச்

செயலாற்றலை வலுப்படுத்தும் பயிற்சியைக் கற்றுக் கொடுக்கிறார்கள்.

## பாகம்-**3**

### பாலின்பத்தின் ஆற்றல்

### ஆண்மையின் மீதான தன்னாற்றலை

வளர்த்துக் கொள்ள,
ஆண் மேற்கொள்ள வேண்டிய பயிற்சிகள்.
அன்பை உருவாக்கும் பட்டறை.
அவன் காதலி
வசீகரிக்கின்ற
சிற்றின்ப வேட்கையோடு
அவனை வசியப்படுத்தினாள்.
அவளோடு
நீண்ட நேரமாய் இருத்தலின் மூலமே
அவளுள் அவன் நெருப்பூட்டினான்,
அவர்களிருவரும்
ஒருவரையொருவர் ஏதேதோ செய்து கொண்டனர்.
அதனால்,
ஒருவரில் மற்றவர் சரணடைந்திருந்தனர்.
அதன் விளைவாக,
அவர்களிருவரும் உச்சகட்டப்
பேரின்பப் பேரானந்த அலைகளிலே தவழ்ந்து
ஒருவரில் மற்றவர் கரைந்து போயினர்.
கொண்டிருந்த போது,
அப்போது, நான் அங்கே பார்த்தேன்,
ஆம். அப்போது, நான் அங்கே பார்த்தேன்.
அதைப் பார்ப்பது எனக்கு மிகமிகப் பிடிக்கும்.
மா தவத்தைப்பார்த்திட யாருக்குத்தான் பிடிக்காது.
அதனால் நானும் பார்த்தேன்.
ஆனால், நான் பார்த்தபோது அங்கே யாருமேயில்லை.
இரண்டு இதயங்கள் மட்டுமே இருந்தன,
அவையும் இரண்டாக இல்லை,
இறண்டறக் கலந்திருந்தன,
மீண்டும் நான் பார்த்தேன்.

மீண்டும் நான் பார்த்த போது அந்த இதயங்களையும் காணவில்லை,

ஒன்றே ஒன்று மட்டுமே தான் அங்கேயிருந்தது.

அன்பு!

தூய அன்பு மட்டும் தான்

ஆம். அன்பு மட்டும் தான்,

அங்கே இறுதியாக எஞ்சியிருந்தது.

**1.** தந்த்ராவின் பார்வையில் பெண்

தந்தரா! பெண்ணைப் போற்றுவது. பெண்ணை வணங்குவது. பெண்ணே

தெய்வம். பெண்ணே ஆக்கும் சக்தி. பெண்னே அனைத்திற்கும் மூலம்,

பெண்ணே அனைத்து உருவாக்கங்களுக்கும் காரணம்.

எங்கேயும் எப்போதும் பெண்ணே இயக்குனர். அவளுடைய தாளத்திற்கேற்ப

நடனமாடுபவனே ஆண். இது மாற்ற முடியாத இயற்கை நியதி. ஆகவே, பெண்

போற்றி வளர்க்கப்பட வேண்டியவள்.

வாழ்க்கை என்பது ஒரு வட்டம். அந்த வட்டத்தின் மையம் பெண், பெண்ணே

குடும்பத்தின் மையம். அந்த மையத்தை சுற்றி வருகின்ற பரிதி தான் ஆண்.

மையத்தையும் பரிதியையும் இணத்துப் பிடித்திருக்கும் ஆரக் கால்களே

குழந்தைகள். மையம் சரியாக இருந்தால் மட்டுமே சக்கரம் உழலாமல் சீராகச்

சுழல் முடியும், அந்த மையத்தைப் பாதுகாக்க வேண்டியது பரிதியின் கடமை.

மேலும், கணவனின் மனநிலையை மகிழ்ச்சியாக வைத்திருப்பவள்

மனைவி, ஆகவே, மனைவியின் மனநிலை மகிழ்ச்சியாக இருந்தால் தான்

ஆடவனால் தன் பணியில் வெற்றி பெற முடியும்.

குழந்தைகளின் மனநிலையை மகிழ்ச்சியாக வைத்திருப்பவள் மனைவி,

குழந்தைகளின் மனநிலை மகிழ்ச்சியாக இருந்தால் தான், கற்கும் திறன்

சிறப்பாக

இருக்கும்,

குடும்பத்தின் தரம் மனைவியின் கையில் தான் இருக்கிறது. மனைவி

என்பவள் மந்திரி, ஆகவே மனைவியின் அறிவே குடும்பத்தின் அறிவு.

மனைவியின் சமையலே குடும்பத்தினரின் ஆயுளைத் தீர்மானிக்கிறது.

மனைவியின் சுகாதாரமே குடும்பத்தின் ஆரோக்கியத்தைக் காக்கக் கூடியது.

மனைவியின் நடத்தையே கணவனின் கம்பீரமான நடையைத் தீமானிக்கிறது.

கணவனின் பெருந்தன்மைக்கு மனைவி தருகின்ற பாலின்பமே காரணம்,

பாலின்பத்தைத் தர மனைவி மறுத்தால் ஆணின் மூளை மழுங்கிப் போய் விடும்.

எப்படிப்பட்ட மேதாவியும் தொழிற்போட்டிகளில் தோற்றுப் போவான்,

ஆகவே ஒவ்வொரு கணவனும் தன் மனைவியை ஒரு தேவதையைப் போல்

வைத்திருக்க வேண்டும். ஆண் தன் மனைவியை தேவதையைப் போல

வைத்திருந்தால், அவள் கணவனின் வாழ்க்கையை மட்டுமல்ல, அவளுடைய

சுற்றுப் புறம் முழுவதையுமே சொர்க்கமாக வைத்திருப்பாள் என்று கூறுகிறது.

தந்தரர்.

தேவதையாக வைத்திருப்பது என்றால் என்ன பொருள்? அரை ஏக்கரில் வீடு,

இறக்குமதி செய்யப்பட்ட வாகனங்கள், சுமக்க முடியாத அளவிற்கு நகைகள்,

ஏராளமான பட்டுப்புடவைகள், ஏவல் புரிய ஆட்கள் கான மனைவியைப் புறம் சார்ந்த

சுகபோகத்தில் திளைக்கச் செய்வது மட்டுமே, அவளை தேவதையைப் போல

உணரச் செய்து விடாது.

மனைவியின் ஆன்மாவைக் குளிரச்செய்கின்ற காமம் தணிக்கப்பட

வேண்டும், பெண்ணுக்குரிய உச்சகட்டப் பாலின்பங்கள் அனைத்தும்

தவறாமல்

மனைவிக்கு வழங்கப்பட வேண்டும். மனைவியை ஒரு போகப் பொருளாகப்

பயன்படுத்தக் கூடாது.

கணவனுக்குரிய போகப் பொருளாகப் பயன்படுத்துவதன் மூலம்,

வீரகதாபம் தீராத நிலையிலேயே வாழும் படியாகப் பெண்ணை வைத்திருக்கக்

கூடாது.

இவ்வாறு வதைப்பது ஒரு வகையான சித்திரவதை. காமமே அனைத்து

உணர்ச்சிகளுக்கும் தாய். அது தணிக்கப்பட்டால் தான் அன்பு, மகிழ்ச்சி, ஈகை,

இரக்கம் போன்ற நல்ல உணர்ச்சிகள் மனதில் தோன்றும்.

பெண்ணின் உடலில் பாலின்பம் நிகழும் போது மூளையிலே சுரக்கக் கூடிய

வேதிப் பொருட்களே மேற்கண்ட உணர்ச்சிகளை உருவாக்கக் கூடியவை.

தன்னுடைய தாய், சகோதரி, மகள் என எந்த உறவின் சோரத்தையும் ஒரு

ஆணின் மனம் செரித்து விடும். ஆனால், தன்னுடைய உள்ளங் கவர்ந்த காதலியை

இனியொரு ஆண் அபகரிப்பதை அவ்வளவு எளிதில் ஆணின் மனம் செரித்து

விடுவதில்லை, ஆணின் ஆழ்மனமும், மூளையின் வலைப் பின்னலும்

இயற்கையால் அவ்வாறு தன் அமைக்கப்பட்டுள்ளன.

ஆண் நிம்மதியாக வாழ வேண்டுமானால், தன்னுடைய உள்ளங் கவர்ந்த

பெண்ணின் விரகதாபத்தைத் தீர்க்கக் கற்றுக் கொள்ள வேண்டும்.

இந்த உண்மை இன்று நேற்று கண்டுபிடிக்கப் பட்டதல்ல. பல்லாயிரம்

ஆண்டுகளுக்கு முன்னால் வாழ்ந்த ஞானிகளால் கண்டு பிடிக்கப் பட்டது.

அவ்வாறு கண்டுபிடித்ததோடு நில்லாமல், பெண்ணின் விரக தாபத்தைத்

தணிப்பதற்குரிய வழிமுறைகளையும், அந்த ஞானிகள்

உருவாக்கியுள்ளார்கள்.

கணவனாக இருக்கக் கூடிய ஆணின் பாலியல் கடமைகளை அவர்கள் வரையறுத்துக் கூறியிருக்கிறார்கள்.

தந்த்ரா என்பது ஒரு ஞானப் பெருங்கடல். காமத்திலிருந்து கடவுளை நோக்கிச் செல்வதற்கான வழியைப் போதிக்கக் கூடியது. பல நூல்களை எழுதுவதன்
மூலம் மட்டுமே அதன் முழு விவரங்களையும் பகிர்ந்து கொள்ள முடியும்.

ஆனால், ஞானமடைவதைப் பற்றிப் போதிப்பது இந்த நூலின் நோக்கம் அல்ல. இல்லற வாழ்வை நிம்மதியாக, மகிழ்ச்சியாக, வெற்றிகரமாக, உடல்நலத்தோடு வாழ்வதற்குரிய வழிகளைப் பகிர்ந்து கொள்வது தான் நூலின் முதன்மையான நோக்கம்,

வறட்டுத் தனமான பாலுறவை புனிதச் செயலாக மாற்றினால் மட்டுமே, போகப் பொருளாகப் பெண்ணைப் பயன்படுத்தும் கொடூரத்திற்கு முடிவு கட்ட
முடியும்,

அந்த நிலையை உருவாக்கினால் மட்டுமே ஒருதார வாழ்வை மையமாகக்
கொண்ட குடும்ப நிறுவனம் செழிப்புடன் இருக்க முடியும் என்பதால், தாம்பத்ய
வாழ்க்கைக்குரிய தந்த்ரா வழிமுறைகள் மட்டுமே இந்த பாகத்தில் சுருக்கமாகப்
பகிர்ந்து கொள்ளப்படுகின்றன.

பாலியல் புரட்சி நடந்து கொண்டிருக்கும் காலம் இது.

ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே நடைபெறுகின்ற பாலுறவால் உருவாகின்ற பாலின்பம் தான் குடும்ப வாழ்க்கை என்கிற வாகனம் சீராக
இயங்குவதற்கான எரிபொருள்.

தம்பதியரிடையே நிலவும் சரச சல்லாபங்கள் (கொஞ்சல்களும், குலாவல்களும்) தான் அந்த வாகனத்தின் தேய்மானப் பகுதிகளைப் பாதுகாக்கின்ற உயவுப் பொருட்கள்,

ஒரு தார் வாழ்க்கை என்பது தான் அந்த வாகனத்தின் வேகத்தைக் கட்டுப்

படுத்தும் கருவி, இவற்றில் எந்தவொன்று இல்லையென்றாலும் குடும்ப வாழ்க்கை

என்கிற வாகனம் பழுதடைவது உறுதி.

இந்நிலையில் டோகப் பொருளாகப் பெண் பயன்படுத்தப் படுகின்ற இல்லற

வாழ்வில், மனைவி எரிபொருள் இல்லாத வாகனமாகி விடுகிறாள், எரிபொருள்

இல்லாமல் பயனற்றுக் கிடக்கும் வாகனத்திற்கு சரச சல்லாபங்கள் என்கிற உயவுப்

பொருளைக் கணவன் அளிப்பதில்லை. அதனால் வாகனம் பழுதடைகிறது.

பயன்படுத்தாத எந்தப் பொருளும் பழுதடையும், பாழடையும் என்பது இயற்கை விதி.

பாலுறுப்புக்கள் பாழடையும் போது பாலுறவு நிகழ்வதில்லை. பாலுறவு

நிகழாத காரணத்தால், மூளையிலே சுரக்க வேண்டிய நல்ல வேதிகள்

சுரப்பதில்லை. அந்த வேதிகள் சுரக்கத காரணத்தால், பெண்ணின் குண நலன்

பாதிக்கப் படுகிறது. தணிக்கப்படாத காமத்தால் ஏற்பட்ட ஆத்திரத்தில், சட்டம்

பேசுகிறாள்.

பிறிடும் ஆத்திரம் என்பதே பாலின்ப ஆற்றாமையால் வருகின்ற ஒரு மன

நோய் தான், உடலுக்குரிய பாலின்பம் நிகழாததால், ஏற்படக்கூடிய பத்து முதல்

பதினைந்து சதவீத ஹிஸ்டீரியா நோய் அது.

பாலின்பம் நிகழாத காரணத்தால் ஒரு வித பால் அழுத்தம் உடலில்

ஏற்படுகிறது, ஏதாவது ஒரு வழியில் அந்த அழுத்தம் உடலுக்குள்ளிருந்து

வெளியேறியாக வேண்டும். இல்லாவிட்டால் முழுப் பைத்தியம் பிடித்து விடும்.

அதனால் வாய்ப்புக் கிடைத்த உடனே அது சீறிப் பாய்கிறது. அவ்வாறு

சீறிப்பாய்வதற்காக வாய்ப்புகளை ஏற்படுத்துகிறது. இது தான் தம்பதிகளிடையே

பூசல்களாக வெளிப்படுகிறது.

கடந்த காலத்தில், பெண்ணின் உடலில் உச்ச கட்ட பாலின்பத்தை

ஏற்படுத்தி, இந்தச் சீறிப்பாயும் நோயை மருத்துவர்கள் குணப்படுத்தி உள்ளனர்.

இன்றைய கால கட்டத்தில், இந்தியா போன்ற நாடுகளில் பெண்ணின்

சீற்றம் என்பது பரவலாக நிலவுகிற காரணத்தால், இந்தக் கொதிநிலை ஒரு

நோயாக அறியப்படாமலிருக்கிறது.

தன்னைத் தாக்கிக் கொண்டிருப்பது பாலின்ப ஆற்றாமையால்

ஏற்பட்டுள்ள மன நோய் என்பது பெண்ணுக்குக் கூடத் தெரிவதில்லை.

அதனால், தன்னுடைய அடிப்படைப் பண்பே பிடாரித்தனம் தான் என்று

பெண் நினைத்துக் கொண்டிருக்கிறாள்,

உலகெங்கும் பாலியல் புரட்சி நடந்து கொண்டிருக்கும் காலம் இது.

எண்ணற்ற தளங்களில் பெண் விடுதலையை சாத்தியமாக்கியுள்ள காலமும் கூட.

ஆகவே, வரலாறு நெடுகிலும் ஆண் கடந்து வந்துள்ள எந்தவொரு கால்

கட்டத்தையும் விட, அன்பை நிலை நாட்டும் செயலை ஆணோ முன்னெடுத்துச்

சென்றாக வேண்டிய காலம் இது.

கணவனுக்குரிய தகுதி களைக் கொண்ட ஆண் என்பதை

இன்றைய கணவன் தன்னுடைய மனைவியிடம் நிருபித்தாக வேண்டும்.

இல்லாவிட்டால் நிம்மதியை, மகிழ்ச்சியை, நீண்ட நாள் உயிர் வாழும் ஆசையை

அவன் துறந்தாக வேண்டும்.

ஏனெனில், பல்லாயிரம் ஆண்டுகளாக அடிமைப்பட்டுக் கிடந்த பெண்

விழிப்படைந்து விட்டாள். காலம் மாறி விட்டது. கூட்டுக் குடும்பத்தின் மூலம்

பெண்ணை அடிமைப்படுத்தி வைத்திருந்த காலம் மலையேறி விட்டது.

முன்னூறு ஆண்டுகாலப் பெண்களின் போராட்டத்தால், தன்

அனைத்தையும் இன்றைய பெண் பெற்று விட்டாள்.

பெண்ணும் தன்னுடைய பாலின்பங்களை எதிர்பார்க்கத் தொடங்கி

விட்டாள், என்னுடைய உடற்தேவை நிறைவேற்றப் படாவிட்டால் உன்னுடைய

கோரிக்கையும் நிர்த்தாட்சண்யமாக நிராகரிக்கப்படும் என்பதைத் தெளிவாக

வரையறுத்துக் கூறும் காலம் வந்து விட்டது.

எதை எதிர்பார்த்து ஒரு பெண் திருமண வாழ்விற்குள் வந்தாளோ, அது

கிடைக்காதட்சத்தில், அந்த வாழ்க்கையைத் தொடர்வது பற்றி அவள் யோசிப்பது

நியாயமே என்கிற கருத்தும் உருவாகி விட்டது.

இந்த மாற்றத்தைத் தறெனக் கூற முடியாது. பெண்ணின் எதிர்பார்ப்பு

மிக மிக நியாயமானது, ஏனெனில், பாலின்பம் என்பது இன்பம் சார்ந்த செயல்

மட்டுமே அல்ல. அது உடல் நலத்தைப் பேணக்கூடியது. மன நலத்தைச் சீராகப்

பராமரிப்பது.

ஆகவே, கணவனாகப் பதவியேற்கும் ஆண் மனைவியாக வருகிற

பெண்ணின் எதிர்பார்ப்பை நிறைவேற்றியாக வேண்டும்,

தன்னுடைய மனைவியை போகப் பொருளாகப் பயன்படுத்திக்

கொண்டிருக்கும் பண்டைய ஆணாதிக்க நிலையைத் துறந்து விட்டு,

மனைவிக்குரிய இன்பங்களை வழங்கும் சூத்திரங்களை ஒவ்வொரு கணவனும்

கற்றாக வேண்டும்.

தன்னுடைய ஆதிக்க மனோ நிலையைத் துறந்து, பெண்ணின் பால் சார்ந்த

எதிர்பார்ப்புகளை நிறைவேற்றக் கூடிய புதிய மனிதனாக ஆண் மாறியாக

வேண்டும்.

எந்தவொரு ஆணும், தன் மனைவியை போகப் பொருளாக இனியும்

பயன்படுத்திக் கொண்டிருக்கக் கூடாது.

தன்னை ஒரு ஆண் மகன் என நம்பிக் கரம் பிடித்த மனைவிக்கு, ஒரு

பெண்ணின் உடலில் நிகழக்கூடிய பாலின்பங்கள் அனைத்தையும் தவறாமல்

வழங்குவதை, ஒவ்வொரு ஆணும் அவரவருடைய முதற் கடமையாகக் கருதிட

வேண்டும்.

பத்து நிமிட ஓட்டப் பந்தயத்தில் தன்னுடைய இன்பத்தை மட்டும் நிகழ்த்திக்

கொண்டு, மனைவியின் காமத்தைத் தணிக்காமலே, அருகில் படுத்து குறட்டை

விட்டு உறங்கும் பழக்கத்தைக் கைவிட வேண்டும்.

கணவனுக்குரிய பாலின்பம் கிடைக்காத போது அவனுடைய மனநிலை

கொதிநிலையடைவதைப் போன்றே, மனைவிக்குரிய பாலின்பம் கிடைக்காத

போது மனைவியின் மனநிலையும் கொதிநிலையடைகிறது என்பதை உணர்ந்து

கொள்ள வேண்டும்.

அது தான் குடும்ப விவகாரச் சண்டைகள் அனைத்திற்கும் மூலம்

என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். ஆகவே, மனைவிக்குரிய பாலின்பங்களை

வழங்கிய பிறகே, தன்னுடைய பாலின்பத்தை நிகழ்த்திக் கொள்வதைப் பழக்கப்

படுத்திக் கொள்ள வேண்டும்.

தாம்பத்ய வாழ்க்கையை இவ்வாறு வாழக் கற்றுக் கொள்வதன் மூலமாக,

குடும்ப விவகாரச் சண்டையற்ற ஒரு பூஞ்சோலையாகத் தன்னுடைய இல்லற

வாழ்வை உருவாக்கிக் கொள்ள வேண்டும்.

ஒவ்வொரு ஆணும் மேற்கண்டவாறு பொறுப்புணர்வோடு தங்கள் இல்லறக்

கடமையை உணர்ந்து குடும்ப வாழ்க்கையை வாழ்வதன் மூலமாகக் குடும்ப

அமைப்பைக் காப்பாற்றும் முயற்சியில் பங்கேற்றுக் கொள்ள

வேண்டும்.

ஒரு தார் வாழ்வில் தங்கள் காம உணர்வைத் தணித்து வாழத்
தெரிந்தவர்கள்

தான் வீட்டிற்குள் மட்டுமின்றி வெளியுலகிலும் வெற்றிகரமான
நபர்களாகத்

திகழ்கிறார்கள்.

குடும்ப விவகாரச் சண்டையில் ஈடுபட்டுக் கொண்டிருப்பவர்கள்
இல்லற

வாழ்விலும் நிம்மதியின்றி வாழ்வதோடு, வெளியுலகிலும் தங்கள்
தகுதிக்கும்,

திறமைக்கும் உரிய வெற்றிகளைப் பெற முடியாமல் தாழ்ந்து
போகிறார்கள்.

அத்தகைய ஒரு நெருக்கடி ஆணுக்கு இப்போது ஏற்பட்டிருக்கிறது.
அந்த

நெருக்கடி நிலையை எதிர்கொள்வதற்கான அறிவைத் தான் தந்த்ரா
வழங்குகிறது.

உரிய சூத்திரங்களை பூஜை என்கிற பெயரில் ஆணுக்குக் கற்றுத்
தருகிறது.

தந்த்ரா கூறும் பூஜை முறைகள் பல்லாயிரம் ஆண்டு காலப்
பழமையானவை,

அந்தக் காலப் பேரரசர்களுக்கென்றே உருவாக்கப்பட்டவை.

பத்துக்கும் மேற்பட்ட மனைவியரை பாலியல் ரீதியாக முழுமையாகத்

திருப்திப் படுத்திய படி, வாழ அரசர்களுக்குக் கற்றுக் கொடுத்தவை,
ஒவ்வொரு

ஆணையும் அதே போல் உருவாக்கக் கூடியவை.

மேலும் வறட்டுத் தனமான பாலுறவை புனிதச் செயலாக மாற்றுவது
எப்படி

என்பதைக் கையைப் பிடித்து அழைத்துச் சென்று காட்டக்கூடியவை,

ஒரே நாளில் அனைத்தையும் கற்றுத் தரக் கூடியவை. பெண்ணின்
உடலில்

நிகழும் உச்சகட்டப் பாலின்ப நிகழ்வுகளை நிச்சயமாக நிரூபித்து
வைக்கக்

கூடியவை.

அந்த சூத்திரங்களைக் கற்றுக் கொண்டால், நீங்களும்
பேரரசர்களைப் போன்றே பேராண்மையுடைவராக உருவாகி விடலாம்.

## 2. தியானமும் பாலின்பமும்

மனம் என்பது இடைவிடாமல் இயங்கிக் கொண்டிருக்கின்ற ஒரு
இயந்திரத்திற்குச் சமம். அவ்வப்போது அது ஓய்வெடுத்துச் செயல் படும் போது
தான், மனித வாழ்வில் அதிசயங்கள் நிகழ்கின்றன.

மனம் தன் சிந்தனையை நிறுத்தும் போது, அது ஒரு நிச்சலன சக்தியாக
மாறுகிறது. அவ்வாறு நிச்சலன சக்தியாக மனிதனின் மனம் மாறும் போது,
பிரபஞ்ச சக்தியோடு எளிதாக இணைந்து விடுகிறது.

சக்தி என்றால் அதிர்வு என்று பொருள். பிரபஞ்சத்தில் உள்ள அனைத்தும்
சக்தி மயம்,

உங்கள் விடு, நீங்கள் அமர்ந்துள்ள நாற்காலி, உங்கள் நகம், உங்கள்
சிந்தனை என அனைத்தும் இந்த வினாடியில் கூட அதிர்ந்து கொண்டு
இருக்கின்றன. உணர முடியாத அதிர்வு அது. இந்தியாவின் ஆதி யோகியால்
பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் சொல்லப்பட்ட உண்மை இன்றைய பௌதீக
விஞ்ஞானிகளால் நிரூபிக்கப் பட்டு விட்டது.

பிரபஞ்சத்தில் உள்ள அனைத்தும் அவற்றிற்குரிய நியமப்படி அதிர்ந்து
கொண்டிருக்கிறது. அந்த அதிர்வின் ஊடே, எவ்வித அதிர்வையும்
வெளிப்படுத்தாமல் நிச்சலன சக்தியாகி விட்ட மனிதனின் மனம் எளிதாக
நுழைந்து விடுகிறது.

அவ்வாறு, பிரபஞ்ச சக்தியின் அதிர்வுகளோடு மனித மனம் ஐக்கியமாகும்
போது மனமற்ற நிலையை அந்த மனிதர் அடைந்து விடுகிறார். இது தான் ஞானம்
என்று அழைக்கப்படுகிறது.

ஆனால், ஞானமடைதல் என்பது எளிதான காரியமல்ல, கோடியில்

ஒருவருக்கே ஞானமடைதல் சாத்தியம். அதனால் மனதின் இயக்கத்தை நிறுத்தி,

அதற்குரிய ஓய்வை அளிக்க ஒரு சராசரி மனிதனால் முடியாது. ஆனால்,

ஞானிகளால் முடியும்.

அவர்கள் இதற்காக இரண்டு வழிமுறைகளைப் பின்பற்றியிருக்கிறார்கள்.

அந்த வழி முறைகளுக்குப் பெயர் தான் தியானம் மற்றும் தவம், தவமும்,

தியானமும் மனதின் சிந்தனையோட்டத்தை நிறுத்தி மனதிற்கு ஓய்வளிக்கும்

உபாயங்கள்.

தவம் என்பது பிரணாயாமம் மூலம் சுவாசத்தைக் கவனிக்கத் தொடங்கி,

மனதின் சிந்தனையோட்டத்தை நிறுத்தி மனதிற்கு ஓய்வளித்தல்.

தியானம் என்பது மனதின் எண்ண ஓட்டத்தை நீதிபதியாகவோ,

கைதியாகவோ இல்லாமல், ஒரு வழிப்போக்கனாகக் கவனிப்பதன் மூலமாக

எண்ணங்களற்ற நிலைக்குள் நுழைதல்.

ஒரு சிலர் சொல்வது போல் மனதை ஒரு முகப்படுத்துதல் தியானம் அல்ல.

மனதின் எண்ண ஓட்டத்தைக் கவனிப்பதன் மூலமாக மனதை சிந்தனைகளற்ற

நிலைக்குக் கொண்டு செல்வதே தியானம், அறிந்ததினின்றும் விடுதலை

என்பதே அது.

மேற்கண்ட நிலையை அடைவதற்கு தவத்தையும், தியானத்தையும் தவிர

மூன்றாவதாகவும் ஒரு வழி இருக்கிறது. ஏறக்குறைய தொண்ணூற்றொன்பது

சதவீத ஆண்களும், பத்து சதவிகித பெண்களும் இந்த மகோன்னத நிலைக்குத்

தங்களையும் அறியாமலே சென்றிருக்கிறார்கள். அதன் மூலமாக பிரபஞ்ச

சக்தியோடு தங்கள் மனோ சக்தியை ஐக்கியப்படுத்தி, அந்தப்

பேரானந்த சுகத்தை

அனுபவித்திருக்கிறார்கள்,

அதன் காரணமாக அந்த பேரானந்தப் பரவச இன்ப வெள்ளத்திலே நீந்தித்

திளைக்க எப்போதும் ஆவலாகவே இருக்கிறார்கள்.

அந்த மூன்றாவது வழி தான் பாலின்பம். அதாவது பாலின்பம் என்று

சொல்லும் போது. இன்பம் துய்த்தலின் போது, ஏற்படக்கூடிய உச்ச கட்ட

இன்பத்தைக் குறிப்பதாகும். வெறும் உராய்வின்பம் பாலின்பம் ஆகாது.

ஏனெனில், உச்சகட்ட இன்பம் நிகழாத பாலுறவிற்கு, மனதிற்கு

ஓய்வளிக்கும் சக்தி இல்லை. அதனால் தான் இன்பம் துய்த்தலில் ஈடுபட்டு

உச்ச கட்ட இன்பங்களை அனுபவிக்காதவர்கள் பெரும்பாலும் மனதால்

அலைக்கழிக்கப் படுபவர்களாக இருக்கிறார்கள்.

அவர்களுடைய மனம் உருவான நாள் முதலாக ஒரு விநாடி. நேரம் கூட

ஓய்வேயின்றி இயங்கிக் கொண்டிருப்பதால், மனம் எப்பொதும் கொந்தளிக்

நிலையிலயே இருக்கிறது. அதனால் தான், அற்ப காரணத்தை முன்னிட்டுக்

கூட அவர்கள் எளிதில் உணர்ச்சி வசப்பட்டு விடுகிறார்கள்.

இதன் அடிப்படையில் தான் பாலின்பம் என்பது புனிதமானது என்று

ஞானிகள் கூறுகிறார்கள்.

ஏனெனில், தியானம், தவம் போன்ற செயல்களில் மிகவும் தீவிரமாக

ஈடுபட்டு, பல்லாண்டு கால் கடுமையான முயற்சிக்குப் பின், ஞானிகள்

பெறக்கூடிய பேரானந்தப் பரவச நிலையை பாலின்பம் மிக எளிதாக அளிக்கிறது

என்று ஞானிகள் என்று மனிதர்களால் அறியப்பட்ட அத்தனை பேரும்

கூறியிருக்கிறார்கள்,

மேற்கண்ட கருத்தை இந்த நூல் முழுமையாக ஏற்கிறது.

ஆதரிக்கிறது.

## 3. ஐம்புலன்களும், பாலின்பமும்

ஐம் புலன்களையும் மகிழ்விக்கும் சக்தி பாலின்பத்தைத் தவிர, வேறெதற்கும்

இல்லை.

உடலுக்குள் வாழ்வது ஆன்மா, உடலிலுள்ள ஐம்புலன்கள் தான்

ஆன்மாவின் சாளரங்கள். அந்த ஐந்து சாளரங்களிலும் ஏக காலத்தில் தென்றலை

வீசச் செய்து ஆன்மாவை மகிழ்விக்கச் செய்வது பாலின்பம்.

பாலின்பம் என்று சொல்லும் போது, இன்பம் துய்த்தலின் போது,

ஏற்படக்கூடிய உச்ச கட்ட இன்பத்தைக் குறிப்பதாகும். அதற்கிணையாக ஐம்

புலன்களையும் மகிழ்விக்கும் சக்தி வேறெதற்கும் இல்லை.

உதாரணமாக உணவைப் பார்ப்போம். பார்த்தல், நுகர்தல், சுவைத்தல்,

உணர்தல் என நான்கு புலன்களை மட்டுமே மகிழ்விக்கும் ஆற்றலுடையது உணவு.

உணவால் செவிப்புலன் உட்ச பட்ச இன்பத்தைப் பெறுவதில்லை,

அடுத்தது குழந்தை, கேட்டல், பார்த்தல், நுகர்தல், உணர்தல் என நான்கு

புலன்களை மட்டுமே மகிழ்விக்கும் ஆற்றலுடையது குழந்தை. குழந்தையால்

சுவைப் புலன் உட்ச பட்ச இன்பத்தைப் பெறுவதில்லை,

உணவும் குழந்தையுமே மனிதனின் நான்கு புலன்களை மட்டும் தான்

மகிழ்விக்க முடியும் என்கிற சூழலில், வேறெந்தச் செயலும் கூடுதலான புலன்களை

மகிழ்வித்து விட முடியாது.

ஆகவே, ஐம்புலன்களை மட்டுமின்றி ஆறாவது அறிவையும் கூட ஏக

காலத்தில் மகிழ்விக்கக் கூடிய ஒரே செயல் இந்த உலகிலேயே பாலின்பம்

ஒன்று மட்டுமே.

அதாவது மனித உடலில் பாலின்பம் நிகழும் போது, பார்த்தல், கேட்டல்,

நுகர்தல், சுவைத்தல், உணர்தல் மட்டுமன்றி உடலில் உள்ள ஒவ்வொரு உயிர்

அணுவும் இன்பத்தைப் பெறுகிறது. எலும்புகளில் வாழும் உயிரணுக்கள் உட்பட

மனிதனின் ஆறாம் அறிவு கூட இன்புறுகிறது.

இவ்வாறு, ஐம்புலன்களும், அறி வும், உடலில் வாழும் ஒட்டுமொத்த

உயிரணுக்களும் ஒரே நேரத்தில் மகிழ்வுறும் போது, உடலின் உள்ளே வாழ்ந்து

கொண்டிருக்கும் ஆன்மா பேருவகை கொள்கிறது.

ஆன்மா பேருவகையில் திளைத்திருக்கும் போது, மனம் பெரு

மகிழ்ச்சியடைகிறது. அந்தப் பெருமகிழ்ச்சியால், மனதின் சுய மதிப்பு பன்மடங்கு

அதிகரிக்கிறது. சுய மதிப்பு பன்மடங்கு கூடும் போது, தன்னம்பிக்கை

பிரம்மாண்டமான அளவில் வலுப்படுகிறது. இது இரு பாலருக்கும் பொருந்தும்,

இதைவிட மனைவிக்குரிய பாலின்பங்களை ஒரு கணவன் நிகழ்த்தும் போது

அவனுடைய சுய மதிப்பு உயரும் வேகத்திற்கும், தன்னம்பிக்கை வலுப்படும்

அளவிற்கும் எல்லையே இருக்காது.

பல சுய முன்னேற்ற நூல்களை விழுந்து விழுந்து படிப்பதன் மூலம்

பெறுகின்ற தன்னம்பிக்கையைக் காட்டிலும் கூடுதலான தன்னம்பிக்கையை,

பாலியல் ரீதியாக மனைவியைத் திருப்திப்படுத்தும் கணவன் பெறுகிறான்,

அந்தத் தன்னம்பிக்கை காரணமாக எதையும் சர்வ சாதாரணமாகச்

சாதிக்கக் கூடியவன் என்கிற எண்ணம் அந்த ஆணின் மனதில் உருவாகிறது.

அந்த எண்ணம் காரணமாய், உயரிய இலட்சியம் உதிக்கிறது. அதை அடைய

வேண்டுமென்கிற ஆசை பிறக்கிறது.

அந்த ஆசை காரணமாக செயல் பிறக்கிறது. அளவற்ற நம்பிக்கை காரணமாக,

நிச்சயமாக வெற்றி பெற முடியும் என்கிற ஒரு நிச்சய மனப்பான்மை

உருவாகிறது. அந்த மனப்பான்மை காரணமாக அந்த

இலட்சியத்தையே

அடைந்து விட்டாற் போல் எண்ணம் பிறக்கிறது.

அடைந்து விட்டாற் போன்ற எண்ணம் பிறக்கும் போது, செயல்பாடுகளில்

காட்டப்படும் ஊக்கமும் உற்சாகமும் அதிகரிக்கிறது. அவையிரண்டும் ஒன்று

சேர்ந்து உந்தித்தள்ளும் சக்தியாக மாறும் போது, செயல்கள் அனைத்தும்

வேகத்தையும், விவேகத்தையும் பெறுகின்றன,

விவேகம் காரணமாக குறிக்கோளின் வடிவம் பிரம்மாண்டமடைகிறது.

பெரிதினும் பெரிதாகக் கனவுகள் பிறக்கிறது. இறுதியில் கனவுகளின்

வடிவத்திற்கேற்ற வெற்றி கிடைக்கிறது. மனிதன் மகா வெற்றியாளனாய் அறியப்

படுகிறான்.

ஆண் என்பவன் வேட்டைக்காரனாக இருந்த காலத்திலிருந்தே ஒரு

இலக்கைக் குறி வைத்து அதை அடையும் முயற்சியை மேற்கொண்டிருந்தவன்,

அதனால், எப்போதும் ஏதேனும் ஒரு இலட்சியம் ஒவ்வொரு ஆணின் மனதிலும்

இருக்கும். ஆனால், இலட்சியத்தின் அளவில் நிச்சயமாக வித்தியாசங்கள்

இருக்கும். அந்த வித்தியாசம் அந்தந்த ஆணின் சுய மதிப்பைச் சார்ந்தது.

ஆனால், பாலின்பம் என்பது சாதாரணமாக இருக்கக்கூடிய ஆ ணின்

சுயமதிப்பைக் கூட பலமடங்கு உயர்த்தி விடுவதால், அவன் மிகப் பெரிய

கனவுகளைக் காணத் தொடங்குகிறான்.

அதன் விளைவாக, தன் கனவின் கனபரிமானத்திற்கேற்ற வெற்றியைப்

பெறுகிறான். அந்த வெற்றி காரணமாக சாதனையாளனாக உயர்கிறான். இந்த

அளவிற்கு முக்கியத்துவம் வாய்ந்த பாலின்பத்தைத் தரக்கூடிய நடார் தான் மனைவி.

“ஒவ்வொரு ஆணின் வெற்றிக்குப் பின்னாலும் ஒரு பெண்

இருக்கிறாள்”

என்கின்ற பழமொழியும் சரி, “ஆவதும் பெண்ணாலே, அழிவதும் பெண்ணாலே”

என்கின்ற பழமொழியும் சரி, நமக்கு புலப்படுத்துகின்ற செய்தி இதுவே.

ஒரு மனைவியால் தன் கணவனை மகா வெற்றியாளனாக ஆக்கவும்

முடியும். விலாசமே தெரியாமற் போகுமளவுக்கு அழிக்கவும் முடியும். அதற்கான

ஒரே காரணம் பாலின்பம். என்று நெப்போலியன் ஹில் கூறுகிறார்.

பாலின்பம் குறித்த தத்துவார்த்த பார்வை இது. இதே கருத்தைத்

தெளி வாக உறுதிப்படுத்துகின்ற நிரூபிக்கப்பட்ட விஞ்ஞான

விளக்கங்களும் உள்ளன,

**4.** பாலின்பமும் உடலில் சுரக்கும் வேதிகளும்

மனித உடல் என்பது பெரிய இரசாயனத் தொழிற்சாலை. மனித உடலில்

உருவாகக் கூடிய வேதிகளை, உருவாகக் கூடிய அளவிற்குத் துல்லியமான

தரத்திலும், அளவிலும் தயாரிக்க, பல்லாயிரம் கோடி ரூபாய்களில் ஒரு

தொழிற்சாலையை அமைக்க வேண்டியிருக்கும். அது தவிர, மூலப்

பொருட்களுக்காக ஆயிரக்கணக்கான ஏக்கர் பூமி தேவைப்படும். அப்படிப் பட்ட

விலை மதிப்பற்ற வேதிகளின் கூடம் தான் மனித உடல்.

இந்த வேதிகளின் கூடம் பல பிரிவுகளைக் கொண்டது. அதில் மிக

முக்கியமான பிரிவு இன்பத் துய்ப்புப் பிரிவு. ஏனெனில், இன்பத் துய்ப்பின்

போது உடலில் ஏற்படும் உச்சகட்ட இன்பத்தின் போது மிகவும் முக்கியமான

வேதிகள் மூளையில் சுரக்கின்றன. அவற்றில் சிலவற்றை மட்டும் இப்போது

பார்ப்போம்,

முப்பத்தைந்து வயதிற்குப் பின் ஒவ்வொரு நாளும் ஏழாயிரம் உயிரணுக்கள்

வரை மூளையில் மரித்துப் போகின்றன. பாலின்பமும், உடற்

பயிற்சியும்

மட்டுமே அந்த இழப்பை ஈடு செய்கின்றன. இவையிரண்டிலும் இன்பத் துய்ப்ப

உடற் பயிற்சியை விட அதிகமாக மூளை வளர்ச்சிக்கு உதவுகிறது.

உடற்பயிற்சியின் போது சுரக்கும் வேதிகளால், உருவாகும் மூளை

அணுக்களை விட மனித உடலில் உச்சகட்டப் பாலின்பம் நிகழும் போது

சுரக்கும் வேதிகளால், அதிகமான மூளை அணுக்கள் உருவாகின்றன,

அடுத்து, உடற்பயிற்சியின் போது மூளையில் சுரக்கும் வேதிகளுக்கு

மூளையின் அணுக்களை அழியாமல் காக்கும் வல்லமை இல்லை. ஆனால்,

உச்சகட்ட பாலின்பத்தின் போது சுரக்கும் வேதிகளுக்கு மூளையில் உள்ள

உயிரணுக்களின் அழிவைத் தடுக்கும் வல்லமை உண்டு.

அதனால், பாலின்பத்தை அதிகமாக அனுபவிப்பவர்கள் கூடுதலான

ஞாபக சக்தியுடையவர்களாகத் திகழ்கிறார்கள், எந்த அளவிற்கு அதிகமான

உச்சகட்ட இன்பங்களை ஒரு மனிதப் பிறவியின் மூளை அனுபவிக்கிறதோ,

அந்த அளவிற்கு வயதான பின் வருகிற மறதி நோய் வருவதில்லை,

அடுத்து பாலின்பம் நிகழும் போது நுண்ணறிவை உருவாக்கும் வேதிகள்

சுரக்கின்றன. நன்றாகப் புரிந்து கொள்ளுங்கள். நுண்ணறிவு என்பது வேறு.

அறிவு என்பது வேறு.

அறிவு என்பது தேடிப் பெறுவது. ஒரு நபருடைய மூளையால் சேகரிக்கப்

படுகின்ற குப்பைக்குப் பெயர் தான் அறிவு. ஆகவே, ஏராளமாகப் படிப்பதன்

வாயிலாக ஒரு நபர் அறிவாளியாகி விடலாம். ஆனால் நுண்ணறிவாளன் ஆக

முடியாது.

ஏனெனில் அது தன்னிச்சையாக உருவாகக் கூடியது. உச்ச கட்டப்

பாலின்பத்தின் போது சுரக்கும் வேதிகளே நுண்ணறிவை உருவாக்கக் கூடியவை.

ஆபத்தான தருணங்களில் அறிவு உதவும் என்று கூற முடியாது. ஆனால்,

நுண்ணறிவானது சூழலுக்கேற்ப உருவாகி, உடனுக்குடன் உதவக் கூடியது.

அடுத்து புத்துணர்வை உருவாக்கும் வேதிகளைச் சுரக்கச் செய்யும் வல்லமை

பாலின்பத்திற்கு உண்டு. குழந்தைகளோடு விளையாடும் போதும் அந்த வேதிகள்

சுரக்கின்றன, எனினும், இங்கேயும் பாலின்பமே முதலிடம் வகிக்கிறது.

மேலும், புத்துணர்வு பற்றிப் பேசும் போது முக்கியமாகக் கவனிக்க வேண்டிய

ஒரு தகவல் இங்கே உள்ளது. மனிதப் பிறவிகளைப் பொறுத்த வரை கவலை,

வருத்தம், கோபம், கழிவிரக்கம் போன்ற மோசமான உணர்ச்சிகள் மனதை

ஆக்கிரமித்திருக்கும் போது பாலுறவில் அதிகமாக ஈடுபடுவதில்லை. அதனால்,

அந்த மோசமான உணர்ச்சிகளிலிருந்து அவர்களால் எளிதில் மீள முடிவதில்லை,

ஆனால், எப்போதெல்லாம் மனம் தளர்ச்சியுறுகிறதோ, வருத்தப்படுகிறதோ,

அப்போதெல்லாம் அதிகமாக இன்பத் துய்ப்பில் ஈடுபட வேண்டும். அப்போது

தான் புத்துணர்வை உருவாக்கும் வேதிகள் மூளையில் சுரக்கத் தொடங்கும்.

அதன் காரணமாக, மோசமான உணர்ச்சிகளிலிருந்து விரைவாக விடுபட்டு,

நம்முடைய அன்றாடப் பணிகளில் ஆர்வத்தோடும், உற்சாகத்தோடும் செயலாற்ற

முடியும்.

உச்சகட்ட இன்பம் உடலில் நிகழும்போது, பாலின்பத்தை வழங்கியவரின்

மீது கண்மூடித்தனமான, எல்லையற்ற அன்பை உருவாக்கும் வேதி மூளையில்
சுரக்கிறது. அவ்வாறு சுரப்பதிலும் ஆணின் மூளை சுரப்பதைக் காட்டிலும்
பெண்ணின் மூளை ஐந்து மடங்கு கூடுதலான வேதியைச் சுரக்கிறது.

அது தவிர, மன நிலையை சாந்தமாக வைத்திருக்கக் கூடிய வேதிகள்,
மனநிலையை மகிழ்ச்சியாக வைத்திருக்கக் கூடிய வேதிகள், வலிகளைக் குறைவாக
உணரச் செய்கிற வேதிகள், ஆழ்ந்த உறக்கத்தை வழங்குகிற வேதிகள் என
ஏராளமான வேதிகள் பாலின்பத்தின் போது மட்டுமே குறிப்பிடத்தக்க
அளவிற்குச் சுரக்கின்றன.

அதனால் தான் இல்லற வாழ்வில் பாலின்பத்தைப் பெறுகிற நபர்
சாந்தமானவராகவும், உச்சகட்டப் பாலின்பத்தைப் பெற முடியாத நபர் எளிதில்
உணர்ச்சி வயப்படுபவராகவும் இருக்கிறார்.

இவை அனைத்திற்கும் மேலாக, பாலின்பத்தின் போது சுரக்கும் வேதிகள்
தான் உடலில் உள்ள மற்ற சுரப்பிகளையும் இயக்கும் தலைவர்களாக இருக்கின்றன.

ஆகவே, பாலின்பத்தை அடிக்கடி அனுபவிக்கும் நபர்களுடைய மற்ற சுரப்பிகளும்
சிறப்பாகச் செயல்படுகின்றன.

மாரடைப்பு, புற்றுநோய், சர்க்கரை வியாதி, இரத்தக் கொதிப்பு, காமாலை
போன்ற கொலைகார வியாதிகள் இன்பத்துய்ப்பில் அடிக்கடி ஈடுபடுபவர்களை
எளிதில் அண்டுவதில்லை.

மேலும், அவர்களுடைய மூளை எப்போதும் புத்துணர்வுடன் இருப்பதால்,
விபத்துக்களில் சிக்கி அகால மரணமடையும் கோரங்களுக்கும் அவர்கள் வாழ்வில்
இடமிருக்காது. அதனால் தான் பாலின்பத்தை அதிகமாக

அனுபவிப்பவர்கள்

நீண்ட நாள் உயிர் வாழ்கிறார்கள்.

மனிதப் பிறவியின் எந்தவொரு செயலைக் காட்டிலும் இன்பத்துப்பால்

ஏற்படும் நன்மைகளே அளவிட முடியாதவை.

ஆகவே, உலகில் உயிர் உருவாக மட்டுமல்ல, அந்த உயிரை வாழ்நாள்

முழுவதும் வழி நடத்தும் சக்தியாக இருப்பதும் இன்பத் துய்ப்பே என்பதை

ஒவ்வொருவரும் இந்த நூலின் வாயிலாக அறிந்து கொள்ளலாம்.

**5.** பாலின்பமும்**.** உடலின் சக்தி மையங்களும்

மருத்துவ அறிவியல் சொல்வது என்ன**?**

மனித உடலில் நிகழும் பாலின்பம் ஒரு பேரின்ப அனுபவம் மட்டுமல்ல,

உடல் நலத்தையும் மன நலத்தையும் சிறப்புறப் பேணக்கூடிய ஒரு மா மருந்து.

மேலும் எவ்விதப் பக்க விளைவுகளையும் ஏற்படுத்தாத ஒரு அரு மருந்து.

மூளையை அற்புதமாகச் செயல்படச் செய்கின்ற ஒரு அமிர்தம். இன்றைய

மருத்துவ அறிவியலும், உளவியலும் பாலின்பத்தைப் பற்றி இவ்வாறு கூறுகிறது.

இந்த மருந்திற்காகத் தனியாகப் பணத்தைச் செலவளிக்கத் தேவையில்லை.

வீட்டை விட்டு வெளியில் எங்கும் சென்று தேடத் தேவையுமில்லை. அது தவிர

அன்பெனும் கடவுளைத் தம்பதியிடையே உருவாக்கி குடும்ப வாழ்க்கையைச்

சொர்க்கமாக மாற்றக் கூடிய ஒரு மந்திர சக்தியும் கூட

உடலில் நிகழும் உச்ச கட்டப் பாலின்பத்தால் ஏற்படுகின்ற நன்மைகளைப்

பட்டியலிடத் தொடங்கினால் வாழ்க்கையில் நடைபெற்றுக் கொண்டிருக்கும்

அனைத்தையும் தான் பட்டியலிட வேண்டும். இந்த உண்மை இருபாலர்க்கும்

பொருந்தும்.

மேற்கண்ட உண்மையை பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இந்திய

ஞானிகள் கூறியதோடு தெளிவாக நிரூபித்திருக்கிறார்கள். அதைப் பற்றிய சிறிய

அறிமுகம் இது.

உடலில் உள்ள சக்கரங்கள்.

மனித உடலின் உயிராற்றல் சக்தியானது முதுகெலும்பின் அடிப்

பகுதியிலிருந்து தலை வரை ஒரு நாடி வழியாகச் செல்கிறது. அந்த நாடியின் பெயர்

சுசும்னா நாடி..

இந்த நாடி தான் உயிராற்றலையும் உணர்ச்சிகளையும் ஒன்றிணைத்து.

மனிதனின் உணர்வு நிலையைப் பராமரிக்கிறது. உடல், மனம், உணர்வுகள்,

உணர்ச்சிகள் ஆகிய நான்கையும் ஒன்றிணைத்து ஒத்திசைவோடு இயங்கச்

செய்கிறது.

இன்றைய பாணியில் சொல்வதானால், உடலில் உள்ள ஏழு மாநிலங்களை

ஒரு நெடுஞ்சாலை இணைக்கிறது. அந்தச் சாலையின் பெயர் தான் சுகம்னா

நாடி. அந்தச் சாலையில் ஆங்காங்கே அமைந்திருக்கும் மாநிலத் தலை நகரங்கள்

தான் சக்கரங்கள்.

முதுகுத் தண்டின் அடிப்பகுதியில் தொடங்கி உச்சந்தலை வரையிலும்

மனித உடலில் ஏழு சக்கரங்கள் அமைந்துள்ளன. சக்கரங்கள் என்பவை உடலின்

சக்தி மையங்கள்,

இவை பல்வேறு வேதிகளை உற்பத்தி செய்கின்றன. அந்த வேதிகள் தான்

உடல் நலம், மனநலம், அறிவு ஆகியவற்றின் செயல்பாடுகளைத் தீர்மானிக்கும்

காரணிகள்.

மூலாதார சக்கரம், இது மனித உடலின் முதலாவது சக்கரம். முதுகுத்

தண்டின் அடிப்பாகத்தில் சுசும்னா நாடியின் அடிமட்டத்தில் அமைந்துள்ளது.

அதாவது ஆசன வாய்க்கும், பாலுறுப்பிற்கும் மத்தியில் முதுகெலும்பின்

அடிப்பகுதியில் இது அமைந்துள்ளது.

அட்ரினல் சுரப்பி இந்த சக்கரத்தால் இயக்கப்படுகிறது. அட்ரீனல் சுரப்பியில்

சுரக்கும் வேதிகள் தான் மனிதனுக்கு பாதுகாப்புணர்வையும், மனதில் சாந்த

நிலையையும், மன ஊக்கத்தையும், உற்சாகத்தையும் உருவாக்கக் கூடியவை.

இந்த சக்கரம் சமநிலையில் இருக்கும் போது எப்படிப்பட்ட புதிய சூழலையும்

எளிதாக எதிர்கொள்ளும் திறனை மனிதன் பெறுகிறான், மனிதனின் மனத்

துணிச்சல் பெருகும், மன அழுத்தத்தைச் சமாளிக்கும் திறன் வளரும்.

இந்த சக்கரம் தன் சமநிலையை இழக்கும் போது, மனிதனுக்கு சித்தப்

பிரமை பிடித்த மாதிரி இருக்கும். வாழ்க்கை தன் கட்டுப் பாட்டிலிருந்து விலகி

விட்டதைப் போன்ற உணர்வுகள் ஏற்படும். மாற்றங்களை எதிர்கொள்ள மனம்

அச்சப்படும், உடற்பருமன், மலச்சிக்கல், மூட்டுவலி, இடுப்புப் பிடிப்பு மற்றும்

களைப்பு போன்ற உடல் உபாதைகளை ஏற்படுத்தக்கூடும். இந்த சக்கரத்தின் நிறம்

சிவப்பு, மந்திரச் சொல்-லாாாம்.

உடலின் இரண்டாவது சக்கரம் ஸ்வாதிஸ்தான சக்கரம். இது குனாஸ் என்கிற

பாலியல் சுரப்பியை இயக்குகிறது. இது தொப்புளுக்குக் கீழே இரண்டு அங்குல

தூரத்தில் அமைந்திருக்கிறது. இதைப் புனித சக்கரம் என்றும் அழைக்கிறார்கள்.

சிறுநீரகங்கள், சிறுநீர்ப்பை, சிறுகுடல், பெருங்குடல், ஆசனவாய்,

பிராஸ்டேட் சுரப்பி, ஆண் பாலுறுப்பு விதைகள் மற்றும் சினைப்பை, கருப்பை,

சிறுநீரகங்கள் உட்பட பெண்ணின்பால் மண்டலம் போன்றவை இந்த சக்கரத்தின்

மேற்பார்வையில் இயங்கக் கூடிய உடல் உறுப்புக்களாகும்.

இந்த சக்கரம் சமநிலையில் இருக்கும் போது மனிதர்களின் தன்னம்பிக்கை

+அதிகரித்திருக்கும். ஆக்க பூர்வ சிந்தனை பிறக்கும். கற்பனை வளம் சிறப்பாக

இருக்கும், வெற்றியும் பணமும் எளிதாக வந்து கொண்டிருக்கும்.

பெருந்தன்மையான அணுகுமுறை என்பது இயல்பான செயலாகவே இருக்கும்.

ஆணின் பாலுறுப்பு வீரியமுடையதாகத் திகழும்.

பெண்ணுக்குரிய உச்சகட்ட இன்பம் நிகழ்வதற்கான நேரம் சற்றுக் குறையும்,

கற்பனை, படைப்பாற்றல் சிந்தனை, இரக்கம், ஈகை போன்ற மனிதப் பண்புகளை

உருவாக்கும் வேதிகளின் பிறப்பிடம் இது.

அதனால் தான் பாலின்பத்தைப் பஞ்சமின்றி அனுபவிப்பவன் பேரரசனாக,

பெருந் தலைவனாக, மாபெரும் படைப் பாளியாக, பேரறிஞனாக, அழியாக்

கவிஞனாக உருவாகிறான், பாலின்ப வேட்கையைத் தீர்த்துக் கொள்ள

முடியாதவன் மிருக சிந்தனையோடு நடமாடுகிறான்.

இதன் சமநிலை தவறும் போது, கவலைகள் பிறக்கும். சிந்தனைத் திறன்

சீர்கெடும். தோல்விகள் வரும், பணப் பற்றாக்குறை ஏற்படும். துரித ஸ்கலிதம்

நிகழும், மேலே சொல்லப்பட்ட உடல் உறுப்புக்களோடு தொடர்புடைய வியாதிகள்

வரலாம். பெண்ணின் பிடாரித்தனம் துவக்கமாகும். இதன் நிறம் ஆரஞ்சு,

இதற்கான மந்திரச் சொல்-வம்,

உடலின் மூன்றாவது சக்கரம் மணிப்பூர் சக்கரம்-இது கணையம் என்கிற

சுரப்பியை இயக்கக் கூடியது.

வயிற்றுப் பகுதிக்கு மேலே ஒரு அங்குல தூரத்தில் விலா எலும்பின் கீழே

இது அமைந்திருக்கிறது. வயிறு, கல்லீரல், மண்ணீரல், பித்தநீர்ப்பை, தசைநார்

மண்டலம் மற்றும் தோல் ஆகிய உறுப்புக்களை இது பராமரிக்கக் கூடியது.

இந்த சக்கரம் சமநிலையில் இயங்கும் போது, கோபம், வருத்தம், கவலை,

மகிழ்ச்சி, ஆனந்தம், உற்சாகம் போன்ற உணர்ச்சிகள் அனைத்தும் கட்டுப்பாட்டில்

இருக்கும்.

முடிவுகள் எடுப்பதில் வல்லமையும், பிரச்சினைகளைத் தீர்ப்பதில்

புத்திசாலித்தனமும் வெளிப்படும். பிறரைக் கவரக்கூடிய திறனும் பெருகும்.

பேச்சிலும், செயல்களிலும் பொறுமை இருக்கும்,

இந்தச் சக்கரம் சமநிலையை இழக்கும் போது, தன்னுடைய உடலைப் பற்றி

நல்ல கருத்து இருக்காது. திடீர் திடீரென சம்பந்தமே இல்லாமல் மன அழுத்தம்

ஏற்படும், உணர்ச்சிகளால் மூழ்கடிக்கப் படுதலும் போராட்டமும் இருந்து

கொண்டேயிருக்கும்.

மிதமிஞ்சிய அளவில் கோபமும் கவலையும் ஏற்படும். சோர்வும்,

ஊக்கமின்மையும் எப்போதும் இருக்கும், எப்போதும் பிறரைப் பற்றிய

கருத்துக்களால் மனம் நிரம்பி வழியும். இதன் நிறம் மஞ்சள். இதற்குரிய மந்திரச்

சொல்— பம்.

உடலின் நான்காவது சக்கரம் அனகாத சக்கரம். இது தைமஸ் சுரப்பியை

நிர்வகிக்கிறது. இது மார்பின் மத்தியில் அமைந்திருக்கிறது. இதை இதய சக்கரம்

என்றும், மத்திம சக்கரம் என்றும் அழைப்பர். இதயம், மார்புகள்,

நுரையீரல், இரத்த

ஓட்டம் ஆகியவற்றை இந்த சக்கரம் தான் பராமரித்துக் கொண்டிருக்கிறது.

இந்த சக்கரம் சமநிலையில் இயங்கும் போது, மனிதனின் மனம் அன்பால்

நிறைந்திருக்கும், பிறருடைய குற்றங்கள் மன்னிக்கப்படும், சமூகத்துடனும்,

குடும்பத்துடனும் உள்ள நெருக்கம் மிக ஆழமானதாக இருக்கும். வாழ்க்கை

குதூகலமானதாகவும், மகிழ்ச்சிகரமானதாகவும் இருக்கும், உடல் நலம் சிறப்பாக

இருக்கும். ஏனெனில் இந்த சக்கரம் தான் நோயெதிர்ப்பு சக்தியை நிர்வகிக்கக்

கூடியது.

இந்தச் சக்கரம் சமநிலையை இழக்கும் போது, உறவுகள் சீர்கெடும். நட்பு

பாழாகும். பிறருடனான தொடர்புகள் குறையும். வாழ்க்கை குறித்த நம்பிக்கை

குறையும், வருத்தங்களுக்குப் பஞ்சமே இருக்காது. எல்லோரிடமும் குறைகள்

மட்டுமே தெரியும். நோய் எதிர்ப்பு சக்தியே இருக்காது. அடிக்கடி உடல்நலம்

கெடும். இதன் நிறம் பச்சை. இதற்கான மந்திரச் சொல்— யம்.

உடலின் ஐந்தாவது சக்கரம் வீசுத்த சக்கரம். இந்த சக்கரம் தொண்டையில்

அமைந்துள்ளது. தொண்டைப் பகுதியும் அங்கே அமைந்துள்ள தைராய்டு மற்றும்

பாராதைராய்டு சுரப்பிகளை இது இயக்கிக் கொண்டிருக்கிறது.

இந்த சக்கரம் சமநிலையில் இருக்கும் போது, குரல் பிசிரின்றி ஒலிக்கும்.

சிந்தனை சீர்ப்படும், பேச்சாற்றல் சிறப்பாக இருக்கும். உடலின் எடையைக்

கட்டுப்பாட்டில் வைத்திருக்க உதவும். பிறருடன் கொள்ளும் தொடர்பு சிறப்பாக

இருக்கும். சிந்தனை வளமாகவும், விரைவில் நிகழ்வதாகவும் இருக்கும். எதிலும்

குழப்பமே இருக்காது.

தைராய்டு சுரப்பி தான் உடலை இயக்குவதில் முக்கிய பங்கு வகிப்பது.

அதனால், உடலின் வளர்சிதை மாற்றம், உடலிலுள்ள உயிரணுக்களுக்குள்

நடைபெறக்கூடிய வேதியியல் மாற்றங்கள், உடலை சக்தியுடன் வைத்திருத்தல்

போன்ற செயல்களில் இந்த சக்கரம் பெரும் பங்காற்றுகிறது.

இந்த சக்கரத்தின் சமநிலை தவறும் போது, கருத்துக்களை வெளியிடுவதில்

தயக்கம், குழப்பம், கொள்கையில் தெளிவின்மை போன்ற பாதிப்புகளோடு உடற்

பருமன் என்கிற வியாதியும் வரும். எவ்வித உரையாடலும் அச்சமூட்டுவதாகவே

இருக்கும். எலும்புகளின் வலு குறையும். ஏனெனில் இது தான் இரத்தத்தில் உள்ள

கால்சியத்தின் அளவையும் கூடப் பராமரித்துக் கொண்டிருக்கிறது.

இந்த சக்கரத்தின் நிறம் நீலம், இதற்குரிய மந்திரச் சொல்வம்

உடலின் ஆறாவது சக்கரம் ஆக்ஞ சக்கரம். இந்த சக்கரம் தான் நெற்றிக்கண்

என்று அழைக்கப்படுகிறது. இது பிட்யூட்டரி சுரப்பியை பராமரித்துக்

கொண்டிருக்கிறது. உடலில் உள்ள இதர மையங்களையும் இயக்கும் வேதிகளைச்

சுரக்கும் சுரப்பி இது.

இந்த சக்கரம் சமநிலையில் செயல்படும் போது நுண்ணறிவு வளரும்.

உள்ளுணர்வு சிறப்பாக இயங்கிக் கொண்டிருக்கும். உள்ளுணர்வு என்பது

தெய்வத்தின் குரல். உள்ளுணர்வு ஒவ்வொரு நபருக்கும் உண்டு. இதன் குரலை

மதிக்காமல் செயல்படும் போது தான், மனிதன் படுதோல்வி அடைகிறான்.

ஆகவே இந்தச் சக்கரம் சமநிலையில் இயங்கும்வரை, வழி தவறும்

பேச்சுக்கே

இடமிருக்காது. அறிவு, அனுபவம், புரிந்து கொள்ளும் திறன் போன்றவற்றை

யெல்லாம் கடந்த ஞான நிலையை உருவாக்கக் கூடியது.

செய்யும் ஒவ்வொரு காரியமும் சிறப்படையும். வளம் பெருகும்.

ஆச்சரியங்களின் களமாக வாழ்க்கை இருக்கும். தனிச்சிறப்புடைய மனிதராகத்

திகழ வைக்கும். இளமையைப் பாதுகாக்கும். உறக்கம் அற்புதமாக வரும்,

இந்த சக்கரத்தின் சமநிலை தவறும் போது, எதிர்மறைச் சிந்தனை

உருவாகும். இளமையிலேயே வயதான தோற்றம் வரும். உறக்கம் வராது. பொறுமை

இருக்காது. செய்ய வேலையிருக்காது. நிற்க நேரமிருக்காது என்பதைப் போல

ஓய்வே இருக்காது.

இதன் நிறம் கரு நீலம். இடற்கான மந்திரச்சொல்-அம்.

மனித உடலிலுள்ள ஏழாவது சக்கரம் சகஸ்ரார சக்கரம், இது பினியல்

சுரப்பியை இயக்கிக் கொண்டிருக்கிறது. இது சக்கரங்களின் கிரீடம் என்றும்

அழைக்கப்படுகிறது. பெரும்பாலும் உத்தரவிடும் தலைவனாக இது

செயல்படுகிறது. மனிதனின் ஆன்மீக சிந்தையின் மூலம் இது.

மூளையும், முதுகெலும்பும், நரம்பு மண்டலங்களும், உணர்வு மையங்களும்

இந்த சக்கரத்தால் தான் இயக்கப்படுகின்றன. இது சம நிலையில் இருக்கும் போது

எதையும் உணர்ந்தறியும் திறன் அற்புதமாக இருக்கும். கடவுள் தன்மையை

உணரும் வாய்ப்புக் கூட கிடைக்கலாம். இந்த சக்கரத்தின் சமநிலை தவறும்

போது, நிம்மதி இருக்காது. சுயநல சிந்தனை பெருகும். நான் என்கிற அகம்பாவம்

வளரும்.

இதன் நிறம் ஊதா. இதற்கான மந்திரச்சொல் ஓம்

மொத்தமுள்ள ஏழு சக்கரங்களில் நெஞ்சில் அமைந்துள்ள அனகாத சக்கரம்

உடலின் மையத்தில் அமைந்துள்ளது. இது இதயத்தைப் பராமரித்துக்

கொண்டிருக்கிறது. இதயத்திற்கு மேலேயுள்ள மூன்று சக்கரங்களும் அறிவோடு

தொடர்புடையவை. இதயத்திற்கு கீழே அமைந்துள்ள மூன்று சக்கரங்களும்

மனிதர்களின் அடிப்படைத் தேவைகள் மற்றும் கோபம், வருத்தம், துக்கம்,

மகிழ்ச்சி போன்ற உணர்ச்சிகளை உருவாக்கக் கூடியவை.

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் இந்திய ஞானிகளால் சொல்லப்பட்ட

மேற்கண்ட உண்மைகளை அடிப்படையாகக் கொண்டு நவீன மருத்துவ

அறிவியல் ஆராய்ச்சி செய்தது.

ஆய்வுக்கூட ஆரய்ச்சிகளின் முடிவில் உரிய காரணத்தைக் கண்டு பிடித்தது.

அதாவது ஒவ்வொரு மையத்திலும் ஒரு சுரப்பி இருக்கிறது. அந்த ஒவ்வொரு

சுரப்பியும் பல்வேறு இரசாயன திரவங்களைச் சுரக்கிறது. அவற்றின் பெயர் தான்

ஹார்மோன்கள்,

இந்த ஹார்மோன்களே மனிதப் பிறவியின் உடல் நலம், மன நலம், அறிவு,

உணர்வுகள், உணர்ச்சிகள் போன்ற அனைத்திற்கும் மூல காரணமாக இருக்கிறது

என்பதை ஆதாரபூர்வமாக நிரூபித்து வைத்தது.

மேற்கண்ட சக்கரங்கள் அனைத்தும் பாலின்பத்தின் மூலம் நிர்வகிக்கப்

படுகின்றன. அதாவது, பாலுறவில் ஈடுபட்டு, உச்ச கட்ட இன்பத்தை

அனுபவிக்கும் போது உடலில் உள்ள சுரப்பிகள் அனைத்தும் அவற்றிற்குரிய

நியமப் படி நல்ல வகையான வேதிகளைச் சுரந்து அவற்றின் பணிகளில்

சிறப்பாகச் செயல்படுகின்றன,

ஆகவே, பாலுறவால் ஏற்படும் உச்சகட்ட இன்பம் உடலில் நிகழும் போது

சுரக்கும் வேதிகள் ஒவ்வொரு சக்கரத்தின் இயக்கத்தையும் சீராக்கக் கூடியது.

வலுப்படுத்தக் கூடியது. பலப்படுத்தக் கூடியது. செழுமைப்படுத்தக் கூடியது.

அதன் மூலம் மனித உடலையும் மனதையும் முழு ஆற்றலோடு செயல் படச்

செய்யக் கூடியது. இதன் மூலம் உடல் நலத்தைப் பாதுகாக்கக் கூடியது.

சிந்தனையின் எல்லையை விரிவடையச் செய்யக் கூடியது. ஒரு குழந்தையின்

மூளையை போல் இக் கணத்திலிருந்து சிந்திக்கச் செய்யக் கூடியது. புலன்களின்

ஆற்றலை அதிகரிக்கக் கூடியது.

மனித உடலில் உச்சகட்ட பாலின்டம் நிகழாத போது, சில நல்ல வேதிகள்

சுரக்கது. அதற்குப் பதிலாக, சில மோசமான வேதிகள் சுரக்கின்றன,

அதனால், சக்கரங்கள் சமநிலையை இழக்கின்றன. அவை சமநிலை தவறும் போது

சிந்தனை சீர்கெடுகிறது.

பெண்ணை போகப் பொருளாகப் பயன்படுத்திக் கொண்டிருப்பதால்,

பெண்ணின் உடலில் உச்சகட்ட பாலின்பம் நிகழ்வதில்லை, அது தான்,

பெண்ணின் சிந்தனையைப் பாழடிக்கிறது. எளிதில் உணர்ச்சி வயப்படும்

சூழலிலேயே பெண்ணின் மனதை வைத்திருக்கிறது. அந்த நிலைமை தான்

பெரும்பாலான குடும்ப விவகாரச் சண்டைகளுக்கு மூலமாக இருந்து

கொண்டிருக்கிறது.

பெண்ணின் உடலில் இன்பம் நிகழ்வதில்லை, அதனால் பெண் உணர்ச்சி

வயப்படும் நபராகிறாள், சிடுசிடுப்பு, முன் கோபம், மைக்ரைன் தலைவலி, முதுகு

வலி, மூட்டு வலி, மொத்த உடல் வலி, தைராய்டு பிரச்சினைகள், சினைப்பை,

கருப்பை பிரச்சினை, தேவையற்ற கவலை, மாதவிடாய்ப்

பிரச்சினைகள்,

தூக்கமின்மை என்றும் இன்ன பிறவாகவும் பாதிக்கப் படுகிறாள்.

ஆகவே, பெண்ணின் உடல் எத்தகைய பாலின்பங்களையெல்லாம்

அனுபவிக்கும் வகையில் வடிவமைக்கப் பட்டிருக்கிறதோ அவற்றையெல்லாம்

பெண்ணுக்கு வழங்கும் போது, குடும்ப வாழ்க்கை உடனடியாக அமைதிப்

பூங்காவாக மாறி விடும்,

ஆகவே, மனைவிக்குரிய பாலின்பங்களை அவ்வப்போது வழங்கும் கண வன் நிச்சயமாக நிம்மதியோடு வாழ்வான். அவனுக்குரிய பாலின்பத்திற்குப் பஞ்சமிருக்காது. பாலின்ப பஞ்சமில்லை யென்றால் வேறெந்த பஞ்சத்தையும் மனதால் உணர முடியாது.

தற்கொலை சிந்தனை அவன் மனதில் எழவே எழாது. தம்பதியரின் மனம் செல்வக் களிப்பில் வாழ்ந்து கொண்டிருக்கும். மனமானது எந்த நிலையில் வாழ்ந்து கொண்டிருக்கிறதோ அந்த நிலை வாழ்க்கையில் நிஜமாகியே தீரும். இது ஈர்ப்பு விதி தரும் தகவல். நிருபிக்கப்பட்ட விஞ்ஞானம்.

ஆகவே, மனைவிக்கு வழங்குகின்ற பாலின்பங்கள் அனைத்தும் சமாதானத் தூதுவர்கள். பெண்ணின் மனமிளக்கிகள், மனிதப் பண்பின் பிறப்பிடங்களை ஊக்குவிக்கும் காரணிகள், பண்பாற்றலின் கேந்திரங்களை இயக்கும் மந்திரங்கள். இயந்திர வாழ்வில் ஆன்மாவைக்

குளிரூட்டக்கூடிய, ஆழமான அன்பை உருவாக்கக் கூடிய, தம்பதி யரிடையே நெருக்கத்தை அதிகரித்து உறவை வலுவாக்கக் கூடிய வேதிகளின் மூலங்கள்,

மேலும் தம்பதியருடைய மனதில் நிம்மதியை உருவாக்கக் கூடியவை. பேரன்பு, பெருமகிழ்ச்சி, பேரானந்தம் போன்றவையெல்லாம் என்ன என்பதை உணர வைக்கக் கூடியவை.

பெருங்கனவுகளை காணச் செய்யும் வல்லமை படைத்தவை.

அதோடு, அக்கனவுகளை நிஜமாக்கிக் காட்டுவதற்குரிய

உற்சாகத்தையும், ஊக்கத்தையும் வழங்கக் கூடியவை.

அது தவிர, ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் மறைந்து கிடக்கும் அற்புதப் புதையலை அறிமுகப்படுத்தக் கூடிய வல்லமை மிக்கவை, அசாதாரணமான திறமையுடையவர்களாக மாற்றக் கூடிய வல்லமை யுடையவை. அதோடு, ஆணின் காம வேட்கையை முறைப்படுத்தக் கூடியவை. அதனால், குடும்ப விவகாரச் சண்டைகளை வாழ்விலிருந்து வெளியேற்றும். பனிப்போர் விலகும், அதனால், குடும்ப வாழ்க்கை சொர்க்க வாழ்க்கையாக மாறும்.

### **6.** ஆணின் ஆற்றலும்**,** பெண்ணின் இயல்பும்

யானையும்**,** எலியும் உதாரணங்கள்**,**

ஆணின் உடலில் உச்சகட்ட பாலின்பம் நிகழ்வதைப் போலப் பத்து மடங்கு

கூடுதலான பாலின்பம் நிகழக் கூடிய வகையில் பெண்ணின் உடலை இயற்கை

படைத்திருக்கிறது. அதே போல அந்த இன்பத்தை நிகழ்த்துவதிலும் மிகப் பெரிய

ஏற்றத் தாழ்வுடன் தான் இருவரையும் இயற்கை படைத்திருக்கிறது.

மேற்கண்ட ஏற்றத் தாழ்வான நிலையை ஆண்களுக்குப் புரியும் வகையில்

விளக்கிச் சொல்ல ஞானிகளால் ஒரு கதை பயன் படுத்தப் படுகிறது. அது ஒரு

கற்பனைக் கதை தான். எனினும், அந்தக் கதையை விட வேறெந்த

உதாரணத்தின் மூலமாகவும், உண்மை நிலையைத் தெளிவாக விளக்கிக் கூறி

விட முடியாது. அந்தக் கதை இவ்வாறு தொடங்குகிறது.

அது ஒரு வனம். ஒரு நாள் அந்த வனத்தில் வாழ்ந்து கொண்டிருந்த யானைக்

குடும்பமொன்று இனச் சேர்க்கையில் ஈடுபட்டது. ஆணின் எடை மிகவும்

அதிகமாக இருந்தது. அதனால், பெண் யானை ஒரு மரத்தைச் சாய்ந்து நின்று

கொள்ள, அச்செயல் இனிதே நிகழ்ந்து முடிந்தது.

ஆனால், பெண் யானை ஆதரவிற்காகச் சாய்ந்து நின்ற மரத்தில் ஒரு பொந்து

இருந்தது. அந்த பொந்திலே, ஒரு ஆண் எலி வாழ்ந்து கொண்டிருந்தது.

நடந்தவை அனைத்தும் எதேட்சையாக அதன் கண்களில் பட்டு விட்டது. அதன்

விளைவாக, அந்த எலியின் பாலுணர்வு தூண்டப்பட்டு விட்டது.

பாலுணர்வு எளிதில் தூண்டப் படக் கூடியது.

பாலுணர்வு இயற்கையானது. பயிற்றுவிப்பின் மூலமாக ஓரளவிற்குக்

கட்டுப்படுத்தக் கூடியது. ஆனால் எந்த நேரத்திலும் தூண்டுதலுக்கு இரையாகக்

கூடியது.

ஒரு பெண்ணைக் கவர்ச்சியான நிலையில் பார்க்கும் அடுத்த வினாடியே

ஆணின் உடலில் பாலுணர்வைத் தூண்டக்கூடிய வேதிப்பொருள் சுரக்கத்

தொடங்கி விடும். இது ஒரு இயற்கை நிகழ்வு.

உதாரணமாக திரைப்படங்களில் காட்டப்படும் காதல் காட்சிகள் மற்றும்

கற்பழிப்புக் காட்சிகளுக்கு, வேதிகளைச் சுரக்கச் செய்யும் சக்தி உண்டு.

அதேபோல இருபொருள் கொண்ட உரையாடல், காமம் நிறைந்த மோகனப்

பார்வை, கிறக்கமான புன் முறுவல் போன்றவை கூட பாலுணர்வைத் தூண்டி

விடுகின்ற இயல்புடையவை.

அதனால், யாரேனும் பாலுறவில் ஈடுபடுவதை நேரிடையாகப் பார்க்க நேரும்

போது, பார்ப்பவரின் பாலுணர்வு எளிதில் தூண்டப்பட்டு விடும். பாலுறவு

நடவடிக்கையைக் கூடப் பார்க்கத் தேவையில்லை. பாலுறவிற்கு முந்தைய முன்

விளையாட்டுக்களைப் பார்த்தால் கூட பாலுணர்வில் தீ பிடித்துக் கொள்ளும்.

ஒரு சம்பவம் இவ்வாறு கூறுகிறது. ஒரு காதல் ஜோடிக்கு பால் வேட்கை

ஏற்பட்டு விடுகிறது. தனியார் விடுதி போன்ற பாதுகாப்பான

இடத்திற்குச் செல்ல

நேரமில்லை. அல்லது பண வசதி இல்லை, அல்லது துணிச்சல் இல்லை,

அதனால், ஆளரவமற்ற புறநகர்ப் பகுதியிலிருந்த ஒரு புதரைத் தேடி இரு சக்கர

வாகனத்தில் சென்று முன்னிரவு நேரத்தில் ஒதுங்குகிறார்கள். செயலும், இனிதே

நிகழ்ந்தேறுகிறது.

அந்தச் செயல் கொடுத்த இன்பம் காரணமாக, அடிக்கடி ஒதுங்கத்

தொடங்குகிறார்கள், இந்தச் செயல், அங்கே சுற்றிக் கொண்டிருந்த சில

விடலைகளின் பார்வையில் எதேட்சையாகப் பட்டு விடுகிறது.

காதலர்களின் கண்களுக்கு ஆபத்துகள் தெரியவே தெரியாது. தாங்களைப்

பற்றி யாருக்குமே தெரியாது என்று தான் காதலர்கள் நினைத்துக்

கொண்டிருப்பார்கள். ஆனால், பெண்ணின் குடும்பத்தைத் தவிர, மற்ற

அனைவருக்கும் தெரிந்த தகவலாகவே அந்தக் காதல் இருக்கும்.

கண்ணை மூடிக்கொண்டு பால் குடிக்கும் பூனை உலகமே இருண்டு

விட்டதாக எண்ணிக் கொள்ளும். அதே போலத் தான், காதலர்களின் கண்களைக்

காமம் குருடாக்கி விடும், எவ்வளவு விழிப்புணர்வுடன் காதலித்துக் கொண்டி.

ருந்தாலும், காதலை மறைப்பது கடினம். உடல் மொழி யே அனைத்தையும்

பறைசாற்றி விடும்.

இவ்வாறாக, அந்த விடலைகளின் கண்ணில் பட்ட காதல் காட்சி

அவர்களுடைய பாலுணர்வைத் தூண்டி விட்டு விடுகிறது. அவர்கள் திட்டம்

போடுகிறார்கள், அந்தத் திட்டப்படி, அடுத்த முறை காதலர்கள் ஒதுங்கிய

போது அவர்களைச் சுற்றி வளைக்கிறார்கள். விபரீதம் புரியாத நிலையில்,

அந்தப் பெண்ணை வன்பாலுறவிற்கு ஆட்படுத்துகிறார்கள்.

இதுபோன்ற தருணங்களில், எந்தக் காதலனும் முதலில் எதிர்க்கத் தான்

செய்வான். ஆனால், பெண்ணுக்காக நடைபெறும் சண்டை ஆழ்மனம் பங்கேற்கும்

சண்டை. அது மூர்க்கமாகத் தான் நடைபெறும். அதனால், விழுகிற அடியைப்

பொறுத்து, காதலன் ஒதுங்கிக் கொள்கிறான். அல்லது கட்டிப் போடப்

படுகிறான், பெண் குழுப் புணர்ச்சியை எதிர்கொள்கிறாள். இந்தச் சம்பவத்தில்

பெண் கொல்லப் பட்டாலொழிய சமூகத்தின் பார்வைக்கு இது வராது.

பெண்ணின் எதிர்காலம் குறித்த அச்சம் காரணமாக அமுக்கப்பட்டு விடும்,

அன்பும் புகழ்ச்சியும் பெண்ணை எளிதில் வீழ்த்தி விடும்.

இதே போலவே விபரீதம் புரியாத நிலையிலேயே அந்த எலிக்கும் ஆசை

பட்டு விடுகிறது. இந்த விவரம் முதலில் யானைக்கு தெரியவில்லை. ஆனால்,

ஒருசில தினங்களிலேயே தன்னை யாரோ பின் தொடர்வதை அது உணர்ந்து.

விட்டது. பெண்இனத்திற்கே இந்த உள்ளுணர்வு உண்டு.

முதலில் அந்த யானை எலியைக் கண்டித்தது. காலை வைத்தால் போதும்.

அழுத்தக் கூடத் தேவையில்லை. நீ சாகிதம் போல் ஆகிவிடுவாய். நீ என்னைப்

பின் தொடர்வதா? இம்முறை மன்னிக்கிறேன் ஓடிப்போ நாயே! என எலியை

விரட்டியடித்தது.

ஆனால், எலி ஒதுங்குகிற பாடில்லை. அது துணிச்சலாக முன்வந்தது,

என்னை உடனே கொன்று விடு. ஏனெனில் உன்னுடன் உறவு கொள்ளாமல்

என்னால் உயிர் வாழ முடியாது. ஆகவே நீயே என்னைக் கொன்று விடும். காதலி

காலால் செத்த புண்ணியமாவது எனக்குக் கிடைக்கட்டும் என்று பெண்களின்

மனதைக் கவரக்கூடிய கடைசி ஆயுதத்தைக் கையாண்ட போது, பெண்

யானையின் மனம் இளகி விட்டது.

அட பதரே! நீ என்னுடன் உறவு கொள்வதால் எனக்கு எந்தப் பாதகமும்

இல்லை. ஆனால், என் கணவனுக்குத் தெரிந்தால் விபரீதமாகி விடுமே என்று

தான் அஞ்சுகிறேன். அவன் என்னைக் கூட விட்டு விடுவான். ஆனால்,

உன்னைத் துரத்திப் பிடித்து கொலை செய்து விடுவான் என எவ்வளவோ

எச்சரித்தது. பயமுறுத்தியது.

காமம் அச்சமற்றது. அதனால் காமத்தீயால் தூண்டப்பட்ட எலி பின்

வாங்குவதாக இல்லை, அதனால், அந்தப் யானையால் சுண்டெலியைப்

புறக்கணிக்க முடியவில்லை. அன்பிற்கும், கெஞ்சுவதற்கும் பெண் இனம்

எப்போதுமே அடிபணிந்து விடும். பெரிய இடம், சின்ன இடம் என்கிற பாகுபாடு

தெரியாது. அதனால் யானையும் அடிபணிந்து விட்டது.

ஆனால், இது வெளியில் யாருக்கும் தெரியக்கூடாது. ஏனெனில், வெளியில்

தெரிந்தால் அந்த எலிக்கு பெருமை தானே தவிர, கடுகளவும் சிறுமையில்லை.

ஆனால், அந்த யானைக்கோ பெரிய கேவலமாகி விடும். மேலும், எலியைப்

போலவே மற்ற விலங்குகளும் பின் தொடரத் தொடங்கி விடலாம்.

அதனால், யாருக்கும் தெரியாத ஒரு இடத்தை யானை தேர்வு செய்தது.

அது ஒரு தென்னந்தோப்பு, எலியை அங்கே அழைத்துச் சென்ற யானை

“உன் விருப்பப் படி செய்து கொள்” எனக் கூறி நின்று கொண்டது. அந்த

குட்டி யெலி எப்படியோ தத்திப் பிடித்து, யானையின் கால்களில் இருந்த

முடிகளைக் கவ்விப் பிடித்து யானையின் மேலேறி என்னவோ செய்யத்

தொடங்கியது.

எலி தரையில் இருக்கிறதா அல்லது தன் மீது இருக்கிறதா என்பதைக் கூட

யானையால் உணர முடியவில்லை. எனினும் எலி தன் வழக்கப்படி

என்னவோ

செய்து கொண்டிருந்த்து.

மூன்று நிமிட ஓட்டப் பந்தயம்.

இந்தக் காட்சியை தென்னை மரத்தின் மீதிருந்த ஒரு பெண் குரங்கு பார்த்து

விட்டது. அதைப் பார்த்த உடனே குரங்குக்கு மகா கோபம் வந்து விட்டது. இந்த

யானைக்குத் தான் எத்துனை திமிர்? ஒரு எலியைக் கூட விட்டு

வைக்கவில்லையே? என்று பொறாமை ஏற்பட்டது.

பொறாமை பெண் இனத்திற்கே பொதுவான குணம். ஆண் பார்த்தால்

பங்குக்கு வருவான். பெண் பார்த்தால் அதை ஊரெல்லாம் சொல்லி பறைசாற்றிக்

கெடுக்கப் பார்ப்பாள், அதையே தான் அந்த பெண் குரங்கும் செய்தது.

ஒரு பெரிய தேங்காயைப் பறித்து, யானையின் மண்டை மீது குறி பார்த்து

வீசியது. குறி தவறவில்லை, சரியாக அங்குசத்தால் குத்தப்படும் இடத்தில்

அந்தத் தேங்காய் பலமாய் விழுந்தது. அதனால் ஏற்பட்ட வலியால் அந்த பெண்

யானை ‘அய்யோ அம்மா’ என்று வலி தாளாமல் அலறி விட்டது.

ஆனால், மேலே நடந்த சம்பவம் எதையும் அறியாத அந்த எலி, யானையின்

அலறலைக் கேட்டு, வெளியே எட்டிப் பார்த்து அப்பாவித்தனமாகக் கேட்டது.

“எண்டா தங்கம்! நான் முரட்டுத்தனமாகச் செயல்பட்டு விட்டேனா? மிகவும்

வலிக்கிறதா?”

யானையைக் கூட அலறச் செய்து விடும் அளவிற்கு தன்னுடைய ஆண்மை

வலிமையானது என எண்ணும் அளவிற்கு மடத்தனமான நம்பிக்கையை அந்த

எலி கொண்டிருந்தது.

பாலுறவைப் பொறுத்தவரை, ஆண், மற்றும் பெண் ஆகிய இருவரின்

உடற்கூறு மற்றும் திறனைப் புரிந்து கொள்ள விரும்புவோர் இந்தக் கதையை

நினைவில் வைத்துக் கொள்வது நலம்.

ஏனெனில், தன்னுடைய பாலியல் அறிவை வளர்த்துக் கொள்ளாத, தன்

பால் மண்டலத்தை உரிய பயிற்சிகளின் வாயிலாக வலுப்படுத்திக் கொள்ளாத,

பெண்ணின் உடற்கூறு பற்றி எதுவுமே தெரிந்து கொள்ளாத ஒரு ஆண்,

மேற்கண்ட எலியை விட சிறப்பாகச் செயலாற்றி விட முடியாது.

மூன்று நிமிடத்தில் இன்பம் துய்த்தலை முடித்துக் கொள்ளும் போது

பெண்ணுக்குரிய உராய்வின்பத்தைத் தவிர, உண்மையான உச்சகட்டப்

பாலின்பங்களை ஒரு போதும் வழங்கி விட முடியாது என்கிற கருத்தை

ஆண்களின் ஆழ் மனதில் பதிப்பதற்காகவே, மரணம் வரை எந்த ஆணும் மறக்கக்

கூடாது என்பதற்காகவே, இந்தக் கதை இங்கே சொல்லப்பட்டிருக்கிறது.

விந்து முந்துதல் என்பது என்ன?

இனியொரு ஞானி இந்தக் கதையைச் சொல்கிறார்.

நம் நாட்டு அரசரின் அழைப்பை ஏற்று விருந்தினராக அண்டை நாட்டின்

அரசர் வந்திருந்தார், விருந்துக்கு வந்த அரசர் விருந்தோடு போகாமல், நம் அரசரை

வம்புக்கு இழுத்தார்.

நம் அரசரை விட அவர் தான் பெரிய திறமைசாலி என்பதைக் காட்ட

விரும்பினார். அதனால், நம் நாட்டின் இராணுவ வீரர்களின் திறனைப் பரிசோதிக்க

விரும்புவதாக நம் அரசரிடம் கூறினார். அவரது விருப்பம் ஏற்கப்பட்டது.

பத்து வீரர்களைத் தன்னுடன் அனுப்புமாறு அவர் கேட்டார். வீரர்கள்

அனுப்பப்பட்டனர். நம் அரசரும், தளபதியும் அவருடன் சென்றனர். அந்த

வீரர்களை கங்கைச் சமவெளியில் இருந்த ஒரு வயலுக்கு அவர் அழைத்துச்

சென்றார். முழங்கால் அளவுள்ள சேற்று வயலில் காலணிகளுடனே

பத்து

வீரர்களையும் நிறுத்தினார், கைகளில் நீண்ட துப்பாக்கிகள் தரப்பட்டன.

விருந்தாளி அரசர் உத்தரவிட்டார்.

இடைவிடாமல் வேகமாகக் குதிக்கவும். இதுதான் உத்தரவு. வீரர்கள்

குதிக்கத் தொடங்கினர். ஓய்வே கிடையாது. முழங்கால் அளவீருந்த சேறு

இப்போது தொடையளவு சேறாயிற்று. இருப்பினும் உத்தரவு மாறவில்லை.

வீரர்கள் தொடர்ந்து குதித்துக் கொண்டிருந்தனர். அதனால் அவர்கள்

களைப்படைந்தனர். வேகம் குறைந்தது. முடிவில் குதிக்க முடியாமல்

ஒவ்வொருவராக விழத் தொடங்கினர். விருந்தாளி அரசர் "நிறுத்தாதீர்கள்.

போரிடுங்கள்" என்று கத்தினார். இருப்பினும் யாராலும் குதிக்க முடியவில்லை,

அனைவரும் தொய்ந்து விழுந்து விட்டனர்.

இதைப் பார்த்த விருந்தாளி அரசர் கேட்டார். இந்த வீரர்களை வைத்துக்

கொண்டு உங்களால் எப்படி நாட்டைப் பாதுகாக்க முடியும்?

கிண்டலும், கேலியுமாகக் கேட்ட அந்த அரசரிடம் நமது அரசர் தன்

தோல்வியை ஒப்புக் கொண்டார்,

ஏனெனில் அரசரின் உத்தரவை வீரர்கள் பின் பற்றவில்லை. இந்த நிலைமை

ஆபத்தானது. சண்டை நடக்கும்போது அரசரின் உத்தரவை கண்மூடித்தனமாகப்

பின்பற்றக்கூடிய படை தான் வெல்லும். எதிர்த்துக் கேள்வி கேட்கிற படையும்,

போரிட முடியாமல் தொய்ந்து போகும் படையும் தோல்வியைத்தான் சந்திக்க

வேண்டியிருக்கும், நம் அரசரை வென்று விட்ட களிப்பில் விருந்தாளி அரசர்

சென்று விட்டார்.

நம் அரசர் அவருக்குப் பாடம் புகட்ட விரும்பினார். அதனால் விருந்தாளி

அரசருக்கு ஒரு ஓலை அனுப்பினார். உங்கள் நாட்டுப் படைவீரர்களின் திறனை

நான் பரிசோதிக்க விரும்புகிறேன். அனுமதி கிடைக்குமா?

உடனே அனுமதி கிடைத்தது. பரிசோதனைக்கான ஒரு நாளும்

குறிக்கப்பட்டது. ஆனால், அந்த நாள் வருவதற்கு முன்பே, தன்னுடைய நாட்டுப்

படை வீரர்களில் தலைசிறந்து விளங்கிய திருமணமாகாத, திடகாத்திரமான

பத்துப் பேரை அந்த அரசர் தேர்ந்தெடுத்து, பயங்கரமாகப் பயிற்சி கொடுத்து

வைத்து விட்டார்.

முழங்கால் அளவு சேறு, தொடையளவு சேறு, மற்றும் இடுப்பளவு சேறு என்

பல்வேறு வயல்களில் ஒரு நாள் முழுவது ஓயாமல் குதிக்கக் கூடிய பயிற்சியை

அளித்து விட்டார். கைகளில் துப்பாக்கியைத் தவிர முதுகிலே ஒரு மணல்

மூட்டையோடும் நாள் முழுக்க ஓயாமல் குதிப்பதற்கான பயிற்சியை அளித்து

விட்டார்.

பரிசோதனை நாள் வந்தது. நம் அரசரும் அங்கே சென்றார். ஆனால்,

வீரர்களுக்குப் பயிற்சி அளித்து தயார்ப்படுத்தி வைத்திருக்கும் தகவல் நம்

அரசருக்குத் தெரியாது.

உரிய வரவேற்பு நிகழ்ச்சிகளுக்குப் பின் அந்த அரசர் கேட்டார். சொல்லுங்கள்

எந்த வயல்வெளிக்குச் செல்ல வேண்டும்? நம் அரசரோ வயல் எதுவும்

தேவையில்லை. இந்தக்கூடமே போதும் என்று கூறி விட்டார்.

அண்டை நாட்டு அரசருக்கு ஒரே மகிழ்ச்சி. ஏனெனில் இடுப்பளவு

சேற்றிலேயே நாள் முழுக்கக் குதிக்கும் பயிற்சி பெற்ற வீரர்களுக்கு கட்டாந்

தரையில் குதிப்பது, பொரி சாப்பிடுவதைப் போன்றது. ஆகவே எளிதில்

ஊதித் தள்ளி இந்த அரசனின் முகத்தில் கரியைப் பூசப் போவது

நிச்சயம் என்கிற

களிப்பில் வீரர்கள் அழைக்கப்பட்டனர். நம் அரசரின் உத்தரவுக்குக் கீழ்ப்படியும்

படி, உத்தரவிடப்பட்டனர்.

நம் அரசரோ, ஆயுதங்களைக் கூட கீழே வைக்கச் சொல்லி விட்டார்.

காலணிகளைக்கூட கழற்றி தள்ளி வைக்கச் சொல்லி விட்டார். இதைக் கண்ட

அந்த அண்டை நாட்டு அரசனும் தளபதியும் மிதமிஞ்சிய மகிழ்ச்சியில்

திளைத்தனர்.

காலணிகளோடு, ஆயுதங்களோடு இடுப்பளவுள்ள சேற்றிலேயே ஒரு நாள்

முழுக்கக் குதிக்கப் பயிற்சி பெற்றுள்ள அந்த வீரர்களை, ஆயுதங்களின்

எடையுமின்றி, காலணி களின் சுமையுமின்றி, சேறும் இல்லாமல் குதிக்கச்

சொன்னால், அவர்கள் மூன்று நாட்களுக்கு நிற்காமல் குதிப்பார்கள்.

ஆகவே, இந்த முட்டாள் அரசன் முகத்தில் கரிபூசிக் கொண்டு போவது

உறுதி. ஏறக்குறைய அனைவருக்குமே முடிவு தெளிவாகத் தெரிந்து விட்டது.

அதனால், போட்டி பற்றிய சுவாரசியம் கூட குறைந்து போய்விட்டது.

நம் அரசரோ அந்த வீரர்களின் ஆடைகளைக் கூட களைந்து விடும் படிக்

கூறி விட்டார். அவர்கள் நிர்வாணமாய் நின்றிருந்தனர். அவர்கள் கையில் ஏதோ

ஒரு எண்ணெய் ஊற்றப் பட்டது. அதைத் தங்கள் ஆணுறுப்பின் மீது

பூசிகொள்ளும் படி உத்தரவிடப்பட்டது. பூசி முடிந்ததும் தங்கள் ஆணுறுப்பை

கெட்டியாகப் பிடித்துக் கொள்ளும் படிக் கூறப்பட்டது. பிடித்துக் கொண்டனர்.

“ஒன்று” எனச் சொல்லும் போது கையை வயிற்றை நோக்கித் தள்ள

வேண்டும். “இரண்டு” என்று சொல்லும் போது, கையை வெளிப்புறம் நோக்கி

இழுக்க வேண்டும். எந்த வேகத்தில் “ஒன்று. இரண்டு எனச் சொல்லப்

படுகிறதோ அதே வேகத்தில் அவர்களுடைய கை இயங்க வேண்டும். இது தான்

உத்தரவு. உத்தரவிடப் பட்டது. ஒன்று, இரண்டு; ஒன்று; இரண்டு; ஒன்று; இரண்டு;

கொஞ்சம் கொஞ்சமாக சொல்வதன் வேகம் அதிகரிக்கப் பட்டது. அதன்.

வேகமாகச் சொல்லப்பட்டது. அனைவருடைய கைகளும் மின்னல் வேகத்தில்

இயங்கிக் கொண்டிருந்தன. அப்போது திடீரென்று "நிறுத்துங்கள்" என்று நம்

அரசர் உத்தரவிட்டார்.

ஆனால், பரிதாபம், ஒருவர் கூட நிறுத்தவில்லை. "சண்டை முடிந்து

விட்டது. சுடுவதை நிறுத்துங்கள்." என்று நம் அரசர் காட்டுக் கத்தலாய்க்

கத்தினார். அண்டை நாட்டு அரசரையும் உத்தரவிடும்படி கூற அவரும்

உத்தரவிட்டார். ஆனால், அந்தோ பரிதாபம்! யாருமே நிறுத்தவில்லை,

அந்த அரசன் தன்னுடைய முந்தைய அனுபவத்தை மட்டுமே

மனதிற் கொண்டு வீரர்களைத் தயார்ப்படுத்தி வைத்திருந்தது முட்டாள்தனம்

என்பதைப் புரிந்து கொண்டான்,

என்ன படை இது? உத்தரவை மீறும் படையை வைத்துக் கொண்டு

சமாதானமாக வாழ்வது எப்படி? இந்தப் படையை வைத்துக் கொண்டு நீங்கள்

எப்படி ஒரு சமாதான உடன்படிக்கையை ஏற்படுத்திக் கொள்ள முடியும்? எனக்

கேட்டு அந்த எதிரி நாட்டு அரசரின் முகத்தில் நமது அரசர் கரியைப் பூசினார்

என்று முடிகிறது கதை.

சுய இன்பத்தில் ஈடுபட்ட அனுபவத்தையே அடிப்படையாகக் கொண்டு

செயல் படுதல், பாலுறவின் போது, நிறுத்த முடியாத தூரத்திற்குச் செல்லுதல்,

அல்லது திரும்ப முடியாத எல்லை வரை கண்மூடித் தனமாகச் சென்று விடுதல்,

நிறுத்தத் தெரியாமை போன்றவை தான் ஆணின் பாலின்ப வாழ்க்கையில் உள்ள

மிகப் பெரிய பிரச்சினை. இதற்குப் பெயர் தான் விந்து முந்துதல்,

விந்து முந்துதல் என்பது வியாதி அல்ல, உரிய பயிற்சி பெறாததன்

விளைவு, சுய இன்பப் பழக்கம் ஒரு காரணம். காதற் தசை நார்ப் பயிற்சியும், வீரிய

அளவுகோல் பயிற்சியும் செய்தால் போதும், இதை நிவர்த்தி செய்து

மனவிக்குரிய பாலின்பங்கள் அனைத்தையும் தவறாமல் வழங்கி விடலாம்.

ஆண்மையின் வீரியத்தை அதிகரித்துக் கொள்வதற்கான, நீண்ட நேரம்

நிலைத்து நின்று செயலாற்றுவதற்குரிய பயிற்சிகள் உள்ளன. அவற்றில்

ஈடுபடுவதன் மூலமாக ஒவ்வொரு ஆணும் தன்னை வலிமைப்படுத்திக் கொண்டு,

அனைத்து பாலின்டங்களையும் தவறாமல் மனைவிக்கு வழங்க முடியும் என்கிற

கருத்தை மனதில் பதிக்கவே இந்தக் கதை சொல்லப் பட்டுள்ளது.

துரித ஸ்கலிதம்

வேறொரு ஞானி துரித ஸ்கலிதம் பற்றிப் புரிந்து கொள்வதற்காகக் கீழ்க்கண்ட

கதையைக் கூறுகிறார்.

பேரரசரின் ஒரே மகளான இளவரசிக்கு திருமணம் ஏற்பாடாயிற்று.

அவளைத் திருமணம் செய்து கொள்பவன் தான் நாட்டின் வருங்கால மன்னன்.

அதனால், ஏராளமான இளவரசர்கள் சுயம்வரத்தில் பங்கேற்றனர். பல்வேறு

போட்டிகள் நடத்தப்பட்டன. இறுதியில், உயர்பட்சத் தகுதிகளைக் கொண்ட பத்து

இளவரசர்கள் அவள் முன் நிறுத்தப்பட்டனர்.

அவள் ஒரு பேரழகி. அதனால் ஆண்மையிற் சிறந்த ஒரு இளவரசனையே

தேர்ந்தெடுக்க விரும்பினாள். அவளைப் பொறுத்தவரை, முன் விளையாட்டுகள்

முடியும் வரை ஆணின் பாலுணர்வு தூண்டப் படக்கூடாது. லிங்கம்

விரைப்படையக் கூடாது. பாலுணர்வைக் கட்டுப் படுத்தும் சக்தி அவனுக்கு

இருக்க வேண்டும். இது தான் தேர்வின் நோக்கம்.

அவளது தேர்வு தொடங்கியது. ஒரு பளிங்குக் கூடத்திற்குள் பத்து

இளவரசர்களும் நிர்வாணமாக நிறுத்தப் பட்டனர். பெரிய நாட்டின்

சக்கரவர்த்தியாகக் கூடிய வாய்ப்பு. அதனால் அவர்கள் நிர்வாணமாக நிற்க

ஒப்புக் கொண்டனர்.

அந்தப் பேரழகி கூடத்திற்குள் நுழைந்தாள். அவளும் நிர்வாணமாகவே

வந்தாள், ஊர்வசி, ரம்பை, மேனகை என அனைவரையும் மிஞ்சும் அழகுடன்

இருந்தாள். அந்த இளவரசர்களின் அருகில் சென்றாள். காமத்தோடு பார்த்தாள்.

அவர்கள் உடலோடு தன்னுடைய உடலை உரசினாள்.

ஏற்கெனவே அவள் ஒரு பேரழகி. அதோடு அவளுடைய செயல்கள்

அனைத்தும் ஆணின் காமத்தைத் தூண்டுவதாக இருந்தது. அதனால், அவளால்

தீண்டப்படும் போது, ஒவ்வொரு இளவரசனின் லிங்கமும் உயிர்த்தெழத்

தொடங்கி விட்டது.

முதலில் நின்ற ஒன்பது இளவரசர்களுமே தங்கள் உணர்ச்சியைக்

கட்டுப்படுத்த முடியாத ஆண்களாகவே இருந்தனர். ஆனால், கடைசியாக

நின்றிருந்த இளவரசன் மட்டுமே எந்தவிதமான உணர்ச்சிகளையும் காட்டாத

நிலயில் இருந்தான்.

அவனுடைய லிங்கம் மட்டுமே எவ்வித உணர்ச்சியும் இல்லாமல் மிகவும்

தளர்வான நிலையில் இருந்தது. இளவரசி அவனை நெருங்கினாள், ஏதேதோ

செய்து பார்த்தாள். அவனுடைய லிங்கத்தில் எவ்வித மாற்றமும் இல்லை,

இப்படிப்பட்ட ஒரு ஆணைத்தான் இளவரசி தன் மனதிற்குள் நீண்ட

காலமாக வரித்து வைத்திருந்தாள். அவளுடைய நீண்ட கால எதிர்பார்ப்பைப்

பூர்த்தி செய்துள்ள அந்த இளவரசனைத் தேர்ந்தெடுக்க முடிவெடுத்து, அந்த

முடிவை உடனே தனது தந்தையிடம் தெரிவிக்க வேண்டுமென சரேலென்று

இளவரசி திரும்பினாள்.

ஆனால் திரும்பிய வேகத்தில் கால் வழுக்கி, பளிங்குத் தரையில் விழுந்து

விட்டாள் அவ்வாறு தான் வழுக்கி விழக் காரணமாக இருந்த பொருள்

என்னவென்று பார்த்தாள். அது அந்த கடைசி இளவரசனின் உயிர்நீர்.

அதாவது, இளவரசி ஒன்பதாவது ஆணைச் சோதித்துக் கொண்டிருந்த

போதே, இவனுடைய உயிர்நீர் வெளியேறி விட்டது. அதில் கால் வைத்ததால்

தான் இளவரசி வழுக்கி விழுந்து விட்டாள். இளவரசியின் பேரழகைப் பிறந்த

மேனியில் பார்த்தபோதே அவன் உணர்ச்சி வயப்பட்டு தன் உயிர் நீரை

வெளியேற்றி விட்டான். இதற்குப் பெயர் தான் துரித ஸ்கலிதம்,

துரித ஸ்கலிதம் என்பது ஒரு நோய் அல்ல. இது மனம் சார்ந்தது. இதைக்

களைவதற்கென இந்த நூலில் சொல்லப்பட்டுள்ள பயிற்சிகளை முறையாகச்

செய்யத் தொடங்கினால் துரித ஸ்கலிதப் பிரச்சினையிலிருந்து ஒரே மாதத்தில்

மீண்டு விடலாம். ஆனால், எந்த விதப் பயிற்சியும் எடுக்காமல், குடும்ப

வாழ்க்கையைத் தொடர்ந்து வாழத் தொடங்கினால், மனைவியைக் கருத்தரிக்கச்

செய்யலாம்.

மற்றபடி, ஓரிரு நிமிடங்களில் முடித்துக் கொள்ளும் பாலுறவால்

மனைவிக்குரிய உராய்வின்பத்தைக் கூட வழங்க முடியாது. அதனால், இல்லற

வாழ்க்கை நிரந்தரமாகப் போர்க்களமாகவே இருந்து கொண்டிருக்கும், கால்

காசுக்குக் கூட மனைவி மதிக்க மாட்டாள்.

அது தவிர, இதைப் போன்ற ஆணைத் திருமணம் செய்து கொண்ட பெண்கள்

தான் கள்ளக் காதலைத் துணிந்து துவக்குகிறார்கள். அவர்களுடைய பாலின்ப

ஆற்றாமை எந்த ஆபத்தையும் எதிர் கொள்ளச் செய்கிறது.

அவர்களுடைய செயலைக் கண்டும் காணாத மாதிரி அனுமதித்து விட்டால்,

கணவனுடனும் சேர்ந்து வாழ்கிறார்கள். கள்ளக் காதலுக்குக் குறுக்கே நின்றால்,

கள்ளக் காதலனின் துணையோடு கணவனைக் கொலை செய்து விடுகிறார்கள்,

அல்லது திட்டமிட்டு சண்டையை உருவாக்கி கோபித்துக் கொண்டு

பிறந்தகத்துக்குச் சென்று விடுகிறார்கள்.

பிறந்தகம் சென்ற மனைவியைத் தேடிச் சென்று தன்னுடன் வாழ

அழைக்கும் கணவனை இரக்கமில்லாமல் அடித்து விரட்டுகிறார்கள், கணவனுக்கு

விழுகிற அடி கள்ளக் காதலர்களின் தரத்தைப் பொறுத்தது.

அதே நேரத்தில் விவாகரத்தும் வழங்காமல் கணவனைப் பயங்கரமாகப்

பழி யெடுக்கிறார்கள். இந்தக் கலாச்சாரம் ஆங்காங்கே தலை காட்டத்

தொடங்கியிருக்கிறது, இந்தக் கலாச்சாரத்திற்கான விதை மனைவியைப் போகப்

பொருளாகப் பயன்படுத்தும் செயலிலிருந்து உருவாகிறது.

ஆண்மையிருந்தும் அதை வலுப்படுத்தக் கற்றுக் கொள்ளாத துரித

ஸ்கலித பேர்வழிகளைத் திருமணம் செய்து வதை படும் பெண்கள், பாலின்ப

ஆற்றாமை என்கிற மனநோய்க்கு ஆளாகி விடுவதால், குழந்தைகளின்

எதிர்காலத்தைப் பற்றி மட்டுமல்ல, கணவனின் மரணத்தைப் பற்றிக் கூடக்

கவலைப் படுவதில்லை.

கணவன் செத்துப் போய் விட்டான் என்கிற நற்செய்தி க்காகக் காத்துக்

கொண்டிருக்கிறார்கள். இது தான் தணிக்கப் படாத காமத்தின் ருத்ர தாண்டவம்.

ஆனால், உரிய பயிற்சிகளை மேற்கொள்வதன் மூலமாக எப்படிப்பட்ட ஆணும் பாலியல் ரீதியாகத் தன்னாளுமைத் திறனைப் பெற்று விடலாம். அதன் மூலம் மனைவிக்குரிய பாலின்பங்கள் அனைத்தையும் ஈடுபடும் ஒவ்வொரு முறையும் தவறாமல் வழங்கி விடலாம் என்பதே ஆண்களுக்குள்ள நற்

செய்தியாகும்.

## 7. பால் மண்டலத்தை வலுப்படுத்தும் பயிற்சிகள்

ஒரு ஆணின் பாலியல் திறனையும், பொதுவாக ஆண்களிடம் காணப்படும்

பாலியல் பலவீனங்களைப் பற்றியும் கதைகள் வடிவிலே, தெளிவாகப் புரிந்து.

கொண்டோம். அந்தப் பலவீனங்களையெல்லாம் ஆணின் பாலியல் வாழ்விலிருந்து

விரட்டியடிக்க வேண்டுமானால், குறிப்பிட்ட உடற்பயிற்சிகளைச் செய்ய

ஆண் கற்றுக் கொள்ள வேண்டும்.

அதாவது, பளு தூக்கும் போட்டியாளன் தன் கைகளுக்கும், ஓட்டப்பந்தய

வீரன் தன் கால்களுக்கும் பயிற்சியளிப்பதைப் போலே, கணவனாகப்

பதவியேற்கும் ஆண் தன்னுடைய பால்மண்டலத்தை வலுப்படுத்துவதற்குரிய

பயிற்சிகளைச் செய்யக் கற்றுக் கொள்ள வேண்டும்.

லிங்கத்தின் வீரியத்தை நீண்ட நேரம் நிலைத்து நிற்கச் செய்கிற

பிரத்யேகமான பால் மண்டலப் பயிற்சிகளைச் செய்யக் கற்றுக் கொள்ள வேண்டும்.

அப்போது தான் தாம்பத்ய வாழ்க்கை என்கிற பாடத்தில், மனைவி என்கிற

ஆசிரியையிடமிருந்து அதிக பட்ச மதிப்பெண்களைப் பெற்று குடும்ப வாழ்வில்

சிறந்த கணவன் என்கிற நற்பெயரை ஈட்ட முடியும்.

அவ்வாறான பயிற்சிகளில் ஒன்றைப் பற்றி இந்த அத்தியாயத்தில் தெரிந்து

கொள்ளப் போகிறோம்,

உடற் பயிற்சி.

உடற் பயிற்சி என்றால் உடலை வலுப்படுத்துவது அல்லது உடலின்

குறிப்பிட்ட அவயத்தின் திறனை அதிகரித்துக் கொள்வது என்பதை அனைவரும்

அறிந்திருக்கிறோம்.

ஆனால், உடற் பயிற்சியால் நமது உடல் எவ்வாறு வலுப்பெறுகிறது

என்பதையும், உடற் பயிற்சியின் போது நமது உடலில் நிகழ்வது என்ன

என்பதையும் பற்றித் தெளிவாகத் தெரிந்து கொள்ளாமல், பால்மண்டலத்தை

வலுப்படுத்தும் பயிற்சியில் மனமுவந்து ஈடுபட முடியாது.

கோடானு கோடி தனித்தனி உயிரணுக்கள் ஒன்று கூடி வாழ்ந்து

கொண்டிருக்கும் ஒரு தொகுதி தான் மனித உடல். ஒரு கடுகளவில்

நூற்றுக்கணக்கான உயிரணுக்கள் வாழும் அளவிற்கு அவை நுண்ணியமானவை.

உதாரணமாக விரல் என்பது இலட்சக்கணக்கான உயிரணுக்களால்

உருவாகியுள்ள ஒரு உறுப்பு. இவ்வாறு ஒன்று கூடி வாழ்ந்து கொண்டிருக்கின்ற

உயிரணுக்கள் ஒவ்வொன்றும் பிராண வாயுவைக் கொண்டே உயிர் வாழ்கின்றன.

அவ்வாறுள்ள ஒவ்வொரு உயிரணுவிலும் ஒரு உலைக்களம் இருக்கிறது.

அந்த உலைக் களத்தில் பிராணவாயு எரிக்கப் படுகிறது. அவ்வாறு பிராணவாயு

எரிக்கப் படும்போது, ஒவ்வொரு உயிரணுவிலும் வெப்பம் உருவாகிறது. அவ்வாறு

ஒவ்வொரு உயிரணுவும் வெப்பத்தைத் தொடர்ச்சியாக உருவாக்கிக்

கொண்டிருப்பதால் தான் உயிருள்ள ஒவ்வொரு உடலும் சூடாக இருக்கிறது.

மேலும் அந்த வெப்பம் தான் சக்தியாக மாறுகிறது. வாகனங்கள்

முதற்கொண்டு, இயந்திரங்கள் ஈராசு வெப்பம் தான் அவை இயங்குவதற்கான

சக்தியாக மாறுகிறது. உதாரணமாக பெட்ரோல் என்கிற திரவம் எரிந்து

வெப்பத்தை உருவாக்கா விட்டால் கார் என்கிற வாகனம் இயங்காது. உடலில்

வாழ்ந்து கொண்டிருக்கும் உயிரணுக்களும் அவ்வாறு தான் செயல்பட்டுக்

கொண்டி ருக்கின்றன,

ஒவ்வொரு உயிரணுவிலும் உள்ள உலைக் களத்தில் பிராணவாயு எரிக்கப்

படுவதால் ஏற்படும் வெப்பம் காரணமாக தனித் தனியாக சக்தி உருவாகிறது.

அவ்வாறு உருவாகும் சக்தி, மனிதன் விரும்பும் போது ஒன்று திரண்டு, அவன்

விருப்பப் படி இயங்குவதற்குரிய திறனை உடலுக்கு அளிக்கிறது. ஆகவே,

உடலில் வாழும் ஒவ்வொரு உயிரணுவிற்கும் சக்தியை உருவாக்க பிராணவாயு

கண்டிப்பாகத் தேவை.

சுவாசத்தின் மூலமாக காற்றிலுள்ள பிராணவாயு நுரையீரலுக்குள் வருகிறது.

அவ்வாறு வந்த பிராணவாயுவை நுரையீரலிலிருந்து எடுத்துச் சென்று

ஒவ்வொரு உயிரணுவிற்கும் விநியோகிக்கும் வேலையை இரத்தம் செய்கிறது.

உடலில் நிகழும் இரத்த ஓட்டம் என்பதே சரக்குப் போக்குவரத்து தான்.

இதயத்திலிருந்து வெளியேறும் போது பிராணவாயுவைக் கொண்டு செல்லும்

இரத்தம், திரும்ப வரும் போது அந்தப் பிராணவாயு உயிரணுக்களில்

எரிக்கப்பட்டதால் ஏற்பட்ட சாம்பல் போன்ற கழிவுகளை எடுத்துக் கொண்டு

திரும்புகிறது.

ஆகவே, இரத்த ஓட்டத்தின் மூலம் உடலில் வாழும் உயிரணுக்கள்

அவற்றிற்குரிய எரிபொருளைப் பெறுவதோடு, உயிரணுக்களில் சேரும்

கழிவுகளும் அகற்றப்பட்டு அவற்றின் சுகாதாரமும் பாதுகாக்கப்படுகிறது.

இவ்வாறு இரத்த ஓட்டத்தின் மூலம் பிராணவாயுவைப் பெறுகின்ற

உயிரணுக்கள் சக்தியை உருவாக்கி உடலைச் செயல்படச் செய்கின்ன்றன

மேற்கண்டவாறு, தன்னியல்பாக உடலில் உருவாகக் கூடிய சக்தியை, திட்டமிட்டு

உருவாக்கவும், குறிப்பிட்ட பகுதியில் மட்டும் கூடுதலான சக்தியை

உருவாக்கவும் நம்மால் முடியும். அதற்குப் பெயர் தான் உடற் பயிற்சி!

அதாவது, பளு தூக்குபவன் தன் கைகளுக்கும், ஓட்டப்பந்தய வீரன்

தன் கால்களுக்கும், துப்பாக்கி சுடும் வீரன் தன் கண்களுக்கும் பயிற்சி

தரும் போது அந்தப் பகுதிக்கு கூடுதலான இரத்தம் செல்லும். அவ்வாறு

கூடுதலான இரத்தம் செல்வதால் அந்தப் பகுதியில் வாழும் உயிரணுக்கள்

கூடுதலான பிராண வாயுவைப் பெறும்.

கூடுதலான பிராணவாயுவைப் பெறுவதால் அவை கூடுதலான சக்தியை

உருவாக்கும். அதனால், உடலின் அந்தக் குறிப்பிட்ட பகுதி கூடுதலான

வலிமையைப் பெறும். அதாவது அந்தப் பகுதி எதைச் செய்யப் படைக்கப்

பட்டிருக்கிறதோ அந்தப் பணியில் அது சிறப்பாக இயங்கும்.

மேலும் அந்தப் பகுதியில் வாழும் உயிரணுக்களில் உருவாகின்ற

கழிவுகளும் உடனடியாக அகற்றப்படும். மேலும், எந்தப் பகுதியில் இரத்தம்

அதிகமாகப் பாய்கிறதோ அந்தப் பகுதியில் உடலின் இராணுவமும் சிறப்பாகச்

செயல்பட்டுக் கொண்டிருக்கும். அந்தப் பகுதியை நோய்களால் அல்லது

தொற்றுக் கிருமிகளால் எளிதாகத் தாக்க முடியாது. அதனால், அந்தப் பகுதியின்

சுகாதாரம் சிறப்பாகப் பராமரிக்கப்படும்.

இவ்வாறாக, உடலின் குறிப்பிட்ட பகுதிக்கு, குறிப்பிட்ட வகையான

பயிற்சியைத் தருவதன் மூலம், அந்தப்பகுதிக்கு அதிக அளவு பிராணவாயுவைச்

செலுத்தி, அந்தப் பகுதியில் மட்டும் அதிக சக்தியை உருவாகச் செய்து உடலின்

அந்தப் பகுதியை மட்டும் அதிக வலுவுள்ளதாகவும், அதிகபட்ச

நோயெதிர்ப்பாற்றலைக் கொண்டதாகவும் நம்மால் மாற்ற முடியும்.

இவ்வகையில், ஆணின் ஆண்மைத்தன்மை, வீரியம், நிலைத்து நின்று

செயலாற்றும் ஆற்றல் போன்றவற்றோடு, இரு பாலரின் இன்பக் கிளர்ச்சியின்

அளவைக் கூட பன்மடங்கு அதிகரிக்கக் கூடிய பல பயிற்சிகள் இருக்கின்றன

அந்த உடற்பயிற்சிகளின் பெயர் தான் காதற் தசை நார்ப் பயிற்சிகள். இதை “மூல

பந்திவா” என்று தந்த்ரா நூல்கள் விளிக்கின்றன.

காதற் தசை நார்ப் பயிற்சி

காதற் தசை நார்கள் என்பவை மூலாதார சக்கரத்தை மையமாகக்

கொண்டு அமைந்துள்ளன, சக்கர அமைப்பைப் பற்றி அறியாதவர்களுக்குக் கூட

மனித உடலில் மூலம் என்கிற பகுதி எங்கே இருக்கிறது என்று தெரிந்திருக்கக்

கூடும், ஏனெனில், ஆசன வாய்க்கு மூலம் என்றொரு பெயரும் உண்டு.

ஆனால், ஆசன வாயில் மூலாதார சக்கரம் அமைந்திருக்கவில்லை.

ஆணின் ஆசன வாய்க்கும், ஆணின் விதைகளுக்கும் இடையே உள்ள

பகுதியில் அமைந்திருக்கிறது. பெண்ணைப் பொறுத்த வரை யோனியின்

மேற்புறச் சுவற்றில் காதற் தசை நார்கள் அமைந்திருக்கின்றன, இங்கேயுள்ள

தசையும், நரம்புகளும் தான் பாலுறுப்புகளை முறையாக இயங்கச் செய்வதில்

முக்கியப் பங்காற்றுபவை.

இந்தத் தசை நார்களுக்கு பயிற்சி அளித்தால், அந்த பயிற்சியின்

அளவிற்கேற்ப, இன்பத்தின் அளவு கூடும். பெண்ணின் உடலில் உச்சகட்ட

இன்பம் உருவாவதற்கான நேரம் குறையும். மணி க்கணக்கில் போராட

வேண்டியிருக்காது. உரிய பயிற்சியளித்து இதை வலுப்படுத்தும் போது,

பெண்களின் சிறு நீரைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் கூடப் பெருமளவில்

அதிகரிக்கும்.

துரித ஸ்கலிதமும், விந்து முந்துதலும் தான் ஆணுக்குள்ள முக்கியமான

நெருக்கடிகள். ஏற்கெனவே உதாரணக் கதைகளின் மூலம் அவற்றைப் பற்றி

விளக்கப்பட்டுள்ளன. காதற் தசை நார்ப் பயிற்சி அந்தக் குறைகளை அகற்றுகிறது.

மேலும் இந்தப் பயிற்சிக்குப் பின்னால் ஏற்படக்கூடிய உச்சகட்ட

பாலின்பம் விவரித்துரைக்க முடியாத இன்பக் கிளர்ச்சியை முழு உடலிலும்

பரவச் செய்யக் கூடியதாகவும், ஒவ்வொரு முறையும் முழு உடலையும் சிலிர்க்க

வைக்கக் கூடியதாகவும் இருக்கும். இரு பாலருக்குமே இந்தத் தகவல் பொருந்தும்.

இந்த காதற் தசை நார்ப் பயிற்சியைச் செய்வது எப்படி**?**

சிறுநீர் கழித்து முடிக்கும் போது, சிறுநீர்க் குழாயில் கடைசியாக எஞ்சி

நிற்கின்ற சிறுநீர்த் துளி களை வெளியேற்ற, மனித உடல் தன்னிச்சையாக

எந்த செயலைச் செய்கிறதோ, அதே செயலை சிறுநீர் வராத போதும் கூடத்

திட்டமிட்டுச் செய்வது தான் காதற் தசை நார்ப் பயிற்சி.

இதன் மூலம் புரிந்து கொள்ள முடியாதவர்கள் கீழ்க்கண்ட பயிற்சியைச்

செய்து தெரிந்து கொள்ளவும். சிறுநீர் கழிக்கும் போது, பாதியிலே நிறுத்தவும்.

இவ்வாறு பாதியிலே நிறுத்தும் போது, எந்தப் பகுதி இறுக்கிப் பிடிப்பதால்

சிறுநீரின் வெளியேற்றம் தடுக்கப் படுகிறதோ அந்தப் பகுதி தான் காதற் தசை

நார்கள் என்று அழைக்கப் படுகிறது.

காதற் தசை நார்களை இறுக்கிப்பிடித்துக் கொண்டால் சிறுநீர் வெளியேறாது.

தளர்த்தினால் மட்டுமே வெளியேறும்.

இந்தத் தசை நார்களை, சிறுநீரைத் தடுக்கும் பொருட்டாக இல்லாமல்,

அதாவது சிறுநீர்ப்பை காலியாக இருக்கின்ற நேரத்தில், இறுக்குவது, தளர்த்துவது

இறுக்குவது, தளர்த்துவது என தொடர்ச்சியாக இறுக்கித் தளர்த்துவது தான்

இப்பகுதிக்கு அளிக்கின்ற பயிற்சி.

இது தான் காதற் தசை நார்ப் பயிற்சி என்று அழைக்கப் படுகிறது. இந்தப்

பயிற்சியைப் பல வகைகளில் செய்யலாம்.

முதற் பயிற்சி**,**

இந்தப் பயிற்சியில் ஈடுபட எவ்வித குறிப்பிட்ட ஆசன அமர்வும்

தேவையில்லை. எந்த நிலையில் உடல் இருந்தாலும் இந்தப் பயிற்சியைச்

செய்யலாம். முதலில் பயிற்சியளிக்கும் போது, வேகமாக இதைச் செய்து பழகவும்.

காதற் தசைநார்களை இறுக்கவும், தளர்த்தவும். இறுக்கவும். தளர்த்தவும்.

இறுக்கவும். தளர்த்தவும். இதயத் துடிப்போடு இதை இணைத்துக் கொள்ளவும்.

இதயம் இயங்கும் வேகத்தில் முதலில் செய்யவும்.

அல்லது ஒரு பறவை பறக்கும் போது அதன் இறக்கைகள் அடித்துக்

கொள்வதைக் கற்பனை செய்தபடி, அந்த இறக்கைகளின் வேகத்திற்குப்

பொருந்திப் போவதைப் போன்றும் இந்தப் பயிற்சியில் ஈடுபடலாம்.

ஏறக்குறைய விநாடிக்கு ஒரு இறுக்கம் என அது நிகழட்டும். மூன்று

நிமிடங்கள் இவ்வாறு தொடர்ந்து செய்யலாம். அது போல் தினமும் நான்கு முறை

செய்ய வேண்டும்.

இது பல்லாயிரம் ஆண்டு காலப் பழமையான ஒரு தந்த்ரா பயிற்சி. இது

“மூலபந்த்வா” என்று அழைக்கப்படுகிறது. எனினும், கெகல் கான்கிற மேற்கத்திய

மருத்துவர் தான் இதைக் கண்டு பிடித்ததாகக் கூறி இந்தப் பயிற்சிக்கு “கெகல்

எக்ஸர்சைசஸ்” என்று பெயரிட்டிருக்கிறார்கள்.

உலகம் உருண்டை என்கிற உண்மையைக் கண்டு பிடித்தவர் கலீலியோ

எனக் கூறப்படுவதைப் போல, இந்தப் பயிற்சியைக் கண்டுபிடித்தவர் ஆல்ஃபிரெட்

கெகல் என்று சொல்லப்படுகிறது.

மூன்று நிமிடப் பயிற்சி,

மேற்கண்ட பயிற்சியில் ஒரு வாரம் ஈடுபட்ட பின், அதன் முறையைக்

கீழ்க்கண்டவாறு மாற்றவும். மூன்று வினாடிகள் வரை காதற் தசை நார்களை

இறுக்கிப் பிடித்த படியே, சுவாசத்தை உள்ளேயே நிறுத்தவும்.

அதன் பின் மூன்று வினாடிகள் வரை தளர்த்திக் கொண்ட படியே

சுவாசத்தை வெளியேற்றவும். இதைபோல் முப்பது முறை கொண்ட பயிற்சியை

தினமும் ஐந்து முறை செய்யவும்.

சில தினங்களுக்குப் பின், பத்து வினாடிகள் வரை காதற்தசை நார்களை

இறுக்கிப் பிடித்த படியே, சுவாசத்தை உள்ளேயே நிறுத்தவும். அதன் பின் பத்து

வினாடிகள் வரை தளர்த்திக் கொண்ட படியே சுவாசத்தை வெளியேற்றவும்.

இதைப் போல் இருபத்தேழு முறை என ஒரு நாளில் ஐந்து முறை

இந்தப் பயிற்சியில் ஈடுபடவும்.

அடுத்த முறை.

இந்தப் பயிற்சிக்கு உடல் பழக்கமான பின் கீழ்க்கண்ட விதத்தில்

இப்பயிற்சியில் ஈடுபடலாம். காதற் தசை நார்களை இறுக்கவும். சுவாசத்தைப்

பற்றி கவலை பட வேண்டாம்.

அதாவது சுவாசத்தை இந்தப் பயிற்சியோடு இணக்க வேண்டாம். அந்த

இறுக்க நிலையிலயே ஒரு நிமிடம் இருக்கவும். அதன் பின் தளர்த்தவும். மீண்டும்

இறுக்கவும், ஒரு நிமிடம் இறுக்கிப் பிடிக்கவும். மீண்டும் தளர்த்தவும்.

மொத்த உடலும் தளர்வாய் இருக்க வேண்டும். அதே சமயத்தில்,

மூலப்பகுதி மட்டும் இறுக்கமடைய வேண்டும். இந்த காதல் தசை நாரை

வலுப்படுத்தும் போது லிங்கத்தின் வீர்யம் கூடுகிறது. உச்ச கட்ட இன்பம் ஏற்படும்

போது உடல் உணரக்கூடிய இன்பத்தின் பரவச அளவு பன்மடங்கு கூடுகிறது.

மேலும், மேற்கண்ட பயிற்சியை சில தினங்களுக்குத் தொடர்ச்சியாகச் செய்து

கொண்டிருந்தால், அந்தச் சுருக்குத் தசைகளின் மீது ஆளுமை செலுத்தும்

திறனை ஒரு ஆண் பெற்று விடலாம். அந்த ஆளுமை தான் இன்பத் துய்ப்பின்

போது நேரத்தை நீட்டிப்பதற்கான வலிமையை ஆணுக்கு வழங்கும்.

அதாவது இன்பத்துய்ப்பின் போது, காதற் தசை நார்களைத் தொடர்ச்சியாகத்

தளர்வாகவே வைத்துக் கொண்டிருக்கும் திறனை ஒரு ஆண் பெற்று விடலாம்.

அது போதும். ஏனெனில், காதற் தசை நார்களும், அடி வயிரும் தளர்வாக

இருக்கும் வரை, உயிர்நீரை வெளியேற்றும் விசை வேலை செய்யாது.

இதே பயிற்சியைப் பெண்கள் செய்யும்போது, பெண்களின் உடலில் உச்சகட்ட

இன்பம் நிகழ்வதற்கான நேரம் குறைகிறது. இன்பப் பரவச நேரம்

அதிகரிக்கிறது. பாரவசத்தின் தாக்கம் கூடுதலாக உணரப்படுகிறது. வயதான பின்

ஏற்படக்கூடிய சிறுநீர் ஒழுகல் நோய் தடுக்கப்படுகிறது.

மூலப் பயிற்சி அல்லது காதல் தசை நார்களுக்கான பயிற்சி,

பயணம் செய்யும் போது, கார் சிக்னலில் நிற்க நேரும் போது, அலுவலகத்தில்

தேநீர் அருந்தும் போது, எங்காவது காத்திருக்க நேரும் போது, பல் துலக்கும்

போது, நடைப் பயிற்சியின் போது, செய்தித் தாள் படிக்கும் போது, தொலைக்

இந்தப் பயிற்சியைச் செய்யலாம்,

காட்சி பார்க்கும் போது, என எப்போதெல்லாம் இயலுமோ அப்போதெல்லாம்

இந்தப் பயிற்சியில் ஈடுபடலாம். இந்த நூலைப் படிக்கும் இந்தத் தருணத்தில் கூட

மேலும், நாள் முழுவதும் இருக்கையில் அமர்ந்த படி பணியாற்றக் கூடிய

ஆண்கள் தங்கள் ஆண்மையின் வீரியத் தன்மையைக் குறைந்து விடாதவாறு

காப்பாற்றிக் கொள்ள இது உதவுகிறது,

நாள் முழுவதும் அமர்ந்து பணியாற்றும் பெண்களைப் பொறுத்த

வரை, தங்களுடைய பெண்மையின் நளினப் பகுதிகளில் இயற்கையாக

உள்ள நுண்ணிய உணர்வுகளை மரத்துப் போய் விடாதவாறு,

கூர்மையாக வைத்திருக்கவும், குறுகிய கால நேரத்திலேயே உச்சகட்டப்

பாலின்பம் நிகழ்வதற்கும், உச்ச கட்ட இன்பத்தின் உணர்வலைகள் உடல்

முழுதும் எளிதாகப் பரவுவதற்கும் இந்த காதற் தசைநார்ப் பயிற்சி மிகவும்

உதவிகரமாக இருக்கிறது.

உடலின் எந்தப் பகுதியில் பயிற்சி நடைபெற்றாலும் அந்தப் பகுதிக்கு அதிக

இரத்தத்தை அனுப்புவது இதயத்தின் பணி. ஆகவே, காதற்தசைநார்ப்

பயிற்சியைச்

செய்யும் போது, பால்மண்டலத்தை நோக்கி அதிகமான இரத்தம் வருகிறது.

அதனால், அங்கே வாழும் உயிரணுக்கள் பிராணவாயுவையும்,

ஹார்மோன்களையும், இராணுவ வீரர்களை மட்டும் பெற்றுக் கொள்வதில்லை.

அந்த உயிரணுக்களில் உருவாகும் கழிவுகளும் அங்கே வந்த இரத்தத்தால்

அகற்றப் படுகிறது.

அதனால் கழிவுகளால் உருவாகும் நோய்களிலிருந்து அந்தப் பகுதி

பாதுகாக்கப் படுகிறது. ஆகவே காதற் தசை நார்ப் பயிற்சி பாலின்ப ஆற்றலை

அதிகரித்துக் கொள்வதற்காக மட்டும் செய்ய வேண்டிய பயிற்சி அல்ல. ஆயுளைக்

கூட அதிகரிக்கக் கூடிய வருமுன் காக்கும் நடவடிக்கையாகும்.

ஆகவே, பாலின்பத்தின் பொருட்டாக மட்டுமின்றி, பால் மண்டலத்தை

நோய் வரும் முன் காக்கும் நடவடிக்கையாகவும், இரு பாலரும் தினம் தவறாமல்

செய்ய வேண்டிய பயிற்சி தான் காதற் தசைநார்ப் பயிற்சி.

தாவோ

தாவோ ஞானியரும், சீனப் பேரரசர்களும் தங்கள் ஆண் குழந்தைகளுக்குச்

சொல்லிக் கொடுத்த பயிற்சி இது. இந்தப்பயிற்சியில் தலை சிறந்தவர் என்பதற்கான

ஆதாரமாக கீழ்க்கண்ட தகவல் சொல்லப்படுகிறது.

ஒரு குவளையில் தண்ணீர் எடுத்து, அந்தத் தண்ணீருக்குள் லிங்கத்தை

வைத்த படி, இந்தக் காதற் தசை நார்ப் பயிற்சியைச் செய்தால், கோப்பையில் உள்ள

தண்ணீரின் அளவு குறையும். குறைய வேண்டும். இந்தப் பயிற்சியில் ஒருவர்

நிபுணராகி விட்டார் என்பதற்கான சான்றாக இது சொல்லப் பட்டுள்ளது.

எனினும், லிங்கம் வழியாகத் தண்ணீரைக் குடிக்கும் பயிற்சியில் ஈடுபடுங்கள்

என்று இந்த நூல் எந்த ஆணுக்கும் பரிந்துரை செய்யவில்லை,

ஆனால் இதை நினைவில் வைத்துக் கொண்டால் வேறொரு நுணுக்கத்தைக்

கற்றுக் கொள்வதற்கு அது உதவியாக இருக்கும்,

யோகா செய்யலாம்.

மேற்கண்ட பயிற்சியில் ஈடுபடுவது அலுப்பாக இருந்தாலோ, சோர்வளிப்பதாக

இருந்தாலோ, அதை யோகாவாகவும் செய்யலாம். யோகாவாக மாற்றும் போது,

மன ஓட்டத்தை நிறுத்துவது எளிது. உடலைத் தளரச் செய்வது எளிது.

இரத்தத்தை பால் மண்டலத்திற்குக் கொண்டு வருவது எளிது. யோகாவை

தம்பதியர் இருவரும் ஒருங்கி ணைந்து செய்வது சிறப்புடையது.

யோகா என்பது வடமொழிச் சொல், ஒருமை, ஒன்றாதல், இணைத்தல்,

இரண்டில்லை, என்பது அதன் பொருள்,

அதாவது, உடல், பொருள் ஆவி அனைத்தும் ஒன்றே. கல்லும் வைரமும்

கூட வெவ்வேறல்ல, இரண்டும் ஒன்றே, கடவுளும் கூட வேறானதல்ல.

அனைத்தும் ஒன்றே என உணர்த்துவதே யோகா!

விலங்குகளும், தாவரங்களும், இன்னும் பிற உயிரினங்கள் என அனைத்தும்

சக்தியின் வடிவங்களே. இதை உணர்த்துவதே யோகா!

பத்மாசனத்தில் அமர்ந்தபடி, சுவாசப் பயிற்சியில் ஈடுபடுவதன் மூலம்

மனதை ஒருநிலைப்படுத்தி, மேற்கண்ட உண்மையை உணர்வதே யோகா!

இக்கலையைக் கண்டு பிடித்தவர் சிவபெருமான்! அதை வழி வழியாகப்

பின்பற்றி, நமது காலம் வரை கொண்டு வந்தவர்கள் சித்தர்கள். பதஞ்சலி இதில்

புகழ் பெற்றவர்.

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் சிவபெருமானால் கூறப் பட்ட

அனைத்தும் சக்தி மயம் என்கிற கருத்து இப்போது அறிவியற்

பூர்வமாக

நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

மேலும் சிவபெருமானால் கண்டு பிடிக்கப்பட்ட யோகா, கடவுளை

உணர்வதற்கு மட்டுமன்றி, உடல் நலத்திற்கும் பயனுள்ளதாக இருப்பதை வழி

வழியாக வந்த சித்தர்கள் அறிந்து கொண்டு அதை மென்மேலும் அபிவிருத்தி

செய்து நமது மனித குலத்திற்கு அருளிச் சென்றனர்.

இவ்வாறாக, முதன் முதலில் கண்டுபிடிக்கப் பட்ட போது சுவாசப் பயிற்சி

மற்றும் சில ஆசனங்கள் என்றிருந்த யோகா தற்போது நூற்றுக்கணக்கான

வடிவங்களில் உடல் நலத்தை முன்னிட்டு செய்யப் படுகின்ற ஒரு உடற் பயிற்சி

யாக மாறி விட்டது.

மேலும் உடற் பயிற்சியாக செய்யும் போது அலுப்பாய்க் காட்சியளிக்கும் ஒரு

செயல் யோகாவாக செய்யும் போது அலுப்புத் தட்டுவதில்லை.

ஏனெனில், உடற்பயிற்சி என்பது ஒற்றை வாத்தியக் கச்சேரி. ஆனால், யோகா

ஒரு இசைக் குழுவின் கச்சேரி, உடல், சுவாசம் மற்றும் மனம் என மூன்றையும்

ஒன்றிணைத்து செய்வதால் யோகா அலுப்புத் தட்டுவதில்லை.

**1.** பட்டாம் பூச்சி யோகா**.**

தரையில் அமரவும். கால் பாதங்களின் அடிப் பகுதியை கைகூப்புவது போல்

ஒன்றுடன் ஒன்று நேருக்கு நேராய் கச்சிதமாகப் பொருந்திக் கொள்ளவும்.

அவ்வாறு அமர்ந்த பின், முழங் கால்களை கைகளால் பிடிக்கவும்,

பட்டாம் பூச்சியின் இறக்கைகள் பறக்கும் போது அடித்துக் கொள்வதைப்

போல், முழங்கால்களை பக்கவாட்டிலும் மேல்நோக்கியும் அசைக்கவும்.

அவ்வாறு அசைக்கும் போது கால்கள் மேலே வரும் போது, மூச்சை நன்றாக

உள்ளிழுத்துக் கொண்டு, காதற் தசை நார்களை இறுக்கிக் கொள்ளவும்.

அதே போல், கால்களிரண்டும் பக்க வாட்டில் கீழே போகும் போது,

மூச்சுக்காற்றை வெளிவிட்ட படி, ஏற்படுத்திக் கொண்டுள்ள இறுக்கத்தைத்

தளர்த்தவும். இதை மிதமான வேகத்தில் நாற்பத்தெட்டு முறை செய்ய வேண்டும்.

இது உடலில் உள்ள முதல் சக்கரத்தை வலுப்படுத்தக் கூடியது. அதாவது,

சக்கரங்கள் என்பவை சுரப்பிகளை இயக்குகின்ற சக்தி மையங்கள். சுரப்பிகள் தான்

குண நலத்தை உருவாக்குகின்ற வேதிகளை சுரக்கக் கூடியவை.

இவ்வாறு ஏழு சக்கரங்கள் உள்ளன. இதில் முதல் சக்கரம் மூலாதாரா சக்கரம்,

இது குதத்திற்கும் பாலுறுப்பிற்கும் இடையில் முதுகெலும்பின் அடிப்பகுதியில்

அமைந்துள்ளது. மேற்கண்ட யோகா பயிற்சி இந்த முதல் மூலாதார சக்கரத்தை

வலுப்படுத்தக் கூடியது.

மூலாதார சக்கரம் தான் ஆண்மையை அதிகரிக்கின்ற டெஸ்டோஸ்டீரான்

மற்றும் மனதைக் கொதி நிலையாக்குகிற காரி ஸ்டோல் என்கிற இரு

வேதிகளையும் சுரக்கக் கூடியது. இது வலுவாகும் போது ஆண்மையின்

வீரியமும் வலுவாகும்.

இவ்வாறு செய்வதன் மூலமாக, "துரித ஸ்கலி தம்" என்கிற குறை

நிவர்த்தியாவதோடு, ஆணுக்கு ஏற்படும் இன்பக் கிளர்ச்சி எல்லையற்றதாக

இருக்கும்.

**2.** சத் கிரியா யோகா.

காதற் தசை நார்ப் பயிற்சியை பட்டாம் பூச்சி யோகாவாகச் செய்யும் போது

மூலப் பகுதியை இறுக்கித் தளர்த்தும் வேலையை விழிப்புணர்வோடு

செய்ய

முடியாதவர்கள் இந்த யோகாவைச் செய்யலாம்.

கால்களை மண்டி போட்டு, பாதங்களின் மீது பிட்டத்தை வைத்து உடல்

நேராக, நிமிர்ந்திருக்கும் வகையில் அமரவும். இவ்வாறு அமர்வதற்குப் பெயர் தான்

வஜ்ராசனம்.

அவ்வாறு அமர்ந்த பின், கைகள் இரண்டையும் தலைக்கு மேலே முடிந்த

வரை மேல் நோக்கி நேராக உயர்த்திக் கைகூப்பிய நிலையில் வைத்துக்

கொள்ளவும். முகம் நேராக முன்புறம் பார்த்துக் கொண்டிருக்கட்டும்.

இவ்வாறு அமர்ந்த பின், சுவாசத்தை உள்ளே இழுத்துக் கொண்டு, சத்தமாக,

பக்கத்து வீட்டிற்குக் கேட்கிற அளவில் “ஸத்” என்று சொல்லவும். அவ்வாறு

அழுத்தமாகச் சொல்லும் போது, உங்கள் முயற்சியில்லாமலே காதற் தசை நார்கள்

தானாகவே இறுக்கிக் கொள்ளும். வயிற்றுப் பகுதியும் மிகவும் இறுக்கமடைந்து

விடும்.

அதன்பின் “ஹூ” என்று குரல் எழுப்பியபடி, சுவாசத்தை வெளிவிடவும்.

இந்தப் யோகாப் பயிற்சியை தடவைக்குத் தொண்ணூறு முறை என தினமும்

காலையிலும், இரவிலும் செய்து வந்தால், லிங்கத்தில் ஏற்படும் விறைப்புத் தன்மை

மிகவும் வீரியமுடையதாக இருக்கும்.

உடலில் உள்ள இரண்டாவது சக்கரம் ஸ்வாதிஸ்தான சக்கரம். மேற்கண்ட

யோகா பயிற்சி இந்த இரண்டாவது சக்கரமான ஸ்வாதிஸ்தான சக்கரத்தை

வலுப்படுத்தக் கூடியது.

இந்த சக்கரம் தான் பாலுணர்வு, வீரியத்தன்மை, மற்றும் கற்பனை வளம்,

படைப்பாற்றல், முடிவெடுக்கும் திறன் போன்றவற்றை உருவாக்கக்

கூடிய

வேதிகளைச் சுரக்கக் கூடியது.

இச்சக்கரம் வலுவடைவதால் விந்து முந்துதலும் தடுக்கப்படும். செயல்படும்

நேரம் அதிகரிக்கும். அதன் காரணமாக இணைக்குரிய இன்பம் நிகழும். அதன்

மூலம் மனநலம் காக்கப் படும். மனநலம் சிறப்புறுவதால், மூளை திறம்பட

இயங்கும். அதனால் வெற்றிகரமான வாழ்க்கை அமையும். குடும்ப வாழ்க்கை

சொர்க்கமாக மாறும்.

பெண்களைப் பொறுத்த வரை குறுகிய கால நேரத்திலேயே உச்சகட்ட

இன்பம் நிகழ்வதற்கும், உச்சகட்ட இன்பத்தின் உணர்வலைகள் உடல் முழுதும்

எளிதாகப் பரவுவதற்கும் இந்த யோகாப் பயிற்சி உதவி புரியும்.

தினமும் தம்பதியர் இருவரும் ஒன்றாய்ச் சேர்ந்து இந்த ஸத்-கிரியா

யோகாவைச் செய்வது நல்லது.

**3.** வீரிய யோகா**,** அல்லது உக்கட்டாசனம்**.**

நாற்காலி இல்லாத நிலையிலேயே, ஒரு நாற்காலியில் அமர்வது போல் நேராக

அமரவும். இவ்வாறு அமர்வதற்குப் பெயர் தான் உக்கட்டாசனம். உடலை

வளைக்காமல் அமர்ந்தபடி, தொடைகளை இறுக்கிக் கொண்டு, முழங்காலுக்கு

சற்று மேலே கைகளை வைத்துக் கொள்ளவும். முகத்தை நேர்க்கோட்டில் பார்க்கும்

படியாக வைத்துக் கொண்டு மூச்சை நன்றாக உள்ளே இழுக்கவும்.

அவ்வாறு நீங்கள் இழுக்கும் போது, உங்கள் முயற்சி இல்லாமலே சிறுநீர் வழி

நன்றாக அடைத்துக் கொள்ளும். இது போதும்.

இந்த ‘வீரிய யோகா” வை தினமும் 48 முறை செய்து வந்தால்,

விரைப்புத்தன்மையில் உள்ள குறைபாடு நீங்கும். காதல் விளையாட்டில் நீண்ட

நேரம் செயல்பட முடியும்.

இதைச் செய்யும் போது, விந்துவை வெளியேற்றக் கூடிய மோட்டாரை

இயக்கும் அடி வயிற்றுக்கும், தொடைகளுக்கும், பிட்டத்திற்கும் நல்ல பயிற்சி

கிடைக்கிறது. அதனால், இன்பத்துய்ப்பின் போது, இறுக்கமடையாமல் பார்த்துக்

கொள்ள முடியும், மேற்கண்ட பகுதிகள் இறுக்கமடையாத வரை உயிர்நீரை

வெளியேற்றும் விசை வேலை செய்யாது.

இப்பயிற்சி மூலாதார், ஸ்வாதிஸ்தான சக்கரங்களை மட்டுமின்றி, மனிப்பூர்,

மற்றும் அனஹாதா, சக்கரங்களையும் வலுவாக்குகிறது. அதனால், உயிர் நீரின்

வெளியேற்றம் ஆணின் கட்டுப்பாட்டிற்குள் வந்து விடும். தும்மல் போல்

இல்லாமல், எச்சிலைத் துப்புவது போல், விரும்பும் போது வெளியேற்றலாம்.

அதனால், விரும்பும் வரை செயல்பட முடியும். அதன் காரணமாக இணைக்குரிய

இன்பம் நிகழும். இதன் பெயர் “வீரிய யோகா’ ஆகும்.

பிரணாயாமம்.

பிரணாயாமம் என்பது வேறொன்றுமல்ல. முறையாகச் சுவாசித்தல் தான்

பிரணாயாமம். இந்த முறை பின்வருமாறு. சுவாசத்தை நான்கு வினாடிகள் வரை

உள்ளிழுக்கவும். பதினாறு வினாடிகள் உள்ளேயே வைத்திருக்கவும். அதன் பின்

எட்டு வினாடிகள் வேளியே விடவும். ஒவ்வொரு நாளும் இந்த பிரணாயாமத்தைச்

செய்து வந்தால், நரம்பு மண்டலம் வலுப்பெறுவது மட்டுமின்றி ஆயுளே கூட

அதிகரிக்கும்.

கபாலபாதி பிராணாயாமம்.

சம்மணமிட்டு அமரவும், சுவாசத்தை உள்ளே இழுக்கவும். “வெடுக்” என

சுவாசத்தை வெளியே தள்ளவும். அதாவது, மூக்கிற்குள் திடீரென ஒரு கொசு

நுழையும் போது எவ்வாறு நாம் சுவாசத்தை அழுத்தமாகத் தள்ளி அந்தக்

கொசுவை வெளியேற்ற முயற்சிக்கிறோமோ அதே போல், முழுச் சுவாசத்தையும்

வேகமாக வெளித்தள்ளவும்.

வேகமாகச் சுவாசத்தை உள்ளே இழுக்கவும். அதே வேகத்தில் “வெடுக்” என

வெளியே தள்ளவும். உடல் குதிக்கக் கூடாது. வயிறு மட்டுமே முன் தள்ள

வேண்டும். இதன் மூலம் வயிற்றுத்தசைகள் இறுக்கமடையும். தளரும். இந்த

சுவாசப்பயிற்சியைச் செய்வதன் வாயிலாக மேற்கண்ட பகுதிகளில் உள்ள

தசைநார்களின் மீதான மேலான்மையைப் பெற்று விட முடியும்.

இடைக்குக் கொடுக்கப் பட வேண்டிய பயிற்சிகள்**.**

மல்லாந்த நிலையில் படுக்கவும். தலையும், கைகளும் இடுப்பும்

தொடைகளும் தரையிலிருந்து மேலெழும்பாமல், பால் மண்டலத்தை மட்டும்

தூக்கவும், அதாவது ஆண் கீழே,பெண் மேலே என்கிற நிலையில் இன்பத்துய்ப்பு:

நிகழும் போது, ஒரு ஆண் இயங்க வேண்டியிருந்தால், உடலின் எந்தப் பகுதி

அசையுமோ அந்தப் பகுதியை மட்டும் தூக்கவும்.

கால்களில் உள்ள தசைநார்கள் அனைத்தும் இறுக்கமடையும். அப்படியே

அரை நிமிடம் பிடித்திருக்கவும். பின் தளர்த்தவும். இந்தப் பயிற்சியை பதினெட்டு

முறை செய்யவும். முதலில் சில நாட்களுக்கு காலின் தசைநார்களில் வலி ஏற்படும்.

நாளடைவில் பழகிப் போய் விடும்.

இந்தப் பயிற்சியை அளிப்பதன் மூலம், பிட்டம் மற்றும் காலின் தசை

நார்களை நம் விருப்பத்திற்கேற்பத் தளர்த்தும் திறனைப் பெற்று விடலாம். இந்தப்

பகுதி தளர்வாய் இருக்கும் வரை உயிர்நீரை வெளியேற்றும் விசை வேலை

செய்யாது.

அடுத்த பயிற்சி, நேராக நிற்கவும். இடையில் கைகளை வைத்துக்

கொள்ளவும். சுவாசத்தை உள்ளிழுத்து நிறுத்திக் கொள்ளவும். இடை மட்டும்

அசைகிற வகையில் வட்டமாக இடையைச் சுழற்றவும், வலதுபுறம் ஒன்பது

முறையும், இடது புறம் ஒன்பது முறையும் சுழற்றவும். இந்தப்பயிற்சியைச்

செய்யும் போது தொடை மற்றும் வயிற்றுத்தசைகள் இறுக்கமடையும். இவ்வாறு

நம் விருப்பப்படி இறுக்கிப் பழகினால், விருப்பப்படி தளர்த்தவும் முடியும்.

இந்தப் பகுதி தளர்வாய் இருக்கும் வரை உயிர்நீரை வெளியேற்றும் விசை வேலை

செய்யாது.

மேற்கண்டவை தவிர வேறு பல பயிற்சிகள் உள்ளன, சசாங்காசனம் போன்ற

பல யோகாக்களும் உள்ளன. எனினும் இவையே போதுமானவை.

## **8.** விந்தை வெளியேற்றாமலே இன்பத்தை நிகழ்த்தும் பயிற்சி

மானசிக அளவுகோலை மையமாய்க் கொண்டு, லிங்கத்திற்குப் பயிற்சியளித்தல் அல்லது

லிங்கத்தில் வாழும் உயிரணுக்களை குறிப்பிட்ட பழக்கத்திற்கு அடிமையாக்குதல்

பாலின்பம் வேறு**.** விந்து வெளியேற்றம் வேறு**.**

தங்களுடைய பாலியல் திறனைப் பற்றிப் பேசும் போது, சில ஆண்கள்

தன்னுணர்வின்றிப் பொய் சொல்கிறார்கள். அந்தப் பொய்யுரை மூலம்,

அவர்கள்

தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்வதோடு, தங்களுடைய அறியாமையையும்

வெளிச்சம் போட்டுக் காட்டுகிறார்கள். அவ்வாறான பொய்யுரை

கீழ்க்கண்டவாறெல்லாம் நீள்கிறது.

நானெல்லாம் ஓய்வே இல்லாமல் அரை மணி நேரம் வரை இயங்கத்

தெரிந்தவனாக்கும். அரை மணி நேரம் கூட இயங்காமல், எனக்கெல்லாம் உயிர்நீர்

வெளியேறாது. என்னிடம் சிக்கும் பெண், அதன் பின் ஆறு மாதங்களுக்கு

இன்பத்தைப் பற்றி எண்ணிக் கூட பார்க்க முடியாது. நான் ஒரு பெண்ணைத்

தொட்டு விட்டேனென்றால், அதன் பின் அவளால் தன் மரணம் வரையிலும்

என்னை மறக்கவே முடியாது.

இவ்வாறும், இதைப் போன்று இன்ன பிறவாகவும் உளறிக் கொட்டாத

ஆண்களைப் பார்ப்பதே அரிதாக இருக்கிறது, எங்கப்பன் குதிருக்குள் இல்லை

எனச் சொல்வதைப் போன்ற வெள்ளைப் பொய்கள் இவை.

ஆண்களைப் பற்றிய மிகப்பெரிய இரகசியம் என்னவென்றால்

பெண்ணுக்குரிய இன்பங்களை வழங்கத் தனக்குத் தெரியாது என்பதை எந்த

ஆணும் ஒப்புக் கொள்வதில்லை.

ஒவ்வொரு ஆணும் தன் மனைவிக்குரிய இன்பங்களை வழங்குகிற கல்வியில்

முனைவர் பட்டத்தை வாங்கிருப்பதைப் போலவே தன்னைக் காட்சிப் படுத்திக்

கொள்கிறான்.

ஏனெனில், அவ்வப்போது நிகழ்ந்து விடுகின்ற துரித ஸ்கலித ரகளைகளைப்

பற்றிப் பிறரோடு பகிர்ந்து கொள்வதையும், பெண்ணின் கபடத்தனமான முக்கல்,

முனகல்களைக் கேட்ட மாத்திரத்தில் தன்னுடைய உயிர்நீர் வெளியேறி

விடுகிற

பலவீனத்தைப் பற்றி வெளியில் கூறி நிவாரணம் தேடுவதையும், பெண்ணுக்குரிய

இன்பங்களை வழங்கத் தனக்குத் தெரியாது என்பதை ஒப்புக் கொள்வதையும்,

பெண்ணின் பால் மண்டலத்தின் உடற்கூறு பற்றித் தனக்குத் தெரியாது என்று

ஒப்புக் கொள்வதையும், தன்னுடைய ஆண்மையோடு தொடர்பு படுத்திக்

கொள்கிறான்.

பல்லாயிரக் கணக்கான ஆண்களிடம் பேட்டி கண்டுள்ள என் அனுபவத்தில்,

கடைந்தெடுத்த பாலியல் முட்டாள் கூட, பாலியல் பற்றித் தனக்கு எதுவும்

தெரியாது என்று சொன்னதேயில்லை. அதன் காரணமாக தொடர்ந்து பாலியல்

மூடனாகவே அவன் வாழ்ந்து கொண்டிருக்கிறான்.

மேலும், தன்னை நம்பிக் கரம் பிடித்த மனைவியை ஒரு போகப் பொருளாகப்

பயன்படுத்திக் கொண்டிருக்கிறான். அதனால், அவனுக்குக் கழுத்தை நீட்டிய பெண் மனோரீதியாக வதைப்பட்டுக் கொண்டிருப்பதோடு, அவனையும் தவறாமல்

வதைத்துக் கொண்டிருக்கிறாள்.

ஆண்கள் கூறும் மேற்கண்ட அப்பாவித்தனமாக பொய்களை, தந்த்ரா

அறிவையும், தாவோ ஞானத்தையும் கற்றவர்கள் எளிதில் கண்டு பிடித்து

விடுவார்கள்.

ஏனெனில் பாலுறவு நடவடிக்கைகளில் தன்னாளுமைத் திறனுள்ள ஆண்

கீழ்க்கண்ட கேள்விகளுக்கான பதில்களைத் தெரிந்தவராக இருக்க வேண்டும்.

பாலின்பம் வேறு, விந்து வெளியேற்றம் வேறு என்பது தெரியுமா? ஆணின்

உடலில் தொடர்ச்சியாகப் பன்முறை நிகழக்கூடிய உச்ச கட்டப் பாலின்பத்தை

அனுபவித்தது உண்டா?

காதற்தசை நார்ப் பயிற்சி பற்றித் தெரியுமா? வீரிய அளவுகோல் பயிற்சியைச்

செய்ததுண்டா? காதல் நேரச் சுவாச முறை பற்றித் தெரியுமா? மேற்கண்ட

கேள்விகளுக்குப் பதில் தெரியாதவர்களைத் தான் தன்னாளுமைத் திறனற்றவர்கள்

என்று தந்த்ரா ஞானிகள் கூறுகிறார்கள்.

தொண்ணூறு சதவிகித ஆண்களுக்கு தங்கள் உடலில் நிகழும் உச்ச கட்ட

இன்பம் வேறு. விந்து வெளியேற்றம் வேறு என்கிற தகவல் தெரியாது.

அதனால், அவர்களால் மூன்று நிமிடத்திற்கு மேல் பாலுறவை நீட்டிக்க

முடிவதில்லை. அவ்வாறு நீட்டிக்க முடியாததன் காரணமாகப் பன்முறை தொடர்

உச்சம் என்கிற இன்பத்தை அவர்கள் அனுபவித்ததே இல்லை. அது குறித்த செயல்

முறை விளக்கம் இது.

தொடர்ச்சியாக நிகழக்கூடிய பன்முறை உச்சத்தை அனுபவிக்கும் வாய்ப்பு

இரு பாலருக்கும் இருக்கிறது. பெண்ணைப் பொறுத்த வரை வினாடிகள் நேர்

இடைவெளிகளில் தொடர்ச்சியாக இன்பங்கள் நிகழும். அதனால், எத்தனை

முறை ஏற்பட்டதென்று சரியாக எண்ணிச் சொல்ல முடியாது.

ஆனால், ஆணுக்கோ நிமிடங்கள் இடைவெளியில் இன்பம் நிகழும்.

அதனால், எண்ணிச் சொல்ல முடியும்.

முப்பத்தாறு நிமிடங்களில் ஆறு முறை உச்சகட்ட இன்பத்தை அனுபவித்த

பிறகு ஏழாவது இன்பத்தின் போது உயிர்நீரை வெளியேற்றியது தான்

இன்று வரை ஆணின் சாதனையாக இருக்கிறது.

ஆனால் ஒரு சராசரி ஆண் பன்முறை உச்சத்தை அனுபவிப்பது சிரமம்.

ஏனெனில் அதை அனுபவிக்க, முதலில் உச்சகட்ட இன்பம் வேறு. உயிர் நீர்

வெளியேறுவது வேறு என்பதைப் பிரித்துப் பார்க்கத் தெரிய வேண்டும்,

இரண்டாவதாக, காதற் தசை நார்ப் பயிற்சியைச் செய்பவராக இருக்க வேண்டும்.

வீரிய அளவுகோல் பயிற்சி என்கிற பயிற்சியின் போது தான்,

உச்சகட்ட இன்பம் வேறு, உயிர் நீர் வெளியேறுவது வேறு என்பதைத்

தெளிவாக பிரித்துணர முடியும். அவ்வாறு பிரித்தறியும் நுணுக்கத்தைக் கற்றுக்

கொண்ட பிறகு தான், உயிர் நீரை வெளியேற்றாமலே உச்ச கட்ட இன்பத்தை

மட்டும் நிகழ்த்திக் கொள்ளும் தன்னாளுமைத் திறனுடைய ஆணாக ஒரு நபரால்

உருவாக முடியும்.

மானசீக அளவுகோல்**.**

உச்ச கட்ட இன்பம் வேறு. உயிர் நீர் வெளியேற்றம் வேறு என்பதைப்

பிரித்தறிந்து கொள்ள, லிங்கத்தின் வீரியத்தன்மையை அளவிடக்கூடிய ஒரு

மானசீக அளவுகோல் ஒன்றை உருவாக்கவும். அந்த அளவுகோலைப் பத்துப்

பகுதிகளாகப் பிரித்துக் கொள்ளவும்,

அதாவது ஒரு அடி நீளமுள்ள அளவுகோலில் அங்குலங்கள் பிரிக்கப்

பட்டிருப்பதைப் போலப் பத்து பிரிவாக அந்த வீரிய அளவுகோலைப் படத்தில்

காட்டப்பட்டுள்ளதைப் போலப் பிரித்துக் கொள்ளவும்.

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| //// | //// | //// | //// | //// | /// | // | /- | /- | — |

முற்றிலும் தளர்வாக, இயல்பாக லிங்கம் இருக்கும் நிலை பூஜ்யம்;

விரைப்படையும் நிலை ஒன்று ; உட்செலுத்தும் நிலை இரண்டு ; இயங்கும்

நிலைகள் மூன்று முதல் ஐந்து வரை எண் ஐந்து வரை உடலில் பெரிய மாற்றங்கள்

நிகழாது.

எண் ஐந்து முதல் ஆறு வரை தன்னுணர்வின்றி செயலில் வேகம் பிடிக்கும்

நிலை ; எண் ஆறு முதல் ஏழு வரை இதயத் துடிப்பு அதிகரித்து, சுவாசத்தில்

வேகம் ஏற்படும் நிலை ; கால், தொடைகள், பிட்டம், அடிவயிறு, கெண்டைக் கால்கள்

போன்ற பகுதியில் உள்ள தசைகள் இறுகும் நிலை எண் ஏழு முதல் எட்டு வரை;

உச்சகட்ட இன்பத்தை நெருங்கும் நிலை ஒன்பது. இன்பம் நிகழும் நிலை

ஒன்பதரை; விந்து வெளியேறும் நிலை பத்து என்கிற அளவுகளை அந்த மானசீக

அளவுகோலில் பதிவு செய்து கொள்ளவும்.

இத்தகைய அளவுகள் கொடுத்து ஒரு மானசீகமான அளவுகோலை

உருவாக்கிக் கொள்ளவும். அதன் பின் எவ்வித இடையூறுமற்ற ஒரு இடத்தைத்

தேர்வு செய்து உயவுப் பொருளுடன் கூடிய சுய இன்பப் பயிற்சியில் ஈடுபடவும்.

உயவுப் பொருளின்றி ஒருபோதும் பயிற்சியில் ஈடுபடக் கூடாது. இது

கண்டிப்பாகக் கடைப்பிடிக்கப் பட வேண்டிய முதல் விதி.

லிங்கத்தை மிகவும் இறுக்கிப் பிடிக்கக் கூடாது. ஏனெனில் எலும்புகளைக்

கொண்ட விரல்களால் இறுக்கிப் பிடிப்பதைப் போல, தசை நார்களால் மட்டுமே

படைக்கப்பட்டுள்ள பெண்ணின் யோனியால் இறுக்கிப்பிடிக்க முடியாது. ஆகவே

மிருதுவாகத் தான் பிடிக்க வேண்டும் என்பது இரண்டாவது விதி.

மிகவும் மெதுவாகத் தான் பயிற்சியில் ஈடுபட வேண்டும். ஒரு போதும்

கையின் முழு வேகத்தையும் பயன்படுத்தக் கூடாது. ஏனெனில், இயற்கையான

இன்பத் துய்ப்பின் போது, கையின் வேகத்தில் மொத்த உடலும் இயங்க முடியாது.

இது மூன்றாவது விதி.

எப்போது தன் உணர்வற்ற நிலையில் செயலில் வேகம் பிறக்கிறது? மூச்சுக்

காற்றின் சத்தம் கேட்கும் அளவிற்கு எப்போது சுவாசம் வேகப்படுகிறது? இதயத்

துடிப்பு எப்போது அதிகரிக்கிறது? தொடை, பிட்டம் மற்றும் பால் மண்டலத்தின்

தசை நார்கள் எப்போது இறுக்கமடையத் துவங்குகின்றன? என்பதைத்

தெளிவாகத் தெரிந்து கொள்ள வேண்டும்,

இதை அவரவர் தான் முடிவு செய்ய முடியும் என்பதால், விழிப்புணர்வோடு

செயல்பட வேண்டும். இது நான்காவது விதி.

சுவாசித்தல் ஒரு கலை.

வீரிய அளவுகோலில் உள்ள எண் ஒன்பதுக்கு மேல் செல்லும் போது ஒரு

இயக்கத்திற்கு கண்டிப்பாக ஐந்து வினாடிகளை ஒதுக்கிக் கொள்ள வேண்டும்.

வேகமாக இயங்கும்படி சபலம் ஏற்பட்டால், சுவாசத்தின் வேகத்தை உடனே

குறைக்கவும்.

வயிறு நன்றாக முன்னோக்கித் தள்ளும் அளவிற்கு முழு நுரையீரலையும்

காற்றால் நிரப்பவும்,

இன்பத் துய்ப்பின் போது ஆணின் இதயத் துடிப்பையோ, இரத்த ஓட்டத்தின்

வேகம் அதிகரிப்பதையோ, வியர்வை சுரக்கத் தொடங்குவதையோ, உடலின்

தசைநார்கள் தானாக இறுகத் தொடங்குவதையோ, சுட்டுப் படுத்த முடியாது.

ஆனால் இவற்றையெல்லாம் நிர்வகித்துக் கொண்டிருக்கின்ற தலைவனான

சுவாசத்தை மிக எளிதாகக் கையாள்வதன் மூலம் அவற்றின் செயல்பாடுகளைக்

கட்டுப்படுத்தி விட முடியும்.

ஏனெனில், சுவாசமே ஆதி மூலம், அனைத்தையும் இயக்கும் பிராணன்,

ஆகவே, சுவாசத்தைக் கவனித்துக் கொண் டே இயங்கவும். அல்லது

துவக்கத்திலிருந்தே பிரணாயாமத்தைச் செய்து கொண்டிருக்கவும்.

முக்கோண சுவாசப் பயிற்சி.

அதாவது, சுவாசத்தை உள்ளிழுப்பதற்கு பத்து விநாடி.களை எடுத்துக்

கொள்ளவும். அடுத்து பத்து விநாடிகள் வரை சுவாசத்தை உடலுக்குள்ளேயே

நிறுத்தி வைக்கவும்.அதையடுத்த பத்து விநாடிகளை சுவாசத்தை வெளி விட

ஒதுக்கவும்.

இவ்வாறு விழிப்புணர்வோடு சுவாசத்தை வசப்படுத்தி வைத்திருக்கும் வரை

சுவாசத்தின் வேகம் அதிகரிக்காது. சுவாசத்தின் வேகம் அதிகரிக்காத வரை

உயிர்நீரை வெளியேற்றும் விசை உயிர் பெறாது.

மேலும், இத்தகைய சுவாசப் பயிற்சிகள் ஆணின் ஆண்மையின் பேரிலான

ஆளுமைத் திறனை அதிகரிப்பது மட்டுமன்றி, ஒட்டு மொத்த உடல் நலத்தையும்

மிக அற்புதமாகப் பாதுகாக்கிறது.

சுவாசத்தில் கவனத்தைச் செலுத்த முடியா விட்டால், மந்திரச் சொல்லைப்

பயன்படுத்தத் துவங்கவும். வேறொரு பயிற்சியைப் பற்றிச் சொல்லும்போது

மந்திரச் சொல்லைப் பயன்படுத்தி நேரத்தை நீட்டிக்கும் முறை பற்றித் தெளிவாகச்

சொல்லப்பட்டுள்ளது.

சுவாசித்தல் ஒரு கலை, பச்சிளம் குழந்தைகள் சுவாசிப்பது தான் சரியான

முறை. வயிறு முன் தள்ளும் அளவிற்கு சுவாசம் ஆழமாக உள்ளிழுக்கப் பட

வேண்டும்.

வாயால் சுவாசிப்பது நல்லது. மெதுவாக சுவாசிப்பது நல்லது. சுவாசம்
எந்த அளவிற்கு ஆழமாகவும், மெதுவாகவும் நடைபெறுகிறதோ அந்த
அளவிற்கு ஆண் நீடித்து நின்று செயலாற்ற முடியும். மேற்கண்ட முறையில்
சுவாசிக்கும் போது இதயத்தின் வேலைப் பளு குறைகிறது.
உடலின் தசை நார்கள் இறுகாத வரை உயிர்நீரை வெளியேற்றும் உந்து விசை
உயிர் பெறாது. ஆகவே வினாடி நேரத்தில் உடலின் தசைநார்களை முழுமையாகத்
தளர்த்திக் கொள்ளவும்.
ஆழமான சுவாசமும், தசைநார்களின் தளர்வும் ஒன்றிணைந்த செயலாகும்
போது வினாடி நேரத்தில் சபலம் தடுக்கப் படும். இயக்கத்தை நிறுத்துவது
எளிதாகும்.
இன்பம் துய்த்தலுக்கு மட்டுமல்ல. கோபம், மன இறுக்கம், பெருங்கவலை
போன்ற தகாத உணர்ச்சிகளுக்குள் சிக்கிக் கொள்ளும் போது அதிலிருந்து வெளி
வருவதற்கும் கூட, மேற்கண்ட பயிற்சி உதவுகிறது.
பயிற்சியைத் துவக்கவும். மிருதுவாகக் கையாளவும். மெதுவாக இயங்கவும்.
லிங்கத்தின் வீரியத்தன்மையை உணர்வதன் அடிப்படையில் அந்தந்த
நிலைகளுக்கான அளவுகோல் எண்களை இட்டுக் கொள்ளவும்,
எண் ஐந்திற்கு மேல் ஒவ்வொரு அளவு எண்ணிலும் ஒரு நிமிடம் வரை
நின்று செல்லவும். ஏறக்குறைய ஆறு நிமிடங்களில் எண் ஒன்பது கடக்கப்படும்.
எண் ஒன்பதைக் கடக்கும் போது ஐந்து வினாடிக்கு ஒரு இயக்கம் என்கிற
விகிதத்தில் செயல் படவும். உயவுப் பொருளை மீண்டும் பயன்படுத்திக்
கொள்ளவும்.
ஒன்பதைக் கடந்தபின் மிக மெதுவாக இயங்கவும், ஒன்பது புள்ளி ஒன்று ;

ஒன்பது புள்ளி இரண்டு என மெதுவாகச் செல்லவும். ஒன்பது புள்ளி மூன்று

எனக் கடக்கும் போது இன்பம் நிகழப் போவதை உணர முடியும்.

பழக்கம் காரணமாக உடனே வேகமாக இயங்கும் வெறி பிறக்கும். இயங்கக்

கூடாது. ஒன்பது புள்ளி நான்கு என்கிற அளவைக் கடக்கும் போது உச்ச கட்ட

இன்பம் நிகழும். ஆனால், உயிர் நீர் வெளியேறாது.

ஒருக்கால் உயிர்நீர் வெளியேறுவதைப் போல் உணர்ந்தால், உடனடியாக,

லிங்கத்தின் தலைப்பகுதியை நன்றாக அழுத்திப் பிடிக்கவும். இதைவிட,

விதைகளுக்கும் ஆசனவாய்க்கும் இடையில் அமைந்துள்ள மூலாதார் மைய

நரம்பின் மீது, அடுத்த கை விரலைக் கொண்டு, அழுத்திப் பிடிக்கவும். அல்லது

காதற் தசை நார்களை நன்றாக இறுக்கிப்பிடிக்கவும். அதாவது சிறுநீரை அடக்கும்

போது எந்தத் தசைகளை இறுக்கிப்பீடிப்பீர்களோ அந்தத் தசையை உட்ச பட்சமாக

இறுக்கிப் பிடிக்கவும், மூலாதார நரம்பைத் துடிக்க விடக் கூடாது. அதோடு

உடலோடு ஒட்டியபடி மேலெழும்பியுள்ள விதைகளைக் கீழே இழுத்து விடவும்,

முரட்டுத்தனமான அழுத்தம் தேவையில்லை. இவற்றில் எந்த ஒரு செயலைச்

செய்தாலும் உயிர்நீரை வெளியேற்றும் விசை வேலை செய்யாது.

ஆகவே மேற்கண்ட அனைத்தையும் ஒருங்கே செய்யும் போது நிச்சயமாக

உயிர்நீர் வெளியேறாது. ஆனால், உச்ச கட்ட இன்பம் உடலில் நிகழும். எனினும்

லிங்கம் தளர்வடையாது. இது முதல் இன்பம்.

அதன் பின் லிங்கத்தின் வீரியம் அளவுகோலின் எண் ஐந்தை எட்டும்

வரை வெறுமனே இருக்கவும், உயவுப் பொருளை மீண்டும் தடவிக்

கொள்ளவும்,

எண் ஐந்தை அடைந்த பிறகு மீண்டும் தொடங்கவும். மெதுவாக ஒவ்வொரு அளவு

எண்ணிலும் ஒரு நிமிடம் வரை தாக்குப் பிடித்து நிற்கப் பழகவும். அவசரமே

வேண்டாம்.

பொழுது போகாவிட்டால் ஒவ்வொரு எண்ணிலும் லிங்கத்தின் அளவு

எப்படியிருக்கிறது. நரம்புகள் எவ்வாறு புடைத்தெழுந்துள்ளன, எந்த திசையை

நோக்கி லிங்கம் வளைந்துள்ளது. தலையின் சுற்றளவு எவ்வளவு என்பதை

ஆராய்ந்து கொண்டிருக்கலாம்.

அல்லது பிடித்தமான நூலைப் படிக்கலாம். நகைச்சுவைக் காட்சிகளை

தொலைக்காட்சியில் பார்க்கலாம். லிங்கத்தைத் தொடாமல் வெறுமனே

அமர்ந்திருக்கலாம், அல்லது காதற் தசை நார்ப் பயிற்சியைச் செய்யலாம்.

இவ்வாறு ஒவ்வொரு நிலையிலும் சற்றே நின்று, நிதானமாக படிப்படியாக

முன்னேறும் போது லிங்கத்திலுள்ள உயிரணுக்கள் நிலவரத்தைப் புரிந்து

கொள்ளும், ஒத்துழைக்கத் தொடங்கும். அதன் காரணமாக என் ஒன்பதைக்

கடக்கும் போதும் கூட உயிர் நீரை வெளியேற்றும் சபலம் கடுமையான அளவில்

ஏற்படாது.

அதனால் எண் ஒன்பதை எளிதாகக் கடக்க முடியும். அதன் பின் மிகவும்

கவனத்தோடு ஐந்து விநாடிக்கு ஒரு இயக்கம் என இயங்கும் போது எண்

ஒன்பதரை என்பதை எட்டி விடலாம். உச்ச கட்ட இன்பம் நிகழும். ஆனால், உயிர்

நீர் வெளியேறாது. லிங்கத்தின் ஆற்றலும் குறையாது. இது இரண்டாவது இன்பம்.

முப்பது விநாடிகள் காத்திருந்த பின் மீண்டும் துவக்கவும். அனேகமாக

லிங்கம் ஆறு முதல் ஏழு என்கிற அளவில் இருக்கக் கூடும். உயவுப் பொருளைத்

தடவிக் கொள்ளவும், மெதுவாகத் துவங்கவும். எப்போதுமே வேகம் வேண்டாம்.

ஒவ்வொரு எண்ணிலும் ஒரு நிமிடம் நின்று பழகவும், மன்னிக்கவும். லிங்கத்தில்

வாழும் உயிரணுக்களுக்குப் பழக்கப் படுத்தவும்,

எப்படியும் மூன்று நிமிடத்தில் எண் ஒன்பது நெருங்கி விடும். அவ்வாறு எண்

ஒன்பதை அடைந்த பின் அங்கேயே இருக்கவும், என்ன ஒன்பதிலிருந்து

குறையவும் வேண்டாம். இன்பத்தை நோக்கிச் செல்லவும் வேண்டாம்.

இந்த நிலையில் தொடர்ந்து இருக்கும் போது மூளையில் எண்ணற்ற

வேதிகள் சுரக்கின்றன, நுண்ணறிவை உருவாக்கக் கூடிய வேதியும் அவற்றில்

ஒன்று. இந்த நிலையை மூளை அனுபவிக்கும் போது மட்டும் தான் அந்த வேதி

சுரக்கும். ஆகவே இந்த நிலையில் இருந்து பழகுவது நுண்ணறிவை வளர்க்க

உதவுவதாக தந்த்ரா மற்றும் தாவோ ஞானிகள் கூறுகிறார்கள்.

அறிவு என்பது வேறு. நுண்ணறிவு என்பது வேறு. அறிவு என்பது தேடிப்

பெறுவது. ஏராளமாகப் படிப்பதன் மூலமாக அறிவை அபிவிருத்தி செய்து கொள்ள

முடியும். முயற்சி செய்யும் எவராலும் அறிவாளியாகி விட முடியும். ஏனெனில்,

அறிவு என்பது அடுத்தவரிடமிருந்து பெறுகின்ற சொத்து.

ஆனால், நுண்ணறிவு என்பது மூளையில் தானாக உருவாகக் கூடியது.

மூளையில் குறிப்பிட்ட வேதிப் பொருட்கள் சுரப்பதன் காரணமாக மட்டுமே

உருவாகக் கூடியது. ஆகவே ஒருவருடைய சொந்த சொத்து. மேலும் ஆபத்தான

தருணங்களில் அறிவு மனிதனைக் கைவிட்டு விடும். ஆனால், நுண்ணறிவோ

ஆபத்தான தருணங்களில் தான் ஓடோடி வந்து மனிதனுக்கு உதவி செய்யும்.

அப்படிப்பட்ட நுண்ணறிவை உருவாக்கும் வேதிகள் உடலில் நிகழும்

உச்சகட்ட இன்பத்தின் போது மட்டுமே மூளையில் சுரக்கக் கூடியவை. அதனால்

தான் பாலின்ப் பஞ்சமற்றவன் மகா நுண்ணறிவாளனாக இருக்கிறான்.

பன்முறை உச்சப் பரவச நிலை.

வீரிய அளவுகோலின் ஒன்பது முதல் ஒன்பது புள்ளி மூன்று என்கிற

நிலையில் எவ்வளவு நேரம் நிற்க முடியுமோ அவ்வளவு நேரம் நிற்கவும். மீண்டும்

உயவுப் பொருளைத் தடவிக் கொள்ளவும். இயங்கவும்.

ஐந்து வினாடிக்கு ஒரு இயக்கம் என்பது சரியான வேகம் பதினைந்து

இயக்கங்களில் இன்பம் நிகழும். உயிர்நீர் வெளியேறாது. லிங்கமும் தளராது. ஆக,

மூன்று முறை இன்பம் நிகழ்ந்தும் கூட உயிர்நீர் வெளியேறவும் இல்லை. லிங்கம்

தளர்ச்சியடையவும் இல்லை.

ஏறக்குறைய இந்தச் சுற்று முடிய எப்படியும் பதினைந்து முதல் இருபது

நிமிடங்களாவது ஆகியிருக்கும்.

இந்தப் பயிற்சியை அவ்வப்போது செய்து வந்தால், லிங்கத்தில் வாழும்

உயிரணுக்களுக்கு அது பழக்கமாகி விடும். பழக்கப்படுத்திக் கொண்ட எந்தவொரு

செயலையும் அதன்பின் மாற்ற முடியாது.

மேலும், காதற் தசை நார்ப்பயிற்சியை தினம் தவறாமல் செய்து வரும் போது,

பால் மண்டலத்தைச் சேர்ந்த தசை நார்களும் வலுவடைந்து விடும். அதனால்,

நீண்ட நேரம் நிலைத்து நின்று செயலாற்ற லிங்கம் மட்டுமின்றி மூளை உட்பட

முழு உடலும் பழக்கப் பட்டு விடும்.

பொதுவான கருத்துப் படி, லிங்கமும் யோனியும் மட்டுமே பங்கு பெறும்

இன்பத் துய்ப்பில் பெண்ணுக்குரிய உச்ச கட்ட பாலின்பங்களில் ஒன்று கூட

நிகழாது.

ஆனால், காதற் தசை நார்ப் பயிற்சியின் மூலம் பால் மண்டலத்தை

வலுப்படுத்திக் கொண்டுள்ள, வீரிய அளவுகோல் படி லிங்கத்தை பழக்கப்

படுத்தியுள்ள கணவனால், வெறும் லிங்கத்தின் மூலமே கூட பெண்ணுக்குரிய

உச்ச கட்ட இன்பத்தை வழங்க முடியும்.

இத்தகைய வரையறையோடு கூடிய செயல்பாட்டை லிங்கத்திற்குப் பழக்கப்

படுத்தி விட்டால், துரித ஸ்கலிதமோ, விந்து முந்துதலோ ஏற்படவே ஏற்படாது.

மேலும், உயவுப் பொருள் சுரக்காத நிலையில் மனைவி யே பலவந்தமாக

இழுத்தாலும் இன்பத் துய்ப்பில் லிங்கம் ஈடுபடாது. அஞ்சி ஒதுங்கிக் கொள்ளும்.

ஏனெனில், கொடுக்கப்பட்ட பயிற்சியின் காரணமாக உயவுப் பொருளான

இன்பத்தேன் சுரக்காத நிலையில் லிங்கத்தில் வாழும் உயிரணுக்கள் செயல் படாது.

மீறிச் செயல்பட்டால் லிங்கத்தின் தலைப் பகுதியில் வலி ஏற்படும்.

உதாரணமாக தலையணைக்கும் உறக்கத்திற்கும் எவ்விதத் தொடர்பும்

இல்லை. எனினும் தலையணை இல்லாவிட்டால் பெரும்பாலானவர்களுக்கு

உறக்கம் வராது. ஏற்படுத்திக் கொண்ட பழக்கமே காரணம்.

அதுபோல், உயவுப் பொருள் இல்லாமல் லிங்கம் செயல்படாது. இந்த

பழக்கம் லிங்கத்திற்கு ஏற்பட்டு விடும், எந்தப் பழக்கத்தையும் எளிதில் மாற்ற

முடியாது. இதனால், எரிச்சல், வலி போன்ற தொல்லைகளிலிருந்து மனைவி

விடுபடுவார். குடும்ப விவகாரச் சண்டை ஒரு போதும் ஏற்படாது.

மேற்கண்ட வீரிய அளவுகோல் பயிற்சியின் மூலம் நீண்ட நேரம் நீடித்து

நின்று செயலாற்றும் பழக்கத்தை லிங்கத்திற்கு ஏற்படுத்தி விட்டால், அதன் மூலம்

ஆண் பெறுகிற நன்மைகள் ஏராளமானவை.

உயிர்நீரை வெளியேற்றாமல் உச்சகட்ட இன்பத்தை மட்டும் நிகழ்த்திக்

கொள்வதால் லிங்கம் தளர்வடைந்து விடுவதில்லை. மேலும், உயிர்நீரை

வெளியேற்றாததால்) உறக்கத்தை வரவழைக்கின்ற வேதிகள் ஆணின் மூளையில்

சுரப்பதில்லை. அதனால், உறக்கமும் வருவதில்லை. ஆகவே, ஆண் விரும்பும்

வரை இன்பத் துய்ப்பில் ஈடுபட்டுக் கொண்டிருக்க முடியும்.

அதனால், ஒவ்வொரு முறையும் தொடர்ச்சியாக நிகழும் இன்பத்தை

அனுபவிக்க முடியும், ஆனால், இந்தத் திறனை ஒரே முயற்சியில் பெற்று விட

முடியாது. குறைந்தது ஆறேழு முறையாவது முயற்சித்த பிறகு தான், உச்ச கட்ட

இன்பம் வேறு, உயிர்நீர் வெளியேற்றம் வேறு என்பதைப் பிரித்தறிந்து கொள்ள

முடியும்.

ஏனெனில், பல்லாண்டு காலப் பழக்கத்தை உடைப்பது எளிதல்ல.

எனினும், இந்தப் பயிற்சியில் ஈடுபடத் தொடங்கியவுடனே ஆணின் செயல் படும்

நேரம் பல மடங்கு அதிகரித்து விடும்,

இதன் மூலம் ஆணின் காமம் முழுமையாகத் தணிக்கப் படுகிறது. அதனால்,

அவனுடைய பணிகளின் பேரிலான கவனம் கூர்மையடைகிறது. அது தவிர,

மனைவிக்குரிய பாலின்பங்கள் அனைத்தும் ஒவ்வொரு முறையும் தவறாமல்

நிகழ்ந்து விடுகிறது.

பாலின்பங்களைப் பொறுத்தவரை இந்த ஆணுக்கு வாழ்க்கைப்படும்

பெண்ணின் வாழ்வில் பாலின்பங்களுக்குப் பஞ்சமே இருக்காது. அவ்வாறு

இன்பங்களை வாரி வாரி வழங்குவதன் மூலம், இன்பத் துய்ப்பில் ஈடுபட மனைவி

மறுக்கக் கூடிய நிலையை எளிதாக மாற்றி விட முடியும். ஆகவே, நிம்மதியான

உறக்கத்திற்கு உத்திரவாதம் கிடைத்து விடுகிறது.

அதன் மூலம் தன்னுடைய மனநிலையைக் கொதிநிலை அடையாமல்

பாதுகாத்துக் கொள்ள முடியும். மனைவியோடு உள்ள அன்பின் ஆழத்தை

அதிகரிக்க முடியும்.

புற்று நோய் போன்ற கொலைகார வியாதிகளை வருமுன் தடுத்திட முடியும்.

அது தவிர, ஒட்டு மொத்த உடல் நலத்தையும் பாதுகாத்திட முடியும். அதன் மூலம்

ஆணின் ஆயுளைக் கூட அதிகரித்துக் கொள்ள முடியும்,

நாள் முழுவதும் உற்சாகம் குறையாமல் ஊக்கத்தோடு செயலாற்றிக்

கொண்டிருக்க முடியும், உருவாக்கும் திறனையும், நுண்ணறிவையும்,

சுயமதிப்பையும் வளர்த்துக் கொள்ள முடியும், பணி, சுயதொழில், கல்வி,

விளையாட்டு போன்றவற்றில் சிறந்து விளங்க முடியும்.

கவனத்தை ஒளிக்கற்றையாக ஒன்று குவிப்பது எளிதாக இருக்கும். எந்தச்

சூழலிலும் ஒளிவீசும் முகத்துடன் தன்னம்பிக்கையோடு செயலாற்ற முடியும்.

மேலும் தன்னுடைய காம உணர்வை மட்டுமின்றி மனைவியின்

காமத்தையும் பரிபூரணமாகத் தணித்து விட முடியும். இதன் மூலம் மனைவியை

போகப் பொருளாகப் பயன்படுத்தும் நிலைக்கு உறுதியான முடிவுரையை

நிச்சயமாக எழுத முடியும், அதன் மூலம், காமம் காரணமாக நிகழக்கூடிய

குடும்ப விவகாரச் சண்டைகளைத் தவிர்த்திட முடியும்.

இல்லற வாழ்வில் தம்பதியருடைய காம உணர்வு தணிக்கப் படும் போது

தான், இருவருக்குமே நிம்மதியான உறக்கம் வரும். அந்த நிம்மதியான உறக்கம்

தான் நிம்மதியான மனநிலையை உருவாக்கும்.

நிம்மதியும் மகிழ்ச்சியும் ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்கள். மகிழ்ச்சியும்

அன்பும் ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்கள். அன்பும் பிறரைக் கையாளும்

திறனும் ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்கள், பிறரைக் கையாளும் திறனும்,

அவர்களிடமிருந்து பெறுகின்ற ஒத்துழைப்பும், ஒரே நாணயத்தின் இரண்டு

பக்கங்கள், பிறருடைய ஒத்துழைப்பும், அடையக் கூடிய வெற்றியும் ஒரே

நாணயத்தின் இரண்டு பக்கங்கள். வெற்றியும், வளமையும் ஒரே நாணயத்தின்

இரண்டு பக்கங்கள்.

ஆகவே ஆணாகப் பிறவியெடுத்துள்ள ஒவ்வொருவரும் அவரவர் உடலில்

நிகழக்கூடிய உச்சகட்ட பாலின்பம் வேறு உயிர்நீர் வெளியேற்றம் வேறு

என்பதைத் தெளிவாக அனுபவ பூர்வமாகத் தெரிந்து கொள்ள வேண்டும்.

மேற்கண்ட அறிவைக் கற்றுக் கொள்வதன் மூலமாக தன்னை நம்பிக் கரம்

பிடித்த மனைவியை ஒரு போகப் பொருளாகப் பயன்படுத்தாமல், தனக்குச்

சமமான, உணர்வுகள் கொண்ட உயிரினமாக நடத்த முடியும்.

அதன் மூலம், இல்லற வாழ்க்கையை குடும்ப விவகாரச் சண்டைகளற்ற

அமைதிப் பூங்காவாக உருவாக்கிக் கொள்வது மட்டுமன்றி, வாழ்வின் அனைத்து

தளங்களிலும் மகாவெற்றியாளராகத் திகழ முடியும்.

ஏனெனில், நிம்மதியான குடும்ப வாழ்க்கையே மகிழ்ச்சியான மனநிலைக்கு

அடித்தளம், மகிழ்ச்சியான மனநிலையே அற்புதமான சிந்தனைக்கு

அடித்தளம்.

அற்புதமான சிந்தனையே புதுப் புது யோசனைகள் பிறப்பதற்கான அடித்தளம்.

மிகச் சிறந்த யோசனைகளே வெற்றிக்கான அடித்தளம், ஒரே ஒரு சரியான

யோசனை ஒரு மனிதனைக் கோடீசுவரனாக்கப் போதுமானது. பணமே,

வாழ்வின் வளமைக்கும், செழுமைக்குமான அடித்தளம்.

வளமையும், செழுமையும் இருப்பதால், மனநிலை எப்போதுமே

மகிழ்ச்சியாகவே இருக்கும். மகிழ்ச்சியும் அன்பும் ஒரே நாணயத்தின் இரு

பக்கங்கள். அதனால், மன நிலை மகிழ்ச்சியாக இருப்பதால், அங்கே அன்பிற்கும்

பஞ்சமிருக்காது. அதனால், விவரிக்க முடியாத அளவிற்கு அன்பு ஏற்படும். அந்த

அன்பின் காரணமாக, தம்பதியரின் ஒவ்வொரு இரவும் மலர்ப் படுக்கையாகவும்

இல்லற வாழ்க்கை ஒரு இன்பத் தொட்டிலாகவும்

இருக்கும்.

சித்திரமும் கைப் பழக்கம்**.**

சுய இன்பப் பழக்கத்தில் ஈடுபடக்கூடிய திருமணமாகாத இளைஞர்கள்

இந்தப் பயிற்சியில் ஈடுபடும் போது அடிக்கடி சுய இன்பத்தில் ஈடுபட வேண்டும்

என்கிற அழுத்தம் ஏற்படாது. ஒவ்வொரு முறையும் உயிர்நீரை வெளியேற்ற

வேண்டிய அவசியம் இருக்காது.

திருமண வாழ்க்கையை வெற்றிகரமாக எதிர் கொள்ள முடியும். அதோடு,

முரட்டுத்தனமும், குற்றச் செயல்களில் ஈடுபடும் ஆர்வமும் கூட இளைஞர்களின்

மனதில் குறையும். உளவியல் ரீதியான நன்மைகள் பல உண்டு.

மேலும், மனைவியை இழந்த பிறகு மறுமணம் செய்து கொள்ளாதவர்கள்,

மனைவி இருந்தும் கூட ஒத்துழைப்பைப் பெற முடியாதவர்கள்,

லிங்கத்தின்

வீரியத்தன்மையை இழந்து விட்டதாக நம்பிக் கொண்டிருப்பவர்கள், மேற்கண்ட

முறையில் தொடர்ச்சியாக நடைபெறக் கூடிய பன்முறை உச்சம் என்கிற இந்தப்

பேரின்பத்தை அனுபவித்து மகிழலாம்.

மேலும் அறுபது வயதைக் கடந்த முதியவர்கள் கூட, இந்தப் பேரின்பத்தை

அனுபவித்து மகிழலாம். இதை நினைவூட்டவே முதுமையே சுய இன்பத்திற்கான

பொற்காலம் என்று ஒரு சூத்திரம் கூட சொல்லப்பட்டுள்ளது.

அவ்வாறு அனுபவிப்பது நோய்கள் பலவற்றை வருமுன் தடுக்கின்ற ஒரு

நற்செயலாகும், மேலும் இதன் முலம் ஆயுள் கூட அதிகரிக்கிறது. குறைந்த பட்சம்

பிராஸ்டேட் சுரப்பியைத் தாக்கக் கூடிய புற்று நோயை இது தடுக்கிறது.

மனநிலையை மகிழ்ச்சிகரமாக வைத்திருக்கிறது.

சித்திரமும் கைப்பழக்கம் என்பது தெரிந்த செய்தி. ஆனால் உடலில் உள்ள

ஒரு அவயம் எவ்வாறு பழக்கத்திற்கு அடிமையாகிறது என்பது பலருக்குத்

தெரியாத நுட்பம். அதைப் பற்றிய விளக்கம் இது.

கை என்கிற அவயம் கோடிக்கணக்கான உயிரணுக்களால் உருவான ஒரு

மனித உறுப்பு. இவ்வாறுள்ள ஒவ்வொரு உயிரணுவிலும் நம்முடைய மனம்

இருக்கிறது. மனம் என்பது எங்கோ நெஞ்சில் மட்டும் இருப்பதல்ல. அது உடலில்

வாழும் ஒவ்வொரு உயிரணுவிலும் குடியிருக்கிறது.

கண்ணின் விழித்திரையில், காதின் செவிப்பறைகளில், நாக்கின் சுவை

நரம்புகளில், பாலுறுப்புக்களின் கட்டுமானங்களில் என உடலின் ஒவ்வொரு சதூர்

மில்லி மீட்டரிலும் இலட்சக்கணக்கில் வாழ்ந்து கொண்டிருக்கக் கூடிய

ஒவ்வொரு

உயிரணுவிலும் மனம் குடியிருக்கிறது.

இன்னும் தெளிவாய்ச் சொல்வதென்றால், ஆணின் விந்தில் உள்ள

உயிரணுக்களில் கூட அவனுடைய மனம் குடியிருக்கிறது. குழந்தையிடமுள்ள

பரம்பரைப் புத்திக்கு தந்தையின் விந்தணுவில் குடியிருந்த மனமே காரணம்.

அதனால் தான் தந்தையின் குணத்தை குழந்தை பெறுகிறான்.

ஒரு உயிரணுவைப் பிடித்து நம் கையின் மீது வைத்தால் அதை வெறும்

கண்களால் பார்க்க முடியாது. மேலும் கை மீது அந்த உயிரணு துள்ளிக்

கொண்டிருப்பதைக் கூட நம்மால் உணர முடியாது. ஆனால், அது தான்

குழந்தை.

அந்த அளவிற்குச் சிறியதாக உள்ள அந்த உயிரணு கொண்டு செல்லும்

தகவல்களை முழுமையாக எழுத வேண்டுமானால் உலக சரித்திரத்தையே எழுத

வேண்டியிருக்கும்.

அந்த அளவிற்கு அது ஒரு சரித்திரப் பெட்டகமாக இருக்கிறது. மனித இனம்

தோன்றிய நாள் முதல், இந்த உயிரணு ஆணின் உடலிலிருந்து வெளியேறிய நாள்

வரையிலான மனித வரலாற்றையே அந்த உயிரணு கொண்டு செல்கிறது.

அதன் பெயர் தான் ஆழ்மனம், உதாரணமாக, இந்தக் குழந்தை

யாரைப்போன்ற தோற்றத்தில் இருக்க வேண்டும்? கால்,கை, நகம், முகம், உயரம்,

குரல் போன்ற உடலின் ஒவ்வொரு சதூர் அங்குலமும் யாரைப் போல் இருக்க

வேண்டும்? தந்தையைப் போன்றா? அல்லது தாத்தனைப் போன்றா? அல்லது

முப்பது தலைமுறைகளுக்கு முன்னால் வாழ்ந்த மூதாதையரைப் போன்றா?

எந்த வயதில் தலை வழுக்கை விழ வேண்டும்? எந்த வயதில் பல்சொத்தை

வர வேண்டும்? எந்த வயதில் பரம்பரை வியாதி வர வேண்டும்? தலையாட்டல்,

கையசைவு, வீழி த்தல், உறங்கும் முறை யாரைப் போல் இருக்க வேண்டும்?

என்கிற கோடிக்கணக்கான தகவல்களை சிறிய உயிரணு கொண்டு செல்கிறது.

அதற்கான ஒரே காரணம் உயிரணுவில் அதை வெளியேற்றிய ஆணின் மனம்

இருக்கிறது. இதே போலத் தான் மனித உடலின் ஒவ்வொரு உயிரணுவிலும்

மனிதனின் மனம் வாழ்ந்து கொண்டிருக்கிறது.

கை என்பது கோடிக்கணக்கான உயிரணுக்கள் ஒன்றாகக்கூடி வாழ்வதால்

உருவாகியுள்ள ஒரு உறுப்பு, ஆகவே அந்தக் கைக்குப் பயிற்சியளிப்பது என்பது

அங்கே வாழும் கோடிக்கணக்கான உயிரணுக்களின் மனதில் ஒரு கருத்தை

பதிக்கும் செயல், தொடர்ந்து சில முறை பயிற்சியளிக்கும் போது, அந்த

உயிரணுக்களின் மனதில் அது பதிந்து விடுகிறது.

அதனால், குறிப்பிட்ட பயிற்சிக்கு ஆளான அந்தச் செயலை செய்வது

கைக்குப் பழக்கமாகி விடுகிறது. பழக்கமான பின் அந்தப் பழக்கத்தின் படி கை

இயங்குகிறது.

அதனால் பயிற்சியளிக்கப்பட்ட குறிப்பிட்ட செயலைச் செய்வதில் கையின்

திறன் பன்மடங்கு அதிகரித்து விடுகிறது. மேலும் அந்தப் பழக்கத்திற்கு

விரோதமாக கையால் இயங்க முடிவதில்லை. இது தான் பயிற்சியின் போது உடலில்

நடைபெறுகிறது.

இவ்வாறு தான், ஓட்டப்பந்தய வீரன் கால்களுக்கும், பளு தூக்குபவன்

கைகளுக்கும் பயிற்சியளிக்கிறான். அதேபோல ஒரு ஆண் தன்னுடைய

லிங்கத்திற்கும் பயிற்சியளித்து குறிப்பிட்ட முறையில் இயங்கும் படி பழக்கப்

படுத்தி விடலாம்.

அவ்வாறு பழக்கப்படுத்தி விட்டால் அதன்பின் அந்த ஆணே விரும்பினாலும்

அந்தப் பழக்கத்திற்கு எதிராக லிங்கம் செயல்படாது. மெதுவாக இயங்குதல்,

ஒவ்வொரு எண்ணிலும் நிறுத்தி நிறுத்தி நீண்ட நேரம் இயங்குதல் எனப்

பயிற்சியளிக்கத் தொடங்கும் போதே லிங்கம் மட்டுமன்றி பால் மண்டல

உயிரணுக்கள் அனைத்துமே பயிற்சி அளிக்கப்பட்ட படி செயல்படத் தொடங்கி

வீடும்.

ஏனெனில், பழக்கம் உருவான பின் மாற்ற முடியாது. இந்தப் பழக்கம்

குடும்ப விவகாரச் சண்டைக்கு முடிவுரை எழுதும். இல்லற வாழ்க்கையை இன்புற

வாழ உதவும். குடும்பச் சிதைவுகளை நிச்சயம் தடுக்கும்.

உலகெங்கும் உள்ள ஒருதார வாழ்க்கையை வலியுறுத்தும் தந்திரா

யோகிகளால் நடத்தப்படும் காதற் பள்ளிகளில் துரித ஸ்கலிதம், விந்து

முந்துதல் போன்ற ஆண்களின் பலவீனங்களைக் களையவும்,

லிங்கத்தின் வீரியத்தை வலுவாக்கி, செயல்படும் நேரத்தை பன்மடங்கு

அதிகரித்திடவும், ஆண்மையின் மீதான தன்னாளுமைத் திறனை

தன்னியல்பாக மாற்றிக் கொள்ளவும், மேற்கண்ட வீரிய அளவுகோல்

பயிற்சி கற்றுத் தரப் படுகிறது.

## **9.** நேரத்தை நீடிப்பதற்கான சுவாசப் பயிற்சிகளும்**,** மந்திரச் சொல்லும்

விந்தும், உமிழ் நீரும் உணர்வுகளுக்கு ஏற்ப உடலில் உருவாகக் கூடியவை.

ஆகவே, அவற்றின் உற்பத்தியை எந்த ஆடவனாலும் தடுக்க முடியாது. ஆனால்,

அவற்றின் வெளியேற்றத்தை முறைப்படுத்தவும், கட்டுப்படுத்தவும் ஆண்களால்

முடியும்.

உரிய இடம் வரும் வரை வாயில் ஊறியுள்ள உமிழ் நீரைத் துப்பாமல்

வைத்துக்

கொண்டிருப்பதைப் போல் உருவான விந்தையும் உரிய நேரம் வரும் வரை தடுத்து

நிறுத்தி வைக்க முடியும். ஆணின் கட்டளைப்படி வெளியேறும் நிலையை

உருவாக்க முடியும்.

இன்பத் துய்ப்பைப் பொறுத்த வரை வேகம் என்பது வியாதி, மெதுவாக

இயங்குதல் முதற்படி, காதற்தசை நார்களைத் தளர்வாக வைத்த படியே இயங்கிக்

கொண்டிருக்கும் வரை உயிர் நீரை வெளியேற்றும் வீசை உயிர் பெறாது.

உயிர் நீர் வெளியேறுவதைப் போன்ற உணர்ச்சி ஏற்படும் போது, மூலாதார்

நரம்பின் மீது விரலைக் கொண்டு பத்து விநாடிகள் வரை அழுத்திப் பிடித்துக்

கொண்டிருந்தால், உயிர் நீர் வெளியேறாது.

ஆசன வாய்க்கும், விதைகளுக்கும் இடையில் இருப்பது தான் மூலாதார்

நரம்பு. இந்த இடத்தைப் பற்றி கோடி ரூபாய்ப் புள்ளி என்று தந்த்ரா கூறுகிறது.

அதேபோல, லிங்கத்தின் தலைப் பகுதியை மூன்று விரல்களைக் கொண்டு

அழுத்திப் பிடிக்கும் போதும் உயிர் நீர் வெளியேறாது.

அந்தப் பகுதியை வி. புள்ளி, அதாவது வி, போலக் காட்சியளிக்கும் புள்ளி

அல்லது வெற்றிப் புள்ளி என்று தந்த்ரா கூறுகிறது. தலையின் கீழ்ப் பகுதியில்

அந்தப் புள்ளி இருக்கிறது

மேலும், உடலை ஒட்டி மேல் நோக்கி வந்துள்ள விதைகளைக் கீழ் நோக்கி

இழுத்து விட்டாலும் உயிர் நீர் வெளியேறாது. ஏனெனில், விதைகளிரண்டும்

உடலிலிருந்து கீழே தள்ளி இருக்கும் வரை, உயிர் நீரை வெளியேற்றும் விசை

வேலை செய்யாது.

உயிர் நீர் வெளியேறப் போகிறது என்கிற நிலையை உணரும் போது, வயிறு

நிறையக் காற்றை நிரப்பி, சுவாசத்தின் வேகத்தைக் குறைத்துக் கொண்டால் உயிர்

நீரை உந்தித் தள்ளும் விசை வேலை செய்யாது.

பிட்டத்திலும், தொடைகளிலும், அடிவயிற்றிலும் உள்ள தசைகளை

இறுக்கமடையாமல் வைத்துக் கொண்டிருக்கும்வரை உயிர் நீரை வெளியேற்றும்

விசை வேலை செய்யாது.

உச்சத்தை நெருங்கும் வேளையில் பதினைந்து வினாடிகள் வரை,

நிறுத்திக் கொள்ளப் பழகிக் கொள்வதன் மூலமாகவும் செயல்படும் நேரத்தை

அதிகரிக்க ஒரு ஆணால் முடியும்.

ஆண் கீழேயிருந்த படியும், பெண் மேலிருந்த படியும் இயங்கும் போது,

ஆணின் விந்து இயந்திரம் எளிதில் வேலை செய்யாது. ஐந்து மடங்கு நேரம் வரை

கூடுதலாகத் தாக்குப் பிடிக்க இந்நிலை ஆணுக்கு உதவும்.

சுவாசத்தைப் பயன்படுத்தி நேரத்தை நீட்டிப்பது எப்படி?

நேரத்தை நீடிப்பதற்கான, சுலபமான வழி.

இன்பம் துய்த்தலின் போது சுவாசத்தைக் கவனிக்கவும், சுவாசத்தின்

பேரிலான ஆணின் மேலாண்மை தான் நேரத்தை அதிகரிப்பதற்கான எளிய

சூத்திரம். ஆகவே சுவாசத்தைக் கையாள்வது தான் மிக மிக முக்கியமாகக்

கடைப்பிடிக்க வேண்டிய பாலின்ப வீதி,

ஆறு மாதக் குழந்தை சுவாசிக்கும் போது, குழந்தையின் வயிறு மட்டும்

தான் மேலும் கீழுமாக அசைந்து கொண்டிருக்குமே தவிர, நெஞ்சுப் பகுதியில்

எவ்வித அசைவும் இருக்காது.

அதே போல், ஒரு நபர் திடீரென ஆத்திரப் படும் போது, அந்த

நபருடைய

சுவாசத்தைக் கவனமாகப் பாருங்கள். மார்பு தான் வேக வேகமாக, மேலும்

கீழுமாகப் போய் வந்து கொண்டிருக்கும்,

இந்த இரண்டு வகையான சுவாச முறையில் குழந்தை சுவாசிக்கும்

முறையே சரியானது. இயற்கையானது.

ஆத்திரக்காரனுக்கு புத்தி மட்டு. இதற்கான காரணம் சுவாசம். ஆத்திரமாகச்

செயல்படும் நேரத்தில் சுவாசத்தின் வேகம் மிகவும் அதிகரித்து விடும். மார்புகள்

மேலும் கீழும் வேகவேகமாகச் செல்லும் வகையிலே சுவாசம் நிகழும்.

சுவாசம் வேகமாக நிகழும் போது காற்றில் உள்ள பிராணவாயு நுரையீரலில்

உள்ள பிராண வாயுப் பெட்டகங்களால் உறிஞ்சப் பட முடிவதில்லை. அதனால்,

மூளைக்கு உரிய பிராண வாயு கிடைப்பதில்லை. அதனால் மூளை சிந்திக்கும்

திறனை இழந்து விடுகிறது. சண்டைக்கு மட்டுமல்ல பாலுறவிற்கும் இது

பொருந்தும்.

மூளைக்குரிய பிராண வாயு கிடைக்காத போது இன்பத்தை அனுபவிப்பதை

விட்டு விட்டு, ஒரேயடியாக மூளை எட்டிக் குதித்து விடும். அதனால், இன்பம்

விரைவில் நிகழ்ந்து விடும்.

ஆகவே, வேக வேகமாகச் சுவாசிப்பது எல்லா வகையிலும் கெடுதலானது.

இன்பம் துய்த்தலின் போது, சுவாசத்தின் வேகம் ஒரு போதும் அதிகரிக்கக்

கூடாது. மார்புப் பகுதி மேலும் கீழும் அசையக் கூடாது.

இதை விழிப்புணர்வோடு பின் பற்றிய படியே இயங்கவும். விழிப்பு நிலை

தவறாமலிருக்க கீழ்க்கண்ட வழி முறையைப் பின்பற்றவும்.

லிங்கம் வெளியில் இருக்கும் போது, சுவாசத்தை ஆழமாக உள்ளே

இழுத்துக்

கொள்ளவும். காற்றால், வயிற்றுப் பகுதி முன்னால் தள்ளிக் கொண்டு வருகிற

அளவிற்கு மூச்சை உள்ளே இழுக்கவும். அதன் பின் சுவாசத்தை மிகவும் மெதுவாக

வெளி விட்ட படியே லிங்கத்தை உள்ளே செலுத்தவும்,

அதே போல, லிங்கத்தை வெளிப்புறமாக இழுக்கும் போது, சுவாசத்தை

ஆழமாக உள்ளே இழுக்கவும். இதற்கான முதல் சூத்திரம். "உள்ளே. வெளியே."

அதாவது லிங்கம் உள்ளே செலுத்தப்படும் போது சுவாசத்தை வெளிவிட

வேண்டும். லிங்கத்தை வெளியே இழுக்கும் போது சுவாசத்தை உள்ளே இழுக்க

வேண்டும். அடுத்த சூத்திரம். வேகமான சுவாசம் விபத்தில் முடியும்,

சுவாசத்தின் வேகம் அதிகரித்தால், இதயத் துடிப்பு அதிகரிக்கும். இதயத்

துடிப்பு அதிகரித்தால், இரத்த ஓட்டத்தின் வேகம் அதிகரிக்கும். இரத்த ஓட்டம்

அதிகரித்தால், பால் மண்டல தசைப்பகுதிகள் இறுக்கமடையும்.

அவை இறுக்கமடையும் போது அங்குள்ள இரத்தம் லிங்கத்திற்குள் பாயும்.

லிங்கத்தின் வீரியம் அதிகரிக்கும். கடினத் தன்மை பத்து என்கிற அளவு கோலை

நெருங்கும் போது, உயிர் நீரை கட்டுப் படுத்த எந்த ஆணாலும் முடியாது.

இன்பம் துய்க்கும் போது, இவ்வாறு சுவாசத்தை விழிப்புணர்வோடு

கையாளக் கற்றுக் கொண்டால், மனைவிக்குரிய உச்ச கட்ட இன்பங்களைத்

தவறாமல் வழங்கி, அவரது மனநலம் காத்து, கடவுள் கொடுத்துள்ள கொடையான்

குடும்ப வாழ்க்கையை இன்புற வாழ முடியும்.

மந்திரச் சொல்லைப் பயன்படுத்துதல்- நேரத்தை நீடிப்பதற்கான

ஒரு எளிய வழி.

ஒருக்கால், சுவாசத்தின் பேரிலான மேலாண்மையை, உள்ளே வெளியே

என்கிற விதிமுறைப்படி விழிப்புணர்வோடு கடைப் பிடிக்க முடியவில்லையா?

கவலை தேவையில்லை. துய்ப்பை ஒரு யோகா பயிற்சியாக மாற்றிக் கொள்ளவும்.

அந்த யோகாவின் மந்திரச் சொல்லாக,"ஓம்" என்கிற சொல்லைப் பயன்

படுத்தவும். "ஓம்" என்கிற சொல்லைப் பயன் படுத்தத் தயங்குபவர்கள் "ஆம்"

என்கிற சொல்லை மந்திரச் சொல்லாக்கிக் கொள்ளவும்.

ஆனால் ,"ஆம்" என்கிற சொல்லைக் காட்டிலும் "ஓம்" என்கிற சொல் சக்தி

மிக்கது.

ஏனெனில், அந்த வார்த்தை ஒரு புனிதமான வார்த்தை என்னும் கருத்து

ஆழ்மனதில் பதிவாகி இருக்கிறது. அதனால், அந்தச் சொல்லைப் பயன்படுத்தும்

போது, செய்து கொண்டிருக்கக் கூடிய செயலும் புனிதமானது என்பதை மனம்

எளிதில் ஏற்றுக் கொள்ளும். அதனால் செயல்களில் பயமும் பண்பாடும் இருக்கும்.

எனினும் வார்த்தைப் பயன்பாடு அவரவர் விருப்பத்தைப் பொறுத்தது.

அவ்வாறு வார்த்தையைத் தேர்வு செய்து கொண்ட பின், இன்பம்

துய்த்தலுக்கான ஒரு மந்திரச் சொல்லாக அதைக் கருதிக் கொள்ளவும். அந்த

மந்திரச் சொல்லுடன், லிங்கத்தின் செயல்பாட்டை, தாள கதியில் பொருத்திக்

கொள்ளவும்.

இசைக் கச்சேரியில் சாதகரின் குரல் ஒலியுடன், இசைக் கருவியின் நாத ஒலி

பொருந்திப் போவதைப் போல, மந்திரச் சொல்லின் உச்சரிப்புக்கும், லிங்கத்தின்

அசைவுக்கும் இடையே ஒத்திசைவை ஏற்படுத்திக் கொள்ளவும்.

அதன் பின் லிங்கத்தை உட்செலுத்தும் போது, அந்த மந்திரச் சொல்லை

மென்மையான தொனியில் சொல்லத் தொடங்கவும். எவ்வளவு முடியுமோ

அவ்வளவு நேரம் இழுவையாகச் சொல்லவும்.
(ஓ……………………….ம்)

மந்திரச் சொல்லை அவ்வாறு சொல்லி முடிக்கும் வரை லிங்கத்தை உள்ளே

செலுத்திக் கொண்டே இருக்கவும், வார்த்தையை அவ்வாறு உச்சரிப்பதற்கும்,

செய்யும் செயலுக்குமிடையே உடனடியாக ஒரு ஒத்திசைவு ஏற்படாமல் போகலாம்.

எனினும் நான்கைந்து நுழைத்தல்களிலேயே தாளமும் கதியும் தானாகவே

ஒன்றிணைந்து விடும். அவ்வாறு தாள கதியோடு, முழு லிங்கமும் உட்செலுத்தப்

பட்ட பின், இரண்டு மூன்று முறை வழக்கமான முறையில் சுவாசிக்கவும்.

அவ்வாறு வழக்கமான முறையில் சுவாசிக்கும் போது, லிங்கத்தை அசைவின்றி

உள்ளேயே வைத்திருக்கவும்.

அதன் பின் சுவாசத்தை உள்ளே இழுத்தபடியே லிங்கத்தை வேளியே

இழுக்கவும், மீண்டும் மந்திரச் சொல்லை இழுவையாக உச்சரித்த படியே

லிங்கத்தை உள்ளே செலுத்தவும்.

இவ்வாறு ஒரு யோகாவாக இன்பம் துய்த்தலை மாற்றிக் கொண்டு கணவன்

செயல் படும் போது, மனைவிக்குரிய உச்சகட்ட இன்பம் நிச்சயமாக நிகழ்ந்தே

தீரும். அதனால் தம்பதியரிடையே ஆழமான அன்பு ஏற்பட்டே தீரும். அந்த

அன்பு தான் இல்லற வாழ்வை சொர்க்கமாய் மாற்றக் கூடிய ஒரே மந்திரம்,

மேற்கண்டவாறு மந்திரச் சொல்லைப் பயன்படுத்திய படி, வீரிய அளவுகோல்

பயிற்சியில் சொல்லப்பட்டுள்ள நுணுக்கத்தின் படி, உரிய உயவுப் பொருளின்

துணையுடன் இன்பத் துய்ப்பில் ஈடுபடும் போது, குறைந்த பட்சமாக

முப்பது

நிமிடம் வரை ஒரு கணவனால் தாக்குப் பிடித்துச் செயலாற்ற முடியும்.

அதிக ட்சமாக மணிக் கணக்கில் செயல் ட முடியும். எனினும் அவ்வளவு

நேரம் பெண்ணுக்குத் தேவையில்லை. ஹஸ்த்தினி வகையைச் சேர்ந்த யானைப்

பிரிவுப் பெண்ணுக்கே இருபது முதல் முப்பது நிமிட இயக்கம் போதுமானது.

லிங்கமும் யோனியும் மட்டுமே பங்கு பெறும் காதற் களியாட்டத்தில்

பெண்ணுக்குரிய உச்ச கட்டப் பாலின்பங்கள் அனைத்தும் ஒரு போதும் நிகழாது.

என்கிற கருத்தை ஓரளவிற்குத் தகர்க்கக் கூடிய வழி முறைகளில் இதுவும் ஒன்று.

பானங்களை அருந்துதல். நேரத்தை நீடிப்பதற்கான வழி.

இன்பத் துய்ப்பிற்குப் புனித குகை தயாராகி விட்டதை அறிவிக்கின்ற ஒரு

அறிவிப்பாளினி தான் இன்பத்தேன். இன்பத்தை நெருங்கும் வேளையில்,

நிகழக்கூடிய வேகமான உராய்வால் எரிச்சல் ஏற்பட்டு விடாமல், இருவருடைய

இன்பாயுதங்களையும் காப்பதற்காக சுரக்கும் திரவமே மதன பானம்,

இந்த இரண்டு பானங்களையும் லிங்கம் மூலமாக அருந்த முயற்சிப்பதன்

வாயிலாக இன்பத் துய்ப்பின் நேரத்தை எளிதாக நீட்டிக்கலாம்.

லிங்கமானது, மந்திர வார்த்தையோடு ஒன்றிணைந்து யோனிக்குள்

செலுத்தப் படுகிறது. அதன் பின் சிறிது நேரம் எவ்வித அசைவுமின்றி உள்ளேயே

வைத்திருக்கப் படுகிறது. அவ்வாறு வைத்திருக்கும் போது தான் லிங்கத்தால்

மேற்கண்ட சக்தி பானங்களை அருந்த வேண்டும்.

இப்போது தாவோக்களும், சீனப் பேரரசர்களும் தங்கள் ஆண்

வாரிசுகளுக்குக் கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்த லிங்கம் வாயிலாகத் தண்ணீர்

குடிக்கும் பயிற்சியை நினைவூட்டிக் கொள்ளவும்,

அதாவது, லிங்கம் அசைவின்றி உள்ளே இருக்கும் போது காதற் தசை நாரிப்

பயிற்சியைச் செய்ய வேண்டும். அவ்வாறு செய்யும் போது சக்திபானங்கள்

லிங்கத்தால் உறிஞ்சப்படுவதாகச் சொல்லப்படுகிறது.

அறிவியல் பூர்வமாக இந்த உண்மை இன்னும் நிரூபிக்கப் படவில்லை.

எனினும், யோனியின் சத்து பானங்களை அருந்த முயற்சிக்கும் போது, அச் செயல்

இரு பாலருக்குமே பேரின்பப் பரவசத்தை அளிப்பதாக இருக்கிற தகவல் மட்டும்

அனுபவ பூர்வமாக கண்டறியப்பட்டுள்ளது. அறிவியலின் துணையில்லாமல்

அவரவர் அனுபவத்திலிருந்தே கூட ஒவ்வொரு தம்பதியும் இந்த உண்மையை

உணர்ந்து கொள்ளலாம்,

பானங்களை அருந்தும் முயற்சியின் போது, யோனியில் வாழும் கோடிக்

கணக்கான பெண்ணின் உயிரணுக்களும், லிங்கத்தில் வாழும் கோடிக்கணக்கான

ஆணின் உயிரணுக்களும் ஒன்றையொன்று முழுமையாகத் தழுவிக் கொள்ளும்

வாய்ப்பைப் பெறுகிறது. அதனால் இருவருடைய உடல்களுக்கும் பேரின்பத்தைத்

தரக் கூடியதாக அச்செயல் இருக்கிறது.

ஆகவே, ஐந்தாறு நுழைத்தல்களுக்கு ஒரு முறை லிங்கத்தின் மூலம்

பானங்களை அருந்திக் கொண்டிருக்கலாம். வீரிய அளவுகோலின் படி,

லிங்கத்தின் வீரியம் இரண்டாம் எண்ணை நெருங்கும் வரை பானங்களை

அருந்துவதும், அதன் பின் வீரியத்தன்மை எட்டாம் எண்ணை நெருங்கும் வரை

இயங்குவதும், அதன் பின் இயக்கத்தை நிறுத்தி விட்டு மீண்டும் பானங்களை

அருந்துவதுமாக ஈடுபடும் போது இன்பத் துய்ப்பின் நேரத்தைப் பன் மடங்கு

அதிகரித்து விடலாம்,

ஆனால், சக்தி பானத்தை அருந்தும் இன்பத்தில் ஈடுபட விரும்பும் தம்பதியர்

தங்களுக்குள் பயிற்சியெடுத்துக் கொள்வது நலம். இல்லையேல், ஆணின் உயிர்

நீர் தன்னுணர்வின்றி வெளியேறி விடக் கூடிய ஆபத்து இருக்கிறது.

இன்பத் துய்ப்பின் நேரத்தை அதிகரிப்பது லிங்கத்திற்கும் ஆணின் பால்

மண்டலத்திற்கும் அளிக்கக் கூடிய பயிற்சியோடு, பெண்ணின் இதயத்தையும்

சார்ந்திருக்கிறது. ஏனெனில், பெண்ணின் இதயத்தில் இருக்கும் அன்பிற்கேற்பவே

லிங்கத்தின் செயல்பாடு இருக்கும். அன்பில்லாத நிலையில் மேற்கொள்ளப்படும்

இன்பத் துய்ப்பு பிணத்தைப் புணர்வதைப் போன்றதே.

விருப்பமற்ற பெண்ணுடன் பாலுறவில் ஈடுபடும் போது, அவளது வெளியில்

ஒத்துழைக்காமல் போரிட்டுக் கொண்டிருக்கும், அதனால், சத்து பானங்களை

ஒத்துழைத்தாலும், யோனிக்குள் உள்ள உயிரணுக்கள் லிங்கத்தோடு

அருந்தும் அனுபவம் லிங்கத்துக்கு எரிச்சலைக் கொடுப்பது மட்டுமின்றி, துரித

ஸ்கலிதத்தையும் ஏற்படுத்தி விடும்.

துரித ஸ்கலிதம்**.**

துரித ஸ்கலிதம் நோய் அல்ல. அது ஆணின் பரம்பரைச் சொத்து. ஒரு நபர்

ஆண் என்பதற்கான அடையாளமே துரித ஸ்கலிதம் தான்.

ஏனெனில், ஆயிரக்கணக்கான தலை முறைகளாக மரபணு வழியாக,

விலக்கல்ல.

ஒவ்வொரு ஆணாகக் கடந்து வந்துள்ள மரபணு அச்சமே துரித ஸ்கலிதம்

ஏற்படுவதற்கான முழு முதற் காரணம். பேரரசர்கள் கூட இந்த

அச்சத்திற்கு விதி

கற்காலத்தில் பல்லாயிரம் ஆண்டுகளாக நடந்து கொண்டிருந்த ஆண்களின்

பாலியல் நடவடிக்கைகள் தான் இன்றைய ஆணுக்கும் துரித ஸ்கலிதத்தை

ஏற்படுத்துகின்றன.

கற்காலத்தில் பலவானே நியாயவான். பலவான் மட்டுமே பெண்களுடன்

இன்பம் துய்க்க முடியும். வேறு யாரும் பெண்களைத் தொடக்கூடாது. இதை

மீறுபவன் கடுமையாகத் தண்டிக்கப்படுவான். கும்பலிலிருந்து விரட்டியடிக்கப்

படுவான். இது இயற்கைக்கே எதிரானது என்பதெல்லாம் பலவானுக்குத் தெரியாது.

ஆனால் இது தான் சட்டம். இது அந்த பலவானின் மகனுக்கும் பொருந்தும்.

காம உணர்வோ அச்சமற்றது, மேலும் இளங்கன்று பயமறியாதது. அதனால்

பருவ வயதை அடையும் போது ஆண்பிள்ளை இயற்கையாக ஏற்படும் உந்துதலால்

பெண்ணை நெருங்குவான். இது இயல்பானது. மேலும் இளமையை ஈர்ப்பது

பெண்ணின் இயல்பு. அதனால், பெண்ணும் அவனை ஈர்ப்பாள். அவர்கள்

இணைவார்கள். இது பலவானுக்கு தெரிய வரும். உடனே அந்த இளங்கன்று

மரண அடி கொடுத்து வனத்திற்குள் விரட்டப்படும்.

அதனால் பெண்ணுடன் இணைவதே மிகவும் ஆபத்தான செயல் என்கிற

கருத்து அந்த இளங்கன்றின் ஆழ்மனதில் ஏற்பட்டு விடும். இந்த அச்சம்

மறையவே மறையாது. விழுந்த அடி அப்படிப்பட்டது. ஒவ்வொரு ஆணும் இந்தச்

சூழலைச் சந்தித்தேயாக வேண்டும்,

அதன் பின் விரட்டியடிக்கப்பட்ட அந்த இளங்கன்று வனத்தின் வேறொரு

பகுதியில் இரகசியமாக வளர்ந்து கொண்டிருக்கும். வலுவான ஆணான பின், தன்

பிறப்பிடத்தைத் தேடி வந்து, தன்னை விரட்டியடித்த வலியவனைப் போட்டுத்

தள்ளும். முதியவனைக் கொல்ல பெண்களும் உதவுவர்.

அவ்வாறு கொல்வதற்கான நேரம் பெரும்பாலும் பெண்ணுடன் இணையும்

வேளையாகவே இருக்கும். ஏனெனில் அந்த நேரத்தில் தான் பலவான் தன்னிலை

மறந்த நிலையில் இருப்பான், ஆகவே, அந்த நேரத்தைப் பயன்படுத்தி,

வலியவனைப் போட்டுத் தள்ளிய கன்று அடுத்த வலியவனாக மாறும். அத்தனை

பெண்களோடும் புணரும்,

ஆனால், அவ்வாறு முயங்கும் வேளையில் தன்னை எவனாவது கொன்று

விடுவானோ என்கிற அச்சத்திலேயே அது செயல்படும். அதனால், தூரித ஸ்கலிதம்

ஏற்பட்டு விடும். இது தான் ஆண் வர்க்கத்தின் காம் வரலாறு.

அந்த வரலாறு ஊட்டிய அச்சம் தான் மரபணு வழியே தலைமுறை

தலைமுறையாக கடத்தப் படுகிறது. மேற்கண்ட மரபணு அச்சத்தால் தான்

ஆணுக்கு துரித ஸ்கலிதம் ஏற்படுகிறது.

தூரித ஸ்கலிதத்திற்கு மட்டுமல்ல. ஒவ்வொரு ஆணும் தன்னுடைய முதற்

காதலின் போது, அஞ்சி நடுங்கியடி, குளறும் வாயுடன் பெண்ணிடம் பிதற்றித்

தொலைப்பதற்கும் இந்த மரபணு அச்சமே காரணமாக இருந்து கொண்டிருக்கிறது.

இளவரசனாகப் பிறந்துள்ள ஆணுக்கும் இது பொருந்தும்.

முதற் காதலின் போது தன்னுடைய குரல் கமறவில்லை, தொண்டை

வறளவில்லை. மனதில் பயம் ஏற்படவில்லை, உடல் வியர்க்கவில்லை.

இதயத்

துடிப்பின் வேகம் அதிகரிக்கவில்லை என்று சொல்லும் ஆள்ள ஒரு பொய்யன் என்று

பொருள்.

சாதாரணமாக இன்பத் துய்ப்பில் தம்பதியர் ஈடுபட்டிருக்கும் போது,

யாரேனும் கதவைத் தட்டினாலோ, யாரோ வருவதைப் போன்ற ஒரு அரவம்

கேட்டாலோ ஆணின் உயிர் நீர் வெளியேறி விடும்.

குழந்தை விழித்துக் கொள்ளும் போது கூட, ஒரு சில ஆண்களுக்கு

நிகழ்ந்து விடுவது உண்டு. ஆணின் ஆழ் மனமும் உடலும் இவ்வாறு தான்

பக்குவப் படுத்தப் பட்டிருக்கிறது.

இது தவிர, தன்னுடைய விதைகளை எவ்வளவு விரைவாக ஒரு பெண்ணுக்கு

வழங்க முடியுமோ அவ்வளவு விரைவாக வழங்கும் பொருட்டாகவும், இந்த துரித

ஸ்கலிதத்தை இயற்கை ஆண்களுக்கு வழங்கியிருக்கிறது என்று சொல்வோரும்

உண்டு.

எது எப்படியிருப்பினும் துரித ஸ்கலிதம் என்பது ஆண்களின் பொதுச்

சொத்து. எனக்கெல்லாம் தூரித ஸ்கலிதம் ஏற்பட்டதேயில்லை என எந்த ஆண்

சொன்னாலும் அது ஒரு வெள்ளைப் பொய்.

ஒரு ஆண் மரபணு வழியே பெற்றுள்ள மேற்கண்ட அச்சத்தோடு, இந்தப்

பிறவியின் முதல் ஏழாண்டு கால கசப்பான அனுபவங்களும் சேர்ந்து கொள்கிறது.

அதாவது, கருவிலேயே ஆணின் லிங்கம் விரைப்படைகிறது. தொட்டில்

குழந்தைகள் கூட, தங்கள் லிங்கத்தைத் தடவி இன்பம் காண்கின்றன. சிறு

வயதிலேயே குழந்தைகள் அப்பா, அம்மா விளையாட்டுகளை ஆரம்பித்து

விடுகின்றன,

ஆனால், கருவில் தவிர மற்ற நேரங்களில் நுட்பமான முறைகளில்

குழந்தைகள் தண்டிக்கப் படுகின்றன. கையை எடுத்து விடுதல்,
குழந்தையின்

விரல் கணுவின் மீது சுண்டி விடுதல், தொடக்கூடாது என கத்திச்
சொல்லுதல்

எனப் பெற்றோரின் பண்பிற்கேற்பக் குழந்தைகள் இன்பச் செயலில்
ஈடுபடாமல்

தடுக்கப் படுகின்றன.

அதன் பின் கட்டுக் கதைகள், அச்சுறுத்தல்கள் போன்ற செயல்கள்

மூலமாகவும் லிங்கமும் யோனியும் மோசமான உறுப்புக்கள் என்கிற
கருத்து

உருவாக்கப் படுகிறது, அதாவது அந்தக் காலத்தில் காட்டுமிராண்டி
அவனுடைய

பாணியில் இந்த வேலையைச் செய்தான். ஆனால் இப்போது
காட்டுமிராண்டியின்

வேலையைப் பெற்றோரே அவர்களுடைய பாணியில் செய்து
கொண்டிருக்கிறார்கள்.

காட்டுமிராண்டி, பொறாமை காரணமாகச் செய்ததைப் போலவே தான்

பெற்றோரும் பொறாமை காரணமாகவே இந்தக் காரியத்தைச்
செய்கிறார்கள்.

அதாவது தங்களால் பகிரங்கமாகச் செய்ய முடியாத இன்பச் செயலைக்

குழந்தைகள் செய்வதைக் காணும் போது ஏற்படும் பொறாமை
உணர்ச்சி தான்

தன்னுணர்வற்ற நிலையிலே வெளிப்படுகிறது.

மற்றபடி, ஒரு குழந்தை தன்னுடைய பால் மண்டல உறுப்புக்களோடு

விளையாடி மகிழ்வதைத் தடுப்பதற்குப் பின்னால், இயற்கைக்கு
எதிரான சதித்

திட்டத்தைத் தவிர, எவ்வித நீதி போதனையும் இல்லவே இல்லை.
நீதிபோதனை

என்கிற பெயரிலே, லிங்கம் ஒரு தவறான உறுப்பு என ஏற்படுத்தப்
படுகின்ற

கருத்து தான், அந்தக் குழந்தையின் எதிர்கால குடும்ப நிம்மதிக்கு
அடிக்கப்

படுகின்ற சாவு மணி.

லிங்கமும் யோனியும் கையால் கூடத் தொடக்கூடாத உறுப்புகள், இன்பத்

துய்ப்பு ஒரு தவறான செயல் என்கிற கருத்தைக் கொண்டுள்ள ஒரு ஆடவனால்,

மனைவிக்குரிய பாலின்பங்களை ஒரு போதும் வழங்க முடியாது. தனக்குரிய

பாலின்பங்களை வழங்காத கணவனை எந்த மனைவியாலும் மதிப்போடு நடத்த

முடியாது. இதெல்லாம் இயற்கை.

மேற்கண்ட உண்மையைப் புரிந்து கொள்ளாத பெற்றோரின் வளர்ப்பு

காரணமாக, பாலுணர்வு குறித்த குற்ற உணர்வோடு குழந்தைகள் வளர்கின்றன.

ஆனால், இயற்கையை வெல்ல யாராலும் முடியாது. அதனால், இன்பத்துய்ப்பில் ஈடுபடுகின்றன. ஆனால், அவ்வாறு ஈடுபடும் போது குற்ற உணர்வோடு

ஈடுபடுகின்றன. அதனாலும் துரித ஸ்கலிதம் ஏற்படுகிறது.

பாலின்பம் பாவகரமானது. அருவருப்பானது. அசிங்கமானது.

அற்பத்தனமானது. சிற்றின்பம் என்கிற கருத்து மனதில் குற்ற உணர்வை

ஊட்டக்கூடியது. இவையெல்லாம் மொழியைக் கண்டு பிடித்த பின் உருவான

வார்த்தைகள், மிகவும் நவீனமானவை. குறிப்பிட்ட சூழல் காரணமாகக்

காலத்திற்கேற்ப உருவானவை. ஆகவே, கால மாற்றத்திற்கேற்ப நிச்சயமாக மாறக்

கூடியவை,

ஆனால், காமமும், காதலும் மனித இனம் தோன்றிய நாள் முதலாக இருந்து

கொண்டிருப்பவை, கடைசி மனிதன் வாழும் வரையிலும் இருக்கக் கூடியவை.

இயற்கையானவை, இயற்கையான உணர்வை முறைப்படுத்தலாமே தவிர,

இயற்கையைத் தடுக்கும் சக்தி மனிதனுக்குக் கிடையாது. இதைப் புரிந்து

கொண்டாலே குற்ற உணர்விலிருந்து விடுபட்டு விடலாம்.

மேற்கண்ட புரிதல் ஏற்படும் போது தான் ஒரு ஆண் தன்னுடைய மரபணு

வழி யே பெற்றுள்ள அச்சத்திலிருந்தும், வளர்ப்பால் ஏற்படுத்தப் பட்டுள்ள குற்ற

உணர்விலிருந்தும் விடுபட முடியும்.

அதன் பின், வீரிய அளவுகோல் பயிற்சியின் மூலம் லிங்கத்திற்கான பழக்கப்

பயிற்சியளிப்பதோடு, காதற் தசை நார்ப் பயிற்சியின் மூலம் பால் மண்டலத்தை

வலுப்படுத்தவும் கற்றுக் கொள்ளும் போது தான் துரித ஸ்கலிதத்திலிருந்து

மீள முடியும், மேற்கண்ட ஆலோசனையைப் பின்பற்றினால், ஓரிரு

வாரங்களிலேயே மீண்டு விடலாம் என்பதே இங்கே சொல்லப்பட வேண்டிய ஒரு

நற்செய்தி.

விந்து முந்துதல்,

விந்து முந்துதல் என்பது வியாதி அல்ல. பயிற்சியின்மையின் விளைவு. பால்

மண்டலத்தை வலுப்படுத்தக் கற்றுக் கொள்ளாததன் பலன் அது. இந்த நூலில்

பரிந்துரைக்கப் பட்டுள்ள பயிற்சிகளை முறையாகச் செய்யும் போது இதிலிருந்து

எளிதாக விடுபட்டு விடலாம். இருசக்கர வாகனத்தை இயக்கக் கற்றுக்

கொள்வதைப் போல் எளிதாகக் கற்றுக் கொள்ளலாம்.

ஒரு குழந்தை மிதிவண்டி ஓட்டிப் பழகும் போது துவக்கத்தில் வேகமாகத்

தான் ஒட்டும். மெதுவாக ஓட்டினால் கீழே விழுந்து விடும்.ஆனால், ஒரு முதியவர்

நடப்பதை விட மெதுவாக மிதி வண்டியை ஓட்டும் போது தான் அந்தக் குழந்தை

முழுமையாகக் கற்றுக் கொண்டு விட்டது என்று பொருள்.

அதே போலத் தான், இன்பத் துய்ப்பின் போது ஆண் எவ்வளவு மெதுவாக

இயங்குகிறானோ அந்த அளவிற்கு அவன் தேர்ச்சியடைந்து விட்டான் என்று

பொருள். முறையான உடற்பயிற்சி, உயிர்ச் சத்துக்கள் கொண்ட சமச்சீர் உணவு,

காதற் தசை நார்ப் பயிற்சி, வீரிய அளவுகோல் பயிற்சியின் படி லிங்கத்துக்கும்,

பால் மண்டலத்திற்கும் பழக்கத்தை ஏற்படுத்தும் பயிற்சி, காதல் நேரச் சுவாசப்

பயிற்சி ஆகியவை மட்டுமே விரும்பிய போது உயிர் நீரை வெளியேற்றும்

வல்லமையை ஆணின் உடலுக்கு அளிக்கக் கூடியவை.

மற்றபடி, இன்பத்துய்ப்பில் ஈடுபட்டிருக்கும் போது, 1,896- லிருந்து தலை

கீழாக எண்ணிக் கொண்டிருத்தல், பத்தொன்பதாம் வாய்ப்பாட்டை

மனதிற்குள்ளேயே சொல்லிக் கொண்டிருத்தல், நாக்கால் வாயின் மேல் புறத்

தாடையைத் தொடர்ந்து அழுத்தமாகத் தீண்டியபடியே செயல் படுதல்,

பெண்ணின் முக்கல், முனகல்களைக் கவனியாதிருத்தல்; நாளைய பணிகளைப்

பற்றிச் சிந்திக்கத் தொடங்குதல்; சொத்து மதிப்பை கணக்கிடத் தொடங்குதல்;

எதிர்காலத் திட்டங்களை வகுக்கத் தொடங்குதல்; மனதை இக்கணத்திற்கு

வரவிடாமல் பார்த்துக் கொள்தல்; கற்பனையில் ஒரு ஆட்டுப்ட்டியை உருவாக்கி,

அதிலுள்ள ஆடுகளை எண்ணிய படியே பாலின்பம் துய்த்தல்.. ஒரு கட்டிட

வரைபடம் ஒன்றை மனதிற்குள்ளேயே தயாரித்தல் போன்ற யுக்திகள் எல்லாம்

மடையர்களால் பின்பற்றப் படுபவை,

இவ்வளவு கடுமையாக ஏன் கூறப்படுகிறதென்றால், அந்த நேரத்து பாலின்ப

அனுபவங்களில் கவனம் செலுத்தாத வரை மனதின் அடியாழத்தில் பதுங்கிக்

கிடக்கும் மனிதனின் காமம் தணிவதில்லை.

ஆகவே இன்பத் துய்ப்பின் போது, கவனம் முழுவதும்,

துய்ப்பதிலேயே தான் இருக்க வேண்டும். அப்போது தான் ஆணின் காமம்

முழுமையாகத் தணியும்.

ஆண்களின் தன்னாளுமைத் திறனை வளர்ப்பதற்காக, இந்தப் பாகத்தில்

சொல்லப்பட்டுள்ள பயிற்சிகள் அனைத்தும் பலன் தரக்கூடியவையே. ஆனால்,

அதற்குரிய கால அவகாசம் தேவை.

ஒரு ஆண் தன்னுடைய உடலை எத்தகைய பழக்கத்திற்கு, எத்துணை

காலமாக அடிமையாக்கி வைத்திருக்கிறான் என்பதைப் பொறுத்தும், பயிற்சியைத்

தொடர்ச்சியாக மேற்கொள்வதை வைத்தும் ஆறுமாதம் முதல் ஒரு வருடம் வரை

காலம் தேவைப் படலாம்,

உதாரணமாகப் பல்லாண்டுகளாகச் சேர்த்து வைத்திருந்த தனது

எடையையும், தொந்தியையும் குறைக்கும் வழிமுறை பற்றி அறிந்து கொள்ள ஒரு

மனிதர் மருத்துவரை நாடினார். தினமும் “வாக்கிங்” செல்லும் படி அவருக்கு

அறிவுரை வழங்கப் பட்டது.

அடுத்த நாள் விடிந்ததும் அவர் நடக்கத் தொடங்கினார். அவ்வாறு நடக்கும்

போது, தன் தொந்தி எவ்வளவு குறைந்துள்ளது என்பதை அறிந்து கொள்ள

அவ்வப்போது அதைத் தடவிப்பார்த்த படியே நடந்து கொண்டிருந்தார். ஒரு வாரம்

இது தொடர்ந்தது. ஆனால், அவருடைய தொந்தி நூலளவு கூடக்

குறைந்தபாடில்லை. அதனால், அவர் நடைப்பயிற்சியின் மீது நம்பிக்கை இழந்து

அதைக் கைவிட்டு விட்டார்.

மேற்கண்ட மனிதரைப்போல், இந்த நூலைப் படித்த அடுத்த நாளே ஆணின்

லிங்கம் தன் முழு வலிமையைப் பெற்றுவிடும் என்றோ, விந்தைக் கட்டுப்படுத்தும்

வித்தைகள் அனைத்தும் கைவரப் பெற்றுவிடும் என்றோ, அதன் மூலம் ஆணின்

தன்னாளுமைத் திறன் கைகூடி விடும் என்றோ யாரும் நம்பி விட வேண்டாம்.

சொல்லப் போனால், மேற்கண்ட பயிற்சிகளைச் செய்யாமல், அடுத்து வரும்

அத்தியாயங்களைப் படித்து விட்டு, பெண்ணுக்குரிய இன்பங்களை நிகழ்த்தும்

போது, இன்பக் கிளர்ச்சியால் பெண்ணின் உடல் துடிக்கும் துடிப்பைக் கண்டு,

ஆடையைக் களையாத நிலையிலேயே, லிங்கம் விரைப்படையாத நிலையிலேயே,

ஆணின் உயிர்நீர் வெளியேறி விடுவதற்கான வாய்ப்புக்களே அதிகம் என்பதை

நினைவில் நிறுத்திக் கொள்ளவும்,

பாகம்-**4**

தந்த்ரா

வழியில்

தாம்பத்ய

வாழ்க்கை

(ஆணாதிக்கம் என்கிற சுமையை

இறக்கி வைத்து விட்டு,

இந்த பாகத்திற்குள் நுழையவும்.

ஏனெனில், ஆதிக்க வாதிகளுக்கு

மதன மாளிகையின் கதவுகள்

ஒரு போதும் திறக்கப் படுவதில்லை.

அன்பு மட்டுமே, ஒரே திறவு கோல்.)

நான்கு மற்றும் ஐந்தாம் பாகங்களைப் படிக்கத் துவங்கும் முன்பாக சில வார்த்தைகளுக்கான பொருளை தெரிந்து கொள்ள வேண்டியது மிகவும் அவசியம்.

பூஜை மரியாதை செய்தல், போற்றிப் புகழ்தல்.

சிரசு தலை; சரீரம் உடல்; கர்ப்ப கிரகம் நாக்கு; கொங்கைகள் மார்புகள்

கொங்கை இதழ்கள் மார்புக் காம்புகள்

புனிதப் பகுதி பாலுறுப்பும், புணர் புழையும், சிறுநீர்த் துளையும் உள்ளடக்கிய

மதன மேடு முதல், மூலாதாரம் வரையிலான பகுதி

மதன பீடம் பெண்ணின் பாலுறுப்பு

புனித குகை + புணர் புழை அல்குல் யோனி பாலுறவு கொள்ளும் புழை

கருவறைக் குழாய்,

பிரம்மஸ்தானம் புணர் புழைக்குள் உள்ள முக்கியமான உணர்ச்சி கேந்திரம்

தெய்வீகப் பகுதி புனிதப் புள்ளி ஜி-ஸ்பாட்

இன்பத்தேன் புணர் புழையில் சுரக்கும் உயவுத் திரவம்

மதன பனம் தீவிரமாகப் பாலுறவு நிகழும் போது சுரக்கக் கூடிய உயவுத் திரவம்

அமிர்தம் உச்சகட்ட இன்பத்தின் போது சுரக்கக் கூடிய பெண்ணின் விந்து.

இன்பத் துய்ப்பு பாலுறவு அல்லது உடலுறவு அல்லது கலவி.

லிங்கம் ஆணின் பாலுறுப்பு, தம்பி, கஜக்கோல், ஆண்குறி.

அமுது உணவு; அமுத படம் மார்புகள்; உயிர் நீர் விந்து.

நரம்புக்கூடை நீரடைத்த பலூன் —விரைப்படைந்து விட்ட தெய்வீகப் பகுதி,

மூலாதாரம் ஆசனவாய்க்கும் விதைக்கும் இடையில் உள்ள பகுதி

மூலபந்தா காதற் தசை நார் பயிற்சி



**1.** பாலின்ப உச்சகட்டப் பரவசம்

தந்த்ரா கூறும் வழி முறைகளின் படி இன்பம் துய்க்கும் போது, தம்பதியர் இருவருடைய உடலிலும், பாலின்ப உச்ச கட்டப் பரவசம் அல்லது உச்சகட்ட பேரின்பப் பரவசம் நிகழ்கிறது. அது குறித்த

சுருக்கமான விவரணை இங்கே பகிர்ந்து கொள்ளப் படுகிறது.

ஆணின் பாலின்ப உச்ச கட்டப் பரவசம்.

உடலின் பால் மண்டலம் முழுவதும் இரத்தத்தால் நிரப்பப் படுகிறது.

உடலிலுள்ள தசை நார்கள் அனைத்தும் இறுக்கமடைகிறது. சுவாசத்தின் வேகம்

உச்ச நிலையை அடைகிறது. இதயம் அதி வேகமாகத் துடிக்கிறது. அனைத்து

நரம்புகளிலும் இரத்தம் வேகமாய்ப் பாய்கிறது. இவையனைத்தும் சிகர நிலையை

அடையும் போது, திடீரென ஒரு பூகம்பம் நிகழ்கிறது.

உடல் முழுதும் உயிர் மின் காந்த அலைகள் பாய்கிறது. லிங்கத்தின்

நரம்புகளோடு தொடர்புடைய குரல்வளை நரம்புகள் துடிப்பதால்,

தொண்டையிலிருந்து மெல்லிய தொனியில் குரல் எழுகிறது. ஆண் அழுகிறான்,

அல்லது “ஆ, ஊ” எனக் குரலெழுப்புகிறான், மனம் சிந்தனையை நிறுத்தி

விடுகிறது. விதைகள் இரண்டும் உடலோடு வந்து ஒட்டிக் கொள்கிறது.

உயிர் மின் காந்த அலைகள் உடல் முழுவதும் பரவுகிறது. வயிற்றுப்பகுதி

முன்னே தள்ளிக் கொண்டு வர ஆணின் உடல் வில்லாய் வளைகிறது. சில

விநாடிகள் பட்டாசுகள் வெடிக்கின்றன. வெடித்து முடிந்த ஒரிரு வினாடிகளில்

உயிர் நீர் வெளியேறுகிறது. அப்போது லிங்கத்தில் ஏற்படும் இன்பச் சிலிர்ப்பு

பத்து வினாடிகள் வரை நீடிக்கிறது. மூக்கு, காது, கழுத்து, மார்பு, முகம்

ஆகிய பகுதிகளில் அதிக இரத்தம் பாய்வதால் அவை சற்றே நிறம் மாறுகின்றன.

அதன் பின் லிங்கம் தளர்வடைகிறது. உடல் தன்னிலையடைகிறது.

சிந்தனை திரும்புகிறது, வியர்வைச் சுரப்பிகள் வேலை செய்கின்றன. உடனடியாக

பாலுறவின் மீதிருந்த ஆர்வம் மனதிலிருந்து முற்றிலும் மறைந்து விடுகிறது.

சிலருக்கு வெறுப்பே கூட ஏற்படுகிறது. உடலில் சோர்வு பிறக்கிறது. தூக்கம்

கண்ணைச் சுழற்றுகிறது. இது தான் உச்சகட்ட இன்பத்தின் போது ஆணின்

உடலில் நிகழ்கிறது.

ஆணின் உடலில் பன்முறை தொடர்ச்சியாக நடைபெறக்கூடிய உச்சகட்ட

பாலின்பங்களைப் பொறுத்தவரை, பட்டாசுகள் மட்டும் வெடித்துக்

கொண்டிருக்குமே தவிர, ஆணின் உயிர்நீர்த் தேக்கம் உடைவதில்லை. அதனால்

முப்பது நிமிடம் வரை லிங்கம் தளர்வடைவதில்லை. சிந்தனையும் முழுமையாகத்

திரும்புவதில்லை.

உடலிலிருந்து வெளியேற முடியாத ஆணின் சக்தியலைகள் உடல்

முழுவதும் தொடர்ச்சியாகப் பரவிக் கொண்டேயிருக்கிறது. அதனால், இன்பக்

கிளர்ச்சியின் முழு பரிமாணத்தையும் ஆணின் உடல் அனுபவிக்கிறது. அந்த

ஆனந்த அதிர்வலைகளால், உடலிலுள்ள சக்கரங்களின் ஆற்றல் பெருமளவில்

அதிகரிக்கிறது. மூளையில் பல்வேறு வேதிகள் சுரக்கின்றன. அதனால், உயிர்

நீரைத் தன்னுடைய விருப்பப் படி ஆண் வெளியேற்றும் போது, உடலில் நிகழும்

இன்பம் பேரானந்தப் பரவசத்தை அளிப்பதாக அமைகிறது. இது தான் பன் முறை

உச்சத்தின் போது ஆணின் உடலில் நிகழ்கிறது.

பெண்ணின் உச்ச கட்ட பேரின்பப் பரவசம்.

பாலுறவின் முதல் பதினைந்து நிமிடங்கள், உடலின் பல பகுதிகளிலிருந்து

புனிதப் பகுதியை (பால் மண்டலத்தை) நோக்கி இரத்தம் வரத் தொடங்குகிறது.

அதனால், இயல்பாகவே மேடாக இருக்கக் கூடிய அப்பகுதி மேலும்

சற்றுக்

கூடுதலான மேடாக உருவாகிறது. அதாவது சற்றே வீங்கிய மாதிரி மாறுகிறது.

புனிதப் பகுதி அவ்வாறு இரத்தத்தால் நிறைக்கப் படும் போது தான், மதன

பீடம் (பாலுறுப்பு) உயிர்த்தெழத் தொடங்குகிறது. எப்போதும் இறுக்கமாக

இருக்கும் புனித குகை (புணர்புழை) தன் சுற்றளவையும், ஆழத்தையும்

அதிகரித்துக் கொள்வதோடு, இன்பத் தேனால் தன்னை நனைத்துக் கொள்கிறது.

அந்த மாற்றங்கள் நிகழும் போது, சுவாசம் வேகமெடுக்கிறது. சுவாசம் உச்சத்தை

அடையும் போது, இதயம் வேகமாகத் துடிக்கிறது. அதனால், அனைத்து

நரம்புகளிலும் இரத்தம் வேகமாய்ப் பாயத் தொடங்கி, உடலின் வெப்பம்

அதிகரிக்கிறது.

அப்போது தான் பால் மண்டலத்தில் லேசாக இன்பக் கிளர்ச்சி உருவாகத்

தொடங்குகிறது. பெண்ணின் பாலுறுப்பில் எட்டாயிரம் நரம்புகள் உள்ளன,

அவை பதினாறாயிரம் நரம்புகளோடு தொடர்பு கொண்டுள்ளன, நரம்புகள்

என்பவை நரி கள் மற்றும் பறவைகளைப் போன்றவை. ஒன்று கத்தத்

தொடங்கினால் போதும், அனைத்தும் கத்தத் தொடங்கி விடும். அதனால்,

பாலுறுப்பின் நரம்புகளின் மீது படும் உராய்வால் ஏற்படும் கிளர்ச்சி, பதினாறாயிரம்

நரம்புகளிலும் பரவத் தொடங்குகிறது.

அதனால், ஆணின் இன்பத்தின் போது லிங்கத்தின் தலையில் ஏற்படுவதைப்

போன்ற சிலிர்ப்பு, உடல் முழுவதுமே ஏற்படுகிறது. அதாவது, பெண்ணின் முழு

உடலும் பாலுறுப்பாகவே மாறி விடுகிறது. அந்த சிலிர்ப்பால் ஆணைக்

காட்டிலும்
பத்து மடங்கு கூடுதலாகப் பெண்ணின் உடல் துடிக்கிறது.
பாலுறுப்பின் நரம்புகளுக்கும், தொண்டை நரம்புகளுக்கும் உள்ள
தொடர்பின் காரணமாக, உச்ச கட்ட இன்பம் நிகழும் விநாடியில் ஆண்
அழுவான். அல்லது "ஆ, ஊ" எனக் குரலெழுப்புவான். ஆனால், அந்தத்
துடிப்புகளைப் பெண்ணின் இன்பத் துடிப்புகளோடு கடுகளவும் ஒப்பிடவே
முடியாது. நடப்பது இன்பப் பரவசமா? அல்லது இன்பப் பிரசவமா? எனத்
திகைக்கும் வண்ணம் தான், பெண்ணின் உடலில் உச்ச கட்ட இன்பம் நிகழும்.
முக்கலும், முனகலும், ஏதோ ஒரு வலியை உணர்வதைப் போன்ற முக
பாவனையுமாகத் தான் முதலில் கிளர்ச்சி வெளிப்படுகிறது. அதன் பின்,
அழுதலும், மெலிதாகக் கூச்சலிடுவதும், பிதற்றுவதும், உடலை முறுக்குவதும்,
இடையைத் தூக்குதலும், கண்கள் செருகுதலும், கைகள் எதையேனும்
இறுக்கமாகப் பற்றிக் கொள்வதும், வாய் "ஆ" வெனத் திறந்து கொள்வதும்,
முகமும், கழுத்தும், நெஞ்சும் சிவத்தலும் என, பெண்ணின் உடல் இன்பக்
கிளர்ச்சியால் துடிக்கும் போது, கொங்கைகள் பருத்து. இதழ்கள்
விரைப்படைகின்றன.
மதன பீடம் முழுமையாக விரைப்படையும் போது, புனித குகையின்
சுற்றளவு சற்றே பெரிதாகி, அங்கே ஒரு பேரின்பப் பிரளயமே நடக்கத்
தொடங்குகிறது.
பெண்ணின் மனம் சில விநாடிகள் தன்னுடைய சிந்தனையை நிறுத்தி
விடுகிறது. மின்னல் போல் உடலின் மீது, குறிப்பாக, முகம், கழுத்து,
கொங்கைகள், யோனியின் உதடுகள் போன்ற இடங்களில் நிறப் பாகுபாடுகள்
தோன்றி மறைகிறது. சில விநாடிகள் பட்டாசுகள் வெடிக்கின்றன.
"அம்மா" என்று அழைக்கும் போது, உதடுகள் அசைவதைப் போன்று,

யோனியின் நுழைவாயில் ஏழு முதல் பதினைந்து தடவை சுருங்கி விரிகிறது.

இவ்வாறு, யோனியின் நுழைவாயில் துடிக்கத் துவங்கியது முதல் துடிப்பை

நிறுத்துவது வரையிலான நேரம் தான் பெண்ணின் உச்சகட்ட பாலின்பம் நிகழும்

நேரம்,

ஆணின் உடலிலிருந்து உயிர் நீர் வெளியேறுவதைப் போலவே, பெண்ணின்

உடலிலிருந்து அமிர்தம் வெளியேறலாம். வெளியேறாமலும் போகலாம், எனினும்

இன்பத் தேனும், மதன பானமும் சுரந்து, புனித குகையைச் சகதியாக்கி,

மூலாதாரம் வழியே ஆசன வாய் நோக்கி வழிந்து கொண்டிருக்கிறது.

உயிர்த்திருந்த மதன பீடம் (பெண்ணின் பாலுறுப்பு) தளர்ந்து மறையத்

தொடங்குகிறது.

இதயத் துடிப்பும், சுவாசமும் இயல்பு நிலைக்குத் திரும்பிக்

கொண்டிருக்கிறது. மனம் தன் சிந்தனைப் பாதைக்குள் மெதுவாக வரத்

தொடங்குகிறது. நீண்ட தூரம் ஓடியதைப் போல் வியர்வை வழிகிறது.

உடனடியாக எழ முடியாமல், சுருண்டு படுத்துக் கொண்ட பெண், அன்றைய இரவு

குறட்டை விட்டு ஆனந்தமாக உறங்குகிறாள்.

விழித்தெழும் போது, அந்த இன்பத்தை வழங்கிய ஆண் மீது எல்லையற்ற

அன்புடன் விழித்தெழுகிறாள். இது தான் பெண்ணின் உடலில் நிகழும் துவக்க

நிலை உச்ச கட்ட இன்பம்.

இது நிகழ அரை மணி நேரம் முதல் ஒரு மணி நேரம் கூட ஆகலாம். ஆகும்

நேரம் பெண்ணின் மனநிலை சார்ந்தது. இன்று இருபது நிமிடத்தில் நிகழும்

இன்பம், நாளை நாற்பது நிமிடங்களில் நிகழலாம், பெண்ணின் மனநிலையே

நேரத்தைத் தீர்மானிக்கும் காரணி.



இதைத் தொடர்ந்து நிகழக்

கூடிய பிரம்மஸ் தான இன்பம்,

புனிதப் புள்ளி சார்ந்த இன்பம்,

மற்றும் அடுத்தடுத்து தொடர்

வெடியாக நிகழக்கூடிய பன்முறை

உச்சம் என்று விவரிக்கப்படுகின்ற

அமிர்த இன்பம் போன்றவற்றின்

போது, பெண்ணின் உடலில்

நிகழ்பவை பற்றி வார்த்தைகளால்

விவரிக்க முடியாது.

“பூ, பூ”, என்று உச்சரிக்கும் போது வாயின் உதடுகள் வெளிப்புறம் நோக்கித்

தள்ளிக் கொண்டு வருவதை போல, யோனியில் ஏற்படும் துள்ளல் ஒரு வகை

இன்பம், கருவறை, சினைப்பை, சிறுநீர்ப் புழையின் நுழை வாயில், புனித

குகையின் தெய்வீகப் பகுதி மற்றும் மதன பீடம் ஆகிய இடங்களில் ஏற்படும்

துடிப்புகளைக் கொண்ட இன்பம் மறுவகை எனப் பல இன்பங்கள் பெண்ணுக்கு

உள்ளன.

ஆணின் இன்பம் நிகழும் போது அடிவயிறு மட்டும் முன்னோக்கித் தள்ள,

ஆணின் உடல் வில்லைப் போல வளையும். அதே போலத் தான், அமிர்த

இன்பத்தின் போது பெண்ணின் உடலும் வில்லாய் வளையும். அல்லது கோணல்

மாணலாய் உடல் நெளிய, நிறமற்ற திரவம் வெளியேறும். அதாவது ஆணுக்கு

எப்படியோ அப்படித் தான் அது வெளியேறுகிறது.

அது தான் பெண்ணின் நிராசைகளையெல்லாம், கோப தாபங்களை

யெல்லாம், மன அழுத்தங்களையெல்லாம், பெண்ணின் மனதிலிருந்து

வெளியேற்றுகின்ற, அழித்தொழிக்கின்ற அமிர்தம்.

ஆணின் உயிர்நீர் வெளியேறும் போது, ஆணுக்கு எத்தகைய நிம்மதி

கிடைக்கிறதோ அதே நிம்மதி அமிர்தத்தை வெளியேற்றும் போது

பெண்ணுக்கும் கிடைக்கிறது.

அதாவது ஆணுக்கும் சரி, பெண்ணுக்கும் சரி, உடலிலிருந்து அந்த திரவம்

வெளியேறுவது மனநலத்தோடு மிகவும் நெருங்கிய தொடர்புடையதாகவே

இருக்கிறது.

ஆணின் உயிர் நீர் அரைத் தேக்கரண்டி அளவிலேயே வெளியேறும்.

ஆனால், பெண்ணின் அமிர்தமோ, கையளவு முதல் படுக்கை விரிப்பெல்லாம்

நனைந்து போகுமளவிற்குக் கூட உடலிலிருந்து வெளியேறும். அது வெளியேறி

விட்டால் அதன் பின், சில தினங்களுக்குப் பெண் உணர்ச்சி வயப்பட மாட்டாள்.

ஏனெனில், உணர்ச்சிகளை உருவாக்கக் கூடிய ஸ்வாதிஸ்தான் சக்கரத்தின்

இயக்கம் இந்தப் பாலின்பத்தின் போது சீராகி விடுகிறது.

பெண்ணின் அமிர்தம் ஒரு குவளை நீரில் ஐந்து சிட்டிகை பனங்

கற்கண்டைப் போட்டுக் கலக்கிய பானம் போன்ற சுவையில் இருக்கும். சிலருடைய

அமிர்தம் நாட்டுச் சர்க்கரையைக் கலக்கிய பானம் போன்றும் இருக்கலாம்.

பெண்ணின் அமிர்தத்தில் உயிரணுக்கள் இருக்காதே தவிர, ஆணின் உயிர்

நீரில் இருக்கக் கூடிய சத்துக்கள் அனைத்தும் இருக்கும். அமிர்த இன்பம்

பெண்ணின் உடலில் நிகழும் போது ஏற்படக்கூடிய பேரின்பப் பரவசம்

கிளர்ச்சியின் தாக்கத்தால், மெல்லிய அளவிலேனும் கூச்சலிடாத பெண்

இதுவரை பிறந்ததில்லை. ஹஸ்தினி வகையின் யானைப் பிரிவைச்

சேர்ந்த பெண் உட்பட.

பெண்ணின் புனிதப் பகுதியில், “சஸ்பந்தா” என்கிற ஒரு நரம்புக்கூடை

இருக்கிறது. அந்தக் கூடையின் மீது அரை நாழிகை தொடர்ச்சியான உராய்வை

ஏற்படுத்தும் போது, “காம சலீலா” உருவாகி வெளியேறும். சில நேரங்களில்

படுக்கையைக் கடந்து சென்று விழுமளவிற்குக் கூட அது வேகமாகப் பிய்ச்சி

அடிக்கப் படும் என்று “அனங்க ரங்கா” என்கிற நூலில் தெரிவிக்கப் பட்டுள்ளது.

இன்பத் துய்ப்பின் போது மூன்று வகையான திரவங்கள் சுரக்கின்றன.

முதலாவது புனித குகையின் சுவர்களில் வியர்வையைப் போல் சுரக்கக் கூடிய

இன்பத்தேன். (உயவுத் திரவம்) இரண்டாவது, இன்பத்தை நெருங்கும் வேளையில்

சுரப்பிகள் மூலம் சுரக்கக் கூடிய மதன பானம். மூன்று அமிர்த இன்பத்தின் போது

கணிசமான அளவில் வெளிவரக் கூடிய அமிர்தம்.

இந்த மூன்று திரவங்களுமே சக்தி பானங்களே. இந்த மூன்று சக்தி

பானங்களையும் ஒரு ஆண்பார்க்க வேண்டுமானால், ஒரு மணி நேரத்தையாவது

இன்பத் துய்ப்பிற்கென ஒதுக்க வேண்டும்,

பெண்ணுறுப்பும், அதில் சுரக்கக் கூடிய இன்பத்தேனும், மதன பானமும்,

அமிர்தமும் பல்வேறு காரணங்களால் அவற்றின் இயல்பு நிலையிலிருந்து

வேறுபட்ட மணமுடையதாக, சுவையுடையதாக மாறவும் வாய்ப்புண்டு.

உணவு, உயிர் சத்துக்கள் பற்றாக்குறை, மருந்துகள், மாதவிடாய்க்கு

நெருங்கிய பருவம், நோய்த் தொற்றுகள், பெண் பயன் படுத்தும் மது, புகையிலை

போன்ற பொருட்கள் இந்த பானங்களின் மணத்தைத் தீர்மானிக்கின்றன.

பல்லாடவரோடு தொடர்புடைய பெண்ணின் பானங்கள் பெரும்பாலும் மீன்

வாசத்தைக் கொண்டிருக்கும் என்றும் காம சூத்ராவில் சொல்லப்பட்டுள்ளது.

அமிர்தத்தை வெளியேற்றுகின்ற அளவிற்கு நிகழக்கூடிய இன்பம் தான்.

இன்பங்களிலேயே தலையாய, உச்சபட்ச இன்பத்தை பெண்ணுக்கு அளிக்கக்

கூடியது. பெண்ணின் மொத்த உடலையும் துடிக்கச் செய்வது. தன்னிலை மறந்து,

இன்பத்திலே பெண்ணைக் கூச்சலிடச் செய்வது, அல்லது இன்பக் கதறலில் ஈடுபடச்

செய்வது. பெண்ணின் மனதை முழுமையாகச் சாந்தப் படுத்துவது.

உச்ச கட்ட இன்பம் நிகழ்வதால் ஏற்படும் நன்மைகள்,

அமிர்தம் வெளியேறும் போது, ஏற்படும் பேரின்பம் கண்களைச் செருக

வைப்பதாக, உணர்ச்சி மயமான, மெய் சிலிர்க்கச் செய்கின்ற, மொத்த உடலையும்

உயிர் மின்காந்த அலைகளால் துடிக்கச் செய்கின்ற, உச்ச பட்சப் பேரானந்த

நிலையை அளிக்கக் கூடியதாக மட்டுமின்றி, மறக்க முடியாத மனதைக்

கிறங்கடிக்கக் கூடிய அனுபவமாகவும் இருக்கிறது.

மனதின் அடியாழ் நிராசைகள் அனைத்தும் கொல்லப் படுகிறது. தசைகள்

தளர்வடைகின்றன, மன அழுத்தம் விடை பெறுகிறது. காமம் தணிக்கப்

படுகிறது. பாலின்ப ஏக்கம் தீர்கிறது. மன இறுக்கம், உடல் இறுக்கம் ஆகிய

இரண்டிலிருந்தும் பெண்ணுக்கு விடுதலை கிடைக்கிறது.

மனநிலை மகிழ்ச்சியானதாக மாறுகிறது. பெண்ணின் செயல்களில்

குறிப்பிடத்தக்க மாற்றம் நிகழ்கிறது. இந்த மாற்றங்களை எந்தவொரு கணவனும்

அடுத்த நாட் காலையிலேயே கண்ணாலும் காண முடியும். மனதாலும் உணர

முடியும்.

அது மட்டுமன்றி, கணவன் மீது எல்லையற்ற அன்பை இது உருவாக்குகிறது.

கணவனின் செயல்களில் குறை காணும் பார்வையை இந்த இன்பம் குருடாக்கி

விடுகிறது, அதனால் தம்பதியிடையே எவ்விதப் பிரச்சினையும் ஏற்படவே

ஏற்படாது. இலட்சிய தம்பதிகளாக வாழ்ந்து கொண்டிருப்பார்கள்.

அகம் மட்டுமின்றி புறம் சார்ந்த தளங்களிலும் இந்தத் தம்பதியரின் வாழ்க்கை

வாழ்க்கை வெற்றிகரமானதாகவே இருக்கும்,

மேலும், பால் மண்டலம் முழுவதும் அதிக அளவில் இரத்தம் பாய்ந்து

கோடிக்கணக்கான உயிரணுக்களுக்கு உரிய பிராணவாயு கிடைக்கிறது. அதோடு,

கொண்டிருந்த காரணத்தால், அங்கே வாழ்ந்து கொண்டிருக்கும்

அந்த உயிரணுக்களில் பிராண வாயு எரிக்கப் படுவதால் உருவாகின்ற சாம்பல்,

புகை போன்ற கழிவுகள் உடனுக்குடன் அகற்றப்படுகின்றன.

அதனால் பால் மண்டலத்தில் வாழ்ந்து கொண்டிருக்கும் பல கோடி

உயிரணுக்களின் சுகாதாரம் பேணப் படுகிறது. “ஃபிரீ ரேடிகல்ஸ்” காரணமாக,

உடலில் உருவாகக் கூடிய கொலைகார வியாதிகளிலிருந்து பால் மண்டலம்

சிறப்பாகப் பாதுகாக்கப் படுகிறது.

அதோடு பெண்ணின் உடல் நலமும், மன நலமும் கீழ்க்கண்டவாறும் கூடப்

பாதுகாக்கப் படுகிறது. a) இரத்த ஓட்டம் சீர்ப்படும். b) மார்புப்புற்றும் மாரடைப்பும்

தடுக்கப் படும். c) பால் மண்டல

உறுப்புக்களான கருப்பை, சினைப்பை

போன்றவற்றை அறுவை சிகிட்சை மூலம் அகற்றத் தேவையிருக்காது. d) ஆழ்ந்த

உறக்கத்தைத் தரும். e) அதனால், வளர்சிதை மாற்றம் திறம்பட நடைபெறும்.

f) அதனால், நோய் எதிர்ப்புச் சக்தி வலுப்படும். g) மாதவிடாய் உபாதைகள்

அகலும். h) மாதவிடாய் நேரத்து மனநிலை மாற்றங்கள் சீர்ப்படும். i) மூட்டு வலி

வருவதைத் தடுக்கும். j) எலும்புருக்கி நோய் தடுக்கப் படும். k) எடையைக்

குறைக்க உதவும். Im) பெண்ணுறுப்பை

ஆரோக்கியமாகவும், இறுக்கமாகவும் வைத்திருக்க உதவும். n) மன அழுத்தம்

இருக்காது. o) மூளையின் சிந்தனைத் திறன் சிறப்பாக இருக்கும். p) சுய மதிப்பு

உயரும். q) தன்னம்பிக்கை வளரும். r) மனம் எப்போதும் மகிழ்ச்சியாகவே

இருக்கும். s) அதனால், முகம் புன்னகை மாறாமல் இருக்கும். t) உற்சாகமும்,

ஊக்கமும் பிறக்கும். u) இரக்கமும், கருணையும் உதிக்கும். v) நன்றியுணர்வு

பெருகும். w) கணவனின் மீது எல்லையற்ற அன்பு உருவாகும். x) கணவனின்

உறவுகள் மீதுள்ள கோபம் மறையும். y) குழந்தைகளின் மீதான வதைப்பு

குறையும். z) அதோடு ஆயுளும் கூடும்.

ஆகவே, “கல வியுள்ள காலம் முட்டும் உடம்புக்குள்ளே சிக்கல்

இல்லே” என்று பாடல் எழுதிய கவிஞன் திரைத் துறைக்குள் வாழ்ந்து

கொண்டிருக்கும் ஒரு ஞானி.

பாலின்பங்கள் பெண்ணுக்குத் தான் மிக மிக அதிகம். அதே போல இன்பக்

கிளர்ச்சியும் பெண்ணுக்குத் தான் பத்து மடங்கு அதிகம். அதாவது,

பெண்ணுக்கே உணர்ச்சிகள் அதிகம் என்கிற பாடல் வரி சொல்லும் செய்தி

உண்மையே. அதே போல் உடல் நல, மன நல நன்மைகளும் பெண்ணுக்கே

அதிகம். பெண் பெற்றுள்ள பல அற்புத வரங்களில் இவையும் அடக்கம்.

ஆனால், எந்த இன்பம் நிகழ்ந்தாலும், பாலுறுப்புக்கும் அதற்கும் சம்பந்தம்

இல்லை. பாலுறுப்பு கருவி மட்டுமே. மூளை என்கிற பேரரசி தான் இன்பங்களை

அனுபவிக்கிறாள்.

மூளையைக் கோமா நிலையில் வைத்து விட்டு, எங்கே எதைச் செய்தாலும்,

எந்த இன்பத்தையும் உடலால் உணர முடியாது. அறுவை சிகிட்சை கூட

செய்யலாம். வலி தெரியாது. ஆனால், மூளை என்கிற பேரரசி நலமாக

இருக்கிறாள். அதனால் இன்பத்தின் அளவிற்கேற்ப அவள் மகிழ்ச்சியடைகிறாள்.

அந்த மகிழ்ச்சிக்கேற்ப ஆனந்தமான பல உத்தரவுகளை இடுகிறாள்.

அதனால், மூளையில் பல வேதிகள் சுரக்கின்றன. அந்த வேதிகள் தான்

பேரரசியின் தூதுவர்கள். உடலிலுள்ள அனைத்து சக்தி மையங்களுக்கும்

பேரரசியின் உத்தரவைக் கொண்டு செல்கின்ற தபால்காரர்கள்.

சக்தி மையங்கள் என்பவை உடலின் பல பகுதிகளில் உள்ள சக்கரங்கள்,

நவீனமாகச் சொன்னால் சுரப்பிகள். இவை தான் உடலின் ஒவ்வொரு பகுதியை

ஆளக்கூடிய, பராமரிக்கக் கூடிய சிற்றரசர்கள்.

உதாரணமாக, உச்ச கட்ட இன்பம் நிகழும் போது சுரக்கும் ஒரு வேதி அந்த

இன்பத்தை நிகழ்த்திய ஆணின் மீது கண் மூடித்தனமான அன்பை

உருவாக்குகிறது. இனியொரு வேதி நுண்ணறிவை உருவாக்குகிறது. மற்றொரு

வேதி மனதைச் சாந்தப் படுத்துகிறது. வேறொரு வேதி ஆழ்ந்த உறக்கத்தை

வரவழைக்கிறது.

புனித சக்கரம் என்று அழைக்கப் படுகின்ற ஸ்வாதிஸ்தான சக்கரம் தான்

பாலியல் சுரப்பியை இயக்கிக் கொண்டிருப்பது. பாலியல் சுரப்பி தான் ஆத்திரம்,

கோபம், வருத்தம், கவலை போன்ற உணர்ச்சிகளை உருவாக்கக் கூடிய

வேதிகளைச் சுரக்கிறது. அது அடிவயிற்றில் அமைந்துள்ளது. உணர்ச்சிகரமாகச்

சண்டையிடச் செய்வதும் கூட இதே சுரப்பியே.

அதாவது, மனைவியை எந்த அளவிற்குப் போகப் பொருளாகக் கணவன்

நடத்துகிறானோ, அந்த அளவிற்கு கோபத்தை உருவாக்கும் வேதியை இந்த

பாலியல் சுரப்பி சுரந்து விடும். பெண்ணுக்கே இது தெரியாது. தெரிந்தாலும்

சுரக்காமல் தடுக்க முடியாது.

அதனால், சுரந்து விட்ட அந்த வேதியின் வினையால், கணவனுடன் வம்புச்

சண்டை செய்து கொண்டிருப்பாள். ஆகவே, இராட்சசியாக, பயங்கரமான

பிடாரியாக இருக்கிற ஒவ்வொரு பெண்ணும் பரிதாபத்திற் குரியவள்.

அனுதாபத்திற்குரியவள்.

ஏனெனில், இன்பத்திற்கென்றே வழங்கப் பட்ட ஒரு உடலுறுப்பு,

சவக்குழிக்குச் செல்லும் வரை கணவனால் தீண்டப்படாமலே இருப்பதால் தான்,

மனைவியின் புத்தி பேதலிக்கிறது. அதனால், கோபம், எரிச்சல், வருத்தம்,

ஏமாற்றம், விரக்தி, வெறுப்பு, ஆற்றாமை போன்ற உணர்ச்சிகள் உருவாகிறது.

அதனால் கணவன் எதைச் செய்தாலும், அதில் ஒரு குறையைக் கண்டு

பிடித்து, அவனோடு வாதிடும் போக்கு மனைவியின் இயல்பாகி விடுகிறது.

இதைக் கட்டுப் படுத்த முடியாது. உளவியல் கற்றவர்களுக்கு இது தெரியும்.

ஆனால், மேலே சொல்லப் பட்டதைப் போன்ற உச்ச கட்ட இன்பம் நிழ்ந்து

விட்டால், நிலைமை மாறி விடும். மூளை அன்பு வேதியைச் சுரந்து விடும்.

அதனால் வீடே சொர்க்கமாகி விடும். கணவனின் வாழ்வில் முதலிரவுகள் அடிக்கடி

வந்து கொண்டேயிருக்கும்.

ஏனெனில், பெண்ணுக்குரிய பாலின்பங்களை வித விதமாக வழங்கக் கற்றுக்

கொள்ளும் ஆணுக்கு, வேண்டிய மட்டும் கிடைப்பது மட்டுமல்லாமல், விரும்பும்

வகையில் எல்லாம் பாலின்பம் கிடைத்துக் கொண்டேயிருக்கும். அதனால்,

அவனுடைய ஆயுள் கூடும்.

அதாவது, மாரடைப்போ, புற்றுநோயோ வந்து அற்பாயுளில் நிரந்தர

விடைபெறும் கொடுமை தவிர்க்கப் படும். சாலை விபத்துக்கள் மட்டுமின்றி,

பொருளாதார விபத்துக்கள் கூட எளிதில் நேராது.

இவை தான் மனைவிக்குரிய உச்ச கட்டப்பாலின்பங்கள் நிகழ்வதால் ஏற்படக்

கூடிய நன்மைகள்.

இன்பங்களை வழங்கிட ஒவ்வொரு ஆண் மகனாலும் முடியும்

பாலின்பங்கள் அனைத்துமே தெய்வீகப் பரிசுகள். ஆனால், ஒவ்வொன்றும்

அதனளவில் வித்தியாசமானவை, மழைக்காலத்தில் வானில் ஒற்றை மின்னலும்

ஏற்படுவது உண்டு. வானம் முழுவதும் பரவிய நிலையில் நெளி மின்னலும்

ஏற்படுவது உண்டு. மின்னலின் தரத்திற்கேற்ப வானில் ஒளி பிறக்கிறது.

உடலில் ஏற்படுகின்ற உச்சகட்ட பேரின்பப் பரவச நிலையும் மேற்கண்ட

மின்னல்களைப் போன்றதே. அடிவயிற்றைச் சுற்றி மட்டும் நிகழ்வது ஒற்றை

மின்னல், உடலின் பாதம் முதல், தலைமுடி வரை இன்பத் துடிப்பை பரவச்

செய்வது நெளி மின்னல், இரண்டுமே மனதைக் கிறங்கடித்து, இதயத்தைத்

திறக்கும் சக்தியுடையவை.

எனினும், நெளிமின்னல் மிகவும் ஆழமான இன்பத்தைத் தர வல்லது. இந்த

மின்னல்களை ஆணின் உடலிலும் சரி, பெண்ணின் உடலிலும் சரி திட்டமிட்டு

உருவாக்க முடியும்.

ஒற்றையொளியுடன், ஒற்றையொலியுடன் வெடிப்பது ஒருவகை வெடி. இது

விநாடியில் வெடித்து விடும், செல்லும் போது ஒரே வெடியாகச் சென்று, வெடிக்கத்

துவங்கிய பின் நூற்றுக்கணக்கான சிதறல்களாகப் பிரிந்து வானம் முழுவதும் பரவிய

வகையில் வெடிப்பது மற்றொரு வகை வெடி. இது வெடித்து முடிய கூடுதலான

நேரத்தை எடுத்துக் கொள்ளும். அதனால் வானம் கூடுதலான வெளிச்சத்தைப்

பெறும்.

இந்த இரண்டு வெடிகளில் எந்த வெடி வேண்டுமோ அந்த வெடியைத்

திட்டமிட்டு வெடிக்கச் செய்ய முடியும், எந்த வயதிலும் பெண்ணுக்குரிய

இன்பங்களை தவறாமல் வழங்க ஒரு ஆண் மகனால் முடியும்.

நீரழிவு வியாதி, இரத்த அழுத்தம், தொந்தி, அதிக உடல் எடை, லிங்கத்தில்

வீரியமின்மை போன்ற எந்தப் பிரச்சினை இருந்தாலும் மனைவிக்குரிய

இன்பங்களை திட்டமிட்டு வழங்க ஒரு கணவனால் முடியும்.

ஓரினச் சேர்க்கையில் அனுபவமுள்ள ஒரு பெண் தன் இணையாக உள்ள

பெண்ணுக்கு வழங்கும் இன்பத்தை, எந்தவொரு ஆண் மகனாலும் வழங்க

முடியாது.

ஆனால், ஓரினச் சேர்க்கையில் ஈடுபடும் பெண்களிடம் ஆணிடமுள்ள

லிங்கம் இல்லவே இல்லை. செயற்கையான சாதனங்கள் எதையும் அவர்கள்

உபயோகிப்பதுமில்லை.

அதே போல, ஒரு திருநங்கை ஆணுக்குத் தரக்கூடிய இன்பத்தை

எத்தகைய பெண்ணாலும் வழங்க முடியாது. இத்தனைக்கும், பெண்ணிடம்

உள்ள பால் மண்டலம் திருநங்கையிடம் இல்லை.

மேற்கண்ட தகவல்களிலிருந்தே எப்படிப்பட்ட ஆடவனாலும்

பெண்ணுக்குரிய உச்சகட்டப் பாலின்பங்களைத் தவறாமல் வழங்க முடியும்.

மனைவியை போகப் பொருளாகப் பயன்படுத்தத் தேவையில்லை என்கிற தகவல்

தெளிவாகப் புரிகிறதல்லவா?

இந்தப் புரிதல் ஏற்பட்டால் தான் உரிய அறிவைத் தேடிப் பெறுகின்ற தாகம்

பிறக்கும்.

எப்படிப்பட்ட இன்பத்தைப் பெண்ணின் உடலில் நிகழ்த்த வேண்டும்? உயிர்

மின் காந்த அலைகளை எந்த அளவிற்கு உடலில் பரவி தவழ செய்ய வேண்டும்

என்பதை முன்கூட்டியே முடிவெடுத்து, அந்த இன்பத்தை தன் திட்டப்படி

வழங்கிட, தந்த்ரா ஞானம் கற்றுத் தருகின்ற நுணுக்கங்களைப் பயன்படுத்தினால்

போதும், எந்தவொரு கணவனாலும் தன் மனைவிக்குரிய பாலின்பங்கள்

அனைத்தையும் ஒன்று விடாமல் வழங்க முடியும்.

தந்த்ரா இமயமலையில் தோன்றிய ஞானம், தாவோ ஞானியரால்

மெருகேற்றப்பட்ட ஞானம். பேரரசர்களும், ரிஷிகளும், குருமார்களும்,

பயன்படுத்திய ஞானம்,

பெண்ணுக்குரிய இன்பத்தை வழங்கி அவளது மனநலம் காப்பதில் ஒரு போதும் தோல்வியடையாத ஞானம்.

பெண்ணின் உடலில் உச்சகட்டப்பாலின்பத்தை உருவாக்கி, மனைவியைப்

பேரானந்தப் பரவச் வெளிக்குள் அழைத்துச் சென்று, குடும்ப வாழ்க்கையைச்

சொர்க்கமாக்கிக் கொள்வதற்கான ஞானத்தின் திரை இதோ விலகுகிறது.

நிம்மதியான இல்லறத்திற்கான நெடுஞ்சாலை, தெளிவான வழிகாட்டுதலோடு

உங்களுக்காகத் திறக்கப் படுகிறது.

அந்த நெடுஞ்சாலைக்குள் நுழைவதற்கான முதற் தகுதி மிகச் சிறந்த

கணவனாக இருப்பதல்ல, கணவன் என்பவன் ஆணாதிக்கவாதி, இன்பத்திற்கான

ராஜ பாட்டையும் சரி, குறுக்கு வழியும் சரி, ஆதிக்க வாதிகளுக்கு ஒரு போதும்

திறப்பதில்லை,

காதலனாக மாறும் கணவனுக்கு மட்டுமே கதவுகள் திறக்கப் படும். இது

தான் பேரின்பத்தின் மாளிகைக்குள் நுழைவதற்கான ஒரே தகுதி. மற்ற உரிமங்கள்

எதுவும் இன்பத்தின் ராஜ்ஜியத்தில் செல்லுபடியாகாது.

இதற்கான சூத்திரம்: தன்னை தம்பக் கரம் பிடித்த பெண்ணை

போகப் பொருளாகப் பயன்படுத்தாமல், உணர்வுகளும், உணர்ச்சிகளும்

கொண்ட உயிரினமாக மதித்து நடத்த விரும்பும் ஆண், பள்ளியறை

விளையாட்டுக்களின் போது, காதலனாகத் தான் நடந்து கொள்ள

வேண்டுமே தவிர, மறத்தம் கூடக் கணவனாக நடந்து கொள்ளக் கூடாது.

ஏனெனில், காதலனிடம் பெண்ணுக்கு அச்சமிருக்காது. ஆனால்,

கணவனிடம் கடுகளவாவது அச்சம் கொள்வாள். அச்சமும், ஆணின்

பாலின்பமும் பரம விரோதிகள். அதாவது அச்ச உணர்ச்சி தோன்றும்

பாலின்பமும் நெருங்கிய நண்பர்கள். ஆனால், அச்சமும் பெண்ணின்

போது, ஆணின் இன்பம் அதிவேகமாக நிகழ்ந்து விடும். ஆனால்,

பெண்ணின் இன்பம் நழுவிப் போய் விடும். மேலும், பெண் மனதில் அச்ச உணர்ச்சி இருக்கும் வரை, உச்ச கட்ட இன்பம் நிகழவே நிகழாது.

**2,** பெண்ணின் பாலுறுப்பு**.**

தமிழில் கந்து. ஞானிகளின் கூற்றுப் படி- மதன பீடம்
பெண்ணின் கிரீடம்; மலைக் குன்று;
சொர்க்கத்தின் திறவு கோல்; மலர் மொக்கு;
தாமரை மொக்கு: பேனா நிப்; செந்நிற
முத்து; உணர்வுகளின் கூடார் கூம்பு: காதற்
பொத்தான்; எரிமலைக் குன்று;
இத்தனையும் பெண்ணின் பாலுறுப்பிற்குரிய
புனை பெயர்கள்.
பெண்ணின் பாலுறுப்பு மத்தியில்
துளையில்லாத ஆண் குறி. அவ்வளவு
தான். ஆணின் லிங்கத்தை உட்செலுத்து
கின்ற குழாய் போன்று அமைந்துள்ள புனித
குகையோ (புணர்புழை; அல்லது
பெண்குறி.) அதற்கும் மேலே அமைந்துள்ள
சிறுநீர்த் துவாரமோ பெண்ணின் பாலுறுப்பு
அல்ல. அவைகளுக்கு மேலே உள்ள மதன
பீடம் தான் பெண்ணின் பால் உறுப்பு.







ஆணின் லிங்கத்தைப் போலவே, கூர் மழுங்கிய சிறிய குச்சி தான் பெண்ணின் பாலுறுப்பு. ஒரே வித்தியாசம். ஆணின்

லிங்கத்தின் மத்தியில் உள்ள சிறுநீர்க் குழாய்
பெண்ணின் பாலுறுப்பில் இருக்காது. ஒரு
பட்டாணி அளவில் தான் அது கண்ணுக்குத்
தெரியும். பாலின்பத்தை அனுபவிப்
பதற்காக மட்டுமே பெண்ணின் உடலில்
படைக்கப் பட்டுள்ள ஒரு தெய்வீகப்
பரிசு அது.

ஆனால், எண்பது சதவீ தப்
பெண்களின் தெய்வீகப் பரிசு எந்தவொரு
ஆடவனாலும், திட்டமிட்டுத் தீண்டப்
படாமலே, சவக் குழிக்குச் சென்று
கொண்டிருக்கிறது. எதற்காக இந்தப் பரிசு
பெண்ணுக்கு வழங்கப் பட்டிருக்கிறதோ,
அந்தப் பாலின்பம் ஒரே ஒரு முறை கூட
நிகழாமலே, அதாவது பாலுறுப்பின் கன்னித்
தன்மை கழியாமலே பெண் சவக் குழிக்குச்
சென்று கொண்டிருக்கிறாள். திருமணமும்,
திருமணத்தின் மூலம் பெண்ணின்
உரிமையாளனாக செயல்படக் கூடிய கணவனின் அறியாமையும் தான் இந்தக்
கொடூரத்திற்குக் காரணம் என்கிற தகவல் கூடப் பெரும்பாலான ஆண்களுக்குத்
தெரியாது.

இந்த நூலின் முதல் பாகத்தின் நான்காம் அத்தியாயத்தில் கணவர்களால்
குற்றம் சுமத்தப் பட்ட, இராட்சசியாக, பயங்கரமான பிடாரியாக இருப்பதாகச்
சொல்லப் பட்ட ஒவ்வொரு பெண்ணும் பரிதாபத்திற்குரியவள், ஏனெனில்,
இன்பத்தை அனுபவிக்க மட்டுமே அவளுக்கு வழங்கப் பட்ட ஒரு உடலுறுப்பு,
சவக் குழிக்குச் செல்லும் வரை அவளுடைய கணவனால் தீண்டப்

படாமலே

இருப்பதால் தான் அவளுடைய புத்தி பேதலித்துப் போய் இருக்கிறது.

மனம் உடலைப் பாதிப்பதைப் போன்றே, உடலில் நிகழாத பாலின்பம்

மனதைப் பாதித்தே தீரும். இது இயற்கை. ஆகவே ஒரு பெண் எவ்வளவு

பிடரியாக இருந்தாலும் அது ஒரு விளைவு மட்டுமே. அதை விளைவிப்பவன்

கணவன் என்கிற ஆண்.

ஆகவே, பிடாரியாக இருப்பது முதல் கணவனின் தலை மறைந்ததும்

அண்டை வீட்டுக்காரனோடோ, அல்லது அலுவலகத் தோழனோடோ கள்ளக்

காதலில் ஈடுபடுவதுமாகச் செயல்படும் பெண்ணைக் குறை கூறல் பேதமையிலும்

பேதமை. அவளை போகப் பொருளாகப் பயன்படுத்தி, மனதின் அடியாழத்தில்

பதுங்கிக் கிடந்த காம உணர்வைத் தூண்டி விடும் கயமையைச் செய்யும்

கணவனே உண்மையான குற்றவாளி.

பெண்ணின் பாலுறுப்பு தீண்டப் படாததே ஒரு பெண்ணைப் பிடாரியாக

மாற்றுகிறது. இந்தத் தகவல் தான் இந்த நூலின் முதல் பாகத்தில் பகிர்ந்து

கொள்ளப்பட்ட தகவல்களுக்கான நிரூபணம்.

எந்தக் குழந்தையும் கருவாக உருவாகும் போது, பெண் குழந்தையாகவே

உருவாகிறது. குழந்தை ஆணாக மாறும் போது, அதன் ஆண் குறி வளர்ந்த

பெரிதாகிறது. அதே குழந்தை தொடர்ந்து பெண்ணாகவே கருவறைக்குள் வளரும்

போது, சினைப்பை, கருப்பை, பெண்ணுறுப்பு போன்ற உள்ளுறுப்புக்கள்

வளர்வதோடு, பாலுறுப்பின் வெளிப்புற வளர்ச்சி நின்று விடுகிறது. ஆனால்,

உட்புறமாக அதன் வளர்ச்சி தடைப் படுவதில்லை. அதனால் பெண்ணின்

பாலுறுப்பு உடலுக்குள் அடங்கியதாகவே இருக்கிறது, அதே சமயத்தில் தேவையே

இல்லாத நிலையில் ஆணுக்கும் மார்புக் காம்புகள் இருக்கின்றன.

பணிகளைப் பொறுத்த அளவில் கழிவுகளை அகற்றுதல், இன்பம் துய்த்தல்,

பெண்ணுக்குரிய உயிரணுக்களை வழங்குதல் மற்றும் உடல் நலம் குறித்து முன்

கூட்டியே எச்சரிக்கின்ற முன்னறிவிப்பாளனாகச் செயல்படுதல் என

ஆணுறுப்பிற்கு பல பணிகள் உள்ளன.

ஆணின் பாலுறுப்பு தன் விரைப்புத் தன்மையை இழக்கிறதென்றால், அது

வியாதியின் அறி குறியாக இருக்கலாம், இதய நோய், இரத்த நாளங்கள் சார்ந்த

நோய் மற்றும் புற்று நோய், நீரிழிவு போன்ற எதேனும் ஒரு நோய் உடலில்

உருவாகும் போது, ஆணின் பாலுறுப்பு தன் விரைப்புத் தன்மையை இழப்பதன்

மூலம், முன் கூட்டியே தெரிவிப்பதாக மருத்துவ அறிஞர்கள் கூறுகிறார்கள்.

பெண்ணின் பாலுறுப்பிற்கோ இன்பத்தைத் துய்ப்பது மட்டுமே ஓரே

பணி. மனித உடலில் இன்பத்தை அனுபவிப்பதற்கென்றே படைக்கப்

பட்டுள்ள ஒரே உறுப்பு பெண்ணின் லிங்கம் மட்டுமே,

மேலும், மரணம் வரை தளராத ஒரே உறுப்பும் பெண்ணின் லிங்கமே.

வயதாக ஆக வளர்ந்து கொண்டே இருக்கும் உறுப்பும் அதுவே. அதாவது, பிறக்கும்

போது இருந்ததை விட, பருவமடையும் போது அதன் அளவு இரு மடங்காகி விடும்.

பருவமடையும் போது இருப்பதை விட, பெண்ணின் முப்பது வயதில் நான்கு

மடங்கு பெரிதாகி விடும். அதன் பிறகும் கூட பெரிதாகிக் கொண்டே இருக்கும்.

அதனால் எப்போதும் பலவீனம் அடையாது.

ஆனால், ஆணின் லிங்கம் தன் வளர்ச்சிப் பயணத்தை பதினெட்டு

வயதோடு நிறுத்திக் கொள்ளும். அதிலிருந்து தன் வலுவை இழக்கும் பயணத்தைத் துவக்கி விடும்.

ஆணின் லிங்கத்தில் நான்காயிரம் நரம்புகள் மட்டுமே உள்ளன. ஆனால்,

பெண்ணின் லிங்கத்தில் எட்டாயிரம் நரம்புகள் அடங்கியுள்ளன. பெண்

லிங்கத்தின் தலை மட்டுமே சிறியது. உடலுக்குள் மறைந்திருக்கும் கால்களும்,

வயிரும், அடித்தளமும் பெரியவை. ஆண் லிங்கத்தின் தலையும் உடலும்

பெரியவை. உள்ளே மறைந்திருக்கும் பகுதிகள் சிறியவை.

இன்பம் நிகழ்வதில் மாற்றம் இல்லை

இன்பத்தை அனுபவிப்பதில் எவ்வித மாற்றமும் இல்லை. இரண்டுமே

உராய்வின் மூலம் இன்பத்தை உருவாக்கக் கூடியவை. ஆணின் உறுப்பில் ஏற்படும்

உராய்வைப் போன்றே பெண்ணின் பாலுறுப்பிலும், தலை, கால்கள், அடிவாரம்

என எந்தப் பகுதியில் உராய்வு ஏற்பட்டாலும், பெண்ணுக்குரிய உச்ச கட்ட

இன்பம் நிகழ்ந்து விடும்.

ஆனால், இன்பம் நிகழ்வதற்காக எடுத்துக் கொள்ளப்படும் நேரத்தில்

வித்தியாசம் உண்டு. தளர்வான நிலையில் இருந்தது முதல் தொடர்ச்சியாக ஐந்து

நிமிடங்கள் வரை ஆணின் லிங்கத்தின் மீது உராய்வு ஏற்பட்டால், ஆணின்

இன்பம் நிகழ்ந்து விடும். ஆனால், பெண் பாலுறுப்பின் மீது அதிக உராய்வு

தேவை.

ஆணின் பாலுறுப்பு எலும்பில்லாத வெறும் நரம்புகளால் ஆன பகுதி.

ஆகவே, சாதாரணமாக பெரும்பாலான நேரங்களில், தளர்வாகவே இருப்பது தான்

அதன் இயல்பு. பாலுணர்வு தலை தூக்கும் போது தான் அது விரைப்படையத்

தொடங்கும். பாலுணர்வு கிளர்ந்தெழாத போது, தளர்வாக இருக்கும்

தன்மையுடன் அது படைக்கப் பட்டிருக்கிறது.

பாலுணர்வுக்குச் சம்பந்தமே இல்லாத அதிகாலை நேரத்தில் அது

விரைப்படைவது உண்டு. அதற்குக் காரணம் பாலுணர்விற்குக் காரணமான

வேதிப் பொருள் ஆணின் உடலில் அதிகாலை நேரத்தில் தான் அதிகமாகச்

சுரக்கும்.

இரண்டாவதாக, சிறுநீர்ப் பை நிரம்பும் போது, அதன் அழுத்தம் காரணமாக

ஆணின் பால் மண்டலத்தில் உள்ள நரம்புகள் அழுத்தப் படுகின்றன. அதனால்

பாலுறுப்பு விரைப்படைகிறது. சிறுநீர் கழித்ததும் இது தளர்வடைந்து விடும்.

இதே நிலையில் தான் பெண்ணின் பாலுறுப்பும் இருக்கிறது. அதாவது,

பாலுணர்வு கிளர்ந்தெழும் போது, அது விரைப்படைவதும், அவ்வாறு பாலுணர்வு

கிளர்ந்தெழாத போது சுருங்கி விடுவதும் தான் பெண்ணின் உடலிலும் நிகழ்கிறது.

ஆனால், சிறுநீர்ப் பை நிரம்பும் போதெல்லாம் பெண்ணின் பாலுறுப்பு

விரைப்படைவதில்லை.

தளர்வான நிலையில், அதாவது சாதாரண நிலையில் இருக்கும் போது,

ஆணின் பாலுறுப்பு தளர்ந்திருந்தாலும், வெளியில் தெரிகிற அளவிற்கு இருக்கிறது.

ஆனால், பெண்ணின் பாலுறுப்பு தளர்ந்திருக்கும் போது, அது முற்றிலும்

உடலுக்குள் போய் மறைந்து விடுகிறது. ஏனெனில், அது மிக மிகச் சிறியதாக

இருப்பதால், அது சுருங்கும் போது இவ்வாறு உள்ளே போய் விடுகிறது.

இன்பத்தை அனுபவிக்க மட்டுமே, பெண்ணின் பாலுறுப்பு

விரைப்படைகிறது. மற்ற நேரங்களில் தளர்ந்து போய், கண் விழிகள்

இமைகளுக்குள் மறைந்து கொள்வதைப் போல, அதற்கென்றுள்ள மூடிக்குள்

மறைந்து கொள்கிறது.

இந்த உறுப்பு விரைப்படையும் போது, இதன் மீது எந்தவொரு உராய்வு

ஏற்பட்டாலும் இன்பம் நிகழ்கிறது. அதாவது தொடர்ச்சியாக ஒரே மாதிரி இசைவு

மாறாமல் உராய்வு ஏற்பட்டால், பெண்ணின் உடலில் உச்ச கட்ட பாலின்பம்

நிகழ்ந்து விடும். எந்தப் பொருளால் உராய்வு ஏற்பட்டது என்பது பொருட்டல்ல.







ஆகவே ஆணின் உடலிலும் சரி. பெண்ணின் உடலிலும் சரி உச்சகட்ட பாலின்பம் நிகழ வேண்டுமானால், இருவருடைய பாலுறுப்புகளும்

விரைப்படைய வேண்டியது மிக மிக அவசியம்.
அவ்வாறு விரைப்படைந்தால் தான் அவற்றின் மீது
உராய்வு ஏற்பட முடியும்.
ஆணின் பாலுறுப்பை எந்த நேரத்திலும்
நேரிடையாகத் தொடலாம். ஆனால், பெண்ணின்
பாலுறுப்பை அப்படித் தொட முடியாது. தொட்டால்
வலிக்கும். பெண்ணின் ஆடை பட்டால் கூட
வலிக்கும். அதனால் தான் கண்ணுக்கு இமைத்
திரையை வழங்கியிருப்பதைப் போல, பெண்ணின்
பாலுறுப்பிற்கு இயற்கையே ஒரு மூடியை
வழங்கியிருக்கிறது.
பாலுணர்வால் உந்தப் பட்டுள்ள வேளையில்
மட்டும் தான் அதைத் தீண்ட வேண்டும். அதற்கு முன்
தொட்டால், பெண்ணின் பாலுணர்வே கூட அடங்கிப்
போய் விடும். எரிச்சலும், கோபமும் தான் பெண்ணுக்கு
ஏற்படும்.
ஆணுக்குப் பிரச்சினை இல்லை. நினைத்தாலே
விரைப்படைந்து விடும். ஏனெனில், பாலுணர்வை
ஏற்படுத்தக் கூடிய வேதிப்பொருள் பெண்ணின்
உடலில் சுரப்பதைப் போலப் பத்து மடங்கு கூடுதலாக
ஆணின் உடலில் சுரக்கிறது. மேலும், ஆணின்
பாலுறுப்பில் 4000 நரம்புகள் மட்டுமே உள்ளன.
ஆகவே, அந்த நரம்புகளுக்குள் இரத்தம் பாய்ந்தால்
போதும். அது விரைப்படைந்து விடும்.
பெண்ணின் நிலை அப்படியில்லை. பெண்ணின்
பாலுறுப்பிலோ 8000 நரம்புகள் இருக்கின்றன.
ஆகவே, 8000 நரம்புகளிலும் இரத்தம் பாய வேண்டும். அப்போது தான்
அது
விரைப்படையத் தொடங்கும். மேலும் பெண்ணின் பாலுறுப்பு
உடலுக்குள்

இருப்பதால், ஆணின் உறுப்பைப் போன்று அது உடனே விரைப்படைய முடியாது.

விரைப்படைந்து விட்டதா என்பதைக் கண்ணால் பார்ப்பதன் மூலம்,

ஆணிடம் கண்டு பிடிப்பதைப் போன்று பெண்ணிடம் கண்டு பிடிக்க முடியாது.

ஏனெனில், பெண் பாலுறுப்பின் வெளியில் தெரியும் பகுதி அந்த அளவிற்குச்

சிறியது.

ஆகவே பெண்ணின் பாலுறுப்பு விரைப்படைந்து உடலுக்குள்ளிருந்து

வெளிய தலை நீட்ட பல வேலைகளைச் செய்ய வேண்டும். குறிப்பாகப்

பெண்ணின் பாலுணர்வை அதிக அளவில் கிளர்ந்தெழச் செய்ய வேண்டும்.

தன்னிலை இழக்கும் அளவிற்கு பாலுணர்வால் பெண் உந்தப் படும் போது தான்,

பாலுறுப்பு விரைப்படையத் தொடங்கும்.

அவ்வாறு விரைப்படைந்து, உடலிலிருந்து வெளியே தலை நீட்டும்

போது தான், அதில் உராய்வு ஏற்பட முடியும். அவ்வாறு உராய்வு ஏற்பட்டால்

மட்டுமே, பெண்ணின் உடலில் இன்பம் நிகழ முடியும். ஆகவே ஆணின்

பாலுறுப்பைப் போன்றே பெண்ணின் பாலுறுப்பும் விரைப்படைந்து,

உடலிலிருந்து, வெளியே தலை நீட்ட வேண்டியது மிகவும் முக்கியம்.

புனித குகையின் உச்சியில் பெண் லிங்கத்தின் தலை இருக்கிறது. இரு

புறங்களிலும் பெண் லிங்கத்தின் வயிற்றுப் பைகள் அமைந்துள்ளன. அதற்கு

அடுத்ததாகக் கால்கள் அமைந்துள்ளன. புனித குகையின் சுற்றுப் புறம் முழுவதும்

பெண் லிங்கத்தின் நரம்புகளால் சூழப்பட்டுள்ளன. அதனால், புனித குகையைச்

சுற்றியுள்ள பெண் லிங்கத்தின் கால்கள், வயிறு மற்றும் பெண் லிங்கத்தின்

அடித்தளம் என அனைத்துப் பகுதிகளும் தீண்டப்பட்டால் தான் பெண்ணின்

பாலுறுப்பு உயிர்த்தெழத் தொடங்கும்.

1) “ஒய்” என்கிற ஆங்கில எழுத்தைத் small letter தலை கீழாகப்

போட்டதைப் போலப் பெண்ணின் பாலுறுப்பு அமைந்திருக்கிறது. 2) அது

உயிர்த்தெழ நீண்ட நேரத்தை எடுத்துக் கொள்கிறது. 3) ஆணின் இயக்கமோ சில

நிமிடங்களில் முடிந்து விடுகிறது. 4) அதனால், பெண்ணின் பாலுறுப்பு

உயிர்த்தெழும் முன்பே ஆணின் இயக்கம் முடிந்து விடுகிறது. 5) அதனால்,

பாலுறவில் ஈடுபடும் போது பெரும்பாலும் ஆணின் லிங்கம் பெண்ணின்

லிங்கத்தின் தலையைத் தீண்டுவதேயில்லை. 6) மேலும், புனித குகையின் இரு

புறங்களிலும் அமைந்துள்ள பாலுறுப்பின் கால்களையும் தீண்டுவதில்லை.7)

பெண்ணின் பாலுறுப்பின் அடிவாரத்தை மட்டுமே ஆணின் லிங்கம் தீண்டுகிறது.

8) அந்தப் பகுதியோ பெண் பாலுறுப்பின் தலையைப் போல நுண்ணிய

உணர்வுகள் கொண்டதல்ல. 9) அதனால், பெண்ணுக்குரிய உச்சகட்ட இன்பம்

நிகழ்வதேயில்லை. 10) அதனால் தான் மனைவி பாலுறவில் ஈடுபட மறுக்கிறாள்.

மேற்கண்ட அனைத்துப் பணிகளையும் எந்த ஆணின் லிங்கத்தாலும்

ஒருங்கே செய்ய முடியாது. அதனால் தான் ஆணின் லிங்கத்தை மட்டுமே

பயன்படுத்தி பெண்ணுக்குரிய பாலின்பங்கள் அனைத்தையும் வழங்கி

விட முடியாது என்று தந்த்ரா மற்றும் தாவோ ஞானிகள் கூறுகிறார்கள்.

இன்றைய நவீன விஞ்ஞானமும் அதை ஏற்றுக் கொள்கிறது. ஒவ்வொரு

ஆணும் இதை மனதில் பதித்துக் கொள்வது தான் பெண்ணுக்குரிய இன்பத்தை

வழங்குவதற்கான முதற்படி. ஆகவே, கொடுக்கப் பட்டுள்ள படங்களைப்

பார்த்துத் தெளிவாகப் புரிந்து கொள்ளவும்.










ஆணின் முதற்பணி என்னவாக இருக்க வேண்டும்**?**

ஆகவே மனைவிக்கு, நிச்சயமாக, உறுதியாக, இன்பத்தை வழங்கியே ஆக

வேண்டும், போகப் பொருளாகப் பயன்படுத்தக் கூடாது என விரும்புகிற ஆணின்

முதற்பணி இப்போது என்னவாக இருக்க வேண்டும்?

பெண்ணின் பாலுறுப்பு விரைப்படைந்து உடலுக்குள்ளிருந்து வெளிய தலை

நீட்டபல வேலைகளைச் செய்ய வேண்டும். குறிப்பாகப் பெண்ணின் பாலுணர்வை

அதிக அளவில் கிளர்ந்தெழச் செய்ய வேண்டும். தன்னிலை இழக்கும் அளவிற்கு

பாலுணர்வால் பெண் உந்தப் படும் போது தான், பாலுறுப்பு விரைப்படையத்

தொடங்கும்.

ஆகவே மனைவியின் பாலுணர்வை அவள் தன்னிலை மறக்கின்ற அளவிற்கு

உருவாக்குவதாக இருக்க வேண்டும். இது தான், ஒரு கணவன் பாலுறவில்

ஈடுபட விரும்பும் போது, செய்ய வேண்டிய முதற்பணி,

சரி. இதை எவ்வாறு உருவாக்குவது? மனைவியின் உடலில், மிதமிஞ்சிய

பாலுணர்வை உருவாக்குவது எப்படி?

முதலில், பெண்ணின் உடலில், மித மிஞ்சிய பாலுணர்வை உருவாகாமல்

தடுக்கக் கூடிய காரணிகள் எவையென்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

பெண்ணின் உடல் நலமும், மன நலமும் தான் பாலுணர்வை

உருவாக்குவதிலும், உருவாகாமல் தடுப்பதிலும் பங்காற்றக் கூடியவை. இதில்

உடல் நலத்தைப் பற்றிக் கண்ணால் பார்த்தே கூடத் தெரிந்து கொள்ள முடியும்.

ஆனால், மன நலத்தை அவ்வாறு கணிக்க முடியாது.

ஏனெனில், யாருடைய மனதில் என்ன வலி இருக்கிறது என்பதை எளிதில்

கண்டு பிடித்து விட முடியாது. ஆகவே, மனைவியின் மனதில் என்ன இருக்கிறது

என்பதைக் கண்டு பிடிக்கின்ற கடினமான ஆராய்ச்சியை விட்டு விட்டு, கடந்த

கால வலிகள், மற்றும் எதிர்கால அச்சங்கள் என அனைத்திலிருந்தும் ஒட்டு

மொத்தமாக மனைவியின் மனதை விடுபடச் செய்ய வேண்டும்,

அதற்கான ஒரே வழி மனைவியின் மனதை இக்கணத்திற்குக்

கொண்டு வர வேண்டும்.

ஆகவே, எடுத்தவுடனே லிங்கத்தை மட்டுமே பயன்படுத்தி,

பெண்ணுக்குரிய

பாலின்பங்கள் அனைத்தையும் நிகழ்த்த முயற்சிப்பது, வெறும் புல்லை மட்டும்

வைத்துக் கொண்டு இயந்திரத் துப்பாக்கியோடு வருபவனை வெல்ல

முயற்சிப்பதைப் போன்றது. வெற்றி சாத்தியமே இல்லை. ஏனெனில்,

பெண்ணுக்குரிய உச்ச கட்ட இன்பம் நிகழும் வரை. ஆண் லிங்கத்தால் பெண்

லிங்கத்தின் மீது தொடர்ச்சியாக, ஒரே மாதிரியான உராய்வை ஏற்படுத்த முடியாது.

ஆணின் மதனமேடு படுவதன் மூலம் தான் உராய்வை ஏற்படுத்த முடியும்.

அவ்வாறு ஆணின் மதன மேடு பெண் லிங்கத்தின் மீது அழுத்தமாக உராய

வேண்டுமானால், ஆணின் லிங்கம் முழுமையாக உட்செலுத்தப் பட வேண்டும்.

அவ்வாறு லிங்கம் முழுமையாக உட்செலுத்தப் படும் போது, ஆணுக்குரிய

இன்பம் நிகழ்ந்து விடும்.

நிகழவுள்ள ஆணின் இன்பத்தைத் தடுப்பதற்காக, ஆணின் இயக்கத்தை

நிறுத்தலாம், ஆனால் அவ்வாறு நிறுத்தும் போது, பெண்ணின் உடலில்

கிளர்ந்தெழத் தொடங்கியிருந்த இன்ப நிலை பின்னோக்கிச் செல்லத் துவங்கி

விடும். உயிர்த்தெழுந்திருந்த பெண்ணின் மதன பீடம் அடங்கத் தொடங்கி விடும்.

கிளர்ச்சி நிலைக்கு மீண்டும் பெண்ணைக் கொண்டு வர, ஆண் மேலும் அரை

மணி நேரம் போராட வேண்டிய நிலை தான் ஏற்படும். ஆகவே லிங்கத்தை

மட்டுமே பயன்படுத்தி பெண்ணுக்குரிய உச்சகட்ட இன்பத்தை வழங்க முடியாது.

ஆகவே, முன் விளையாட்டுக்கள் என்பவை மிகவும் முக்கியம். அதாவது.

எந்த அளவிற்கு விலையுயர்ந்த வாகனமாக இருந்தாலும் எரிபொருள்

இல்லாமல்

அந்த வாகனத்தால் இயங்க முடியாது. அதேபோல, மனதை மயக்கக் கூடிய

முன்விளையாட்டுக்கள் இல்லாமல், எப்படிப்பட்ட பெண்ணுக்கும் உச்சகட்ட

இன்பம் நிகழாது. இன்பம் நிகழாத பாலுறவால் அன்பு உருவாகாது.

இதற்கான சூத்திரம், இன்பத் துய்ப்பு என்பது ஒரு கேளிக்கை

விளையாட்டு மட்டுமல்ல, ஒவ்வொரு இன்பத் துய்ப்பும் ஒவ்வொரு

விளைவைக் கொடுத்து விட்டே செல்கிறது. அந்த வளைவை

அன்பாகவோ, வெறுப்பாகவோ உருவாக்கிக் கொள்வது கணவனின்

கையில் தான் இருக்கிறது.

## **3.** ஆணின் பாலுறுப்பு

லிங்கம் சாயும் நாளன்று ஆணின் மரண நாள் குறிக்கப் படுகிறது.- அனங்க ரங்கா

தமிழில் உயிர்நிலை. ஞானிகளின் படி, லிங்கம்

பரஸ்பர அன்பு, மரியாதை, நம்பிக்கை, போன்றவை தான், தம்பதியிடையே

நிலவும் ஆரோக்கியமான உறவுக்கு அடையாளம். அவற்றைப்

புலப்படுத்துவதற்கான மிக எளிய வழி பாலுறவு.

ஆனால், மனைவியை போகப் பொருளாகப் பயன்படுத்தும் போது,

கணவனுக்குரிய பாலின்பத்தை தர மனைவி மறுக்கிறாள். இந்நிலை

தொடர்ச்சியாக நீடிக்கும் போது, ஆணின் லிங்கம் செத்துப் போகும்.

காட்டுப் பகுதியில் உள்ள ஒரு ஒற்றையடிப் பாதையைப் பாருங்கள்.

அடிக்கடி பயன் படுத்தப்படும் பாதை சுத்தமாக இருக்கும். அவ்வப் போது

பயன்படுத்தப் படும் பாதை புல் பூண்டு முளைத்து இரத்தம் வரக்கூடிய குழாய்களுக்கும் பொருந்தும்.

அதாவது பயன்படுத்தப் படாத ஆணின் லிங்கம் பாழடையும். ஒருக்கால்,

விரைப்படைந்தாலும் விரைவில் விந்தை வெளியேற்றி விடும்.

அதனால், தொடர்ச்சியாக மனைவியால் உதாசீனப் படுத்தப் படும்

கணவனின் லிங்கம் தன் விரைப்புத் தன்மையையும், வீரியத்தையும், எழுச்சியுடன்

செயல்படும் ஆற்றலையும் இழந்து விடும். இது இயற்கை. மாற்ற முடியாது.




லிங்கம் விரைப்புத் தன்மையை

இழக்கும் போது, ஆண் மகனால்

பாலுறவில் ஈடுபட முடிவதில்லை.

அதனால் இரவு நேரத்தில் அவன்

மாதுவை ஒதுக்கி விட்டு, மதுவோடு

உறவாடத் தொடங்கி விடுகிறான.

மனைவியை நெருங்குவதில்லை.

ஆனால், ஆணின் நிலைமை

மனைவிக்குத் தெரியாது. அதனால்,

தன்னுடைய கவர்ச்சி தான் குறைந்து

விட்டதென்றோ, அல்லது கணவனுக்குத்

தன் மீதிருந்த அன்பு குறைந்து

விட்டதென்றோ, அல்லது தன்னை ஒரு

மனிதப் பிறவியாகவே கணவன்

மதிப்பதில்லையென்றோ கருதத் தொடங்குகிறாள். அதனால் அவளுடைய

மனதில் தாழ்வு மனப்பான்மை ஏற்படுகிறது.

தாழ்வு மனப்பான்மை என்பது ஒரு மன நோய். ஆகவே மன நோயாளியாக

மனைவி மாறி விடுகிறாள். மன நோயாளிகளால் தன்னுணர்வோடு செயல் பட

முடியாது. அதனால், எப்போதும் சண்டையிடுபவளாக மனைவி மாறி விடுகிறாள்.

மேலும், லிங்கத்தின் விரைப்புத் தன்மையைப் பறிகொடுத்து விட்ட

கணவனை மனைவியால் ஆட்சி செய்ய முடியாது. ஏனெனில், மனைவியின்

தயவு அவனுக்கு இனிமேல் தேவையில்லை. மேலும், பாலுறவு இல்லாமல் போகும்

போதே, ஆணின் அன்பும் குறையத் தொடங்கி விடும். இது இயற்கை.

பெண்ணின் கால்களை விரித்தால் தான் ஆணின் இதயம் திறக்கும் என்று

ஒரு பழமொழி கூட இருக்கிறது. பெண்ணின் கால்கள் விரியாவிட்டால் ஆணின்

இதயம் திறக்காது என்கிற தகவல் இந்தப் பழமொழியின் பின்னால்

மறைந்திருக்கிறது.

இவ்வாறு கணவனை ஆட்சியும் செய்ய முடியாத போது, மனைவி

கோபமடைகிறாள். அந்தக் கோபமும் சண்டையில் தான் கொண்டு போய்

நிறுத்துகிறது.

அதைத் தான் ஒரு ஞானி இவ்வாறு கூறுகிறார். ஆணின் லிங்கம் வீரியம்

குறையாமல் இருக்கும் வரை, இல்லற வாழ்க்கை ஆனந்தமாக இருக்கும். லிங்கம்

சாயும் போது, இல்லற வாழ்க்கையின் ஆனந்தம் மட்டுமின்றி, ஆணின் சுய

மதிப்பும் பறி போய் விடும்.

லிங்கம் விரைப்புத் தன்மையை இழப்பது பொது விதி

‘லிங்கம் விரைப்புத் தன்மையை இழப்பது ஒரு பொது விதி. ஒவ்வொரு

ஆணையும் இந்தப் பிரச்சினை பாதித்திருக்கிறது.

விரைப்பே இல்லாமல் போய் விடுவது, விரைப்படைந்தாலும் வினாடிகளில்

தளர்ந்து விடுவது, யோனிக்குள் நுழையுமளவிற்கு முழு வீரியமின்றி தளர்வாக

விரைப்படைவது என மூன்று வகைகளில் ஆண் பாதிக்கப் படுகிறான்.

விரைப்புத்தன்மை இல்லாமல் போவது வியாதியின் அறிகுறியாகவும் இருக்கலாம்.

வியாதி இல்லாமலே கூட விரைப்புத் தன்மை இல்லாமல் போகலாம். இரண்டாவது

நிலைமைக்குக் காரணம் ஆணின் மனம்.

மது, புகையிலை, தூக்கமின்மை, கடன் தொல்லை, எதிர்பாராத

பொருளாதார வீழ்ச்சி, விரும்பும் போது பாலின்பம் கிடைக்காததால் ஏற்படக் கூடிய

மன அழுத்தம், கடினப் பட்டுப் போன தமணிகள், பலவீனமான சிரைகள், நரம்பு

மண்டல வியாதிகள், வியாதிகளுக்காக உட்கொள்ளப் படுகின்ற மருந்துகள்

போன்றவை லிங்கத்தின் விரைப்புத் தன்மையைப் பறித்துக் கொள்ளும் கயவர்கள்.

அதே போல, ஆபாசப் படங்களை அதிகமாகப் பார்க்கும் பழக்கமுடைய ஆணின்

லிங்கமும் விரைவில் விரைப்புத் தன்மையை இழந்து விடும்.

இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு காண முதலில் லிங்கத்தைப் பற்றித் தெரிந்து

கொள்ள வேண்டும். லிங்கம் என்பது நரம்புகளால் ஆன ஒரு உறுப்பு. இந்த

நரம்புகள் பலூனைப் போன்றவை. சாதாரண நேரங்களில் பலூன்கள் தளர்வாகவே

இருக்கும். காற்றால் நிரப்பப்பட்டால் அவை பெரிதாக மாறும். அதே போலத் தான்

லிங்கத்தின் நரம்புகள் சாதாரண நேரங்களில் தளர்வாகவே இருக்கும்.

ஆனால், கவர்ச்சியான நிலையில் ஒரு பெண்ணைப் பார்த்ததும் ஆணின்

மூளையில் நிகழும் அதிர்வுகளால் பாலுணர்வு கிளர்ந்தெழும். அப்போது, உடலின்

வேறு பகுதிகளில் பாய்ந்து கொண்டிருக்கக் கூடிய இரத்தம் லிங்கத்தை நோக்கி

வரும். அதனால் லிங்கத்தில் உள்ள நரம்புகள் அனைத்தும் இரத்தத்தால்

நிரப்பப்படும். அதனால், லிங்கம் விரைப்படையும்.




முழு வீரியத்துடன் லிங்கம் இருக்கும்

போது, ஒரு குச்சியை உடைப்பதைப் போல

லிங்கத்தையும் உடைத்து விடலாம். அந்த

அளவிற்கு விரைப்படையும்

தன்மையுடையது ஆணின் லிங்கம்.

பெண்ணின் லிங்கத்தை நுனிவிரல்களால்

மட்டுமே பிடிக்க முடியும். உடைக்க

முடியாது.




கவர்ச்சிகரமான ஒரு பெண்ணைக் கண்டதும் ஆணின் மூளையில் ஏற்படும் அதிர்வுகளை, ஏற்கெனவே மூளையில் அதிவேகமாக நடந்து கொண்டிருக்கும் வேறு எண்ணங்களின் வீச்சு தடுத்து விட்டால், ஆணுக்குப் பாலுணர்வை ஏற்படாது. அதனால் தான் இலட்சிய வாதிகள் பெரும்பாலும் காதலில் வீழ்வதில்லை.

அதே போல், மூளை பாலுணர்வால் தூண்டப் பட்டு விட்டாலும், லிங்கத்திற்கு செல்லும் நரம்புகளில் ஏதேனும் அடைப்பு இருந்தால், போதுமான இரத்தம் லிங்கத்தின் நரம்புகளை வந்தடையாது. அதனால், பாலுணர்வால் தூண்டப்

பட்டால் கூட, ஆணின் லிங்கம் விரைப்படையாது.

உதாரணமாக கடுமையான நீரழிவு

வியாதியால் பாதிக்கப் பட்டிருந்தால் லிங்கத்தின்

விரைப்புத் தன்மை பாதிக்கப் படும். ஆகவே, ஒரு

ஆணின் லிங்கத்தில் ஏற்படும் விரைப்புத்தன்மை

ஆணின் உடல் நலம், மற்றும் மனநலம் சார்ந்தது.

லிங்கம் எதனால் பாழ்பட்டுப் போயிற்று

ஒரு ஆணின் லிங்கம் எதனால் பாழ்பட்டுப் போயிற்று என்பதை ஒரு சிறிய

பரிசோதனையின் வாயிலாக எளிதாகக் கண்டு பிடித்து விடலாம்.

சரமாக விற்கப் படுகிற ஐந்தாறு தபால் வில்லைகளை வாங்கவும். இரவு

உறங்கச் செல்லும் முன், அந்தத் தபால் வில்லைகளை ஈரப்படுத்தி, லிங்கத்தைச்

சுற்றி வளையம் போல் ஒட்டிக் கொள்ளவும்.

ஒரு முறை தான் லிங்கத்தைச் சுற்ற வேண்டும். ஒன்றின் மீது மற்றொன்று

படாத வகையில் இரண்டு வளையங்களைக் கூட ஒட்டிக் கொள்ளலாம்.

தவறில்லை.

காலையில் விழித்தெழும் போது, கிழிக்கும் விதத்தில் துளையிடப்பட்ட

பகுதிகள் காரணமாக தபால் வில்லைகளால் செய்யப்பட்ட வளையம் துண்டிக்கப்

பட்டிருந்தால், உடலில் எவ்விதப் பிரச்சினையும் இல்லை.

அதாவது, ஒவ்வொரு ஆணின் லிங்கமும் தூக்கத்தின் போது

தன்னிச்சையாக விரைப்படையும். அவ்வாறு விரைப்படையும் போது அதன் மீது

ஒட்டப்பட்டுள்ள தபால் வில்லைகள் அவற்றிற்கு இடையே உள்ள துளைகள்

காரணமாகக் கிழிந்து விடும். ஆகவே, தபால் வில்லைகளால் செய்யப்பட்ட

வளையம் கிழிந்திருந்தால், விரைப்புத் தன்மை நிகழ்ந்திருக்கிறது என்று பொருள்.

ஆகவே, இரத்தக் குழாய்களில் பிரச்சினை இல்லை. உடல் குற்றவாளி

அல்ல,

ஆனால், அந்த வளையம் துண்டிக்கப் படாமலிருந்தால், உடனடியாக

மருத்துவரைப் பார்க்கவும், ஏனெனில், உடலில் பிரச்சினை இருக்கிறது. அது

உயிர்க் கொல்லி நோயின் துவக்கமாகவும் இருக்கலாம்.

தபால் வில்லைகள் கிழிந்திருந்தால், இங்கே மூளை தான் குற்றவாளி. மூளை

தான் லிங்கத்தின் விரைப்பைத் தடுத்துக் கொண்டிருக்கிறது. அதாவது

மூளையில் நிகழ்ந்து கொண்டிருக்கும் எண்ணப் போக்குவரத்து தான்,

லிங்கத்தைப் பாதித்துக் கொண்டிருக்கிறது.

எண்ணப்படி தான் ஒவ்வொரு மனிதனும் உருவாகிறான் என்பது பழமொழி

அது லிங்கத்துக்கும் பொருந்தும்.

மூளையில் நிகழ்ந்து கொண்டிருக்கும் எண்ண ஓட்டம் லிங்கத்தின்

விரைப்புத் தன்மையை, வீரியத்தன்மையை பாதிக்கக் கூடியது. உதாரணமாக,

உயிருக்கே அச்சம் நிறைந்த சூழலில் எப்படிப்பட்ட பேரழகியோடு தங்கினாலும்,

ஆணின் லிங்கம் விரைப்படையாது.

உடலின் இயக்கத்தை நிச்சயமாக மனம் பாதிக்கும்.

ஒரு ஆண் தன் மனைவியை போகப் பொருளாகப் பயன்படுத்தி

முடிக்கிறான், அந்த வேலை முடிந்ததும் மனைவி கேட்கிறாள். இதற்குத் தானா

இவ்வளவு தூரம் என்னை இம்சித்தாய்?

வாயால் கேட்கா விட்டாலும் மனைவியின் உடல்மொழி அந்தக் கேள்வியைக்

கேட்டு விடும், அல்லது ஆணின் மனசாட்சியே கூட இதைக் கேட்கக் கூடும்,

அதனால், மனைவி கண்டு கொள்ளா விட்டால் கூட, பாலுறவைப்பொறுத்த

வரை தன்னுடைய செயல்பாடு சரியில்லை என்கிற எண்ணம் அந்த ஆணின்

மனதில் கண்டிப்பாக உருவாகியே தீரும்,

இந்த எண்ணம் லிங்கத்தின் விரைப்புத் தன்மையை நிர்வகித்துக்

கொண்டிருக்கும் மூளையில் தான் பதிவாகும். அதன்பின், தன்னிடம் பதிவு

செய்யப்பட்ட தகவலின் படி, லிங்கத்தின் வீரியத்தை மூளை குறைத்து விடும்.

எண்ணம் போல் வாழ்வு என்பதைப் போன்றே, அந்த ஆணின் எண்ணம் போல்

லிங்கத்தின் விரைப்புத் தன்மை அமைந்து விடும்.

ஆகவே, பாலுறவு விவகாரத்தில், ஒரு ஆண் கொண்டுள்ள தன்னம்பிக்கை

தான் லிங்கத்தின் வீரியத்தைத் தீர்மானிக்கிறது.

இந்தத் தன்னம்பிக்கையைப் பெற வேண்டுமானால், துறை சார்ந்த அறிவு,

தேவை. அடிப்படை அறிவு இல்லாத நிலையில் ஏற்படும் தன்னம்பிக்கை

மூடத்தனமாகவே கருதப்படும்,

இந்த விவகாரத்தில் தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்ள எந்த ஆடவனாலும் முடியாது.

ஏனெனில், இரவு நேர எதார்த்தம் என்கிற ஒரு கண்ணாடி எப்போதும்

ஆணின் செயல்களைப் பிரதிபலித்துக் காட்டிக் கொண்டேயிருக்கிறது. ஆகவே,

தன்னுடைய தன்னம்பிக்கை மூடத்தனமானது என்பதை ஆணின் மனசாட்சி

ஒரே இரவில் கண்டு பிடித்து விடும்.

மேலும், மிகவும் நீளமான, பருமனான லிங்கத்தைக் காட்டிலும், நீளமற்ற

ஒல்லியான திடமாக விரைப்படைந்துள்ள லிங்கமே அதிக இன்பத்தைத் தரக்

கூடியது.

அதே நேரத்தில், நீளமற்ற ஒல்லியான திடமாக விரைப்படைந்துள்ள

லிங்கத்தின் மூலம் ஏற்படுத்தப் படும் காட்டுத் தனமான இடித்தல்களைக்

காட்டிலும், மிதமாக விரைப்படைந்துள்ள லிங்கத்தின் மென்மையான

இயக்கமே

பெண்ணுக்கு அதிக இன்பத்தைத் தரக் கூடியது என்று தாவோ ஞானியர்

கூறுகிறார்கள்.

ஆகவே, மனைவிக்குரிய இன்பங்களை வழங்கக் கற்றுக் கொள்ள வேண்டும்.

அவ்வாறு கற்றுக் கொண்டு மனைவிக்குரிய இன்பங்களை வழங்கும் போது,

எப்படிப்பட்ட மடையனுக்கும் மிதமிஞ்சிய அளவிற்கு தன்னம்பிக்கை பிறந்து

விடும்.

அது லிங்கத்தின் வீரியத்தைக் காப்பாற்றுவது மட்டுமன்றி, வாழ்வின்

ஒவ்வொரு தளத்திலும் அவனை ஒரு வெற்றியாளனாக மாற்றிக் காட்டும்.

இந்த நூலைப் படித்து உள்வாங்கிக் கொள்ளும் ஒவ்வொரு ஆணும், ஒரே

இரவில் பல பெண்களைப் பாலியல் ரீதியாகப் பரிபூரணமாகத் திருப்தி செய்யக்

கூடிய திறனைப் பெற்று விடுவான். ஹஸ்திணி வகையின் யானைப் பிரிவைச்

சேர்ந்த பெண்களாகவே இருந்தாலும் கூட அவனால் நிச்சயமாகப் பாலியல்

ரீதியாகப் பரிபூரணமாகத் திருப்திப் படுத்த முடியும்.

மிகச் சிறிய லிங்கத்தைக் கொண்ட முயல் வகை ஆணுக்கும் இது.

பொருந்தும், ஏனெனில், பெண்ணுக்குரிய இன்பம் வழங்குதல் மூளை சார்ந்தது.

ஆகவே, பாலுறுப்பின் அளவை ஆண் கணக்கில் கொள்ளத் தேவையில்லை.

எட்டு அங்குல ஆணுறுப்பிற்கும், நான்கு அங்குல ஆணுறுப்பிற்கும்

இடையிலான வித்தியாசத்தை கண்ணால் பார்த்தோ, அல்லது கையால் தொட்டுப்

பார்த்தோ தான் சொல்ல முடியுமே தவிர, பாலுறவின் போது ஏற்படும் உராய்வை

வைத்து பெண்ணால் கண்டு பிடிக்க முடியாது.

மேலும், நான்கு அங்குல லிங்கம் நிகழ்த்தும் மகிமையை எட்டு அங்குல
“லிங்கத்தால் நிகழ்த்த முடியாது.

மேற்கண்ட துறை சார்ந்த அறிவைப் பெறும் போது தான் ஆணின் ஆளுமை

வலுப்பெறும். இந்த ஆளுமை தான் உண்மையான தன்னம்பிக்கையை அளிக்கும்.

அந்தத் தன்னம்பிக்கை காரணமாக, அவனுடைய லிங்கத்தின்

விரைப்புத்தன்மையும், வீரியமும் வலுப்படும்.

மேலும், அடிக்கடி பயன்படுத்திக் கொண்டேயிருந்தால் லிங்கம்

பழுதாகாது. லிங்கம் பழுதாகாத வரை உடல் நலமும் பாதிக்கப் படாது.

கலவியுள்ள காலம் முட்டும் உடம்புக்குள்ளே சிக்கல் இல்லை என்பது

சாதாரண திரைப் படப் பாடல் வரி அல்ல. இந்த வரியை எழுதிய கவிஞன்,

வாழ்க்கையின் மூல இரகசியத்தை ஒற்றை வரியில் விளக்கிச் சொன்ன ஞானி.

அடுத்தது உடற்பயிற்சியும் உணவும் கூட லிங்கத்தின் வீரியத்தைப்

பாதிக்கிறது. அடிக்கடி பாலுறவில் ஈடுபட்டாலும் உடற்பயிற்சி என்பது லிங்கத்தின்

வீரியத்தைப் பாதுகாக்கின்ற தூண்களில் ஒன்றாகத் திகழ்கிறது. ஆகவே, நடைப்

பயிற்சியோ, அல்லது உடலுழைப்போ மிகவும் அவசியம். கீழ்க்கண்ட உணவுகளும்

லிங்கத்தின் வீரியத்தைப் பாதுகாக்க உதவுகின்றன.

விரைப்புத் தன்மையைப் பாதுகாக்கின்ற உணவுகள்.

லிங்கத்தின் விரைப்புத் தன்மயப் பாதுகாக்கின்ற உணவுப் பொருட்களின்

பட்டியல் இது,

தர்பூசணிப் பழம், பப்பாளி, வெண் பூசணி விதைகள், கொட்டை வகைகள்

(வேர்க்கடலை, பாதாம் பருப்பு, முந்திரிப் பருப்பு போன்றவை வெள்ளைப்

பூண்டு, வெங்காயம், மிளகாய், குறுமிளகு போன்ற காரமுள்ளவை..

உயிர்ச் சத்துக்கள் நிறைந்த அனைத்து வகையான பழ வகைகள். குறிப்பாக

வாழை, மாதுளை, ஸ்ட்ராபெர்ரி, ஆரஞ்சு, எலுமிச்சை, திராட்சை போன்றவை.

அனைத்து வகையான கீரை வகைகள். பீட் ரூட், கேரட், முட்டைக் கோஸ்,

அசைவத்தில் ஈரல் போன்றவை.

மற்றும் தேன், தண்ணீர் நாளொன்றிற்கு மூன்று லிட்டர்.

உடற்பயிற்சி கண்டிப்பாகத் தேவை. நீச்சல், மிதிவண்டி ஓட்டுதல், ஓட்டம்,

அல்லது வியர்க்க வைக்கும் வேகமான நடை மூன்று கிலோ மீட்டர்.

மேற்கண்ட உணவுப் பொருட்கள் லிங்கத்தின் வீரியத்தை மட்டும்

பராமரிப்பதில்லை. புற்று நோய், மாரடைப்பு போன்ற உயிர்க் கொல்லி

நோய்களையும் வருமுன் தடுக்கக் கூடியவை.

இதில், தர்பூசணிப் பழத்தை இயற்கையான வயாக்ரா என்றும் பப்பாளியை

தேவதைகளின் உணவு என்றும் கூறுகிறார்கள்.

மீண்டும் ஒருமுறை சுருக்கமாக ஆணின் லிங்கத்தைப் பற்றித் தெரிந்து

கொள்ளலாம். ஆணின் லிங்கம் நரம்புகளால் உருவான உறுப்பு.

அந்த நரம்புகளில் பாயும் இரத்தத்தின் அளவிற்கேற்ப லிங்கத்தின்

விரைப்புத் தன்மை இருக்கும்.

உடலில் ஏதேனும் நோய் தோன்றும் போது இரத்தம் லிங்கத்திற்கு வராது.

அதனால், விரைப்புத் தன்மை இருக்காது. இதை ஒரே நாளில் கண்டுபிடித்து

விடலாம்.

மனநிலை பாதிக்கப் பட்டாலும், லிங்கத்தின் விரைப்புத் தன்மை பாதிக்கப்

படும். தன்னம்பிக்கையை அதிகரிப்பதே இதற்கான ஒரே தீர்வு.

தன்னம்பிக்கையை அதிகரிப்பதற்கான சுலபமான வழி மனைவிக்குரிய

இன்பங்களை வழங்குதல்.

பயன்படுத்தாவிட்டாலும் லிங்கம் பாழடையும். அதற்கும் உள்ள ஒரே

தீர்வு

மனைவிக்குரிய இன்பங்களை வழங்குதல்.

அதாவது மனைவியை போகப்பொருளாகப் பயன்படுத்தாமல்,மனவிக்குரிய

பாலின்பங்களை வழங்கும் போது, கணவனே ஒதுங்கிச் சென்றாலும், மனைவி

விட மாட்டாள். அதனால், லிங்கத்தில் நடைபெற வேண்டிய பயிற்சி அவ்வப்போது

நடைபெற்றுக் கொண்டே இருக்கும். பயன்பாட்டில் உள்ள எதுவும்

பாழடைவதில்லை,

அதற்கடுத்து உணவு முறை கூட லிங்கத்தைப் பலவீனப் படுத்தும்.

அதற்கான தீர்வு மேலே சொல்லப்பட்டுள்ள உணவுப் பொருட்களை தவறாமல்

உட்கொள்ளுதல்,

ஆக, மேற்கண்ட அறிவை ஒரு ஆண் பெற்றுக் கொள்வதோடு, இந்த நூலில்

சொல்லப்பட்டுள்ள காதற் தசைநார்ப் பயிற்சி, வீரிய அளவுகோல் பயிற்சி போன்ற

பயிற்சிகளையும் செய்து கொண்டிருக்கிற, மற்றும் இன்பத் துய்ப்பின் போது போது

கலவி நேரச் சுவாசத்தையும் கைக் கொள்கின்ற ஆணுக்கு விரைப்புத்தன்மை

இல்லாமை என்கிற நிலைமை ஒருபோதும் ஏற்படாது என்பது மட்டுமல்ல

விரைப்பின் வீரியமும் குறையாது.

இதற்கான சூத்திரம் இது. லிங்கத்தின் வீரியம் மனநிலை சார்ந்தது.

ஆகவே தன்னம்பிக்கை இருந்தால் போதும். தங்க பஸ்பமும், குருவி

லேகியமும், வயாக்ராவும் தேவைப் படாது.

## **4.** காதல் விளையாட்டுக்கள்

முறையான வழியில் பெறப்படும் பாலின்பத்தால், ஐம்புலன்கள் மட்டுமன்றி மனமும்,

ஆன்மாவும் கூட பெருமகிழ்ச்சியடைகிறது.-காம சூத்திரர்.

ஆணின் பாலியல் அறிவே தன்னம்பிக்கைக்கான அடித்தளம். அந்தத் தன்னம்பிக்கையே தாம்பத்ய இன்பத்திற்கான அடித்தளம். தாம்பத்திய இன்பங்களே குடும்ப நிம்மதிக்கான அடித்தளம். குடும்ப நிம்மதியே மகிழ்ச்சியான மனநிலைக்கான அடித்தளம். மகிழ்ச்சியான மனநிலையே

இல்லற வாழ்வின் வெற்றிக்கான அடித்தளம்.

தந்த்ரா வழியில் தாம்பத்ய இன்பங்களை மனைவிக்கு வழங்கும் போது கடைப்பிடிக்கப் பட வேண்டிய முக்கியமான முதல் விதி என்னவெனில், எதைச் செய்வதற்கும் முன்னால், மனைவியின் அனுமதியைப் பெற்றுக் கொள்ளவும்.

ஆணின் காமமும், பெண்ணின் காமமும் ஒரே மாதிரியானதே. அடிப்படைப்

பண்பில் வேறுபாடில்லை. ஆனால், குண இயல்பில் இருவருடைய காமமும்

முற்றிலும் வெவ்வேறானவை.

அதாவது தண்ணீரானது, பனிக்கட்டி, தண்ணீர், நீராவி என்கிற மூன்று வடிவங்களைக் கொண்டது. எப்போதுமே கொதி நிலையில் இருக்கும் தண்ணீர்

தான் ஆணின் காமம். ஆணின் உடலில் சுரக்கும் டெஸ்டோஸ்டிரோன் வேதிப்பொருள் தான் இந்தக் கொதிநிலைக்குக் காரணம். அது தவிர, நூலின்

முதல் பாகத்தில் சொல்லப்பட்டுள்ள அவனுடைய மரபணு மற்றொரு காரணம்.

உறைந்து கிடக்கும் தண்ணீரான பனிக்கட்டி தான் பெண்ணின் காமம். இதற்கான காரணம், ஆணின் உடலில் சுரக்கும் காம வேதியில் பத்தில் ஒரு பங்கு

தான் பெண்ணின் உடலில் சுரக்கிறது. அது தவிர, நூலின் முதல் பாகத்தில்

சொல்லப்பட்டுள்ள -பெண் மனதின் அடியாழத்திலுள்ள- பல்லாயிரமாண்டு கால்

மரபணு அச்சங்களும் காரணம்.

ஆணின் கொதி நிலையில் உள்ள நீரையும், பெண்ணின் உறைந்த

நிலையில்

உள்ள பனிக் கட்டியையும் நீராவியாக்க நடைபெறும் செயல் தான் பாலுறவு.

ஆவியாகின்ற நிகழ்வே உச்சகட்ட பாலின்பப் பரவசக் கிளர்ச்சி.

கொதிக்கும் தண்ணீராக உள்ள ஆணின் காமம் நீராவி என்னும் இன்பத்தை

விரைவில் அடைந்து விடும். ஆனால், பனிக் கட்டியாக உள்ள பெண்ணின் காமம்

நீராவி என்னும் இன்பத்தை அடைய ஆணைப் போன்று பன் மடங்கு

கூடுதலான நேரம் தேவைப்படும்.

ஆகவே, இன்பத்துய்ப்பில் ஈடுபடும் முன்பாக பெண்ணைக் கொஞ்சிக்

கொண்டிருக்க வேண்டும். இன்பக் குலாவலில் ஈடுபட வேண்டும். எவ்வளவு

நேரம் ஈடுபட வேண்டும் என்று முன் கூட்டியே கூற முடியாது.

பெண்கள் அனைவருக்கும் பொதுவான அளவுகோல் எதுவும் இங்கே

இல்லை, மேலும், ஒரே பெண்ணுக்குக் கூட நிலையான அளவுகோல் இல்லை.

ஏனெனில், பெண்ணின் அந்தந்த நேரத்து மனநிலை இங்கே ஆட்சி செய்கிறது.

ஆகவே, முன் விளையாட்டுக்களுக்கான அளவுகோல் எதுவெனக்

கேட்டால், பனிக்கட்டியாக உள்ள பெண்ணின் காமம் ஆணின் காமத்தைப்

போன்று கொதி நிலையை அடையும் வரை, பெண்ணைக் கொஞ்சிக்

கொண்டிருக்க வேண்டும். இதைத் தான் சரச சல்லாபங்கள் என்று கடந்த கால்

ஞானிகளும், முன் விளையாட்டுக்கள் அல்லது காதல் விளையாட்டுக்கள் என்று

இன்றைய அறிஞர்களும் கூறுகிறார்கள்.

ஆகவே, உறங்கிக் கொண்டிருக்கும் மனைவியை பாலுறவிற்காக

எழுப்புவதென்பது. நீங்கள் தங்குவதற்காக குகைக்குள் வாழும் புலியை

விரட்டுவதைப் போன்றது. பெரும்பாலும் எதிர்விளைவுகளையே ஏற்படுத்தி

விடும். ஏனெனில், பாலுறவு என்பது பெண்ணின் இதயத்திலிருந்து தொடங்கப்

பட வேண்டியதே தவிர, உறக்கத்திலிருந்து தொடங்கப் படுவதல்ல.

அதற்கான பொன்மொழி இது. ஆணின் கால்களை விரித்தால் அவனுடைய

இதயம் தானாகத் திறக்கும். பெண்ணின் இதயத்தைத் திறந்தால், அவளுடைய

கால்கள் தானாக விரியும்.

அடித்து மிரட்டிப் பணிய வைப்பது, அதிகாரத்தைப் பயன்படுத்திப் பணிய

வைப்பது. பணத்தைக் காட்டிப் பணிய வைப்பது, போன்ற செயல்கள் மூலம்

பெண்ணுடன் மேற்கொள்ளப் படும் இன்பத் துய்ப்பால் பெண்ணுக்குரிய

இன்பங்கள் எதுவும் ஒரு போதும் நிகழாது.

அதே போல, பெண்ணுக்குச் சம்மதமில்லாத நேரத்தில், கணவன் என்கிற

உறவு முறை உரிமத்தைப் பயன்படுத்தி மேற்கொள்ளப் படுகின்ற இன்பத்

துய்ப்பின் போதும் பெண்ணின் உடலில் இன்பங்கள் நிகழாது.

மேலும், இங்கே தெரிந்து கொள்ள வேண்டிய முக்கியமான தகவல்

ஒன்றுண்டு. ஆணைப் பொறுத்த வரை, லிங்கத்தை யோனிக்குள் நுழைப்பது

தான் இன்பத் துய்ப்பு. ஆனால், பெண்ணின் உடலைக் கொஞ்சும் போதே

பெண்ணின் துய்ப்பு துவங்கி விடுகிறது.

உடலில் நகைகள் அணிவிக்கப்படுகின்ற பகுதிகள்

பெண்ணின் உடலில் நகை அணியப்படும் இடங்களெல்லாம் இன்ப

ஊற்றுகள், முத்தமிடும் பகுதிகள் எல்லாம் மென்மையாகக் கடி பட

வேண்டியவை. நகக் குறி இடப்பட வேண்டியவை. -ரதிரகஸ்யா,

இரு பாலினத்தின் காமத்தைப் பற்றிப் புரிய வைப்பதற்கு இனியொரு

உதாரணமும் இருக்கிறது. அதாவது திருமணத்தின் போது பெண்ணிற்கு மட்டுமே

ஏராளமான நகையலங்காரம் செய்யப் படுகிறது. ஆணுக்கு அவ்வாறு செய்யப்

படுவதில்லை.

இதற்கான காரணத்தைக் கேட்டால், மணப் பெண்ணை அழகு

படுத்துவதற்காக என்று சிலர் கூறுகிறார்கள், வேறு சிலரோ பெண்ணுடைய

குடும்பத்தின் செல்வச் செழிப்பைக் காட்டுவதற்காக என்று கூறுகிறார்கள், இன்னும்

சிலரோ, அந்தப் பெண்ணின் எதிர்காலப் பாதுகாப்பிற்காக நகைகள் அணிவிக்கப்

படுவதாகத் தெரிவிக்கிறார்கள்.

ஆனால், அவற்றின் அடிப்படையில், மணப் பெண்ணுக்கு நகைகள்

அணிவிக்கப் படுவதில்லை, முழுக்க முழுக்க பாலின்பம் குறித்த தகவலை

மணமகனுக்குத் தெரிவிப்பதற்காகவே அவை அணிவிக்கப் படுகின்றன.

அந்தக் காலத்தில் மணமக்கள் நிலவொளியிலும், விண் மீன்களின்

வெளிச்சத்திலும் தான் இன்பத் துய்ப்பில் ஈடுபட்டார்கள். அவ்வாறு ஈடுபடும்

போது, பெண்ணின் உணர்வைத் தூண்டி விடக் கூடிய மையங்கள் மணமகனின்

கண்களுக்கு நன்றாகத் தெரிய வேண்டும். தங்களைத் தீண்டும் படி மணமகனுக்கு

நினைவூட்ட வேண்டும். அப்போது தான் அவை முறையாகத் தீண்டப்படும்

என்பதற்காகவே மணமகளுக்கு நகைகள் அணிவிக்கும் வழக்கத்தை இந்திய

ஞானிகள் உருவாக்கியுள்ளார்கள்.

ஆகவே பெண்ணின் உடலில் நகைகள்

அணிவிக்கப்படுகின்ற பகுதிகள் அனைத்தும்

பெண்ணின் பாலுணர்வு மையங்கள்.

பெண்ணுக்குரிய சுகங்கள் அனைத்தையும்

அளிக்கும் பொருட்டு ஒரு மலரைத் தீண்டுவது

போல் மென்மையாகத் தீண்டப் பட

வேண்டியவை. ஆனால், எந்த ஆடவனையும்

அவ்வாறு தீண்டத் தேவையில்லை,



பெண்ணின் உடலில் ஒவ்வொரு சதுர

அங்குலமும் பாலுணர்வு மையமே. ஆகவே,

ஒவ்வொரு புள்ளியின் மீதும் ஒரு முறையாவது

தீண்ட வேண்டும். படத்தில் அடர்த்தியாகக்

காட்டப் பட்டுள்ள இடமனைத்தும் பன்முறை

தீண்டப்பட வேண்டியவை. இன்பத் துய்ப்பிற்கு முன் அவ்வாறு தீண்டினால்

மட்டுமே பெண்ணின் மனம் அனைத்தையும் மறந்து இக்கணத்திற்கு வந்து

சேரும். அவ்வாறு வந்தால் மட்டுமே இன்பத்தை நிகழ்த்துவது சாத்தியமாகும்.

ஏனெனில், பெண்ணின் பாலுணர்வு தான் பல்லாயிரக் கணக்கான

ஆண்டுகளாகக் கொச்சைப் படுத்தப் பட்டிருக்கிறது. கொடூரமான முறையில்

தண்டிக்கப் பட்டிருக்கிறது. பகிரங்கமான சித்திரவதைக்கு ஆளாக்கப் பட்டிருக்கிறது. பாலுணர்வில்லாமல் வாழ்வது தான் சிறந்த வாழ்க்கை என்று ஏராளமான கற்பனைக் கதைகள் மூலம் வலியுறுத்தப் பட்டிருக்கிறது. அவ்வாறாக எண்ணற்ற வழிகளிலே, பெண்ணின் பாலுணர்வு மறுக்கப் பட்டிருக்கிறது.

அபரிமிதமிதமான பாலுணர்வைக் கொண்ட பெண், இரண்டாம் தரமாகவே இன்றும் பார்க்கப் படுகிறாள். அதனால் பாலுணர்வே இல்லாத ஒரு ஜடமாகத் தன்னைக் காட்சிப் படுத்திக் கொள்ள வேண்டிய கட்டாயத்தில் தான் இன்றைய புதுமைப் பெண்ணும் இருக்கிறாள்.

சம காலக் கருத்துக்களால் ஏற்பட்டுள்ள அச்சமும், பல்லாயிரம் ஆண்டு கால அடக்கு முறைகளால் கற்புக்கரசியாகத் தன்னைக் காட்சிப் படுத்திக் கொள்ள வேண்டிய நிர்பந்தமும், தன்னுடைய காம வேட்கையைக் கண்டு கணவனுக்கு சந்தேகம் வந்து விடக் கூடாதே என்கிற பயமும், மரபணுவிலேயே பதிவாகி விட்ட தண்டனை குறித்த ஆழ் மன அச்சமும் தான், பாலின்ப வேட்கையின் முழுப் பரிமாணத்தையும் கணவனிடம் காட்டாமல் மறைத்துக் கொள்ளும் படிப் பெண்ணை இயக்கிக் கொண்டிருக்கிறது.

(தயவு செய்து முதல் பாகத்தைப் படிக்காமல், இந்தப் பாகத்தை மட்டும் படிக்காதீர்கள்.)

அவ்வாறு பெண்ணுக்கே தெரியாமல் அவளது ஆழ்மனதில் ஆழமாகப் பதிந்து கிடக்கிற இந்த அச்சத்திலிருந்து மனதை மீட்டெடுக்கும் போது தான் பெண்ணின் பாலுணர்வு முழுமையாகக் கிளர்ந்தெழத் தொடங்கும். அவ்வாறு

கிளர்தெழுவதற்காகவே முன் விளையாட்டுக்கள் மிக மிக அவசியமாகத் தேவைப்

படுகின்றன.

இன்பத் துய்ப்பிற்கு முந்தைய காதல் விளையாட்டுக்கள் தான் பெண்ணின்

உடலில் நிகழப் போகின்ற உச்சகட்ட இன்பத்திற்கான அடித்தளம்.

காதல் விளையாட்டுக்களில் ஈடுபடாமல் பெண்ணுக்குரிய பாலின்ப

சுகங்களை எந்தக் கணவனாலும் ஒருபோதும் வழங்க முடியாது.

காதல் (முன்) விளையாட்டுக்கள் பெண்ணின் பாலுணர்வைக் கிளர்ந்தெழச்

செய்வதற்காகவும், எப்போது தான் இன்பத்துய்ப்பு தொடங்கப் படுமோ என்று

ஏங்கும் அளவிற்கு, பெண்ணின் ஏக்கத்தை அதிகரிப்பதற்காகவும் நடத்தப் பட

வேண்டியது.

ஒரு மர்ம நாவலைப் படிப்பதைப் போல, எப்போது முக்கிய இடம்

தீண்டப்படும் என்கிற ஏக்கத்தை பெண்ணின் மனதில் ஏற்படுத்தக் கூடியதாக

காதல் விளையாட்டுக்கள் இருக்க வேண்டும்.

அவ்வாறு மிதமிஞ்சிய அளவில் பெண்ணின் ஏக்கம் அதிகரிக்கும் போது

தான், மனதின் கட்டுப் பாட்டிலிருந்து பெண்ணின் உடல் விடுபடும்.

மனதின் கட்டுப் பாட்டிலிருந்து உடல் விடுபடுவது என்பது எண்ண

ஓட்டத்திலிருந்து மனம் விடுபடுவதாகும். பெண்ணின் மனம் எண்ணங்

களிலிருந்து முழுமையாக விடுபடும் போது தான், உடலின் மீது படும் தீண்டலால்

ஏற்படக்கூடிய உணர்வுகளை மூளையால் முழுமையாக உணர முடியும்.

எண்ணப் போக்குவரத்து நிகழ்ந்து கொண்டிருக்கும் வரை, உடல் மீது

ஏற்படும் தீண்டலால் ஏற்படும் நுண்ணிய உணர்வுகளை மூளையால் முழுமையாக

உணர முடியாது.

மூளையையும், பால் மண்டலத்தையும் ஒரே நேரத்தில் பயன் படுத்த

முடியாது. ஒன்று உறங்கும் போது தான் மற்றது விழிப்புடன் செயலாற்றும். இது

படைப்பின் மகிமை. ஆகவே மாற்ற முடியாது.

பெண்ணின் உடலை ஒரு ரோஜா மலரைக் கையாள்வதைப் போல் தான்

கையாள வேண்டும். பெண்ணின் பாலுணர்வு கிளர்ந்தெழும் வரை, ரோஜ மலரால்

தீண்டுவதைப் போல் தான், பெண்ணின் உடலைப் பொறுமையாகத் தீண்டிக்

கொண்டிருக்க வேண்டும்.

அதேபோல் செய்து கொண்டிருக்கும் எவ்விதக் குலாவலையும், எந்தத்

தருணத்திலும் மாற்றி மாற்றிச் செய்யக் கூடாது. செய்து கொண்டிருக்கும்

செயலின் வேகத்தில் ஏற்படுத்தக் கூடிய வேகமாற்றம் கூட பெண்ணின் உடலால்

உணரப் யாத வகையில் தான் இருக்க வேண்டும்,

இல்லாவிட்டால், நிகழவிருந்த உச்ச கட்டப் பாலின்பம் நழுவிச் சென்று

விடும். அவ்வாறு நழுவிச் சென்ற பின், எவ்வளவு முயற்சித்தாலும் உச்ச கட்ட

இன்பம் நிகழாது. எரிச்சலும், வலியும் தான் பெண் பெற்ற அன்றைய வரங்களாகி

விடும். அந்த ரிச்சலும், வலியும் கணவனின் மீதான ஆழ் மனக் கோபமாகமாறி விடும்,

காதல் விளையாட்டுக்களின் போது, குறைந்த பட்சம் இருபது

நிமிடங்களுக்கு புனிதப் பகுதியின் பக்கம் ஆண் திரும்பிக் கூடப் பார்க்கக்

கூடாது.

ஆணை விடப் பசியில் இரண்டு மடங்கும், காமத்தில் நான்கு மடங்கும்,

அறிவில் எட்டு மடங்கும், இன்பக் கிளர்ச்சியில் பதினாறு மடங்கும் பெண்ணுக்கு

அதிகம் என்றொரு பழமொழி உண்டு.

ஆனால், அந்த இன்பக் கிளர்ச்சி நிகழ்வதற்கான பெண்ணின் காமம்

கிளர்ந்தெழவும் ஆணைப் போன்றே பத்து மடங்கு கூடுதலான நேரம்

பெண்ணுக்குத் தேவை, அந்தப் பத்து மடங்கு நேரத்தில் ஒன்பது மடங்கு நேரம்

முன் விளையாட்டுக்களுக்கே ஒதுக்க வேண்டும்.

பெண்ணின் ஐம்புலன்களையும் மகிழ்விக்கிற வகையில் விளையாட்டுக்கள்

இருக்க வேண்டும். அப்போது தான் பெண்ணின் ஏக்கம் எல்லை கடந்ததாக

உருவாகும்.

அவ்வாறு ஏக்கம் எல்லை கடக்கும் போது தான் பல்லாயிரமாண்டு கால்

அடக்கு முறைகளால் பெண்ணின் ஆழ் மனதில் ஏற்படுத்தப் பட்டுள்ள

அச்சங்கள் அவளை விட்டு விலகும். ஆகவே, உடலின் ஐம்புலன்களும்

பங்கேற்காத காதல் விளையாட்டுக்களில் ஈடுபடாமல், பெண்ணின் உடலில் உச்ச

கட்டப் பரவச இன்பத்தை நிகழ்த்த முடியவே முடியாது.

அந்த இன்பம் நிகழாத வரை பெண்ணின் ஆழ் மன ஏக்கத்தைப் போக்க

முடியாது. அந்த ஆழ் மன ஏக்கத்தின் பிடியிலிருந்து பெண் விடுபடாத வரை

சாத்வீக குணமுடையவளாகப் பெண் மாற முடியாது.

எவ்வளவு தான் சாந்தமானவளாக வாழ முயன்றாலும், தன்னுணர்வற்ற

நிலையில் பெண்ணின் தணி படாத காமம் பீறிட்டு வெளிப்பட்டு விடும்,

போகப் பொருளாகப் பெண்ணைப் பயன்படுத்தும் பாலுறவின் போது ஆணின்

காமம் மறைகிறது. ஆனால், பெண்ணின் காமம் தூண்டப் படுகிறது. அதனால்

தான் கள்ளக் காதல் ஏற்படுகிறது.

அவ்வாறு கள்ளக் காதலில் விழுந்து விடா விட்டாலும், குடும்ப வாழ்வில்

அது கசிந்து கொண்டேயிருக்கும், நல்ல உணவும் இன்பம் தரும் பாலுறவும் ஒரே

மாதிரியானவை. அவையிரண்டும் மென்மேலும் விரும்பப் படும். அதே போல,

ருசியற்ற உணவும், இன்பமற்ற பாலுறவும் வெறுக்கப் படும்.

அந்த வெறுப்பு பல்வேறு வடிவங்களில் வெளிப்பட்டுக் கொண்டே இருக்கும்.

வாழ்க்கையில் பல பிரச்சினைகளை ஏற்படுத்திக் கொண்டேயிருக்கும்.

இதை யாராலும் எந்த வழியிலும் தடுக்க முடியாது. ஏனெனில் அது ஒரு

நுண்ணிய அளவிலான மன நோய்.

உச்ச கட்ட பாலின்பத்திற்கு இணையான இன்பம் எதுவுமில்லை. அதே

போல இன்பம் நிகழாத பாலுறவில் ஈடுபடுவதைப் போன்ற துன்பமும் எதுவும்

இல்லை, என்பது சதவிதப் பெண்கள் துன்பத்தை மட்டுமே அனுபவிக்கிறார்கள்.

பாலின்பம் உருவாக்கும் அன்பு தாயன்புக்கு இணையானது. ஆனால்,

இன்பம் நிகழாத பாலுறவு உருவாக்கும் வெறுப்பு கொடூரமானது. தனக்குரிய

பாலின்பத்தை வழங்காத கணவனை அவனுடைய மனைவி இம்சிப்பதைப் போல்

பரம விரோதியால் கூட இம்சிக்க முடியாது.

மேலும், பரம விரோதியால் இம்சிக்கப் படுவது வெளியிலாவது தெரியும்.

ஆனால், மனைவியால் இம்சிக்கப் படுவது நான்கு சுவர்களுக்குள் மட்டுமே

நடக்கும். அதனால், நிரூபிக்கக் கூட முடியாது.

அது தான் இல்லற வாழ்வில் நடந்து கொண்டிருக்கிறது. அதனால்,

ஆண்களை விடப் பெண்கள் சிறுமைத் தனமானவர்கள் எனச் சித்தரிக்கும் செயல்

ஒரு பொது விதியாகவே அங்கீகரிக்கப் பட்டு விட்டது.

உச்ச கட்ட இன்பம் நிகழாததால் ஏற்படக்கூடிய துவக்க நிலை மனநோய்

தான் அது என்கிற தகவல் யாருக்கும் தெரியாமலே மறைக்கப் பட்டுள்ளது.

தணிக்கட்டாத காமம் தான் பெண்ணின் மனநோய்க்கு மூல காரணமாக

இருக்கிறது என்கிற தகவல் மன நல மருத்துவர்களைக் கடந்து பொது

வெளிக்குக் கொண்டு வரப் படவேயில்லை. அதனால் காதல் (முன்)

விளையாட்டுக்களில் ஈடுபட வேண்டும் என்பதை அறியாதவர்களாகவே

பெரும்பாலான ஆண்கள் பாலுறவைத் துவக்குகிறார்கள்.

அல்லது புனிதப் பகுதியிலும், கொங்கைகளோடும் விளையாடுவது தான்

காதல் (முன்) விளையாட்டுக்கள் என்று எண்ணிச் செயல்படுகிறார்கள். இது

தவறு என்பது பெரும்பாலான ஆண்களுக்குத் தெரியாது.

அதனால் தான், தங்களுடைய உயிருக்குயிரான இணையை ஒரு போகப்

பொருளாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். இவ்வாறு பயன்படுத்திக்

கொண்டிருப்பதைக் கூட உணராதவர்களாகவே குடும்ப வாழ்க்கையையும்

நடத்திக் கொண்டிருக்கிறார்கள்.

காதல் **(** முன்**)** விளையாடுக்களை எவ்வாறு விளையாடுவது**?**

எது பிடித்திருக்கிறது என்பதை மனைவியிடம் கேட்டும் அறிந்து

கொள்ளலாம், உடல் மொழியின் மூலமாகவும் தெரிந்து கொள்ளலாம். சுவாசத்தின்

வேகம் அதிகரித்தல், தோலின் மீது ஏற்படும் பிசுபிசுப்பு தன்மை, இன்பத் தேனின்

ஒழுகல், கண்கள் கூறும் தகவல், முனகல் சத்தம், முகம் போகும் போக்கு என

பெண்ணின் உணர்வு மானிகள் பல இருக்கின்றன.

கை, கால் விரல்களின் நுனிகள், மூக்கின் நுனி, காதுகளின் நுனிகள்,

உதடுகளின் ஓரங்கள் கொங்கைகளின் பாதிப்பகுதி, இதழ்கள் நுனி, பாதங்கள்,

உள்ளங்கை என உடலில் முடிவுப் பகுதிகள் அனைத்தும் நரம்புகளால் நிரப்ப

பட்டுள்ளன, பெண்ணின் உடலில் நகை அணிவிக்கப்படும் இடங்கள்

அனைத்தும் பாலுணர்வு மையங்கள்.

இன்பத் துய்ப்பிற்கு முன் கண்டிப்பாகப் பெருங் குடலும், சிறுநீர்ப் பையும்

காலியாக்கப் பட வேண்டும், கதவைத் தாளிட்டுக் கொள்வது, கை பேசியை

அணைப்பது, எவ்வித இடையூறும் இல்லாத சூழல், பிறருடைய தலையீடு

இல்லாத நேரமாக இருப்பது நல்லது.

எப்படித் தீண்ட வேண்டும்? எவ்வளவு அழுத்தம் தர வேண்டும்? எங்கே

தீண்டப்பட வேண்டும்? எவ்வளவு நேரம் தீண்ட வேண்டும்? உயவுப் பொருள்

தேவையா? உமிழ் நீரே போதுமா? வட்டமிடுவதா? வரைவதா? எழுத்துக்கள்

எழுதுவதா? அல்லது ஒரு நவீன ஓவியம் வரைவதா? தாளமிடுவதா? பிசைவதா?

வருடுவதா? குறுகுறுப்பு செய்வதா? கிள்ளுவதா? கடிப்பதா? நகக் குறி இடுவதா?

உறிஞ்சுவதா? சப்புவதா? விரல்களாலா? உதடுகளாலா? நாவினாலா?

லிங்கத்தாலா? எந்த உறுப்பால்? அல்லது முழு உடலையும் பயன்படுத்துவதா?

என்பதையெல்லாம் கேட்டுத் தெரிந்து கொள்வது காதல் விளையாட்டுக்களை

எளிதாக்க உதவும்.

கையில் கிடைத்தையெல்லாம் ஒரு குழந்தை ஆராய்வதைப் போல்,

மனைவியின் உடலை ஆராய வேண்டும். தினமும் பார்க்கும் இடம்தானே! அங்கே

ஆராய்வதற்கு என்ன இருக்கிறது என்கிற எண்ணம் தவறு.

பெண்ணின் உடல் ஓடிக்கொண்டிருக்கும் நதியைப் போன்றது. ஆராயத்

தொடங்கினால் தான் ஒவ்வொரு முறையும் பல புதுமைகளை கணவனால்

காண முடியும்.

“அறிதோறு அறியாமை கண்டற்றால் காமம் செறிதோறும் சேயிலை மாட்டு.”

ஒரு நபர் எந்த அளவிற்கு மேற்கல்வி பயில்கிறாரோ, அந்த அளவிற்கு கற்றது

கை மண் அளவு, கற்க வேண்டியது ஏராளமாக இருக்கிறது என்பதை

உணர்ந்து

கொள்வார். அதே போலத் தான் பெண்ணின் காமம் என்று வள்ளுவர் கூறுகிறார்.

எத்தனை மச்சங்கள், தழும்புகள், புள்ளிகள், மேடுகள், குழிகள், நெளிவுகள்,

வளைவுகள், அளவுகள், முடிகள், நரம்பின் வடிவங்கள், எலும்பின் தூக்கல்கள்,

இறுக்கமான ஆடைகளால் ஆங்காங்கே ஏற்பட்டுள்ள நிற மாற்றங்கள்,

விளையாட்டின் துவக்கத்தில் மனைவியின் உடலில் ஏற்படும் மாற்றங்கள்,

விளையாட்டின் வகை மாறும் போது ஏற்படும் மாற்றங்கள், கொங்கைகளில்,

கொங்கைகளின் இதழ்களில், நிகழும் மாற்றங்கள்.

சிலிர்ப்புகள், நடுக்கங்கள், நெளிதல்கள், பார்வைகள், வாய் போகும்

போக்குகள், உதடுகளில் ஏற்படும் நிற மாற்றங்கள், உச்சத்தில் நிகழும் துடிப்பு,

இன்பக் கதறல், முடிந்த பின் தொய்வின் போது, அடுத்ததாக மீண்டும் தொடரும்

போது, ஆனந்த அழுகை, மெல்லிய கூச்சல், உடலைப் பிடுங்கிக் கொள்ள

முயல்தல், தப்பிக்க வழியின்றி ஆணைச் சிறைப் படுத்தும் விதங்கள் என்றும்

இன்னபிறவாகவும் ஆராய்வதற்கென்று ஏராளமான அதிசயங்கள் மனைவியின்

உடலில் உள்ளன,

மனைவியைத் தயார் செய்தல்

இரவு நடத்த படும் காதல் களியாட்டத்திற்கான துவக்கம் காலையிலேயே

துவக்கப் பட்டு விட வேண்டும், ஏதாவதொரு சமிக்ஞை மூலம் மனைவிக்கு

அதைத் தெரியப் படுத்தி விட வேண்டும்.

அவ்வாறு தெரிவித்தால் தான், பால் மண்டலப் பகுதிகளில் வாழும்

உயிரணுக்கள் அனைத்தும் எதிர்பார்ப்போடும், ஆர்வத்தோடும்

காத்திருக்கும்.

அவ்வாறு ஒரு எதிர்பார்ப்பு ஏற்பட்டு விட்டால், அன்றைய தினம் உச்ச கட்ட

இன்பங்களை மிகமிக எளிதாக ஏற்படுத்தி விடலாம்.

ஆகவே எப்போது காதல் புரிய விரும்பினாலும், ஏதாவது ஒரு சங்கேத

மொழியில், முன்கூட்டியே அதை மனைவிக்கு உணர்த்தி விட்டால், மனைவியின்

ஆழ்மனம் அந்தச் சமயத்திலிருந்தே, அவளுக்கே தெரியாமல் ஏங்கத் தொடங்கி

விடும். இத்தகைய ஏக்கத்தை ஏற்படுத்துவது, காதல் நேர இன்பங்களை

நிச்சயமாக அதிகரித்துக் கொடுக்கும்,

எதிர்பார்ப்பை உருவாக்கிக் கொள்ளத் தவறி விடக் கூடாது. வேலை நேர

இடைவேளையில் ஒரு கை பேசித் தொடர்பு அல்லது மதிய வேளை உணவின்

போது கிசு கிசுப்பாய்த் தெரிவித்தல், அல்லது ஒரு கிள்ளல் அல்லது மாலையில்

வரும் போது ஒரு பரிசுப் பொருளோடு வருதல் என, ஏதோ ஒரு வகையில்

அன்றைய நாள் இனிமையான நாளாக இருக்கப் போகிறது என்பதைத் தெரிவிக்கும்

போது, அன்றைய இரவு மிகவும் ஆனந்தமுடையதாக இருக்கும்.

மனித உடலை ஒரு தெய்வம் வாழும் வீடாகக் கருதி மதிப்புடன் கையாளக்

கற்றுக் கொள்ள வேண்டும், ஒருவர் உடலை மற்றவர் முழுமையாகப் பார்த்துத்

தொழுவதற்கு இருவருமே அனுமதிக்க வேண்டும். ஒருவருக்கு மற்றவர்

பாலின்பத்தை வழங்குவதை ஒரு புனிதச் செயலாகக் கருத வேண்டும்.

எவ்வளவு தான் ஒருவர் மறுத்தாலும் அவரது ஏக்கத்தை அவரது உடல்

காட்டிக் கொடுத்து விடும், ஏனெனில் உடலுக்குப் பொய் பேசத் தெரியாது. விரக

தாபத்தால் ஏற்படும் பசலை நோய் பற்றிப் பேசாத வாழ்வியல்

நூல்களே இல்லை.

காமத்தால் உடல் துன்புறும் போது தீயில் குளிப்பது போல் உடல் துன்புறும் என்று

குறள் சொல்கிறது.

ஐந்து புலன்களும் ஆறாம் அறிவும்

நுகர்தல், கேட்டல், பார்த்தல், சுவைத்தல், உணர்தல் மற்றும் அறிதல் எனும்

ஆறாம் அறிவு, ஆகிய அனைத்தையும் காதல் விளையாட்டுகளின் போது

பயன்படுத்த வேண்டும்.

பெண்ணின் ஒவ்வொரு உடல் பாகத்தையும் நுகர்வது, அவளது இதய

ஒலியை, சுவாசத்தின் சத்தத்தை கேட்பது. அனைத்து பகுதிகளையும் பார்த்து

ரசிப்பது, பெரும்பாலான இடங்களை நாவால் சுவைப்பது, மெல்லிய அளவில்

கடிப்பது, பெண்ணின் கைகளை தன்னுடைய உடலின் மீது படற வீட்டு அதனால்

ஏற்படும் கிளுகிளுப்பை உணர்வது, மற்றும் மனைவியின் உடல் ஒவ்வொரு

செயலுக்கும் எவ்வாறெல்லாம் எதிர்ச்செயல் புரிகிறது, சிலிர்க்கிறது.

என்பதையெல்லாம் கவனிப்பது என்பவை புலன்களைக் கொண்டு காதல்

விளையாட்டுக்களில் ஈடுபடுவதாகும்,

புலன்களின் மகிழ்ச்சியே மனதின் மகிழ்ச்சி, மனதி ன் மகிழ்ச்சியே

ஆன்மாவின் மகிழ்ச்சி என்று காம சூத்ரா கூறுகிறது. ஆகவே, மனைவியைத்

தீண்டுவதன் மூலமாக மனைவிக்குத் தருகின்ற மற்றும் கணவன் பெறுகின்ற

உணர்வானது, பரஸ்பரம் தம்பதியர் இருவருடைய மன உணர்வுகளையும் பரிமாறிக்

கொள்வதாகும்.

ஒவியம் வரைவதைப் போல விரல்களை பெண்ணின் உடல் மீது வருட விடும்

போது, வெட்டுக்கிளி ஒன்று உடல் மீது துள்ளிக் குதிப்பதைப் போல விரல்களைத்

தவழ விடும் போதும் பெண்ணின் உடலில் ஏற்படும் சிலிர்ப்பால் மனம் தன்னிலை

மறக்கிறது என்று அனங்க ரங்கா நூல் கூறுகிறது.

ஒத்திகையைப் பொறுத்தே இறுதிக் காட்சி அமையும். அதே போல் காதல்

(முன்) விளையாட்டுக்களைப் பொறுத்தே பெண்ணின் உடலில் நிகழக்கூடிய

உச்சகட்ட இன்பத்தின் சிலிர்ப்பும், கிளர்ச்சியும் இருக்கும்.

முத்தமிடுதல் முக்கியமான பங்கு வகிக்கக் கூடியது. இன்பத் துய்ப்போடு

ஒருங்கிணைந்த செயல்களில் முத்தமிடுதலும் ஒன்று. எந்த மிருகமும்

முத்தமிட்டுக் கொள்ளாமல் இனச் சேர்க்கையில் ஈடுபடுவதில்லை.

சுவாசத்தின் வேகம் அதிகரித்தால், கால்கள் இரண்டும் தளர்ந்து விரிந்தால்,

தொடைப் பகுதியில் உள்ள இறுக்கம் தளர்ந்தால், பெண்ணுக்கு மிகவும்

பிடித்திருக்கிறது என்று பொருள்.

பேசுவதைப் பொறுத்த வரை, கெஞ்சலாக, கொஞ்சலாக, கிசு கிசுவாக,

அன்பான தாக, பாராட்டக் கூடியதாக, கொஞ்சம் கெட்ட வார்த்தைகள்

கொண்டதாக, மறைவுப் பிரதேசங்களைப் பற்றிப் புகழ்ந்துரைப்பதாகத் தான் காதல்

நேரப் பேச்சு இருக்க வேண்டும்.

குறை கூறலும், குற்றச் சாட்டுகளும், நியாயப் படுத்தல்களும் ஒரு போதும்

இங்கே இடம் பெறக் கூடாது.

மென்மையாக, மிருதுவாக, வருடலாக, நெருடுவது போல், குறுகுறுப்பு

செய்வது போல, கிச்சுகிச்சு மூட்டுவது போல, சிறு பூரான் ஒன்று உடலின் மீது

ஊறுவது போல, மயிலிறகால் வருடுவதைப் போல் தான் தீண்டல்கள் இருக்க

வேண்டும்,

குளித்திருக்க வேண்டும். பகல் பத்து மணியாக இருந்தாலும், பல்

துலக்காமல், நாக்கைச் சுத்தப் படுத்தாமல் இன்பம் துய்த்தலில் ஈடுபடக் கூடாது.

முகச்சவரம் செய்திருத்தல் நல்லது.

நகங்கள் சுத்தமாக ஒட்டி வெட்டப்பட்டிருக்க வேண்டும். மிதமான பரஸ்பரத்

தழுவல், வள்ளுவரின் கூற்றைப் போல், இருவருக்கும் இடையில் காற்றுக் கூட

நுழைய முடியாத அளவிற்கு இறுக்கமாய்க் கட்டிப் பிடித்தல், பாம்புகளைப் போல்

பின்னிக் கொள்தல், ஒருவரை யொருவர் வருடிய படி இருத்தல், முத்தமிடுதல்,

மெலிதாகக் கடித்தல், நாவால் வருடுதல், நகக் குறியிடுதல், உடலின்

தசைப்பகுதிகள் அனைத்தையும் பிசைந்து விடுதல், இவையனைத்தும் இதில்

அடக்கம்.

விழிப்புணர்வோடு செயல்படுதல், உடலின் ஒவ்வொரு சதுர

அங்குலத்தையும் பார்த்தல், பார்க்க அனுமதித்தல், தலை உச்சி முதல் பாதம் வரை

உங்கள் உடலில் வாழ்ந்து கொண்டிருக்கக்கூடிய உயிரணுக்கள் அனைத்தும்

ஒன்றுடன் ஒன்று இணைந்து கலந்துரையாடச் செய்தல், விரும்பும் ஒவ்வொரு

பகுதியையும் விழிப்புணர்வோடு சுவைத்தல், உடலின் இயற்கையான மணத்தை

நுகருதல், மூச்சுக்காற்று முதல் அத்தனை முக்கல், முனகல் மற்றும்

சிணுங்கல்களையும் உன்னிப்பாகக் கவனித்துக் கேட்டல்.

முன் விளையாட்டுக்களின் போது, ஒரு அறிஞரைப் போல் செயல் படக்

கூடாது. கணவன் ஒரு ஆராய்ச்சியாளனாகவே எப்போதும் இருக்க வேண்டும்.

எதையும் உடனடியாக எதிர் பார்க்க கூடாது. எது எப்போது நிகழ வேண்டுமோ,

அது அப்போது நிகழ்ந்தே தீரும். மேலும், முன் விளையாட்டுக்களைப்

பொறுத்தவரை வேகம் என்பது வியாதி. முரட்டுத்தனம் என்பது முட்டாள்

தனமானது.

மனைவியின் ஒரு அசைவு, பார்வை, குரலொலி, உள் வாங்குதல், உந்திக்

கொடுத்தல் போன்ற செயல்கள் கூறும் தகவல்களைப் புரிந்து கொள்ளும் அறிவும்,

விழிப்புணர்வும் தேவை. சூழலோடு முழுமையாகச் சரணடைதல் மிகவும்

அவசியம். மேலே சொல்லப்பட்டவை முன் விளையாட்டிற்கான பொது விதிகள்.

இது தவிர, ஒவ்வொரு விளையாட்டிற்கும் பிரத்யேகமான வீதிகளும் இருக்கின்றன,

முன் விளையாட்டுக்கள் இல்லாத போது என்ன நிகழ்கிறது**?**

காதல் விளையாட்டுக்களில் ஈடுபடாமல், பெண்ணின் உடலை நெருங்கிய

உடனே யோனிக் குழாய்க்குள் எட்டிக் குதிப்பதால் பெண்ணுக்குரிய எந்த

இன்பமும் நிகழ்வதில்லை. அது மட்டுமல்ல. இயற்கையாகக் கிடைக்கக் கூடிய

உராய்வின்பமும் கூட கிடைப்பதில்லை.

எவ்விதத் தயாரிப்பு வேலைகளும் நடைபெறாமல் தன்னை நெருங்குவதை

பெண்ணின் யோனி விரும்புவதில்லை. சகித்துக் கொள்ள முடிகிற அளவிலான

எரிச்சலும் வலியும் தான் பெண்ணுக்கு ஏற்படுகிறது. இந்த அனுபவம் தான்

பெண்ணின் ஆழ்மனதில் படிந்து விடுகிறது.



அதாவது, இன்பத்துய்ப்பில்
ஈடுபட ஆணின் லிங்கம்
உயிர்த்தெழ வேண்டும். இல்லா
விட்டால், ஆடவனால்
பாலின்பத்தை அனுபவிக்க
முடியாது. அதே போல,
இன்பத்துய்ப்பில் ஈடுபட
பெண்ணின் புனிதக் குகையும்
தயாராக வேண்டும்.

அதாவது, குகைக்குள் ஏற்படும் உராய்வால் எரிச்சல் ஏற்பட்டு விடக் கூடாது. ஆகவே அதற்கான உயவுப் பொருளைச் சுரக்க வேண்டும். அதனுடைய சுற்றளவை விரிவடையச் செய்ய வேண்டும். குழாயில் உள்ள வளைவுகளை நேராக்கி, ஆழத்தை அதிகரிக்க வேண்டும். இறுக்கத்தைத் தளர்த்துவதற்காக தன்னைச் சற்றே அகலப் படுத்திக் கொள்ள வேண்டும். இவையெல்லாம் “ஜி -பூம்பா” என்று ஒரு மந்திரத்தைப் போட்ட உடனே நிகழ்ந்து விடாது.

மனநிலை சீராக இருக்கும் பெண்ணுக்கே குறைந்த பட்சம் பதினைந்து நிமிடங்களாவது தேவைப்படும் என்கிற நிலையில் இல்லற வாழ்வின் இன்னல்களோடு வாழ்ந்து கொண்டிருக்கும் மனைவிக்கு அரை மணி நேரமாவது தேவைப்படும்,

ஆணுக்காக அலைந்து கொண்டிருக்கும் பெண் விதி விலக்கு. ஆகவே,

பெரும்பாலான கள்ளக் காதலர்களுக்கு இந்தத் துவக்க நிலை விளையாட்டுக்கள்

தேவைப் படுவதில்லை, எனினும், பெண்ணுக்குரிய உச்ச கட்ட இன்பம்

அங்கேயும் நிச்சயமாக நிகழாது. உராய்வின்பம் கிடைக்கலாம்.

மேலும், இன்பத்துய்ப்பின் போது எரிச்சலோ, வலியோ ஒரு முறை

ஏற்பட்டு விட்டால், மரணம் வரை அது மறக்காது. ஏனெனில், இன்பங்களை

மறந்து விடுவதும், துன்பங்களை மனதில் பதித்துக் கொள்வதும் மனித உடலில்

உள்ள எச்சரிக்கை விதிகளின் படி நிகழக் கூடியது. அதனால் மோசமான

அனுபவம் ஏற்பட்டு விட்டால், தன்னைத் தீண்ட வரும் லிங்கத்தில் உள்ள

உயிரணுக்களோடு யோனிப் பகுதியில் வாழும் உயிரணுக்கள் ஒத்துழைப்பது

இல்லை.

பெண்ணின் மனம் எச்சரிக்கையோடு விழித்திருக்கும் வரை உடலில்

உச்சகட்ட இன்பம் நிகழாது. மேலும், ஆணைப் பொறுத்தவரை லிங்கத்தை

யோனிக்குள் நுழைத்தல் தான் இன்பத்துய்ப்பு. ஆனால், பெண்ணைப் பொறுத்த

வரை முன் விளையாட்டுக்களே கூட பாலுறவு தான்,

பெண்ணின் மனம் முழுமையாக ஈடுபடாத நிலையில் மேற்கொள்ளப் படும்

பாலுறவில் எவ்வித தெய்வீகத் தன்மையும் இருக்காது. இது நல் விளைவுகளை

நிச்சயமாக விளைவிப்பதில்லை, பெண்ணின் மேல் மனம் விரும்பாத செயலை

பெண்ணின் ஆழ்மனம் விரும்புவதில்லை. அதனால் ஆணின் உயிர் நீர் விரைவில்

வெளியேற எதைச் செய்தால், உடனடியாக சில விநாடிகளிலேயே வெளியேறி

விடுமோ அதைச் செய்யத் துவங்குகிறாள்.

தன்னுடைய துன்பச் சூழலிலிருந்து விரைவில் விடுபடுவதற்காக, ஆணின்

உயிர் நீரை இரண்டே நிமிடத்தில் வெளியேற்றும் வேலையைத் தன்னுணர்வற்ற

நிலையில் பெண் செய்கிறாள், ஆணுக்கு இதைப் பற்றி எதுவும் தெரியாத

காரணத்தால், தன் இணைக்கு இன்பம் நிகழ்கிறது என்கிறது என்கிற கிளர்ச்சியால்

வேகமாக இயங்கி தன் உயிர்நீரை வெளியேற்றி விடுகிறான்.

ஆணின் இன்பம் எவ்வளவு விரைவில் முடிய வேண்டுமோ அவ்வளவு

விரைவில் முடிவதற்கான ஏற்பாடுகளை பெண்ணின் யோனி செய்து விடுகிறது.

அதிகமான உராய்வைக் கொடுத்து ஆணின் இன்பக் கிளர்ச்சியின் வேகத்தை

அதிகரித்து, முடித்து வைத்து உடனடியாக லிங்கத்தை வெளியேற்றி விடுகிறது.

அதனால் உடலின் அனைத்து பகுதிகளாலும் உணரப்படுகின்ற இன்பம்

ஆணுக்கு நிகழ்வதில்லை. ஏதோ ஒரு கடனைக் கழித்த உணர்வு தான் ஆணுக்கு

ஏற்படுகிறது. ஆணின் உடல் பாரம் குறைகிறதே தவிர, மன பாரம்

குறைவதில்லை.

என்னவெல்லாம் செய்யக் கூடாது**?**

ஒவ்வொரு பெண்ணும் வித்தியாசமானவள். மேலும், பெண்ணின் அந்தந்த

நேரத்து மன நிலை இங்கே முக்கியப் பங்கு வகிப்பதால், ஒரே பெண்ணிடம்

ஏற்படும் ஒவ்வொரு அனுபவமும் கூட வித்தியாசமானது.

நேற்றுக் கொடுத்த அழுத்தத்தை விட இன்று கூடுதல் அழுத்தம்

தேவைப்படலாம், அல்லது அழுத்தமே வேண்டாமென
எதிர்க்கப்படலாம்.

பெண்ணுக்குப் பேரானந்தப் பேரின்பப் பரவசத்தை அளிப்பதற்கான
ஒற்றைச்

சூத்திரம் என்று எதுவுமே கிடையாது.

ஆனால், எப்படிப்பட்ட பெண்ணின் உடலிலும் இன்பத்தை

நிகழ்த்துவதற்கான ஒரு அடிப்படைச் சூத்திரம் இருக்கிறது. அது
பெண்ணின்

மனதை எண்ண ஓட்டத்திலிருந்து விடுவித்து, இந்தக் கணத்தில் வாழச்
செய்வது.

ஏறக்குறைய குழந்தைக்கான தாலாட்டுப் போன்றது இது. உடைந்து
போன

அதே விளையாட்டுப் பொருள் தான் வேண்டுமென அடம் பிடிக்கும்
குழந்தையை

எப்படி ஏதேதோ சொல்லி நாம் ஏமாற்றிச் சமாதானப்படுத்தி
விடுகிறோமோ அதே

திறன் தான் இங்கே தேவைப்படுகிறது.

முன்விளையாட்டுக்களின் போது, எச் சூழலிலும் மதன பீடத்தைத்

தொடுவது போன்ற செயல்களில் ஈடுபடக் கூடாது. இந்தச் செயல்
முட்டாள்

தனமானது. இது சிறிதளவு கூட இன்பமளிப்பதாய் இல்லை. எனக்கு

பிடிக்கவில்லை. வலிக்கிறது. எனக்கு இன்பம் நிகழப்போவதில்லை.
நான் பயன்

படுத்தப் படுகிறேன். இவன் ஒரு முட்டாள், என்பதையொத்த
எண்ணங்கள்

மனைவியின் மனதில் எழாத வகையில் செயல்பட வேண்டும்.

இதற்கு ஒரே வழி ஒவ்வொன்றையும் கேட்டுக் கேட்டுச் செய்வது.

அடுத்ததாக, உடல் மொழி மூலம் தெரிந்து கொள்வது. இதனால் தான்
இன்பத்

துய்ப்பின் போது விழிப்புணர்வு அதி முக்கியம் என்று சொல்லப்
படுகிறது.

பாலுறுப்புக்கள் மட்டுமே பங்கேற்கும் பாலுறவு பசிக்கு கூழ்

குடிப்பதைப்

போன்றது. பத்தில் இரண்டு பெண்கள் மட்டுமே, பாலுறுப்புக்கள் மட்டுமே

பங்கேற்கும் பாலுறவின் மூலம் உச்சகட்ட இன்பத்தைப் பெறுகிறார்கள்.

ஆண் செய்து கொண்டிருக்கும் செயலை நோக்கி பெண்ணின் உடல்

வந்தால், மேலும் அழுத்தம் தேவை என்று பொருள். அந்தப் பகுதி உள்ளிழுத்துக்

கொள்ளப் படுமானால், அழுத்தத்தை குறை என்று பொருள். முக்கல், முனகல்,

மூச்சின் வேகம், இதயத்துடிப்பு, வியர்வை போன்றவை கவனிக்கப்பட வேண்டிய

முன்னறிவிப்பாளர்கள்.

சரசமே பெண்ணின் முதல் தேவை. சரசமில்லாதது வெறும் இனச் சேர்க்கை.

இது மனைவிக்கு சோர்வளித்து விடும்.

அகல் விளக்கொளி, ரம்மியமான மணம், குளியல், மனதை மயக்கும் இசை,

அணைத்து வைக்கப் பட்ட அலைபேசி, குழந்தைகள் அருகிலற்ற நிலை, உயவுப்

பொருள், முழுமையான அர்ப்பணிப்பு, மனப்பூர்வ சரணாகதி போன்றவை இங்கு

தேவைப் படுபவை.

நான் என்னும் அகம்பாவம் குடியிருக்கும் வரை அன்பிற்கும், அக

மகிழ்ச்சிக்கும், பேரின்பத்திற்கும் தம்பதியர் வாழ்வில் இடமிருக்காது.

காமம் இயற்கையானது**.**

காமம் இயற்கையானது. உடலுக்கு அவசியமானது. மனநலம் காப்பதில்

பெரும் பங்கு வகிக்கக் கூடியது. ஆகவே, ஆணின் காமம் தணிக்கப் படுவதைப்

போன்றே பெண்ணின் காமமும் தணிக்கப் பட வேண்டியது.

இயற்கையோடு ஒத்துபோகும் வரை அது ஒரு தேங்கிச் செல்லும் ஆறாக

இருக்கும். அதனால் எளிதில் நீந்திக் கடந்து விடலாம். ஆனால், அதை எதிர்த்து

நின்றால், அதே ஆறு காட்டாற்று வெள்ளமாகி விடும். அதன் பின் நீச்சலே

தெரிந்திருந்தாலும் கூட, நீந்தித் தப்பிக்க முடியாது.

ஆகவே இயற்கையை இயற்கையாகப் பார்ப்பதும், அதை அப்படியே ஏற்றுக்

கொண்டு, இயற்கை சக்திகளோடு ஒத்துப் போவதும் தான் வாழ்க்கையை

எளிதாக்கும். இல்லாவிட்டால், இல்லற வாழ்க்கை போர்க்களமாகி விடும். வாழக்

கிடைத்த வாய்ப்பு பறிபோய் விடும்.

ஆயிரத்து ஐநூறு ஆண்டுகளுக்கு முன்னால் வரை காமத்தைப்

போற்றுகின்ற, வழிபடுகின்ற நாடாக இந்தியா இருந்திருக்கிறது. உலகின் மிகப்

பெரிய வல்லரசாகவும் அப்போது திகழ்ந்திருக்கிறது.

இப்போது மேற்கத்திய மக்கள் காமத்தை அதன் இயற்கைத் தன்மையோடு

ஏற்றுக் கொள்கிறார்கள். உலகின் வல்லரசுகளாகவும் திகழ்கிறார்கள்.

ஐக்கிய நாடுகள் சபையின் வீட்டோ அதிகாரத்தோடு உள்ள நாடுகள்

அனைத்தும் காமத்தை அங்கீகரித்தவை.

அங்கெல்லாம் குழந்தைகள் இருபது வயதிற்குள் பாலுறவில் ஈடுபடா

விட்டால் அது ஒரு குறை. மருத்துவர்களிடம் குழந்தைகளை அழைத்துச் சென்று

ஆலோசனை பெறுகிறார்கள்.

காமத்தை விரோதியாகப் பார்க்கின்ற தேசங்கள், வல்லரசுகளின்

மறைமுகமான அடிமைகளாக இருந்து கொண்டிருக்கின்றன.

நாடுகள் கடக்கத் தேவையில்லை, நம் ஊர்களில் கூட காமத்தை ஏற்றுக்

கொண்டவன் மகத்தான வெற்றியாளனாக வாழ்கிறான். காமத்தை அனுபவிக்காத,

அனுபவிக்கத் தெரியாத அப்பாவிகள் அந்த வெற்றியாளனின் வெற்றிக்கு உதவி

கொண்டிருக்கிறார்கள். இது இரு பாலருக்கும் பொருந்தும்,

மனநலம் பேணலிலும், மூளையை அதன் முழுத் திறனோடு இயங்கச்

செய்வதிலும் காமத்தின் பங்கு அசாத்தியமானது. அதையறிந்து காமத்தை

முதன்முதலில் வழிபட்ட தேசம் இந்திய தேசம். காமசூத்ராவும், கஜுராகோ

கோவிலுமே அதற்கான ஆதாரம்.

ஆனால், காமத்திற்கு எதிராக இருந்தவர்கள் அன்னியர்கள், அவர்கள்

இந்தியாவிற்குள் நுழைந்தார்கள், காமத்திற்கு எதிரான தங்கள் கருத்துக்களை

பரப்பினார்கள். இந்திய மக்கள் அதை ஏற்றுக் கொண்டார்கள்.

அதே சமயத்தில், வந்தவர்களெல்லாம் இந்திய நூல்களைப் படித்தார்கள்.

இந்தியாவின் கருத்தை ஏற்றுக் கொண்டார்கள். முடிவில், இந்திய அறிவை

அன்னியர்களும், அவர்களுடைய மூடத் தனத்தை இந்தியர்களும் பண்டமாற்றாக

மாற்றிக் கொண்டார்கள்.

ஆகவே, காமத்தின் புனிதத்தைப் புரிந்து கொள்ள முடியாத கணவனால்

மனைவிக்குரிய இன்பங்களை நிச்சயமாக வழங்க முடியாது. பாலின்பங்களை

வழங்காத வரை மனைவியின் மனம் மலர முடியாது. மனைவியின் மனம்

முழுமையாக மலராத வரை, குடும்ப விவகாரச் சண்டைகள் முடிவிற்கே வராது.

குடும்பத்தில் நிம்மதியும் மகிழ்ச்சியும் நிரந்தரமாகக் குடியேற முடியாது.

இங்கே ஒரு கொடூரமான பேருண்மையொன்று மறைந்திருக்கிறது.

தங்களுடைய மனம் மலர்வதற்குரிய நீரும், காற்றும், ஒளிக் கதிர்களும்,

உரமும், தங்களுடைய காமம் தணிக்கப் படுவதில் தான் இருக்கிறது என்பது

பெரும்பாலான பெண்களுக்கே கூடத் தெரியாது.

“காமம் எனஒன்றோ கண்ணின்று என் நெஞ்சத்தை யாமத்தும் ஆளும்

தொழில்,” என் காமம் இரக்கமற்றது. அதனால் தான் நள்ளிரவிலும் என்னைத்

தூங்க விடாமல் வதைக்கிறது என ஒரு பெண் புலம்புகிறாள்.

“மன்னுயிர் எல்லாம் துயிற்றி அளித்திரா என்னல்லது இல்லை துணை.”

அத்தனை பேரும் உறங்கிக் கொண்டிருக்கிறார்கள். என்னத் தவிர யாருமே

இரவுக்குத் துணையில்லை என்று ஒரு பெண் புலம்புகிறாள். அப்படியென்றால்,

இந்தப் பொது உறக்கமின்றித் தவித்துக் கொண்டிருக்கிறாள் என்று பொருள்.

காமம் தூங்க விடாது. பெரும்பாலான பெண்களின் துக்கமின்மைக்குப்

பாலின்பம் நிகழாமையே முழு முதற் காரணம். ஆனால், தூக்கமின்றித் தவித்துக்

கொண்டிருக்கும் பெண்களுக்கே இந்த உண்மை தெரியாது.

குடும்பம் என்பது ஒரு குழுவாய் வாழ்வது. இன்பம் துய்த்தல் என்பது ஒரு

குழு விளையாட்டு. இந்தக் குழுவில் யார் தோற்றாலும் தோல்வி இருவருக்கும்

பொதுவானதே.

யாருடைய தோல்வியும் பொதுவாக உள்ள குடும்ப வாழ்வின் நிம்மதியைத்

தான் பாதிக்கும். ஆகவே யாரும் தோற்கக் கூடாது. அப்படி விளையாட

இருவருக்கும் குறிப்பிட்ட அறிவு தேவை. அறிவை வளர்த்துக் கொள்ளாத வரை

எதிலுமே யாருமே முன்னேற முடியாது.

பிறர் உன்னை எவ்வாறு நடத்த வேண்டும் என்று நீ விரும்புகிறாயோ,

அதைப் போல பிறரை நீ நடத்து. அவர்கள் உன்னைப் பின் பற்றுவார்கள் என்பது

ஒரு வாழ்க்கைத் தத்துவம். அது இன்பத் துய்ப்பிற்கும் பொருந்தும்.

அதாவது காணவனுக்கு பாலின்பம் வேண்டுமானால், மனைவிக்குரிய

இன்பத்தை முதலில் வழங்கக் கற்றுக் கொள்ள வேண்டும். மனைவிக்குரிய இன்பம்.

நிகழ வேண்டுமானால், முன் விளையாட்டுக்கள் மிகவும் முக்கியம்.

பாலின்பமும் பணமும் ஒரே மாதிரியானவை, சேரச் சேர மென்மேலும் சேர்க்க

வேண்டும் என்கிற எண்ணத்தை பணம் உருவாக்கும். அதே போலத்

தான் இன்பம்

தருகிற பாலுறவும்,

தவறாமல் இன்பம் வழங்கும் நபருடன் பாலுறவில் ஈடுபட யாராலும்

மறுக்கவும் முடியாது. அந்த இன்பத்தை வழங்கியவரை வெறுக்கவும் முடியாது.

அதனால், கணவன் மனைவிக்கிடையே யாராலும் பிரிக்க முடியாத அன்பு

ஏற்பட்டே தீரும்.

“நாண்என ஒன்றோ அறியலம் காமத்தால் பெணியார் பெட்ப செயின்.” நான்

விரும்புவதை என் காதலன் செய்யும் போது, எதற்காக இனியும் நான் வெட்கப்

பட வேண்டும் எனப் பெண் எண்ணுவதாக வள்ளுவர் கூறுகிறார்.

ஆகவே மனைவியைப் போகப் பொருளாகப் பயன்படுத்தும்

கொடூரத்திலிருந்து வெளியேறி, மனைவிக்குரிய பாலின்ப உச்ச கட்டப்

பாலின்பங்களை வழங்க விரும்பும் கணவன் முன் விளையாட்டுக்களை

விழிப்புணர்வோடு மேற்கொள்ள வேண்டியது மிகவும் முக்கியம். இதில்

சோம்பேறித்தனப் படக் கூடாது.

இதற்கான சூத்திரம் இது. பெண்ணின் இரத்தம் மூளைக்குச் சென்று

கொண்டிருக்கும் வரை, பெண்ணின் உடலில் பாலின்பம் நிகழாது.

அதேபோல புனிதப் பகுதிக்குச் சென்று கொண்டிருக்கும் வரை

இன்பங்கள் நிகழ்ந்து கொண்டே இருக்கும்.

பெண்ணின் இரத்தம் மேலே செல்வதா அல்லது கீழே செல்வதா

என்பது பெண்ணை மீட்டிக் கொண்டிருக்கும் ஆணின் பாலியல்

அறிவைப் பொறுத்தது.

### **5.** அமுத படப் பூஜை**.**

பரஸ்பரம் ஒருவர் மற்றவருடைய பாவின்பத் தேவைகளைப் பூர்த்தி செய்யக் கற்றுக்

கொண்டால், தம்பதிகளிடையே மலர்ந்த அன்பு மறைவதில்லை என்பது

மட்டுமல்ல ,மரணம் வரை குறைவதுமில்லை.-காம குதிரா.

கொங்கைகளோடு குலாவி இன்பத்தை வழங்குதல்.

கொங்கைகள். பாலுணர்வோடு தொடர்புடைய முக்கியமான அவயங்கள்.

இவற்றைப் பேரழகோடு வரையாத ஓவியனோ, மயங்க வைக்கும் அழகோடு

செதுக்கிக் காட்டாத சிற்பியோ, கிறங்கடிக்கும் வார்த்தைப் பின்னல்களால்

வர்ணிக்காத கவிஞனோ, இது வரை பூமியில் தோன்றியதில்லை.

படைப்பாளிகள் அனைவரும் இவ்வாறு ஒரே மாதிரியாகச் செயல்

பட்டிருப்பது. எதேட்சையாக நடந்த ஒரு விபத்தாக இருக்க முடியாது.

நூறு வருடங்களுக்கு முன் வாழ்ந்த ஒரு இத்தாலிய ஓவியன், நடசத்திரங்கள்

வெளிப்புறத்தில் கோபுரம் வடிவம் கொண்டவை என்பதை வெறும் கண்களாலேயே

கண்டறிந்து ஓவியமாக்கினான். அவனை பைத்தியம் என்று கூறி சிறையில்

அடைத்தனர். ஆனால், இன்றைய விஞ்ஞானிகள் அந்த ஓவியனின் பார்வை

தான் சரியானது என்று டெலஸ்கோப் மூலம் பார்த்து ஆதாரபூர்வமாகக்

கூறுகிறர்கள்.

படைப்பாளிகள் கூர்மையான பார்வையுடையவர்கள். இயற்கையைக் கண்டு

வியக்கத் தெரிந்தவர்கள், இயற்கையின் படைப்பு இரகசியத்தைப் புரிந்து

கொண்டவர்கள். தாங்கள் கண்டுணர்ந்ததைப் பிறருக்கும் போதிக்கக் கூடியவர்கள்.

அதனால் தான் ஒவ்வொரு படைப்பாளியும் கொங்கைகளின்

தனிச் சிறப்பை உணர்ந்து அவரவர் பாணியில் மனித சமூகத்திற்கு அதை உணர்த்த

முயற்சித்திருக்கிறார்கள்.

குட்டி போட்டு பாலூட்டி வளர்க்கும் உயிரினங்கள் அனைத்திற்கும் மார்புகள்

உண்டு. ஆனால், ஒரு பிரசவத்தில் ஓரிரண்டு குட்டிகளை மட்டும் எனக்கூடிய

எந்த உயிரினத்திற்கும் இதயத்திற்கு அருகே மார்புகள் படைக்கப் படவில்லை.

பால் மண்டலத்தின் ஒரு பகுதியாக அடி வயிற்றிலேயே அவை

படைக்கப்பட்டுள்ளன. ஏனெனில், அவை பாலூட்டும் தேவைக்காக மட்டுமே

படைக்கப்பட்டுள்ளன,

பெண்ணின் கொங்கைகளும் அடிவயிற்றிலேயே இருக்கும் படியாகப்

படைக்கப் பட்டிருந்தால் பாலூட்டும் தேவைக்காக மட்டுமே அவை படைக்கப்

பட்டிருப்பதாக நாம் கருதிக் கொள்ளலாம், ஆனால், குரங்கு வகைப்

பெண்ணின் கொங்கைகள் மட்டும் இதயத்திற்கு அருகிலே படைக்கப்ட்டுள்ளன.

இதில் ஒரு இரகசியம் இருக்கிறது. ஏனெனில் காரணமின்றி இயற்கை எதையும்

படைப்பதில்லை.

இயற்கையின் படைப்பிலக்கணப்படி, பெண்ணின் கொங்கைகள் பாலூட்டும்

தேவைக்காக மட்டும் படைக்கப் படவில்லை. பெண்ணின் உடலில் நெளிவு

சுளிவுகளை உருவாக்கி, உடலின் வடிவழகை அதிகரித்து, வருடம் முழுவதும்

ஆணைக் கவர்வதற்காகவே அவை இதயத்திற்கு அருகே படைக்கப் பட்டுள்ளன.

இதைத் தவிர வேறெந்தப் படைப்பு இரகசியமும் கொங்கைகளின் இட மாற்றத்தின்

பின்னால் இருக்க முடியாது.

ஆணாகப் பிறவியெடுத்துள்ள ஒவ்வொரு நபரும் அடி வயிற்றிலே

கொங்கைகளைக் கொண்ட ஒரு பெண்ணைக் கற்பனை செய்து பாருங்கள்.

அவ்வாறு பார்க்கும் போது, பாலுணர்வு கிளர்ந்தெழாதது மட்டுமல்ல, பெண்ணின்

உடலைப் பார்க்க பயமாகக் கூட இருக்கும், மேலும் பார்க்கச் சகிக்காது.

அதேபோல கொங்கைகளின் படைப்பில் இனியொரு இரகசியத்தையும்

இயற்கை மறைத்து வைத்திருக்கிறது. குட்டி போட்டு பாலூட்டி வளர்க்கும்

உயிரினங்கள் அனைத்திற்கும் மார்புகள் உண்டு. ஆனால், அவற்றின் மார்புகள்

பாலூட்டும் காலங்களில் மட்டுமே காட்சிக்கு வரும். இதர காலங்களில் இதழ்கள்

மட்டுமே கண்களுக்குத் தெரியும். மார்புகள் உடலுக்குள் உள்ளடங்கி விடும்.

ஆனால், மனிதப் பெண்ணுக்கு மட்டும் தான் எல்லாக் காலத்திலும்

உடலுக்கு வெளியே, பிறரது பார்வைக்குத் தெரியும் வகையில் கொங்கைகள்

படைக்கப் பட்டுள்ளன, கருத்தரித்தாலும், தரிக்கா விட்டாலும், பாலூட்டினாலும்,

ஊட்டாவிட்டாலும் உடல் நலம் மிக்க பெண்ணின் கொங்கைகள் உடலுக்கு

வெளியே தான் இருக்கும்.

பெண்ணின் உடலைக் கவர்ச்சிகரமான வடிவழகோடு காட்டுவதற்காகவே

இயற்கையால் பெண்ணுக்கு வழங்கப்பட்டுள்ள பெருங்கொடை தான்

கொங்கைகள். அதனால் தான் அவை மற்ற உயிரினங்களிலிருந்து வேறுபட்டு

இதயத்தின் அருகிலே படைக்கப்பட்டிருப்பதோடு, வருடம் முழுவதும் உடலுக்கு

வெளியிலேயே இருக்கும் படியாகவும் படைக்கப்பட்டுள்ளன.

ஆகவே வருடம் முழுவதும் காதற் களியாட்டங்களில் மனித இனம் ஈடுபட

வேண்டும் என்பதற்காகவே இயற்கை இவ்வாறு படைத்திருக்கிறது என்று தான்

கருத வேண்டும்.

மேலும், பிற உயிரினங்களைப் பொறுத்தவரை மார்புகளுக்கும்

பாலின்பத்திற்கும் இடையே எவ்விதத் தொடர்பும் இல்லை. ஆனால்,

பெண்ணின்

கொங்கைகள் பாலின்பத்தோடு நெருங்கிய தொடர்புடையவை.

ஒரு ஆண் தன் ஆடைகளைக் கூடக் களையாமலே பெண்ணுக்குரிய

பாலின்பத்தை நிகழ்த்த முடியும். அத்தகைய இன்பத்தை நிகழ்த்த பெண்ணின்

கொங்கைகள் முக்கியக் காரணிகளாக விளங்குகின்றன.

இயற்கையின் படைப்பில் உள்ள மகத்துவங்கள்.

பெண்ணின் கொங்கைகளைப் படைத்ததன் பின்னால் மட்டுமல்ல,

இயற்கையின் ஒவ்வொரு படைப்பிலும் எத்தனையோ தகவல்கள் இருக்கின்றன.

எத்தனையோ அதிசயங்கள் இருக்கின்றன, உதாரணமாக மலர்கள் தேனைச்

சொரிவதற்குப் பின்னால் ஒரு படைப்பு இரகசியம் இருக்கிறது.

தேன் வண்டுகளுக்கான உணவு. ஆகவே, தேனைச் சொரிய வேண்டும்.

இல்லா விட்டால், வண்டுகள் எல்லாம் உணவின்றிச் செத்துப் போய் விடும் என்கிற

பரோபகார சிந்தனை காரணமாக எந்த மலரும் தேனைச் சொரிவதில்லை.

தேனைச் சொரிந்தால் தான் வண்டுகள் மலரைத் தேடி வரும். அவை வந்தால்

தான் மலருக்கு மலர் தாவிக் கொண்டிருக்கும். அவ்வாறு தாவிக் கொண்டிருந்தால்

தான் மகரந்தத் தூள்கள் அவற்றின் கால்களில் ஒட்டும். அவ்வாறு ஒட்டினால்

தான் மகரந்தத் தூள் ஒரு மலரிலிருந்து இனியொரு மலரைச் சென்றடைய முடியும்,

அப்படிச் சென்றடைந்தால் தான் மலர்கள் சூலடைய முடியும். ஆகவே, தங்கள் சுய நலத்திற்காகவே, தாங்கள் சூலடைவதற்காகவே மலர்கள் தேனைச் சொரிந்து,

தங்களை நோக்கி வண்டுகளை ஈர்க்கின்றன.

அதேபோல, மலர்களின் வண்ணங்களுக்குப் பின்னாலும் ஒரு படைப்பு

இரகசியம் மறைந்திருக்கிறது. பெரும்பாலான தாவரங்கள் பச்சை நிறத்தில்

இருக்கின்றன, ஆனால் அவற்றின் மலர்கள் மட்டும் வேறு வண்ணங்களில்

மலர்கின்றன. அதாவது எந்தத் தாவரத்தின் மலரும் அந்தத் தாவரத்தின்

வண்ணத்திலேயே படைக்கப் படுவதில்லை. இந்த நிற வேறுபாட்டிற்குப்

பின்னாலும் ஒரு படைப்பு இரகசியம் இருக்கிறது.

மலர்களிலுள்ள தேனை அருந்த வண்டுகள் வருகின்றன. அவ்வாறு தேனை

அருந்தும் போது வண்டுகளின் கால்களில் மலரின் மகரந்தத் தூள் ஒட்டிக்

கொள்கிறது. அவ்வாறு வண்டுகளின் கால்களில் ஒட்டிய தூள் வேறொரு மலரைத்

தான் சென்றடைய வேண்டும். ஆகவே, வண்டுகள் ஒரு மலரிலிருந்து தாவும்

போது, அடுத்த மலரின் மீது தான் குறி தவறாமல் சென்று அமர வேண்டும்.

மலரெனக் கருதி, ஒரு இலையின் மீது தப்பித் தவறி அமர்ந்து விட்டால்,

மகரந்தத் தூள் இலையின் மீது ஒட்டிக் கொள்ளும். அதனால் மகரந்தத் தூள்

வேறொரு மலரைச் சென்றடைய முடியாது. தூள் இல்லாமல் மலர்களால் சூலடைய

முடியாது. ஆகவே, வண்டுகளின் கண்களுக்குத் தெளிவாகத் தெரியும் வகையிலே

மலர்களை வேறு படுத்திக் காட்ட வேண்டும்.

இலையை விட அழகாகக் காட்ட வேண்டும். வேறு வண்ணத்தில் காட்ட

வேண்டும். கவர்ச்சியாகக் காட்ட வேண்டும், அப்போது தான் மிகச் சரியாக மலரை

நோக்கி வண்டை ஈர்க்க முடியும். ஒரு மலரிலிருந்து கிளம்பிய வண்டை, திசை

மாறிச் சென்று விடாமல் மிகச் சரியாக அடுத்த மலரின் மீது அமர வைக்க முடியும்.

அவ்வாறு அமர வைத்தால் தான் வண்டின் கால்களில் ஒட்டிக் கொண்டுள்ள

மகரந்தத் தூளை அடுத்த மலரில் ஒட்ட வைக்க முடியும். அவ்வாறு ஒட்ட

வைத்தால் தான் மலரால் சூலடைய முடியும் என்பதற்காகத் தான் தாவரங்களின்

மலர்கள் பல வண்ணங்களில் மலரும் படியாகப் படைக்கப் பட்டுள்ளன.

மற்றபடி, மக்களுக்கு பயன்பட வேண்டுமே என்கிற அக்கறையில் மலர்கள்

அழகாகவும், கவர்ச்சியாகவும் பல்வேறு வண்ணங்களிலும் மலர்வதில்லை.

அடுத்ததாக வண்டுகளின் படைப்பிலும் மிகப் பெரிய படைப்பு இரகசியம்

மறைந்திருக்கிறது. எல்லா உயிரினங்களுக்கும் நாக்கில் சுவையறியும் நரம்புகளை

படைத்துள்ள இயற்கை வண்டுகளுக்கு மட்டும் சுவையறியும் நரம்புகளை

அவற்றின் கால்களில் படைத்திருக்கிறது. இதன் பின்னாலும் ஒரு படைப்பு

இரகசியம் மறைந்திருக்கிறது.

தங்களுடைய தேவை காரணமாக, மலர்கள் வண்டுகளை ஈர்த்தாக

வேண்டும், அதற்காக அவை தேனைச் சொரிகின்றன. தங்களை வண்ண

மயமாகவும், அழகாகவும் உருவாக்கிக் கொள்கின்றன. தேனை அருந்துவதற்காக

வண்டுகளும் மலர்களை நாடிச் செல்கின்றன.

அவ்வாறு மலரைத் தேடிச் செல்லும்போது, மலரின் மீது பறந்தபடியே தான்

வண்டுகள் தேனை அருந்துகின்றன. மலரின் மீது வண்டுகள் அமர்வதில்லை.

மலரின் மீது அமரும் பழக்கத்தை வண்டுகளுக்கு இயற்கை உருவாக்கவில்லை.

ஏனெனில், இந்தப் பழக்கம் ஏற்பட்டு விட்டால் எல்லா மலர்களின் மீதும்

வண்டுகள் அமரத் தொடங்கி விடும், அதன் எடையை மலர்களால் சுமக்க

முடியாது. சுமக்க முடிந்தாலும், மலர்களில் உள்ள பாலுறுப்புக்கள் வண்டுகளின்

எடையால் உடைந்து விடக் கூடும். அதனால் வண்டுகள் பறந்த படியே தான்

தேனை அருந்துகின்றன.

இப்படிப் பறந்த படியே தேனை அருந்தி விட்டுச் சென்று விட்டால், எந்த

மலரின் மகரந்தத் தூளும் வண்டுகளின் கால்களில் ஒட்டாது. அவ்வாறு ஒட்டாத

வரை மகரந்தத் தூளின் பண்டமாற்று வேலை நடைபெறாது. இதையறிந்து தான்

இயற்கை வண்டுகளின் கால்களில் சுவையறியும் நரம்புகளைப் படைத்திருக்கிறது.

சுவையறியும் நரம்புகள் வண்டுகளின் கால்களில் படைக்கப் பட்டிருப்பதால்,

மலரை நெருங்கியவுடனே ஒவ்வொரு வண்டும் தேனின் சுவையை

அறிவதற்காகப் பறந்த படியே முதல் வேலையாக கால்களைத் தான் மலரின் மீது

வைக்கிறது. அப்போது தேனோடு சேர்ந்து மகரந்தத் தூளும் வண்டின் கால்களில்

ஒட்டிக் கொள்கிறது.

அதன்பின் பறந்தபடியே அந்த மலரின் தேனை அருந்தி வீட்டு வேறொரு

மலரின் மீது தாவுகிறது, அவ்வாறு வேறோரு மலரின் மீது தாவும் போதும் தேனின்

சுவையறிவதற்காக தன் கால்களைத் தான் மலரின் மீது முதலில் வைக்கிறது.

அதனால் வண்டின் கால்களில் உள்ள மகரந்தத் தூள் மலரில் ஒட்டிக் கொள்கிறது.

அதன் மூலம் மலர்கள் சூலடைகின்றன.

தனக்குரியதை முதலில் பெற்றுக் கொண்ட பிறகு தான், வண்டுகளுக்குரிய

தேனை மலர்கள் வழங்குகின்றன. கடன், தவணை போன்ற எந்த ஏமாற்று

வேலையிலும் ஈடுபட்டு வண்டுகளால் மலர்களை ஏமாற்ற முடியாது. படைப்பின்

மகிமை அவ்வாறு தான் உள்ளது.

வண்டுகளின் படைப்பிலேயே இவ்வளவு பெரிய படைப்பு இரகசியத்தை

மறைத்து வைத்துள்ள இயற்கை தான் பெண்ணின் உடலிலும் பல படைப்பு

இரகசியங்களை மறைத்து வைத்திருக்கிறது. அதில் கொங்கைகள் முதலிடம்

வகிப்பவை.

கொங்கைகளை எவ்வாறு கையாள்வது?

பெண்ணின் கொங்கைகள். பிறந்தவுடனே அமுதூட்டி உயிர் வளர்த்த

கடவுள். அந்தக் காரணத்தால் தான் ஆண் மகனால் மறக்க முடியாதவையாக

அவை இருக்கின்றன.

தாய்ப்பாலை மறக்கடிப்பது ஒரு இயல்பான செயல். அவ்வாறு மறக்கடிக்கப்

படும் போது ஆண் குழந்தையின் மனதில் ஒரு ஆழமான ஏக்கம் ஏற்படுகிறது.

அந்த ஏக்கம் தான் ஆண் குழந்தையின் ஆழ் மனதில் கொங்கைகளின் மீதான

நிரந்தரமான ஏக்கமாக மாறி விடுகிறது. மரணம் வரையிலும், அந்த ஏக்கம்

மனதிற்குள் கனன்று கொண்டே இருக்கிறது.

பெண்ணின் பாலுணர்வு கேந்திரங்களில் கொங்கைகள் முக்கியமானவை.

மனைவியின் பாலுணர்வை உச்ச நிலைக்குக்கு உயர்த்தி, மனைவிக்குரிய

பாலின்பங்களை நிகழ்த்தி, மனைவியின் மன நலத்தையும், உடல் நலத்தையும்

சிறப்பாகப் பராமரிக்க விரும்பும் கணவனுக்கு மிகவும் உதவக்கூடியவை.

ஆண்களுக்கும் மார்புகள் இருக்கின்றன. ஆனால், கொங்கைகள்

இல்லை.

மேலும், பெண்ணுக்கு இருப்பதைப் போன்ற பெரிய இதழ்களும் இல்லை. பாலைச்

சுரக்கச் செய்யும் வகையிலும் இல்லை.

கொங்கைகள் மிகவும் மிருதுவானவை. கொழுப்புத் திசுக்களால் ஆனவை.

ஆகவே ஒரு வருடக் குழந்தையைக் கையாள்வது போல், அவற்றை மிருதுவாகக்

கையாள வேண்டும்.

முதலில் பத்துப் பைசா அளவிலான வட்டங்களைப் போட வேண்டும்.

வட்டங்கள் கழுத்துப் பகுதியிலிருந்து, கீழ் நோக்கியும், பக்கவாட்டிலும்,

அடிவயிற்றிலிருந்து மேல் நோக்கியும் போடப் பட வேண்டும்.

அவ்வாறு வட்டமிடும் போது, விரலின் நுனியானது பெண்ணின் உடல் மீது

ட்டும் படாத மாதிரி பூரான் பூச்சி ஊறிச் செல்வதைப் போல் தான் தீண்டிக்

கொண்டிருக்க வேண்டும். முதலில் மயிலிறகால் வருடுவதைப் போல் தான்

தொடங்கப்பட வேண்டும்.

அதன் பின் பெண்ணின் உடல் அதை எவ்வாறு ஏற்கிறது என்பதைப்

பொறுத்து படிப்படியாக அழுத்தத்தை அதிகரிக்க வேண்டும். அவ்வாறு

அதிகரிக்கும் போது கூட இசைவு மாறாமல் அதிகரிக்க வேண்டும், மேலும்,

எக்காரணத்தை முன்னிட்டும் எடுத்தவுடனே கொங்கைகளின் இதழ்களைத்

தீண்டக் கூடாது.

இரண்டு கைகளையும் பயன் படுத்தி, கொங்கைகள் மீது இசைவு (ரிதம்)

மாறாமல் வட்டமிட்டுக் கொண்டே அவ்வப் போது, தெரியாமல் பட்டது போல

கொங்கையின் இதழ்களைத் தீண்டி விட வேண்டும், எப்போதுமே அவசரப் டக்

கூடாது. அவதியின்றி ஆண் செயல் படும் போது, அவனுடைய அலை பாயும்

விரல்களில் தன்னுடைய இதழ்கள் படும் படியாக, பெண்ணே தன் உடலை

நகர்த்திக் கொடுப்பாள், உணர்வற்ற நிலையில் பெண்ணால் மேற்கொள்ளப் படும்

செயல் இது.

எந்த அளவிற்கு, இதழ்களை விட்டு ஆண் ஒதுங்கிச் செல்கிறானோ, அந்த

அளவிற்கு பெண்ணின் விரக தாபம் அதிகரிக்கும். எந்த அளவிற்கு வீரக தாபம்

அதிகரிக்கிறதோ அந்த அளவிற்கு, உச்ச கட்ட இன்பத்தை நெருங்கும் நேரம்

குறையும்.

தானாக முன் வந்து தன்னுடைய கொங்கை இதழ்களை ஆணின் விரல்களின்

மீது உராய விடுவது தான் பெண்ணின் உணர்வுகள் கிளர்ந்தெழும் நேரம்.

அதன்பின், இதழ்களை நுனி நாவால்

பட்டும் படாதது போல் தீண்டத்

தொடங்கினால், அவை மெதுவாக

விரைப்படையத் தொடங்கும்.

கொங்கையின் இதழ்களை ரோஜா மலரால்

தீண்டுவதும், ஆணின் உதடுகளை

அவற்றின் மீது குவித்து வைத்து, உமிழ் நீர்த்

துணையுடன் உறிஞ்சுவதும் சம அளவில்

இன்பம் அளிப்பவை என்று காம சூத்ரா

கூறுகிறது.




இவ்வாறு உறிஞ்சும் போது, இதழ்கள் இரண்டும் நன்றாகப்
புடைத்தெழத்

தொடங்கும். அப்படிப் புடைத்தெழுந்த பிறகு, அவற்றை மிருதுவாக,
உயவுப்

பொருளின் துணையோடு, மூன்று விரல்களின் நுனிகளை மட்டும்
பயன்படுத்தி,

வெளிப்புறம் நோக்கி இழுத்து விட வேண்டும். இரண்டையும் ஒரே
சமயத்தில்

வெளிப்புறம் நோக்கி இழுக்கக் கூடாது.

ஒன்று உள்ளே செல்லும் போது மற்றொன்று

வெளியே வருவதை போன்று தான் அவை

இழுபட வேண்டும். மேலும், இறுக்கமாகப்

பிடித்து இழுக்கக் கூடாது.




பால்காரர் பால் பீய்ச்சும் போது,

எவ்வாறு அவருடைய விரல்கள் பசுவின்

மடிக் காம்புகளை ஆழப் பகுதியிலிருந்து

நுனி வரை வருடுவதைப் போல் செயல்

படுகிறதோ அதைப் போல் தான் இதழ்கள் இழு பட வேண்டும். அதாவது

விரல்களின் நுனிகள் இதழ்களை வழுக்கிய படியே இழுக்கும் பணியைச் செய்து

கொண்டிருக்க வேண்டும்.

இவ்வாறு இசைவு மாறாமல், மிருதுவாக, மென்மையாக, தொடர்ச்சியாகச்

செய்து கொண்டேயிருந்தால், கொங்கைகளின் மூலமாக ஏற்படும் உச்ச கட்ட

இன்பம் ஏற்படும். (Nipple Orgasm அமுத பீட இன்பம்).

ஆனால், இது முதல் முறையே ஏற்படும் என்றோ, அல்லது ஒவ்வொரு

முறையும் ஏற்படும் என்றோ உறுதியாகச் சொல்லமுடியாது. பெண்ணின்

மனநிலை, ஆணின் செயல் வேகம், இசைவு மாறாத தன்மை போன்ற பல

காரணிகள் இங்கே முக்கியப் பங்காற்றுகின்றன.

ஆனால், கொங்கைக் குலாவலால் ஏற்படும் உணர்ச்சி, பெண்ணின்

புனித

குகையில் இன்பத்தேனை நிச்சயமாகச் சுரக்கச் செய்கிறது. புனிதப் பகுதில் வாழும்

உயிரணுக்கள் அனைத்தும் ஆணின் தழுவலை எதிர்பார்த்துக் காத்திருக்கத்

தொடங்கி விடுகின்றன, கடுமையான எதிர்பார்ப்பு உருவாகி விடுகிறது.

அதனால் புனிதப்பகுதியை நெருங்கும் போது, அங்குள்ள உயிரணுக்கள்

அனைத்தும் ஆணின் ஸ்பரிசத்தை ஆசையோடு வரவேற்கின்றன. ஆணின்

ஸ்பரிசம் பட்டவுடனே அவை பெருமகிழ்ச்சி யடைகின்றன. அதனால், பெண்ணின்

உடல் விவரிக்க முடியாத ஒரு பேரானந்த சுகத்தை அனுபவிக்கிறது. உச்ச கட்ட

இன்பமே நிகழா விட்டாலும் பெண்ணின் மனதை இது சாந்தப் படுத்துகிறது.

இதழ்களின் மீதான ஆணின் வருடல் எத்தகைய உணர்வைப் பெண்ணின்

உடலில் ஏற்படுத்துகிறது என்பதை ஆண்கள் புரிந்து கொள்வதற்கான எளிய வழி

ஒன்று உண்டு. லிங்கத்தின் தலைப்பகுதியைத் தன் கை விரல்களால், ஒரு பெண்

மென்மையாகத் தீண்டும் போது, அந்தத் தீண்டலால் ஆணின் உடலில் எத்தகைய

உணர்வு ஏற்படுகிறதோ, அதே போன்ற உணர்வு தான், கொங்கைகளின்

இதழ்களை ஒரு ஆண் மென்மையாகக் கையாளும் போது பெண்ணின் உடலில்

ஏற்படுகிறது.

ஆகவே, லிங்கத்தின் நுனியை பெண்ணின் கையில் கொடுத்து தீண்டச்

சொல்வதன் மூலம் கொங்கைகளைக் கையாள்வது மற்றும் இதழ்களைத்

தீண்டுவது, தரப்பட வேண்டிய அழுத்தம் குறித்த தகவலை ஆண் அறிந்து

கொள்ளலாம்.

கொங்கைகளின் இதழ்களும், லிங்கத்தின் நுனியும் உணர்வளவில் ஒரே

மாதிரியான உணர்ச்சிகளை தரக்கூடியவை.

கொங்கைகளை ஒரு போதும் கீழ் நோக்கி இழுக்கக் கூடாது. பிழிவது,

பிணைவது, கசக்குவது, அனைத்தும் மேல் நோக்கியே செய்ய பட வேண்டும்.

இதழ்களைக் கிள்ளுதல், மிருதுவாகத் திருகுதல், வெளிப்புறம் நோக்கி இழுத்தல்,

உட்புறமாகத் தள்ளுதல், நகக்குறி இடுதல், மென்மையாகக் கடித்தல், உறிஞ்சுதல்,

சப்புதல், சுவைத்தல், இதழ்களைச் சுற்றி நாவால் வட்டமிடுதல், போன்ற

செயல்களால் பெண்ணின் காம உணர்வுகள் வேகமாகக் கிளர்ந்தெழுவதாக,

காமசூத்ரா, ரதி ரகசியங்கள், ரதி ரத்ன மாலிகா போன்ற நூல்கள் தெளிவாகக்

கூறுகின்றன.

வட்டமிடும் போது, வலது மார்பில் கெடிகாரச் சுற்றைப் போன்றும், இடது

மார்பில் கெடிகாரச் சுற்றுக்கு எதிராகவும் தான் வட்டமிட வேண்டும். இது போன்ற

வருடல் குறைந்தபட்சம் பதினைந்து நிமிடங்களாவது இசைவு மாறாமல் நிகழ்ந்து

போடப்பட வேண்டும்.

கொண்டிருக்க வேண்டும், அல்லது குறைந்த பட்சம் ஆயிரம் வட்டங்களாவது




வருடல் முடிந்த பிறகும் கூட இதழ்கள் உயிர்த்தெழா விட்டால், அழுத்தும் விளையாட்டைத் துவக்க வேண்டும். கட்டை விரல் அல்லது ஆள் காட்டி விரலுடன் நடு விரலையும் சேர்த்து அழுத்தமாக அழுத்திய படி, கொங்கைப்பகுதி முழுவதும் வட்டமிட வேண்டும். இவ்வாறு அழுத்தியபடி வட்டமிடுதலை மூன்று நிமிடங்கள் வரை செய்ய வேண்டும்,

அதன் பிறகு கொங்கைகளைப் பிசைந்து விடத் தொடங்க வேண்டும். முதலில் உருண்டைகளாகச் சேர்ந்துள்ள கோதுமை மாவின் கட்டிகளை உடைத்து விடுவதைப் போல், மூன்று விரல்களைக் கொண்டு மென்மையாகப் பிசைந்து விட வேண்டும்,

கொங்கைட்பகுதி முழுவதும் ஒரு சுற்று வந்த பிறகு ஐந்து

விரல்களையும்

பயன்படுத்தி மென்மையாக ஒரு சுற்று பிசைந்து விடலாம்.

அவ்வாறு பிசையும் போது, மென்மையாக, மிருதுவாக கீழிருந்து மேல்

நோக்கித் தள்ளுகிற வகையில் தான் பிசைந்து விட வேண்டும். கீழ் நோக்கி

இழுக்கவோ அழுத்தவோ கூடாது.

பெண்களைத் தாக்கும் மார்புப் புற்று நோய் தடுக்கப்படுகிறது.

இந்தப் பூஜையை முதல் மூன்று பூஜைகளை நடத்தாமல் தொடங்கக்

கூடாது. இந்த பூஜைக்கு உயவுத் திரவங்களைப் பயன்படுத்துவது சிறந்த பலனை

அளிக்கும். ஆலிவ் எண்ணெய், அல்மாண்ட் ஆயில், கிரேப்சீட் ஆயில்

போன்றவற்றைப் பயன்படுத்தலாம். இருபது நிமிடங்கள் வரை இது செய்யப்

படவேண்டும்.

இந்த மாதிரி கொங்கைகளோடு கணவன் கொஞ்சிக் குலாவுவதால்

மனைவியின் உடல் நலம் மிகப் பெரிய அளவில் பாதுகாக்கப்படுகிறது. அதாவது,

கொங்கைகளோடு குலாவி விளையாடும் போது மார்புகளில் அதிகமான இரத்த

ஓட்டம் நிகழ்கிறது. அதனால் அந்தப் பகுதியில் வாழும் உயிரணுக்கள்

அனைத்திற்கும் போதுமான பிராணவாயு கிடைக்கிறது. உயிரணுக்களின்

கழிவுகள் அகற்றப்படுகின்றன,

அதன் காரணமாக, அந்த உயிரணுக்களின் நோய்த் தடுப்பாற்றல்

வலுப்படுகிறது. அதனால் பெண்களைத் தாக்கும் மார்புப் புற்று நோய் தடுக்கப்

படுகிறது.

நோயிலிருந்து மனைவியின் உயிரையும், உபாதையிலிருந்து அவளது

உடலையும், மருத்துவச் செலவிலிருந்து கணவனயும் இந்தக் கொங்கைக் குலாவல்

காப்பாற்றுகிறது. ஐயமிருப்போர் மருத்துவர்கள் வாயிலாக அறிந்து தெளியவும்.

சில பெண்கள் பிரசவித்த பின் கொங்கைகளோடு விளையாட அனுமதிக்க

மாட்டார்கள். அவர்களுடைய கொங்கைகளைப் பற்றி அவர்களுக்கே ஏற்படுகின்ற

தாழ்வான கருத்து அல்லது அவளது கணவன் அவற்றைக் கையாண்ட விதம்

போன்ற காரணங்களால் சில பெண்கள் கொங்கைகளோடு குலாவி மகிழ

அனுமதிப்பதில்லை. இது தவறு.

எனினும், இது போன்ற தருணங்களில் கொங்கைகளைப் பார்க்கவோ,

தொடவோ கணவன் முயற்சிக்கக் கூடாது. அதற்குப் பதிலாக, ஒரு குழந்தையை

மடியில் அமர வைப்பதைப் போல் மனைவியை மடியில் அமர்த்திக் கொண்டு,

உடலின் இரு புறங்களிலும் பக்க வாட்டில் கையைச் செலுத்தி, கைகளைக்

கொண்டு மட்டும் கொங்கைக் குலாவலில் ஈடுபடலாம்.

கொங்கைகளைப் பற்றித் தாழ்வு மனப்பான்மை கொண்டுள்ள பெண்கள்

இதை அனுமதிக்கக் கூடும்.

ஒரு சிலர் கொங்கைகள் மிகவும் தொய்வடைந்து விட்டதாகக் கருதி,

கணவனுக்குக் காட்டவும் மாட்டார்கள். கைகளால் தொட்டு விளையாடவும்

அனுமதிக்க மாட்டார்கள். அந்தச் சூழலில் கண்களின் மீது ஒரு துணியைக் கட்டிக்

கொண்டு, வாய் மூலமாக கொங்கைக் குலாவலில் ஈடுபடலாம்..

கொங்கைகளைக் காட்ட மறுக்கும் பெண்களில் சிலர் மேற்கண்ட செயலை

அனுமதிப்பார்கள்.

கொங்கைகளோடு விளையாடுவது மார்புப் புற்று நோய் வராமல்

தடுப்பதற்கான ஒரு முன்னெச்சரிக்கை நடவடிக்கை. மார்புப் பிசைவு மருத்துவ

பயனுள்ள ஒரு இன்பச் செயலே, மேலும், மார்புப் புற்று நோயைத்

தடுப்பதற்கு

இதைத்தவிர வேறெந்த இயற்கையான வழிமுறையும் உலகில் இல்லை,

ஒருக்கால், கொங்கைகளோடு தன்னுடைய கணவன் விளையாடுவதை எந்த

நிலையிலும் ஏற்றுக் கொள்ள முடியாத அளவிற்குக் காயப்பட்டுள்ள பெக்க இன்பம்

துய்க்கும் போது, தன்னுடைய கைகளைக் கொண்டாவது மேற்கண்ட முறையில்

கொங்கைகளோடு விளையாடிக் கொள்வது மிகவும் நல்லது.

ஏனெனில், இது தான் மார்புப் புற்றிலிருந்து ஒரு பெண்ணை காக்கக் கூடிய

செலவற்ற இயற்கையான வழியாகும்.

மேலும் கணவனுக்கும் இங்கே ஒரு தகவல் இருக்கிறது. கொங்கைகளோடு

குலாவி மகிழ்வதை எவ்வளவு தான் எதிர்ப்பவளாக மனைவி இருந்தாலும்,

உணச்சிகளின் உச்சக் கிளர்ச்சியில் இருக்கும் போது பெண் தடுக்க மாட்டாள் என்று

ரதி ரகசியங்கள் என்கிற நூல் சொல்கிறது.

மனதில் நடைபெறும் சிந்தனை உடலைப் பாதிக்கும், உடலில் ஏற்படும்

இன்ப துன்பங்கள் மனதைப் பாதிக்கும் என்பது ஒரு இயற்கை விதி.

அந்த விதியின் படி, இந்தக் கொங்கைக் குலாவல் பெண்ணின் உடலுக்கு

அளிக்கும் பேரின்பப் பரவசமானது கணவனின் மீது எல்லையற்ற அன்பை

மனைவியின் மனதில் உருவாக்குகிறது.

ஆகவே, இருபது நிமிடங்களாவது கொங்கைகளோடு குலாவி மகிழ்ந்த பின்,

மதன் மாளிகை நோக்கிச் செல்லும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்.

இந்தப் பழக்கத்தை ஏற்படுத்திக் கொண்ட கணவன் பாலுறவு சுகம் கேட்டு

மனைவியிடம் சண்டையிடுவது மட்டுமல்ல, கெஞ்சக் கூடத்

தேவையிருக்காது.

கண்ணசைவோ அல்லது சிறு சைகையோ கூடப் போதும். மனைவி தயாராகி

விடுவாள். இதற்குப் பெயர் தான் அமுத பட பூஜை.

இதற்கான சூத்திரம் தன்னை நம்பிக் கரம் பிடித்த பெண்ணை

ஒரு போகப் பொருளாகப் பயன்படுத்தக் கூடாது எனச் சூளுரையேற்றம்

கணவன் இன்பத் துய்ப்பிற்கு முன்பாக, அமுத படங்களுக்கு உரிய

அமுதை அளிக்காமல், வேறு படங்களை நோக்கிச் செல்லக் கூடாது.

**6.** தந்த்ராவின் சக்திக்குரிய பூஜைகள்

பெண்களைப் பொறுத்த வரை, இன்பம் துய்த்தலும் அன்பால் திளைத்தலும்

வெவ்வேறானவை அல்ல. சதி ரகஸ்யா

பூஜை என்றால் வழிபடுதல், போற்றிப் புகழ்தல், பெரு மதிப்பளித்தல்,

பயபக்தியோடு அணுகுதல் என்று பொருள், மனைவி தான் குடும்பத்தின் சக்தி

மையம், அந்த சக்தியை வழிபடுதலும், போற்றி புகழ்தலும், சக்திக்குரிய பெரு

மதிப்பளித்தலும், பண்போடு அணுகுவதும் தான் இங்கே பூஜை என்று

சொல்லப்படுகிறது.

பெண்ணின் உடலில் உள்ள பால் மண்டலம் தெய்வீகமான பகுதி. இது

தான் உயிரை உருவாக்கும் திறன் படைத்தது. மனித இனத்தைப் பட்டுப்

போகாமல் தழைத்திருக்கச் செய்து கொண்டிருப்பது. ஆகவே, இந்த தெய்வீகப்

பகுதியை பய பக்தியோடு தான் அணுக வேண்டும்.

பால் மண்டலத்திலேயே புனிதமான பகுதி அதன் நுழைவாயிலும்,

கோபுரமும் அமைந்துள்ள பகுதி. ஏனெனில், இந்தப் பகுதி மட்டும் கழுத்தை

இறுக்கிப் பிடித்திருக்குமானால், ஆண் உயிருடன் பிறந்திருக்கவே முடியாது.

ஆகவே நன்றி கலந்த மரியாதையோடு தான், இந்தப் புனிதப் பகுதியை அணுக

வேண்டும்.

ஒவ்வொரு ஆணுக்கும் இது மிகவும் நெருங்கிய உறவுள்ள பகுதி.

ஏனெனில், பெண்ணின் இதயத்தை, மூளையை, கண் களை, கழுத்தைத்

தொடாமல், ஒரு குழந்தை பிறந்து விடலாம். ஆனால், இந்தப் புனிதப் பகுதியைத்

தொடாமல் பிறக்கவே முடியாது.

ஆகவே, ஒவ்வொரு ஆணும் நன்றிப் பெருக்கோடும், பயபக்தியோடும்

அணுக வேண்டிய புனிதப் பகுதி இது. அதனால் தான் புனிதப் பகுதியோடு

நடைபெறும் விளையாட்டை பூஜை என்று ஞானிகள் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

ஆணின் பிறவிக் குணம் ஆதிக்க சிந்தனை

ஆணின் செயல்களில் ஆதிக்க சிந்தனை கசிந்தே தீரும். இது இயற்கை.

தடுக்க முடியாது. ஏனெனில், ஆதிக்கத்தைச் செலுத்தச் செய்யும் வேதிப்பொருள்

பெண்ணைக் காட்டிலும் பத்து மடங்கு கூடுதலாக ஆணின் உடலில் சுரக்கிறது.

அதற்கடுத்த காரணம், ஆணின் உடலில் உள்ள மரபணு.

மனித இனம் தோன்றிய நாள் முதலாக ஆண் தான் பெண்ணை பாதுகாத்து

வந்திருக்கிறான், நாடோடிகளாக இருந்தபோது விலங்குகளிடமிருந்து, குகை

வாழ்க்கையின் போது அண்டையில் வாழும் கும்பலை சேர்ந்த ஆண்களிடமிருந்து,

நாடுகள் தோன்றிய பின் அண்டை நாட்டு வீரர்களிடமிருந்து, என வரலாறு

நெடுகிலும் ஆண் தான் பாதுகாவலனாக இருந்திருக்கிறான்.

அதனால் எங்கும், எதிலும் ஆணே முன்னிறுத்தப் பட்டான், பெண்கள்

கூட ஆண் குழந்தையையே பெற்றெடுக்க விரும்பினார்கள். இன்றைய

பெண்ணுக்கும் இது பொருந்தும்.

ஆண் என்பவன் சமூகத்தைப் பாதுகாக்கின்ற சொத்தாகவும், பெண்

என்பவள் பாதுகாக்கப் படுகின்ற சொத்தாகவுமே மனித இனம்

தோன்றிய நாள்

முதல் இரண்டாம் உலகப் போர்வரை இருந்து வந்தார்கள்.

அதனால், ஆண் என்பவன் இலட்சக் கணக்கான ஆண்டுகள்

ணக்கான ஆண்டுகள்

ஆதிக்கத்துடனே செயல் பட்டிருக்கிறான். அதனால் அந்த ஆதிக்க சிந்தனை

அவனது மரபணுவிலும் இடம் பிடித்து விட்டது.

ஆதிக்கவாதியாக இல்லாமல், ஒரு பக்தனாகத் தான் களியாட்டங்களிலும்,

இன்பத் துய்ப்பிலும் ஒரு ஆண் ஈடுபட வேண்டும் என்கிற எண்ணத்தை மனதிற்

பதிக்கச் செய்யும் பொருட்டே காதல் லீலைகளைப் பூஜை என்கிற பெயரிலே

அன்றைய ஞானிகள் அழைத்திருக்கிறார்கள். இந்தப் பொருளுடன் இதைப்

புரிந்து கொள்வது தான் இன்பத் துய்ப்பிற்கான முதற் படி.

இன்பத் துய்ப்பில் பங்கேற்க தாவரங்களின் பாலுறுப்புக்கள் தேவை

மலர்கள் தான் தாவரங்களின் பாலுறுப்புகள். ஆனால், மலர்கள் இல்லாமல்

தெய்வ பூஜைகளே இல்லை. மதன மாளிகையில் நடைபெறும் பூஜையும் இதற்கு

விதி விலக்கல்ல. முதற் காரணம், மலர்களின் நறுமணம் பாலுணர்வைத் தூண்டி

விடும் இயல்புடையது.

இரண்டாவது காரணம் மலர்கள் நினைவூட்டிகளாக இங்கே செயல்

படுகின்றன, பெண்ணின் உடல் மலரைப் போன்றது. ஆணின் தோலை விட

பெண்ணின் தோல் ஆறு மடங்கு மென்மையானது.

உதாரணமாக, ஆணி என் தோலைப் பெண்ணுக்குப் போர்த்தினால்,

நீச்சலுடையை அணிந்திருப்பதைப் போன்ற உணர்வு பெண்ணுக்கு ஏற்படும்.

ஆகவே மலரைப் போன்று தான் பெண்ணின் உடலைக் கையாள

வேண்டும் என்கிற தகவலை ஒவ்வொரு வினாடியும் ஆணுக்கு நினைவூட்டிக்

கொண்டிருக்கவும் மலர்கள் தேவைப்படுகின்றன. நினைவூட்டா விட்டால்,

பருமனான தோலைக் கொண்ட ஆண் முரட்டுத்தனமாக நடந்து கொள்வான்

என்பதற்காக மதன மாளிகையில் நடைபெறும் பூஜைக்கு மலர்கள் தேவை.

இந்த உண்மையை ஆணுக்கு உணர்த்தவும், பெண்ணின் உடலை மலரைப்

தான் கையாள வேண்டும் என்கிற கருத்தை ஆண் மறந்து செயல்பட்டு

விடக் கூடாது என்பதற்காகவும் தான் முதலிரவுப் படுக்கை மலர்களால்

அலங்கரிக்கப்படுகிறது. ஆகவே இன்பத் துய்ப்பின் போது படுக்கையிலே மலர்கள்

தூவப் பட்டிருக்க வேண்டும்.

இதற்கான சூத்திரம். தெய்வீகமான புனிதமான பூஜைக்கு

பயபக்தியும், மலர்களும் தேவை.

இன்பத்துய்ப்பு ஒரு தவம்

இன்பத் துய்ப்பு ஒரு தவம். "நான்" என்கிற அகம்பாவத்தை, சில

வினாடிகளாவது கொல்லும் தவம். இடையற்ற சிந்தனைக்கு மனம் விடை

கொடுக்கின்ற தவம்.

அன்பு என்கிற கடவுளை மையமாய்வைத்து நடைபெறும் தவம். ஆகவே

அது தெய்வீகமானது, தெய்வீகமான செயல் நடைபெறும் இடம் புனிதமானது.

ஆகவே, படுக்கையறை மிகவும் புனிதமான இடம்.

படுக்கையறை தனியறையாக, தம்பதியரின் தனிமைக்கு முக்கியத்துவம்

அளிப்பதாக, சுத்தமானதாக, இயற்கைக் காற்றோட்டமுள்ளதாக, நறுமணம்

மிக்கதாக, மெல்லிசை ஒலித்துக் கொண்டிருப்பதாக இருக்க வேண்டும். இது

அடிப்படைத் தேவை.

வாய்ப்பற்றோர் கூடுமான வரை தனிமைக்கு முக்கியத்துவம் அளிக்கின்ற

பகுதியைத் தேர்வு செய்து கொள்வது நல்லது. தனிமைக்கு வாய்ப்பில்லாத போது,

ஆணின் உணர்ச்சியைக் கட்டுப்படுத்துவது கடினம். பெண்ணுக்குரிய உச்ச கட்ட

இன்பங்கள் நிகழ்வது அரிது.

தம்பதியர் இருவரும் படுக்கையறைக்குள் நுழையும் முன் ஒன்றாய்ச் சேர்ந்து

குளித்தல் சிறப்புடையது. அதற்கு வாய்ப்பற்றோர் தனித் தனியாகவேனும்

குளித்துக் கொள்வது நல்லது.

குளியல் அளிக்கின்ற புத்துணர்வோடு இன்பத் துய்ப்பில் ஈடு ட்டால், புற

விளையாட்டுகளில் நீண்ட நேரத்தைச் செலவிட முடியும். அது பெண்ணுக்குரிய

உச்ச கட்ட இன்பங்களை நிகழ்த்த உதவியாயிருக்கும். ஆகவே குளியல் அவசியம்.

குளிக்க வாய்ப்பற்றோர் குறைந்த ட்சம் முகம், கை, கால், அக்குள் மற்றும்

பாலுறுப்புக்கள் போன்ற பகுதிகளைக் கழுவிக் கொள்வது மிக மிக அவசியம்.

அவ்வாறு தன்னைச் சுத்தப் படுத்திக் கொள்ளாமல், இன்பத் துய்ப்பில் ஈடுபடக்

கூடாது.

குளிக்காமல் தவம் செய்யக் கூடாது**.**

நுண்ணுயிர்களின் இருப்பிடம் வாய், பற்களின் இடுக்குகளில் சிக்கிக்

கொண்டிருக்கும் உணவுத் துணுக்குகள் கெடத் தொடங்கி, கோடிக்கணக்கான

நுண்ணுயிர்கள் வாய்க்குள் உருவாகியிருக்கும்.

அதன் விளைவாய் வாயிலிருந்து ஒரு வித வாடை வரும். ஆகவே, இன்பத்

துய்ப்பில் ஈடுபடும் முன் வாயையும், நாக்கையும் சுத்தப் படுத்திக்

கொள்வது மிக

மிக அவசியம்.

கூடவே தாம்பூலம் தரித்தல் அல்லது நறுமணம் வீசும் உணவுப் பொருளை

மென்று கொண்டிருத்தல் தனிச் சிறப்புடையது. ஆனால், வாயைக் கூட சுத்தப்

படுத்திக் கொள்ள வாய்ப்பற்றோர் இன்பத் துய்ப்பில் ஈடுபடக்கூடாது.

துர்நாற்றத்தோடு இன்பத் துய்ப்பில் ஈடுபட்டால், காதல் விளையாட்டுக்களில்

மனம் லயிக்காது, மனம் லயித்தாலும், லயிக்காவிடினும் ஆணுக்குரிய இன்பம்

நிகழ்ந்து விடும்.

ஆனால், மனம் லயிக்காத இன்பத் துய்ப்பால், மனைவிக்குரிய உச்ச கட்டப்

பாலின்பம் நிகழாது.

மனைவிக்கு இன்பத்தை அளிக்காத இன்பத் துய்ப்பு தவச் செயல் அல்ல.

அது ஒரு பாவச் செயல்.

ஒரு பெண்ணின் விரக தாபத்தைத் தீர்க்காதவன் மனிதனே அல்ல என்று

பண்டைய சாஸ்திரங்கள் கூறுகின்றன.

அது பெண்ணின் உடலைப் பயன்படுத்தும் ஒரு அற்பச் செயல்.

பெண்ணின் உடற்பசியைத் தீர்க்காத இன்பத் துய்ப்பு, பாலின்ப ஆற்றாமையை

ஏற்படுத்துகிறது. பாலின்ப ஆற்றாமையால், மனைவியின் மன நிலை

தன்னுணர்வற்ற நிலையில் கொதி நிலையடைகிறது. அக்கொதி நிலை

அவளுக்கே தெரியாமல் அவளுடைய ஒவ்வொரு செயலிலும் வெளிப்படுகிறது.

மனநிலை தொற்றக் கூடியது. ஆகவே கணவனிடம் ஒட்டிக் கொள்கிறது.

இருவருடைய மனநிலையும் கொதி நிலையடையும் போது, தம்பதியரிடையே

நிலவும் உறவு சீர் குலைகிறது. ஆகவே, துர் நாற்றச் சூழலில் ஒரு போதும் இன்பத்

துய்ப்பில் ஈடுபடக்கூடாது.

இதற்கான சூத்திரம்.குளிக்காமல் தவம் செய்யக் கூடாது.

நன்றி தெரிவிக்கும் பூஜை.

ஒரு செயலைத் துவங்கும் முன்பே நன்றி தெரிவித்தல் என்பது உளவியல்

பார்வையில் வெற்றிக்கான முதற் படி. ஆகவே நன்றி தெரிவிக்கும் பூஜை தான்

மதன மாளிகையில் நடைபெறக் கூடிய முதல் பூஜை. மேலும், இது தான் இரு

உடல்களை தயார்ப் படுத்தும் முதற் செயல். ஆகவே நற்செயலோடு விழா

துவக்கமாகிறது.

ஒருவர் எதிரில் மற்றவர் சம்மணமிட்டு அமரவும். முழங்கால்கள் இரண்டும்

பட்டும் படாமல் லேசாக உரசிக் கொண்டிருக்க, உடல் நேராக நிமிர்ந்திருக்கட்டும்.

கண்களிரண்டும் தழுவிக் கொள்ளட்டும். கண்களைப் பார்த்தபடி இருத்தலின்

மூலமாக ஒருவரிடம் உள்ள அன்பு இனியொருவரிடம் பாய்கிறது.

உதாரணமாக, ஒருவருடைய கண்களைப்பார்த்தபடியே அவர் மீது கோபிக்க

முடியாது. அந்த அளவிற்கு பார்வைக் கதிர்கள் ஆன்மாவைச் சாந்தப்படுத்துகிறது.

ஆன்மா என்பது ஆழ்மனம், கண்கள் அதன் கதவுகள். பார்வைக் கதிர்களால்

ஒருவரை ஒருவர் தழுவிக் கொள்வதே பரஸ்பரம் அடுத்தவருடைய ஆன்மாவுக்கு

நன்றி தெரிவிக்கும் செயல்,

என் அன்பே! நன்றி! என் உயிரின் நாதமே நன்றி! என் உடல் நலத்தின்

மூலமே நன்றி என் மன நலத்தின் ஆதாரமே நன்றி! எனக்கு வாய்த்த அற்புதப்

பரிசே நன்றி! பேரின்பத்தைத் தருகின்ற வள்ளலே நன்றி! பேரானந்தப்

படுத்துகின்ற இன்பச் சாளரமே நன்றி! நான் பெற்றுள்ள பிறவியை

முழுமையாக

வாழ உதவும் உனக்கு என் நன்றி! என் மனப்பூர்வமான நன்றி!

நடப்பவை அனைத்தும் தெய்வச் செயல்களே.

என்னுடைய வருத்தங்கள் அனைத்தும் இந்த நன்றியறிவிப்போடு முடிந்து

போயிற்று. நான் உன்னை விரும்புகிறேன். என் மனதார விரும்புகிறேன். அந்த

விருப்பத்தின் முன்னால் நிற்கும் சக்தி எந்த வருத்தங்களுக்கும் கிடையாது.

நிரந்தரமாக உன் மீது சினம் கொள்ள வாய்ப்பே இல்லை. ஏனெனில், நான்

உன்னை என் உயிராகவே கருதுகிறேன். என் உயிரை மதிப்பதை விடக்

கூடுதலாக நான் உன்னை மதிக்கிறேன்.

நமக்குள் நடப்பவை அனைத்தும் தெய்வச் செயல்களே, ஏனெனில்,

நாமிருவரும் சிவனும் சக்தியுமாக ஒருயிராகவும், ஒருடலாகவும் இணைந்தி

ருக்கிறோம். ஆம், சிவனும் சக்தியும் நாமே. ஆகவே நாமிருவரும் கடவுளாய்

இங்கே இணைந்திருக்கிறோம். இவ்வாறு என்னுடன் இணைந்திருப்பதற்கு நன்றி,

என்னுடன் தொடர்ந்து பயணிப்பதற்கு நன்றி.

நாம் இப்போது நம் இன்பப் பயணத்தை இணைந்து துவங்குவோம். நம்

தவம் துவங்குகிறது. துவங்கு முன் நான் உனக்கு நன்றி தெரிவிக்கிறேன், நன்றி,

நன்றி. நன்றி, இப்படி அவரவர் விருப்பப்படி சொல்லிக் கொள்ளலாம். சொல்பவை

மனதில் பதியும். பதியும் ஒவ்வொரு விதையும் உரிய வேளையில் விளையும்.

சுவாசிக்கத் தெரிந்தவனுக்கு வியாதிகள் வராது. ஆனால், மனிதர்களுக்கு

சுவாசிக்கத் தெரியாது என்பது ஒரு பழமொழி.

முறையான சுவாசம் உடலையும், மனதையும் தளர்வு நிலையில்

வைத்திருக்கும் இயல்புடையது. மதன மாளிகையில் நடைபெறும்

பூஜைக்கு

அடித்தளமே தளர்வு நிலை தான்.

மனமும் உடலும் தளர்வான நிலையில் இருக்க வேண்டும் என்பதே இங்கு

முதல் விதி.

ஆகவே, பகல் நேர, அல்லது பணி நேர வருத்தங்களால் ஏற்பட்டுள்ள மன

அழுத்தத்தையும், உடல் இறுக்கத்தையும் இப்போது செய்யப் போகும் சுவாசப்

பயிற்சியால் தளர்த்திக் கொள்ளலாம்.

இருவரும் நேரெதிராக சுவாசித்தல், அதாவது சுவாசத்தை ஒருவர்

உள்ளிழுக்க வேண்டும். அப்போது மற்றவர் சுவாசத்தை வெளி விட வேண்டும்.

சுவாசத்தை 1:4:2 என்கிற விகிதத்தில் முறையே உள்ளிழுத்தல் உள்ளேயே

வைத்திருத்தல் வெளிவிடுதல் என்று பகிந்து கொள்ளவும்.

ஆழமாக உள்ளிழுக்கவும், உள்ளேயே வைத்திருக்கவும். முழுக் காற்றையும்

வெளியே தள்ளவும், வெளித்தள்ளும் போது, உதடுகளைக் குவித்து புகையாளி

புகையைத் தள்ளுவதைப் போல தள்ளவும். ஒருவருடைய சுவாசம் அடுத்தவர்

மீது படுவதைப் போல வெளிவிடவும்.

இதை ஒன்பது சுற்றுக்கள் செய்யவும். அப்போது கண்கள் நான்கும் தழுவிக்

கொண்டிருக்கட்டும். இது இரண்டு நிமிட வேலை மட்டுமே. ஆனால், இன்பத்

துய்ப்பிற்குத் தேவைப்படும் சக்தியை கூடுதலாக்கும் திறன் இந்தச் சுவாசப்

பயிற்சிக்கு உண்டு.

இதற்கான சூத்திரம். பரிமாறிக் கொள்வதன் மூலம் பராமரிக்கப் படாத

அண்பும், தண்றியுணர்வும் நாளடைவில் செத்துப் போகும்.

சிரசு பூஜை

நன்றி தெரிவித்துக் கொண்ட பிறகு சிரசு பூஜையைத் துவங்க வேண்டும்.

இன்பத் துய்ப்பின் போது எதற்காக மண்டையோடு விளையாட வேண்டும்?

இன்பத் துய்ப்பிற்கும் மண்டைக்கும் இடையே உள்ள தொடர்பு என்ன என்கிற

கேள்விகள் சிலருக்கு எழலாம்.

இன்பத் துய்ப்பில் ஈடுபடக்கூடிய உறுப்புக்கள் எதுவாக இருந்தாலும்,

பாலின்பத்தை மூளை தான் உணர்கிறது. மூளை தான் இன்பத்தை

அனுபவிக்கிறது. மேலும், பாலின்பத்தை நிகழ விடாமல் செய்யக்கூடிய ஒரு கட்டுச்

சோற்றுப் பூனையாகவும் அதே மூளை தான் செயல்படுகிறது.

இன்பம் நிகழ்ந்தால் அதை அனுபவிப்பதும் மூளை. அதே இன்பத்தை நிகழ

விடாமல் தடுப்பதும் மூளை என இந்த விவகாரத்தில் மூளை இரட்டை வேடம்

போடுகிறது.

அதாவது அரைத் தூக்கத்தில் இருப்பதைப் போன்ற நிலையில் மூளை

இருக்கும் போது தான் உடலில் இன்பம் நிகழும். முழுத்திறனுடன் மூளை

இயங்கிக் கொண்டிருக்கும் வரை இன்பம் நிகழாது. ஆகவே மூளை செயல்பட்டுக்

கொண்டிருக்கும் வேகத்தைக் குறைத்து, இயங்கியும், இயங்காமலும் உள்ள

நிலைக்குக் கொண்டு வர வேண்டும்.

இந்த நிலையை "ஆல்ஃபா நிலை" என ஆங்கிலத்திலும், "தூங்காமற் தூங்கிச்

சுகம் காணும் வேளை" என்று நம் ஞானிகளும் அழைக்கிறார்கள். அந்த நிலையை

உருவாக்கவே, இரண்டாவது பூஜையாக, சிரசு பூஜையைச் செய்யும் படி இந்திய

ஞானிகள் வலியுறுத்துகிறார்கள்.

தலையில் முடி வளர்ப்பது பெண்ணை அழகாய்க் காட்டுவதற்கு

மட்டுமல்ல.

அதுவும் ஒரு பாலுணர்வு மையமாகவே பெண்ணின் உடலில் இருக்கிறது.

உதாரணமாக, ஒரு ஆண் மகனைக் கண்டு மனம் மயங்கும் போது பெண்ணின்

முதல் சமிக்ஞையே கையால் தலை முடியைச் சற்றே ஒதுக்கி விட்டு தன் கழுத்தை

அவனுக்குக் காட்டுவது தான். ஆகவே தலைமுடி என்பது ஒரு பால் சார்ந்த

அவயமாகவே காம சூத்ராவால் கருதப் படுகிறது.

மேலும் உச்சகட்ட இன்பம் பெண்ணின் உடலில் நிகழப் போகிறது என்பதை

முன் கூட்டியே அறிவிக்கின்ற அறிவிப்பாளனாகவும் தலை முடி. செயல்படுகிறது.

அதாவது தலை முடி கலைவது பற்றிப் பெண் கவலைப் படாத போது அவள்

இன்பத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறாள் என்று பொருள்.

காமத்தின் தலைவர்

வாய் ஒரு மறைக்கப்படாத யோனி, வாயின் உதடுகளை ஒத்ததாகவே

யோனியின் உதடுகளும் இருக்கும்.

மேலும், உதடுகளுக்கும் பாலுணர்விற்கும் இடையே நெருங்கிய தொடர்பு

உள்ளது, பெண்ணின் மனம் பால் வேட்கையால் தூண்டப்படும் போது,

யோனியில் இன்பத்தேன் சுரக்கும். இது ஆணுக்குத் தெரியாது. ஆகவே ஆணுக்கு

இதைத் தெரியப் படுத்துவதற்காக பெண்ணின் வாய் உதடுகள் சற்றே சிவப்பாக

மாறும்.

அவ்வாறு சிவப்பதன் மூலமாக பெண்ணின் வேட்கை நிலையை ஆணுக்குத்

தெரியப்படுத்தும் தூதுவர்களாக வாயின் உதடுகள் செயல்படுகின்றன. இதைப்

பண்டைய ஞானிகள் தெளிவாக அறிந்திருக்கிறார்கள், அதன்

நிமித்தமாகத் தான்

அவர்கள் தாம்பூலத்தைக் கண்டு பிடித்தார்கள்.

உணவுச் செரிமானத்திற்கு உதவுவதற்காக மட்டுமே தாம்பூலம் கண்டு

பிடிக்கப்படவில்லை. காமத்தைத் தூதுரைக்கவும், கிளர்தெழுந்துள்ள காமத்தைக்

கூடுதலாகத் தூண்டி விடுவதற்கும் சேர்த்தே இந்திய ஞானிகளால் தாம்பூலம்

கண்டுபிடிக்கப் பட்டது. அது இப்போது உதட்டுச் சாயமாக மாறிவிட்டது.

தாம்பூலத்தால் சிவந்து போயுள்ள பெண்ணின் உதடுகள் மீது தனது

உதடுகளை வைத்து, ஒரு ரோஜா மலரின் மீது தேய்ப்பதைப் போல் தேய்ப்பது,

நாவால் பட்டும் படாத வகையில் வருடி அந்தத் தாம்பூலச் சாற்றின் சுவையை

சுவைப்பது, உதடுகளை மென்மையாகக் கடித்து வெளிப்புறம் நோக்கி இழுப்பது,

தனித் தனியாகவும், ஒன்றாகவும் சேர்த்து உதடுகளை உறிஞ்சுவதன் மூலம்

தாம்பூலச் சாற்றை தனது வாய்க்குள் கொண்டு வருவது, போன்ற செயல்களின்

மூலமாக பெண்ணின் பாலுணர்வை உச்சிக்குக் கொண்டு செல்லலாம் என தந்த்ரா

நூல்கள் தெரிவிக்கின்றன.

இதற்காக தாம்பூலம் தரித்த படி பாலுறவில் ஈடுபடுவது ஒரு விதியாகவே

கடந்த காலத்தில் அனுசரிக்கப் பட்டிருக்கிறது. ஆயிரம் ஆண்டுகளுக்கு

முன்னால், தாம்பூலம் தரிக்காமல் இன்பத் துய்ப்பில் ஈடுபடக் கூடாது.

கண்ணின் இமைகளையும், புருவங்களையும் மென்மையாக வருடுதல்,

கண்ணைச் சுற்றிலும் வட்டமிடுதல், மூக்கின் நுனியை வருடுதல், வெளிப்புறம்

நோக்கி மூக்கு நுனியை மென்மையாக இழுத்து விடுதல் போன்ற

விளையாட்டுக்களில் ஈடுபடுவதன் மூலமாகவும் பெண்ணின் மனதைக்

கிறக்கத்தில் ஆழ்த்த முடியும்.

காதும் கூட ஒரு பாலுணர்வு மையமே, அதனால் காதின் இதழ்களை

வருடுதல், மென்மையாகப் பிடித்து மடல்களின் உள்ளேயுள்ள அழுக்கைத்

துடைத்தல், காமத்தைத் தூண்டும் வார்த்தைகளை கிறக்கத்தோடு கூறுதல்

போன்ற செயல்களின் மூலமாகக் காதோடு விளையாடலாம்.

முடியைமிருதுவாகத் துளாவுதல், குழந்தையின் தலையைத் தடவி விடுவது

போல் தடவி விடுதல், கண், காது, மூக்கு, உதடுகள், கன்னம், நெற்றி, மோவாய்,

கழுத்து என அனைத்து பகுதிகளின் மீதும் கை விரல்களின் நுனிகளைப் பட்டும்

படாத மாதிரி படவைத்து, சிறு பூச்சியொன்று ஊர்வதைப் போல் மென்மையாக,

வருடுதலின் மூலமாகப் பெண்ணின் மூளையைக் கிறங்கடிப்பதற்குப் பெயர் தான்

சிரசு பூஜை. இது மூன்று முதல் ஐந்து நிமிடங்கள் வரை நடத்தப் பட வேண்டும்.

சிரசு பூஜையின் போது, மூளையில் வாழும் பேரரசி எல்லையற்ற

மகிழ்ச்சியடைகிறாள். அதனால் பினியல், பிட்யூட்டரி சுரப்பிகளுக்கு சந்தோசமாக

உத்தரவிடுகிறாள். அவை நூற்றியாறு வகையான வேதிகளைச் சுரக்கின்றன.

அதனால், பெண்ணின் காம உணர்வானது பயம்,கோபம், வெறுப்பு போன்ற

உணர்ச்சிகளைக் கடந்து வேகம் பெறுகிறது. அதுமட்டுமன்றி உடலில் உள்ள

அனைத்து சக்கரங்களும், சக்தி மையங்களும் அவற்றிற்குரிய நியமங்களின் படி

இயங்கத் தொடங்குகின்றன. அதன்மூலம் உடல் நலமும் பாதுகாக்கப் படுகிறது.

இதற்கான சூத்திரம், கால்களுக்கிடையில் வசித்துக் கொண்டிருக்கும் காம்

தேவதைகளை ஆட்சி செய்யக் கூடிய காமதேவன் காதுகளுக்கிடையே

தான்

வசித்துக் கொண்டிருக்கிறான்.

பாத பூஜை

அதன் பின் மெதுவாக கைகளைக் கீழிறக்கிக் கொண்டே வரவும்,

பெண்ணின் உடலுக்கும் கையின் விரல் நுனிகளுக்கும் இடையிலான தொடர்பு

அறுபடக் கூடாது. அதே சமயத்தில், அமுத பீடங்களையோ, புனிதப்

பகுதியையோ தொடவும் கூடாது. அவற்றைக் கடந்து, வயிறு, தொடைகள்,

கால்கள் என பாதங்களை வந்தடைய வேண்டும்.

தன் பாதங்களை கணவன் தொடும் போது, எந்த மனைவியும் தடுக்க

மாட்டாள், பெண் மனதின் அடியாழத்தில் படிந்து கிடக்கின்ற பயம் காரணமல்ல,

ஒரு ஆணின் கை தன் பாதங்களிலே படுவதை பெண் விரும்புகிறாள்.

அது அவளது ஆளுமையைப் புலப்படுத்துவதோடு, அவளது முக்கியமான

உணர்வுப் புள்ளிகளையும் தீண்டுகிறது. கணவன் தன் மீது கொண்டுள்ள

ஏராளமான அன்பின் வெளிப்பாடாகவும் மனைவி இதை எடுத்துக் கொள்கிறாள்.

ஆகவே, மிக மிக மெதுவாக, மிருதுவாகத் தொடும் போது, அந்தத்

தொடுதலை பெண் தடுக்க மாட்டாள். தடுக்கிற மாதிரி ஏதேனும் செய்தாலும்

அதில் உறுதி இருக்காது. ஆகவே, மனைவியின் உள் வட்டத்திற்குள் எளிதாக

நுழைந்து விடலாம். முதலில் மனைவியின் பாதங்களைத் தொட வேண்டும். இது

கெஞ்சுவதற்கல்ல. அங்கேயுள்ள பாலுணர்வு மையங்களைத் தீண்டுவதற்கானது.

பாதங்கள் நடப்பதற்கு மட்டுமே உரியவை அல்ல. உடலில் உள்ள ஒவ்வொரு

பகுதியோடும் தொடர்பு வைத்துக் கொண்டிருக்கின்ற நூற்றுக் கணக்கான

புள்ளிகளை அவை கொண்டிருக்கின்றன.

அக்கு பிரசர் மருத்துவம் அதை பற்றித் தெளிவாகப் பேசுகிறது. அதன் படி,

பாதத்தில், கட்டை விரலை அடுத்துள்ள மேடான பகுதி மிக முக்கியமான ஒரு

பாலுணர்வு மையம். விரல்களின் நுனிகள் அனைத்துமே பாலுணர்வு மையங்கள்.

அவற்றை, அழுத்தி விடும் போது பல துன்ப உணர்ச்சிகள் மறைகின்றன.

மன அழுத்தம் குறைகிறது, கணவனின் மீது ஏதேனும் கோபம் இருந்தால் அது

மறைகிறது. மாமியாரின் மீதுள்ள குரோதம் மறைகிறது. பயம் போகிறது.

நெருக்கம் அதிகரிக்கிறது. கணவனின் மீது அன்பு உருவாகிறது.

பழைய சண்டைகளைப் பற்றிய ஞாபகம் மறைகிறது. மனதிலுள்ள கெட்ட

எண்ணங்கள் மறைந்து, பாலின்ப உணர்வுகள் கிளர்ந்தெழுகின்றன.

ஆகவே பாத பூஜை என்பது பெண்ணுக்குரிய இன்பத்தை, மனைவியின்

உடலில் நிகழ்த்தும் பொருட்டு, மனைவியின் மூளையை மயக்க மிக மிக

முக்கியமானது.

பாதங்களின் அடிப்பகுதியில், ஒவ்வொரு சதுர அங்குலத்திலும், நகத்தால்

மிருதுவாக, குத்தி விட வேண்டும்.

அதையடுத்து, ஒவ்வொரு விரலையும் தடவி விட்ட படியே, நுனி விரலின்

அடிப் பகுதியை மட்டும் மிருதுவாக நசுக்கி விட வேண்டும்.

அடுத்து, கட்டை விரல் தொடங்கும் இடத்திற்கு அருகிலுள்ள, மேடான

பகுதியை, நன்றாக அழுத்தி விட வேண்டும். இது மூன்று நிமிடங்கள் வரை நிகழ்

வேண்டும்.

இன்பத் துய்ப்பைப் பொறுத்த வரை, எந்த இரண்டு பெண்களும் ஒரே

மாதிரியானவர்கள் அல்ல. ஒரே பெண்ணின் அடுத்தடுத்த முறைகள் ஒரே

மாதிரியாக இருக்காமல் போக வாய்ப்புண்டு. அந்தந்த நேரத்தில் நிகழும் மன

நிலை மாற்றமே இதற்கான காரணம்,

பெண்ணுக்கு வித விதமாக இருப்பதே பிடிக்கும். மாதாந்திர சுழற்சிக்கேற்ப

விதங்களில் மாற்றங்கள் தேவைப்படலாம்.

இதற்கான சூத்திரம். தங்கக் கொலுசையும், வெள்ளி மிஞ்சியையும்

விட, கணவணின் கைகளே மனைவியரின் கால்களை அதிகமாக

மகிழ்விக்கக் கூடியவை.

சரீர பூஜை

பெண்ணின் உடலில் உள்ள மிகப் பெரிய பாலுறுப்பு தோல், பெண்ணின்

தோல் ஆணின் தோலை விட ஆறு மடங்கு மென்மையானது. அதனால் அந்த

மென்மைக்கேற்ற அளவிற்கு உணர்ச்சிகளை உணரக்கூடியது.

உதாரணமாக பார்வைக் கதிர்களின் தீண்டலைக் கூட உணரும் சக்தி

பெண்ணின் தோலுக்கு உண்டு.

ஆண் எப்போதுமே வேட்டைக்கோ, போருக்கோ சென்று

கொண்டேயிருந்தான், அதனால் அவனுடைய வெளிப்புற அறனான தோலானது

முட்புதற்களால் கீறப் படுவது, ஆயுதங்களால் காயப் படுத்தப் படுவது,

விலங்குகளின் கால் நகங்களால் பிறாண்டப் படுவது, சக ஆணின் விரல்

நகங்களால், சூரிய ஒளிக் கதிர்களால் தீண்டப்படுவது என எப்போதுமே

ஆபத்துக்கு ஆளாகிக் கொண்டேயிருந்திருக்கிறது. அதனால், ஆணின் தோல்

தன்னைச் சற்று பருமனாக மாற்றிக் கொண்டு விட்டது.

சூழலுக்கேற்ப உடலில் நிகழும் மாற்றம் இது. உதாரணமாக கணிணியோடு

பணிபுரிபவர் மண் வெட்டியோடு பணியாற்ற நேர்ந்தால் அவருடைய

உள்ளங்கையும், விரல்களும் கடினத் தன்மையுடையதாக மாறி விடும். தன்னைப்

பாதுகாத்துக் கொள்வதற்காக உடல் தன் அரணை வலுப்படுத்திக்

கொள்வதைப்

போன்றது இது.

ஆனால் பெண்ணானவள் குகை வாழ்க்கை தொடங்கிய பிறகே ஆணின்

வாழ்க்கை முறையோடு ஒப்பிடும் போது, சற்று சொகுசாக வாழும் நிலைக்கு தன்

வாழ்க்கை முறையை மாற்றிக் கொண்டாள்.

குகையைக் காத்தல், சுத்தப் படுத்துதல், குழந்தைகளைப் பெறுதல்,

ஆளாக்குதல், அருகில் உள்ள இலை தளைகளையும், பழங்களையும் பறித்து

வருதல், ஆண் கொண்டு வருகின்ற வேட்டைப் பொருளை உண்ணும் நிலைக்கு

மாற்றுதல், ஆணின் காயங்களுக்கு பச்சிலைச் சாறு பூசுதல், பாலின்பத்தை

வழங்குதல் என்பதாகத் தான் பெண்ணின் வாழ்க்கை முறை இருந்திருக்கிறது.

அதனால் அவளுடைய தோல் மென்மையானதாகவே தன்னை வைத்துக்

கொண்டிருக்கிறது. உதாரணமாக, யாராலோ தான் உற்றுப் பார்க்கப் படுவதை ஒரு

ஆண் மகனால் உணர முடியாது. ஆனால், எப்படிப்பட்ட சூழலிலும் பிறரால் தான்

பார்க்கப் படுவதை, ஒரு பெண்ணால் உணர முடியும்.

அதாவது முதுகின் மையத்தை அல்லது கழுத்தின் பின் புறத்தை அல்லது

பிட்டத்தை என் பின் புறத்திலிருந்து யாராவது பார்த்தால் கூட, அதைக் கண்டு

பிடித்து விட பெண்ணால் முடியும்.

ஏதோவொரு தாக்குதலுக்கு ஆளானதைப் போல் திடீரெனத் திரும்பித்

தன்னைப் பார்க்கிற நபரை பெண் பார்த்து விடுவாள்,

அதாவது, பார்வைக் கதிர்களின் தீண்டலைத் கூட உணரும் அளவிற்கு

பெண்ணின் தோல் மென்மையானது. அந்த மென்மைக்குப் பொருத்தமான

தீண்டலுக்கு ஆளாகும் போது, பால் சார்ந்த உணர்வலைகளை உருவாக்கக்

கூடியது.

“அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர் அடிக்கு நெருஞ்சிப் பழம்.”

அனிச்ச மலரும், அன்னப் பறவையின் சிறகும் கூட பெண்ணின் உடல் மீது

படும் போது நெருஞ்சி முள்ளில் குத்தியதைப் போல அவள் உணர்வாள் என்று

வள்ளுவர் கூறுகிறார்.

பெண் உடலில் அமைந்துள்ள பாலுணர்வு மையங்கள்,

அணங்க ரங்கா காலில் சொல்லியுள்ள படி. தலைமுடி, தலை, தெற்றி,

கண்கள், உதடுகள், மூக்கு, காதுகள். கழுத்து, கன்னங்கள், கொங்கைகள்,

கொங்கையின் இதழ்கள், கொங்கையின் பரிதி வட்டப்பகுதி, முதுகெலும்பு,

வயறு, பிட்டம், கைகள், கை விரல்கள், தொடைகள், முழங்காலின்

பின்புறம், பாதங்கள், கால் விரல்கள், இடுப்பு, யோனி, மதன மேடு, ஆசன

வாயின் சுருக்குத் தசை நார்கள், மூலாதாரப் பகுதி, தொப்புளைச்

சுற்றியுள்ள பகுதி இது தவிர சொல்லாமல் விடப்பட்ட இதர உடல் பாகங்கள்

அனைத்தும் பெண்ணுடலின் பாலுணர்வு மையங்களே.

வயிற்றுப் பகுதியில் தொப்புளைச் சுற்றியுள்ள பகுதி முழுவதுமே பாலுணர்வு

மையங்கள், பெண்ணின் பாலுணர்வைத் தூண்டக்கூடிய வேதிப் பொருளைச்

சுரக்கக் கூடிய சினைப்பை, கருப்பை, சிறுநீர்ப்பை என அனைத்து உறுப்புகளும்

தொப்புளைச் சுற்றித் தான் இருக்கின்றன.

ஆகவே வயிற்றுப் பகுதி முழுவதும், ஒற்றை விரலால், பட்டும் படாத மாதிரி

சிறு சிறு வட்டங்களை வரையும் படி ரதி ரகசியங்கள் என்கிற நூல் சிபாரிசு

செய்கிறது.

பாதங்களில் என்ன செய்யப்பட்டதோ அதே போல மனைவியின் மொத்த

உடலிலும் ஒரு அங்குல இடைவெளி கூட இல்லாமல் மயிலிறகால் வருடுவதைப்

போல் வருடுதல், மற்றும் சதைப்பிடிப்பான பகுதிகளை மென்மையாக அழுத்தி

விடுதல், பிசைந்து விடுதல் தான் சக்திக்குரிய சரீர பூஜை என்று

அழைக்கப்படுகிறது.

அந்த நிலையிலும் புனித குகையையோ, மதன பீடத்தையோ, அமுத

படங்களையோ நேரிடையாகத் தொடக்கூடாது. அதோடு, மனைவி விரும்பாத

எந்த இடத்தையும் எக்காரணத்தை முன்னிட்டும், கண்டிப்பாகத் தொடக்

கூடாது.

முக்கியமான தகவலொன்று இங்கே உள்ளது. ஒரு பெண் உலக

அழகியாகவோ அல்லது பிரபஞ்ச அழகியாகவோ இருந்தாலும் கூட அவளுக்கும்

தன்னுடைய உடலில் உள்ள ஏதாவது ஒரு பகுதி பற்றி ஒரு தாழ்வான கருத்து

இருக்கும்,

தன்னுடைய லிங்கம் சற்று சிறியதாக இருக்கிறது என்றொரு எண்ணம்

ஆணுக்கு இருப்பதைப் போலவே, பெண்ணுக்கும் தன் உடலில் உள்ள ஏதாவது

ஒரு பகுதி பற்றி ஒரு தாழ்வான கருத்து இருக்கும். அந்தப் பகுதியை ஆணுக்குக்

காட்ட மாட்டாள். ஆகவே அந்தப் பகுதியைப் பார்க்கவோ, அல்லது தொடவோ

இப்போது முயற்சிக்கக் கூடாது.

மயிலிறகால் வருடுவது போல்

பெண்ணின் உடல் முழுவதும், மயிலிறகால் வருடுவது போல் வருடிய

படியே, சுவாசத்தைக் கவனித்துக் கொண்டிருக்கவும்,

சுவாசத்தின் வேகம் அதிகரிக்கத் தொடங்கியதும் சதைப் பிடிப்பான

கெண்டைக்கால், உட்புறத் தொடைகள், இடுப்பு, பிட்டம், முதுகு,

கழுத்து,

கைகள் போன்ற பகுதிகளை மென்மையாகவும், மிருதுவாகவும் பிசைந்து விடத்

தொடங்கவும்,

சதைப் பிடிப்பான பகுதிகள் அனைத்தும், கட்டுக்கள் நிறைந்த பகுதிகள்.

ஆகவே அவற்றைத் தளர்த்தி விடும் பொருட்டு, அந்தப் பகுதிகளில் உள்ள

தசைகளைப் பிசைந்து விட வேண்டும்.

மேலும் அந்தப் பகுதிகளைப் பிசைந்து விடும் போது அங்கே இரத்த

ஓட்டத்தின் வேகம் அதிகரிக்கும்.

இரத்த ஓட்டம் அதிகரிக்கும் போது, உடலின் எந்தப் பகுதியில் கூடுதலான

பணி நடைபெற்றுக் கொண்டிருக்கிறதோ அந்தப் பகுதிக்குத் தான் அதிகமான

இரத்தத்தை இதயம் அனுப்பும்.

இப்போது பால் மண்டலத்தில் தான் பணி நடைபெற்றுக்

கொண்டிருக்கிறது. அதனால் புனிதப் பகுதியை நோக்கி இரத்தம் வரத்

தொடங்குகிறது.

அவ்வாறு கூடுதலான இரத்தம் வருவதால், மதன மேடும், புனிதப் பகுதியும்

சற்றே வீக்கமடைந்தது போல் உருமாறுகிறது,

மதன பீடத்தில் உள்ள எட்டாயிரம் நரம்புகளிலும், இரத்தம் பாயத் தொடங்கி

விட்டதால் மதன பீடம், கொஞ்சம் கொஞ்சமாக உயிர்த்தெழத் தொடங்கி,

உதடுகளை தள்ளிக் கொண்டு வெளிவரத் தொடங்குகிறது.

இவ்வாறு மதன பீடம் உயிர்த்தெழத் துவங்கும் போது, பால் மண்டலத்தைச்

சேர்ந்த பல உறுப்புக்களில் உணரத்தக்க அளவிலான மாற்றங்கள் ஏற்படுகின்றன.

கொங்கைகள் சற்றே பெரிதாகின்றன. கொங்கையின் இதழ்கள்

விரைப்படைகின்றன. புனித குகைக்குள் இன்பத்தேன் சுரக்க குகையின்

நுழைவாயில் பெரிதாகிறது. யோனியின் வெளியுதடுகள் விரிகின்றன.

அவ்வாறு நிகழும் போது, ஆணின் கைகளை எடுத்து தன் முக்கியமான

இடங்களின் மீது வைப்பது, அல்லது தன்னையறியாமல் முக்குதல், முன்குதல்,

நெளிதல், வேகமாக மூச்சு வாங்குதல், ஆண் உடலைத் தீண்டுதல், ஆணைத்

தன் மீது இழுத்துப் போட்டுக் கொள்தல், இழுத்துப் பிடித்து முத்தம் தருதல் எனத்

தன்னை மறந்த நிலைக்குள் மனைவி செல்கிறாள்.

ஆணின் அரங்கத்திற்குள் பந்து வந்து விட்டதற்கான அறிகுறிகள் இவை.

இதற்குப் பின்னால் தான் புனிதப் பகுதியை நோக்கி ஆணின் கவனம் திரும்ப

வேண்டும். இதற்கு பெயர் தான் சக்திக்குரிய சார பூஜை.

இதற்கான குத்திரம், மொழியின் ஒவ்வொரு எழுத்தும் தெரிந்தால்

தான் இலக்கணம் கற்க முடியும். அதே போல, பெண்ணுடலின் ஒவ்வொரு

சதுர அங்குலத்தையும் தீண்டினால் மட்டுமே இன்பத்தை நிகழ்த்த

முடியும்.

**7.** காதல் விளையாட்டுக்களில் நாவின் பங்கு**.**

மனைவியின் யோனியை தன் முக்கால். நாவால். உதடுகளால் அளவிடவும்

சுன்னத்தால் சுத்தப் படுத்தவும் தெரிந்தவன் வாழ்வில் போட்டியாளனே இருக்க

முடியாது. -ரதி ரத்ன பிரதிப் கா.

நாக்கு, மிகவும் வலிமையான ஆயுதம். அதே சமயத்தில் மோசமான எதிரி.

பயன்படுத்தும் விதம் தான் இதைத் தீர்மானிக்கிறது. இதை கர்ப்பக் கிரகம் என்று

ஞானிகள் அழைக்கிறார்கள்.

அதாவது சாளரமற்ற குகையான வாய்க்குள் இருப்பது மட்டுமின்றி,

மனிதனின் தலை விதியைத் தீர்மானிக்கக் கூடிய சக்தியாகவும் இருப்பதால்

நாக்கு அவ்வாறு அழைக்கப் படுகிறது.

குட்டி போட்டு பாலூட்டி வளர்க்கும் விலங்கினங்கள் அனைத்துமே இனச்

சேர்க்கையில் ஈடுபடும் முன்பாக அவற்றின் வாயையும், நாவையும் தான் முதலில்

பயன்படுத்துகின்றன,

மனிதனும் குட்டி போட்டு பாலூட்டி வளர்க்கும் விலங்கினத்தைச்

சேர்ந்தவனே.

வேறுபாடு என்னவெனில், மனிதன் பயிற்றுவிக்கப் பட்ட விலங்கு. மேலும்

பாலின்பத்தை இன்பத்திற்காகவும் அனுபவிக்கும் கொடையைப் பெற்றுள்ள

விலங்கு.

மற்ற விலங்குகள் அனைத்தும் இனவிருத்திக்காக மட்டுமே இணை

சேர்கின்றன. அதனால் தான் அவற்றின் மூளை வளர்ச்சி அடையவில்லை.

மனிதன் இன்பத்திற்காகவும் பாலுறவில் ஈடுபட்டதால் அவனுடைய மூளையில்

நுண்ணறிவை உருவாக்கும் வேதிகள் அடிக்கடி சுரந்ததன் காரணமாக, அறிவு

வளர்ச்சியடைந்து விலங்கினங்களின் அரசனாக இருக்கிறான்,

மனிதர்களிலே கூடப் பாலின்பப் பஞ்சமற்றவனே மகத்தான

வெற்றியாளனாகிறான், மற்றவர்கள் அவனைப் பின் தொடர்கிறார்கள். கோடியில்

ஒருவன் விதி விலக்கு.

விலங்கினங்களின் தலைவனான மனிதனும் துவக்க காலங்களில் இன்பத்

துய்ப்பின் போது தன்னுடைய நாவைத்தான் பயன்படுத்திக் கொண்டிருந்தான்.

அந்தச் செயல் இப்போது முத்தம் என்கிற அளவோடு முடிந்து விடுகிறது. அது

தவறு.

இனச்சேர்க்கையின் போது வாயிலே நஞ்சை வைத்திருக்கும்

உயிரினங்களைத் தவிர மற்ற உயிரினங்கள் அனைத்துமே வாயைத் தான்

முதலில் பயன்படுத்துகின்றன.

லிங்கமும் யோனியும் மட்டுமே பங்கு பெறும் விளையாட்டில்

பெண்ணுக்குரிய இன்பங்கள் நிகழ்வதற்கான வாய்ப்பு மிக மிகக் குறைவு.

பெரும்பாலும் உராய்வால் ஏற்படும் இன்பத்துடனே துய்ப்பு முடிந்து போகும்.

அதனால், உடனடியாக பெண்ணின் மனநிலையும், நீண்ட கால நோக்கில்

அவளது உடல்நிலையும் பாதிக்கப்படும். ஆகவே தன்னுடைய நாவைப்

பயன்படுத்த ஆண் தயங்கக் கூடாது.

தயங்குவோர் திருமணம் என்கிற பெயரில் ஒரு பெண்ணைத் தன்னுடன்

சேர்த்துக் கொண்டு, போகப் பொருளாகப் பயன்படுத்துவதன் மூலமாக,

அவளுடைய மனதை மலரவே விடாமல் நாசப் படுத்தக் கூடாது.

உண்மையான உடல் நலத்தின் அடிப்படையில் பார்த்தாலும், ஆணின்

வாயையும் நாவையும் அங்கே வைக்க அனுமதிக்கும் பெண்ணுக்குத் தான் நன்றி

சொல்ல வேண்டும்.

எனெனில், கோடிக்கணக்கான நுண்ணுயிரிகளின் வாழுமிடமாக வாய்

இருக்கிறது. ஆனால், பெண்ணின் யோனி தன்னைத்தானே சுத்தப்படுத்திக்

கொள்ளும் இயல்போடு படைக்கப் பட்டிருக்கிறது. ஆகவே, யோனியை விட,

வாய் ஆபத்தானது.

அதனால் தான் இன்பத் துய்ப்பிற்கு முன்னால் கண்டிப்பாக வாயைச் சுத்தப்

படுத்தி கொள்ள வேண்டும் என்கிற கருத்து வலியுறுத்தப் படுகிறது.

யாகாவாராயினும் நா காக்க**.**

நாவால் வெல்ல முடியாதது என்று எதுவுமே இல்லை. இன்பத் துய்ப்பிற்கும்

இக்கருத்து பொருந்தும்.

நாவைப் பயன்படுத்த வேண்டிய முறையில் பயன்படுத்தினால்,

எப்படிப்பட்ட பெண்ணிற்கும் இன்பம் நிகழ்ந்தே தீரும். விதிவிலக்கே இல்லை.

பாலின்பத்தைப் பொறுத்த வரை அந்த அளவிற்கு நாக்கு வலிமையானது.

நாவிற்கு இணை நாக்கு மட்டுமே.

யாகாவாராயினும் நா காக்க என்பது தான் இன்பத்துய்ப்பில் முதல் விதி.

அதாவது முழு நாவையும் பயன்படுத்தக் கூடாது. பாம்பின் நாக்கு வெளி

வருவதைப் போல் தான் ஆணின் நாக்கு வெளி வர வேண்டும்.

வர்ணம் பூசுபவர் தனது தூரிகையால், மதிற் சுவரில் வர்ணம் பூசுவதைப்

போல ஒரே இழுவையாக இருக்கக் கூடாது.

பட்டும் படாமல், சுவையுணரும் மொட்டுக்கள் மட்டுமே தீண்டுகிற

அளவிற்குத் தான் துவக்கத்தில் நாவைப் பயன்படுத்த வேண்டும்,

பெண்ணுடலின் எப்பகுதியிலும் நாவைப் பயன்படுத்தலாம். வாய், கழுத்து,

இடுப்பு, முழங்காலின் பின்புற மடிப்புக்கள், பாதங்களின் கட்டைவிரலுக்கு

அருகிலுள்ள மேடுகள், உட்புறத் தொடைகள், மதன மேடு, புனிதப் பகுதி,

யோனியின் உள் உதடுகள், மதன பீடம் போன்றவை தவற விடக் கூடாத

பகுதிகள்.

புனிதப் பகுதிக்குப் போகும் முன்பாக, ஒரு காலின் முழங்காலில் தொடங்கி

அடுத்த காலின் முழங்கால் வரை, உட்புறத் தொடைகளின் மீது அரை அங்குல

இடைவெளியில் நாவால் எழுத்துக்கள் எழுதலாம். படம் வரையலாம்.

அவ்வாறு எழுதிக் கொண்டு வரும் போது, புனிதப் பகுதியின் மீதும்,

யோனியின் வெளியுதடுகளின் மீதும் தவறுதலாகப் பட்டு விட்டதைப் போல்

மெலிதாகத் தீண்டிச் செல்லலாம். அவ்வாறு செய்யும் போது பெண்ணின் ஏக்கம்

அதிகரிக்கும் என்று ரதிரகசியங்கள் என்கிற நூல் கூறுகிறது.

முழங்கால் வரையிலான விளையாட்டு முடிந்ததும் உட்புறத் தொடைகளின்

மீது ஒவியம் வரைந்த படியே புனிதப் பகுதியை நெருங்கலாம்.

புனிதப் பகுதிக்குள் நுழையும் போது எந்த அளவிற்கு மென்மையாக

நாவைக் கையாள முடியுமோ அந்த அளவிற்கு மென்மையாகக் கையாள்

வேண்டும்.

வெளியுதடுகளின் மீது முதலில் நெடுக்கு வசமாக கீழிருந்து மேல் நோக்கி

மிகமிக மெதுவாக நாவை நகர்த்தவும். உதடுகள் விரிந்திருந்தால் ஒவ்வொரு

உதடின் மீதும் ஊர்ந்து செல்லவும்.

இரண்டு முறைகள் இவ்வாறு செய்ததும் பாம்பு ஊர்வதைப் போல் குறுக்கும்

நெடுக்குமாக செல்லும் வகையில் நாவை நகர்த்தவும்.

அவ்வாறு நகர்த்தும் போது உதடுகள் பிரிந்திருந்தால், உட்புறத்திலும்

நாவைப் பட வைக்கலாம். மேலும் சிறுநீர்த் துவாரத்தைச் சுற்றி நாவால் மிக

மெல்லிய அதிர்வுகளை உருவாக்கலாம்.

நாவிற்கு இணையான ஆயுதம் எதுவுமில்லை.

புனிதப் பகுதியின் மேல்மட்டமான மதன மேட்டிற்குச் செல்லும் போது,

மதன பீடத்தைச் சுற்றி நான்கைந்து வளையங்களை வரையலாம். மேலுதடுகளின்

இணைப்புப் பகுதியில் அதிர்வுகளை ஏற்படுத்தலாம்.

கீழே வரும் போது வாய் திறந்திருந்தால், உள்ளேயுள்ள உதடுகளை

மெலிதாய்த் தீண்டலாம், படவேயில்லையோ என்கிற அளவில் தீண்டவும்.

பின் அந்த உதடுகளின் மீதே வட்டமிடவும். யோனியின் நுழைவாயிலை

நாவால் அளந்து பார்த்தபடியே அதிர்வுகளை ஏற்படுத்தவும். நாவை யோனிக்குள்

நுழைப்பதைப் போல் பாசாங்கு செய்யவும்.

யோனியின் கீழ்ப்புறத்திலே உள்ள இணைப்புப் பகுதியில் சற்றே அழுத்தம்

கொடுத்து நாவைப் பயன்படுத்தவும்.

மூலாதாரப் பகுதி வழியே ஆசன வாயின் நுழைவாயில் வரை சென்று ஆசன

வாயைச் சுற்றியும் வட்டமிடலாம்.

ஆசன வாய் மிக முக்கியமான பாலுணர்வு கேந்திரம். எனினும், அதை

நாவால் தீண்டுவது அவரவர் விருப்பத்தைப் பொறுத்தது. கட்டாயமில்லை.

இவ்வாறு செய்யும் போது பெண்ணின் முழுக் கவனமும் புனிதப் பகுதியில்

மட்டுமே இருக்கும், மூளையின் கவனம் முழுவதும் எந்தப் பகுதியின் மீது

இருக்கிறதோ அந்தப் பகுதிக்கு அதிக இரத்தத்தை அனுப்ப வேண்டும் என்பது

இதயத்திற்கு இடப் பட்டுள்ள இயற்கையான கட்டளை,

அதனால், அங்கே அதிக அளவில் இரத்தம் வரும். அதனால் புனிதப்பகுதி

சற்றே வீக்கமடையும். அப்போது மதனபீடத்தின் எட்டாயிரம் நரம்புகளிலும்

இரத்தம் நுழைந்து அதை விரைப்படையச் செய்யும்.

மதன பீடம் உதடுகளைத் தள்ளிக் கொண்டு வெளிவரத் தொடங்கும்.

மனைவி தன் கட்டுப்பாட்டை இழந்து கணவனின் கட்டுப்பாட்டிற்குள் வந்து

விடுவாள். அவ்வாறு வந்த பிறகும் கணவன் தன் கவனத்தைத் திசை மாற விட்டு

விடக்கூடாது.

ஏனெனில், இப்போது தான் மதனபீடம் உயிர்த்தெழுந்திருப்பதால், அதை

மென்மேலும் வீரியமடையச் செய்வதில் தான் கவனம் செலுத்த

வேண்டும்.

மதனபீடத்தை மூன்று விரல்களால் பிடிக்கும் அளவிற்குப் பெரிதாகும் வரை,

கணவனின் கவனம் சிதறி விடக் கூடாது.

அதே மதனபீடத்தின் மீது நாவை வைத்து குழந்தைகள் ஐஸ்க்ரீமைச்

சுவைப்பதைப் போலத் தீண்டிக் கொண்டிருக்கலாம்.

அப்போது யோனியிலிருந்து கசியும் இன்பத்தேன் வழியத் தொடங்கும். இது

தான் இன்பத் துய்ப்பில் ஈடுபடும்படி பெண்ணின் உடல் ஆணுக்கு விடுகின்ற

அதிகார பூர்வ அறிவிப்பு,

அதாவது விரக தாபத்தின் உச்ச நிலை. இதற்குப் பெயர் தான் நாவைப்

பயன்படுத்தி நடத்தப்படுகின்ற சக்திக்குரிய சரீர பூஜை.

இந்த நிலையிலும் ஆண் தன்னுடைய லிங்கத்தைப் பயன்படுத்தக் கூடாது.

சபலம் ஏற்படும். எனினும் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டும்.

இல்லாவிட்டால் கையருகில் வந்துள்ள பெண்ணுக்குரிய உச்சகட்ட இன்பம்

கைநழுவிப் போய்விடும்.

அந்நிலை பெண்ணின் மன நிலையைக் காயப்படுத்தி விடும். அதன்

விளைவுகளைப் பற்றி ஏற்கெனவே சொல்லப்பட்டுள்ளது. அதனால் அடுத்த

பூஜையைச் செய்வதில் கவனத்தைச் செலுத்த வேண்டும்.

இதற்கான சூத்திரம்-தன்னை நம்பிக் கரம் பிடித்த மனைவியை,

போகப் பொருளாகப் பயன்படுத்தும் மடமையை அழிக்க நடத்தப்

படுகின்ற போரின் போது, நாவிற்கு இணையாக ஆணுக்கு உதவக் கூடிய

ஆயுதம் இந்த உலகில் இன்னும் கண்டுபிடிக்கப் படவில்லை,

## **8.** யோனி பூஜை.

திருமணம் மகிழ்ச்சிக்கான ஒரு உத்தரவாத பத்திரமல்ல, ஆனால், ஆழ்மன

வேட்கையின் தணிப்பு ஒரு நிச்சயப் பத்திரம், -காம சூத்ரா.

யோனி பூஜை என்பது வேறொன்றுமல்ல, புனிதப் பகுதியைப் பிசைந்து

விடுதல், வருடி விடுதல், தேய்த்து விடுதல் மற்றும் அழுத்தி விடுதல் போன்ற

செயல்களின் மூலமாக, புனிதப் பகுதியை நோக்கி இரத்தத்தை வரவழைக்கின்ற

செயலையே யோனி பூஜை என்று இந்திய ஞானிகள் கூறியிருக்கிறார்கள்.

ஒரு பெண்ணுடன் ஆண் நடத்தச் சாத்தியமுள்ள காதல் விளையாட்டுக்கள்

அனைத்திலும், ஆணின் மீது மிதமிஞ்சிய அன்பையும், நம்பிக்கையையும்,

நெருக்கத்தையும் உருவாக்குவதில் முதலிடத்தைப் பிடிப்பது யோனி பூஜை,

இதற்கிணை ஏதுமில்லை,




புனிதப் பகுதியின் உச்சியில் மதன

பிடம் இருந்தாலும் அதனுடைய வயிற்றுப்
பகுதியும் கால்களும் யோனியின் இரு
புறத்திலும் தான் இருக்கின்றன,
படத்தைப் பாருங்கள்.
அவை இரத்தத்தால் நிறைக்கப்
படும் போது தான், மதன பீடமும்
இரத்தத்தால் நிரப்பப்பட்டு பெரிதாகி,
உடலை விட்டு வெளியே வரத்
தொடங்கும். ஆகவே மதன பீடத்தின்
கால்கள் உள்ள பகுதிக்கு இரத்ததைக்
கொண்டு வருவதற்காக அந்தப்பகுதியில்
மசாஜ் செய்யப் பட வேண்டும். அது
இவ்வாறு தொடங்குகிறது.
முதல் விதி இது. பெண்ணின் புனிதப் பகுதி நாற்பத்தைந்து டிகிரி
கோணத்தில் மேல் நோக்கி இருக்கும் படியான நிலைதான் பெண்ணுக்குரிய
இன்பங்களைத் தருவதற்கான மிகச் சிறந்த நிலை.
ஆகவே, பிட்டங்களுக்குக் கீழே ஒரு தலையணையைத் தராமல் புனிதப்
பகுதியோடு தொடர்புடைய எந்தச் செயலையும் செய்யக் கூடாது.
மனைவியின் பிட்டங்களுக்குக் கீழே ஒரு தலையணையை வைக்கவும்.
கால்களிரண்டிற்கும் இடையில் அமர்ந்த படி, புனிதப் பகுதியை முழுமையாக
மூடுவதைப் போல் அதன் மீது உள்ளங்கையை வைக்கவும். கையின் நடுவிரல்
மதன மேட்டின் மீது நேர்க்கோட்டில் இருக்கட்டும், மணிக்கட்டை ஒட்டியுள்ள
மேட்டுப்பகுதி யோனியின் மீது இருக்கட்டும், கையை இவ்வாறு வைத்தபடி
முப்பது விநாடிகள் வரை அங்குள்ள கூடுதலான வெப்பத்தை உணர்ந்தபடி
வெறுமனே இருக்கவும்.

அதன்பின், மிக மெல்லிய அளவில் அதிர்வுகளை உருவாக்கத் தொடங்கவும்.

ஒரு நிமிட அதிர்வுகளுக்குப் பின் அதிர்வுகளின் வேகத்தைச் சற்றுக் கூட்டிய

படியே யோனியின் மேற்புறத்திலும், இரு பக்கங்களிலும் மட்டும் மிதமான

அழுத்தத்தைக் கொடுக்கவும். அவ்வாறு கொடுத்த படியே அதிர்வுகளின்

வேகத்தை அதிகரிக்கவும்.



மேலும் இனி யொரு கையால், மதன

மேட்டின் மீதும் மிருதுவாகப் பிசைந்து விடவும்.

ஆக, ஒரே நேரத்தில் ஒரு கையால் இரு

பக்கத்திலும் உள்ள பகுதியை அதிர்வுகளோடு

அழுத்தி விட்ட படியே, இனியொரு கையால்

மதன மேட்டின் மீதும் மசாஜ் செய்ய வேண்டும்.

புனிதப் பகுதியின் மேல் மட்டத்தில் உள்ள

உதடுகளை ஒரு குழந்தையின் கன்னத்தைக்

கிள்ளுவதைப் போல் தொடர்ந்து நசுக்கி விட்டுக்

கொண்டேயிருந்தாலும், நான்கைந்து

நிமிடங்களில் மதன பீடம் உயிர்த்தெழத்

தொடங்கி விடும்,

பிசைதல், பிசைதல். எல்லாவற்றையும் விட, பெண்ணுக்கு அதிக இன்பம்

தருகின்ற இன்பத் துய்ப்பு பிசைதல். இவ்வாறு சொன்னதும், கொங்கைகளைப்

பற்றிய நினைவு தான் ஆண்களுக்கு வரும். ஆனால், பெண்ணின் உடலில்

பிசையப் பட வேண்டிய பகுதிகளில் பிட்டமும், தொடைகளும் முதலிடம்

பிடிப்பவை, அதையும் கடந்து முதலிடம் பிடிப்பது புனிதப் பகுதி, அப்பகுதியைப்

பிசைதல் ஒரு மருத்துவச் செயலும் கூட. இதை ஆங்கிலத்தில் “பெல்விக் மசாஜ்”

என்று சொல்வார்கள். புனிதப் பகுதியைப் பிசைவதன் மூலம், பெண்ணின்

பைத்திய நிலை கூட குணமாக்கப் பட்ட வரலாறு மருத்துவர்களிடம் உண்டு.

இரண்டு கைகளையும் பயன்படுத்தி, கீழிருந்து மேல் நோக்கிச் சற்று

அழுத்தமாக, ஐந்து நிமிடங்கள் வரை தடவிக் கொண்டேயிருக்கலாம். ஒற்றை

விரலால், இருபுறமும் உள்ள மேடான பகுதியை அழுத்தமாகத் தேய்த்து விட்டுக்

கொண்டிருக்கலாம். உதடுகளை மென்மையாகக் கடிக்கலாம். மிருதுவாகக்

கிள்ளலாம். நாசூக்காக நசுக்கலாம். கட்டி சேர்ந்து விட்ட கோதுமை மாவை

உடைக்கப் பிசுக்குவதைப் போலப் பிசுக்கலாம். ஒன்றாகச் சேர்க்கலாம், புனிதப்

பகுதியின் இருபுற மேடுகளை இவ்வாறு அழுத்திப் பிசைவதன் மூலம்

மனைவியை சொர்க்கத்திற்குள் அழைத்துச் சென்று, மன நிலையை நேர்

மறைக்குக் கொண்டு வந்து விடலாம்.

ஆனால், இத்தகைய பிசைவுகளுக்கு உயவுப் பொருள் மிகவும்

முக்கியம்.

இல்லா விட்டால் எரிச்சல் ஏற்பட்டு விடும்.



கட்டியாக உள்ள சாதத்தைப் பிசைவதைப் போல் பிசையலாம். அப்படியே அழுத்திப் பிடித்திருக்கலாம், பக்கவாட்டை நோக்கி விரிக்கலாம். வெளிப் புறமாக இழுக்கலாம். உட்புறம் நோக்கித் தள்ளலாம். ஆசிரியர் ஒருவர் தன் மாணவனின் காதைப் பிடித்துத் திருகுவதைப் போல் திருக்கலாம்.

மதன மேட்டை நன்றாகப் பிசைந்து விடலாம். தொப்புளைச் சுற்றிலும் அதே போலப் பிசைந்து விடலாம். உட்புறத் தொடைகளையும் பிசைந்து விடலாம். நாவால் தடவலாம். உறங்க வைப்பதற்காகக் குழந்தையின் முதுகைத் தட்டிக் கொடுப்பதைப் போல் தட்டிக் கொடுத்துக் கொண்டேயிருகலாம்.

படுக்கையறையில் ஒலித்துக் கொண்டிருக்கும் பாடலுக்கேற்ப, கை விரல்களால்

புனிதப் பகுதியின் மீது தாளம் கூடப் போட்டுக் கொண்டிருக்கலாம்.




இப்படி பெண்ணுக்கு வலிக்காத அளவில் எதை

வேண்டுமானாலும் செய்யலாம். ஏனெனில்,

மென்மையான முறையில் எதைச் செய்தாலும் அதை

ரசிக்கின்ற வகையில் தான் புனிதப் பகுதி படைக்கப்

பட்டுள்ளது. மேலும், புனிதப் பகுதியைப் பொறுத்த வரை இவை கூடப்பாலுறவே.

இதே பூஜையை பெண்ணின் பக்க வாட்டில்

அமர்ந்த படியும் செய்யலாம். அவ்வாறு அமரும்போது எந்தக் கை இயல்பாக

வரக்கூடிய கையோ அந்தக் கையை யோனியின் மீது வைக்கும் வகையில் தான்

அமர வேண்டும், அடுத்த கையை அமுதபீட பூஜைக்கோ அல்லது சரீர

பூஜைக்கோ ஒதுக்கி விடலாம்.

அது தவிர, வெளியுதடுகளின் முகப்பை மென்மையான முறையில்

மிருதுவாகக் கிள்ளி விடலாம். கீழிருந்து துவக்கி, வலது புறமாக மேல் நோக்கிச்

சென்று இடது புறத்தில் கீழிறங்கலாம். இவ்வாறு மூன்று சுற்றுக்கள் வரை செய்ய

வேண்டும்.

ஒரு சுற்றை முடிக்க ஒரு நிமிடம் எடுத்துக் கொள்ள வேண்டும். ஓட்டப்

பந்தயம் நடத்தக் கூடாது. உதடுகளைக் கிள்ள இரண்டு கைகளையும் பயன்

படுத்துவது நல்லது.

இவ்வாறெல்லாம் செய்யும் போது, யோனியின் சுற்றளவு சற்றே அதிகமாகும்.

அதாவது, அகலத்திலும், நீளத்திலும், ஆழத்திலும் சற்றே விரிவடையும். அதோடு

யோனியின் சுவர்களில் உயவுத் திரவமும் சுரக்கத் தொடங்கும்.

அவ்வாறு யோனி விரிவடைவதும், தளர்வாயிருப்பதும் தான் பாலுணர்வால்

பெண் உந்தப் பட்டிருப்பதற்கான அடையாளம். மற்றபடி, பாலுறவை விரும்பாத

யோனி தான் மிகவும் இறுக்கமாகவும், வறட்சியாகவும் இருக்கும்.

பல வியாதிகள் தடுக்கப்படுகிறது**.**

முதல் தேவை உயவுப் பொருள். ஆலிவ் எண்ணெய், திராட்சைக்கொட்டை

எண்ணெய், அல்லது கே.ஒய்.ஜெல்லி போன்ற ஏதேனும் ஒன்றைப்

பயன்படுத்தலாம்.

சமையல் எண்ணெய் போன்றவற்றைப் பயன்படுத்தக் கூடாது. உமிழ் நீர்

சிறந்த உயவுப் பொருள்.

உயவுப் பொருளைக் கையில் பூசிக் கொள்ளவும். தேவைப்பட்டால், புனிதப்

பகுதியின் மீதும் பூசலாம். அவ்வாறு பூசிய பின், இரண்டு கைகளின் கட்டை

விரல்களாலும் யோனியின் இரு புறத்திலும் உள்ள மேடான பகுதியை மேல்

நோக்கித் தேய்த்து விடவும்.

உதடுகளுக்குப் படாத வகையில் விரல்களைப் பயன்படுத்தவும். அப்போது

கையின் மற்ற நான்கு விரல்களையும் மடக்கிப் பிடித்துக் கொள்ளவும். அல்லது

தொடைப்பகுதியின் மீதும் விரல்களை வைத்துக் கொள்ளலாம்.

‘ஒரு நிமிடம் வரை இவ்வாறு செய்து விட்டு, இரண்டு கைகளின் அனைத்து

விரல்களையும் பயன்படுத்தி, புனிதப் பகுதியின் உதடுகளை மிக மென்மையாகப்

பிசையவும். உதடுகளை ஒன்றாகச் சேர்ப்பதைப் போல இறுக்கவும். தளர்த்தவும்.

இதுபோல் பதினெட்டு முறை செய்யவும். இவ்வாறு செய்வது, அந்தப் பகுதிக்கு

உடற்பயிற்சி அளிப்பதைப் போன்றது.

ஆகவே, இங்கே சொன்னவை தவிர, வேறு என்னவெல்லாம் செய்ய

விரும்புகிறீர்களோ, அனைத்தையும் பெண்ணின் சம்மதத்தோடு நீங்கள்

செய்யலாம்.

ஆனால், எதைச் செய்தாலும் ரோஜா மலரை மறந்து விடக் கூடாது. அதை

மறக்காமல் இருப்பதற்காகத் தான் படுக்கையில் சில மலர்களைத் தூவிக்

கொள்ளுங்கள் என்று சொல்லப்படுகிறது.

உடற்பயிற்சி எங்கே நடந்தாலும் அந்த இடத்திற்குக் கூடுதலான

இரத்தத்தை அனுப்ப வேண்டியது இதயத்தின் பணி. இது ஒரு இயற்கை விதி.

அதனால், புனிதப்பகுதியை நோக்கியும் இரத்தம் வரத் தொடங்கும்.

அதன் காரணமாக புனிதப் பகுதியே சற்று வீக்கமடைந்ததைப் போலக்

காட்சியளிக்கும். இவ்வாறு சற்றுப் புடைதெழுவது தான் அங்கே போதுமான

இரத்தம் வந்து விட்டதற்கான அறிகுறி.

இவ்வாறு அங்கே இரத்தத்தைக் கொண்டு வருவது இன்பத்தை

அனுபவிப்பதற்கு மட்டுமின்றி அந்தப் பகுதில் வாழும் உயிரணுக்களுக்குக்

கூடுதலான பிராண வாயு கிடைப்பதற்கும், உயிரணுக்களில் தேங்கிக் கிடக்கின்ற

கழிவுகளை அகற்றுவதற்கும் உதவிய செயலாகிறது. அதன் மூலம் அந்தப்

பகுதியில் வரக்கூடிய பல வியாதிகள் தடுக்கப்படுகிறது.

அதாவது, புனிதப் பகுதியே சற்று விக்கமடையும் அளவிற்கு அங்கே இரத்தம்

வருகிற போது, உடலுக்குள் உள்ள மொத்த பால் மண்டலமும் கூடுதலான

இரத்தத்தால் நிரப்பப் படுகிறது.

அதனால், சினைப்பை, கருப்பை, சிறுநீர்ப்பை மற்றும் அங்கேயுள்ள

சுரப்பிகள், திசுக்கள், நரம்புகள் என அனைத்துமே அதிகமான பிராண வாயுவைப்

பெறுகின்றன.

அதனால் அந்தப் பகுதிகளைத் தாக்கக் கூடிய பல வியாதிகள் தடுக்கப்

படுகின்றன. இவ்வாறு இந்த யோனி பூஜையானது பெண்ணின் உடல்நலத்தைப்

பாதுகாக்கக் கூடிய ஒரு தடுப்பு அரணாகவும் இருக்கிறது.

ஆகவே இன்பத்துய்ப்பு என்பது ஒரு இன்பச் செயல் மட்டும் அல்ல. அது

ஒரு இலவசமான மாமருந்து மற்றும் எந்தவிதமான பக்க விளைவுகளும் இல்லாத

ஒரு அரு மருந்தும் கூட.

இவ்வாறாக, புனிதப்பகுதி முழுவதும் இரத்தத்தில் நிறைந்துள்ள பிராண

வாயுவால் நிரம்புகிறது. அது தவிர, நோய்த் தொற்றிலிருந்து உயிரணுக்களைப்

பாதுகாக்கும் இராணுவ வீரர்களால் நிரம்புகிறது.

மேலும், பிராண வாயு எரிக்கப் படுவதால் உருவாகும் புகை மற்றும் சாம்பல்

போன்ற கழிவுகளால் உயிரணுக்களில் உருவாகக் கூடிய புற்றுநோய் போன்ற

கொலைகார நோய்களிலிருந்தும் உடலைப் பாதுகாத்துக் கொண்டிருக்கும்

இராணுவமான போர்ப்படை, அதிரடிப் படை, தற்கொலைப் படை போன்றவற்றின்

வீரர்களாலும் சூழப்படுகிறது.

அவ்வாறு உடலின் நண்பர்கள் அனைவராலும் சூழப்படும் போது தான்,

மதன பீடத்தில் உள்ள எட்டாயிரம் நரம்புகளிலும் இரத்தம் பாய்கிறது. அதனால்,

நேரத்திற்கு சுத்தப்படுத்திக் கொண்டிருக்க வேண்டும். அல்லது வெளியுதடுகளை

மென்மையாகக் கிள்ளி விடுவதன் மூலமாகவும் துவக்கலாம். இது மூன்று

சுற்றுக்களாவது செய்யப்படவேண்டும். அவ்வாறு செய்வதன் மூலம் புனிதப்புள்ளி

எப்போது தான் தீண்டப்படுமோ என்கிற எதிர்பார்ப்பை பெண்ணின் மனதில்

உருவாக்க வேண்டும். ஏக்கத்தை அதிகரிக்க வேண்டும்.

இவ்வாறு அரை வட்டமிடுவதில் எவ்வளவு நேரம் ஈடுபட வேண்டும்

என்பதை முன்கூட்டியே சொல்ல முடியாது. ஏனெனில், இது பெண்ணின் உடலில்

கிளர்ந்தெழுகின்ற அவ்வப்போதைய பாலுணர்வுக் கிளர்ச்சி சார்ந்தது. ஆனால்,

குறைந்த பட்சமாக ஒன்பது அரை வட்டங்களும், அதிக பட்சமாக பதினெட்டு

அரை வட்டங்களும் போதுமானது. ஒரு முறை அரை வட்டமிட ஆறு

வினாடிகளை ஒதுக்கி விட வேண்டும்.

அதன் பின், மேலும் அரை அங்குலம் உட்செலுத்த வேண்டும், அரை

வட்டமிட்ட படியே தான் விரலை உட்செலுத்த வேண்டுமே தவிர, ஒரு போதும்

நேரிடையாகச் செலுத்தக் கூடாது. மேலும் உட்செலுத்துவதை மனைவி உணார்

முடியாத அளவில் நூலிழை, நூலிழையாகத் தான் அதிகரிக்க வேண்டும்.

இவ்வாறு அதிகரித்த படியே அரை வட்டங்களின் அளவைச் சற்றே

பெரி தாக்கிக் கொள்ள வேண்டும். இவ்வாறு வட்டமிடுதலும், நுழைத்தலும்

ஒத்திசைவோடு கூடிய ஆடலும் பாடலுமாய் இருக்க வேண்டும்.

அதன் பின், மெதுவாக விரலின் இரண்டாவது ரேகை வரை விரலை

உட்செலுத்த வேண்டும். நெருடலாக இருக்கிற பகுதியும், மென்மையாக

இருக்கும் பகுதியும் இணையும் இடத்தை தாண்டிச் செல்ல வேண்டாம்.

அதன் பின் புனித குகையின் சுற்றுச் சுவர் முழுவதையும் விரல்களால்
மிக

மென்மையான முறையில் ஆராயத் தொடங்கவும். பாத்திரம் ஒன்றை
மிக

மெதுவாகக் கழுவுவதைப் போன்று விரலால் புனித குகையின் சுற்றுச்
சுவரை

மூன்று முறை மிருதுவாக ஆராயவும். அதன் அளவை மதிப்பிடவும்,
வான வில்

ஒன்றை விரலால் அளப்பது போல் அளந்து பார்க்கலாம். அதன் பின்
குகையின்

கூரைப்பகுதியில், உள்ள நெருடலாகத் தெரிகிற பகுதியில் நிலை
கொள்ளவும்.

இவ்வாறு நிலை கொண்டபின், அதாவது ஒன்றரை முதல் இரண்டு

அங்குலம் அளவிற்கு விரல் உள்ளே சென்ற பின் விரலின் சதைப்பகுதி

கூரையைத் தீண்டும் வகையில் வைத்தடி, மிகவும் செல்வாக்கு மிக்க
ஒரு மனிதர்

தன் கடை நிலை ஊழியரை உள்ளங்கை மேல் நோக்கியிருக்க
ஆள்காட்டி விரலைத்

தவிர மற்ற விரல்கள் அனைத்தும் மடங்கியிருக்க ஒற்றை விரலால்
அழைப்பதைப்

போல விரலை மிக மெதுவாக அசைக்க வேண்டும்.

வீனாடிக்கு ஒரு அசைவு இருக்கலாம். முப்பத்தாறு முதல் நூற்றி
யெட்டுத்

தடவை வரை அசைக்க வேண்டியிருக்கலாம். அவ்வாறு அசைக்கும்
போது

பெண்ணின் எதிர்ச்செயலைப் பொறுத்து வேகத்தையும்
அழுத்தத்தையும்

அதிகரிக்கலாம்.

நீரால் நிரப்பப் பட்ட பலூன்




அவ்வாறு அசைத்துக் கொண்டிருக்கும் போது இனியொரு கையால் மதன

பீடத்தைச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருக்கலாம். இரண்டு நிமிடங்கள் இதே

நிலைமை நீடிக்கும் போது, புனித குகையின் கூரையிலிருந்து நீரால் நிரப்பப்

பட்ட பலூனைப் போன்று நெருடலான ஒரு பகுதி உருவாகி கீழ் நோக்கி வரும்.

ஏறக்குறைய ஒரு போட்சம் பழ அளவில் அது இருக்கும்.

யோனிக்குழாயை அடைக்கும் அளவிற்கு அது பெரிதாகி வரும், வீரலையே

கூட வெளியே தள்ளுமளவிற்கு அது வலுவாக உருவாகும். நரம்புகள் நிறைந்த

பேரிட்சம் பழத்தைத் தொட்டால் எப்படியிருக்குமோ, அப்படித்தான் அந்தப்

புதிதாக உருவாகி வருகிற பகுதியும் இருக்கும், இது தான் பெண்ணின் புனித

குகையில் உள்ள புனிதப் புள்ளி அல்லது தெய்வீகப் பகுதியாகும்.




தெய்வீகப் பகுதி என்று தந்திரா

ஞானிகளாலும், புனிதப் புள்ளி என்று தாவோ

ஞானியராலும் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு

முன்பே இந்தப் பகுதியைப் பற்றிச்

சொல்லப்பட்டுள்ளது.

மேலும், ஆயிரம் வருடங்களுக்கு முன்

எழுதப் பட்டுள்ள அனங்க ரங்கா என்கிற

நூலில், யோனியின் கூரையில், “சஸ்பந்தா”

என்கிற ஒரு நரம்புக் கூடை இருப்பதாகவும்,

அதை முறையாய்த் தீண்டும் போது “காம்

சலீலா’ என்கிற திரவம் பெண்ணிடமிருந்து வெளியேறி, பெண்மைக் குணங்களை

முழுமையாக மலரச் செய்யும் என்றும் சொல்லப் பட்டுள்ளது.

ஆனால், 1950-ல் கிரே஼ஃபென்பெர்க். என்கிற ஒரு ஜெர்மானிய மருத்துவர்

தான் இதைக் கண்டு பிடித்ததாகக் கூறி, அவருடைய பெயரின் முதலெழுத்தை

வைத்து “G-ஸ்பாட்.” என்று மேற்கத்திய மக்களால் இப்போது குறிப்பிடப் படுகிறது.

தெய்வீகப் பகுதி பெரிதாகி விரலை வெளியே தள்ளும். அப்படித் தள்ளும்

போது சற்று அழுத்தத்தை அதிகரிக்கலாம், தீண்டலை வினாடிக்கு இரண்டென

வேகப் படுத்தலாம். அவ்வாறு செய்யத் தொடங்கும் போதே பெண் இன்பக்

கதறலில் ஈடுபடத் தொடங்கி விடுவாள். அழலாம். மெதுவாகக் கூச்சலிடலாம்.

மொழியற்ற வார்த்தைகளில் உளறலாம். அப்போது உச்ச கட்ட இன்பம் நிகழ்கிறது.

என்று பொருள். (“G-Spot” Orgasm: புனிதப் புள்ளி இன்பம்.- 12)

உச்சகட்டப் பேரின்பத்தின் போது என்ன நடக்கும் என்று சொல்லப்

பட்டிருக்கிறதோ அவையனைத்தும் நிகழலாம். பட்டாசுகள் வெடித்து

முடிந்தவுடனே, அந்த நரம்புக்கூடை காணாமல் போய் விடலாம். பெண் தொய்ந்து

போய் சுருண்டு படுத்துக் கொள்ளலாம்.

ஒரு சில பெண்களுக்கு விரலால் தேய்ப்பதைக் காட்டிலும், வேறொரு வகை

தான் பிடிக்கும். அதாவது மேற்கூரையிலிருந்து அந்த நரம்புக் கூடை உருவாகத்

தொடங்கியதும், அந்த நரம்புக் கூடையை வெறுமனே மூன்று விநாடிகள் வரை

அழுத்திப் பிடித்திருக்கவும். அதன் பின் மூன்று விநாடிகள் தளர்த்தவும்.

அதற்குள் அந்த நரம்புக்கூடை கீழ் நோக்கி வரத் தொடங்கும். அவ்வாறு வரும்

போது மீண்டும் மூன்று விநாடிகள் அதை மேல் நோக்கி அழுத்திப் பிடிக்கவும்.

இவ்வாறு மாற்றி மாற்றி அழுத்துதல், தளர்த்துதல் மூலமாக அந்த நரம்புக்

கூடையோடு மென்மையாக விளையாடிக் கொண்டிருந்தால், மூன்று முதல் ஐந்து

நிமிடங்களுக்குள் எந்த வகைப் பெண்ணாக இருந்தாலும் மனதை

கிறங்கடிக்கின்ற பிரம்மஸ்தான இன்பம் நிகழ்ந்தே தீரும். (Vaginal Orgasm:

பிரம்மஸ்தான இன்பம்.12-a)

தெய்வீகப் பகுதி

பெண்ணின் புனித குகையின் கூரையில் உள்ள புனிதப் புள்ளியைப்

பொறுத்த வரை, பெண்ணுக்குப் பெண் அதனுடைய இருப்பிடம் மாறியிருக்கலாம்.

மேலும், ஒரே பெண்ணிடமே கூட அடிக்கடி இடம் மாறுவதாகவும் இருக்கலாம்.

அதனால், குறிப்பிட்ட ஒரே இடத்தில் தான் அது எப்போதும் இருக்கும் என்று

கூற முடியாது.

ஆனால், ஒரு தகவலை உறுதியாகச் சொல்லலாம். புனித குகையின்

கூரையின் முதல் மூன்று அங்குலத்திற்குள் தான் இருக்கும். அதில்

மாற்றமிருக்காது.

அதனால் தான் அந்தப் பகுதியை தெய்வீகப் பகுதி என்று ஞானிகள்

குறிப்பிடுகிறார்கள். இந்த நூல் அந்தப் பகுதியை பிரம்மஸ்தானம் என்று

குறிப்பிடுகிறது.

இந்தப் தெய்வீகப் பகுதி தான் பெண்ணின் பால் சார்ந்த ஏக்கங்கள்,

எமாற்றங்கள், நிராசைகள் அனைத்தும் அடங்கிக் கிடக்கும் பகுதியாகும்.

அதாவது ஒரு நபர் உரிய வேளைக்கு உணவருந்தா விட்டால், அவருடைய

இரைப்பையின் உயிரணுக்கள் தான் முதலில் பாதிக்கப்படும். அதேபோல,

பாலின்ப ஆற்றாமையால் ஒரு பெண் தாக்கப்படும் போது இந்த

தெய்வீகப்பகுதியில் தான் அந்த வருத்தங்கள் சேமிக்கப் படுகின்றன.

இப்போது நிகழ்ந்த பேரின்பப் பிரளயத்தில் அவையெல்லாம் அடித்துச்

செல்லப்பட்டு விடும். பெண்ணின் மனம் அன்றலர்ந்த மலரைப் போல்

பெண்மைக்

குணங்களின் பிறப்பிடமாக மாறிப்போகும்.

சில வினாடிகள் மனமற்ற நிலையை பெண் அனுபவிக்கிறாள். மனம் தன்

சிந்தனையை முழுமையாக நிறுத்திவிடுகிறது.

வருடக் கணக்கில் குளிக்காமலிருந்த ஒரு நபர் ஒரு அற்புதமான குளியலைப்

பெறும் போது உடலுக்குக் கிடைக்கக்கூடிய புத்துணர்வைப் போன்ற புத்துணர்வை

பெண்ணின் மனமும், உடலில் வாழும் ஒவ்வொரு உயிரணுவும் பெறுகிறது.

உணர்வற்ற நிலையில் அமிழ்ந்து கிடந்த சக்தியனைத்தும் உயிர் பெற்று உடல்

முழுதும் பரவும் போது உடலின் ஒவ்வொரு உயிரணுவும் குதூகலமடைகிறது.

எலும்புகளில் வாழக்கூடிய உயிரணுக்கள் கூட பேருவகை கொள்கின்றன.

அதனால், பின்னாட்களில் வரக்கூடிய மூட்டு வலியும், எலும்புருக்கி நோயும் கூட

தடுக்கப் படுகிறது.

தெய்வீக சக்தி உடல் முழுவதும் பரவுகிறது. பெண் பேரானந்தத்தை

அனுபவித்துக் கொண்டிருக்கிறாள். இந்த இன்பத்தை நல்கிய ஆணின் மார்பில்

பெண் நிபந்தனையின்றி சரணடைந்திருப்பாள். இது தான் இயற்கை.

ஆண்மை நிரம்பிய ஆணிடம் பெண் சரணடைவது என்பது ஒரு

இயற்கையான நிகழ்வு. மனித இனம் உள்ள வரை மாற்ற முடியாத இயற்கை விதி

இது.

ஆதிக்கத்தின் முன் ஏற்படக்கூடிய சரணாகதி கபட நாடகம். ஆனால், இது

இன்பத்தால் விளைந்த அன்பால் உருவான சரணாகதி. உயிரைக் கூட

தியாகம்

செய்யத் தயாராக இருக்கும் அன்பால் உருவான சரணாகதி.

மேற்கண்ட பிரளயத்திலே பங்கேற்ற ஆணும் தனது இணையை விடக்

கூடுதலாகவே சரணடைந்திருப்பான், அதனால் அங்கே இருவர் இருக்க

மாட்டார்கள். இரு உடல்கள் இருக்கும். ஆனால், இருவருடைய சக்தியும் ஒன்றாகி,

அவர்களுக்கிடையே அசைக்க முடியாத ஆழமான அன்பை உருவாக்கியிருக்கும்.

அந்த தெய்வீக அன்பின் காரணமாக, அவர்கள் இருவருடைய மூளையிலும்,

சட்டம் பேசுகிற, உரிமை கோருகிற, ஆதிக்கம் செலுத்துகிற, குற்றம் காண்கிற

பகுதி முழுமையாக அழிக்கப் பட்டு விடும்.

மேற்கண்ட பிரம்மஸ்தான பூஜையைப்பற்றி சமஸ்கிரத நூல்களின் வாயிலாக

அறிந்து கொண்ட மேற்கத்திய மருத்துவர்கள், இந்த பூஜையை நடத்தி,

பெண்ணின் ஹிஸ்டீரியா (வக்கிர சிந்தனை) நோயைக் குணப்படுத்தும்

முறையை இருநூறு ஆண்டுகளுக்கும் மேலாகப் பின்பற்றியிருக்கிறார்கள்.

ஆனால், பெண்ணின் உடலில் உச்ச கட்ட இன்பத்தை உருவாக்கும்

அதிர்வியந்திரங்களும், மின்னணு ஆணுறுப்புகளும் வழக்கத்திற்கு வந்த பின்,

அந்த மருத்துவ முறைக்கு அங்கே அவசியமற்ற நிலை உருவாகி விட்டது.

ஏனெனில், ஒவ்வொரு பெண்ணிடமும் அவளுக்குரிய இன்பத்தை வழங்கும்

இயந்திரம் இப்போது அவளுடைய கைப் பைக்குள்ளேயே இருக்கிறது.

அவ்வாறு இயந்திரங்களைப் பயன்படுத்தத் தொடங்கியதால் தான் அங்கே

அன்பு காணாமற் போய்விட்டது. பாலின்பம் அன்பை உருவாக்கக் கூடியது.

ஆனால், விஞ்ஞானத்தால் உருவாகின்ற பாலின்பத்திற்கு அன்பை உருவாக்கும்

சக்தி கிடையாது.

இந்தப் பூஜையைத் தொடங்கும் முன் விரல் நகங்கள் சுத்தமாக அழுந்த

வெட்டப்பட்டிருக்க வேண்டும். அல்லது கரு உருவாக்கத்தைக் கண்டுபிடிக்க புனித

குகைக்குள் கையை நுழைத்துப் பார்க்கும் போது, மருத்துவர்கள் பயன் படுத்துகிற

கையுறையை ஒன்றுக்கு இரண்டாக அணிந்து கொள்ளலாம். இது மிகவும் முக்கியம்.

இல்லாவிட்டால், உட்புறத்திலே காயப் படுத்தி விடும். அல்லது எரிச்சலை,

வலியை உருவாக்கி விடும். அதனால் இன்பம் ஏற்படாமல் போய்விடக் கூடும்.

புனிதப் புள்ளியைப் பற்றிய இனியொரு தகவல் என்னவென்றால், சில

பெண்களுக்கு புனிதப் புள்ளியை வெறுமனே அழுத்தித் தளர்த்தும் முறை

பிடிக்கும்.

சிலருக்கு அதன் மீது விரலால் வட்டமிடுவது பிடிக்கும்.

சிலருக்கு அதன் மீது தேய்ப்பது தான் பிடிக்கும்.

சிலருக்கு “இங்கே வா” என அழைப்பதைப் போல், விரலை அதன் மீது

அசைப்பது பிடிக்கும்.

ஆகவே, எது பிடித்திருக்கிறது என்பதைத் தெரிந்து கொண்டு செயலாற்றுவது

இன்பத்தை நிகழ்த்த மிகவும் உதவிகரமாக இருக்கும்.

இதற்கான சூத்திரம். போகப் பொருளாக மட்டுமே மனைவியைப்

பயன்படுத்திக் கொண்டிருக்கும் வரை, மனைவியின் உடலில் உள்ள

தெய்வீகப் பகுதியைக் கணவனால் தீண்ட முடி யாது. பெண்ணின்

தெய்வீகப் பகுதி தீண்டப் படாத வரை, அவளுடைய மனதில் தோன்றும்

வக்கிர சிந்தனையைத் தடுக்க முடியாது. வக்கிர சிந்தனையின் விளைவு தான் பிடாரித்தனம். ஆகவே பிடாரித்தனத்தையும் போக்க முடியாது.

## 4. அமிர்த பூஜை

கணவன் மனைவிக்கிடையிலான உறவை வலுப்படுத்துவதைப் பொறுத்த வரை, இன்பம் துய்த்தலுக்கு நிகராக வேறெந்த உபாயமும் இல்லை. இருபாலருக்கும் இன்பம் நிகழ்வதே இன்பத் துய்ப்பாகும். காம்

சூத்ரா.

இன்ப துய்ப்பின் போது ஆணின் உயிர்நீர் வெளியேறிய பின், சிலிர்ப்புணர்வு

காரணமாக சில வினாடிகளுக்கு லிங்கத்தைத் தொட முடியாது. அதற்கான

இடைவெளியில் லிங்கம் தளர்வடைந்து விடும். அது மீண்டும் உயிர்த்தெழ சற்று

நேரமாகும். அதற்குள் எழுச்சியாக உள்ள ஆணின் பாலுணர்வு குறைந்து விடக்

கூடிய வாய்ப்பு உள்ளது.

மதன பீடத்தை மையமாக வைத்து பெண்ணின் முதல் இன்பம் நிகழ்கிறது.

இந்த இன்பம் நிகழ குறைந்தபட்சம் இருபது நிமிடத்திலிருந்து நாற்பது நிமிடங்கள் ஆகலாம். ஆகும் நேரம் அந்தந்த நேரத்து மன நிலையைப் பொறுத்தது. அவளது தோழனின் செயல்பாட்டைப் பொறுத்தது




இன்பத்திற்குப் பின் ஆணின்

லிங்கத்தில் ஏற்படும் சிலிர்ப்பைப் போன்றே

பெண்ணின் மதன பீடத்திலும் சிலிர்ப்பு

உணர்வு ஏற்படும். மிக நுண்ணிய உணர்

வலைகளால் அதுவும் சூழப்படும்.

மதனபீடத்தில் நிகழும் பாலின்பம் நிகழ்ந்த

பின், சிறிது நேரத்திற்கு மதன பீடத்தைத்

தொட முடியாது. எனினும் பெண்ணின்

உடலால் இன்ப யாத்திரையைப்

பங்கமின்றித் தொடர முடியும்.

ஏனெனில் மதன பீடம் மலையின் உச்சியில் உள்ளது. ஆனால் அடுத்த

இன்பங்களை வழங்கக் கூடிய புனித குகையும், பிரம்மஸ்தானமும், தெய்வீகப்

பகுதியும் அதன் மத்தியில் உள்ள புனிதப் புள்ளியும் மலையின் அடிவாரத்தில்

உள்ளது. அதனால் அந்தப் பகுதிகள் சிலிர்ப்புணர்ச்சியால் பாதிக்கப்படுவதில்லை.

மேலும் பெண்ணின் பால் மண்டலத்திற்கு வந்த இரத்தம் மீண்டும் உடலின்

மற்ற பகுதிகளுக்குச் செல்ல குறைந்த பட்சம் ஐந்து நிமிடங்களாவது

ஆகிறது.

அதனால் அந்தப் பகுதியில் தொடர்ந்து செயலாற்றுவது சாத்தியமாகிறது.

அதனால் தொடர்ச்சியான இன்பப் பயணம் பெண்ணின் உடலுக்குச்

சாத்தியமாகிறது.




ஆகவே, மதனபீட இன்பம் நிழ்ந்து முடிந்த கையோடு, பிரம்மஸ்தானத்தின்

புனிதப் புள்ளியை மையமாய்க் கொண்டு அடுத்த இன்பத்தை உடனடியாக நிகழ்ச்சி

செய்யலாம். ஏனெனில், மதன பீட இன்பம் நிகழ்ந்த போதே புனித குகையிலுள்ள

அனைத்து உயிரணுக்களும் இந்த பிரம்மஸ்தானத்தை இன்பத்தேனால் நனைத்து,

தயார்ப்படுத்தி வைத்து விடுவதால் இது சாத்தியமாகிறது.

மேலும் புனித குகையின் பிரம்மஸ்தானத்தின் புனிதப் புள்ளியைப்

பொறுத்த வரை, இன்பத்திற்குப் பின் ஏற்படுகின்ற சிலிர்ப்பு ஏற்படுவதில்லை.

அதனால், புனிதப் புள்ளியை மையமாய்க் கொண்டு பெண்ணின் இன்ப

யாத்திரையை மேற்கொண்டும் தொடர முடிகிறது. ஆனால், இந்த முறை

கண்டிப்பாக உயவுப் பொருளைப் பயன்படுத்தியாக வேண்டும்.

நிகழும் இன்பங்களை எண்ணியெல்லாம் சொல்ல முடியாது.

கணவன் உணர்ச்சி வயப்படாமல் செயல்படும் போது அடுத்த இரண்டு

மூன்று நிமிடங்களிலேயே அதே புனிதப் புள்ளியை மையமாய் வைத்தே

அடுத்தடுத்த இன்பங்கள் தொடர்ச்சியாக நிகழும். ஆனால், எத்தனை இன்பங்கள்

நிழ்ந்தன என்று எண்ணியெல்லாம் சொல்ல முடியாது.

ஏனெனில், இன்பங்களை அனுபவித்துக் கொண்டிருக்கும் நபரால் தான்

அவற்றை எண்ணிச் சொல்ல முடியும். ஆனால், அந்த நபரோ தன்னை மறந்த

நிலையில் இன்பக் கிறக்கத்தில் மெய் மறந்திருக்கிறார். அதனால், சரியாக

எண்ணிச் சொல்ல முடியாது. மேலும், வினாடிகள் இடைவெளியில் இன்பங்கள்

நிகழ்வதால், ஒரு தொடர் இன்ப நிலையாகவே தான் இருக்கும். அதனால் தான்

இது பொதுவான முறையில் “பன்முறை உச்சமி” என்று அழைக்கப்படுகிறது.

இந்தத் தொடர் இன்பம் பெண்ணின் உடலில் நிகழும் போது தான் அமிர்தம்

வெளியேறுகிறது. இதைத் தான் அமிர்த இன்பம் என்று பண்டைய ஞானிகள்

கூறியிருக்கிறார்கள்.



ஆகவே கணவன் தன் கவனம்

சிதறாமல் செயல்படும் போது, அடுத்த

மூன்றே நிமிடங்களில் மூன்றாவது

இன்பமும் நிகழ்ந்து விடும்.

இப்போது தான் கணவன் தன்

லிங்கத்தைப் பயன்படுத்த வேண்டும்.

ஏனெனில் இந்தத் தருணத்தில் தான்

ஆணின் காமத்தைப் போன்றே

பெண்ணின் காமமும் கொதிக்கும் நீராக

மாறியிருக்கிறது.

அதனால் இரண்டு கொதி நீரும் ஒன்றிணையும் போது, இரண்டும்

சமகாலத்தில் நீராவியாக உருமாறுகிறது. அதாவது இருவருடைய உடல்களிலும்

சமகாலத்தில் உச்ச கட்ட இன்பம் ஏற்படுகிறது.

கணவன் வீரிய அளவு கோலின் அடிப்படையில் பயிற்சி

பெற்றுள்ளவனாகவும், காதற் தசை நார்ப் பயிற்சியின் மூலம் தன் பால்

மண்டலத்தை வலுப்படுத்திக் கொண்டுள்ளவனாகவும் இருக்கும் பட்சத்தில்

பெண்ணின் உடலில் பன்முறை உச்சம் என்பது மிக எளிதாக நிகழ்ந்து முடிகிறது.

பூ,பூ, என்று உச்சரிக்கும் போது வாயின் உதடுகள் வெளிப்புறம் நோக்கித்

தள்ளிக் கொண்டு வருவதை போலவே யோனியின் உதடுகளில் ஏற்படும் துள்ளல்

இன்பம் மிக மிக உச்சபட்ச பரவச நிலையின் போது ஏற்படக்கூடியது. அமிர்த

இன்பத்தின் போது இது நிகழ்கிறது.(Squirting Orgasm: அமிர்த இன்பம்

13)

இன்பத்தால் ஏற்படும் விளைவுகள்

பெண்ணின் உடலிலிருந்து அமிர்தம் வெளியேறும் போது, விவரித்துரைக்க

முடியாத இன்பத்தைத் தருகிறது. மனதின் அடியாழ நிராசைகள் அனைத்தும்

கொல்லப்படுகிறது. தசைகள் தளர்வடைகின்றன. மன அழுத்தம் விடை

பெறுகிறது. காமம் தணிக்கப் படுகிறது. பாலின்ப ஏக்கம் தீர்கிறது.

மன இறுக்கம், உடல் இறுக்கம் ஆகிய இரண்டிலிருந்தும் பெண்ணுக்கு

விடுதலை கிடைக்கிறது. மனநிலை மகிழ்ச்சியானதாக மாறுகிறது. பெண்ணின்

செயல்களில் குறிப்பிடத்தக்க மாற்றம் நிகழ்கிறது. இந்த மாற்றங்களை எந்தவொரு

கணவனும் அடுத்த நாட்காலையிலேயே கண்ணாலும் காண முடியும்.மனதாலும்

உணர முடியும்.

இவ்வாறு இருவருக்கும் ஏக காலத்தில் இன்பம் நிகழ்கிற காரணத்தால்,

அங்கே ஒரு பேரின்பமே நிகழ்ந்தேறி விடும். அந்த பேரின்பம் தம்பதியர்

இருவருடைய மனதையும் கிறங்கடிக்கக் கூடியதாக மட்டுமின்றி, வாழ்க்கையில்

உணர்ச்சிமயமான, மெய்சிலிர்க்கச் செய்கின்ற, மொத்த உடலையும் உயிர்

மின்காந்த அலைகளால் துடிக்கச் செய்கின்ற, உச்சபட்சப் பேரானந்த நிலையை

அளிக்கக் கூடிய, மறக்க முடியாத அனுபவமாகவும் இருக்கும்.

அது மட்டுமன்றி, கணவனுக்கும், மனைவிக்கும் இடையிலே எல்லையற்ற

அன்பை உருவாக்கக் கூடியதாகவும் இருக்கும். இந்தத் தம்பதியரின்

வாழ்விலெல்லாம் எந்தவிதமான பிரச்சினைகளும் ஏற்படவே ஏற்படாது. இலட்சிய

தம்பதிகளாக வாழ்ந்து கொண்டிருப்பார்கள். மேலும் இவர்கள் வாழ்க்கையும்

வெற்றிகரமானதாகவே இருக்கும்.

மேலும், பால் மண்டலம் முழுவதும் அதிக அளவில் இரத்தம் பாய்ந்து

கொண்டிருந்ததால், அந்தப் பகுதில் வாழும் உயிரணுக்கள் பலம் பெறுகின்றன.

அதனால், அந்தப் பகுதியில் வரக்கூடிய நோய்கள் தடுக்கப்படுகின்றன.

பன்முறை உச்சம் ஒவ்வொரு பெண்ணுக்கும் நிகழும். ஆனால் ஒவ்வொரு

முறையும் அமிர்த இன்பத்தை அளிக்க முயற்சிக்க வேண்டாம். மாதமொரு முறை

அளிப்பதே பெண்ணின் மனநலத்தைக் காக்கப் போதுமானது. ஆனால், ஈடுபடும்

ஒவ்வொரு முறையும் ஏதேனும் ஒரு இன்பத்தை வழங்கத் தவறி விடக் கூடாது.

பத்தில் ஒன்று பழுதாகலாம். தவறில்லை.

இவ்வாறு பெண்ணுக்குரிய இன்பங்களை மனைவிக்கு வழங்கி, இன்பத்தைப்

பெறுவது தான் இன்பகரமான இல்லற வாழ்க்கையை ஆணுக்கு அளிக்கும்..

அப்படியின்றி, மனைவியை போகப் பொருளாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கும்

கணவனால், நரக வாழ்க்கையிலிருந்து வெளியேறவும் முடியாது. மனைவியை

வெளியேற்றவும் முடியாது

இதற்கான சூத்திரம்**:** இல்லற வாழ்வை நரகமாக்குவதும்**,**

சொர்க்கமாக்குவதும் ஆணின் விரலில் தான் இருக்கிறது**.**

**5.** புனிதப் புள்ளியில் அடுத்தொரு பூஜை

அமிர்த இன்பத்தின் போது எப்படிப் பட்ட பெண்ணும் துவண்டு போய்

விடுவாள், கழிவறை செல்லக் கூடக் களைப்பாக இருக்கும். மேலும், தூக்கமும்

வந்து அசத்திக் கொண்டிருக்கும்,

ஒருக்கால், இதற்குப் பிறகும் கூட மனைவி விரும்பினால், இன்பத் துய்ப்பில்

ஈடுபடும் தெம்பும் ஆர்வமும் இருக்குமானால், அதே புனிதப்

புள்ளியை

அடிப்படையாகக் கொண்டே அடுத்தடுத்த இன்பங்களையும் வழங்க முடியும்.

மேலும், இப்போது இன்பம் நிகழ்வதற்கும் அதிக நேரம் தேவைப் படது.

அது இவ்வாறு துவங்குகிறது. முதலில் புனித குகையின் வாயிலில் ஒரு

வீரலால் வட்டமிடத் துவங்க வேண்டும். அப்போது மதன பானச் சகதி அங்கே

இருக்காது. ஏனெனில், அமிர்தம் வெளியேறிய போது அது கழுவப் பட்டிருக்கும்.

அதனால், இப்போது கண்டிப்பாக உயவுப் பொருளைப் பயன்படுத்திக் கொள்ள

வேண்டும்.

மிருதுவாக அழுத்திய படி நான்கைந்து முறை வாயிலின் மீது வட்டமிடும்

போதே, குகையின் வாயிற் சுற்றளவு நன்றாக விரிவடைந்து விடும். அதனால்,

புனித குகைக்குள் எளிதாக விரல் நுழைந்து விடும். எனினும் விரலை வேகமாகவும்,

நேரிடையாகவும் நுழைக்கக் கூடாது. நூலிழை நூலிழையாகத் தான் நுழைக்க

வேண்டும்.

அதுவும், அரை அங்குல அளவிற்கு மட்டும் தான் நுழைக்க

வேண்டும். அங்கேயே வட்டமிட்டுக் கொண்டிருக்க வேண்டும். ஒரு முறை

வட்டமிட ஆறு வினாடிகளை செலவளிக்கலாம். குகையின் சுற்றளவு மேலும்

கொஞ்சம் விரிவடையும் வரை முன்னோக்கி நகரக் கூடாது. குகை வாயில்

விரிவடைவது தான் விரல் நுழைவதற்கான அனுமதிச் சீட்டு. ஒரு நிமிடத்தில்

குகை முழுமையாக விரிவடைந்து விடும்.

விரிவடைந்த பின், வட்டமிடுவதை அரை வட்டமாக மாற்றிக் கொண்டு, ஒரு

அங்குல அளவிற்கு நூலிழை, நூலிழையாக விரலை உட்செலுத்தலாம். குகையின்

சுற்றுச் சுவருக்கு நகப் பகுதி படக் கூடாது. மணிக்கட்டு தான் சுழல வேண்டும்,

குறைந்த பட்சமாக ஒன்பது அரை வட்டங்களும், அதிக பட்சமாக

பதினெட்டு அரை வட்டங்களும் போதுமானது. ஒரு முறை அரை வட்டமிட ஆறு

வினாடிகளை ஒதுக்கி விட வேண்டும்.

அதன்பின் மேலும் அரை அங்குலம் உட்செலுத்த வேண்டும். அரை

வட்டமிட்ட படியே தான் வீரயை உட்செலுத்த வேண்டுமே தவிர, ஒரு போதும்

நேரிடையாகச் செலுத்தக் கூடாது. மேலும் உட்செலுத்துவதை மனைவி உணர்

முடியாத அளவில் நூலிழை, நூலிழையாகத் தான் அதிகரிக்க வேண்டும்.

அதிகரித்த படியே அரை வட்டங்களின் அளவைச் சற்றே பெரிதாக்கிக்

கொள்ள வேண்டும். வட்டமிடுதலும் ,நுழைத்தலும் ஒத்திசைவோடு கூடிய

ஆடலும் பாடலுமாய் இருக்க வேண்டும்.

அதன்பின் மெதுவாக விரலின் இரண்டாவது ரேகை வரை விரலை

உட்செலுத்த வேண்டும், நெருடலாக இருக்கிற பகுதியும், மென்மையாக

இருக்கும் பகுதியும் இணையும் இடத்தை தாண்டிச் செல்ல வேண்டாம்.

அதன் பின் புனித குகையின் சுற்றுச் சுவர் முழுவதையும் விரல்களால் மிக

மென்மையான முறையில் ஆராயத் தொடங்கவும், பாத்திரம் ஒன்றை மிக

மெதுவாகக் கழுவுவதைப் போன்று விரலால் புனித குகையின் சுற்றுச் சுவரை

அழுத்திய படி ஒன்பது முறை வட்டமிடவும்.

அவ்வாறு வட்டமிடும் போது படிப்படியாக வட்டத்தின் விட்டத்தைப்

பெரிதாக்கவும். வட்டமிடுவது பெரிதாகப் பெரிதாக இரண்டாவது விரலான

நடுவிரலையும் நுழைத்துக் கொள்ளவும்.

இதற்கு அனுமதி கேட்கத் தேவையில்லை. ஏனெனில் வட்டத்தின் விட்டம்

பெரிதாகும் போது பெண்ணுக்கே இரண்டாவது விரலையும் எதிர்பார்க்கும் ஏக்கம்

உருவாகி விடும்.

யோனிக்குள் மறைந்திருக்கும் நரம்பக் கூடை

இரண்டாவது விரலை நுழைத்த பின் வட்டமிடக் கூடாது.

பிரம்மஸ்தானத்தின் மீது படுகிற வகையில் விரல்கள் இரண்டும் கூரைப்

பகுதியைத் தான் தொட்டுக் கொண்டிருக்க வேண்டும்.

அவ்வாறு விரல்களை வைத்த படி, ஓடும் போது மனிதனின் கால்கள்

எவ்வாறு முன் பின்னாக இயங்குமோ அதைப் போல் விரல்களை முன் பின்னாக

அசைக்கவும்.

அதாவது ஒரு விரல் மேல் நோக்கும் போது அடுத்த விரல் நீள்வடிவில்

நேராக இருக்க வேண்டும். வினாடிக்கு ஒரு அசைவு போதுமானது.

அவ்வாறு விரல்களை அசைக்கத் தொடங்கிய ஓரிரு நிமிடங்களில் புனித

குகையின் கூரையிலிருந்து பேரிட்சம் பழ அளவில் ஒரு நரம்பக்கூடை கீழ் நோக்கி

இறங்கும்.






அதன்பின் வேகத்தை அதிகரிக்கலாம், அழுத்தத்தை அதிகரிக்கலாம். எனினும் மித வேகமே மிகவும் நன்று. அதாவது மிதமான வேகம் முன்னோக்கியும், காட்டுத் தனமான வேகம் பெண்ணின் இன்பத்தைப் பின்னோக்கிச் செலுத்தக்

கூடியது. விநாடிக்கு இரண்டு அசைவு என்பதே அப்போது பெண்ணுக்குப் பேரானந்தத்தை அளிக்கக் கூடியது. நரம்புக் கூடையின் மீது அவ்வாறு அழுத்தமாகத் தேய்க்கும் போது, அல்லது மேல் நோக்கி அக் கூடையைத் தூக்கும் போது அந்தக் கூடைக்குள் உருவாகி உள்ள அமிர்தம் வெளியேறும். அந்த அமிர்தம் வெளியேறிய உடனே அந்தக் கூடை காணாமல் போய்விடும், அமிர்தம் வெளியேறும் போது, அது உள்ளங்கையில் படும். அதனால், குகைக் குள்ளும் பட்டு முன் பகுதியில் இருந்த இன்பத்தேனைக் கழுவிக் கொண்டு போய் விடும். அதனால் மீண்டும் இயங்கும் முன் ஏதேனும் ஒரு உயவுப் பொருளைப் பயன்படுத்துவது நல்லது. உமிழ்நீரையும் பயன்படுத்தலாம். அவ்வாறு உமிழ்நீரைப் பயன்படுத்தி மேலும் விரலசைவைத் தொடர் வேண்டும். சில வினாடிகளிலேயே அமிர்தம் ஊறி கூடை மீண்டும் வரும். அதை மென்மையாக அழுத்தும் போது மீண்டும் அமிர்தம் வெளியேறும். (Squirting Orgasm: அமிர்த இன்பம். 14)




இதே பிரம்மஸ்தான இன்பத்தைத் தொடர் இன்பமாகவும் நிகழ்த்தலாம்.

அதாவது மேற்கண்ட நரம்புக்கூடை உயிர்த்தெழுந்து கீழ் நோக்கி வரும் போது

பெண்ணின் பிரம்மஸ்தான இன்பம் நிகழும், அப்போது விரலசைவை நிறுத்தி விட

வேண்டும்.

அவ்வாறு நிறுத்தி விட்டால், அமிர்தம் வெளியேறாது. மீண்டும் அந்த

நரம்புக்கூடை காணாமல் போய் விடும். அதன் பின் மீண்டும் விரலசைவைத்

தொடர்ந்தால் நரம்புக்கூடை மீண்டும் உயிர்த்தெழுந்து கீழ் நோக்கி வரும்.

அப்போது விரலசைவை நிறுத்தி விட வேண்டும். மீண்டும் நரம்புக்கூடை

காணாமல் போகும்.

மீண்டும் விரலசைவைத் துவங்க வேண்டும். இவ்வாறு நரம்புக்கூடையை

உயிர்த்தெழச் செய்வதும், மறைய் விடுவதுமாகச் செய்து கொண்டிருந்தால்,

எண்ணற்ற இன்பங்கள் பெண்ணின் உடலில் நிகழ்ந்து கொண்டேயிருக்கும்.

இதைத்தான் பிரம்மஸ்தான இன்பம் என்று ஞானிகள் கூறுகிறார்கள். அந்தக்

காலப் பாட்டிகள் இதை நீர்ப்பை இன்பம் என்று கூறுகிறார்கள்.(Multiple

Orgasms: பன்முறை உச்சம்.)

ஆனால் எதைச் செய்வதற்கு முன்பும் மனைவியின் அனுமதி மிகவும்

முக்கியம், பெண்ணின் சம்மதமின்றிச் செய்யும் எந்தச் செயலாலும் பெண்ணுடலில்

இன்பங்கள் நிகழாது.

இங்கே மனதிற் கொள்ள வேண்டிய முக்கியமான தகவல் என்னவெனில்,

இந்த நரம்புக்கூடை கூரையிலிருந்து இறங்கும் போது பெண்ணின் உடல் இன்பக்

கிளர்ச்சியால் மிகவும் தூண்டப்பட்டிருக்கும். அதனால் பெண் இன்பக் கதறலில்

ஈடுபட்டிருக்கலாம், அதைக் கண்டு வேகமாக இயங்கும் படி. ஆணின் மனதில்

வெறி தோன்றும். அதற்கு செவி சாய்க்கக் கூடாது.

ஏனெனில், மிதமாகத் தீண்டப்படும் போது தான் உயிர் மின் காந்த

உணர்வலைகள் உடல் முழுவதும் தொடர்ந்து பரவும். நீண்ட நேரம் உடலில்

நிலைத்து நின்று பரவும் உணர்வலைகள் தான் இன்பப் பரவச நிலையை

உயர்த்துவதாக இருக்கும், எலும்புகளில் வாழும் உயிரணுக்கள் உட்பட

உடலிலுள்ள ஒவ்வொரு உயிரணுவையும் மகிழ்விக்கக்கூடியதாக இருக்கும்.

செயலில் துளியளவு கூட மாற்றமே நடை பெறாததைப் போல் தான்

எந்தவொரு மாற்றமும் நிகழ வேண்டும். செயலில் அதிரடியான மாற்றங்கள் அறவே

ஆகாது. பெரும்பாலும் வேகம் என்பது வியாதி.

மதன பீட இன்பம் நிகழ்ந்த பின் பிரம்மஸ்தானத்திற்குப் போவதே சிறந்தது

பயணத்திலேயே கவனமாயிருக்கவும். பயணத்தை ஆழமாக அனுபவிக்கவும். ஒரு

குழந்தையைப் போல் ஆராயவும். ஒவ்வொரு முறையும் இது தான் முதல் அனுபவம்

என்பது போல் நடந்து கொள்ளவும்.

விழிப்புணர்வோடு செயல்படவும். இலக்கைப் பற்றிய எண்ணமே

வேண்டாம், அது நிகழும் போது நிகழட்டும். நேர வரையறை எதுவும் வைத்துக்

கொள்ள வேண்டாம்,

இங்கே குறிப்பிடப் படுகின்ற இந்த அமிர்த இன்பமெல்லாம் ஏதோ

படுக்கையில் மட்டுமே சுகமளிக்கின்ற அற்பச் செயல்கள் அல்ல. பெண்ணின்

மனதை நலமாக வைத்திருக்க உதவக்கூடிய நடவடிக்கைகள். ஒரு புது

வாழ்க்கையைத் துவங்கியதைப் போன்ற உணர்வை பெண்ணுக்கு அளிக்கும்

அளவிற்கு மனதோடு தொடர்புடையது அமிர்த இன்பம்,

அமிர்தத்தைப் பறிட்டடிக்கும் உச்சகட்ட இன்பம்

ஆணின் இன்பம் நிகழும் போது அடிவயிறு முன்னோக்கித் தள்ள, ஆணின்

உடல் வில்லைப் போல வளையும். அமிர்த இன்பத்தின் போது பெண்ணின்

உடலும் வில்லாய் வளையும். அல்லது கோணல் மாணலாய் உடல் நெளிய நிறமற்ற

திரவம் வெளியேறும். அது தான் பெண்ணின் நிராசைகளை, கோப தாபங்களை,

மன அழுத்தங்களை யெல்லாம், பெண்ணின் மனதிலிருந்து வெளியேற்றுகின்ற

அமிர்தம்,

ஆணின் உயிர்நீர் வெளியேறும் போது, ஆணுக்கு எத்தகைய நிம்மதி

கிடைக்கிறதோ அதே நிம்மதி அமிர்தத்தை வெளியேற்றும் போது பெண்ணுக்கும்

கிடைக்கிறது. அதாவது ஆணுக்கும் சரி, பெண்ணுக்கும் சரி, உடலிலிருந்து அந்த

திரவம் வெளியேறுவது மனநலத்தோடு மிகவும் நெருங்கிய தொடர்புடையதாகவே

இருக்கிறது.

பெண்ணின் பாலின்பங்களிலேயே அமிர்தம் வெளியேறும் போது, ஏற்படும்

பேரின்பம் தான், தன்னிலை மறந்து பெண்ணைக் கூச்சலிடச் செய்கிற, சில

நேரங்களில் இன்பக் கதறலில் ஈடுபடச் செய்கிற, கண்களைச் செருக வைக்கிற,

மொத்த உடலையும் உயிர் மின்காந்த அலைகளால் துடிக்கச் செய்து சிலிர்க்கச்

செய்கிற, உச்ச பட்சப் பேரானந்த நிலைக்குள் மூழ்கடித்து மனதைக்

கிறங்கடிக்கிற, உணர்ச்சிமயமான, மறக்க முடியாத அனுபவமாக இருக்கும்.

அமிர்தம் வெளியேறும் போது, பெண் மனதின் அடியாழ நிராசைகள்

அனைத்தும் கொல்லப் படுகிறது. மன அழுத்தம் விடை பெறுகிறது. காமம்

தணிக்கப் படுகிறது. ஏக்கம் தீர்கிறது. மன இறுக்கம், உடல் இறுக்கம் ஆகிய

இரண்டிலிருந்தும் பெண்ணுக்கு விடுதலை கிடைக்கிறது. இன்பத்தை வழங்கிய

ஆணின் மீது எல்லையற்ற அன்பு உருவாகிறது. குறை காணும் குணம் செத்துப்

போகிறது. அதனால், தம்பதியிடையே பிரச்சினைகள் ஏற்படுவதற்கான சூழல்

உருவாவதேயில்லை.

மேலும், பால் மண்டலம் முழுவதும் அதிக அளவில் இரத்தம் பாய்ந்து

கொண்டிருந்த காரணத்தால், அங்கே வாழ்ந்து கொண்டிருக்கும்

கோடிக்கணக்கான உயிரணுக்களுக்கு உரிய பிராணவாயு கிடைக்கிறது.

அதோடு,

அந்த உயிரணுக்களில் பிராணவாயு எரிக்கப் படுவதால் உருவாகின்ற சாம்பல்,

புகை போன்ற கழிவுகள் உடனுக்குடன் அகற்றப்படுகின்றன. அதனால் பால்

மண்டல் உயிரணுக்களின் சுகாதாரம் பேணப் படுகிறது. “ஃபிரீ ரேடிகல்ஸ்”

காரணமாக, உடலில் உருவாகக் கூடிய கொலைகார வியாதிகளிலிருந்து பால்

மண்டலம் சிறப்பாகப் பாதுகாக்கப் படுகிறது.




அலோபதி மருத்துவ உலகம் முதலில்

இதை நம்ப மறுத்தது. இந்த இன்பத்தின்

போது பெண்ணின் உடலிலிருந்து

வெளியாவது அமிர்தம் அல்ல. அதாவது

உயிர்நீர் அல்ல. வெறும் சிறுநீர் தான் என்று

வாதாடிப் பார்த்தது.ஆனால் தந்த்ரா

ஞானியர் தவிர தாவோ ஞானியராலும்

சொல்லப்பட்டுள்ள தகவல் இது. அதனால்,

பல மருத்துவர்களே முன்னின்று

ஆராய்ச்சிகளை மேற்கொண்டனர். டாக்டர்.

ஜான்பெர்ரி என்பவர், பீவெர்ல விப்பில்

என்கிற மருத்துவரோடு சேர்ந்து 1980-ல் இதை ஒரு ஒளிக்காட்சியாகவே படம்

பிடித்துக் காட்டினார்.

அதன்பின் பல மருத்துவர்கள் அந்த திரவத்தில் உள்ள வேதிகளைப்

பாரிசோதித்துப் பார்த்தனர். ஆணின் பிராஸ்டேட் சுரப்பியிலிருந்து சுரந்து வருகிற

உயிரணுக்கள் இல்லாத ஆணின் உயிர்நீரும், பெண்ணின் அமிர்தமும் ஒன்றே

எனக் கண்டறிந்தனர்.

அதன் பின் தான், பெண்ணுக்கும் உயிர் நீரை வெளியேற்றக் கூடிய உச்ச

கட்ட இன்பம் உண்டு என்பதை அனைவரும் ஒப்புக் கொண்டனர். பண்டைய

தந்த்ரா ஞானிகள் பெண்ணிடமிருந்து வெளியேறுகிற உயிர் நீரை அமிர்தம்

என்று அழைத்துள்ளனர்.

இந்த இன்பம் நிகழும் போது, பெண்களுக்கு சிறுநீர் வருவது போன்ற

உணர்ச்சி ஏற்படும். ஏனெனில் ஆணின் உயிர்நீர் வெளியேறுவதைப் போன்றே

சிறுநீர்ப் புற வழி மூலமாகத்தான் பெண்ணின் உடலிலிருந்து அமிர்தம்

வெளியாகிறது. புணர் புழை வழியாக வெளியாவதில்லை,

சிறுநீர் கழிக்க வேண்டும் போன்ற உணர்வு ஏற்படும் போது அவர்கள்

அதைக் கட்டுப் படுத்த முயற்சிக்கக் கூடாது. கட்டுப் படுத்தினால், அமிர்தம்

பின்னோக்கிச் சென்று சிறுநீர்ப்பையை அடைந்து விடும்.

இன்பம் நிகழும். ஆனால் அமிர்தம் வெளியேறாது. அவ்வாறு அமிர்தம்

வெளியேறாத பெண்கள் இன்பம் நிகழ்ந்து முடிந்த உடனே கழிவறை

நோக்கி

ஓடுவார்கள். ஏனெனில், சிறுநீர்ப் பைக்குள் சென்றுள்ள அமிர்தம் சிறுநீர்

கழிக்க வேண்டிய உணர்வை ஏற்படுத்தி விடும்.

அப்போது வெளிவரும் சிறுநீரை ஒரு கண்ணாடிக் குடுவையில் பிடித்துப்

பார்த்தால் வழக்கமான சிறுநீரைக் காட்டிலும் அடர்த்தி குறைவான நிறத்தில்

அது இருக்கும்.

பத்து சதவீதப் பெண்களுக்கு இந்த அனுபவம் நேரலாம். எனினும்,

நான்கைந்து முறை அமிர்த இன்பம் நிகழ்ந்து விட்டால், அவர்களும் படுக்கையிலே

அதை வெளியேற்றி விடுவார்கள்.

மனக் காயங்கள் அனைத்தையும் ஆற்றக்கூடிய ஒரே மருந்து

இந்த இன்பத்தைப் பாதியில் தவற விடுவதென்பது பல நாட்கள், நடுக்

கடலில் பட்டினி கிடந்தவன், தன் கைக்குக் கிடைத்த உணவுப்

பொட்டலத்தையும், குடி நீரையும் கடல் நீரில் தவற விடுவதைப் போன்றது.

ஏனெனில் பெண்ணின் உடலில் அடக்கி வைக்கப்பட்டுள்ள, தேக்கி

வைக்கப்பட்டுள்ள பாலின்ப நிராசைகள் அனைத்தையும், ஒரே நிமிடத்தில்

அழித்தொழித்து, பெண்ணின் மனதை அன்றலர்ந்த மலரைப் போலவும், காற்றில்

மிதக்கும் சருகைப் போலவும் சுமையற்றதாக மாற்றக்கூடியது. அத்தனை

விதமான மன அழுத்தங்களையும் தீர்க்க வல்லது. மன இறுக்கங்களையும்

தளர்த்தக்கூடியது.

கருவறையைப் பாதுகாத்துக் கொண்டிருப்பது ஸ்வாதிஸ்தான சக்கரம்.

இதுதான் பாலியல் சக்கரம். இதைப் புனித சக்கரம் என்றும் கூறலாம். யாருடைய

உடலில் உச்சகட்டப் பாலின்பம் நிகழ்வதில்லையோ, அவர்களுடைய புனித

சக்கரத்தின் இயக்கம் பாதிக்கப் படும். அதன் காரணமாக அந்த நபர் உணர்ச்சி

வயப்பட்டவராகச் செயல்பட்டுக் கொண்டிருப்பார். ஏனெனில், இந்த சக்கரம் தான்

உணர்ச்சிகளை உருவாக்கக் கூடியது.

ஹிஸ்டீரியா என்றால் கருவறை அழற்சி என்று பொருள். மேலும்,

துணிகளைக் கிழித்துக் கொண்டு அலைவது மட்டுமே ஹிஸ்டீரியா அல்ல. தன்

குழந்தையைத் தண்ணீர்த் தொட்டிக்குள் தள்ளிக் கொலை செய்வதும்,

கண்மூடித்தனமாக ஆத்திரப் படுதலும், தேவையின்றி வம்பிழுத்தலும் கூட

ஹிஸ்டீரியா வியாதியே,

சதவிகித அளவு மட்டுமே இங்குள்ள ஒரே வேறுபாடு. நான்காயிரம்

ஆண்டுகளுக்கு முன்பே பாலின்பத்தை மருந்தாகப் பயன்படுத்தி, இந்த

வியாதியைத் தாவோக்கள் குணப்படுத்தி இருக்கிறார்கள்.

தந்திரா முறையில் இன்பம் துய்க்கும் போது, அது தம்பதியரின் பாலின்ப

வேட்கையைத் தணிப்பதோடு, மனம் சார்ந்த, உடல் சார்ந்த, உணர்ச்சிகள் சார்ந்த

பல்வேறு பிரச்சினைகளுக்கும் முடிவுரை எழுதி விடுகிறது.

இது ஒவ்வொரு முறையும் பெண்ணின் உடலில் நிகழக் கூடிய இன்பம்

அல்ல. எப்போதோ ஒரு முறை பெண்ணுக்குக் கிடைக்கக் கூடிய சிறப்புப்

பரிசு என்று சிலர் கூறுகிறார்கள்.

ஆனால், பூஜைகளை மிகவும் விழிப்புணர்வோடு மேற்கொள்ளும் போது,

நிச்சயமாக நிகழக்கூடியது என்று இந்த நூல் கூறுகிறது.

மேலும், மும்முனையிலிருந்து நடத்தும் இன்பத் தாக்குதல்,

நாற்புறத்திலிருந்து நடத்தும் நாற்புற இன்பத் தாக்குதல் போன்ற பூஜைகள்

நடைபெறும் போது, நிச்சயமாக இந்த பேரின்பம் ஏற்பட்டே தீரும்,

ஆனால், இந்த இன்பத்தை பெண்ணின் உடலில் நிகழ்த்தத் தடையாய்

இருப்பது வேறு யாருமல்ல, பெண்ணின் மனமே தடைக்கல்லாக இருக்கிறது

அதாவது பெண்ணின் மனமானது இக்கணத்திற்கு வராத வரை, இந்த

அமிர்தத்தை வெளியேற்றும் இன்பம் பெண்ணின் உடலில் நிகழாது.

கடந்த கால கசப்பான அனுபவங்களை மனம் அசை போட்டுக்

கொண்டிருக்கக் கூடாது, எதிர்காலம் குறித்து அச்சங்களில் உழன்று

கொண்டிருக்கக் கூடாது. ஏதேனும் ஒரு எதிர்பார்ப்பில் தளையுண்டிருக்கக்

கூடாது

முக்கால எண்ணங்களிலிருந்தும் மனம் முழுமையாக விடுபட வேண்டும்.

அவ்வாறு மனம் விடுபடாத வரை ,உடல் மெய்மறந்த நிலையை அடையாது.

பெண்ணின் உடலானது மெய்மறந்த நிலைக்குள் மூழ்காத வரை, தான்

என்கிற அகம்பாவத்தைக் கடந்த வெளிக்குள் ,பெண்ணின் மனம் செல்லாதவரை,

பெண்ணின் உடலில் இந்த இன்பம் நிகழாது.

அப்படிப்பட்ட மெய்மறந்த நிலைக்குள் பெண்ணை மூழ்கடிக்கத்தான்,

அதாவது தான் என்கிற அகம்பாவத்தைக் கடந்த வெளிக்குள் பெண்ணின்

உடலையும் மனதையும் ஒருங்கே கொண்டு செல்வதற்காகத்தான், ஒன்பது

வகையான பூஜைகளை தந்த்ரா ஞானிகள் உருவாக்கியுள்ளனர்.

ஆகவே இதுவரை பகிர்ந்து கொள்ளப்பட்டதைப் போல், விவரித்துள்ள

வழிமுறைகளின் படி, ஆண் செயல்படும் போது தான் பெண்ணின் உடலும்

மனமும் மெய்மறந்த நிலைக்குள் செல்லும்.

மேலும் இவ்வாறு வெளிவரும் அந்த அமிர்தம் மிகவும் அதிக சத்துள்ள

பானமென்றும், பண்டைய இந்தியாவில் போரிலிருந்து திரும்பும் வீரர்கள்

கோவில்களில் உள்ள தேவதாசிகளிடம் சென்று, இந்த இன்பத்தை அந்த

தேவதாசிகளின் உடலிலே ஏற்படுத்தி அமிர்தத்தை வெளியேறச் செய்து, அதை

மருந்தாக தங்கள் விழுப்புண்களுக்கு இட்டு குணமாக்கினார்கள் என்று தந்திரா

நூல்கள் தெரிவிக்கின்றன,

இந்த சக்தி பானம் என்று அழைக்கப் படுகின்ற அமிர்தம் பெண்ணின்

உடலிலிருந்து வெளியேறுவது தான் பெண்ணின் மனக் காயங்கள் அனைத்தையும்

ஆற்றக்கூடிய ஒரே மருந்து என்று தந்த்ரா ஞானியர் கூறியுள்ளனர்.

ஆணின் உயிர்நீரைப் போல ஒரு தேக்கரண்டி அளவில் அல்லாமல், ஒரு

குவளை அளவிற்கு இந்த அமிர்தம் வெளியேறக் கூடியது. பெண் களின்

பொற்காலம் என்று அழைக்கப்படுகின்ற தந்திரா ஆட்சி செய்த காலத்தில்

இவையனைத்தும் தெளிவாக நிரூபிக்கப்பட்டிருக்கின்றன,

மேலும் பெண்கள் தங்கள் தகுதிக்குரிய மேன்மையான இடத்தை அடையும்

போது மீண்டும் தந்த்ரா உயிர்த்தெழும் என்றும் அந்த ஞானியர் கூறியுள்ளனர்.

இன்றைய காலம் பெண்களின் பொற்காலம்.

வெறுமனே பாலுறவில் ஈடுபட்டால் ஒரு சில நிமிடங்களில் முடித்துக்

கொள்ளலாம். எனக்குரிய இன்பம் கிடைத்து விடப் போகிறது. ஆனால், இன்பம்

துய்த்தலில் ஈடுபட்டால் குறைந்த பட்சம் ஒரு மணி நேரத்தையாவது ஒதுக்க

வேண்டியிருக்கும்.

மனைவிக்குரிய இன்பத்தை நிகழ்வதற்காக மணிக்கணக்கில் எல்லாம்

நேரத்தை ஒதுக்க முடியுமா? அதற்கெல்லாம் நேரம் எங்கே இருக்கிறது? மேலும்

எதற்காக அதற்குப்போய் அவ்வளவு நேரத்தை வீணடிக்க வேண்டும்? என்

மனைவிக்கு என்ன குறை? ஐந்து அல்லது பத்து நிமிட பாலுறவிலேயே

மனைவிக்குரிய இன்பங்கள் அனைத்தும் தவறாமல் நிகழ்ந்து விடுகிறதே,

என்றெல்லாம் ஒரு சிலர் கருதலாம்.

இதைத் தான் பாலியல் அறியாமை என்று தந்தரா ஞானிகளும்,

மனைவியைப் போகப் பொருளாகப் பயன்படுத்தும் கயமை என்று இன்றைய

அறிஞர்களும் கூறுகிறார்கள்,

இதற்கான சூத்திரம் **.** இன்பத்துய்ப்பு என்பது மூன்றே நிமிடத்தில்

முடிய வேண்டிய ஒரு ஓட்டப் பந்தயம் அல்ல**.** அது ஒரு தவம்**.** தவத்திற்கு

கால நேர அளவுகள் இல்லை**.**

## **6.** தந்த்ரா பூஜை

ஒருவர் உடலுக்குள் மற்றவர் நுழைந்து விடுவதைப் போல் தழுவக் கொள்வதும், கை

கால்களால் பின்னிக் கொள்வதும் தண்ணீரும் பாலுமாய் தம்பதியரை மாற்றி

விடும். காமசூத்ரா

இருவருக்கும் இடையே காற்றுக் கூட புக முடியாத வண்ணம்

காதலர்களின் அணைப்பு இருக்க வேண்டும். -திருக்குறள்.

ஆணின் பாலுறுப்பு இடுப்பிற்குக் கீழே இருக்கிறது. ஆனால், பெண்ணைப்

பொறுத்த வரை முழு உடலும் பாலுறுப்பாகவே இருக்கிறது என்று ஒரு ஞானி

கூறுகிறார். ஆனால், இங்கே சொல்லப்படுகிற தகவல் அதை விட நுணுக்கமானது.

ஒவ்வொரு பெண்ணின் உடலிலும் ஒரு ஏக்கம் உள்ளது. உடலின் குறிப்பிட்ட

ஒரு பகுதியில் ஆணின் தீண்டலுக்கான ஏக்கம் அபரிமிதமான அளவில்

குடி கொண்டிருக்கிறது. சுவாசிக்கும் ஒவ்வொரு உடலிலும் இந்த

ஏக்கம் இருக்கும். ஆனால், அந்த ஏக்கம் மிக்க பகுதி பாலுறுப்பாகவோ,

மார்புகளாகவோ தான் இருக்க வேண்டும் என்றில்லை.

கை, கால், மூக்கு, காது, கழுத்து, மார்பு, தொடை, பாதங்கள், பிட்டம், இடை

என ஏந்தவொரு இடத்திலும் அந்த ஏக்கம் இருக்கலாம். இது அந்தந்தப்

பெண்ணுக்குத் தெரியாது.

அவ்வாறுள்ள ஏக்கத்தைத் தொடச்சியாகக் கணவன் அலட்சியப் படுத்தும்

போது, அல்லது அறியாதிருக்கும் போது. ஆண் இனத்தைச் சேர்ந்த வேறொரு

நபரிடம் அந்தத் தீண்டலைப் பெண்ணின் உடல் எதிர் பார்க்கிறது. இது இயற்கை.

அந்த நேரத்தில் எதிர்ப் பாலினத் தீண்டலுக்காக ஏங்கிக் கொண்டிருக்கும்

அந்தப் பகுதியை, யாரேனும் முன்பின் தெரியாத ஆண் தவறுதலாகத் தீண்டி

விட்டால் கூட, பெண்ணின் உடல் அவனிடம் சரணடைந்து விடுகிறது.

அவ்வாறு சரணடையும் போது, அந்த ஆணின் கல்வி, பொருளாதாரம்,

தோற்றம், பின் புலம், சமூக மதிப்பு, குதிரைக்காரனா? என எதைப் பற்றியும்

கவலைப் படுவதில்லை. பெரும்பாலும், இத்தகைய இயற்கைப் பலவீனம் தான்

பெண்ணைக் கள்ளக் காதல் என்கிற படுகுழியில் தள்ளி விடுகிறது.

ஒரு இடத்தில் இவ்வாறு நடந்தது. அன்றைய தினம் தான் கார் ஓட்டுனராக

அந்த நடுத்தர வயது ஆண் பணியில் சேர்ந்தான். எசமானி எங்கோ செல்ல

வேண்டியிருந்தது. அதற்காக அவன் காரின் கதவைத் திறந்து விட்டான்.

காருக்குள் அமரும் முன்பாக, தன்னுடைய ஒரு வருடக் குழந்தையை

அவனிடம் கொடுத்து விட்டு, உள்ளே அமர்ந்த பின் வாங்கிக் கொண்டாள்.

அப்போது அவளுடைய உடலில், ஆணின் தீண்டலுக்காக ஏங்கிக் கொண்டிருந்த

பகுதி, தவறுதலாக அந்த ஆடவனால் தீண்டப்பட்டு விட்டது.

அந்த விநாடியே, கணவனை விடப் பத்தாண்டுகள் மூத்திருந்த அந்த

ஆடவனோடு கள்ளக் காதல் உருவாகி விட்டது. எல்லோரும் அந்த நடுத்தர

வயதுள்ள ஆடவனைக் கெட்டிக்காரன் என்று கூறிக் கொண்டிருந்தார்கள்.

இதே போல், அன்னிய ஆணுடன் இரு சக்கர வாகனத்தில் ஒரே ஒரு முறை

பயணம் செய்த பெண் கள்ளக் காதலில் சிக்கிக் கொண்ட சம்பவங்களும் உண்டு.

இதற்கான ஒரே காரணம், குறிப்பிட்ட பெண்ணின் உடலில் ஆணின்

தீண்டலுக்கான ஏக்கம் நிறைந்திருந்த பகுதியின் மீது அன்னிய ஆண்களின்

மெய் தீண்டுவதே.

ஆகவே, ஒவ்வொரு பெண்ணின் உடலும் குறிப்பிட்ட பகுதியைத் தீண்ட

வேண்டும் என்கிற ஏக்கத்தில் இருக்கிறது. இதில் எந்தப் பெண்ணும் விதி

விலக்கில்லை, இடம் மாறு படலாம். ஆனால், ஏக்கம் மாறுபடாது.

உதாரணமாக தீண்டலுக்கான ஏக்கப் பகுதி உட்புறத் தொடைகளாக

இருக்குமானால், எந்தவொரு அன்னிய ஆணும் அந்த இடத்தைத் தவறுதலாகவோ

அல்லது திட்டமிட்டோ கூடத் தீண்டி விட முடியாது. அதனால், அந்தப்

பெண்ணக் கள்ளக் காதல் என்கிற படுகுழிக்குள் வீழ்ந்து விடுவதில்லை.

அதே நேரத்தில், ஆணின் தீண்டலுக்கான ஏக்கப் பகுதி மார்பிலோ அல்லது

பின்கழுத்திலோ அல்லது தோளிலோ அல்லது பிட்டங்களிலோ அல்லது வெளிப்

புறத் தொடைகளிலோ அல்லது கைவிரல் நுனிகளிலோ இருக்குமானால், அந்தப்

பகுதிகள் எளிதாக அன்னிய ஆணால் எதேட்சையாகத் தீண்டப்பட்டு விடும்.

அதனால், அந்தப் பெண்ணின் மனதில் காமம் துளிர்த்து விடும். காமம்

காரணமாகக் காதல் ஏற்பட்டு, விபத்து நிகழ்ந்து விடுகிறது.

ஆகவே, பெரும்பாலான கள்ளக் காதல்கள் பரஸ்பரப் புரிந்துணர்வால்

உருவானவையல்ல. மாறாக, பெண்ணின் ஏக்கப் பகுதியின் மீது ஆணின்

ஸ்டாரிசம் தவறுதலாகப் பட்ட விபத்துக்களால் உருவானவை.

ஆகவே, ஒவ்வொரு கணவனும் பரிசோதனை ஓட்டம் போல முதலில் சில

முறை உன்னிப்பாக மனைவியின் உடலோடு விளையாட வேண்டும். எல்லா

இடங்களையும் தீண்டிக் கொண்டே இருக்கும் போது, எந்த இடத்தைத் தீண்டும்

போது பெண்ணின் சுவாசம் வேகம் பெறுகிறது? எந்த இடத்தைத் தீண்டும் போது.

முக்கல் முனகல் சத்தம் உருவாகிறது? கண்கள் செருகுகின்றன? என்பதைக்

கவனிக்க வேண்டும்.

அதன் மூலம், குறிப்பிட்ட பெண்ணின் உடலில் ஆணின் தீண்டலுக்கான

ஏக்கம் நிறைந்துள்ள பகுதி எதுவெனக் கண்டு பிடித்து விடலாம். அந்தப் பகுதி

தான் காம உணர்வைக் கிளறி விடுவதில் முதலிடம் வகிக்கக் கூடிய பகுதியாக

இருக்கும்.

இதைத் தெரிந்து கொள்வது மிகவும் நல்லது. ஏனெனில், மேற்கண்ட அமிர்த

இன்பம் நிகழ்ந்த பின், அந்த உச்சபட்ச பாலுணர்வு மையத்தைத் தீண்டுவதன்

மூலமாகக் கூட உச்ச கட்ட இன்பத்தை ஏற்படுத்த முடியும். உதாரணமாக, அமிர்த

இன்பம் நிகழ்ந்த பின், வெறுமனே கழுத்தை அல்லது தொடைகளை அல்லது

தொப்புளை அல்லது முகத்தை அல்லது பிட்டங்களை என அந்தப் பெண்ணின்

உடலில் தீண்டல் ஏக்கம் மிகுந்துள்ள இடத்தைத் தடவிக் கொண்டிருப்பதன்

மூலமாகப் பல நிமிடங்களுக்குத் தொடர்ச்சியாக நிகழக்கூடிய உச்சகட்ட

இன்பத்தை நிகழ்த்த முடியும்.

அதே போல் உடனே உறங்கி விடவும் கூடாது. ஏனெனில், பெண்ணின்

ஆகவே, அமிர்தம் வெளியேறிய உடனே கணவன் ஒதுங்கி விடக் கூடாது.

உடலுக்குரிய இன்பங்கள் இன்னும் முடிந்து விடவில்லை. அமிர்த இன்பம் நிகழ,

நிகழ, பெண்ணின் உடல் முற்றிலும் தளர்ந்து போய் விடும். ஏறக்குறைய அரை

மயக்க நிலையில் இருப்பதைப் போல் மனைவி தோற்றமளிப்பாள். அந்த நேரத்தில்

பெண்ணின் முழு உடலும் பாலுறுப்பாகவே மாறியிருக்கும்.

எந்த இடத்தைத் தொட்டாலும் பெண்ணின் உடல் சிலிர்த்துக்

கொண்டேயிருக்கும். அந்நிலையில், ஆணின் தீண்டலுக்கான ஏக்கப் பகுதியில்

குறு குறு உணர்ச்சியை ஏற்படுத்தினாலும், வட்டங்களை இட்டுக்

கொண்டிருந்தாலும், வருடிக் கொண்டிருந்தாலும் கூட இன்பங்கள்

நிகழ்ந்து

கொண்டேயிருக்கும்,

இது பன்முறை உச்சம் அல்ல. அதைவிட ஆழமானது. இடையின்றி நிகழும்

நீண்ட நேரப் பேரின்பப் பரவசம் என்று இதை அழைக்கிறார்கள். ஐந்து முதல்

பத்து நிமிடங்கள் வரை கூட இது இடையின்றி நிகழக் கூடியது. இதைத் தான்

தந்த்ரா பூஜை என்று ஞானிகள் கூறியுள்ளனர்.

ஆகவே, அமிர்த இன்பம் நிழ்ந்து முடிந்ததும், உடலின் பிற அவயங்களை

மயிலிறகால் வருடுவதன் மூலம் நிகழக்கூடிய தந்த்ரா இன்பத்தை வழங்கத் தவற

வேண்டாம், பெண்ணின் எந்தப் பகுதியை வருடினால் அந்த இன்பம் நிகழும்

என்று முன் கூட்டியே சொல்ல முடியாது. ஏனெனில், இது பெண்ணுக்குப்

பெண், வேறு படக் கூடியது. (Valley Orgasm தளர்வு நிலை இன்பம்.-15)

இயங்குவதே தெரியாமல் இயங்குவதன் மூலம் இன்பத்தை நிகழ்த்தும் செயல்

இது. இந்த இன்பத்தை வழங்கிய பிறகும் கூட, கணவன் ஒதுங்கி விடக் கூடாது.

அதாவது உச்சபட்ச இன்பங்களை அனுபவித்த பிறகு பெண் மிகவும் துவண்டு

போய் இருப்பாள். உடனே எழுந்து விட முடியாது.

பெண்ணின் மூளை அனைத்தையும் மறந்திருக்கும் வேளை இது.

குழந்தையின் மூளையைப் போல அப்பழுக்கின்றி சிந்திக்கின்ற வேளை இது.

பெண்ணின் மூளையிலேஅன்பை உருவாக்கும், அசைக்க முடியாத பாசத்தை

உருவாக்கும் ஈடிணையற்ற இணக்கத்தை உருவாக்கும் வேதிகள்

சுரக்கும் வேளை

இது. அவள் தன்னிலை அடைய சில நிமிடங்கள் ஆகும். அவ்வாறு

தன்னிலைக்கு வரும் வரை, ஆறுதலான அணைப்பு தேவைப்படும். பெண்ணை

அணைத்த படி, படுத்திருந்து விட்டு, அவளது உடலில் அசைவுகள் ஏற்பட்ட

பிறகோ, அல்லது உறங்கிய பிறகோ தான் ஆண் அங்கிருந்து எழுந்து செல்ல

வேண்டும்,

இவ்வாறு நடந்து கொண்டால், ஆணின் மீது ஈடிணையற்ற அன்பு

பெண்ணின் மனதில் ஏற்படும். அதற்கு இணையான அன்பு எத்தனை

கோடிகளைக் கொட்டினாலும், ஈரேழு உலகிலும் தேடினாலும் ஆணுக்குக்

கிடைக்காது. தாயன்பிற்கு இணையான அன்பு இது. ஆகவே இன்பங்கள்

நிகழ்ந்த உடனே ஆண் விருட்டென எழுந்து சென்று விடக் கூடாது.

மேற்கண்ட இன்பங்கள் நிகழ்ந்த பின், ஹஸ்தினி வகையின் யானைப்

பிரிவைச் சேர்ந்த பெண்ணாகவே இருந்தாலும் ஒருக்களித்து சுருண்டு போய்த்

தான் படுத்திருப்பாள். அவ்வாறு படுத்திருக்கும் போது, கரண்டிகள் ஒன்றுடன்

ஒன்று பொருந்தியிருப்பதைப் போல மனைவியின் பின்புறமிருந்து அணைத்தபடி

ஒருக்களிப் படுத்திருக்கலாம்,

அல்லது மனைவியின் வலது கைப்பக்கமாகக் கணவன் கூரையைப்

பார்த்தபடி படுத்து, மனைவியின் தலையை மார்பின் மீதும், இடது காலைத் தன்

கால்களின் மீதும் போட வைத்து தலையை நீவிக் கொடுத்துக் கொண்டிருக்கலாம்,





அல்லது மனைவியின் தலையை மட்டும் தன் மடியில் வைத்துக்

கொள்ளலாம். அல்லது தன்னுடைய வலது காலையும், கையையும் மனைவியின்

மீது போட்டுக் கொள்ளலாம். மேலும் நெருக்கமாக இருக்கக் கூடிய எந்த வழியிலும்

மனவியை அணைத்துக் கொண்டிருக்கலாம்.

இதற்கான சூத்திரம். இன்பத்துய்ப்பு முடிந்த அடுத்த விநாடியே,

கழிவறை நோக்கி ஒடும் கணவனின் மீது, மனைவிக்கு அன்பு ஏற்படாது

பெண்களுக்கு பாலியல் உரிமை இன்னும் கிடைக்கவில்லை.

இவ்வாறாக முறையாக கற்றுக் கொண்டு, அதை ஒரு வேலையாகவோ

அல்லது தனக்கு மட்டுமே இன்பம் தருகிற செயலாகவோ பயன்படுத்தாமல்,

மனைவிக்கும் உரிய இன்பத்தை வழங்கிட, கணவன் கற்றுக் கொண்டால்

மட்டுமே, இல்லற வாழ்க்கை என்பது இனி மேல் இனிமையானதாக இருக்க

முடியும்.

ஏனெனில், காலம் மாறி விட்டது. உதாரணமாக ஒரு காதல் குடும்பமாய்

மலர்வதும், காவியமாவதும் பெண்ணின் கையில் தான் முழுமையாக இருக்கிறது.

அதே போல ஒரு குடும்ப வாழ்க்கை தொடர்ந்து அமுலில் இருப்பது கூட இப்போது

பெண்ணின் கையில் தான் இருக்கிறது. ஒரு கணவன் தன் மனைவியை கை விட
முயன்றால் அவன் மீது பாய வரதட்சிணை, குடும்ப வன்முறை, பாலியல்
வன்புணர்வு என பல சட்டங்கள் உள்ளன. ஆனால், அதே சமயத்தில் ஒரு மனைவி
தன்னை போகப் பொருளாகப் பயன்படுத்தும் கணவனைக் கைவிட முடிவெடுத்து
விட்டால், அதைத் தடுக்கும் உரிமை யாருக்கும் இல்லை. அவளுடைய
குழந்தைகள் உட்பட.

திருமணம் முடிந்த அடுத்த நாளே கூட ஒரு பெண்ணால் தன் கணவனைக்
கை விட முடியும். எந்தச் சட்டத்தாலும் இதைத் தடுக்க முடியாது. அதிகபட்சமாக
தன்னுடைய தாம்பத்ய உரிமைகளை மீட்டுத் தரக்கோரி கண வன் வழக்குத்
தொடுக்கலாம். அப்படியெல்லாம் தரமுடியாது என்று மனைவி கூறி விட்டால்,
எந்தச் சட்டத்தாலும் அவளைக் கணவனோடு சேர்த்து வைக்க இயலாது.

பாலியல் உரிமை ஏன் கேட்கப்படுகிறது**?**

அந்த அளவிற்கு பெண் உரிமைகளைப் பெற்றிருக்கிறாள், எனினும்,
பெண்கள் இன்னும் உரிமை கேட்டுப் போராடிக் கொண்டிருக்கிறார்கள். இதற்குக்
காரணம் என்ன? ஒரே காரணம் பெண்களுக்குள்ள பாலியல் உரிமை இன்னும்
கிடைக்கவில்லை. அதாவது அவளுடைய உடலை அவள் விருப்பத்திற்கேற்பப்
பயன்படுத்தும் உரிமையை இன்னும் பெண்களால் பெறமுடியவில்லை, பல
மேற்கத்திய நாடுகளில் உள்ள இந்த உரிமை பெண்ணுக்கு இன்னும்
வழங்கப்படவில்லை.

இந்த உரிமை ஏன் கேட்கப்படுகிறது? திருமண வாழ்வைப் பொறுத்த வரை

பெரும்பாலும் பெண் ஒரு போகப் பொருளாகவே கணவனால் பயன்படுத்தப்

படுகிறாள். இன்பத்தை வழங்குவதற்கு மட்டுமே படைக்கப்பட்ட உயிரினமாகவே

நடத்தப் படுகிறாள். பெண்ணுக்குரிய இன்பங்களைக் கணவன் வழங்கு

வதில்லை.

பெண்ணின் மனநிலையை இது பாதிக்கிறது. பெண்ணிடம் மூழ்கிக்

கிடக்கின்ற பேரறிவை தணிக்கப் படாத காமம் முடக்கி வைத்திருக்கிறது.

பெண்மைக்கென்றுள்ள அன்பு, கனிவு, கருணை, இரக்கம். ஈகை, பரிவு,

பச்சாதாபம், பணிவு, விருந்தோம்பல், உபசரித்தல், மென்மை போன்ற அடிப்

படைப் பண்புகளை பாலின்ப ஆற்றாமை கொலை செய்து விடுகிறது. அதனால்,

சேலை கட்டிய ஆணாக பெண்ணும் மாறுகிறாள்.

உடலில் சுரக்கும் வேதிப் பொருளாலும், மரபணுவின் உந்துதலாலும் ஆண்

என்பவன் ஒரு ஆணாகச் செயல் படுகிறான். பாலின்ப ஆற்றாமை நோயின்

பாதிப்பால், பெண்ணும் ஒரு ஆணாகச் செயல்படத் தொடங்குகிறாள்.

ஆகவே, இரண்டு ஆண்களுக்கிடையே நடைபெறக்கூடிய இல்லறமாக

குடும்பம் மாறி விடுவதால் வாழ்க்கை ஒரு போர்க்களமாகிறது. இதனால் ஒட்டு

மொத்த மனித சமூகமே ஆண் குணங்களை மட்டுமே கொண்டதாகி விட்டது.

ஆணின் அடிப்படை குணம் வேட்டையாடுதல். வேட்டையில் வெல்ல சூழ்ச்சி

வலை பின்னுதல். ஒட்டு மொத்த சமூகமும் ஆண்களை மட்டுமே கொண்ட

வேட்டைக்காரச் சமூகமாக மாறி விட்டது. அதனால் அது சம நிலையிழந்து

விட்டது. இந்தச் சூழலில் மிகவும் குறுகிய கண்ணோட்டங்களோடு குழந்தைகள்

வளர வேண்டிய நிலை ஏற்பட்டிருக்கிறது. ஆனால் இது இயற்கைக்கு

விரோதமானது.

ஆண் அனாதையாகி விடுவான்.

மனித இனம் தோன்றிய நாள் முதலாக பெண்ணைப் பாதுகாக்க ஆண்

தேவைப்பட்டான். துவக்கத்தில் விலங்குகளிடமிருந்து, கும்பல்களான பின்

அந்நியக் கும்பலைச் சேர்ந்த ஆண்களிடமிருந்து, நாடுகள் தோன்றிய பின்

அண்டை நாட்டுப் போர் வீரர்களிடமிருந்து பெண்ணைக் காக்க ஆண்

தேவைப்பட்டான். அதனால், போகப்பொருளாகப் பயன்படுத்தப்படுவதை பெண்

சகித்துக் கொண்டாள். ஆனால், ஹிரோஷிமாவிலும், நாகாசாகியிலும்

அணுகுண்டு விழுந்த பின் யாராலும் யாரையும் காப்பாற்ற முடியாது என்பது

தெளிவாகி விட்டது. ஆணின் தற்காப்பே கேள்விக்குறியாகி விட்டது.

அதனால் மனைவியை போகப் பேருளாகப் பயன்படுத்தக் கூடிய ஆண்

இப்போது தேவையற்றவனாகிக் கொண்டிருக்கிறான். கூடுதலான சுமையாகக்

கருதப்படுகிறான். அதனால் கருத்தரித்தலுக்கு மட்டுமே பயன்படுத்திக்

கொள்ளும் அபாயத்தை அவன் எதிர்கொண்டிருக்கிறான். அந்தக் கலாச்சாரம்

மேற்கத்திய நாடுகளில் துவங்கி விட்டது. நாம் அவர்களைத் தான் பின்பற்றிக்

கொண்டிருக்கிறோம்.

இந்தக் கலாச்சாரத்தை முன்னெடுத்துச் செல்வோர் கேட்கிறார்கள். பெண்

எதோ ஒன்றை எதிர்பார்த்துத் திருமண வாழ்விற்குள் வருகிறாள். அவளுடைய

எதிர்பார்ப்பு பூர்த்தியாகாத போது அந்தச் சிறையிலிருந்து அவள் வெளியேறுகிறாள்.

இந்த விவகாரத்தில் பெண்ணிடம் என்ன தவறிருக்கிறது என்று மிகத் தெளிவாகக்

கேட்கிறார்கள், மிகவும் நியாயமான கருத்து.

ஆகவே இன்றைய நவீன காலத்திற்ற பாலியல் அறிவை வளர்த்துக்

கொள்வதும், பெண்களைப் பற்றிய கருத்தை மாற்றிக் கொள்வதும் ஒவ்வொரு

ஆணின் தலையாய கடமை, அந்தக் கடமைப் பொறுப்பைக் கற்றுத் தருவதே

தந்த்ரா ஞானம்,

ஆகவே பெண்ணுக்குரிய உரிமைகளை வழங்கிய பிறகும்,

மனைவிக்குரிய இன்பங்களை வழங்கும் கலைகளைக் கற்றுக்

கொள்ளாமல், மனைவியை ஒரு போகப்பொருளாகவே பயன்படுத்த ஆண்

நினைத்தால், குடும்ப அமைப்பு முறையே அழிந்து போய் விடும்.

குடும்ப நிறுவன அமைப்பு முறை அழியும் போது ஆண் என்கிற உயிரினம்

உண்மையான அனாதையாகி விடுவான். அனாதைகள் அனுதாபத்திற்கு

உரியவர்கள், அதே சமயத்தில் மிகவும் ஆபத்தானவர்களாக மாறக்கூடிய

மனநிலையும் உடையவர்கள்.

ஆண்கள் அனாதைகளாகும் போது, மனித இனம் இனியொரு முறை

தீயையும், சக்கரத்தையும் கண்டு பிடிக்க வேண்டியிருக்கும். தீவிரவாதிகளே

சான்று, ஏனெனில், மனோரீதியாக அனாதையாக்கப் பட்ட மனிதனே

தீவிரவாதியாக உருவாகிறான். அல்லது உருவாக்கப்படுகிறான்.

மேற்கத்திய நாடுகளில் வாழும் ஆண்கள் அனாதைகளாக உருவாகிக்

கொண்டிருக்கிறார்கள். அதனால் தான் ஐந்து பெண்களில் ஒருத்தி கற்பழிக்கப்

பட்டவளாக அங்கே வாழ்ந்து கொண்டிருக்கிறாள். அந்த நிலை இந்திய தேசத்தில்

ஏற்பட்டு விடக் கூடாது.

ஒரு ஒற்றைக் காதல் திருமணமே இலட்சக்கணக்கான மக்களைக்

கொதிப்படையச் செய்கிற சமூகத்தில், மக்கள் தொகைப் பெருக்கம் மிக்க, இன,

மத, மொழி, பிராந்திய, கலாச்சாரப் பன்முகத்தன்மை கொண்ட நாட்டில், குடும்ப

நிறுவன முறை அழிவது மிகவும் ஆபத்தானது.

குடும்ப அமைப்பு முறை அதன் நம்பகத்தன்மையை இழந்து விடும்

பட்சத்தில், இந்தியா போன்ற பன்முகத்தன்மை வாய்ந்த ஒரு தேசத்தில், சட்ட

ஒழுங்கைக் கட்டி காக்கவோ, சமூக நெறிமுறைகளைப் பின்பற்றி வாழவோ

நிச்சயமாக முடியாது.

ஆகவே, அப்படிப் பட்டதொரு சூழல் சந்ததிகளுக்கு ஏற்படாமலிருக்க

வேண்டுமானால், மனைவியை போகப் பொருளாகப் பயன்படுத்தும்

அறியாமையை, அல்லது மடமையை, அல்லது கயமையை அல்லது சுயநல

மனப்பான்மையை அல்லது ஆதிக்க மனோபாவத்தை ஆண்கள் கைவிட

வேண்டும்.

பெண்ணின் உண்மையான சக்தியைப் புரிந்த கொண்டு, பெண்ணின் உடல்

நலத்தையும், மன நலத்தையும் பேணக்கூடியதும், ஆயுளைக் கூட அதிகரிக்கக்

கூடியதான உச்ச கட்ட பாலின்பங்களைத் தவறாமல் மனைவிக்கு வழங்கி வாழக்

கற்றுக் கொள்ள வேண்டும்,

அதற்கான ஒரே வழி தந்த்ரா. ஆகவே, பண்டைய இந்திய ஞானமான

தந்த்ரா அறிவை ஒவ்வொரு ஆணும் கற்றுக் கொள்ள வேண்டும்.

“பன்மாயக் கள்வன் பணிமொழி அன்றோ நம் பெண்மை உடைக்கும் படை”

அந்த மாயக் கள்வனின் அன்பான வார்த்தைகள் தான் என் பெண்மையைத்

தகர்த்தெறியும் ஆயுதங்களாக இருக்கிறது.

“காமக் கணிச்சி உடைக்கும் நிறை என்னும் நாணுத்தால் வீழ்த்த கதவு.” என்

கட்டுப்பாட்டுக் கதவின் நாணம் என்கிற தாழ்ப்பாளை காமம் என்கிற கோடரி

உடைக்கிறது. பெண் தன்னிலை இழப்பதைப் பற்றிய தகவலை மேற்கண்ட இரு

குறட்பாக்களும் தெரிவிக்கின்றன. போகப் பொருளாகப் பெண்ணைப்

பயன்படுத்துவது தான் கள்ளக் காதல் ஏற்படுவதற்கான ஒரே காரணம்..

ஆகவே, ஒருதார உறவு நிலைத்திருக்க வேண்டுமானால், பெண்ணின் காமம்

குடும்பத்திற்குள்ளேயே தணிக்கப் பட்டாக வேண்டும். மனைவியை போகப்

பொருளாகப் பயன்படுத்தப் படும் போக்கு ஒழிக்கப் வேண்டும். அவ்வாறு

தணிப்பதற்காக, ஆணின் பாலியல் அறிவு வளர்ந்தாக வேண்டும். இல்லாவிட்டால்

ஒருதார உறவு, விரைவில் வழக்கொழிந்து போகும். அதன்பின் குடும்ப அமைப்பு

தழைத்திருக்க முடியாது.

மேலும் ஒரு தகவல் இங்கே தரப்படுகிறது. திருமண நிறுவனம்

நொறுங்கிக் கொண்டிருக்கும் நாடுகளில் எல்லாம் தந்த்ரா ஞானிகள்

உருவாகிக் கொண்டிருக்கிறார்கள். ஒரு தார வாழ்வைப் போதிக்கக் கூடிய

தந்த்ரா அறிவைத் தாங்கள் நடத்தக்கூடிய காதற் பள்ளிகள் வாயிலாகப் போதித்துக் கொண்டிருக்கிறார்கள். காலம் கடந்த முயற்சியாகவே அது இருந்தாலும் மக்களை அது கொஞ்சம் கொஞ்சமாக மாற்றிக்

கொண்டிருக்கிறது.

ஆகவே, இந்தியா போன்ற வளரும் நாடுகளில் வாழ்வோர் முன்

கூட்டியே விழித்துக் கொள்வது நல்லது. அந்த விழிப்பூட்டும் வேலையை

இந்த நூல் செய்து முடிக்கும் என்கிற நம்பிக்கையோடு இந்த அத்தியாயம்

நிறைவடைகிறது.

## 7. அதிர்வின்ப பூஜை

பெண்களுக்குரிய பாலின்பங்களை வழங்கத் தெரிந்தவனின் முகத்தைப் பார்த்தே

பெண்கள் கண்டு பிடித்து விடுவார்கள், ஏனெனில், அந்த ஆணின் முகம் எப்போதும்

புன்முறுவலோடு ஒளி வீசிக் கொண்டிருப்பதாய் இருக்கும். திரகஸ்யா.

உடலில் உள்ள ஒவ்வொரு உயிரணுவையும் தனித்தனியே மகிழ்விப்பதற்குப்

பெயர் தான் முன் விளையாட்டுக்கள். உடலின் ஒவ்வொரு அணுவிலும்

குடிகொண்டுள்ள பெண்ணின் மனதைத் தன்னிலை மறக்கச் செய்வதற்கான

முயற்சிகளே காதல் விளையாட்டுக்கள்.

பெண்ணின் உடலில் உள்ள பாலுணர்வு மையங்களிலேயே முற்றிலுமாகப்

புறக்கணிக்கப் படுகின்ற பகுதிகளில் ஒன்று கை விரல்கள். அவை முக்கியமான

பாலுணர்வு மையங்கள்.

ஆகவே, பெண்ணின் கையை மிருதுவாக எடுத்து, புறங்கையின் மீதும்,

விரல் மூட்டுக்களின் மீதும், மிகவும் மென்மையாக முத்தமிட வேண்டும். அதன்

பின் ஒவ்வொரு விரலின் நுனியையும் உதடுகளை மட்டும் பயன்படுத்தி, எச்சில்

படாத வகையில் மென்மையாகக் கடித்து விட வேண்டும்.

உள்ளங் கையிலிருந்து விரல்கள் உருவாகி வருகிற இடத்தில், விரல்களுக்கு

இடையே உள்ள கால்வாய் போன்ற பகுதியை நுனி நாக்கைக் கொண்டு

மென்மையாகத் தடவிக் கொடுக்கவும்,

அதன் பின் உள்ளங்கையை ஒரு ரோஜா மலரால் தடவி விடுவதைப் போல்

மென்மையாக முத்தமிடவும். உள்ளங்கையின் மேடான பகுதிகளை

மென்மையாகக் கடிக்கலாம். அதன் பின் மணிக்கட்டுப் பகுதியில்

முத்தமிட்டவாறே மேல் நோக்கிச் செல்லவும்,

இவ்வாறு தோள்பட்டை வரை கையின் ஒவ்வொரு அங்குலத்தையும் மிக

மென்மையாக முத்தமிட்டுக் கொண்டே, கழுத்துப் பகுதியில் உள்ள பெண்ணின்

உயிரணுக்களை மகிழ்விக்கும் பணியில் ஈடுபடவும்.

கழுத்துப் பகுதி முழுவதையும் இடைவெளியின்றி மென்மையான

முத்தத்தால் மூழ்கடித்த படியே, ஆங்காங்கே நாவால் மெலிதாகத் தடவி விடவும்.

உமிழ் நீரால் ஈரமாகும் இடத்தின் மீது “ஹா” எனச் சொல்லும் போது வாயிலிருந்து

காற்று எப்படி வருமோ அதைப் போல் சூடான காற்றை ஊதிவிடவும்.

ஈரமும் சூடும் ஒரே நேரத்தில் கழுத்துப் பகுதியைத் தாக்கும் போது

பெண்ணின் பாலுணர்வு தூண்டப்படும்.

அதன்பின் முகத்தை நோக்கி முன்னேறவும். முகமும் ஒரு முக்கியமான

பாலுணர்வு மையம், முகத்தில் உள்ள ஒவ்வொரு அவயமும் முக்கியமான

மையங்களே. முகத்தில் உள்ள ஒவ்வொரு உறுப்பின் மீதும் தனிக் கவனத்தைச்

செலுத்தி விளையாட்டுக்களைத் தொடர்ந்தபடியே, அமுத படங்களோடும்

விளையாடத் தொடங்கலாம்,

அங்கே சில நிமிடங்களைச் செலவிட்டபின், வயிற்றுப்பகுதி, தொப்புளுக்குக்

கீழேயுள்ள பகுதி, பின்புற இடை என முன் விளையாட்டுக்களைத் தொடர்ந்த

படியே பெண்ணின் சுவாசத்தைக் கவனிக்கவும். ஐந்து முதல் பத்து நிமிடங்களில்

நிச்சயமாகப் பெண்ணின் சுவாசத்தில் மாற்றம் ஏற்பட்ட தீரும்,

அந்த மாற்றம் தான் யோனியில் இன்பத்தேன் சுரக்கத் தொடங்கி

விட்டதற்கான அடையாளம். அதாவது இன்பத் துய்ப்பிற்குப் பெண்ணின் புனிதப்

பகுதி தயாராகிக் கொண்டிருக்கிறது என்று பொருள்.

அவ்வாறு பெண்ணின் சுவாசத்தில் மாற்றம் ஏற்பட்டு, புனிதப் பகுதியைப்

பற்றிய சேதியைச் சொல்லும் வரை, ஆணின் கவனம் அங்கே செல்லக் கூடாது.

அதன் பின், வித்தியாசமான முறையொன்றைப் பின் பற்றி, மனைவிக்குரிய

பேரின்பப் பரவத்தை நிகழ்த்தும் முறையைக் கற்றுக் கொள்ளலாம்.

எப்போதும் ஒரே மாதிரியான உணவையே உட்கொண்டால், அது

எப்படிப்பட்ட உணவாக இருந்தாலும் சலிப்புத் தட்டி விடும். உணவின் வகைகளை

மாற்றிக் கொண்டேயிருப்பது நல்லது. அதே விதி இன்பத் துய்ப்பிற்கும்

பொருந்தும்.

விதங்களை மாற்றுதல், வகையை மாற்றுதல், முறையை மாற்றுதல்,

வரிசையை மாற்றுதல் என மாற்றிக் கொண்டேயிருந்தால் தான் அதன் மீது சலிப்பு

ஏற்படாது. மேலும் முன்கூட்டியே விளைவு தெரியாதபோது ஏற்படும் ஆர்வமே

நல்லது.

இவ்வாறு விதங்களையும், வகைகளையும், முன் விளையாட்டு

முறைகளையும் மாற்றிச் செய்தாலும், முதலில் மதன பீட இன்பத்தை நிகழ்த்தி

விட்டே அடுத்த இன்பத்தை நிகழ்த்தும் பயணத்தைத் துவக்க வேண்டும் என்பது

ஒரு பொது விதி.

ஆனால், இந்த அதிர்வின்பத்தைப் பொறுத்தவரை கை விரல்களில்

தொடங்கிய முன் விளையாட்டுக்கள் முடிந்த பின், மனைவியின் சம்மதத்தின்

பேரின் அதிர்வுகளால் நிகழக் கூடிய இன்பத்தையும், மதனபீட இன்பத்தையும்

ஏக காலத்தில் நிகழும் படியாக மனைவிக்கு அளிக்கலாம்.




நாற்பத்தைந்து டிகிரி கோணத்தில் சாய்ந்து

இருக்கும் படியாக சுவருக்கு சாய்ந்து மனைவி

அமர்ந்து கொள்ள வேண்டும், அதாவது

தலையும், தோள் பட்டைகளும் சுவரில் பட்டுக்

கொண்டிருக்க, இடையானது சுவற்றிலிருந்து

இரண்டடி தள்ளியிருக்க வேண்டும். பின்புறம்

தலையணை ஆதரவு அவசியம்.

கணவனுக்கு எந்தக் கை இயல்டாக வருகிற

கையோ அந்தக் கையை புனிதப்பகுதியில் பயன்

படுத்துவதற்கு ஏற்ற வகையில் கணவன்

மனைவியின் அருகில் அமர்ந்து கொள்ள

வேண்டும். அதாவது, வலதுகைப் பழக்கம்

உடைய ஆணாக இருந்தால், பெண்ணின் வலது

பக்கத்திலும், இடது கைப் பழக்கமுள்ள ஆணாக இருந்தால் பெண்ணின் இடது

புறமும் அமாரவும்.

பழக்கமற்ற கை பெண்ணின் கழுத்தைச் சுற்றிப் பிடித்திருக்க வேண்டும்.

வாய் கன்னத்தில் முத்தமிட்டுக் கொண்டி ருக்கலாம். மனைவியை நெருங்கி

ஒருக்களித்து அமரவும்.

மனைவியின் ஒரு காலை தன்மீது எடுத்து வைத்துக் கொண்டு, வேறொரு

காலின் முழங்காலின் கீழ் மூன்று தலையணைகளை வைத்து விட வேண்டும்.

அதாவது புனிதப்பகுதி நாற்பத்தைந்து டிகிரி மேல் நோக்கி இருக்கும் நிலையை

உருவாக்கிக் கொள்ள வேண்டும்.

மதன மேட்டின் மீது மணிக்கட்டும், மதன பீடத்தின் மீது உள்ளங் கையும்,

புனித குகையின் மீது ஆள்காட்டி விரலும் நடுவிரலும் இருக்கும் வகையில் கையை

மெதுவாக வைக்கவும், சிறிது நேரம் புனிதப் பகுதியின் வெப்ப நிலையை

அனுபவித்த படி இருக்கவும்.

அதன்பின், ஆள்காட்டி விரலையும் நடு விரலையும் ஆங்கில எழுத்து

வி

போல விரிக்கவும். அவ்வாறு விரித்த நிலையில் யோனியின் இருபுறங்களையும்

அழுத்திப் பிடிக்கவும், ஒன்பது எண்ணும் வரை விரல்கள் இரண்டும் அழுத்திய

நிலையிலேயே இருக்கட்டும். அதன் பின், அழுத்தத்தைத் தளர்த்தவும். இவ்வாறு

அழுத்தித் தளர்த்துதலை தொடர்ந்து செய்யவும்,

அவ்வாறு ஒன்பது முறை செய்த பின், விரல்களை அழுத்திய படியே மேல்

நோக்கி இழுக்கவும். மூலாதாரத்தில் துவங்கி, மதன மேட்டின் மீது கோபுர வடிவில்

வந்து விரல்கள் இணைய வேண்டும்.

யோனியின் உதடுகளுக்குப் படாத வகையில் ஒன்பது முறை இரு

விரல்களையும் அழுத்திய படி மேல்நோக்கி இழுக்கவும். உயவுப் பொருள் மிகவும்

அவசியம். விரல்களைக் கீழ் நோக்கித் தள்ளக் கூடாது. ஒரு முறை என்பது ஆறு

வினாடிகளைக் கொண்டது.



அதன்பின் கொல்லர் பட்டறையில்

காற்றுக்கியைக் கொல்லர் பிடிப்பதைப் போல்

யோனியின் இரு புறத்தையும் பிடித்து

வெளியுதடுகள் இரண்டும் இணையும்

வகையில், ஒன்றாகச் சேர்த்து நன்றாக அழுத்திப்

பிடிக்கவும்.

ஆறு வினாடிகள் வரை அப்படியே

பிடித்திருக்கவும். அதன் பின் அழுத்தத்தைத்

தளர்த்தவும். மீண்டும் ஆறு வினாடிகள் வரை

அழுத்திப் பிடிக்கவும். அழுத்தத்தைத் தளர்த்தவும். இவ்வாறாக இருபத்தேழு

முறை அழுத்தித் தளர்த்தும் விளையாட்டைச் செய்து கொண்டிருக்கவும்.

இவ்வாறு செய்யும் போது பெண்ணின் மனம் கடந்த காலச்

சிந்தனைகளிருந்து விடுபட்டு இக்கணத்திற்கு வந்து சேரும். அதனால் புனிதப்

பகுதியை நோக்கி இரத்தம் வரத் தொடங்கும், யோனியின் இருபுறத்திலும்

அமைந்துள்ள மதன பீடத்தின் கால்கள் இரத்தத்தால் நிரப்பட்டு மதன பீடம்

பெரி தான் வெளியே வரத் தொடங்கும். புனிதப் பகுதி முழுவதும் சற்றே

விங்கியதைப் போலக் காட்சியளிக்கும்.

யோனியின் உள் உதடுகளின் மேற்புறம் எங்கே இணைகிறதோ அங்கே மதன

பிடம் இருக்கிறது. உதடுகளால் மூடப்பட்டிருப்பதால் அது வெளியே தெரியாது.

உள் உதடுகளை விலக்கிப் பார்த்தால் மட்டுமே சாதாரண நேரங்களில் இதைப்

பார்க்க முடியும், அவ்வாறு மறைந்துள்ள படம் தனது திரையை விலக்கிக்

கொண்டு வெளியே வரத் தொடங்கும்.

மதனபீடம் உயிர்தெழும் போது யோனியில் சுரக்கும் இன்பத்தேனும்

நன்றாகவே சுரக்கத் தொடங்கி விடும். அப்போது, நடுவிரலையும், மோதிர

விரலையும் கொண்டு யோனியின் மீது மெல்லிய வட்டமிட்ட படியே கையை

மெதுவாக அதிர விடவும்.

விசையூக்கி நடுநிலையில் இருக்க, ஆற்றல் இயந்திரம் மட்டுமே இயங்கிக்

கொண்டிருக்கும் போது ஒரு கனரக வாகனத்தின் மேலே கையை வைத்தால்

எப்படிப்பட்ட அதிர்வுகள் உணரப் படுகிறதோ அதைப் போன்ற அதிர்வுகளை

உருவாக்கவும்,

இவ்வாறு தொடர்ச்சியாகவும் இசைவு மாறாமலும் அதிர்வுகளை ஏற்படுத்திக்

கொண்டிருக்கும் போது யோனியின் நுழைவாயிலில் வட்டமிட்டுக் கொண்டிருக்கக்

கூடிய விரல்களின் மீது யோனியிலிருந்து உருகி வருகிற இன்பத்தேன் வந்து படும்.

அப்போது அந்தத் தேனில் இரண்டு விரல்களை நனைத்தபடியே

அரையங்குல அளவிற்கு செலுத்துவது தெரியாத வேகத்தில் உட்செலுத்தவும்.

ஆனால் அதிர்வுகளை நிறுத்தக் கூடாது. யோனியின் இன்பத்தேனின் அளவு

அதிகரிப்பதை விரல்கள் உணரும் வரை இவையிரண்டையும் தொடரவும்.

இன்பத்தேன் விரல்களில் சக்தியைப் போல் உணரப்படும் போது மேலும் ஒரு

அங்குல அளவிற்கு விரல்களை உட்செலுத்தவும்.




இப்போது வட்டமிடுவதை நிறுத்தி விட்டு

யோனியின் மேற்புறச் சுவற்றிலுள்ள நெருடலான

பகுதியில் வைத்து விரல்களை மட்டும்

அரிப்பேற்படுகிற இடத்தைத் தேய்த்துவிடுவதைப்

போல் மென்மையாக தேய்த்து விடத்

தொடங்கவும். அதே சமயத்தில் உள்ளங்கையை

மதன் படத்தின் மீது சற்று அழுத்தமாக

அதிகரிக்கவும்.

வைத்தபடி, அதிர்வுகளின் வேகத்தை

அதிகரிக்கவும்.

வாய் முத்தமிட்டுக் கொண்டிருக்கலாம். அல்லது கொங்கையின் இதழ்களில்

இருக்கலாம். ஒரு கை மனைவியின் கழுத்தக் கட்டிப்பிடித்துக் கொண்டிருக்கலாம்.

அதிர்வுகளின் வேகத்தை அதிகரிக்கவும். விரல்களின் அசைவு வேகத்தை

ஒரு சில விநாடிகளில் மனைவி இன்பக் கதறலில் ஈடுபட்டு விடுவாள்.

அய்யோ கடவுளே என்பது தான் இந்த நேரத்தில் பெண்கள் அனைவரும்

பயன்படுத்துகிற உலகப் பொதுமொழி.

அப்போது யோனியின் மேற்புறச் சுவரிலிருந்து பேரீட்சம் பழ அளவில் ஒரு

பகுதி உருவாகி கீழ் நோக்கி இறங்கும். அது விரல்களையே கூட வெளியே

தள்ளுமளவிற்கு வலுவாக இருக்கும். அந்தப் பகுதி தான் புனிதப்புள்ளி. அல்லது

ஜி.ஸ்பாட்.

இப்போது அதிர்வுகளின் வேகம் சற்று அதிகரிக்கட்டும். கண்கள் இரண்டும்

தழுவிக் கொண்டிருக்கட்டும். ஆழமாகப் பாருங்கள். நான் உன் உயிராய்

இருக்கிறேன் என்பதைக் கண்களாலேயே சொல்லுங்கள், பார்வை ஆழமாக

இருக்கட்டும், முழு உடலும் மனைவியின் உடலோடு இணைந்திருக்கட்டும்.

பெண் ணின் வலது கால் ஆணின் தொடைகளை வளைத்துப் பிடித்துக்

கொண்டிருக்கட்டும்.

அன்பும், கருணையும் அந்தப் பார்வைக் கதிர்களின் மூலமாக மனைவியின்

ஆன்மாவைச் சென்றடையட்டும். பெண்ணின் கண்கள் செருகலாம், அல்லது

இமைகள் வந்து கண்களை மூடிக் கொள்ளலாம். அப்போது அதிர்வுகளின் வேகம்

மேலும் அதிகரிக்கட்டும். இன்பக் கதறல் ஏற்படலாம். எனினும், அதிர்வுகளை

நிறுத்த வேண்டாம், ஏனெனில், அது தான் பேரின்பத்தின் வாயிலுக்குள் நுழைந்து

விட்டதற்கான அடையாளம்.

இன்பச் சிணுங்கலோ அல்லது இன்பக் கதறலோ துவங்கும் போது, புனித

குகையில் உருவாகியுள்ள புனிதப் புள்ளியை சற்று அழுத்தமாகத் தேய்த்து

விடவும். இப்போது புனித குகையின் சுவரிலுள்ள தசை வளையங்களில் ஏற்படும்

தளர்வை நன்றாக உணரலாம். அதை உணரும் போது, அதிர்வை

உருவாக்குவதற்கான அசைவுகளை முழங்கையிலிருந்தே தொடங்கவும்.

இதிலிருந்து ஒரு நிமிடத்திற்குள் மதனபீட இன்பமும், பிரம்மஸ்தானத்தின்

புனிதப்புள்ளியை மையமாகக் கொண்ட இன்பமும் ஒரே நேரத்தில் நிகழும்.

மேற்கண்ட இரண்டும் ஒரு சேர நிகழும் போது, அந்த இன்பக் கிளர்ச்சி முழு

உடலாலும் உணரப்படுகிற பேரின்பப் பரவச நிலையாக இருக்கும். (Blonded

Orgasm. ஒருங்கிணைந்த இன்பம் 16)

இந்த மாதிரியான இன்பத்தை அளிக்கும் கணவனின் மீது மனைவிக்கு

ஏற்படும் அன்பு ஈடிணையற்றது. இது போன்ற பாலின்பங்களைத் தவறாமல்

வழங்குகின்ற ஆணின் அடிமையாகவே மனைவி மாறிப்போவாள் என்பது ஒரு

மறுக்க முடியாத உண்மை.

குகைக் காலம் முதல் இன்றைய நவீன காலம் வரை, பெண்ணை ஆளத்

தெரிந்த ஆணின் அடிமையாக இருக்கவே பெண் விரும்புவதாகவே ஆய்வாளர்கள்

அனைவரும் கூறுகிறார்கள்.

மேற்கண்ட இரண்டு இன்பங்களும் ஒருசேர நிகழும் போது, பெண்ணின்

உடல் வில்லாய் வளையும். அல்லது கோணல் மாணலாய் நெளிய உள்ளங்கையை

நனைத்தபடி சிறுநீர் போன்ற திரவம் வெளியேறும்.அதுதான் பெண்ணின் மன

அழுத்தங்களை யெல்லாம் அழித்தொழிக்கின்ற அமிர்தம்.

சர்க்கரை வியாதி, இரத்த அழுத்தம், உடற்பருமன், பெரிய தொந்தி,

போன்றவைகளால் பாதிக்கப் பட்டுள்ள ஆண்களும் அறுபது வயதைக் கடந்து

விட்ட ஆண்கள், லிங்கத்தின் வீரியத்தை இழந்து விட்டவர்கள், நீண்ட நேரம்

செயல்பட முடியாதவர்கள் போன்றோர் கூட, சிரமம் எதுவுமின்றி தங்கள்

மனைவிக்குரிய இன்பத்தை வழங்கி அன்பைப் பெறுவதற்கான ஒரு எளிய

வழிமுறை இது.

மேற்கண்ட முறையில் அதிர்வுகளை ஏற்படுத்திய படியே வலது கையின்

சுண்டு விரலால் மூலாதாரப் பகுதியை வருடும் போது, மனைவியின் இன்பம்

மேலும் பன்மடங்கு அதிகரிக்கும். ஆனால், இக்கலை உடனே கைவரப் பெறாது.

ஒரு நெசவாளியின் கைகள் எப்படி தறி இயக்கத்துக்குப் பழக்கமாகிறதோ அதே

போல ஆணின் கைவிரல்கள் இதற்குப் பழக்கமாக வேண்டும்.

அதாவது, வலது கையின் நடுவிரலும், மோதிரவிரலும் யோனிக்குள் உள்ள

பிரம்மஸ்தானத்தின் மீது இருக்க, உள்ளங்கை முழு யோனியையும் மூடியிருக்க,

வாய் முத்தமிட்டுக் கொண்டிருக்க, கை அதிர்வுகளை உண்டாக்கிக் கொண்டிருக்க,

கண்கள் அன்பான தகவலைச் சொல்லிக் கொண்டிருக்க, இடது கை கழுத்தை

அணைத்துப்பிடித்துக் கொண்டிருக்க, சுண்டு விரல் மூலாதாரப்பகுதியை வருடிக்

கொண்டிருக்க வேண்டும்,

இதில் ஈடுபடும் போது கவனத்தில் கொள்ள வேண்டியவை. சொன்னபடி

அமரவும். அதிர்வுகளை உருவாக்கவும். நிறுத்தவும், சிரிக்கவும். ஒரு

விளையாட்டுப் போல அனைத்தும் நடைபெற்றுக் கொண்டிருக்கட்டும்.

இவ்வாறு செயல்படத் தொடங்கினால் போதும். உச்ச இன்பமே

நிகழாவிட்டாலும், இல்லற வாழ்வில் மாற்றங்கள் நிகழத் தொடங்கும். கணவன்

மனைவிக்கிடையே நிலவும் உறவின் நெருக்கம் வலுவடையத் தொடங்கும். அன்பு

அதிகரிக்கும். அவ்வாறு அன்பு அதிகரிக்கும் போது, இன்பங்கள் தானாக நிகழும்.

இன்பங்கள் நிகழ நிகழ் அன்பின் ஆழம் அதிகரித்துக் கொண்டேயிருக்கும்.

அன்பும் அங்கீகாரமும் தான் மனித உயிரின் தேவைகள். இவையிரண்டையும்

வாரி வாரி வழங்கக் கூடியது தான் இந்த முறையில் நடைபெறக்கூடிய இன்பத்

துய்ப்பு.

இதற்கான சூத்திரம். மனைவியின் உடல் முழுவதையும் ஒரு

அங்குலம் கூட பாக்கி வைக்காமல், நெருடவும், வருடவும், சுவைக்கவும்,

அதிர்வுகளை ஏற்படுத்தவும், தயங்கும் கணவனால் மனைவியின்

மனதை மயக்க முடியாது. மனைவியரின் மனதை மயக்காத வரை,

மனைவிக்குரிய பாலின்பங்களை, அவளு டைய உடலில் நிகழ்ந்த

முடியாது. மனைவிக்குரிய பாலின்பங்களை நிகழ்த்தத் தவறும் எந்தக்

கணவனும் பாலின்பப் பஞ்சத்திற்கு ஆளாகியே தீர்வான்.

திருமணமான ஒரு ஆணின் வாழ்வில், எப்போது பாலின்பப் பாத்சம்

ஏற்படத் துவங்குகிறதோ, அப்போதே அவனுடைய உலகாயுத வெற்றிப்

பயணம் முடிவுறத் தொடங்கி விடும். சிலருடைய வாழ்வால் தோல்விப்

பயணமே கூடத் தொடக்கமாகி விடலாம்.

‘ ஒரு ஆணின் ஞானம் பெண்ணின் பிறப்புறுப்பில் தான்

இருக்கிறது. என்கிற புத்தரின் பொன்மொழி, மீண்டுமொருமுறை இங்கே

நினைவூட்டப் படுகிறது. அதாவது பெண்ணின் பிறப்புறுப்பு கிடைக்காத

நிலை ஏற்படும் போது, ஆணின் அறிவு மழுங்கத் தொடங்கி விடும்

என்பது இதன் பொருள்.

ஆகவே, மஞ்சத்தில் திளைப்பதா? பஞ்சத்தில் வாடுவதா?

வெற்றியில் புரள்வதா? அல்லது தோல்வியால் துவள்வதா? என்பது

ஆணின் பள்ளியறைச் செயல்களில் தான் இருக்கிறது.

## 8. நறுமணத் தோட்டத்துப் பூஜை

இன்பத் துய்ப்பைத் தானே முன்னின்று துவக்கக் கூடிய பெண்ணின் கணவனைக்

காண வேண்டுமா? அங்குமிங்கும் தேடிச் சிரமப் படாதீர்கள். அவளுடைய

காலடியில் தேடுங்கள். போதும். பெர்ஃபியூம் கார்டன்.

திருப்தி செய்யக் கூடிய வழிமுறை

தாம்பத்யம் சார்ந்த உச்ச கட்ட இன்பங்களை எந்த நாட்டுப் பெண்கள்

தவறாமல் பெறுகிறார்கள் என்பதைப் பற்றிய ஒரு ஆய்வு மேற்கத்திய மருத்துவ

அறிஞர்களைக் கொண்ட ஒரு குழுவால் நடத்தப் பட்டது. அந்த ஆய்வு நடத்தப்

படும் வரை பிரெஞ்சு, இங்கிலாந்து, அமெரிக்கா போன்ற மேற்கத்திய நாடுகளைச்

சேர்ந்த பெண்கள் தான் தவறாமல் உச்ச கட்ட இன்பத்தை அனுபவிப்பவர்கள்

என்கிற கருத்து நிலவி வந்தது.

ஏனெனில், அந்த நாடுகள் தான் பெண்களுக்கான முழுமையான பாலியல்

சுதந்திரத்தை அளித்திருந்தது. ஆனால், அந்த ஆய்வின் முடிவோ

அனைவரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்தக் கூடிய வகையில் வேறொரு

தகவலைக்

கூறியது.

அந்த ஆய்வு இவ்வாறு கூறுகிறது. சௌதி அரேபிய நாட்டுப் பெண்களே

ஈடுபடும் ஒவ்வொரு முறையும் உச்சகட்ட இன்பத்தை தவறாமல் பெறுகிறார்கள்.

தொண்ணூற்று இரண்டு சதவீத அரேபியப் பெண்கள் தவறாமல் உச்ச கட்ட

இன்பத்தைப் பெறுகிறார்கள்.

மேலும், அவர்கள் தான் நீண்ட நேரம் குறைந்த பட்சம் அரை மணி நேரம்

முதல் இரண்டு மணி நேரம் வரை இன்பம் துய்ப்பவர்களாக இருக்கிறார்கள்.

இதில் உள்ள சுவாரசியமான இனியொரு தகவல் என்னவென்றால், அரேபிய

ஆண்கள் பல மனைவியரோடு வாழ்கிறார்கள். அவர்கள் சட்டப்படி ஒரு ஆண்

நான்கு பெண்களைத் திருமணம் செய்து கொள்ளலாம். அதனால், பெரும்பாலான

ஆண்கள் நான்கு மனைவிகளுடன் தான் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

எனினும், தங்கள் மனைவியர் அனைவரையும் பாலியல் ரீதியாகப் பரி பூரணமாகத்

திருப்தி செய்து விடுகிறார்கள். இதற்கான ஒரே காரணம் அவர்கள் கற்று வைத்துள்ள

ஒரு அற்புதமான கலை.

நறுமணத் தோட்டம் என்கிற பெயரில், அரபு மொழியில், இந்தியாவில்

எழுதப்பட்ட நூல் தான் அரபு நாட்டு ஆண்களுக்கு அத்தகைய ஆளுமை மிக்க

நுணுக்கங்களைச் சொல்லிக் கொடுத்த நூல். இந்த தொன்மையான நூலின்

வழி காட்டுதலின் படி தான் பெரும்பாலான அரேபிய ஆண்கள் இன்பத்துய்ப்பில்

ஈடுபடுகிறார்கள், இந்த முறையில் உள்ள நுட்பமானது ஒரே நாளில் பல

பெண்களைத் திருப்தி செய்ய அந்த ஆண்களுக்கு உதவக் கூடியதாக இருக்கிறது.

மிகவும் அதிகமாக எதிர்பார்க்கும் பெண், வித்தியாசமான அனுபவங்களை

விரும்பும் பெண், வலிமையான உடலமைப்புள்ள பெண் என எப்படிப்பட்ட

பெண்ணையும், தவறவே தவறாமல், திருப்தி செய்யக் கூடிய வழிமுறை அது.

இன்பம் துய்த்தலில் தம்பதியருக்கு உள்ள ஆர்வம் குறையாமலிருக்க

வேண்டுமானால், இன்பம் துய்க்கும் முறை எப்போதும் ஒரே விதமாகவே இருக்கக்

கூடாது. ஈடுபட்டுக் கொண்டிருக்கும் விதம் சிறப்பானதாக இருக்கலாம்,

உச்சகட்ட இன்பத்தைத் தவறாமல் வழங்குவதாகவும் இருக்கலாம். எனினும்,

புதுமைகள் எதுவும் இல்லாமல் ஒரே விதமாகவே இருந்தால், விரைவில்

சலிப்பையும், அலுப்பையும் அது உருவாக்கி விடும், பெண்களைப் பொறுத்த வரை,

ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு விதமான சேலையை உடுத்திக் கொள்வது தான்

மிகவும் பிடிக்கும் என்று ஒரு தந்த்ரா ஞானி கூறுகிறார்.

உடல் நலம் மிக்க ஒவ்வொரு பெண்ணும் பாலின்பப் பரவசத்தை

அனுபவிக்க விரும்புகிறாள், வழக்கத்திலிருந்து மாறுபட்ட முறையில் இன்பம்

துய்க்க விரும்புகிறாள், வித விதமாக ஈடுபட விரும்புகிறாள். இன்பம் துய்ப்பதில்

நீண்ட நேரத்தைச் செலவிட விரும்புகிறாள்,

இதை மறுப்பது அறியாமை. எதிர்த்து வாதிடுவது கயமை. கடைசி

வரை

ஒப்புக் கொள்ள மறுப்பது பேதைமையிலும் பேதைமை.

தன் ஆண் எப்போது இன்பங்களை வாரி வழங்கப் போகிறான் என்று ஏங்கிக்

கொண்டிருக்கிறாள். இன்றைக்கு நிகழாதா? நாளை நிகழாதா? ஏதாவது அதிசயம்

நிகழ்ந்து விடாதா? என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறாள். ஆனால்,

மாற்றங்களின்றி தொடர்கிறது பெண்ணின் வாழ்க்கை, ஆகவே தம்பதியர்

இருவரும் இணைந்து குறைந்த பட்சம் பத்து விதங்களையாவது கற்றுக் கொள்ள

வேண்டும்.

தாம்பத்ய வாழ்வில் மாற்றத்தைக் கொண்டு வந்து, பெண்ணின் மனம்

மலர்ச்சியடைய ஆண் உதவ வேண்டும். சமூக நல்லொழுக்க விதிகளின் படி,

ஒவ்வொரு கணவனும் தன் மனைவிக்குரிய பாலின்பங்களை வழங்கக் கடமைப்

பட்டவன். எனக்குத் தெரியாது என்பதையெல்லாம் ஏற்றுக் கொள்ள முடியாது.

கற்றுக் கொண்டு செயலாற்ற வேண்டும். இல்லாவிட்டால், பதவியைத்

துறக்கத் தயாராக வேண்டும். இவ்வாறு கற்றுக் கொள்ளும் போது, கூடுமானவரை

மனைவி இயங்கக் கூடிய சக்தியாகவும், கணவன் தாங்கக் கூடிய சக்தியாகவும்

இருக்கும் முறைகளில் கவனம் செலுத்த வேண்டும்.

ஏனெனில் காதற் தசைநார்ப் பயிற்சி, வீரிய அளவுகோல் பயிற்சி

போன்றவற்றில் நிபுணத்துவம் பெறாத ஆணைப் பொறுத்த வரை, ஆண்

என்பவன் இயங்கும் சக்தியாக இருந்தால், அவனது இரத்த ஓட்டம் விரைவில்

வேகம் பிடித்து விடும். இரத்த ஓட்டத்தின் வேகம் அதிகரிக்கும் போது,

ஆண்

தன் உடலின் மீதான கட்டுப்பாட்டை இழந்து விடுவான். அதனால், ஆணின்

உயிர்நீர் விரைவில் வெளியேறி விடும்.

அவ்வாறு வெளியேறியவுடனே இன்பம் துய்த்தலில் உள்ள ஆணின் ஆர்வம்

போய் விடும். இது மனைவியின் மனநிலையை மெல்லிய அளவிலாவது பாதிக்கும்.

இந்த பாதிப்பின் விளைவுகள் இல்லற வாழ்வில் நிச்சயமாக எதிரொலிக்கும். அந்த

எதிரொலி பெரிய பிரச்சினைகளின் மூலமாகி விடலாம்.

ஆகவே பெண்ணை இயங்கும் சக்தியாகவும், ஆணைத் தாங்கும்

சக்தியாகவும் கொண்ட முறைகளைத் தம்பதியர் கற்றுக் கொள்ள வேண்டும்.

அதற்குரிய எளிய வழிகளில் சிலவற்றை இந்நூல் அடுத்த சில பக்கங்களில்

உங்களுடன் பகிர்ந்து கொள்கிறது. இவ்வாறு அவ்வப்போது வெவ்வேறு

முறைகளில் இன்பம் துய்க்க முயற்சிக்க வேண்டும். அப்போது உச்சகட்ட

இன்பமே ஏற்படா விட்டால் கூட, மன அலுப்பு ஏற்படாது. இணையின் மீது சலிப்பு

ஏற்படாது. இன்பம் துய்த்தலின் மீதுள்ள ஆர்வமும் குறையாது.

அதனால், இல்லற வாழ்க்கையானது எப்போதுமே இல்லற சுகங்கள் மிக்க

ஒரு பேரானந்த அனுபவமாகவே இருந்து கொண்டிருக்கும். தம்பதியர் இருவரும்

தங்கள் காலமுள்ள வரையிலும், புதுமணத் தம்பதிகளைப் போன்றே,

பெருமகிழ்ச்சியோடு வாழ்ந்து கொண்டிருக்கலாம்,

நறுமணத் தோட்டத்தில் இன்பத் துய்ப்பு**. 1**

கணவனின் கண்களை தன் கரங்களால் மூடியபடி**,** அவனுடைய

வாயின் உள்புறம் முழுவதையும் தன் நாவால் அளவிடும் மனைவியைப்

பெற்றவனின் ஆண்மை ஒருபோதும் சாகாது. அனங்கரங்கா.

அரேபியர்களைப் பொறுத்த வரை ஆண் பல பெண்களோடு வாழும்

கலாச்சாரம் தான் வரலாறு நெடுகிலும் நிலவி வந்திருக்கிறது. அதனால், ஒவ்வொரு

ஆணும் பல பெண்களைத் திருப்தி செய்ய வேண்டிய நெருக்கடியில் தான்

வாழ்ந்திருக்கிறான். அதனால் அவன் ஒரு எளிய வழியைக் கண்டு பிடித்தான்.



ஆண் தன் பின்புறத்தைத் தரையில் வைத்து

கூரையைப் பார்த்த படி படுத்துக் கொள்வான். குதிரையின்

மேல் அமர்வதைப் போல், அவன் மீது அமர்ந்து லிங்கத்தைப்

புனித குகைக்குள் நுழைத்தபடி மனைவி மேலும் கீழுமாய்

இயங்குவாள்.

வீரிய அளவுகோலின் படி, லிங்கத்தின் வீரியத்தன்மை

எட்டாவது எண்ணை அடையும் போது, ஆளை இந்தத்

தகவலைத் தெரிவிப்பான். பெண் நிறுத்திக் கொள்வாள்.






லிங்கம் தன் வீரியத் தன்மையில் இரண்டாவது எண்ணை அடையும் போது, அதாவது லிங்கம் தன் வீரியத் தன்மையில் எழுபத்தைந்து சதவீதத்தை இழக்கும் போது, ஆண் இந்தத் தகவலைத் தெரிவிப்பான், பெண் மீண்டும் இயங்குவாள். வீரிய

அளவுகோலின் படி, லிங்கத்தின் வீரியத் தன்மை
எட்டாவது எண்ணை அடையும் போது, மீண்டும்
நிறுத்திக் கொள்வாள்.
ஆணின் லிங்கம் ஏழு அங்குலத்திற்கும்
அதிகமான நீளமுடையதாக இருந்தால், இந்த
முறைதான் பெண்ணுக்குச் சிறந்தது.
இதே போல நான்கைந்து சுற்றுக்கள் நடந்து
முடியும் போது, பெண்ணுக்குரிய இன்பம் நிகழ்ந்து
விடும். ஆனால், ஆண் வீரியம் குறையாமல் இருப்பான்.
அதன் பின், பெண் விரும்பினால் மிண்டும் பழைய
முறையிலேயே தொடரலாம். (Vaginal Orgasm:
பிரம்மஸ்தான இன்பம்.- 17)
இனியொரு முறை இது. ஆண் தன்
பின்புறத்தைத் தரையில் வைத்து கூரையைப் பார்த்த
படி படுத்துக் கொள்வான். அவனுடைய கணுக் கால்கள்
இரண்டும் பெண்ணின் இரண்டு தோள்களில் இருக்கும். அந்த
நிலையில் சிறு நீர்
கழிக்கும் போது அமர்வதைப் போல் அமர்ந்து லிங்கத்தைப் புனித
குகைக்குள்
நுழைத்தபடி மனைவி முன்னும், பின்னுமாய் இயங்குவாள்.
ஆணின் கைகளில் ஒன்று பெண்ணின் முழங்காலின் மீது இருக்கும்.
இனியொரு கை மதன பீடத்தைத் தீண்டிக் கொண்டிருக்கும்.
ஆணின் வீரியம் எண் எட்டை நெருங்கும் போது மதனபீடத்தில் உள்ள
கையை ஆண் எடுத்துக் கொள்வான். அதைக் கண்ட பெண்ணும்
தன்னுடைய
இயக்கத்தை நிறுத்திக் கொள்வாள்.
லிங்கத்தின் வீரியம் எண் இரண்டை நெருங்கும் போது, ஆண் மீண்டும்
மதனபீடத்தைத் தீண்டத் தொடங்குவான், பெண்ணும் தன்னுடைய

இயக்கத்தைத் தொடர்வாள்.

இவ்வாறு நான்கைந்து முறை நிறுத்தி நிறுத்தி இயங்கும் போது,

பெண்ணுக்குரிய மதன பீட இன்பமும், பிரம்மஸ்தான இன்பமும் ஒருங்கே நிகழ்ந்து

விடும். இந்த இன்பத்தின் உச்சியில் பெண் இருக்கும் போது, ஆண் தன்னுடைய

பாதங்களால் பெண்ணின் கழுத்தைச் சுற்றிப் பிடித்துக் கொள்ள வேண்டும்.

இல்லா விட்டால், பெண் தன்னிலையிழந்து, மல்லாந்து விழுந்து விடக் கூடும்.

இதில் எட்டு என்கிற எண்ணுக்கு மேல் செல்வது திரும்ப முடியாத நிலை

என்று பொருள். அதாவது அதற்கு மேல் பெண் இயங்கினால், ஆணின் துப்பாக்கி

வெடித்து விடும். அவனால் கட்டுப் படுத்த முடியது.

ஆகவே எட்டு என்கிற அளவிற்கு மேல் செல்ல தன்னையும், தன்

இணையயும் ஆண் அனுமதிக்க மாட்டான். அதனால், வழக்கத்தை விட ஐந்து

மடங்கு நேரம் கூடுதலாக ஆண் தாக்குப் பிடித்து விடுவான். அதனால்,

பெண்ணுக்குரிய இன்டம் நிச்சயமாக நிகழ்ந்து விடும்.

இவ்வாறு பெண்ணே இயங்கி இன்பத்தை நிகழ்த்துவதில் உள்ள முக்கியமான

நன்மைகளில் ஒன்று அவளுடைய அதிகாரம் ஏற்கப் படுவதாக அவள்

முழுமையாக உணர்கிறாள். அதனால், அவளுடைய “நான்” என்கிற

தன்முனைப்பும் திருப்தியடைகிறது.

நறுமணத் தோட்டத்தில் இன்பத் துய்ப்பு**..2**

குதிரையின் மீது அமர்வதைப் போலத் தன் ஆணின் மீது அமர்ந்து**,**

யோனிக்குள் அழைத்துள்ள லிங்கத்தின் மீது**,** இடையை மேலும் கீழுமாய்

அசைப்பதற்குப் பதிலாக**,** வட்டமிடக் கற்றுக் கொண்டால்**,** இன்ப

தேவதை ஏமாற்றாமல் அந்தப் பெண்ணிடம் வந்து சரணடைந்து விடுவாள்.- பெர்ஃஃப்யூம் கார்டன்.




ஆண் தன் பின்புறத்தை ஒரு சுவரில் சாய்ந்து அமர்ந்து கொள்வான். குதிரையின் மேல் அமர்வதைப் போல், ஆணின் இருபுறத்திலும் கால் வைத்தபடி. அவன் மடி மீது பெண் அமர்ந்து கொள்வாள். அதோடு சரி. இடுப்பளவிலான இயக்கம் எதுவும் இருவரிடமுமே இருக்காது. ஆணின் மடியில் பெண் அமர்ந்த நிலையில் இயங்குவதற்கு, தாவோக்கள் வைத்துள்ள பெயர் பெயர் யாப்-யும் நிலை,

முத்தமிடுதல், கைகளால் வருடுதல் போன்ற செயல்கள் மட்டுமே நடந்து

கொண்டிருக்கும். ஆனால், பெண்ணின் கொங்கைகளை மட்டும் ஆச்சு தொடவே

மாட்டான். இடுப்பளவில் எவ்வித இயக்கமும் இல்லாவிட்டால், லிங்கம் தன்

விரைப்புத் தன்மையை கொஞ்சம் கொஞ்சமாக இழப்பது இயல்பு. அது போல் இந்த

ஆணின் லிங்கமும் தன் விரைப்புத் தன்மையை இழக்கும் நிலை ஏற்படும்.

அவ்வாறு லிங்கம் தன் வீரியத் தன்மையில் இரண்டாவது எண்ணை

அடையும் போது, தன் இணையின் கொங்கைகளோடு ஆண் விளையாடத்

தொடங்குவான். இவ்வாறு கொங்கைகளோடு ஆண் விளையாடத் தொடங்கினால்,

லிங்கத்தின் வீரியம் என் இரண்டை நெருங்கி விட்டது என்று பொருள். மனைவி

புரிந்து கொள்வாள்.

உடனே தசைகளை இறுக்கித் தளர்த்தும் காதற் தசை நார் பயிற்சியை பெண்

செய்யத் தொடங்குவாள், அதாவது யோனியின் சுருக்குத் தசை நார்கள் மூலமாக

ஆணின் லிங்கத்தைப் பிழியத் தொடங்குவாள். ஆண் தன் இணையின்

கொங்கைகளோடு விளையாடிக் கொண்டிருப்பான். இவ்வாறு கொங்கைகளோடு

விளையாடுவதை ஆண் நிறுத்தும் போது, பெண்ணும் தன் காதற் தசை நார்ப்

பயிற்சியை நிறுத்திக் கொள்வாள்.




வீரிய அளவுகோலின் படி, லிங்கத்தின் வீரியம்

எட்டாவது எண்ணை அடையும் போது,

கொங்கைகளோடு விளையாடும் செயலை ஆண்
நிறுத்துவது தான், முழு வீரியத்தை அவன் அடைந்து
விட்டான் என்பதைப் பெண்ணுக்குத் தெரிவிக்கும்
செயல், ஆகவே, கொங்கை விளையாட்டை ஆண்
நிறுத்தியதுமே பெண்ணும் தன் காதற் தசை நார்ப்
பயிற்சியை நிறுத்தி விடுவாள்,
லிங்கம் தன் வீரியத் தன்மையில் இரண்டாவது எண்ணை மீண்டும்
அடையும் போது, அதாவது லிங்கம் தன் விரைப்புத் தன்மையில் எழுபத்தைந்து
சதவீதத்தை இழக்கும் போது, ஆண் கொங்கைகளைத் தீண்டுவதன் மூலம் தன்
இணைக்கு அத்தகவலைத் தெரிவிப்பன்.
உடனே பெண் இறுக்கித் தளர்த்தும், அதாவது யோனியின் சுருக்குத் தசை
நார்கள் மூலமாக ஆணின் லிங்கத்தைப் பிழிகிற காதற் தசை நார் பயிற்சியை
மீண்டும் தொடங்குவாள். லிங்கத்தின் வீரியம் எட்டாவது எண்ணை அடையும்
வரை, இந்தப் பயிற்சி நடந்து கொண்டேயிருக்கும்,
இவ்வாறு மூன்று அல்லது நான்கு சுற்றுக்கள் லிங்கம் தளர்த்து நிமிரும்
போது, பெண்ணுக்குரிய உச்சகட்ட இன்பம் நிகழ்ந்து விடும். ஆனால் ஆணின்
உடலில் இரத்த ஓட்டத்தின் வேகம் அதிகரிக்க ஆண் வாய்ப்பளிக்காத
காரணத்தால், ஆணுக்குரிய இன்பம் நிகழாது. (Vaginal Orgasm:
பிரம்மஸ்தான இன்பம், —18)
ஆண் வீரியம் குறையாமல் இருப்பான். அதனால், அவன் அடுத்த
மனைவிக்கு இன்பமளிக்கச் செல்வான். இந்த இன்பத் துய்ப்பன் ஒரே விதி
இருவரில் ஒருவர் கூட இடுப்பை அசைக்கக் கூடாது. ஆலும் சரி, பெண்ணும்

சரி, எந்தக் காரணத்தை முன்னிட்டும் அசைக்கக் கூடாது.

அரேபியப் பெண்களைப் பற்றித் தெரிந்து கொள்ள வேலுச்சாடிய முக்கியமான

ஒரு தகவல் இருக்கிறது. தங்கள் கணவனுக்கு இன்பத்தை வழங்குவது தான்

தங்கள் வாழ்விலேயே அதி முக்கியமான செயல் என்கிற கருத்துக்

கொண்டவர்களாக தொண்ணூற்றி ஏழு சதவீத அரேபியப் பெண்கள்

இருக்கிறார்கள்

நறுமணத் தோட்டத்தில் இன்பத் துய்ப்பு**…3.**

ஆணின் மேல் பெண் அமர்ந்து**,** லிங்கத்தை யோனியால் கவ்வியபடி**,**

குயவான் சக்கரம் போல இடையச் சுழற்றக் கற்றுக் கொண்டால்**,**

மனைவசிக்குரிய இன்பத்திற்குப் பஞ்சமிருக்காது**.. -** காமகு தீரா**.**











கணவன் தன் பின்புறத்தைத் தரையில்

வைத்து, கூரையைப் பார்த்த படி படுத்துக்

கொள்வான், தன் குகைக்குள் லிங்கத்தை நுழைத்தபடி, குதிரையின் மேல் அமர்வதைப் போல் அமர்ந்து, தன் இடையால் வட்டம் வரைவதைப் போல தன் இடையின் மூலம் மனைவி வட்டமிட்டுக் கொண்டிருப்பாள்.

உள்ளே வெளியே என்கிற இயக்கம் இருக்காது. வட்டமிடுதல் மட்டுமே நடைபெற்றுக் கொண்டிருக்கும். கணவன் தன்னுடைய பங்கிற்கு, மனைவியின் மதன பீடத்தின் மீது பூரான் ஒன்று ஊறுவதைப் போல தன் கை விரல்களைக் கொண்டு வட்டமிட்டுக் கொண்டிருப்பான், இவ்வாறு வட்டமிடும் செயலில் மட்டுமே தம்பதியர் ஈடுபட்டிருப்பார்கள்.

அவ்வாறு இருவரும் வட்டமிட்டுக் கொண்டிருக்கும் போது, வீரிய அளவுகோலின் படி, லிங்கத்தின் வீரியத்தன்மை எட்டாவது எண்ணை அடையும் போது, கணவன் வட்டமிடும் செயலை நிறுத்தினால், மனைவியும் வட்டமிடும் செயலை நிறுத்தி விடுவாள்,

ஏனெனில், எண்பது சதவீதத்தை வீரியம் நெருங்கி விட்டது. ஆகவே நிறுத்து. இல்லாவிட்டால் காரியம் கைமீறிப் போய் விடும். என்று மனைவிக்கு தருகிற தகவல் தான் தன்னுடைய செயலைக் கணவன் நிறுத்திக் கொள்தல்.

அந்த தகவலுக்குப் பின் லிங்கத்தின் வீரியத்தன்மை இரண்டாவது எண்ணை எட்டும் வரை இருவரும் பூரண ஓய்வில் இருப்பார்கள். அந்த

ஒய்வின் போது யோனி மற்றும் லிங்கத்தில் வாழும்

கோடிக்கணக்கான உயிரணுக்கள் தங்களுக்குள்

தழுவிக் கொண்டிருக்கும், அந்தத் தழுவல் காரணமாக இருவருடைய பால்

மண்டலங்களும் பேரின்பத்தை அனுபவித்துக் கொண்டிருக்கும்.

இவ்வாறு நான்கைந்து ஓய்வுகளைக் கடக்கும் முன்பே மனைவிக்குரிய

உச்சகட்ட இன்பம் நிகழ்ந்து விடும். முதல் இன்பத்திற்குப் பிறகும் கூட, மனைவி

விரும்பினால், மேலும் தொடர்ந்து இன்பம் துய்க்கலாம். கணவன் சோர்ந்து

விடுவதில்லை, ஏனெனில், ஆணின் உயிர் நீர் வெளியேறுவதில்லை. அதனால்,

ஆண் வீரியம் குறையாமல் இருப்பான் (Blended Orgasm.

ஒருங்கிணைந்த இன்பம்— 19)

இந்த முறை பெண்ணுக்குரிய முறை

பெண்ணுக்குரிய இன்பத்தை நிகழ்த்துகின்ற விவகாரத்தில் மிக மிக எளிதான

வழிமுறைகளில் இந்த நறுமணத் தோட்டத்தில் இன்பத் துய்ப்பு முறை

முதன்மையானது. ஏனெனில் மணக்கும் தோட்டத்து முறையால் பெண்ணின்

ஒவ்வொரு விருப்பமும் பூர்த்தியாகிறது.

வேகமாக வேண்டுமா? மெதுவாக வேண்டுமா? ஆழமாக வேண்டுமா?

மேலாக வேண்டுமா? மேலும் கீழுமாய் உராய வேண்டுமா? பக்கவாட்டில் உராய

வேண்டுமா? எந்தப் புள்ளியில் உராய்வு அதிகமாகத் தேவைப்படுகிறது?

என்பதெல்லாம் ஆணை விடப் பெண்ணுக்குத் தான் தெளிவாகத் தெரியும்.

இந்நிலையில் மனைவியே இங்கு இயங்கு சக்தியாக இருப்பதால்

தேவைப்படுகின்ற இடத்தில், வேகத்தில், அழுத்தத்தில் உராய்வை

ஏற்படுத்திக்

கொள்வது அவளுக்கு எளிதாக இருக்கிறது. அதனால் வழக்கத்தை விடக்

குறைவான நேரத்தில், பெண்ணுக்குரிய உச்சகட்ட இன்பம் ஏற்பட்டு விடுகிறது.

இந்த முறையைப் பழக்கப் படுத்திக் கொண்டால், குறைந்த பட்சம் அரை

மணி நேரம் முதல் ஒரு மணி நேரம் வரை லிங்கத்தை எடுக்காமலே இன்பம்

துய்த்துக் கொண்டிருக்கலாம். மேலும் இது ஐந்தாறு மைல் தூரம் ஓடியதைப்

போன்ற உடற் பயிற்சியைப் பெண்ணுக்கு அளிக்கும், அதனால், இது பெண்ணின்

உடல் நலத்தைச் சிறப்பாக்கும். இன்பமும் தவறாமல் நிகழுமாதலால், பெண்ணின்

மன நலமும் சிறப்புறும். இருவருக்கிடையேயான அன்பின் ஆழமும் அதிகரிக்கும்.

மிருகத்தனமான பாலுறவால் ஆணுக்குரிய இன்பம் வேண்டுமானால் அரை

நிமிடத்திலேயே நிகழ்ந்து விடுமே தவிர, பெண்ணுக்குரிய இன்பம் ஒருபோதும்

நிகழாது. பெண் கூரையைப் பார்த்த படியும் ஆண் தரையைப் பார்த்த படியும்

கொள்ளும் உறவு விந்து முந்துவதற்கு முக்கியக் காரணம்.

ஏனெனில் இந்நிலையில் ஆண் தான் செயல்பட வேண்டியிருக்கும். பெண்

வெறுமனே ஒரு அனுபவிக்கப்படும் பொருளாக இருந்தால் போதும். அதனால்

ஆணின் இரத்த ஓட்டம் வேகப்படும். இதயத் துடிப்பு அதிகரிக்கும். உடலின்

இறுக்கம் அதிகரிக்கும். அதனால் உயிர்நீரை வெளியேற்றும் விசை இயங்கத்

தொடங்கி விடும். கட்டுப்படுத்தப் போராட வேண்டியிருக்கும்.

அதனால் தான், காதற் தசைநார்ப் பயிற்சி, வீரிய அளவுகோல் பயிற்சி

போன்றவற்றில் நிபுணத்துவம் பெறாத ஆணைப் பொறுத்த வரை, பெரும்பாலும்

மூன்று முதல் ஐந்து நிமிடங்களுக்குள் ஒரு ஆண் தன் பாலுறவு விளையாட்டை

முடித்துக் கொள்கிறான்.

மூன்று முதல் ஐந்து நிமிடங்களில் தனக்கு நிகழ்ந்ததைப் போன்ற உச்ச

இன்பத்தை பெண்ணுக்கு வழங்குவது முற்றிலும் சாத்தியமற்றது என்கிற தகவல்

அவனுக்குத் தெரியவே தெரியாது.

அந்த அறியாமை காரணமாக தன் மனைவிக்குரிய இன்பங்கள்

அனைத்தையும் தவறாமல் வழங்கிக் கொண்டிருப்பதாகவும், மனைவி

முழுமையான பாலியல் சந்தோசத்துடனே இருப்பதாகவும் அவன் நம்பிக்

கொண்டிருக்கிறான்.

அதே சமயத்தில் தனக்குரிய இன்பம் நிகழவேயில்லை என்கிற உண்மையை

மனைவியும் சொல்வதில்லை. அது கணவனின் மனதைப் புண்படுத்தி விடக்

கூடும், ஏனெனில், அவ்வாறு தெரிவிப்பது நல்ல பெண்ணிற்கான அடையாளம்

அல்ல என்கிற கருத்தால் அவளது சுதந்திரம் பறிக்கப் பட்டிருக்கிறது. மேலும்,

தன் கற்பு குறித்து எவ்வித சந்தேகமும் வந்து விடக்கூடாது என்கிற அச்சம்

பெண்ணுக்கு இருக்கிறது.

போகப் பொருளாகவே, மனைவி பயன் படுத்தப்படும் போது, கணவனை

எவ்வளவு சீக்கிரமாக உச்சிக்குக் கொண்டு வர முடியுமோ அவ்வளவு சீக்கிரமாக

கொண்டு வரும் கலையை மனைவி கற்று விடுகிறாள்..

ஏனெனில், பெண்ணின் மனம் உடன்படாத நிலையில் பாலுறவு

கொள்ளும்போது, பெண்ணுறுப்பு ஆணுறுப்பை வரவேற்கும் நிலையில்

இருப்பதில்லை, அது தன்னளவில் சுருங்கிப் போனதாகவும், எவ்வித

உயவுப்பொருளும் சுரக்காத நிலையிலும் தன்னை வைத்துக் கொள்கிறது.

பெண்ணுறுப்பில் வாழும் கோடிக்கணக்கான உயிரணுக்கள் ஆணுறுப்பை

எதிர்கொண்டு தழுவிக் கொள்வதற்குப் பதிலாக ஒதுங்கிக் கொள்கின்றன.

அதனால் ஒருவித கரடு முரடான் உணர்வை அவனது ஆணுறுப்பு அனுபவிக்க

நேர்கிறது.

பெண்ணுறுப்பில் நிலவும் வறட்சி காரணமாக, ஆணுறுப்பின் மீதான உராய்வு

அதிகமாக உணரப்படுகிறது. அதனால், ஆணின் இன்பம் ஒரு நிமிடத்திற்கு

உள்ளேயே கூட நிகழ்ந்து விடுகிறது. மேலும், அவனுக்குரிய இன்பம் விரைந்து

முடியட்டும் என்பதற்காக பெண் ஒரு ரகசிய வேலையில் ஈடுபடுகிறாள்.

அதாவது, தனக்குரிய இன்பம் நிகழ்ந்து விட்டதைப் போல "ஆ, ஊ" எனப்

பெண் நாடகமாடுகிறாள். இவ்வாறு இரண்டே நிமிடத்தில் தனக்குரிய இன்பம்

நிகழ்ந்து விட்டதாய் நடிப்பதில், "ஆஸ்கார் "பரிசைப் பெறுமளவிற்குக் பல பெண்கள்

கை தேர்ந்தவர்கள் என்று ஒரு பிரபல மருத்துவர் கூறுகிறார்.

அரை நிமிடம், ஒரு நிமிடம், அல்லது ஒரு சில நிமிடங்களில் எல்லாம்

பெண்ணுக்குரிய உச்சகட்ட இன்பம் நிகழவே நிகழாது என்பது

ஆணுக்கு அறவே

தெரியாது. அதனால், பெண்ணின் செயற்கையான செயல்களால் அவனுடைய

மனம் தூண்டப்பட்டு வெகு வேகமாக அவனுடைய இன்பம் நிகழ்ந்து விடுகிறது.

அவனும் தன் மனைவிக்குரிய இன்பத்தைத் தவறாமல் வழங்கிவிட்டதாய்க் கருதிக்

கொண்டு உறங்கி விடுகிறான்.

ஆனால், இந்த நிலைம்ை தான் குடும்ப வாழ்க்கையை நரக வாழ்க்கையாக

மாற்றி விடுகிறது. பால் உணர்வுகள் தணிக்கப் படாத நிலையில் வாழும் போது,

அவ்வாறு தணியாததற்குக் அவரவர் திருமண இணை தான் காரணம் என்று

ஆழ்மனம் கருதுகிறது. அதனால் தான் இணையோடு எந்நேரமும் ஏதாவது ஒரு

யுத்தத்தில் ஈடுபட்டுக் கொண்டேயிருக்கிறது.

இருவருக்குமே பேரின்பத்தை அளிக்கும் முறை



ஆகவே இந்தியத் தம்பதியரும் தங்கள்

படுக்கையறையை மாதத்திற்கு ஒரு

முறையாவது மணக்கும் தோட்டமாக மாற்றி

கொண்டால், தம்பதியருக்கிடையில் உள்ள

அன்பு அன்றலர்ந்த மலரைப் போல,

எப்போதும் நறுமணத்தோடும், புதுப்

பொலிவோடும், உயிரோட்டத்தோடும்

இருந்து கொண்டேயிருக்கும்.

மேலும், குழந்தைகளோடு ஒரே அறைக்குள் உறங்கியாக வேண்டிய சூழலில்

வாழ்வோர்க்கு இந்த மணக்கும் தோட்டத்து முறைகள் அனைத்தும் வரப்

பிரசாதங்கள். ஏனெனில் தம்பதியரின் இன்பத்துய்ப்பு அடுத்தவர்களுக்குத்

தெரியாது. இயல்பான உறக்க நிலையில் உள்ள சுவாச அளவை விடக் கூடுதலான

சுவாசம் கூட இருக்காது.

மேலும், அருகில் உறங்கிக் கொண்டிருப்பவர்களின் குறட்டை, அல்லது

சுவாசிக்கும் சத்தம் போன்ற ஒலிகளோடு, மனைவி தன் காதற் தசைநார்ப்

பயிற்சியை ஒரு ஒத்திசைவோடு செய்யும் போது, ஒரு சாதகத்துடன் கூடிய நடனக்

கச்சேரியாக, சிலிர்ப்பூட்டும் அனுபவமாகவும் இருக்குமாதலால், பெண்ணுக்குரிய

இன்பம் நிச்சயம் வெகு விரைவிலேயே கூட நிகழும். ஆகவே பெண்ணுக்குரிய

இன்பம் தவறாமல் நிகழ வேண்டுமானால், பெண் இயங்க வேண்டியது அவசியம்.

அதற்கான சூத்திரம் இது**.** யாருக்குப் பேரின்பம் வேண்டுமோ

அவர்களே இயங்கு சக்தியாக இருக்க வேண்டும்**.**

மனித உடல் ஒரு உயிருள்ள மின்கலம்

மேலும் இருவருடைய பாலுறுப்புக்களும் ஒன்றுடன் ஒன்று பிணைந்த

நிலையிலேயே அரை மணி நேரமாவது இருப்பது மிகவும் நல்லது. ஏனெனில்,

அப்போது தான் யோனி மற்றும் லிங்கத்தில் வாழும் கோடிக்கணக்கான

உயிரணுக்கள் தங்களுக்குள் ஆழமாகத் தழுவிக் கொள்ளும் வாய்ப்பு ஏற்படும்.

அந்தத் தழுவல் காரணமாக இருவருடைய பால் மண்டலங்களும் பேரின்பத்தை

அனுபவித்துக் கொண்டிருக்கும். இந்தப் பேரின்பம் காரணமாகச் சுரக்கும்

வேதிகளால், தம்பதியரிடையே எல்லையற்ற அன்பு ஏற்படும்.

இதை நிகழ்த்த மணக்கும் தோட்டத்து விளையாட்டைத் தவிர வேறொரு

சிறந்த வழி எதுவும் இந்த உலகில் இல்லை. ஆகவே, படுக்கையறையை மணக்கும்

தோட்டமாக்கி, இன்பத் துய்ப்பை ஒரு ஆனந்த நடனமாக்கிக் கொள்வீர்களாக.

மேலும், உடற் தேவைகள் பூர்த்தியடையும் போது அகத் தேவைகள்

அடிபட்டுப் போகின்றன. புறத் தேவைகள் பொருளற்றுப் போகின்றன. மனம்

மகிழ்ச்சியால் நிறைந்து கிடப்பதால், குறை காணும் திறனை இழந்து விடுகிறது.

கணவனும் மனைவியும் அடுத்தவருடைய உடற் தேவையைப் பூர்த்து செய்யக்

கற்றுக் கொண்டால் போதும். நூறாண்டுகள் ஆனாலும் அவர்களிடையே உள்ள

அன்பு மாறாது. பூசல் வராது. அப்படியே வந்தாலும் உறவில் ஈடுபட்ட அடுத்த

விநாடியே கானல் நீராய் அப்பூசல் காணாமல் போய்விடும்.

ஏனெனில், பாலின்பம் என்பது எதிர் பாலினங்களுக்கு இடையே ஆழமான

அன்பை உருவாக்கக் கூடிய ஒரு இரசாயனம். இருபாலினத்தைக் கெட்டியாக

இணைத்துப் பிடிக்கின்ற சக்தி வாய்ந்த பசை, மனதின் சீதோஸ்ணத்தைச்

சமநிலை தவறாமல் பாதுகாக்கின்ற ஒரு கட்டுப்பாட்டு அதிகாரி. மேலும் அது

ஒரு தெய்வ வழிபாடு. வழிபாட்டின் போது ஒரு சண்டாளனின் மனதில் கூட

கெட்ட எண்ணங்கள் ஏற்பட வாய்ப்பே இல்லை,

பாலின்பம் உடலில் உள்ள ஒவ்வொரு உயிரணுவையும் மகிழ்விக்கக் கூடியது.

மனம் என்பது ஒவ்வொரு உயிரணுவிலும் குடியிருப்பது. அதனால், முழு மனமும்

மகிழ்ச்சியால் நிரம்பி வழிகிறது,

மேலும் அது ஒரு குளியல், மனதிற்கான குளியல், மனதை ஆக்கிரமித்துள்ள

காமம் தணிக்கப்படும் போது, மனம் புத்துணர்வடைகிறது. மனமே நோய்களின்

மூலம், குளியலுக்குப் பின் சுத்தப்படுத்தப்பட்டு மனம் புத்துணர்வடைவதால்,

உடலின் வலிமை கூடுகிறது. நோய் எதிப்பாற்றல் வலுப்படுகிறது.

மேல் மனம் என்பது, மனிதன் விழித்திருக்கும் போதெல்லாம்,

இடையில்லாமல் சிந்தித்துக் கொண்டே இருக்கும் ஒரு இயந்திரம். அந்த

இயந்திரத்திற்கு விழித்த நிலையிலேயே ஓய்வைத் தருவது பாலின்பம்,

எந்த ஒரு இயக்கமும் ஓய்விற்குப் பின் இயங்கத் தொடங்கும் போது கூடுதல்

சிறப்புடன் செயல்படும் என்பது ஒரு மாறாத விதி. ஆகவே அந்த விதிப்படி,

மனமும் முதலில் இருந்ததைக் காட்டிலும் பாலின்பத்தைப் பெற்ற பிறகு கூடுதல்

திறனுடன் செயல்படுகிறது.

சுகாதாரமான பாலுறவால், மன வலியோ, மன அழுத்தமோ, உடல் நோயோ,

மரணமோ ஏற்பட்டதாக வரலாறு இல்லை. குடும்ப வாழ்வில் பாலின்பம் என்பது

தீயைப் போன்றது. தீயின்றி வாழ்வில் எதுவுமே நகராது. செயல்படாது.

பாலுறுப்புக்கள் என்பவை வாகனமென்றால், பாலின்பம் என்பது எரிபொருள்

போன்றது. எரிபொருள் இல்லாத வாகனம் வெகு விரைவில் பழுதடைந்து

சிதிலமுற்றுப் போய்விடும்.

உடலை ஒரு வாகனமெனக் கொண்டால், காற்றும், உணவும், நீரும்,

உறக்கமும் தான் அந்த வாகனத்தின் நான்கு சக்கரங்கள். ஆனால், பாலின்பம்

வாகனத்தின் எரிபொருள், எரிபொருளற்ற வாகனம் பயனற்றது. பயன் படுத்த

முடியாதது. வெகு விரைவில் பழுதடைந்து சிதிலமுற்றுப் போய்விடும்.

மகிழ்ச்சிகரமான, ஆரோக்கியமான, புத்திசாலித்தனமான, நீண்ட

ஆயுளுடன் கூடிய வாழ்க்கையை வாழ மனிதனுக்கு வழங்கப்பட்டுள்ள

கொடை தான் பாலின்பம்.

மனித உடல் ஒரு உயிருள்ள மின்கலம். அந்த மின்கலம் ஆற்றல்

குறையாமல் தொடர்ந்து செயலாற்றுவதற்கான மின்னாற்றலை வழங்கிக்

கொண்டிருப்பது பாலின்பம்.

பாலின்பம் என்பது ஒரு உடற் பசி. எனினும் அது ஒரு அடிப்படைப்

பசி, வயிற்றுப் பசி எப்படி முழு உடலையும் சோர்வடையச் செய்கிறதோ,

அதே போல, உடற் பசி முழு மனதையும் சோர்வடையச் செய்கிறது.

அதனால் தான் பாலியல் ரீதியாக உடல் திருப்தியுறும் போது, புற

உலகில் உள்ள அனைத்தும் திருப்தியளிக்கிறது. ஆனால், பாலின்பம்

உடலில் நிகழாத போது, புற உலகில் நடைபெறும் ஒவ்வொரு செயலும்

அதிருப்தியை அளிக்கிறது.

கடந்த இருபது ஆண்டுகளுக்கு முன்னால் வரை பெண்களைப் பேய்

பிடித்தது உண்டு. கிராமப் பகுதிகளில் அதைக் காத்துக் குணம் என்று

கூறுவார்கள்.

ஆனால், பெண்ணை மட்டுமே தேடித் தேடிப் பிடித்துக் கொண்டிருந்தது

பேய் அல்ல. பாலின்ப ஆற்றாமையால் ஏற்பட்டுள்ள ஹிஸ்டீரியா

என்கிற மனநோய்

என இப்போது கண்டறியப்பட்டு விட்டது.

பெண்ணுக்குரிய பாலின்பங்களை பெண்ணின் உடலில் நிகழ்த்துவதன் மூலம் இந்த ஹிஸ்டீரியா நோயை மேற்கத்திய நாடுகளில் முழுமையாக குணப்படுத்தி உள்ளனர்.

ஆகவே, பாலின்ப ஆற்றாமையால் கணவன் மனைவியிடையே சண்டை

ஏற்பட்டால், அதை மூன்றாம் மனிதரிடம் கொண்டு செல்லாதீர்கள். அவர்கள்

ஊதிப்பெருக்கி உங்களைப் பிரித்து விடுவார்கள்,

உண்மையான சமாதானத் தூதுவர்களிடம் மட்டுமே செல்லுங்கள். அவர்கள்

எங்கோ வெகு தொலைவில் இல்லை. உங்கள் இருவருடைய கால்களுக்கு

இடையில் தான் உறங்கிக் கொண்டிருக்கிறார்கள்,

இதற்கான சூத்திரம். மணக்கும் தோட்டத்தில் தம்பதியருக்குச் கிடைக்கும் இன்பங்களே, அன்பு என்னும் தெய்வச மலரை வாடா மலராகப் பராமரித்துக் கொண்டிருக்கும்.

## 9. பேரரசர்களின் அசாத்திய பூஜை

தாவோக்கள் வியாதிகளோடு போராடுவதில்லை. வியாதிக்கான மூலத்தைக் கண்டு அதை வேறோடு கிள்ளியெறிவதே அவர்களுடைய மருத்துவம், வருமுன் காத்தலே அவர்களுடைய போர் முறை. அதற்காக

அவர்கள் பரிந்துரைத்த ஒரே ஆயுதம் பாலின்பம்,

அசாத்தியமான பாலுறவு முறை

நீண்ட காலம் சுய இன்பத்தில் ஈடுபட்டதன் காரணமாக, புயல் வேகத்திற்குத்

தங்கள் உடலையும் மனதையும் அடிமைப் படுத்தி விட்ட ஆண்கள் கூட, தங்கள்

மனைவிக்குரிய பாலின்பங்களைத் தவறாமல் அளித்து, வெற்றிகரமான

இல்லற

வாழ்வை வாழ்வதற்குரிய தாவோ முறை ஒன்று உள்ளது.

தாவோ ஞானியரின் கருத்துப்படி, தன் உயிர் நீரை வெளியேற்றாமல்,

பாலியல் ரீதியாகப் பெண்களைப் பரிபூரணமாகத் திருப்திப் படுத்த முடிந்தவனே

பாலியல் அறிவும், ஆண்மையின் மீது தன்னாளுமைத் திறனும் உடைய ஆண்

என்று பொருள், ஏனெனில், தேவையில்லாமல் உயிர் நீரை வெளியேற்றுவதை

தாவோக்கள் ஏற்றுக் கொள்வதில்லை,

மேலும், ஆண்மையும், பாலியல் அறிவும், மனோ வலிமையும், அபாரமான

உடல்நலமும் உள்ளவன் என ஒரு ஆண் அங்கீகரிக்கப் பட வேண்டுமானால்,

தாவோ ஞானிகளால் பரிந்துரைக்கப்பட்ட கீழ்கண்ட அசாத்தியமான பாலுறவு

முறையில் அவன் வெற்றி பெற்றாக வேண்டும். ஆச்சரியத் தகவல் என்னவெனில்,

சீனப் பேரரசர்கள் அனைவருமே இதில் வெற்றி பெற்றவர்களே.

ஒன்பது சுற்றுக்கள்

இந்தத் தேர்வு, ஒன்பது சுற்றுக்கள் கொண்டது. ஒவ்வொரு சுற்றிலும்,

லிங்கமானது, யோனிக்குள் ஒன்பது முறை சென்று வர வேண்டும். இவ்வாறு,

மொத்தம் எண்பத்தி யொரு முறை சென்று வர வேண்டும். நூற்றியெட்டு

நிமிடங்கள் நடைபெறக் கூடிய இன்பத் துய்ப்பு இது.

இதை ஒரு ஆன் செய்து முடித்து விட்டால், துரித ஸ்கலிதத்தை அவன்

கடந்து விட்டான் என்று பொருள். அதோடு, ஆணின் மனோ திடமும்

வலிமையாகி விட்டது என்றும் பொருள். அதாவது ஆணின் மனோ திடத்தை

வலிமைப் படுத்தும் நோக்கிலும் ஆணுக்கு அளிக்கப்பட்ட பயிற்சி இது.

பெண் கீழே, ஆண் மேலே என்கிற வழக்கமான நிலையிலேயே இது

துவங்குகிறது. பெண்ணின் பிட்டத்திற்குக் கீழே கண்டிப்பாகத் தலையணை

போடப் பட்டிருக்க வேண்டும். முதல் சுற்றின் ஒன்பது முறையில் முதல் எட்டு

முறை லிங்கத்தின் தலை மட்டுமே யோனிக்குள் சென்று வர வேண்டும்.

அதாவது இரண்டு அங்குலத்திற்கு மேல் யோனிக்குள் பிரவேசிக்கக் கூடாது.

அவ்வாறு லிங்கத்தின் தலை மட்டுமே ஒரு முறை உள்ளே போய் வர அரை

நிமிடத்தை ஆண் எடுத்துக் கொள்ள வேண்டும்.

ஒன்பதாவது முறை மட்டும் முழு லிங்கத்தையும் உள்ளே செலுத்த

வேண்டும். அவ்வாறு முழு லிங்கத்தையும் செலுத்த ஒரு நிமிடத்தை எடுத்துக்

கொள்ள வேண்டும். அதன் பின், அரை நிமிடம் வரை யோனிக்குள் மூழ்கிய

நிலையிலேயே லிங்கத்தை அசைவின்றி வைத்திருக்க வேண்டும்.

அதாவது லிங்கம் மற்றும் யோனியில் உறைந்து கொண்டிருக்கும் அனைத்து

உயிரணுக்களும் ஒன்றையொன்று ஆரத் தழுவிக் கொள்ளும் வாய்ப்பினை

அவற்றிற்கு வழங்க வேண்டும்.

அதன் பின், லிங்கத்தை வெளியே எடுப்பதற்கும் அரை நிமிடத்தை எடுத்துக்

கொள்ள வேண்டும். இவ்வாறு முதல் சுற்று முடிய ஆறு நிமிடத்தை எடுத்துக்

கொள்ள வேண்டும்.

இரண்டாவது சுற்றில் முதல் ஏழு முறை லிங்கத்தின் தலை மட்டுமே

யோனிக்குள் சென்று வர வேண்டும். இரண்டு அங்குலத்திற்கு மேல்

செல்லக்கூடாது. அவ்வாறு தலை மட்டுமே ஒரு முறை உள்ளே போய் வர அரை

நிமிடத்தை ஆண் எடுத்துக் கொள்ள வேண்டும்,

எட்டு மற்றும் ஒன்பதாவது முறை மட்டும் முழு லிங்கத்தையும் உள்ளே

செலுத்த வேண்டும். அவ்வாறு முழு லிங்கத்தையும் செலுத்த ஒவ்வொரு முறையும்

ஒரு நிமிடத்தை எடுத்துக் கொள்ள வேண்டும்,

அதன் பின், அரை நிமிடம் வரை யோனிக்குள் மூழ்கிய நிலையிலேயே

லிங்கத்தை அசைவின்றி வைத்திருக்க வேண்டும். அதாவது லிங்கம் மற்றும்

யோனியில் உறைந்து கொண்டிருக்கும் அனைத்து உயிரணுக்களும்

ஒன்றையொன்று ஆரத் தழுவிக் கொள்ளும் வாய்ப்பினை அவற்றிற்கு வழங்க

வேண்டும்.

அதே போல வெளியே எடுப்பதற்கும் அரை நிமிடத்தை எடுத்துக் கொள்ள

வேண்டும். இரண்டாவது சுற்று முடிய மொத்தம் ஏழரை நிமிடங்கள்

தேவைப்படும்.

மூன்றாவது சுற்றில் ஆறு முறை லிங்கத்தின் தலை மட்டும் யோனிக்குள்

சென்று வர வேண்டும். இரண்டு அங்குலத்திற்கு மேல் செல்லக்கூடாது.

அவ்வாறு ஒரு முறை உள்ளே போய் வர அரை நிமிடத்தை எடுத்துக் கொள்ள

வேண்டும்.

ஏழு, எட்டு மற்றும் ஒன்பதாவது முறை மட்டும் முழு லிங்கத்தையும் உள்ளே

செலுத்த வேண்டும், அவ்வாறு முழு லிங்கத்தையும் செலுத்த ஒவ்வொரு முறையும்

ஒரு நிமிடத்தை எடுத்துக் கொள்ள வேண்டும்.

அதன்பின், அரை நிமிடம் வரை யோனிக்குள் மூழ்கிய நிலையிலேயே

லிங்கத்தை அசைவின்றி வைத்திருக்க வேண்டும். அதே போல

வெளியே

எடுப்பதற்கும் அரை நிமிடத்தை எடுத்துக் கொள்ள வேண்டும். மூன்றாவது சுற்று

முடிய மொத்தம் ஒன்பது நிமிடங்கள் தேவைப்படும்.

நான்காவது சுற்றில் ஐந்து முறை லிங்கத்தின் தலை மட்டும் யோனிக்குள்

சென்று வர வேண்டும். இரண்டு அங்குலத்திற்கு மேல் யோனிக்குள்

செல்லக்கூடாது. அவ்வாறு ஒரு முறை உள்ளே போய் வர அரை நிமிடத்தை

எடுத்துக் கொள்ள வேண்டும்.

ஆறு, ஏழு, எட்டு மற்றும் ஒன்பதாவது முறை மட்டும் முழு லிங்கத்தையும்

உள்ளே செலுத்த வேண்டும். அவ்வாறு முழு லிங்கத்தையும் செலுத்த ஒவ்வொரு

முறையும் ஒரு நிமிடத்தை எடுத்துக் கொள்ள வேண்டும். அதன் பின், அரை

நிமிடம் வரை யோனிக்குள் மூழ்கிய நிலையிலேயே லிங்கத்தை அசைவின்றி

வைத்திருக்க வேண்டும். அதே போல் வெளியே எடுப்பதற்கும் அரை நிமிடத்தை

எடுத்துக் கொள்ள வேண்டும். நான்காவது சுற்று முடிய மொத்தம் பத்தரை

நிமிடங்கள் தேவைப்படும்,

ஐந்தாவது சுற்றில் நான்கு முறை லிங்கத்தின் தலை மட்டும் யோனிக்குள்

சென்று வர வேண்டும். இரண்டு அங்குலத்திற்கு மேல் யோனிக்குள்

செல்லக்கூடாது. அவ்வாறு ஒரு முறை உள்ளே போய் வர அரை நிமிடததை

எடுத்துக் கொள்ள வேண்டும்.

ஐந்து, ஆறு, ஏழு, எட்டு மற்றும் ஒன்பதாவது முறை மட்டும் முழு

லிங்கத்தையும் உள்ளே செலுத்த வேண்டும். அவ்வாறு முழு லிங்கத்தையும்

செலுத்த ஒவ்வொரு முறையும் ஒரு நிமிடத்தை எடுத்துக் கொள்ள வேண்டும்,

அதன் பின், அரை நிமிடம் வரை யோனிக்குள் மூழ்கிய நிலையிலேயே லிங்கத்தை

அசைவின்றி வைத்திருக்க வேண்டும்.

அதே போல வெளியே எடுப்பதற்கும் அரை நிமிடத்தை எடுத்துக் கொள்ள

வேண்டும். ஐந்தாவது சுற்று முடிய மொத்தம் பன்னிரெண்டு நிமிடங்கள்

தேவைப்படும்,

ஆறாவது சுற்றில் மூன்று முறை லிங்கத்தின் தலை மட்டும் யோனிக்குள்

சென்று வர வேண்டும், இரண்டு அங்குலத்திற்கு மேல் யோனிக்குள்

செல்லக்கூடாது. அவ்வாறு ஒரு முறை உள்ளே போய் வர அரை நிமிடத்தை

எடுத்துக் கொள்ள வேண்டும்.

நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு மற்றும் ஒன்பதாவது முறை மட்டும் முழு

லிங்கத்தையும் உள்ளே செலுத்த வேண்டும். அவ்வாறு முழு லிங்கத்தையும்

செலுத்த ஒவ்வொரு முறையும் ஒரு நிமிடத்தை எடுத்துக் கொள்ள வேண்டும்.

அதன்பின், அரை நிமிடம் வரை யோனிக்குள் மூழ்கிய நிலையிலேயே லிங்கத்தை

அசைவின்றி வைத்திருக்க வேண்டும்.

அதே போல வெளியே எடுப்பதற்கும் அரை நிமிடத்தை எடுத்துக் கொள்ள

வேண்டும். ஆறாவது சுற்று முடிய மொத்தம் பதி மூன்றரை நிமிடங்கள்

தேவைப்படும்.

ஏழாவது சுற்றில் இரண்டு முறை லிங்கத்தின் தலை மட்டும் யோனிக்குள்

சென்று வர வேண்டும். இரண்டு அங்குலத்திற்கு மேல் யோனிக்குள்

செல்லக்கூடாது. அவ்வாறு ஒரு முறை உள்ளே போய் வர அரை நிமிடத்தை

எடுத்துக் கொள்ள வேண்டும்,

மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு மற்றும் ஒன்பதாவது முறை மட்டும்

முழு லிங்கத்தையும் உள்ளே செலுத்த வேண்டும். அவ்வாறு முழு லிங்கத்தையும்

செலுத்த ஒவ்வொரு முறையும் ஒரு நிமிடத்தை எடுத்துக் கொள்ள வேண்டும்,

அதன் பின், அரை நிமிடம் வரை யோனிக்குள் மூழ்கிய நிலையிலேயே லிங்கத்தை

அசைவின்றி வைத்திருக்க வேண்டும்,

அதே போல வெளியே எடுப்பதற்கும் அரை நிமிடத்தை எடுத்துக் கொள்ள

வேண்டும். ஏழாவது சுற்று முடிய மொத்தம் பதினைந்து நிமிடங்கள்

தேவைப்படும்.

எட்டாவது சுற்றில் ஒரு முறை லிங்கத்தின் தலை மட்டும் யோனிக்குள்

சென்று வர வேண்டும். இரண்டு அங்குலத்திற்கு மேல் யோனிக்குள்

செல்லக்கூடாது. அவ்வாறு ஒரு முறை உள்ளே போய் வர அரை நிமிடத்தை

எடுத்துக் கொள்ள வேண்டும்.

இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு மற்றும் ஒன்பதாவது

முறை மட்டும் முழு லிங்கத்தையும் உள்ளே செலுத்த வேண்டும். அவ்வாறு முழு

லிங்கத்தையும் செலுத்த ஒவ்வொரு முறையும் ஒரு நிமிடத்தை எடுத்துக் கொள்ள

வேண் டும். அதன் பின், அரை நிமிடம் வரை யோனிக்குள் மூழ்கிய

நிலையிலேயே லிங்கத்தை அசைவின்றி வைத்திருக்க வேண்டும், அதே போல்

வெளியே எடுப்பதற்கும் அரை நிமிடத்தை எடுத்துக் கொள்ள வேண்டும்.

எட்டாவது சுற்று முடிய மொத்தம் பதினாறரை நிமிடங்கள் தேவைப்படும்.

ஒன்பதாம் சுற்றில் ஒன்பது முறையும் முழு லிங்கத்தையும் உள்ளே செலுத்த

வேண்டும், அவ்வாறு முழு லிங்கத்தையும் செலுத்த ஒவ்வொரு முறையும் ஒரு

நிமிடத்தை எடுத்துக் கொள்ள வேண்டும். அதே போல ஒவ்வொரு முறையும்,

அரை நிமிடம் வரை யோனிக்குள் மூழ்கிய நிலையிலேயே அசைவின்றி

வைத்திருக்க வேண்டும். அதே போல வெளியே எடுப்பதற்கும் ஒவ்வொரு

முறையும் அரை நிமிடத்தை எடுத்துக் கொள்ள வேண்டும். ஒன்பதாம் சுற்று முடிய

மொத்தம் பதினெட்டு நிமிடங்கள் தேவைப்படும்.

ஒன்பது சுற்றுக்களும் நிறைவடைய மொத்தம் நூற்றியெட்டு நிமிடங்கள்

தேவைப்படும், இவ்வாறாக எண்பத்தி யொரு முறை லிங்கம் யோனிக்குள்

போய்வரும் போது எப்படிப்பட்ட பெண்ணுக்கும் உச்ச கட்ட இன்பம் ஏற்பட்டு

விடும். ஆனால் இதற்கு மனதைக் கட்டுப்படுத்தும் பயிற்சி மிகவும் முக்கியம்.

(Vaginal Orgasm: பிரம்மஸ்தான இன்பம், = 20)

இன்றைய ஆண்களும் இந்தப் பயிற்சியில் ஈடுபடலாம். மெதுவாக, ஆழமாக,

நீண்டதாகச் சுவாசம் இருக்கும் வரை இதயத் துடிப்பின் வேகம் அதிகரிக்காது.

மேலும், சுவாசத்தையும், லிங்கத்தின் நுழைத்தல்களையும் ஒத்திசைவோடு

இயங்கும் படியாக ஒருங்கிணைத்து விட்டால், இன்பத் துய்ப்பின் செயல்படும்

வேகமும் அதிகரிக்காது.

வேதம் என்பது இல்லாத வரை, லிங்கத்தின் வீரியம் ஆறாம் எண்ணைத்

தாண்டாது. ஆறாம் எண்ணைத் தாண்டாத வரை, விந்தை வெளியேற்றும்

விசையால், அதைப் பற்றி சிந்திக்கக் கூட முடியாது.

அவ்வாறு இதைப் பயிற்சி செய்வதன் மூலம் தன் மனைவிக்குரிய

இன்பங்களை வழங்கலாம், தங்களுடைய இன்பத்தை அதிகரித்துக் கொள்ளலாம்,

அதோடு, துரித ஸ்கலிதம், விந்து முந்துதல் போன்றவற்றிலிருந்து எளிதில்

விடுபட்டு விடலாம்.

அதை விட முக்கியமாக, வாழ்வின் எந்தத் தளத்திலும் ஏற்படக்கூடிய எப்படிப் பட்ட பிரச்சினையையும் எளிதாக எதிர் கொள்ளக் கூடிய மன வலிமையைப் பெற்று விடலாம். பொறுமையாக முடிவெடுப்பதில் மகா திறமைசாலியாகி விடலாம்.

பாலுறவிற்காக மணிக்கணக்கில் நேரத்தைச் செலவிடுவதா? அந்தக் கால

அரசர்களின் வழிமுறைகள் நமக்குத் தேவையா? என எண்ண வேண்டாம்.

ஏனெனில், மனைவியோடு காதல் புரிய எவ்வளவு குறைவான

நேரத்தை ஒரு கணவன் செலவிடுகிறானோ அதற்கேற்ப, அதிகமான

நேரத்தை அவளோடு சண்டையிடுவதற்காக ஒதுக்க வேண்டியாருக்கும்.

அதனால் ஏற்படும் மன நிலை பாதிப்பு மாதக் கணக்கில் நேரத்தை

கொன்று கொண்டிருக்கும்.

நவ சுற்றுக்களில் பல வகைகள்

தந்த்ரா வழியில் தாம்பத்ய இன்பங்களை மனைவிக்கு வழங்க விரும்பினால்,

கடைப்பிடிக்கப் பட வேண்டிய முக்கியமான முதல் விதி என்னவெனில்,

எந்தவொரு வித்தியாசமான முறையைத் துவக்கும் முன், கண்டிப்பாக

மனைவியின் அனுமதியைப் பெற்றுக் கொள்ளவும்.

மனைவிக்குப் பிடிக்காத வழி முறையைக் கையாள்வதன் மூலமாக

மனைவிக்குரிய பாலின்பத்தை நிகழ்த்த முடியாது. மனைவியின் மனமே

இன்பத்திற்கு எதிரான ஒரு தடைக் கல்லாகி விடும்,

லிங்கத்தின் உயிர்ப்புத் தன்மையை நீண்ட நேரத்திற்குக் கையாள முடியாத

ஆண்கள், இதே தாவோ முறையை அவரவரின் சக்திக்கேற்ப மாற்றியமைத்துக்

கொள்ளலாம். பேரரசர்களையே தான் பின்பற்ற வேண்டும் என்கிற சட்டம்

ஏதுமில்லை..

தாவோக்களின் பேராண்மைத் திறன் வளர்க்கும் பயிற்சியான நவ

சுற்றுக்களைக் கொண்ட இன்பத் துய்ப்பை நூற்றியெட்டு

நிமிடங்களிலிருந்து,

ஐம்பத்து நான்கு நிமிடங்கள் மற்றும் இருபத்தேழு நிமிடங்களில் முடித்துக்

கொள்ளும் வகையிலும் மாற்றியமைக்கலாம்.

அதாவது லிங்கத்தின் தலைப்பகுதியை மட்டும் செலுத்துவதற்கு பதினைந்து

விநாடிகளையும், முழு லிங்கத்தையும் உட்செலுத்துவதற்கு முப்பது

வினாடிகளையும், உள்ளே மூழ்கிய நிலையில் வைத்திருப்பதற்குப் பதினைந்து

விநாடிகளையும் ஒதுக்கும் வகையில் நேரத்தைக் குறைத்துக் கொள்வதன்

மூலமாக, ஐம்பத்து நான்கு நிமிடங்களில் இந்தப் பயிற்சியை முடித்துக்

கொள்ளலாம். (Vaginal Orgasm: பிரம்மஸ்தான இன்பம் 21)

அதே போல, லிங்கத்தின் தலைப்பகுதியை மட்டும் செலுத்துவதற்கு ஏழு

விநாடிகளையும் முழு லிங்கத்தையும் உட்செலுத்துவதற்கு பதினைந்து

வினாடிகளையும், உள்ளே மூழ்கிய நிலையில் வைத்திருப்பதற்கு எட்டு

விநாடிகளையும் ஒதுக்கும் வகையில் நேரத்தைக் குறைத்துக் கொள்வது

மூலமாக, இருபத்தேழு நிமிடங்களில் இந்தப் பயிற்சியை முடித்துக் கொள்ளலாம்.

(Vaginal Orgasm: பிரம்மஸ்தான இன்பம். 21-a)

அதே போல, லிங்கத்தின் தலைப்பகுதியை மட்டும் செலுத்துவதற்கு மூன்று

விநாடிகளையும், முழு லிங்கத்தையும் உட்செலுத்துவதற்கு எட்டு

விநாடிகளையும் ஒதுக்கும் வகையில் நேரத்தைக் குறைத்துக் கொள்வதன்

மூலமாக, பதினான்கு நிமிடங்களில் இந்தப் பயிற்சியை முடித்துக் கொள்ளலாம்.

வினாடிகளையும், உள்ளே மூழ்கிய நிலையில் வைத்திருப்பதற்குப் நான்கு

(Vaginal Orgasm: பிரம்மஸ்தான இன்பம்.- 21-D)

எல்லாவற்றிலும் உள்ள முக்கியமான தகவல் என்னவென்றால், ஒரு ஆண்

எத்தனை முறை தன் லிங்கத்தை யோனிக்குள் செலுத்தினான் என்பதை விட,

எவ்வளவு வேகமாக, அல்லது எவ்வளவு மென்மையாக செலுத்தினான் என்பதை

விட, அவனுடைய லிங்கத்தின் அளவை விட, எத்தகைய அன்புடன் அவன் இதில்

ஈடுபட்டிருக்கிறான் என்பதே பெண்ணுக்குரிய உச்ச கட்ட இன்பங்களை

இவ்வாறு திட்டமிட்டு வியூகங்களை வகுத்துக் கொண்டு, பெண்ணின் மீது

உருவாக்குவதில் தீர்மானிக்கும் சக்தியாக இருக்கும்.

பல் முனை இன்பத் தாக்குதலில் ஒரு ஆண் ஈடுபடும் போது, எப்படிப் பட்ட

அடங்காப் பிடாரியும் அடங்கிப் போவாள் என்றும், எப்படிப் பட்ட பேரரசியும்,

தன்னிடமுள்ள ஆயுதங்களையெல்லாம் தூக்கியெறிந்து விட்டு, இன்பத்தை

வழங்கிய ஆணின் மார்பில் நிபந்தனையின்றிச் சரணடைந்து விடுவாள் என்றும்

தந்தரா நூல்கள் தெரிவிக்கின்றன.

இதற்கான சூத்திரம் இது. இன்பம் துய்ப்பதற்கு எவ்வளவு குறைவான

நேரத்தை ஒதுக்குகிறார்களோ, அதற்கேற்ப அதிகமான நேரத்தை

தமக்குள் சண்டையிட்டுக் கொள்ள தம்பதிகள் ஒதுக்க வேண்டியிருக்கும்.

அடுத்த பிறவி வரை அன்பை உருவாக்கக் கூடிய

இன்பங்களை நிகழ்த்தும் வித்தைகள்




தந்த்ரா வழியில் தாம்பத்ய இன்பங்களை

மனைவிக்கு வழங்கும் போது கடைப் பிடிக்கப் பட

வேண்டிய முக்கியமான முதல் விதி என்னவெனில்,

எதைச் செய்வதற்கும் முன்னால், மனைவியின்

அனுமதியைப் பெற்றுக் கொள்ளவும்.

ஒரே நேரத்தில் விரலால் புனிதப் புள்ளியையும்,

நாவால் மதன பீடத்தையும் தீண்டத் தொடங்கினால்

எப்படிப் பட்ட பெண்ணுக்கும் பரவசக் கிளர்ச்சி

ஏற்பட்டே தீரும்.

இது மதன பீட பூஜையைத் தொடர்ந்து

நடத்தப்பட வேண்டியது. இரண்டு கால்களையும் மேல்

நோக்கி மடக்கி, கணுக்கால்களைக் கைகளால்

பிடித்தபடி பெண் கூரையைப் பார்த்துப் படுத்துக்

கொள்ள வேண்டும். அல்லது ஆணின் இரண்டு தோள்களின் மீதும் போட்டுக்

கொள்ளலாம்.

ஆண் ஏக காலத்தில் விரலால் புனிதப் புள்ளியையும், நாவால் மதன

பீடத்தையும் தீண்டத் தொடங்கினால், மூன்று முதல் ஐந்து நிமிடத்தில்

நிச்சயமாகப் பெண்ணுக்குரிய அடுத்த பேரின்பம் நிகழ்ந்தே தீரும். (Blended

Orgasm, ஒருங்கிணைந்த இன்பம் 22)

ஒரே நேரத்தில் இரண்டு கைகளையும், நாவையும் பயன்படுத்தி

இன்பப் பரவசத்தை ஏற்படுத்துதல்.

மதன பீட பூஜையைத் தொடர்ந்து நடத்தப்பட வேண்டியது. பெண்

கூரையைப் பார்த்த படி படுத்துக் கொள்ளலாம். அல்லது ஒரு சுவரையொட்டி

நாற்பத்தைந்து டிகிரி சாய்வாக சில தலையணைகளை வைத்து அதன் மீது

முதுகை வைத்து சாய்ந்து கொள்ளலாம்.

முழங்கால்கள் மேல் நோக்கி சற்றே வெளிப்புறம் நோக்கி சாய்ந்த நிலையில்

இருக்கும் படியாக மடித்து வைத்துக் கொள்வது இலகுவான நிலை.

ஆணைப் பொறுத்த வரை, வலது கைப் பழக்கமுள்ளவர் பெண்ணின் வலது

புறமும், இடது கைப் பழக்கமுள்ளவர் பெண்ணின் இடது புறமும் இருந்து தான்

இந்தப் பூஜையை நடத்த வேண்டும்.

எந்தக் கை பழக்கமற்ற கையோ அந்தக் கையை கொங்கைகளின்

இதழ்களுக்கு ஒதுக்கி விட வேண்டும்,

அந்தக் கையின் விரல்கள் கொங்கை இதழ்களை மிருதுவாய் வருடிக்

கொண்டிருக்கலாம். அல்லது மென்மையாய் நிமிண்டிக் கொண்டிருக்கலாம்.

அல்லது மெல்லிய அளவில் கிள்ளிக் கொண்டிருக்கலாம். அல்லது விரல்கள்

மட்டும் சுற்றுகிற வகையில் மெலிதாய்ப் பிடித்துத் திருகிக் கொண்டிருக்கலாம்,

என்ன செய்தாலும் ஒரு மலரைத் தீண்டுவது போல் தான் இருக்க

வேண்டும்,

அதே நேரத்தில் இயல்பாக கைவரப் பெற்றுள்ள வேறொரு கை விரல்களால்

பிரம்மஸ்தானமான புனிதப் புள்ளியில் பூஜையை நடத்தத் தொடங்க வேண்டும்.

அதாவது, நடு விரல் மற்றும் மோதிர விரல்களை மேல் நோக்கிப் பார்க்கும்

வகையில் வைத்த படி, இங்கே வா என அழைப்பதைப் போல், மெதுவாக புனிதப்

புள்ளியின் மீது அசைக்கத் தொடங்க வேண்டும்.

அவ்வாறு செய்த படியே, ஆணின் கர்ப்ப கிரகமான நாவைக் கொண்டு, மதன்

பீடத்திற்குரிய பூஜையைச் செய்ய ஆரம்பிக்க வேண்டும். குனியும் அளவிற்கு உடல்

வளைந்து கொடுக்கா விட்டால், புனிதப் புள்ளியில் உள்ள கையின் கட்டை

வீரலைக் கொண்டும் மதன பீட பூஜையைச் செய்யலாம்.



புனிதப் புள்ளியில் நிகழும் இன்பம்.

இவ்வாறு அமுத பீடக் கலசத்தில்

இடது கை விரல்களாலும், மதன

பீடத்தில் நாவாலும், மற்றும்

பிரம்மஸ்தானத்தின் புனிதப் புள்ளியில்

வலது கை விரல்களாலும் பூஜையச்

செய்யும் போது பெண்ணின் உடல்

மும்முனைத் தாக்குதலுக்கு

ஆளாகிறது.

இந்த இன்பத் தாக்குதல்

மென்மையான முறையில் நடைபெறும் போது, ஒரு சில நிமிடங்களில் புனிதப்

புள்ளியானது ஒரு பேரிட்சம் பழ அளவில்,உருவாகி யோனிக் குழாயின் கீழ்ப் பகுதி

நோக்கி வரத் துவங்கும், அப்படி வரும் போது, மதன பீடத்திலும், புனிதப்

புள்ளியிலும் செய்து கொண்டிருப்பதன் வேகத்தைச் சற்று அதிகரித்தால், ஓரிரு

நிமிடங்களில் பேரானந்தப் பேரின்ப உச்ச கட்டப் பரவச நிலை நிகழ்ந்து விடும்.

(Squirting Orgasm: அமிர்த இன்பம்.- 23)

அப்போது அமிர்த நீர் பீறிட்டு வெளியேறுவதற்கான வாய்ப்பு நிச்சயமாக

உண்டு. இந்த இன்பம் நிகழ்வதற்கு எடுத்துக் கொள்ளப்படும் நேரத்தைப்

பொறுத்து, அமிர்த நீரின் அளவு மாறுபடும். இங்கே முக்கியமான ஒரு தகவலைத்

தெரிந்து கொள்ளவும், சில பெண்களால் ஒரு போதும் அமிர்தத்தை வெளி

முடியாமலும் போகலாம், அதனால், அவர்களுக்கு அமிர்த இன்பமே நிகழவில்லை

என்று பொருளல்ல, அவர்களுடைய அமிர்தம் பின்னோக்கிச் சென்று

சிறுநீர்ப்பையை அடைந்து விடுகிறது என்று தான் பொருள், இன்பத் துய்ப்பு

முடிந்ததும் அவர்கள் சிறுநீர் கழிக்க ஓடுவதிலிருந்து இதைத் தெரிந்து

கொள்ளலாம்.

இந்த இன்பம் மனைவியின் உடலில் நிகழும் போது, ஹஸ்தினி வகையைச்

சேர்ந்த யானைப் பிரிவுப் பெண்ணாக இருந்தால் கூட, இன்பக் கிளர்ச்சியால்

துடித்துப் போய் விடுவாள் என்றும் ஒரே நேரத்தில் முப்புறத்திலும் இன்ப

துரிகைகளால் பெண் தாக்கப்படும் போது, அவளுடைய ஈகோ உடனடியாகச்

செத்துப் போகிறது என்றும் தந்திரா நூல்கள் தெளிவாகக் கூறுகின்றன.

அழுத்தித் தளர்த்தும் அற்புத முறை இது

எப்படிப்பட்ட பெண்ணுக்கும் நிச்சயமாக இன்பம் நிகழ்வதற்கான இனியொரு

வழி பட பூஜை.

அதாவது, பெண்ணின் பின்புறத்திலிருந்து புனிதப் புள்ளியைத்

தண்டுதல்.மதன பீட பூஜையை அடுத்து செய்யப்பட வேண்டிய பூஜை இது.

படத்தில் காட்டியுள்ள படி,பெண்ணை மண்டியிட்டுப் படுக்கச் சொல்ல

வேண்டும். அதன் பின், மிருதுவாக புனித குகையின் மீது வட்டமிட்ட படியே

கட்டை விரலை, நூலிழை, நூலிழையாகப் புனித குகைக்குள் செலுத்த

வேண்டும். ஒரு அங்குலம் செலுத்தினாலே போதும். புனிதப் புள்ளியைத் தீண்டி

விடலாம்.

ஆகவே, ஒரு அங்குலம் அல்லது ஒன்றரை அங்குலம் மட்டுமே விரலைச்

செலுத்தவும். அதன் பின், கட்டை விரலைக் கீழ் நோக்கி மிருதுவாக அழுத்திய

படியே, நடுவிரல் மற்றும் மோதிர விரலால் மதன் பீடத்தையும், ஆள்காட்டி விரல்

மற்றும் சுண்டு விரலால் புனிதப் பகுதியின் உதடுகளையும் அழுத்தவும்.




அதாவது, விடுமுறை நாட்களில் ஏகமாகக்

குதித்து விளையாடிய குழந்தை கால்

குடைகிறதென அழும் போது, கால்களப் பிடித்து

விடுகிறோமல்லவா, அதே போல் விரல்களால்

அழுத்துதல் தளர்த்துதல் என செய்து

கொண்டிருக்கும் போது பெண்ணுக்குரிய மூன்று

இன்பங்கள் ஏக காலத்தில் நிகழும். (Blended

தீன் கின்பம் பேக்கேல், Orgasm. ஒருங்கிணைந்த இன்பம் 24)

அதாவது மதனபீடத்தின் அடிப்படம் தான் புனிதப்புள்ளி, அதைக் கட்டை

விரல் தீண்டிக் கொண்டிருக்கிறது.

அதே போல மதன் பீடத்தின் கால்களும் வயிறும் தான் புனித குகையின்

இருபுறமும் அமைந்துள்ளன. அவற்றை ஆள்காட்டி விரலும், சுண்டு விரலும்

தீண்டிக் கொண்டுள்ளன.

மதன பீடத்தின் தலையை நடு விரலும், மோதிய விரலும் தீண்டிக்

கொண்டுள்ளன.

இவ்வாறாக, மதன பீடத்தின் அனைத்து பகுதிகளும் இந்தப் பூஜையால்

ஒரே நேரத்தில் மிகவும் அழுத்தமாகத் தீண்டப்படுகிறது. அதனால், ஏக காலத்தில்

மதன பீட இன்பமும், பிரம்மஸ்தானப் புனிதப் புள்ளி சார்ந்த இன்பமும், அமிர்த

இன்பமும் உறுதியாக நிகழ்ந்து விடுகிறது.

இத்தகைய இன்பம் நிகழும் போது, பெரும்பாலும் பெண் கூச்சலிட்டு

விடுவாள். ஆகவே, கதவையும், சன்னல்களையும் இறுக்கமாகச் சாத்தி விடவும்.

மேலும், இன்பக் கிளர்ச்சியால் பக்க வாட்டில் சரிந்து விழவும் வாய்ப்பு உண்டு.

ஆகவே கூடுமானவரை, மனைவியைச் சுவரோரத்தில் மண்டிடச் செய்வது

பாதுகாப்பானது.

ஆனால், இந்தப் பூஜையைச் செய்யும் போது கண்டிப்பாக உயவுப்

பொருளைப் பயன் படுத்திக் கொள்ள வேண்டும். இல்லா விட்டால், மதன

படத்தின் தலையில் எரிச்சல் போன்ற உணர்ச்சி ஏற்பட்டு விடும்.

பெண்ணின் மனதில் எரிச்சல் ஏற்பட்டாலும் சரி, உடலில் எரிச்சல்

ஏற்பட்டாலும் சரி, புனிதப் பகுதியில் இன்பம் நிகழாது. அதற்கான சூத்திரம் இது.

பெண்ணின் எரிச்சல் உணர்ச்சியும், உச்ச கட்ட இன்பமும் பரம்

விரோதிகள்.

மற்றொரு முப்புறத் தாக்குதல் முறை இது

ஒரு கையால் அமுதபீடங்களையும், மறு கை விரல்களால் மதன பீட

அடிவாரமான புனிதப் புள்ளியையும், அதே கையின் உள்ளங் கையின் மேட்டுப்

பகுதியால் மதன பீடத்தையும் ஏக காலத்தில் தீண்டி பேரானந்தத்தை அளிக்கும்

பேரின்பப் பரவசத்தை நிகழ்த்துதல், மதன பீட இன்பம் நிகழ்ந்த இரண்டு

நிமிடங்களில் தொடங்க வேண்டியது.




பெண் கூரையைப் பார்த்த படி மல்லாந்த நிலையில், ஒரு சுவருக்கு அருகில் படுக்க வேண்டும். பிட்டங்களுக்குக் கீழ் தலையணையைக் கொடுக்கவும். அடுத்து, கால்களை “வி” என்னும் ஆங்கில் எழுத்து போல், அதாவது ஒண்டி வில்லின் கவ்வைக் கோலைப் பால விரித்த நிலையில் மடித்து, சுவரோரம் உள்ள காலைச் சுவருக்குச் சாய்த்து வைக்கும் படி கேட்டுக் கொள்ளவும்.

அடுத்த காலை மடித்த நிலையில், அருகில் அமர்ந்துள்ள உங்கள் மீது சாய்த்து வைத்துக் கொண்டு, புனிதப் பகுதியில் உங்கள் கையை வைத்து.

அதிர்வுகளை ஏற்படுத்தவும். உள்ளங்கை மதன பீடத்தின் மீது இருக்கட்டும்.

நடு விரலும், மோதிர விரலும் புனித குகையின் மீது இருக்கட்டும்.

ஆள்காட்டி விரலும், சுண்டு விரலும் புனிதப் பகுதியின் இரு புறங்களிலும்

இருக்கட்டும்.

அந்நிலையில் அதிர்வுகளை ஏற்படுத்தியபடியே, புனித குகையின் வாயிலில்

ஒரு நிமிடம் வட்டமிட்ட பின், நடு விரலை மட்டும் வட்டமிட்ட படியே

குகைக்குள் நுழைக்கவும். ஒரு அங்குல தூரம் விரல் நுழைந்ததும் வட்டத்தின்

விட்டத்தைச் சிறிது சிறிதாக அதிகரிக்கவும்.

ஒன்பது வட்டங்கள் இட்ட பின் மெதுவாக, மோதிர விரலையும் வைத்து,

பிரம்மஸ்தானப் பகுதியான புனித குகையின் கூரையை மென்மையாகத் தேய்த்து

விடவும். கையின் அதிர்வுகள் தொடர்ந்து நிகழ்ந்து கொண்டிருக்கட்டும்.

கை மதன பீடத்தின் மீது அதிர்ந்து கொண்டிருக்கிறது. நடு விரலும், மோதிர

விரலும் பிரம்மஸ்தானத்தைத் தேய்த்துக் கொண்டிருக்கிறது. ஆள்காட்டி விரலும்,

சுண்டு விரலும் புனிதப் பகுதியின் இரு புறங்களையும் அழுத்தித் தளர்த்தும்

வேலையைச் செய்து கொண்டிருக்கிறது. இனியொரு கையின் விரல்கள் அமுத

பிடக் கலசங்களோடு மென்மையாக, ஒரு பால்காரரைப் போல விளையாடிக்

கொண்டுள்ளன.

இந்த நிலை ஓரிரு நிமிடங்கள் தொடரும் போது பெண்ணின் தோளும்,

இடையும் தரையிலிருக்க வயிறு மேல் நோக்கி எழும்பி உடல் வில்லாய் வளையத்

தொடங்கும். அப்போது, புனிதக் குகையின் மதன பானச் சகதியும் அதிகரிக்கத்

தொடங்கும். அந்த நேரத்தில் அதிர்வுகளின் வேகத்தை அதிகரிக்கவும்.

தேய்த்துக் கொண்டிருக்கும் விரல்களின் வேகத்தையும் அதிகரிக்கவும்.

அப்போது புனித குகையின் மேற் கூரையிலிருந்து, பிரம்மஸ்தானம்

கீழிறங்கத் தொடங்கும். அதை அழுத்தமாகத் தேய்க்கத் தொடங்கிய

சில

வினாடிகளில் குகையையே மூடுமளவிற்கு அது பெரிதாகும், அந்தக் காலப்

பாட்டிகள் அதை நீர்ப்பை என்று சொல்வார்கள். அது தான் அமிர்த சுரப்பிகள்.

(Bartholin’s glands, paraurethral ducts through and around

the human female urethra. Dr. Regnier de Graaf)

அந்த அமிர்த சுரப்பிகளை நுனி விரல்களால் அழுத்தமாகத் தேய்க்கத்

தொடங்கிய சில வினாடிகளில் அமிர்தம் சீறிய படி பெண்ணின் சிறு நீர்த் துவாரம்

வழியாக வெளியேறும், சில நேரங்களில் நான்கடி தூரம் வரை கூட அது

பீய்ச்சியடிக்கப் படும். அதுதான் பெண்ணின் மன அழுத்தங்கள் அனைத்தையும்

கொல்லக் கூடிய ,அரு மருந்து. இந்த அரு மருந்து வெளியேறும் போது அய்யோ

கடவுளே எனக் கூச்சலிடாத பெண் இதுவரை பூமியில் பிறந்ததில்லை,

(Blended Orgasm. ஒருங்கிணைந்த இன்பம்— 25)

அதே போல நாற் புறத் தாக்குதலும் இருக்கிறது**.**

இது ஒரு முப்புறத் தாக்குதல் முறை. கட்டிலின் மீது வானத்தைப் பார்த்த

படி. குறுக்கு வசமாகப் பெண் படுத்துக் கொள்ள வேண்டும். ஆண் கட்டிலை

ஒட்டி மண்டியிட்டபடி, பெண்ணின் கால்கள் இரண்டையும் எடுத்து இரண்டு

தோள்களில் போட்டுக் கொள்ளவும். முழங் கால்களின் மடிப்புப் பகுதி தோளின்

மீது மடிந்திருக்க வேண்டும்.

இந்த நிலையில் யோனி பூஜையைச் செய்யவும். போதுமான இரத்தத்தைப்

புனிதப் பகுதிக்குக் கொண்டு வந்த பின், நாவால் மூலாதாரத்திலிருந்து,

மதனமேடு வரை மென்மையாக எட்டு என்கிற எண்ணை வரைந்து

கொண்டிருக்கவும். மூன்று நிமிடங்கள் வரை இவ்வாறு செய்யும் போது போதுமான

இன்பத்தேன் சுரந்து விடும்.




அதன் பின், ஆள்காட்டி விரலை வட்டமிட்ட

படியே ஒரு அங்குல அளவிற்கு புனித குகைக்குள்

மென்மையாகச் செலுத்தி அங்கேயே வட்டமிட்டு

கொண்டிருக்கவும். என்ன செய்தாலும் ஒரு மலரைத்

தீண்டுவது போல் தான் இருக்க வேண்டும்.

அப்போது புனித குகையின் உதடுகள்

தானாகவே விரிந்த நிலைக்குச் சென்று விடும்.

மதன படம் நன்றாக வெளியில் தெரியும். அவ்வாறு

தெரிகின்ற மதன் படத்தை மூக்கால்

தேய்த்தபடியே, நாவால் யோனியின் உட்புற

பகுதியைத் தீண்டிக் கொண்டிருக்கவும்.

விரல் புனித குகைக்குள் வட்டமிட்டுக் கொண்டிருக்க, மூக்கு மதன

படத்தைத் தீண்டிக் கொண்டிருக்க, நாக்கு புனித குகைக்கும் மதன பீடத்திற்கும்

இடைப்பட்ட பகுதியில் தீண்டிக் கொண்டிருந்தால், சில நிமிடங்களில்

பெண்ணின் மனதைக் கிறங்கடிக்கின்ற, உலகையே மறக்கச் செய்கின்ற வகையில்

இன்பம் நிகழும். (Blended Orgasm. ஒருங்கிணைந்த இன்பம் 26)

அதே போல நாற் புறத் தாக்குதலும் இருக்கிறது. அமுத பீடத்திற்குரிய

பூஜையை ஒரு கை விரல்கள் செய்து கொண்டிருக்க, மதனபீடத்திற்குரிய

பூஜையை நாவும் வாயும் செய்து கொண்டிருக்க, பிரம்மஸ்தான புனிதப் புள்ளியில்

வேறொரு கையின் ஆள் காட்டி விரல் பூஜையை செய்து கொண்டிருக்க, அதே

கையின் சுண்டு விரல் மூலதாரத்தின் மீது வட்டமிட்டுக் கொண்டிருந்தால், இந்த

உலகில் பெண்ணாய்ப் பிறந்துள்ள உயிரால் மறக்க முடியாத இன்பத்தை அளிக்கும்

என்று சொல்லப்பட்டிருக்கிறது. (Blended Orgasm. ஒருங்கிணைந்த

இன்பம் 27).

ஆனால், இந்த முறையைப் பயன்படுத்துவதற்கு உரிய பயிற்சி அவசியம்.

அதாவது, ஒரு நெசவாளியின் திறனைப் போல கைகளும் வாயும் ஒரே நேரத்தில்

வெவேறு வகையாக இயங்க வேண்டும்.

மிகத் தெளிவாகத் திட்டமிட்டு நடத்தப்படுகின்ற ஒரு இன்பத் தாக்குதல்

இது. அடுத்த பிறவியிலும் கூட இந்த ஆணையே கணவனாக அடைய வேண்டும்

என்று பிரார்த்திக்கும் அளவிற்கு கணவனின் மீது அன்பை ஏற்படுத்தக் கூடியதாக

இந்த நாற்புறத் தாக்குதல் இருக்கும் என்று கூறப்பட்டுள்ளது.

இது வரை, மனைவிக்குரிய பாலின்பங்களை வழங்கி, மனநலம்

காத்து இன்புற வாழ்வதற்குரிய இருபத்தேழுக்கும் மேற்பட்ட தந்த்ரா

வழிமுறைகளைப் பார்த்து விட்டீர்கள். மேற்கண்ட தந்த்ரா

வழிமுறைகளின் மூலமாக நிகழும் பாலின்பங்கள் ஏற்படுத்தும்

அதிசயங்களை எப்படிப் பட்ட பரிசாலும் இல்லற வாழ்வில் நிகழ்த்தி விட

முடியாது.

இவை தவிர, ஆழப் புள்ளி இன்பம், ***(“Deep Spot”***

***Orgasm)*** ஆசனப் புள்ளி இன்பம் ***(Anal orgasm),*** முஷ்டி இன்பம்

என்றெல்லாம், இன்னும் பல இன்பங்கள் பெண்ணுக்கு இருக்கின்றன.

ஆனால், விழிப்புணர்வற்ற நிலையில் ஆண் செயல் படும் போது

அவையெல்லாம் பெண்ணின் உடலுக்கு மறைமுகமாகத் தீங்கு

விளைவிக்கக் கூடியவை.

கரணம் தப்பினால் மரணம் என்பதைப் போல, கவனம் சிதறினால்,

பெண்ணின் உடலில் நோய்த் தொற்றை ஏற்படுத்தும் அபாயம் அந்த இன்பங்களை

நிகழச் செய்யும் வழிமுறைகளில் மறைந்திருக்கிறது. ஆகவே, பெரும்பாலான

ஞானியர் அவற்றை யாருக்கும் பரிந்துரைப்பதில்லை.

இன்பம் துய்த்தல் என்பது ஒரு கலை. எந்த ஒரு கலையும் கற்கப் பட

வேண்டியது. மேலும் இது அன்பு என்னும் கடவுளையே உருவாக்கக் கூடியது.

ஆகையால், மிகவும் கவனத்தோடு கற்கப்பட வேண்டியது. உணர்வு

நிலையிலேயே செயல் பட வேண்டியது மிகவும் அவசியம்.

ஏனெனில் தன்னுணர்வற்ற நிலைக்குள் ஆண் விழுந்து விட்டால்,

அவனுடைய உயிர் நீர் வெளியிலேயே வெளியேறி விடும். அதாவது லிங்கம்,

யோனிக்குப் படாத நிலையிலேயே கூட இது நிகழ்ந்து விடக்கூடும்.

அவ்வாறு உயிர் நீர் வெளியேறி விட்டால் ஆணின் ஆர்வம் குறைந்து

போய்விடும். சில நேரங்களில் இன்பத்துய்ப்பின் மீது ஆணுக்கு வெறுப்பே கூட

வந்து விடும்.

தொடர்பு நிலை மிகவும் முக்கியம். இன்பமாக இருப்பது எது? என்பதை

ஒரு பெண் வாய் திறந்து சொல்லாமலே தெரிந்து கொள்வது சற்று கடினம். உடல்

மொழி கற்காத ஆண்கள் கேட்டுத் தெரிந்து கொண்டு செயல் படுவது நல்லது.

மனைவியின் உடலை ஆராதிக்கும் ஆர்வம் எப்போதும் இருக்க வேண்டும்.

அது குறைந்தால் இன்பம் துய்த்தல் என்பது ஒரு வேலையாகி விடும். அதனால்,

சர்ச் சல்லாபங்களுக்கு இடமில்லாமற் போய்விடும்.

சரச சல்லாபம் இல்லாமல் போகும் போது ஏற்படும் வெற்றிடமானது,

அரட்டைகளால் நிரப்பப் படும். அரட்டை வாக்கு வாதங்களாகி சண்டை

சச்சரவுகளில் முடியும். நிம்மதியான தூக்கம் பறி போகும்.

அதனால், மோசமான உணர்ச்சி சார்ந்த எண்ண அலைகள் உருவாகும்.

மோசமான எண்ண அலைகள் மோசமான விளைவுகளை உருவாக்கும் நபர்களை

வாழ்க்கையை நோக்கி ஈர்த்து வந்து விடும். ஆகவே, மனைவியின் உடலை

ஆராதிப்பதில் சோர்வடையக் கூடாது.

பெண்ணின் எண்ணங்களைக் கொல்லுமுன் முக்கிய பாகங்களைத் தொட

முயற்சிக்கக் கூடாது. ஏனெனில் அது அடுத்தடுத்த எண்ண அலைகளை

ஏற்படுத்திக் கொண்டேயிருக்கும். மனம் எண்ண அலைகளால் நிரம்பி வழியும்

வரை பெண்ணின் பாலுணர்வு தலை தூக்காது.

பெண்ணின் உடலில் உச்ச கட்ட இன்பத்தை நிகழச் செய்வதென்பது ஒரு

கலை, அதன் பெயர் தான் மன்மதக் கலை. அதைக் கற்று விட்டோம் என்கிற

ஒரே காரணத்தால், குறுகிய கால அளவிலேயே மனைவியின் உடலில்

இந்த
இன்பத்தை நிகழ்த்த கணவன் முயற்சிக்கக் கூடாது.
அவசரத்தைக் கண்டால், நிகழாமல் நழுவிச் செல்லும் இயல்புடையது
பெண்ணின் இன்பம், மேலும் இன்பமே நிகழ்ந்தாலும், அதன் தாக்கம்
குறைவாகவே இருக்கும். விரைவில் மறந்தும் போகும்,
ஆகவே, இன்பம் நிகழ எந்த அளவிற்கு கூடுதலான நேரமாகிறதோ அந்த
அளவிற்கு அந்த இன்பம் மனதைக் கிறங்கடிக்கக் கூடியதாக, பேரின்பப் பரவசப்
பேரானந்தத்தைப் பெண்ணுக்கு அளிக்கக் கூடியதாக இருக்கும்.
மேலும், மனதைக் கிறங்கடிக்கடிக்கிற, பேரானந்தத்தை அளிக்கக் கூடியதாக
அந்த உச்சகட்ட இன்பம் இருந்தால் தான், அடியாழத்திலிருந்து பெண்ணுக்கே
தெரியாமல் அரித்துக் கொண்டிருக்கின்ற மோசமான, தாழ்வான, எதிர்மறையான
எண்ணங்களிலிருந்து, பெண்ணின் ஆழ் மனதை விடுவிக்கக் கூடிய
ஆற்றலுடையதாக, சக்தியுடையதாக அந்த இன்பம் இருக்கும்.
பெண்ணின் உடல் இன்பம் துய்க்கத் தயாராகி விட்டது என்பதை அறிவிக்க,
யோனியில் உருவாகக் கூடியது இன்பத்தேன், வியர்வையைப் போல், இயற்கையாக
உருவாகிற ஒரு உயவுப் பொருள் இது. இரு பாலரின் உறுப்புக்களையும்
எரிச்சலிலிருந்து காப்பதற்காக இயற்கை வழங்கியுள்ள ஒரு கொடை இது.
ஆகவே, இன்பத்தேன் கசியும் முன், யோனியைப் பற்றி ஆண் எண்ணிக்
கூடப் பார்க்கக் கூடாது.
அதன் பின் உராய்வால் ஏற்படும் உணர்வால் வழிந்து வரக்கூடியது

யோனியின் மதன பானம், இன்பத் தேனைக் காட்டிலும் மதன பானம் அளவில்

சற்று அதிகமாக இருக்கும். ஏனெனில், இது யோனியில் உள்ள சுரப்பிகளிலிருந்து

ஈரக்கக் கூடியது. இன்பத்தை நெருங்கும் வேளையில் ஏற்படக்கூடிய வேகமான

உராய்வை எதிர்கொள்வதற்காக இயற்கை வழங்கியுள்ள மற்றொரு கொடை இது.

அதன் பின் உச்சகட்ட இன்பத்தின் போது பீறிட்டு வரக்கூடியது அமிர்தம்.

முதலிரவுச்சடைச், காட்டிலும் அதிக அளவில் உருவாகக் கூடியது. ஆனால், இன்பத்

தேனையும், மதன பானத்தை யும் விட அடர்த்தி குறைந்தது.

யோனிக்கும், மதன பீடத்திற்கும் இடைப்பட்ட பகுதியில் இது உருவாகி,

ஆணின் உயிர்நீரைப் போன்றே, சிறுநீர்ப் புழை வழியாக வெளி வருகிறது.

இவ்வாறு பாலின்பத்தோடு தொடர்புடைய இவை சக்தி பானங்கள் என்று

அழைக்கப் படுகிறது. இந்த பானங்களை அருந்துவது ஆணின் சக்தியாற்றலை

பன்மடங்கு அதிகரிக்கக் கூடியது என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

பசி ஏற்படும் போது வயிறு தான் அந்த உணர்வை உணர்கிறது. உரிய

வேளையில் உணவருந்த முடியாத நிலை ஏற்படும் போது குடல் தான்

பாதிக்கப்படுகிறது.

அதே போல, பாலின்ப உச்சகட்ட இன்பங்கள் நிகழாதபோது ஏற்படக் கூடிய

ஏக்கமும், எரிச்சலும், விரக்தியும், வேதனையும் கோபமும், குரோதமும்,

யோனியினுள் உள்ள பிரம்மஸ்தான பகுதியில் உள்ள உயிரணுக்களில் தான் பதிவு

செய்து வைக்கப்படுகிறது.

இரத்த ஓட்டம் எவ்வளவு அதிகமாக நிகழ்கிறதோ அவ்வளவிற்கு அந்தப்

பகுதியில் உள்ள உயிரணுக்கள் பலம் பெறும். நலமாய் இருக்கும். செழுமையாகவும்

இருக்கும், அந்தப் பகுதியில் அதிகமான இரத்த ஓட்டம் நடைபெற

வேண்டுமானால், பெண்ணின் உடலில் உச்ச கட்ட இன்பங்கள் ஏற்பட வேண்டும்.

அது நிகழாத வரை பெண்ணின் குரோதம் குறையாது.

ஜீ பூம்பா பூதங்கள் எதுவும் இங்கே வேலை செய்வதில்லை,

பெண்ணின் உடலில் உச்ச கட்ட பாலின்பம் நிகழும் போது, உடலின் பால்

அழுத்தம் வெளியேறுகிறது. பால் அழுத்தம் வெளியேறும் போது, உடலின்

இறுக்கமும் தளர்கிறது. மனதின் இறுக்கமும் தளர்கிறது அதனால்

அடுத்தவர்களோடு பழகும் திறன் மட்டுமல்ல. அவரவர் மனதுடன் அவரவர்க்கு

உள்ள உறவும் கூடச் சிறப்படைகிறது.

மனதைக் கிறங்கடிக்கும் உச்சகட்ட இன்பம் மருத்துவரை

தேவையற்றவராக்கும். இது பெண்ணுக்கும் பொருந்தும்.

இது ஏதோ பாலுறுப்புகள் மட்டும் சம்மந்தப்பட்ட ஒரு விவகாரமல்ல, ஆண்,

பெண் என இருவருடைய உடல்களும் இன்பத்தை அனுபவிக்கும் வகையிலேயே

படைக்கப்பட்டிருக்கிறது. அதே போல் இன்பம் கிடைக்காத போது

இறுக்கமடையும் தன்மையுடனும் தான் படைக்கப்பட்டிருக்கிறது.

தாம்பத்ய இன்பங்கள் இல்லாத தாம்பத்ய வாழ்க்கையின் பெயர் தான் நரக

வாழ்க்கை, பாலைவன வாழ்க்கை. இதில் பாலின வேறுபாடு கிடையவே

கிடையாது. பாலின்பமற்ற வாழ்க்கை பாலைவன வாழ்க்கை, வள்ளுவர் சொல்வது

போல் நெருப்பிலே குளிப்பதைப் போன்றது அது.

பெண்ணின் முதல் இன்பம் நிகழத் தான் அதிக நேரமாகும். அதன் பின்

அடுத்தடுத்த நிமிடங்களில் தொடர்ச்சியாக இன்பங்கள் நிகழ்ந்து

கொண்டேயிருக்கும்.

ஒவ்வொரு ஆணும் தெரிந்து கொள்ள வேண்டிய மிக முக்கியமான தகவல்

என்னவென்றால், பெண்ணின் மனதை மகிழ்விக்காமல், அவளுடைய உடலில்

உச்சகட்ட இன்பத்தை நிகழ்த்த முடியாது. அதாவது, பகலில் நாலு திட்டுத் திட்டி

விட்டு இரவில் இன்பத்தை நிகழ்த்த முடியாது.

உதாரணமாக தன்னுடைய ஒரே குழந்தையை ஒரு விபத்தில் பலி கொடுத்த

ஒரு தாயின் உடலில் சில மாதங்களுக்கு எந்தக் கொம்பனாலும் உச்சகட்ட

இன்பத்தை நிகழ்த்த முடியாது. அல்லது இன்பத்தை நிகழ்த்த மிகவும் போராட

வேண்டியிருக்கும்,

அதனால் தான் மனதை இக்கணத்திற்குக் கொண்டு வர வேண்டும்.

அப்போது தான் உச்சகட்ட இன்பம் நிகழும் என்று திரும்பத் திரும்பச் சொல்லப்

படுகிறது.

அவ்வாறு மனதை இக்கணத்திற்குக் கொண்டு வருகிற முயற்சி தான் முன்

விளையாட்டுகள் என்று அழைக்கப் படுகிறது. மனநிலை மகிழ்ச்சியாக இருக்கும்

போது இருபது நிமிடங்களில் நிகழக்கூடிய இன்பம் மனம் வருத்தத்தில் இருக்கும்

போது நாற்பது நிமிடங்களை எடுத்துக் கொள்ளும்.

பெண்ணின் மனதை மயக்கி விட்டால், உடலில் இன்பங்கள் நிகழ்ந்து

கொண்டேயிருக்கும். உடல்நலமும் மனநலமும் ஒருங்கே கொண்ட ஒவ்வொரு

பெண்ணின் உடலும் ஈடுபடும் ஒவ்வொரு முறையும் பன்முறை நிகழும் உச்சத்தை

அனுபவிக்கும் வகையில் தான் இயற்கையால் வடிவமைக்கப் பட்டுள்ளது.

ஆனால், மனதைக் காயப்படுத்தி விட்டு, விடிய விடியப் போராடினாலும்,

அன்றைய தினம் உச்சகட்ட இன்பம் நிகழாது.

தந்திரா வழியில் இன்பத்துய்ப்பில் ஈடுபட்டிருக்கும் போது கடைப்பிடிக்க

வேண்டிய முக்கிய விதிகளில் ஒன்று, மனைவியாகச் சொல்லாமல், செய்து

கொண்டிருக்கும் செயலை மாற்றிச் செய்யக் கூடாது. அடுத்தது செய்து

கொண்டிருக்கும் செயலின் வேகத்தைக் குறைப்பதும் சரி, அதிகரிப்பதும் சரி,

மனைவியால் உணர முடியாத வகையில் தான் எந்தவொரு மாற்றமும் நிகழ

வேண்டும்.

இதற்கான சூத்திரம் எதையுமே திடீரென்று மாற்றி னாலோ,

வேகத்தை அதிகரித்தாலோ, அல்லது குறைத்தாலோ மனைவியின்

உடலில் நிகழவிருக்கின்ற பாலின்பம் நழுவிப் போய் விடும். அதன்பின்

எவ்வளவு தான் முயற்சித்தாலும் அன்றைய தினத்தில் இன்பம் நிகழாது.

வலியும், எரிச்சலும் மட்டுமே மிச்சமாகும்.

மறக்கக் கூடாத விதிகள்.

1) மூளை தான் உண்மையான பாலுறுப்பு.

2) மூளையை மயக்காத வரை பெண்ணின் உடலில் இன்பம் நிகழாது.

3) மனைவிக்கு எது பிடித்திருக்கிறது என்பதைக் கேட்டுத் தெரிந்து கொண்டு

செயலாற்றவும்.

4) மனைவிக்குப் பிடிக்காத எந்த வழி முறையிலும், உச்ச கட்ட இன்பத்தை

நிகழ்த்த முடியாது.

5) கணவனின் செயல் மனைவிக்குப் பிடிக்கவில்லையென்றால், முன்

விளையாட்டுக்கள் போதவில்லை என்று பொருள்.

6) இங்கே சொல்லியுள்ள படி, தந்த்ரா பூஜைகளைச் செய்தால் எப்படிப்பட்ட

பெண்ணின் மனமும் இக்கணத்திற்கு வந்து விடும்.

7) ஆகவே, தந்த்ரா பூஜைகளைச் செய்ய சிக்கனம் கூடாது.

8) மனைவியின் உடல் எவ்வாறு எதிர்வினை ஆற்றுகிறது என்பதை விழிப்புடன்

கவனித்த படியே செயலாற்றவும்.

9) குறிப்பாக மனைவியின் சுவாசத்தைக் கவனித்த படியே செயல் படவும்.

10) செயல்படும் விதத்தை மாற்றிக் கொண்டேயிருக்கக் கூடாது.

11) வேகம் என்பது வியாதி. எனினும், உச்ச கட்ட இன்பம் நெருங்கும்

வேளையில் வேகத்தைச் சற்றே அதிகரிக்கலாம்.

12) வேக மாற்றத்தை மனைவியின் மூளை அறிந்து விடக் கூடாது.

13) மனைவிக்குரிய இன்பம் நிகழும் முன்பாக கணவன் தன்னுடைய

இன்பத்தைப் பற்றி எண்ணிக் கூடப் பார்க்கக் கூடாது.

14) பகலிலேயே ஒரு குறிப்புச் செயலின் மூலம் தெரிவித்து, மனைவியின்

மூளையில் ஒரு எதிர்பார்ப்பை உருவாக்கி விட வேண்டும்.

15) இன்பத்துய்ப்பு ஒரு தவம். ஆகவே, நேர அளவுகளை நிர்ணயித்துச் செயல்

படக் கூடாது.

16) எடுத்தவுடன் முக்கிய பகுதிகளைத் தொடக் கூடாது. அதே போல,

எடுத்தவுடன் லிங்கத்தைப் பயன்படுத்தக் கூடாது. தனியொரு லிங்கத்தால்,

மனைவிக்குரிய எந்த இன்பத்தையும் வழங்க முடியாது.

17) மனைவியை வற்புறுத்தி இன்பம் துய்க்கக் கூடாது.

18) நாவையும், விரலையும் பயன்படுத்த ஒரு போதும் தயங்கக் கூடாது.

19) இன்பத் துய்ப்பின் போது, ஆணாதிக்கவாதியாகச் செயல் படக் கூடாது.

20) துய்ப்பு முடிந்தவுடனே கழிவறை நோக்கி ஓட்டம் பிடிக்கக் கூடாது.

21) மாதாமாதம் ஈடுபடும் முறைகளை மாற்றிக் கொண்டே இருக்கவும்.

22) படுக்கையறையில் ஐந்து வயதிற்கு மேலான குழந்தை இருக்கக் கூடாது.

23) அரவம் கேட்டால் ஆணுக்கு இன்பம் நிகழ்ந்து விடும். மனைவியின் இன்பம்

நழுவிப் போய் விடும்.

24) நல்லுறவு இல்லாத போது தான், பாலுறவு முக்கியம்.

25) உச்ச கட்டப் பாலின்பம் உருவாக்கும் அன்பையும், அதிசயத்தையும்

வேறெந்த மந்திரத்தாலும் இல்லற வாழ்வில் ஏற்படுத்த முடியாது.

26) அன்பை உருவாக்குவதில் இன்பத் துய்ப்பிற்கு இணை எதுவுமே இல்லை.

27) வறண்ட பாலுறவு பகையை உருவாக்கும், உயவுப் பசையோடு நடைபெறும்

பாலுறவே அன்பை உருவாக்கும்.

28) வாய் துர்நாற்றம் ஆகவே ஆகாது.

29) படுக்கையறை பூஜையறையைப் போலச் சுத்தமாக இருக்க வேண்டும்.

30) முன் தூங்கிப் பின்னெழுவதை வழக்கமாக்கிக் கொள்ளக் கூடாது.

31) எண்பது வயதிலும் பெண்ணுக்குரிய மதனபீட இன்பம் நிகழும்.

32) கணவனால் எந்த வயதிலும் தன் மனைவியைப் பால் ரீதியாகத் திருப்திப்

படுத்த முடியும்.

33) தன்னம்பிக்கை உள்ள வரை லிங்கம் சாயாது. லிங்கம் சாயாத வரை ஆண்

எடுத்த காரியத்தில் தோற்க மாட்டான்.

34) காதற் தசை நார்ப் பயிற்சியை இருவரும் தினம் தவறாமல் செய்யவும்.

35) ஆழமான, நீண்ட, ஆசுவாசமான சுவாசம் மிகவும் முக்கியம்.

36) துரித ஸ்கலிதம், விந்து முந்துதல் ஆகிய இரண்டின் விரோதி ஆழ்ந்த சுவாசம்.

36) மந்திரச் சொல்லைப் பயன்படுத்திய படியே இயங்கப் பழகவும்.

37) ஒன்றுக்கு இரண்டு முறை நுணுக்கங்களைப் படித்துக் கொள்ளவும்.

38) பெண்ணின் பால் மண்டல படங்களை மனதில் பதித்துக் கொள்ளவும்.

39) மது, புகையிலை போன்ற போதைப் பழக்கங்களை விட்டு விட வேண்டும்.

40) அதற்குச் செலவளிக்கும் பணத்தை, ஊட்டச்சத்து மிக்க உணவை

உட்கொள்ளப் பயன் படுத்த வேண்டும். அதன் மூலம் பாலாற்றலை

வளர்த்துக் கொள்வதோடு, கொலைகார நோய்களிருந்தும் தப்பிக்கலாம்.

ஆயுளையும் அதிகரித்துக் கொள்ளலாம்.

41) இன்பத் துய்ப்பு என்பதை ஒரு மணி நேரத்திற்கும் குறைவாக முடித்துக்

கொள்ளக் கூடாது.

42) பாலுறவைப் பற்றிக் கீழ்த்தரமாகக் கருதக் கூடாது.

43) பூஜைகளின் போது, வாக்குவாதங்களுக்கு இடமளிக்கக் கூடாது.

44) வயிற்றைக் காலி செய்தபின் பூஜையைத் துவக்குவதே நல்லது.

45) தொடர்ந்து ஐந்தாறு முறை மனைவிக்குரிய உச்சகட்ட இன்பம்

நிகழாவிட்டால், உரிய அறிஞரைச் சந்தித்து ஆலோசனை பெறத் தயங்கக்

கூடாது.

46) மோசமான பாலுறவை விட பாலுறவு இல்லாமல் இருப்பதே மேல்.

47) மனைவிக்குரிய முதல் இன்பம் நிகழ்ந்து முடியும் வரை, லிங்கத்தைப்

பயன்படுத்த கணவன் ஒருபோதும் முயற்சிக்கக் கூடாது.

48) கணவன் மனைவிக்கிடையே சண்டை, குழந்தையை வதைத்தல், மாமியார்

மருமகள் சண்டை, தேவையற்ற அழுகை, பாலுறவில் ஈடுபட மறுத்தல்,

சந்தேகம், கள்ளக் காதல் போன்றவை எந்தக் குடும்பத்தில் நடந்து

கொண்டிருக்கிறதோ, அங்கே வாழும் பெண் போகப் பொருளாக நடத்தப்

படுகிறாள் என்று பொருள்.

49) பெண்ணின் உடலில் ஏற்படும் பாலின்ப ஏக்கம் தணிக்கப் படாத போது.

ஏமாற்றம் உருவாகிறது. தொடர் ஏமாற்றத்தால், எவ்வளவு இருந்து என்ன

பயன் இந்த இன்பம் இல்லையே என்கிற விரக்தி ஏற்படுகிறது. விரக்தி

நிலையே தொடரும் போது, கணவனின் மீது வெறுப்பு ஏற்படுகிறது. அந்த

வெறுப்புணர்ச்சி தான் கணவனின் ஒவ்வொரு செயலிலும் குறை காண

வைக்கிறது. மேலும், முன்கோபமாக, சிடுசிடுப்பாக, அந்த வெறுப்புணர்ச்சி

கசிந்து வெளியேறுகிறது. அது தான் இல்லற வாழ்வில் நிலவும் சண்டைகள்

அனைத்திற்கும் மூல காரணம்.

அல்லது இப்படியும் சொல்லலாம். பெண்ணின் உடலில் ஏற்படும் பாலின்ப

ஏக்கம் தணிக்கப் படாத போது ஒரு வகைப் பால் அழுத்தம் உடலில்

ஏற்படுகிறது. அந்த அழுத்தம் தான் கிடைக்கிற வாய்ப்பைத் தவற விடாமல்

பயன்படுத்திக் கொண்டு, ஒரு சீற்றச் செயலாக வெளியேறுகிறது. அது தான்

இல்லற வாழ்வில் நிலவும் சண்டைகள் அனைத்திற்கும் மூல காரணம்.

50) மனைவிக்குரிய உச்ச கட்ட இன்பங்களை வழங்காத கணவனுக்கு

மனைவியோடு பாலுறவு கொள்ளும் உரிமை இல்லை.

மேற்கண்ட விதிகளை மறந்து விடாதீர்கள். இவற்றை மறக்காமல் வாழக் கற்றுக் கொண்டால், வாழக்கிடைத்த இல்லற வாழ்வை இன்புற வாழலாம். மேற்கொண்டுள்ள பணி மற்றும் தொழில் வாழ்க்கையிலும் கவனமுடன் செயலாற்றலாம். அதன்மூலம் புற வெளியிலும் வெற்றி கரமான மனிதராகத் திகழலாம். அதோடு நீண்ட காலம் நோய் நொடியின்றி வாழ்ந்து கொண்டிருக்கலாம். இவை காரணமாய், குழந்தைகளும் சிறந்த குடிமக்களாக உருவாகி, வெற்றிகரமானவர்களாக நீண்டகாலம் வாழ்ந்து கொண்டிருப்பார்கள்.

ஒரு தந்த்ரா ஞானியின் தனிப்பட்ட அனுபவம்.

ஒரு தந்த்ரா ஞானியின் அலாதியான அனுபவம் இது. எளிதில் நம்ப முடியாததும் கூட. ஆம், பேருண்மைகள் அனைத்தும் எளிதில் நம்ப முடியாதவை. அப்படிப்பட்ட ஒரு பேருண்மையை ,ஆதாரபூர்வமாய்த் தெரிவிக்கும் பொருட்டே, தனிப்பட்ட அனுபவம் ஒன்று இங்கே பகிர்ந்து கொள்ளப் படுகிறது.

அடுத்தவர்களுக்கு அது ஒரு வீடுதி. ஆனால், அந்த ஞானிக்கோ ,அது தான் ஆராய்ச்சிக் கூடம், கட்டணம் பத்தாயிரம் ரூபாய். நேரம் காலை பத்து மணி முதல், மாலை ஆறு வரை. குளிர்சாதன அறை. மதிய உணவு. மூன்று முறை தேனீருடன் சிற்றுண்டி. இவற்றோடு அவரால் தேர்வு செய்யப்படும் ஒரு பெண்.

-அவருடைய அன்றைய தேர்வு பத்மினி வகையின் குதிரைப் பிரிவைச் சேர்ந்த பெண், அவள் ஒரு இரவு நேர நடன மங்கை. இரவு நேர நடனம் தடை செய்யப் பட்டதால், பழம்பெரும் தொழிலுக்குள் நுழைந்தவள்.

அரை மணி நேரம் பொதுவான அறிமுகம். அதன்பின் அவளுடைய

பூர்வீகம், அங்கிருந்து மும்பை வந்து சேர்ந்த விதம், அவளுடைய கல்வி,

தற்போதைய நிலவரம் என உரையாடல் தொடர்ந்த போது, தேனிர் வந்தது.

அதன்பின் மும்பை தருகின்ற ஆனந்தங்களும் துயரங்களும், வருமானம்,

பிற பெண்களைப் போல வாழ்வதில் உள்ள ஆர்வம், குழந்தை, கணவன்,

பெற்றோர், உடன் பிறந்தோர், உறவுகள், கனவுகள், எதிர்காலம், முதுமை

பேசத் தொடங்கிய போது, அவளுடைய கண்களில் நீர் கோர்க்கத் துவங்கியது.

அவளை அழைத்துத் தன் மடியில் அமர வைத்து, ஆறுதலாகத் தலையை

வருடிய படியே, அந்த ஞானி பேசத் துவங்கிய போது, தேம்பத் துவங்கிய அவள்,

மதிய உணவின் போது கதறத் தொடங்கி விட்டாள். கபடமற்ற அன்பின் முன்,

அழாமல் பேச, யாராலும் முடியாது.

பெண்ணின் மனம் முழுவதும் படிந்து கிடந்த வேதனை அழுக்கை,

அழுகையின் மூலம் கழுவியெடுத்த பின், அவளது உடலையும் தானே

குளிப்பாட்டி, மதிய உணவுக்குப் பின், தந்த்ரா ஆராய்ச்சியில் இறங்கினார்.

தந்த்ரா வழிமுறைகளில் அவர் நிபுணர். ஆகவே, பொன்னுக்குரிய இன்பங்

களில் பெரும்பாலானவை தானாக நிகழ்ந்தன, நேரம் ஆறு மணியை நெருங்கிய

போது, குறட்டை விட்டு ஆனந்தமாய் உறங்கிக் கொண்டிருந்த அப்பெண்ணை

எழுப்பி, தன் அன்பளிப்பாக ஆயிரம் ரூபாயை அவளுக்கு வழங்கினார்,

அன்பளிப்பு தான் ஊதியத்தை விட அதிக வருவாயாக இருக்கும் என்று

காலையில் சொன்ன அந்தப் பெண், வாடிக்கையாளார் தந்த அன்பளிப்பை வாங்க

மறுத்தாள். அதோடு, ஆறு நாட்கள் தங்கப் போவதாகக் கூறினீர்களே! நாளையும்

என்னையே தேர்வு செய்ய முடியுமா? என்று ஒரு எதிர்பார்ப்போடு வினவினாள்,

அனைத்து வகைப் பெண்களையும் ஆராயும் போது தான், பொதுவான

தந்த்ரா உண்மைகளை ஆதாரபூர்வமாக அறிந்து கொள்ள முடியும் என்பதால்,

தந்த்ரா ஞானியர் ஒரே பெண்ணை மையமாய்க் கொண்டு இயங்குவதில்லை,

மேலும், ஒரே பெண்ணுடன் தந்த்ரா ஆராய்ச்சியில் ஈடுபடுவது ஆபத்தானது.

ஏனெனில், பெண்ணின் உடலில் தொடர்ச்சியாகப் பாலின்பம் நிகழ்வதன்

காரணமாகப் போரன்பு உருவாகி, அது பேய்த்தனமான பாசமாக மாறி விடும்.

அதனால், அந்த ஞானியைப் பிரிய அவள் மறுத்து விடுவாள். ஒரு விவாகம்

ரத்தாகும் துர்ப்பாக்கிய சூழலில், தன் சின்னஞ்சிறு குழந்தையைத் தன்

விருப்பத்திற்கு ஏற்பப் பார்க்க முடியாமல், பேச முடியாமல், விளையாட முடியாமல்

தந்தையாகப் பட்டவன் தவிப்பதைப் போல், அந்தப் பெண் தவித்துப் போவாள்.

அந்தத் தவிப்பு தருகின்ற மன வலியால், தன்னுணர்வற்ற நிலையில், அந்த

ஞானியைச் சந்திக்கு இழுத்து விடுவாள். ஆகவே அவர் மறுத்தார்.

அவள் சொன்னாள். இதுவரை என்னைத் தீண்டிய ஒவ்வொரு ஆணும் என்

உடலைத் துன்புறுத்தி இன்பம் காண்பவனாகவே இருந்திருக்கிறான். நீங்கள்

ஒருவர் தான் என்னை ஒரு உயிரினமாக, சக மனுசியாக, ஏன், அதற்கும் மேலாக

ஒரு தேவதையைப் போல நடத்தியிருக்கிறீர்கள்.

மேலும், நூற்றுக் கணக்கான ஆண்கள் வழங்காத, எனக்கு அறிமுகமே

இல்லாத இன்பங்களையெல்லாம் உங்கள் உள்ளாடையைக் கூடக் களையாமலே,

எனக்கு வழங்கியுள்ளீர்கள். ஆகவே, நாளை ஒரு நாள் மட்டும் என்னையே தேர்வு

செய்யுங்கள். நான் உங்களுக்குக் கைமாறு செய்யவே கேட்கிறேன் எனக் கெஞ்சிக்

கேட்டு, அவருடைய அனுமதியைப் பெற்றுச் சென்றாள்.

அன்றலர்ந்த மலரைப் போன்ற ஒளிறும் மேனியுடன், மணப் பெண்ணுக்

குரிய வெட்கமும் மகிழ்ச்சியும் கலந்த முகத்துடன் அற்புதமான அழகுடன் அடுத்த

நாள் வந்தாள். அறைக்குள் நுழைந்ததும், மூவாயிரம் ரூபாயை எடுத்து அந்த

ஞானியின் முன் நீட்டினாள்.

உங்களிடம் கூலி பெற விரும்பவில்லை. ஆகவே, நேற்றைய உங்கள்

கட்டணத்தில் என் பங்காக வந்த பணத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள் என்றாள்.

அதை ஏற்க அவர் மறுத்தார். அதை ஓரமாய் வைத்து விட்டு வந்தாள்,

நேற்றைய தினம் என்னுடைய மகத்தான தினங்களில் ஒன்று. அதே போல

இன்றைய தினத்தை உங்கள் வாழ்வின் மகத்தான தினங்களில் ஒன்றாக நானும்

மாற்றுகிறேன் என்று கூறி, தான் கற்றிருந்த வித்தைகள் அனைத்தையும் அவருக்கு

அறிமுகப்படுத்தினாள். அவள் சொன்னதைப்போலவே, அந்த நாள் அவருடைய

வாழ்வின் மறக்க முடியாத தினங்களில் ஒன்றாக மாறிப் போயிற்று.

விடைபெறும் வேளைவந்தது. தன்னையே விற்றுப் பிழைக்கும் அந்த

ஏழை,

பணத்தை எடுத்தாள். இது என் காணிக்கை, என உத்தவிடும் குரலில் கூறினாள்.

அன்பின் உத்தரவுக்கு ஞானியும் பணிந்தார். அவ்வாறு அந்தக் கணிகையின்

காணிக்கையைப் பெற்று, ஆண்டுகள் பல ஆகி விட்டன. எனினும், புனிதப்

பொருளாய்க் கருதி, இன்றும் அதைப் பூஜித்துக் கொண்டிருக்கிறார் அந்த ஞானி!

அவர் கூறுகிறார். தன்னை ஒரு உயிரினமாக மதிக்கின்ற, சக தோழியாக

நடத்துகின்ற, தனக்குரிய பாலின்பங்களை வழங்குகின்ற ஆணின் மார்பில்

சரணடைந்து வாழத்தான் பெண் விரும்புவாளே தவிர, தன்னவனை இழக்கவோ,

எதிர்த்துப் போரிடவோ, உரிமைகள் கோரவோ ஒரு போதும் முனைய மாட்டாள்.

பணத்தையும், இன்பத்தையும் தருவதுமட்டுமல்ல, தன் தோழனுக்காக உயிரைத்

தரவும் பெண் தயங்க மாட்டாள். இது தான் பெண்ணின் இயற்கைப் பண்பு.

இதை மட்டும் ஆண்கள் புரிந்து கொண்டால் போதும். தங்கள்

இல்லற வாழ்வை இன்புற வாழலாம். அதன் மூலம் புற வெளியிலும் பல

வெற்றிகளைப் பெற்று, நிம்மதியாக, நீண்ட காலம், நோய் நொடியின்றி,

வாழ்ந்து கொண்டிருக்கலாம்.

## முடிவுரை.

மேற்கத்திய நாடுகளில் திருமணம் ஏறக்குறைய காலாவதியாகி விட்டது.

பெரும் செல்வந்தர்கள், கல்வியாளர்கள், பொறுப்பான பதவிகளில் இருப்பவர்கள்,

பழம் பெருமை வாய்ந்த குடும்பங்களைச் சேர்ந்தவர்கள் என முப்பது

சதவீத மக்கள்

மட்டுமே அங்கே குடும்பமாக வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அதனால், குடும்ப

அமைப்பு முறை அங்கே அழிவின் விளிம்பில் இருக்கிறது.

ஆணும் பெண்ணும் தேவைக்கேற்ப கூடி வாழ்வதும், தேவை முடிந்ததும்

பிரிந்து போவதும் அங்கே பெரும்பாலான மக்களுடைய வழக்கமாகி விட்டது.

தந்தை யாரென அறியப் படாமலே குழந்தைகள் பிறக்கத் தொடங்கி விட்டன.

இது ஒன்றும் இது வரை வாழ்ந்து பார்க்காத ஒரு புதிய கலாச்சாரம் அல்ல, கற்கால

வாழ்க்கை முறை தான் இது.

அதனால், ஒரே ஆணுக்குப் பிறந்த குழந்தைகளுக்கிடையிலும், தந்தைக்கும்

மகளுக்குமிடையிலும் பாலுறவு நிகழக்கூடிய காலம் அங்கே வெகு தொலைவில்

இல்லை. இது தான் அசல் காட்டு மிராண்டிக் கலாச்சாரம்.

அதை நோக்கி அந்த நாடுகள் வெகு வேகமாகப் பயணித்துக்

கொண்டிருக்கின்றன. அதற்கான அடையாளமாகத் தான், ஆறில் ஒரு பெண்

அங்கே வீடு புகுந்து கற்பழிக்கப் பட்டவளாக இருக்கிறாள்,

குடும்ப அமைப்பு இவ்வாறு சிதைந்து கொண்டிருந்தாலும், மிகப் பெரிய

கலவர பூமியாக அந்த நாடுகள் மாறாமலிருப்பதற்கு பல காரணங்கள்

இருக்கின்றன, முதற் காரணம் அங்கே வாழும் மக்களிடையே ஏராளமான இன

பேதங்களோ அல்லது ஏராளமான மொழிப் பிளவுகளோ இல்லை. மத ரீதியாக

அவர்கள் ஒன்று பட்டிருக்கிறார்கள். மதம் அவர்களை ஒன்றிணைத்து.

வைத்திருக்கிறது.

மேலும், குளிர் பிரதேசங்களில் இறப்பு விகிதத்திற்கேற்ப பிறப்பு விகிதம்

அமைவதில்லை. அதனால், மக்கள் தொகையை அதிகரிக்க வேண்டிய கட்டாயம்

அங்கே இருக்கிறது. ஆகவே கற்பழிக்கப் படுவதன் மூலம் கருவுற்றால் கூட,

அதை வரவேற்க வேண்டிய நிலையில் அரசாங்கங்கள் இருக்கின்றன,

ஆனால், இந்தியாவைப் போன்ற இன ரீதியாக, மொழி ரீதியாக, மத ரீதியாக,

கலாச்சார ரீதியாக, ஜாதி ரீதியாக, அரசியல் கட்சிகள் ரீதியாக, நடிகர்களின் ரசிகர்

மன்றங்கள் ரீதியாக மற்றும் ஏதேதோ பெயர்களில் மக்களுக்கிடையே

எண்ணற்ற பேதங்கள் மிகுந்துள்ள ஒரு தேசத்தில் குடும்ப அமைப்பு

சிதைவுறுவது என்பது நல்ல அறிகுறி அல்ல,

இந்தியாவின் குடும்ப அமைப்பு மேற்கத்திய நாடுகளைப் போலச் சிதையும்

போது, நாட்டில் சட்டம் ஒழுங்கைப் பராமரிக்க முடியாது என்பது மட்டுமல்ல,

நாடே சிதறிப்போய் விடும். அல்லது நாடு மீண்டுமொரு முறை அடிமைப்பட்டு

வீடும்,

உதாரணமாக வீடலைப் பருவத்தில் தோன்றும் ஒரு இனக் கவர்ச்சிக் காதல்

ஒரு மாவட்டத்தில் வாழும் கோடிக்கணக்கான மக்களின் நடமாடும் உரிமையை,

கூடி நிற்கும் சுதந்திரத்தைப் பறிக்கக் கூடிய வலிமை மிக்கதாக இருக்கிறது.

குடியிருப்புகள் கொளுத்தப்படுகின்றன. வாழ வேண்டிய ஆசைகள் வலுக்

கட்டாயமாகச் சாகிறார்கள், இரவள்ளாடு சமூகங்களிடையே பகை மூண்டு, புகைந்து

கொண்டேயிருக்கிறது.

விடலப் பருவத்தில் தோன்றக்கூடிய இயல்பான, இனக் கவர்ச்சிக்

காதலைக் காப்பாற்ற ஒரு மாநில அரசு தனது முழு சக்தியையும் செலவிட

வெள்ளடியுள்ளது. கவனப் பிசாசின்றி காவல் காக்க வேண்டியுள்ளது. அப்படிக்

காப்பாற்றப் பட்டு உருவான குடும்பமும் அந்தக் காதலை உருவாக்கிய

பெண்ணாலேயே சில மாதங்களிலேயே சிதறிப் போகிறது.

காதலை எதிர்த்து தந்தையார் தற்கொலை செய்து கொண்ட போது கூடச்

சிதையாமல் குடும்பமாக மாறிய காதல், சில மாதங்களிலேயே சிதைத்து போகிறது.

ஆணையும், பெண்ணையும் இணைத்து வைத்திருந்த பசை நீர்த்துப் போய்

விடுகிறது. இருவருக்கும் இடையே கண்மூடித்தனமான அன்பை

உருவாக்கியிருந்த இரசாயனம் தன் வீரியத்தை இழந்து, செத்துப் போகிறது.

போகப் பொருளாகப் பயன்படுத்தப் படுவதால் ஏற்படுகின்ற பாலின்ப

ஆற்றாமையானது, மொத்த உலகையும் எதிர்த்துக் கொண்டு உருவாக்கிய

காதலைக் கூட கொலை செய்து விட்டு, திருமணத்தை முறித்துக் கொள்கிறது.

ஏதேதோ தலைப்புக்களின் கீழ் சிதைந்து போகிற பெரும்பாலான காதல்

திருமணங்களுக்குப் பின்னால், பெண்ணின் தணிக்கப் படாத காமம்

மறைந்திருக்கிறது. அதுதான் விவாகரத்தை நோக்கி பெண்ணை வழி

நடத்துகிறது. ஆணிகள் பாலியல் அறியாமை செய்வது அறியாமல் விழி பிதுங்கி

நின்று கொண்டிருக்கிறது.

இது தான் இயற்கையான உணர்விற்குள்ள சக்தி, பெங்களின் தாக்கப்

படாத காமம் எந்தக் கட்டமைப்பையும் சிதறடிக்கும் வல்லமை மிக்கது.

இன்றைய இந்தியாவில் குடும்ப அமைப்பு முறை சிதைவுற்று விடா

விடினும்,

அதற்கான அறிகுறிகள் தெரியத் தொடங்கி விட்டன, தம்பதியரிடையே நிலவும்

பனிப்போரும், பூசல்களும், சண்டை சச்சரவுகளும், பரஸ்பர் வெறுப்பும்,

நியாயமான காரணமற்ற பிரிவும், குடும்ப அமைப்பின் பேரிலான நம்பிக்கையைத்

தாக்கத் தொடங்கி விட்டன. ஆணின் பாலியல் அறியாமையே இதற்கான

காரணம்.

ஏதோவொன்றை எதிர்பார்த்து குழந்தைகள் திருமணத்திற்குள்

வருகிறார்கள். அவ்வாறு அவர்களால் எதிர்பார்க்கப்பட்ட அந்த ஏதோவொன்று

கிடைக்காத போது, அவர்கள் திருமண வாழ்விலிருந்து வெளியேற

முடிவெடுக்கிறார்கள். இதை விமரிசித்தல் பேதமை,

தனி நபர் தேவையை நிறைவேற்றத் தவறுகிற குடும்ப அமைப்பு

சிதறுகிறதே என ஒப்பாரி வைப்பவர்கள் கடைந்தெடுத்த பிற்போக்கு வாதிகள்

என்கிற கருத்து கூடுதலான சத்தத்துடனே உருவாக்கப்படுகிறது. பெரும்பாலும்

பெண்ணின் குரலாகவே இது இருக்கிறது.

அதை உதாசீனப் படுத்த முடியாது. ஏனெனில், ஒரு பெண்ணுக்குத் தான்

பெண்ணின் வலி தெரியும். ஆண் யூகித்துப் பார்க்கலாமே தவிர, வலியை உணர

முடியாது. அனுபவித்தவர்கள் மட்டுமே வலி தரும் வேதனையை முழுமையாக

உணர முடியும். ஆகவே, அவர்களுடைய வேதனைக் குரல் மதிக்கப் பட

வேண்டும். அவர்களுடைய எதிர்பார்ப்பு நிறைவேற்றப்படவேண்டும். நொண்டிச்

சமாதானங்களைக் கூறித் தப்பிக்கும் போக்கை ஆண்கள் கைவிட

வேண்டும்.

மனவியை போகப் பொருளாகப் பயன்படுத்தும் போக்கு முற்றிலும் ஒழிக்கப்

பட வேண்டும், அப்போது தான் இந்தியாவின் குடும்ப அமைப்பு காப்பாற்றப்

படும். இல்லாவிட்டால் அடுத்த சில தலைமுறைகளில் குடும்ப அமைப்பு

என்கிற சமூகக் கட்டமைப்பு சிதறிப் போய் விடும்.

வலிகளே புரட்சிகளின் விதைகள், பெண்ணின் விரக தாபம் தான் வலி.

இந்த தாபம் எந்தக் கட்டமைப்பையும் சிதறடிக்கும் வலிமை படைத்தது.

அதே சமயத்தில், பெண்ணின் தணிக்கப் பட்ட காமம் அவளுடைய

கணவனை தன்னிகரற்ற உருவாக்கும் சக்தியாக மாற்றும் வல்லமை மிக்கது.

பெண் இல்லாமல் ஆண் இல்லை. ஆனால், ஆன் இல்லாமல் பெண் உண்டு.

ஏனெனில், ஆணை உந்தித் தள்ளும் சக்தி பெண். ஆனால், பெண்ணை உந்தித்

தள்ளும் சக்தி குழந்தைகள்.

பெண்ணின் இன்றைய ஆதங்கங்களையும், ஆத்திரங்களையும்

வெளிப்படையாகப் பகிர்ந்து கொள்பவர்கள் நல்லவர்கள். அவர்களைப் போற்றிப்

புகழ வேண்டும், அவர்கள் தான் சமூகத்தை நோக்கி வரவுள்ள ஆபத்தை முன்

கூட்டியே தெரிவித்து எச்சரிக்கும் பணியைச் செய்கிறார்கள்.

ஆனால், ஒருவரையொருவர் சபித்த படியே ஒன்றாக வாழ்ந்து

கொண்டிருக்கும் தம்பதிகள் தான் மோசமான முன்னுதாரணத்தை ஏற்படுத்திக்

கொண்டிருக்கிறார்கள்.

தெரிந்தோ தெரியாமலோ குடும்ப அமைப்பை அழிப்பதற்கான பாதை

அவர்களால் சமைக்கப் பட்டுக் கொண்டிருக்கிறது. சபித்த படியே

ஒன்றாய்ச்

சேர்ந்து வாழ்ந்து கொண்டிருக்கும் தம்பதியரால், குழந்தைகளின் ஆழ் மனதில்

திருமணத்திற்கு எதிரான கருத்துக்கள் பதியனிடப் படுகின்றன.

ஒன்றாகக் கூடியிருக்கும் போதெல்லாம் ஓரியாடிக் கொள்வதும்,

சேர்ந்திருக்கும் நேரமெல்லாம் சண்டையிட்டுக் கொள்வதும், வாய்ப்புக் கிடைக்கும்

போதெல்லாம் ஒருவரையொருவர் சபித்துக் கொள்வதும், ஒருவர் நிம்மதியை

மற்றவர் குழி தோண்டிப் புதைத்துக் கொள்வதும் தான், திருமணம் மூலமாகக்

கிடைக்கக் கூடிய இன்பங்களென்றால், இந்த வாழ்க்கை நமக்குத் தேவையா

என குழந்தைகளும் யோசிக்க ஆரம்பித்து விட்டார்கள்.

திருமணமின்றியே சேர்ந்து வாழும் முறையை ஏன் பின்பற்றக் கூடாது என்று

யோசிக்கும் நிலையை நம் குழந்தைகளும் நெருங்கிக் கொண்டிருக்கிறார்கள்.

இது மிகவும் ஆபத்தான அறிகுறி, இந்த நிலையை மாற்றியமைக்க வேண்டும்.

ஒரு குடும்பம் அமைவதும், அமைந்த குடும்பம் வாழ்வதும், வீழ்வதும்,

உயர்வதும், தாழ்வதும் பெண்ணின் கையில் தான் இருக்கிறது என்பதை ஒவ்வொரு

ஆணும் உணர்ந்து கொள்ள வேண்டும்.

மனைவியின் ஒத்துழைப்பின்றி எதுவுமே சாத்தியமில்லை,

மனைவியின் ஒத்துழைப்பு இருந்தால் முடியாதது எதுவும் இல்லை.

ஆண் சக்தி மிக்கவன் தான். ஆனால், அந்த சக்தி ஆக்கபூர்வமான

காரியங்களில் பயன்படுத்தப் பட வேண்டுமானால் ஒரு பெண்ணால் அவன்

அன்பு செலுத்தப் பட வேண்டும்.

பெண்ணின் அன்பு இல்லாமல் ஆணாகப் பெரும் சாதனைகளில் களப் புரிய

முடியாது. ஆண் என்பவன் புயல், மகா சக்தி மிக்கவன், பெண் என்பவள் புயலின்

மையம், ஆணைப் போன்ற சக்தி இல்லாமல் இருக்கலாம். இயற்கையான

உபதைகள் சில இருக்கலாம். ஆனால், மையம் தான் புயலை வழி நடத்தும் சக்தி,

மனநிலை தான் வெற்றிகளின் மூலம். அந்த மனநிலையை உருவாக்குபவள்

பெண், ஆகவே, பெண்ணின் மனநிலை ஆரோக்கியமானதாக இருக்க வேண்டும்.

மனநிலைைய, கெடுப்பதில் முதலிடம் வகிப்பது தாளிக்கப் படாத காமம்.

ஆகவே, பெண்ணின் காமம் தணிக்கப் பட வேண்டும்,

பெண்ணின் முதற் தேவையான உடற் தேவை பூர்த்தி செய்யப் பட

வேண்டும். பெண்ணைப் போகப் பொருளாகப் பயன்படுத்தக் கூடாது.

அது தான் குடும்ப அமைப்பைக் காப்பாற்ற உதவும். அந் நிலையை

உருவாக்க வேண்டும் என்பதே இந்த தாலின் தலையாய நோக்கம்.

வாழ்க்கை ஒரு பரிசு. யாருக்குமே இரண்டாவது முறை இது வழங்கப்

படுவதில்லை. ஆகவே, அதைக் கொண்டாடத் துவங்குங்கள். ஆனால்,

காமத்தைப் புறக்கணித்து விட்டு கொண்டாட்டம் சாத்தியமில்லை. ஏனெனில்,

பிறப்பு மட்டுமின்றி ஒவ்வொரு நபருடைய இல்லற வாழ்வும் கூட காமத்திலிருந்து

தான் தொடங்கப் படுகிறது. பிறப்பு, இல்லறம், வாழ்வின் சாதனைகள், மரண

நாள் என அனைத்தும் காமம் சார்ந்ததே.

ஆகவே, காமம் குறித்த கபட வேடத்தைக் களைந்தெறிவோம்.

இயற்கையைப் பேணுவதில் இரட்டை வேடங்கள் தேவையில்லை என்பதைப்

புரிந்து கொள்வோம். தம்பதியர் இருவரும் ஒருவர் மற்றவருடைய இயற்கைத்

தேவையான காமத்தைத் தணித்து வாழக் கற்றுக் கொள்வோம். கற்றுக்

கொண்டவற்றை வெட்கமின்றிக் கடைப் பிடிப்போம்.

முறையான தளத்திற்குள் பரஸ்பரம் காமத்தைத் தணித்துக் கொள்வது

வெட்கப் படுவதற்குரிய காரியமென்றால், பிரசவம் கூட வெட்கப் படத் தக்க

செயலே. ஆகவே, காமத்தை எதிர்த்தால், கீழ்த்தரமாகக் கருதினால், பிரசவத்தைக்

கைவிட வேண்டும்.

அதைக் கைவிட முடிவெடுக்கும் நாளில் மனித குலம் பட்டுப் போய் விடும்.

மனித குல அழிவை மனிதனே முன்னின்று மேற்கொண்டாலும் இயற்கை ஒப்புக்

கொள்ளாது. இயற்கையை மீறிய சக்தி இங்கே எதுவும் இல்லை,

ஆகவே, உங்களுக்கு அமைந்த வாழ்க்கையைக் கொண்டாடத்

துவங்குங்கள். கொண்டாட்டமே உங்கள் குறிக்கோளாகட்டும். உங்கள் சுற்றுப்

புறத்தையும் அது ஒட்டிக் கொள்ளட்டும். அதன் மூலம், உங்கள் உலகம் ஒரு

சொர்க்கபுரியாக மாற்றமடையட்டும். தேவர்கள் கீதமிசைக்க, தேவதைகள்

மலர்மாரி பொழிய, ஆனந்தமாக நாம் வாழ்க்கை நடத்துவோம்.

அளைத்து வெற்றிக்கும் ஆனந்தமே அடிப்படை. வெற்றியே வாழ்வின்

இலட்சியம். பேரானந்தம் நம் பிறப்புரிமை. அது எங்கோ வெகு தொலைவில்

இல்லை. இல்லற வாழ்க்கைக்குள் தான் இருக்கிறது. அதைப் பெற்று ஆனந்தமாக

வாழ்ந்து கொண்டிருப்போமாக!

மேற் கண்ட கருத்தை வலியுறுத்துவது தான் தந்த்ரா என்கிற மகா

ஞானத்தின் முதல் அத்தியாயம், இந்த ஞானத்தைத் தமிழ் மட்டுமே அறிந்துள்ள

என் சகோதரர்களுக்கு அறிமுகப் படுத்திட, என்னை ஒரு கருவியாகப் பயன்

படுத்திக் கொண்ட பிரபஞ்ச சக்திக்கு நன்றியைத் தெரிவித்த படியே, இந்த நூலை

முடித்துக் கொள்கிறேன்.

என்னை விடக் கோடி மடங்கு கூடுதலான ஞானமுடைய மகா ஞானியர்

பலர் தங்கள் ஞானத்தை, தேடல் வேட்கை கொண்ட சிலருக்கு மட்டுமே வழங்கி

விட்டு பிரபஞ்ச வெளியில் ஐக்கியமாகி விட்டார்கள்,

ஒரு சராசரி மனிதன் பெற்றுள்ள அறிமுகத்தைக் கூடப் பெறாமலே அந்த

அறிமுகத்தில் உள்ள வெறுமையைக் கூட உணர்ந்து, விலகி வாழ்ந்து தங்கள்

பயணத்தை முடித்துக் கொண்டார்கள். அதனால், அவர்கள் ஞானம் மனித

சமூகத்திற்குப் பெருமளவில் பயன் படாமலே போய் விட்டது.

ஆனால், பிரபஞ்ச சக்தி என்னிடம் கொடுத்த செய்தியை, மானிட

குலத்தைச் சேர்ந்த அனைவரிடமும், என்னால் இயன்ற அளவிற்குச் சிறப்புறப்

பகிர்ந்து கொண்டிருக்கிறேன், இந்தப் பகிர்வு மானிட குலம் உள்ள வரை.

பயன்படும் என்பதையும் நான் தெளிவாக உணர்ந்திருக்கிறேன்.

நூல்களைப் படித்தல், யோகா செய்தல், தியானத்தில் இருத்தல், தினமும்

கோவிலுக்குச் செல்தல், புனித யாத்திரை எனப் பல முயற்சிகளுக்குப் பின்பும்,

தங்களுக்குள் ஒத்திசைவை உருவாக்கிக் கொள்ள முடியாத, நிம்மதியாக வாழ

முடியாத தம்பதியரிடையே அன்பை உருவாக்க உதவக்கூடிய வழிமுறைகளை,

நான் மிகத் தெளிவாக வழங்கியிருக்கிறேன்.

அதாவது, சமகால ஞானியர் பலரால் மறைமுகமாக, மருத்துவர்கள் பலரால்

அரை குறையாக சொல்லப்படும் நுணுக்கங்கள் அனைத்தையும், நான்

பட்டவர்த்தனமாக ஒரே போடாகப் போட்டு உடைத்திருக்கிறேன்,

இதை எழுதும் வினாடியில் அனுபவிக்கின்ற நிம்மதியை, என் வாழ்வில்

இதுவரை ஒரே ஒரு கணம் கூட நான் அனுபவித்ததில்லை. எனக்கிருந்த

பல்லாயிரம் கோடி ரூபாய்க் கடனை வட்டியும் முதலுமாகத் திருப்பிச் செலுத்தி

விட்டதைப் போன்ற நிம்மதியை உணர்கிறேன்.

பதினெட்டு ஆண்டுகளாக நான் ஓடியோடி, தேடித்தேடி, அலைபாய்ந்து

சேகரித்துச் சேர்த்து வைத்திருந்த, சுமந்து கொண்டிருந்த பெரும் பாரத்தை இறக்கி

வைத்து விட்டு இளைப்பாறும் நிம்மதியை உணர்கிறேன்.

காமசூத்ராவை இயற்றிய நம் இருபத்தைந்தாம் பாட்டன் மல்லிங்க

வாத்சாயனனும், அனங்க ரங்காவை இயற்றிய பத்தாம் பாட்டன் கல்யாண

மல்லனும், ரதி ரகசியங்களை இயற்றிய எட்டாம் பாட்டன் கொக்கோக முனிவனும்,

ரதி ரத்ன பிரதீபிகாவை இயற்றிய ஐந்தாம் பாட்டன் விஜய நகரப் பேரரசன்

கிருஸ்ண தேவராயனும் மானிட சமூகத்திற்குச் செய்துள்ள சேவையை நான் என்

சம காலத்தில் தொடர்ந்திருக்கிறேன்,

இன்னும் தெளிவாய்ச் சொன்னால், அப்படிப்பட்ட முப்பது பாட்டன்களின்

பேரறிவுப் பெட்டகங்களை நான் ஒரே வாகனத்தில் ஏற்றியிருக்கிறேன். நம்

பாட்டன்கள் அத்தனை பேராலும் கொடுக்கப்பட்ட அமிர்தத்தை நான் ஒரே

குவளையில் கொடுத்திருக்கிறேன்.

என்னுடைய இந்தப் பணியின் மூலம், பூமிப் பந்தின் சரி பாதி மக்களின்

பாலியல் அறியாமை களையப் படும். அதை விட முக்கியமாக, போகப் பொருளாக

வாழ்ந்து கொண்டிருக்கும் அவ்வாறு வாழ்வதால், இல்லற வாழ்வின் மீதே

சலிப்புற்றிருக்கும் சரி பாதி மக்களான பெண்கள் அக்கொடூரச் சிறையிலிருந்து

விடுதலை பெறுவர்.

என் காலத்தில் நடக்கலாம். அல்லது சற்றுத் தாமதித்து நடக்கலாம்.

ஆனால், நிச்சயம் நடக்கும், ஒவ்வொரு பெண்ணும் போகப் பொருளாக வாழும்

சூழலிருந்து நிச்சயமாக விடுவிக்கப் படுவாள். அதற்குரிய அறிவை நிச்சயமாக

ஆண் தேடிப் பெறுவான், அந்தத் தேடலின் போது இந்த நூலின் பங்களிப்பு

நிச்சயமாக என் சகோதரனுக்கு உதவும்.

ஆம். நான் மனப்பூர்வமாய் நம்புகிறேன். பல கோடி ஆண்கள் இந்நூலால்

பலனடைவார்கள்.

தன்னுடைய திருமண இணையோடு நிம்மதியாக வாழவும் முடியாமல்,

குழந்தைகள் காரணமாகப் பிரிந்து போகவும் முடியாமல், மனதிற்குள் குமுறிய

படி வாழ்ந்து கொண்டிருக்கும் என் சமகாலச் சகோதரனுக்கு மட்டுமின்றி,

உருவாகிக் கொண்டிருக்கும் பெண்ணாதிக்கக் கலாச்சாரத்தில் வாழப்

போகின்ற ஒவ்வொரு ஆணுக்கும் இல்லற வாழ்வை நிம்மதியாய் வாழ்ந்திட

இந்நூல் உதவும்,

மீண்டும் சொல்கிறேன். இது என் காலத்தில் நடக்கலாம். அல்லது

எனக்குப் பின் நடக்கலாம். எனினும் நிச்சயம் நடக்கும், இரண்டாயிரத்து

ஐநூறு ஆண்டுகளுக்கு முந்தைய வாத்சாயனரின் காமசூத்ரா இன்றளவும்

வாழ்ந்து கொண்டிருப்பதைப் போல், மானிடம் உள்ளவரை இந் நூலும்

வாழ்ந்து கொண்டிருக்கும்.

ஆகவே, இறவாத்தன்மை கொண்ட தந்திரா நூலை, முதன் முதலாய்த்

தமிழ் லே எழுதிட, என்னைப் பயன்படுத்திக் கொள்ளட் பிரபஞ்ச சக்திக்கு

மீண்டும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இத்தகைய இல்லற நூலை எழுதியதற்காக நான் பேருவகையடைகிறேன்.

பரிபூரணத் திருப்தியை உணர்கிறேன். என் பிறவிப் பெரும்பயன் நிறைவேறி

வீட்டதாகவே நான் கருதுகிறேன்.

பிரபஞ்ச சக்தியுடன் இனி நான் நிம்மதியாக ஐக்கியமாகலாம். ஏனெனில்,

இந்தப் பிறவியில் நான் சேகரித்து வைத்திருந்த, அனுபவபூர்வமாய்

உண்மையென்று அறிந்து வைத்திருந்த, என் சுமையனைத்தையும் எழுத்து

வடிவிலே இறக்கி வைத்து விட்டேன்.

ஜீவிதம் எனக்களித்த எதையுமே- கற்றுக் கொண்டவை உட்பட எதையுமே

நான் என்னுடன் எடுத்துச் செல்லப் போவதில்லை, ஆகவே, அடுத்த

பயணத்தையும் அப்பாவியாகவே நான் தொடங்கலாம். அந்தச் சந்தோசத்துடனே

உங்களிடமிருந்து விடை பெறுகிறேன்.

அவரவர்க்கு அமைந்த இல்லற இணையை இன்புறுத்தி மகிழ்வித்து

தேவதையாய் உணரச் செய்து, வாழக் கிடைத்த இல்லற வாழ்வை

ஆனந்தமாய்க் கொண்டாடிக் களித்து. நீண்ட காலம் நிம்மதியாய்

வாழ்ந்து மகிழ்ந்திட, என் மனமார்ந்த வாழ்த்துக்கள்